# விளம்பரம்.

---

இப் புத்தகம் வேண்டியவர்கள் சென்னை, தங்கசாலை வீதி பாஸ்கரா அண்டு சன்ஸ் சுவான்தாரர், சிதம்பரம், தளவரிசை, பண்டிதர் - ஆறுமுகம் பிள்ளை அவர்களிடம் வாங்கிக்கொள்ளலாம்.

உ

சுப்பிரமணியர் துணை.

# ஜீவரக்ஷாமிர்தம்.

இஃது

சிதம்பரம்-தளவரிசை

ஆயுள்வேதபாஸ்கர

## சுப்பிரமணியபண்டிதர்

அவர்கள்

வடமொழி, தென்மொழி,

வைத்திய சாஸ்திரங்களிலிருந்துந் தொகுத்ததை

அவரது குமாரராகிய

சிதம்பரம் தளவரிசை பண்டிதர்

## ஆறுமுகம்பிள்ளை

பரிசோதித்தும் சிலபாகங்களைப் புதிதாய்ச் சேர்த்தும்

வெளியிட்டது.

இரண்டாம் பதிப்பு.

PRINTED BY

THE ARROW PRESS, MOUNT ROAD, MADRAS.

1923

 சென்னை. [விலை ரூ. 7-8-0.

உ
சுப்பிரமணியர் துணை.

# விளம்பரம்.

---

# புதுப்பதிப்புகள்.

சிதம்பரம், தளவரிசை, ஆயுள்வேத பாஸ்கர

## சுப்பிரமணியபண்டிதரவர்கள்

வெளிப்படுத்திய

## வைத்தியசாஸ்திரங்கள்.

---

அவரது குமாரர், பண்டிதர், சி. த. ஆறுமுகம்பிள்ளையால் பரிசோதித்தும், ஆங்காங்கு மதாந்தரங்களைக் கூட்டியும், குறிப்புகளைத் தெளிவுறக் காட்டியுஞ், சிறுவர்களுஞ் சுலபமாக அறியும் வகையில் கிளேசிங் காகிதத்தில் வெளிப்படுத்தியுள்ளன.

1. ஜீவரக்ஷாமிர்தம்-வடமொழி தென்மொழித் தொகுப்பாகிய சர்வரோக நிதான மென்னும் இச் சாஸ்திரத்திற்குத் திறவுகோல்போன்ற வணிந்துரை யியற்றியும், அவ்வவ்விடங்களில் சித்தர் மதாந்தரங்கள் எனவே தெளிவுற எழுதியும், புதிதாய் மதாந்தரங்களைக் கூட்டியும் (502) பக்கங்கட்கு மேல் தொகுத்துள்ளது புத்தகம். விலை ரூ. .... 7 8 0

2. பதார்த்தகுண சிந்தாமணி. மூலமும் உரையும்.—இதிற் புதிய பாடல்களைத் தெளிவுரையுடன் எழுதி, நிகண்டின் பெயர்களையுங் கொடுத்து (500) பக்கங்கட்குமேல் சேர்க்கப்பட்டது. புத்தகம் விலை ரூ. .... 3 8 0

3. தேரையர் - தைலவருக்கச் சுருக்கம், மூலமும் உரையும்.—ஷெயார் சாஸ்திரங்களி லிருந்தே அநேக தைல முறைகளையுஞ் சேர்த்துத் தெளிவுரை எழுதியுள்ளது. புத்தகம் விலை ரூ. .... 1 12 0

4. தேரையர் - நீர் நிறக்குறி நெய்க்குறிச் சாஸ்திரம், மூலமும் உரையும்.—இதில், அகத்தியர், திருமூலர், தேரையர், யூகிமுனிவர் முதலாயினோர் மேற்கோள்களும், (21) வகை மேகநீரின் சிறப்பிலக்கணங்களையும், இது, இந்த மேகநீராம் என்கின்ற துணிவையும், சித்த முனிவர்கள், இருடிகள் மதாந்தரங்களையுஞ் சேர்த்துள்ளது. புத்தகம் விலை ரூ. .... 1 12 0

## அச்சிட்டுவரும் சாஸ்திரங்கள்·

---

1. சிகிச்சாசார சங்கிரகம்.—இதில், கஷாய சுரச மாத்திரையாதிய பஸ்பசெந்தூர சுண்ணங்கள் வரையும்-கைபாகம், செய்பாகம், தீக்ஷா பாகம், வடமொழி தென்மொழி சாம்பிரதாய அனுபவங்களையுஞ் சேர்த்துள்ளது.
2. விரணசிகிச்சாக்கிரமதீபம்.—இதில், மேகபகந்தரம் முதலிய சகல விரணங்களின் பெயருடன், வடமொழி தென்மொழி சாம்பிர தாயங்களையுந் தழுவிக் களிம்பு, மெழுகு, சிலைத் தைலம் முதலிய மருந்துகளையும், எடைபாகம், கைபாகம், செய்பாக மாதியவற்றையுந் தொகுத்துள்ளது.
3. விஷப்பிரதி விஷதீபிகை.—இதில், சிகிச்சாப் பிரயோக விவரத்துடன் மருந்துகளின் செய்பாகங்களையுங் காட்டி யுள்ளது.
4. நாடிக்கொத்து.--இதில்,ஆங்காங்கு சித்தமுனிவர்களின்மேற்கோள்களுடன், கால தேச தேகபேத இயல்புகளையுஞ் சேர்த்து, யாவரும் உணரும்படி எழுதியுள்ளது.
5. சாரீர வினாவிடை.—இது, சரீர உறுப்புகளின் வினாவிடைகளைக் கொண்டது.
6. வைத்திய அகராதி.—இதில், மூலிகைப் பெயர்களையும், கிடைக்கும் இடங்களையுஞ் சேர்த்துள்ளது.
7. பிரதானகுண மூலித்தரு.—இதில், தெளிவுரையுங் குறிப்புகளுஞ் சேர்த்துள்ளது.
8. பாகசாஸ்திரம்.—இதில், கால தேச தேக பேத ஆகாரங்களையும், காலை, மாலை, பத்தியாபத்திய பதார்த்த விதிவிலக்குகளையும், சத்துவ சுகபோஜன கைபாக செய்பாகங்களையுஞ் சேர்த்துள்ளது.
9. தெலுங்கு ஜீவரக்ஷாமிர்தம்.—இதில், அப்பாஷையில் மூலிகை மருந்து, இவைகளின் பெயர்களையும் ஆங்காங்கு காட்டி யுள்ளது.

சுப்பிரமணியர் துணை.

# கையொப்பம் வைத்தவர்களின் பெயர்கள்.

| பெயர்கள். | புத்தகம். | பெயர்கள். | புத்தகம். |
|---|---|---|---|
| க-ரங்கநாதசாஸ்திரியார் | .... 1 | சே-கோபாலசாமிமுதலியார் | .... 1 |
| சி-சச்சிதாநந்த சாஸ்திரியார் | .... 1 | மு-நம்மாழ்வார்செட்டியார் | .... 2 |
| கு-வெங்கன்னசாஸ்திரியார் | .... 1 | போ-ரங்கய்யசெட்டியார் | .... 1 |
| நெ-விசுவநாத குருக்கள் | .... 1 | மா-ஜெகநாதநாயக்கர் | .... 1 |
| பா-வை-நைநா குருக்கள் | .... 2 | ரா-திருமலைநாயக்கர் | .... 1 |
| சி-ராமய்யர் | .... 4 | கா.பழனியாண்டிபிள்ளை | .... 1 |
| ச-வெங்கடராயர் | .... 1 | வை-விராசாமிமுதலியார் | .... 1 |
| தி-சாமி அய்யர் | .... 1 | மு-சின்னய்யாபண்டிதர் | .... 1 |
| சி-ரங்காசாரியார் | .... 1 | கா-வே-அருணாசல பண்டிதர் | .... 1 |
| சி-ஸ்ரீபதிராயர் | .... 1 | வை-பி-முனிசாமி செட்டியார் | .... 1 |
| ஆ-சேஷா சாஸ்திரியார் | .... 1 | டி-முத்துசாமிநாயக்கர் | .... 1 |
| கு-திருவேங்கிட ஆசாரியார் | .... 1 | ரா-வீராசாமி டிரஸ்ஸர் | .... 1 |
| R. P. CAMPBELL Esq | ... 1 | பு-ர-நாராயணசாமி முதலியார் | .... 1 |
| A. SMITH Esq | ... 1 | கோ-வீராசாமி செட்டியார் | .... 4 |
| ஜெ-லட்சுமண செட்டியார் | .... 5 | மு-சின்னசாமிபிள்ளை | .... 2 |
| சை-ஜெயராம செட்டியார் | .... 1 | பு-திருவேங்கிடமுதலியார் | .... 1 |
| சை-விஜயராகவலு செட்டியார் | .... 1 | பு-முருகரத்தின பிள்ளை | .... 1 |
| கோ-வி-அய்யாசாமிமுதலியார் | .... 1 | ராஜரத்தினமுதலியார் | .... 1 |
| பா-வாசுதேவ முதலியார் | .... 1 | கா-சபாபதிமுதலியார் | .... 1 |
| பு-மாணிக்க முதலியார் | .... 1 | தா-முனியப்பிள்ளை | .... 1 |
| பு-சுந்தர முதலியார் | .... 3 | ந-ரங்கசாமிசெட்டியார் | .... 1 |
| பு-கந்தசாமி முதலியார் | .... 2 | கோ-முத்துசாமிசெட்டியார் | .... 1 |
| பு-வேலு முதலியார் | .... 1 | பு-கனகசபாபதிமுதலியார் | .... 2 |
| தொ-வெங்கடநாராயணபிள்ளை | .... 1 | பா-மாசிலாமணிமுதலியார் | .... 1 |
| பி-நரசிங்கபிள்ளை | .... 1 | தி-சீனிவாசபிள்ளை | .... 1 |
| பா-வெங்கடகிஷ்ணபிள்ளை | .... 1 | தொ-கந்தசாமிமுதலியார் | .... 1 |
| தி-முத்துவெங்கடாசலபிள்ளை | .... 1 | அ-கனகராயமுதலியார் | .... 1 |

| பெயர்கள். | புத்தகம். | பெயர்கள். | புத்தகம். |
|---|---|---|---|
| கோ-வி-சுப்பராயமுதலியார் | .... 1 | டிரஸ்லர்-குப்புசாமி | .... 1 |
| ம-சண்முகவேலுமுதலியார் | .... 1 | வே-முனிசாமிமுதலியார் | .... 1 |
| ஆ-தொளசிங்கமுதலியார் | .... 1 | திரு-எல்லப்பிள்ளை | .... 1 |
| சி-கிருஷ்ணசாமிமுதலியார் | .... 1 | கா-செங்கல்வராயநாயக்கர் | .... 1 |
| தி-கந்தசாமிமுதலியார் | .... 1 | இ-வெங்கடாசலமுதலியார் | .... 1 |
| திரு-சுப்பிராயபிள்ளை | .... 1 | நைநா-முகம்மதுபுலவர் | .... 3 |
| ப-அருணகிரிபிள்ளை | .... 1 | சுந்தரசெட்டியார் | .... 1 |
| பா-ராமய்யபிள்ளை | .... 1 | ஆசே-வெங்கடாசலமுதலியார் | .... 2 |
| ப-பாலசுந்தரமுதலியார் | .... 2 | வி-வெங்கடாசலபிள்ளை | .... 2 |
| பு-அருச்சுனமுதலியார் | .... 1 | தா-க-கோபாலுபிள்ளை | .... 1 |
| சூ-வேதாசலமுதலியார் | .... 1 | பு-குமாரசாமி முதலியார் | .... 1 |
| ச-வை-அண்ணாசாமிமுதலியார் | 1 | ந-சிவபாதநாயக்கர் | .... 1 |
| பு-முருகேசமுதலியார் | .... 1 | ஐயாசாமி | .... 1 |
| சி-பொன்னுசாமிபிள்ளை | .... 1 | பாக்ஷியாசாஹிப் | .... 1 |
| சே-ராஜகோபாலமுதலியார் | .... 1 | தா-ராமசாமிபிள்ளை | .... 1 |
| சே-வீராசாமிமுதலியார் | .... 1 | கூ-விருத்தாசலமுதலியார் | .... 1 |
| த-கண்ணுசாமிவைத்தியர் | .... 1 | கறுத்தநயினாமுகம்மதுமஸ்தான் | 1 |
| பெ-பார்த்தசாரதிநாயக்கர் | .... 1 | சுப்ராயநாயக்கர் | .... 1 |
| உப-சை-மரியசூசபிள்ளை | .... 1 | வா-லோகய்யநாயக்கர் | .... 1 |
| யா-பெ-லாலர் | .... 1 | ச-ரங்கநாயகலு | .... 1 |
| கா-குண்ணப்பமூர்த்தி | .... 1 | சி-பாவாடைசெட்டியார் | .... 1 |
| சி-வை-தாமோதரபிள்ளை | .... 1 | பெ-ஆறுமுக முதலியார் | .... 1 |
| குமாரசாமிமுதலியார் | .... 1 | சி-பி-நாராயணசாமி நாயக்கர் | .... 1 |
| தி-அண்ணாமலைமுதலியார் | .... 1 | மா-குமாரசாமிஆதி | .... 1 |
| திரு-சாரங்கபாணி நாயக்கர் | .... 1 | பா-சபாபதிகிராமணி | .... 1 |
| ந-ரங்கசாமி நாயகர் | .... 1 | | |

உ

இஃது,

ம-ா-ா-ஸ்ரீ, கா. பச்சையப்பமுதலியாரவர்கள்

கல்விச்சாலையில் தமிழ்த்தலைமைப்புலமை நடாத்திய

வித்துவான் - காஞ்சீபுரம்

# சபாபதிமுதலியார் இயற்றியது

## சிறப்புப்பாயிரம்.

---

நேரிசை ஆசிரியப்பா.

கங்கையுந்திங்களுங் கடுக்கையுமரவுந்
தங்கியேவாழ்சடைத் தயாபரனெம்மிறை
உலகத்துயிரெலா முறுவிதிவிலக்குகள்
நலத்துடனோர்ந்து நடைபிறழாவகை
அருள்செயும்வேத மவைநான்குடனே
மருவுபவேதமு மயக்கறவுணர்ந்தோன்
சிவத்தையுணருந் திறத்துவழாது
தவத்தின்மேம்படு தகைசாலந்தணன்
சீகண்டனென்னத் திருத்தகுநாம
மேகொண்டமாமுனி யெவரினும்பெரியோன்
யாதொருபிணியு மின்றெனினுயிர்கள்
மாதவமியற்றி வாழ்தருமென்றுத்
தன்னுளத்தெண்ணித் தகுபேரருளால்
மன்னுமவ்வுயிர்கள் வருநோய்நோய்முதல்
பழுதறவுணர்வதே பயனக்கொண்டு

தழுவியவுபவே தந்தனிலொன்றும்
ஆயுள்வேத மாவதுதன்னில்
ஏயும்ரோக நிதானமியல்வுறப்
பெருகுதோஷாதி பேதமுடனே
மருவியேயுடலில் வளர்சுரரோகம்
பிணிப்புறுமிரத்த பித்தரோகம்
தணிப்பரிதாய தாகரோகம்
அஸ்மரிரோகம் ஆநாகரோகம்
விஸ்போடரோக மினிர்வாதரோகம்
மதிமாழ்குறவரு மகாவாதரோகம்
அதிதூலரோக மடுத்திடுகின்றவுன்
மாதங்கர்ண ரோகம்விரண
பேதம்விஷாதி கீடாதிபேதமென்
றிவ்வகைரோக மியம்புமுறைமை
ஒவ்வொருபடல மாவுறவகுத்து
ஜீவரக்ஷாமிர்த மெனப்பெயர்செப்பி
மேவுமொருநூல் விரித்தனனதுதான்
இலகுறுங்குடத்தி லிட்டவிளக்கென
நிலவியிருக்கு நிலைமையைநாடுபு
காருகபத்திய மாதியாக்கழறுஞ்
சீருறுமுத்தீ செம்மையிலோம்பி
அத்தனடேசற் காராதனைபல
நித்தமுமியற்று நியமம்பூண்டுளை
அந்தணர்வாழு மணிகிளர்தில்லையுள்
முந்துவேளான்குல முயன்றமாதவத்தால்
வந்துமன்ற மருவுகோவிலில்
சந்ததம் பொலிவுறச் சார்தலவரிசை
தருதியிற்பதித்த முத்தையஞானியார்
மகனெனவந்த வரோதயசீலன்
முருகவேள்பதமலர் முன்னித்துதிக்கும்
திருகிலாவன்பன் சிவாசாரதுல்லியன்
செந்தமிழ்க்கவிஞன் தேரையர்முதலா
வந்தசித்த மகாபுருடருக்குள்

ஒருவனெனத்தகு மொப்பிலாப்புலமையன்
கருமிடற்றண்ணல் கழலடிமறவான்
முக்கண்கொண்டுநோய் முழுதுமுணர்ந்து
தக்கவுடதந் தந்துநோய்தணிக்கும்
கடவுளருபாசனை முதலாக்கழறும்
அடைவுளயாவு மமைந்தவறிஞன்
கூறுபதார்த்த குணசிந்தாமணி
வீறுடனச்சில் விரவப்பதித்தோன்
வையகமாந்தர் வைத்தியநூற்கள்
செய்யுளாயிருத்தலிற் சேர்பிணிவகையும்
அப்பிணிதீர்த்தற் கடுத்தமருந்துந்
தப்பறவுணருந் தகுதியின்றி
பாகடமெனவெறும் பாடல்கூறும்
பேய்களைப்பெரிய பிடகரென்னக்
கருதியாங்கவர் கைமருந்தருந்திப்
பெருகுறும்பிணியாற் பேதுறனோக்கி
உள்ளத்திரக்க முறநனிகொண்டு
கள்ளமிலன்பாற் காதன்மீதுரச்
சார்தருசிகிச்சா சாரங்கண்டொடும்
ஏர்தருசாரீர மென்னவிசைக்கும்
சாத்திரந்தன்னைத் தமிழ்வாக்கியமா
நேத்திரமீதென நிலவவியற்றி
நுண்ணியநீர்க்குறி நூலுரையுடனே
வண்ணமார்தைல வருக்கச்சுருக்கமும்
அச்சிற்பதிப்பா னமைந்துளவள்ளல்
பொச்சமில்சிவனடி யாரைப்போற்றும்
ஆயுள்வேத பாஸ்கரனுமென
மாயிரும்புவியோர் மதிக்கநின்ற
சுப்பிரமணிய பண்டிதச்சுகுணமால்
இப்படிதன்னி லியங்குஞ்சிற்சிலர்
நேர்தருரோக நிதானநுண்ணிதின்
ஓர்தலின்றி யுரைத்திடுமருந்துகள்
பேதியாமலையின் பெரும்பாறையினைத்
தொக்கமட்கட்டியா லுடைப்பான்றொடங்கல்
ஒக்குமென்றணு வளவுந்தேரார்

# சிறப்புப்பாயிரம்.

மாத்திரைமுதலா மருந்துகள்கொடுத்துச்
சாத்திரந்தன்னைத் தாம்பொய்யாக்கி
மருத்துவரெனப்பெயர் மருவித்திரியுநர்
கருத்துத்தெளிந்து களிப்புறும்வண்ணம
முந்தைநூற்பெயரே முறைமையினமைத்து
வந்தபடல வரிசையுங்கண்டு
செந்தமிழ்வாக்கிய மாகத்திரட்டித்
தந்திடவதனைச் சான்றோர்புகழ்தர
வேதியர்குலத்து மேதகும்வல்லத்
தாதிநாத ரருளாலுதித்தோன்
திருவிரிஞ்சையினுந் திருவல்லத்தும்
மருவியஅன்ன சத்திரம்வகுத்தங்
கந்தணர்முதலோர்க் கறுசுவையுண்டி
சந்ததமூட்டித் தகுபொருளளிப்பதே
பெருவாழ்வென்னப் பெட்புறும்வள்ளல்
ஒருவாவாயுள் வேதமுணர்ந்தோன்
இனிதன்வேலூர்வா ழிராமசேஷப்
புனிதப்பெயருள புண்ணியனுயரிய
குன்றிலிட்ட குலவிளக்காமெனப்
புலனுறப் பதித்துப்புகழால்
இலகுறுதிசையெலா மினிதளந்தனனே.

சிறப்புப்பாயிரம் முற்றியது.

శ్రీగురుభ్యోనమః

---

గుఱ్రం వెంకన్న శాస్త్రికృతోయంశ్లోకః

జీవరక్షామృతంశాస్త్రంసుబ్రహ్మణ్యభిషగ్వరః । చక్రేద్రావిడ మర్ధజ్ఞశ్చికీర్షుర్లోకమక్షయం॥

---

ఆదివంశోద్భవ శ్రీకాంచీ

విశ్వనాథగురుప్రణీతావిమాశ్లోకౌ

---

ఆయుర్వేదపయోనిధిః ప్రమథితః శ్రీబాహటాద్యైర్ముదా । శ్రీకంఠేన బుధోత్తమేనజనితంయజ్జీవరక్షామృతం । దూరంమందధియాంబుధైక సులభంతద్ద్రావిడైర్భాషితై । స్సుబ్రహ్మణ్యభిషగ్వరస్సుతనోత్వేయం సమస్తైర్జనైః॥

---

పచ్చపాటి సూరి సంస్కృతాంధ్రోపాధ్యాయులగు

కాట్రంబాక వైద్యము కేశవాచార్యులవారిచేఁ

జేయఁబడినశ్లోకము.

---

రోగఘ్నాత్యుచితౌషధాస్తివిరహాద్ధాహన్తమర్త్యాఇమే

జీర్యన్తిప్రథమేవయస్యపిముధేత్యాలోచ్యధన్వన్తరిః

సుబ్రహ్మణ్యమహావిపశ్చిదధునాభూత్వాభువివ్యాతనో

ద్గద్యంద్రావిడభాషయాలలితయాశ్రీజీవరక్షామృతమ్॥

---

கனம்பொருந்திய கௌரன்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்டயூநிவர்

சிடியென்னுஞ் சகலசாஸ்திரசாலைத் தமிழ்த்தலைமைப்புலமை

நடாத்தும்இயற்றமிழாசிரியராகிய

திருத்தணிகை

## விசாகப்பெருமாளையர் இயற்றியது.

எண்சீர்விருத்தம்.

தேங்குபுகழ்ச் சிதம்பரச்சுப் பிரமணிய பண்டிதவேள்
செய்தளித்த ஜீவரக்ஷா மிருதமெனுஞ் சீர்நூலை
ஓங்குதிரி காலத்தி னிகழ்செய்கை யனைத்தையுமே
யுணர்த்துதலாற் றெய்வமென்கோ வொன்றினையொன் றுக்கருதுந்
தீங்குநெறி விலக்குதலாற் குருவென்கோ நோயினத்தின்
றிறம்பலவுந் தெரித்தலினாற் றந்தையென்கோ வன்னோய்கள்
நீங்குமருந் துதவுதலாற் றாயென்கோ மருத்துவர்த
நேத்திரமென் கோவுளத்தி னினைக்குங்கான் மன்னோ.

---

இதுவும், வித்துவான் - காஞ்சீபுரம்

## சபாபதிமுதலியார்இயற்றியது.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வண்டுளப மாலையணி மாலவன் வளர்தலால் மதுகயிட வரைமுதலி னோர்
வருத்திட வருந்திமந் தரகிரி கலக்கலான் மறுகியே யோலமிட் டாங்
குண்டுவகை கொளவேண்டி வருமும்பர்மனமஞ்சி யோடவெவ்விடமுனல்கி
ஓதமுது தந்தவப் பாலாழி போல்கிலா துற்றரு ராதி யான
மிண்டுபுரி யவுணரைக் காய்ந்தசெவ் வேற்குகன் மேவுநற் பான்மையுள தாய்
விளங்கிய குலம்புரி வலம்புரி யிலங்கவே மிளிர்சிதம் பரவாழ்க் கையுட்
கொண்டுமகிழ் கின்றசுப் பிரமணிய பண்டிதக் குறைவில்பா லாழி தானுங்
கோலமே மிகுஜீவ ரக்ஷாமிர் தம்முலகு கொளவினிது தந்ததன் றே.

---

வித்வான் - காஞ்சிபுரம்

## சபாபதி முதலியார் மாணாக்கரில் ஒருவராகிய

புரசை - அஷ்டாவதானம்

## சபாபதிமுதலியார்இயற்றியது.

நிலமண்டில ஆசிரியப்பா.

பூமிசைப்புத்தேள் புனைந்தவுலகுயிர்
காமுறுமனைத்துங் கரிசறநுகர்திறன்
யாக்கையையாப்புடைத் தாப்பெற்றவர்க்கலா
லாக்கரிதென நனி யுள்ளமெய்ச்சுருதியாற்
குரவனாலனுபவக் கொட்பினாற்றேற்றுபு
விரவருமறையின் வியங்கிளைபோன்மெனும்
உபவேதங்களி லொன்றாய்நிலைத்துள
தபுதலிலாயுள்வே தந்தனில்விரித்து
றுவல்பலநோய்வகை நோய்முதலவற்றின்
றவவலன்கடத்தத் தரும்பரிகாரம்
இவையெலாங்கைத்தலத் திருத்தியமுத்தென
நவையறத்தெருட்டி நளிகடற்புவிக்கட்
டேவரக்ஷாமிர்த மதனிலுஞ்சீரிய
ஜீவரக்ஷாமிர்த மெனும்பெயர்செறித்து
வளப்பரும்வேதா கமப்பொருளனைத்துங்
கிளப்பருந்தன்னுளங் கெழுமநிறைத்துளோன்
தவக்கருவூலந் தன்னிகர்பேரருட்
சிவத்தினையுள்ளுணர் தேர்ச்சிப்பெட்டகம்
சீகண்டமாதவத் திருமுனியளித்தநூல்
ஆகண்டலன்பதிக் கண்மியநவநிதி
நாமநீர்ப்புவியுளோர் நனுகுறச்செய்மைத்
தாமெனுந்தகையே யனையதாரரியர்

தன்னிலிருத்தலா லன்னமுதுமொழி
வல்லுநர்சில்லோர் வல்லார்பல்லோர்
ஆதலிலெவரும் அந்நூற்பெரும்பயன்
மேதக்கூட்டுணூஉ வியந்தனர்நிலைபெற
விதிவிலக்கறியும் வியன்பயிர்விளைவுறூஉம்
பதிநிகர்திருக்குறள் பகருமருந்தியல்
தொகையேயிதன்முன் சொலுமவ்வியலுரை
வகையேயிஃதென வளத்தவிரியெனூர்
செற்றமின்மருத்துநூல் தெளிபுலவோரென
மற்றையோருந்தா மகிழ்தலைசிறப்ப
செறுநரித்தன்மைய ரெனத்தேர்விரகிலார்க்
குறுபலனெவன்கொலோ வொன்னலரின்னோர்
எனவறிவுறின்மற் றிடன்முதலைந்தும்
இனிதமைந்தெண்ணுவோ ரெளிதில்வென்றடுவ
தொவ்வுமிக்கருவி யுரைதருசார்பென்
றெவ்வகையோரு மிசைத்தனர்நயப்ப
நாவலூர்நம்பி நவில்தொண்டத்தொகை
மேவுமுன்மொழிதிரு வாரூர்விடங்கர்
தில்லைவாழந்தண ரெனவெடுத்தோதுகென்
றெல்லையிலருளு முயர்பரம்பரையாம்
வாய்மையோர்குழுவொடு மன்னுந்தில்லை
மேயசிதம்பர மிகுந்தலவரிசை
பத்தியிற்பதித்த முத்தையஞானியார்
என்னும்பயோததி யீன்றகற்பகம்
தன்னுணர்வனைத்துந் தருமப்பைங்கொடி
பாகமடுத்த பவளத்திருவரை
வாகுறத்தந்த வடிவேற்கராம்புய
அரதனகிரியின் அடிவாரத்தின்
விரதங்குலவ விளங்குமேன்மையோன்
நதிமாமரமென நாடுந்தாமரை

சதுருறமணஞ்செயத் தந்தார்ஜீவம்
மெய்யறிஞர்களெனு மெல்லிதழ்பொதுளிய
செய்யமலர்க்குத் திருத்தகுந்தண்ணளி
தேரையர்முதலாச் செப்பவரும்பெரி
யோரையடுத்துளோ ருறுபொருள்யாவைப்
பெரும்பொருண்முழுதுமப் பெற்றியோர்சொற்ற
அரும்பெறநூல்களி லேயந்திரிபற
நோக்கியவனுபவ நுண்மையெலாங்கொண்
டேக்கியவரவ ருவப்பவுணர்த்துவோன்
ஆர்த்தபுகழ்க்கதி ராயுள்வேத
பாற்கரன்சிவநெறிப் பன்மாண்கேள்வித்
தொண்டற்கினிய சுப்பிரமணிய
பண்டிதக்குரிசில் பைந்தமிழ்மொழியில்
வாக்கிய வுருவின் வழங்குறக்கண்டு
பாக்கியப்பயனிது பதித்திடலென்றனும்
இறைவன்வேலூர் வாழிராமசேஷப்
பொறைகூறந்தணப் புனிதனுதவியா
லெழுதாவெழுத்தி லிசைவுறப்பதித்துப்
பழுதாகாமைப் பன்னூடெங்கணுந்
தன்னிசையுடனத் தகுமுயர்வேதியன்
இன்னிசையும்பதித் தினிதளித்தனனே

---

இஃது

## திருவண்ணாமலை வீரபத்திரஜயர்

இயற்றியது.

எண்சீர் விருத்தம்.

சீர்கொண்ட பாற்கடலைக் கடைந்தமிர்த மளித்தே
தேவரிறப் பகற்றியவச் சீதரனே போல
வேர்கொண்ட தன்னறிவாம் பொன்மலையை நிறுத்தி
யிதந்தருநல் லாயுண்மறை யெனுங்கடலைக் கடைந்தே
பேர்கொண்ட ஜீவ்ரக்ஷா மிர்தமுதவி யகிலப்
பிணியனைத்தும் பறந்தோடப் பெரும்புகழ்கைக்கொண்டான்
பார்கொண்ட சிதம்பரச்சுப் பிரமணிய னெனுமோர்
பண்டிதற்கென் கைம்மாறு பரிந்தியற்றுமுலகே.

ம-ா-ா-ஸ்ரீ, பச்சையப்ப முதலியாரவர்கள் கல்விச்சாலையில்
தமிழ்த் தலைமைப்புலமை நடாத்தும் - வித்துவான்

**சுப்பராயபிள்ளை**

இயற்றியது.

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

அம்புலிகொன்றைகரந்ததமணிசடையண்ணறனடிமலரை
அநவரதமுநினைமுத்தையஞானியரகமகிழ்புத்திரனிவ்
வம்புவிமாக்கைலாயத்திருநகரதில்வருகுணநிதியென்
றனைவருநிதமுரைசுப்பிரமணியநலருமைப்பண்டிதவேள்
இம்பர்சுகித்திடவாயுருவேதமெனுங்கடலினையுட்கொண்
டியலமைசீவரக்ஷாமிர்தமுதவுறமிதுநனிமுன்னுணரா
வெம்புபுபெருமுனிகுறுமுனியாகியேவெற்பினுயிர்த்திலனாய்
மேவியருந்தவனாயினனெனுமிதின்வேறினிமொழிவதனோ.

---

இஃது,

இந்நூலாசிரியர் மாணாக்கரிலொருவராகிய

**ஆ - செ. வேங்கடாசலமுதலியார்.**

பாடியது.

கட்டளைக்கலித்துறை.

தேவர்பொன்னாட்டினுநாகர்தந்நாட்டினுந்தெள்ளமிர்தம்
ஓவறவைத்தருண்மாலேகங்காகுலமோங்கநல்லோர்
யாவரும்வாழ்த்துசுப்பிரமணியக்குருவென்னவந்து
ஜீவரக்ஷாமிர்தமிந்நாட்டுவைத்தனன்சீர்பெறவே.

இதுவும்,

அம்மாணாக்கரிலொருவராகிய

**ச - வை - அண்ணாசாமி முதலியார் பாடியது.**

எழுசீர்விருத்தம்.

பொன்னாருஞ்சிதம்பரச்சுப்பரமணியதேசிகனைப்புலவோரியாரும்
மன்னானஜீவரக்ஷாமிருதஞ்செய்தானென்றேமகிழ்வாரியாமோ
அந்நாளில்வடமொழியிற்செய்த சீகண்டமுனியன்னோனாகி
இந்நாளிற்றென்மொழியினுஞ்செய்தானெனத்துணிவாயியம்புவோமே.

சாற்றுக்கவிகள் முற்றுப்பெற்றன.

---

உ

சுப்பிரமணியர் துணை.

# முகவுரை.

---

சச்சிதானந்த சொரூபராகிய சகலபுவன கர்த்தாவானவர், தம்மால் சிருட்டிக்கப்பட்ட ஆன்மகோடிகளிடத்து வைத்த பெருங் கருணையால் அருளிச்செய்த - உபவேதம் நான்கினுக்குள் ஒன்றாகி - ஏது - லிங்கம் சிகிச்சை என்னும் முப்பொருளையும் விவரிக்கின்ற ஆயுள்வேதத்தைப் பார்வதிதேவியாருக்கு அநுக்கிரகஞ் செய்தருளினார். அந்தப் பார்வதி தேவியார், நந்திதேவருக்கு அருளிச்செய்ய அவர், தேவருக்கும் முனிவர் கட்கும் சித்தப் புருஷர்கட்கும் உபதேசித்தருளினார்.

## இதற்கு மேற்கோள்தேரையர்காப்பியம்.

"அகரவக்கரமென வனைத்துமாய்நிறைந்த வமலன்வகுத்த வகில பேதத்து, எஃறிணைத்தவிர வுயர்திணைப்பகுதியு ளறிவுறுமாக்கட்கே யாயுள்வேதத்தை யறைந்தனனஃதே தரும்பிணிக்குழாத்தா லமைந்த வாக்கைபரென் றகங்கனிந்தாங்கே———அவ்வழிதோன்று மத்தியா யத்தை யந்தரிநந்திக்களித்திடவன்னோ னண்டர்பண்டிதனுக் கருளி னன்." என்னும் சூத்திரங்களாலும் - சிந்தாமணி என்னும் வடமொழி நூலாலுமுணர்க.—

அவ்வாறு, உபதேசம் பெற்றவர்களையும் அவரவர் குமார சீடவருக் கங்களையும் அவர்களால் வடமொழி தென்மொழி இரண்டிலுஞ் செய்யப் பட்ட நூல்களையும் தனித்தனியே விவரித்துச் சொல்லப்புகின் மிகவும் பெருகும் - ஆதலால்———இந்நூலின் பொருட்டு வேண்டியவைகளை மாத்திரம் சுருக்கமாக எடுத்துக் கூறுகின்றோம்.

## வடமொழிவைத்திய ஆசிரியராவார்.

தன்வந்தரிபகவான் - அசுவனிதேவர் - இந்திரன் - அகத்தியர்-புலத்தியர்-சனகர்-அக்கினிவேசர்-பேளர்- சௌமியர் - மாண்டுகேர்ண்ணர் - பராசர்-ஆரீதர் -ஆத்திரேயர்-கௌதமர்-காசிபர்-கார்க்கியர்-பாரத்துவாசர்-சுசுருதர் மனு-சுவாயம்புவமனு - யாக்கியவற்கர் - விசுவாமித்திரர் - அத்திரி - காத்தியாயனர் - வசிட்டர் . வியாசர் - பார்க்கவர் - கண்ணுவர் - போதாயனர்-தக்ஷர் - சங்கர் - கபிலர் - ஆபஸ்தம்பர் - போஜர் - கரநாதர் - சுகர்- வாமதேவர் - சாதாதபர் - ஆங்கீரசர் - சம்வர்த்தர்-விஷ்ணு - கோநலர்-சுமந்து-சூயரிர் - அருணர் - தக்ஷப்பிரசாபதி - நாராயணர் - அரிச்சந்திரர் - பத்திரவர்மர் - சௌனகர் - யோகாநந்தர் - நவநாதர் - ஆதிநாதர் - வியாக்கிரபாதர் - சரகர் - ஸ்ரீகண்டர் - பாகடாசாரியர் - சாரபாணி———முதலியவர்களாம்.

## தென்மொழிவைத்திய ஆசிரியராவார்.

அகத்தியர் - புலத்தியர் - திருமூலர் - தருமசௌமியர் - தேரையர்-காலாங்கிநாதர் - போகர் - கொங்கணர் - சட்டைமுனிவர் - ராமதேவர் - மச்சமுனிவர் - கமலமுனிவர் - ரோமரிஷி - கருவூரார்-கோரக்கர் - இடைக்காடர் - சுந்தரானந்தர் - பாம்பாட்டிச் சித்தர் - அகப்பேய்ச் சித்தர் - ஏற்றச்சித்தர் முதலியவர்களாம்.

## இவ்விருவகை ஆசிரியர்களில்

## வடமொழி தென்மொழி இரண்டிலும் நூல் செய்தவர்.

அகத்தியர் - தருமசௌமியர்-தேரையர்-ஆகிய இவர்களாம்.

## மேற்கூறியவர்களா

## லியற்றப்பட்டவடமொழி நூல்களாவன.

ஆயுள்வேதம்-உமா கலாஞானம் - நந்தீயம் - ஆயுள்வேதோபதேசம்-அசுவனீசம்மிதை - ஐந்திரம் - வைத்திய சூடாமணி - வைத்திய சிந்தாமணி - வைத்தியசாரம் - வைத்தியாமிர்தம் - வைத்திய சாரசங்கிரகம் - வைத்திய ரசாயனம் - வைத்திய முத்தாவலி - நிதானயோகரத்தினவலி-

யோகரத்னுவலி-நிதானமுத்தாவலி-திரவியரத்தினுவலி-ஆரோக்கிய சிந்தாமணி - திரிலோக்கிய சிந்தாமணி-சுரசிந்தாமணி-சூத்திரஸ்தானம்-சங்கல்பனுஸ்தானம்-உத்தரஸ்தானம்-சங்கியாநிதானம் - ஆடகாங்கநிதானம்-சரகம்-க்ஷீவரக்ஷாமிர்தம்-குமாரதந்திரம்-சொஸ்த்தாரிஷ்டம்-யோகானந்தம்-சசியானந்தம் - காசியபம் - சித்திசாரம் - மதனகாமரத்தினுகரம் - ரத்தினப்பிரதீபிகை - யோகரத்தினசமுச்சயம் - ரசரத்தினசமுச்சயம் - ரசரத்தினசங்கியை - ரசநிகண்டு - ரசரத்தினுகரம் - ரசகௌமதி - ரசசார சங்கிரகம் - ரசார்ணவம் - ரசவைசேஷிதம் - ரசப்பிரதீபிகை-ரசமூலிகம்-ரசசூத்திரம் - ரசபேஷசகல்பம் - ரசப்பிரதிவிஷம் - விஷப்பிரதிவிஷம் - கல்பபேஷசம் - கல்பபூஷணம் - அக்கிரசங்கிரகணீயம் - நித்தியநாதீயம் கோவிந்தபட்டீயம் - பாகடாசாரீயம் - நவபாஷாணசித்திகை - சித்தநாகார்ச்சுனம் - குசுமாரம் - சல்லியதந்திரம் - தொட்டியம் - சாரீரம் - திரவியநிச்சயசாரசங்கிரகம் - சிகிச்சாசாரசங்கிரகம் - கந்தவாகம் - அனங்கரங்கம் - அஷ்டகர்மாதிகாரம் - ஞானபாஸ்கரம் - ரோகநாடகம் - காலஞானம் - அபிதானரத்தினமாலே - மந்திரவம் - சதசுலோகி - பப்பதேவியம் - சதசுலோகி விசாரதம் - பாகடசூத்திரம் - மதனுதியோகம் - தீர்க்கஜீவந்தி - கல்பகத்தரு-சோதனுதிநிகண்டு - ஆரீதமுனி அகராதிநிகண்டு சட்ரச நிகண்டு - தன்வந்தரிநிகண்டு - சாரசங்கிரகநிகண்டு - பிரசினுேத்திரம் புனப்பிரசினம் - பத்தியாபத்தியம் - நாடிச்சக்கரம் - நாடிதந்திராந்திரம் - சாமுத்திரிகம் - அங்காதிபாதம் - சூபசாஸ்திரம் - உற்பலபரிமளம்-சிவதத்துவரத்தினுகரம் - பசவராஜீயம் - தேவபாகம் - சித்தபாகம் - வீமபாகம் - நளபாகம் - விருக்ஷாயுள்வேதம் . விஷகல்பசாரசங்கிரகம் - காகேந்திரமணிதருப்பணம் - கருடகல்பம் - பிராணுமிர்ததாரம் - ரதிரகசியபரீக்ஷை - கொக்கோகசாஸ்திரசிகிச்சை - மேரிகர்ணவிசிராந்தசரகம் - சுசுருகம் - மந்திரசாஸ்திரம் - யந்திரசாஸ்திரம் - லளிதம் - அஷ்டாங்கஇருதயதந்திரம் - பரஇதசங்கியை-சாருசரியம் - விருக்ஷபீசம்-கஜசாஸ்திரம், அசுவசாஸ்திரம் - கோசிகிச்சை - மேஷசிகிச்சை - முதலியவைகளாம்.

## தென்மொழி நூல்களாவன.

அகத்தியர் பெருந்திரட்டு - ஆயுள்வேதபாஷியம் - விரிநூல்மூவகைக்காண்டம் - வைத்தியசிந்தாமணி - மணிநாலாயிரம் - காவியம் - சிவ

ஜாலம் - சத்திஜாலம் - சண்முகஜாலம் - வைத்தியக்கண்ணாடி - வைத்தியரத்தினாகரம் வைத்திய ஆயிரத்தைந்நூறு - வைத்திய அறுநூறு - கருமவிபாகம் - கரிசல் - சிந்தூராமுந்நூறு - பஸ்மமுறை இருநூறு - தண்டகம் - பக்ஷிணி - நாடிநூல்———திருமூலர் திருமந்திரம் - சௌமியசாகரம் - ஆயுதவருக்கநூல்———தேரையர்காப்பியம் - சிகாமணிவெண்பா அஷ்டசார நிகண்டு - சேகரப்பா - தரு - நாடகம் - யமுகஅந்தாதி - மகாகுணபாடம் - மிகாவண்ணம். நாண்மாலை - யமுகவெண்பா - எதுகைப்பா - பெருங்கரிசல் - மருத்துப்பாரதம் - தினக்கிரமாலங்காரம் - நீர்நிறக்குறி - நெய்க்குறி - தைலவருக்கச்சுருக்கம் பிரதான குணமூலித்தரு - வைத்தியப்பள்ளுநாடகம் - சிகிச்சைக்கிரமம் - நோய்மருந்தளவை —காலாங்கி நாதர் பெருந்திரட்டு - குறுந்திரட்டு———போகர் ஏழாயிரக்காண்டம் - கல்பஎழுநூறு - உபரசநிகண்டு - சிகிச்சைவெண்பா——கொங்கணர் திரிகாண்டம் —' சட்டைமுனிவர்திரிகாண்டம் - சரக்குவைப்பு - நவரத்தினவைப்பு —— ராமதேவர்பெருநூல் —— மச்சமுனிவர் எண்ணூறு - திராவகஎண்ணூறு ———கமலமுனிவர் வைத்தியமுந்நூறு———ரோமரிஷி ஐந்நூற்றின் சூத்திரம்———கருவூரார் திரட்டு-சந்தநாடகம்———கோரக்கர் வைத்தியாங்கம்———கல்பநிதானம்———சுந்தரானந்தர் வைத்தியத்திரட்டு— இடைக்காடர்சாரீரம்——— அகப்பேய்ச்சித்தர்வகாரசூத்திரம் - பாம்பாட்டி சித்தர் கருஞானம் - சித்தராரூடம்———ஏற்றச்சித்தர் ஆரூதாரச்சூத்திரம் - பரிபாஷைநிகண்டு - ஆகிய நூல்களாம் :—

இவைகளைக்குறித்துத் தொகைநூல்களில் அகத்தியர் செய்தருளிய வாதசாஸ்திரம் ஒருலக்ஷம் - வைத்தியசாஸ்திரம் இரண்டு லக்ஷம் - மற்றைய சித்துப்புருஷர்கள் வைத்தியத்துடன் பலவிஷயங்களையும் சேர்த்துச் சொல்லியசாஸ்திரம் ஒரு லக்ஷம்———ஆக - தமிழ்சாஸ்திரங்கள் - 4-லக்ஷம் என்றும்——— சமஸ்கிருதவைத்திய சாஸ்திரகிரந்தங்கள்யாவும்-8 - லக்ஷங்களாக இருந்தவைகளைச் சிலபெரியோர்கள் 4 - லக்ஷங்கிரந்தங்களாகச்சுருக்கி அவைகளை, மாக்கள் - தாவாரம் - மிருகம் - வைத்தியாங்கம் முதலிய பன்முறை - என்னும் - நாற்பாலுக்கும் 4 - பிரிவாகவகுத்திருக்கின்றனர் என்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.

மேற்கூறிய தமிழ்ச்சாஸ்திரங்களன்றி சமஸ்கிருத
சாஸ்திரங்களில் நான்கு பிரிவிற்கும் விவரம்.

சரீரநிதானம் - சாமுத்திரிகம் - தேகபேதம் - அஷ்டபரீக்ஷை -நாடிலக்ஷணம் - தோஷபேதம் - சப்ததாதுக்களின் பேதம் - அரிஷ்டாரிஷ்டம் முதலியவைகளைக் குறித்து - (20000) வாதாதிரோகம் - தொந்தரோகம்-சத்தியோரோகம் - கிரகரோகம் - விரணரோகம் . கிருத்திரமவிஷரோகம்-தாவரவிஷரோகம் - சர்ப்பவிஷரோகம் - கீடவிஷரோகம் - முதலியவைகளைக்குறித்து (30000) - இவற்றின் சிகிச்சைகளைக் குறித்து (60000) நிலவருக்கம் - நீர்வருக்கம் - விருக்ஷவருக்கம் - செடிவருக்கம் - கொடிவருக்கம் - புல் நெற்பயிர் முதலிய வருக்கங்களுக்கு உண்டாகின்றரோகங்களைக்குறித்து - (20000) இவற்றின் சிகிச்சைகளைக்குறித்து - (70000) கஜவருக்கம் - அசுவவருக்கம் - இடபவருக்கம் - மேடவருக்கம் - முதலிய வருக்கங்களுக்கு உண்டாகின்ற ரோகங்களைக்குறித்து - (30000) இவற்றின் சிகிச்சைகளைக்குறித்து - (50000) வைத்தியாங்கம் - பாகசாலை - பாசனம் - கலுவம் - முதலிய துணைக்கருவி - கைபாகம் - செய்பாகம் - தீக்ஷைபாகம்-சகுருருடதூதலக்ஷணம் - தீக்ஷாவிதி - பூஜாவிதி - மந்திரம் - யந்திரம் - அஷ்டகருமம் - அஞ்சனம் - மறைப்பு - கரு - ஜாலம் - கல்பம் - காயசித்தி - யோகம் - ஞானம் - வாதம் - குளிகை - முதலியவைகளைக்குறித்து (1,20,000) ஆக - 4-லக்ஷம் - கிரந்தமாம்.

இவற்றுள், மனிதர்களின் ரோகநிதானங்களைக்கூறிய (30,000) கிரந்தங்களை மாத்திரம் எடுத்துச்சுருக்கிப் பதினாயிரம் கிரந்தமாகச் சரக முனிவர் தமது பெயரால், சரகம் - என்னும் ஒரு சாஸ்திரம் செய்தருளினார்——அதுவோ, மிகவும் விரிவாக இருப்பதைநோக்கி ஸ்ரீகண்டமகா முனிவர் அதைச்சுருக்கி ஏழாயிரம் சுலோகபூர்வமாக ஒருநூல்செய்து அதற்கு ஜீவரக்ஷாமிர்தம் - எனப்பெயரிட்டருளினார். அந்நூல், வடமொழிப்பயிற்சியிற் சிறந்தவர்கட்கன்றி - மற்றையோர்க்குப் பயன்படாதிருப்பதுபற்றி, இத்தமிழ்த் தேசத்தில் யாவரும் உணரும்பொருட்டுச் சில சாஸ்திரிகளுதவியைக்கொண்டு அந்த வடமொழி நூலைத்தமிழில் மொழிபெயர்த்து வசனகாவியமாக்கி, அதிற் சொல்லப்படும் பிணிகளின் பெயர்களுக்குச் சத்தார்த்தங்களும் எழுதி வழக்கமொழிகளையுங்கலந்து சந்தியும் பிரித்து, அகத்தியர் முதலிய சித்தப்புருஷர்கள் தமிழ்ச் செய்யுளாகச்

செய்திருக்கிற ரோகநிதானங்களில் சில விசேஷமானவைகளை யும் வசனமாக்கி அவசியகம் சேர்க்கத்தக்க இடங்களில் **மதாந்தரம்** எனப்பெயரிட்டுச் சேர்த்து அந்தந்த ரோகவருக்கங்களின் முடிவில் அவைகளுக்கேற்ற சில சிகிச்சைகளையும் எடுத்துக்கூறி - முத னூலார் வகுத்த முறைமைப்படிதோஷாதிபேத படல முதல் கீடாதி பேத படலம் ஈறாகப் பதினைந்து படலங்களும் - பெயரும் அமைத்து அடியேன் இயற்றும்படி சருவஜீவதயாபர மூர்த்தியாய் சமஸ்ததேவர் களும் நவகோடி சித்துப் புருடர்களும் சதாகாலமும் வணங்கத் தக்கவ ராய் பிறவிப்பிணி முதலிய பிணிகளையெல்லாம் நீக்குகின்ற மகா பண்டித ராகிய பழனிமலைக் கடவுள் கிருபைசெய்தருளினர்.

இவ்வாறியற்றிய இந்த ஜீவரக்ஷாமிர்தம் என்கிற சகலரோக நிதான சாஸ்திரத்தின் முதலில் வைத்திருக்கிற தோஷாதிபேத படலமானது சகல சாஸ்திரங்களையும் அறிவிப்பதற்கு அக்ஷராப்பியாசம் ஆதிகார ணமா யிருப்பதுபோல் - சாரீரம் - ரோகநிதானம் - சிகிச்சை - என்னும் மூன்று சாஸ்திரங்களின் உண்மைகளையும் - இன்னும் சில சாஸ்திரங் களின் கருத்துப் பொருள்களையும் அறிவிப்பதற்கு ஆதிகாரணமா யிருக் கின்றது.

எவ்வாறென்னில், வாதம், பித்தம், சிலேஷ்மம் என்னும் மூன்று தோஷங்களையும், அவற்றின் சொரூபம், ஸ்தானம், சுபாவம், தொழில், பேதம் இவைகளையும், தேகம், காலம், சந்நிபாதம் இதுகளின் விகற்பங் களையும், சப்ததாதுக்கள் - மலம் மூத்திரம் இவற்றின் விருத்தி க்ஷீணங் களையும், சாடராக்கினி, பலம், எண்குறி, ரோகாரம்பம், சிகிச்சைத்துணிபு இவைகளையும் தனித்தனியே விவரித்துக் கூறுதலால் என்றறிக.

2-வது படலத்தில், வாதசுரரோகம் ஆதியாய் - மதாந்தர திரிகால சுரரோகம் அந்தமாயுள்ள சுரரோகபேதங்களெல்லாம் அடங்கி யிருக்கின் றன.

இந்தச் சுரரோகங்கள், மற்றைய ரோகங்களுக்கெல்லாம் பிறப்பிட மும் தலைமையும் கொடிதுமாயிருக்கும் தன்மைபற்றியே சமஸ்தரோகங் களுக்கும் முதன்மையாக வைத்திருப்பதுந்தவிர, இவற்றின் ஆயுள் நிர்

மாணங்களைக் குறித்துச் - சுரநூல் - நாண்மாலை - எனச் சில சாஸ்திரங்கள் பிறந்திருக்கின்றன.——இதில் அடங்கிய சுரரோகத்தொகை-மதாந்தரம் உட்பட (312) இவற்றால் கிளைத்தரோகம் (251.)

3 வது படலத்தில், ரத்த பித்தரோகம் ஆதியாய் சாத்தியாசாத்திய மார்புரோகம் அந்தமாயுள்ள ரோகம்(58)இவற்றால் கிளைத்தரோகம் (260.)

4 வது படலத்தில், தாகரோகம் முதல் விஸ்டம்பா சீரண ரோகம் ஈறாயுள்ள ரோகம் (87) இவற்றால் கிளைத்த ரோகம் (133.)

5 வது, படலத்தில், மூத்திராகாதரோகம் முதல் வலிகுன்மரோகம் ஈறாயுள்ளரோகம் (134) இவற்றால் கிளைத்தரோகம். (158.)

6 வது படலத்தில், ஆநாகரோகம் முதல் ஓட்டுரோகம் ஈறாயுள்ள ரோகம் (130) இவற்றால் கிளைத்தரோகம் (114.)

7 வது படலத்தில், விஸ்போடரோகம் முதல் சாமானிய கிருமி ரோகம் ஈறாயுள்ள ரோகம் (48) இவற்றால் கிளைத்தரோகம் (102.)

8 வது படலத்தில், வாதரோகபேதமுதல் பேய்வாதரோகம் ஈறாயுள்ளரோகம் (89) இவற்றால் கிளைத்தரோகம் (65.)

9 வது படலத்தில், மகாவாதபேதமுதல் சாத்தியாசாத்திய விஷபாகரோகம் ஈறாயுள்ள ரோகம் (544) இவற்றால் கிளைத்தரோகம் (138.)

10 வது படலத்தில் அதிசூலரோகமுதல் அசாத்திய பூதநிதானம் ஈறாயுள்ள ரோகம் (163) இவற்றால் கிளைத்தரோகம் (162.)

11 வது படலத்தில், உன்மாதமுதல் கடைவிழியில் (11) வது பிரிவாகிய கண்ணோய் ஈறாயுள்ளரோகம்(205)இவற்றால்கிளைத்தரோகம்(104.)

12 வது படலத்தில், கர்ணரோகமுதல் அசாத்திய கபாலரோகம் ஈறாயுள்ள ரோகம் (105) இவற்றால் கிளைத்தரோகம் (60.)

13 வது படலத்தில், விரணபேதரோக முதல் சந்நிபாதயோனி ரோகம் ஈறாயுள்ள ரோகம் (329) இவற்றால் கிளைத்த ரோகம் (48.)

14 வது படலத்தில், விஷபேதமுதல் ஆரூட நிதானம் ஈறாயுள்ள ரோகம் (388) இவற்றால் கிளைத்தரோகம் (140.)

15 வது படலத்தில், கீடாதிபேதம் முதல் எலிவிஷ பேதரோகம் ஈருயுள்ளரோகம் (63) இவற்ருல் கிளைத்தரோகம் (58.)

இவற்றுள் முதற்படலம் ஒழிந்த மற்றைய 14 படலங்களில் அடங்கிய 4,448 ரோகங்களும் 3 அங்கங்களைப்பற்றிப் பிறக்கின்றன.

அதன் விவாம்,———சுரரோகமுதல் முயல்வலிரோகம் ஈருகிய (3,123) அதோங்கத்தைப்பற்றிப் பிறக்கின்ற ரோகங்களாம்——நேத்திரரோகம் முதல் அசாத்திய கபாலரோகம் ஈருகிய (299ம்) ஊர்த்துவாங்கத்தைப்பற்றிப் பிறக்கின்ற ரோகங்களாம்.——விரணபேதரோகமுதல் தழுதாழைரோகம் ஈருகிய (1026) உபயாங்கங்களைப்பற்றிப் பிறக்கின்ற ரோகங்களாம்.

இவ்வகைரோகங்களைக்கூறிய இந்த ஜீவரக்ஷாமிர்தம் என்கிற சாஸ்திரத்தினுடைய முக்கிய பிரயோசனம் யாதெனில், தர்மார்த்தகாம மோக்ஷங்களால் உண்டாகிறபேரின்பத்தை ஜீவன் அடைவதற்குப் பெரிய சாதனமாயிருக்கிற தேகத்தை ரக்ஷிக்கத்தக்க தென்பதாம்.

இந்த ரோகநிதானம் எவ்வாறு ரக்ஷிக்கும் என்னில், பிணிகள் வருவதற்கு முன்னம் அதில்நின்றும் தப்பித்துக்கொள்ளும் உபாயந்தெரியும்படி ரோகபூர்வ ரூபங்களை முதலிற்றனே கூறுவதும் - அவைகள் வந்தபின்பு இதுகளுக்குச் சிகிச்சை வேண்டும் வேண்டுவதில்லை யென்னுந் துணிபைத் தருவதுந்தவிர, ——ஒரு அரசனனவன் - 32 - வகை ஆயுதங்களையுடைய நால்வகைச் சேனுசமுத்திரங்களைக்கொண்டு காலமறிந்து சத்துருக்களை வென்று உயிர்களை ரக்ஷிப்பதுபோல——— 32 வகைச் சிகிச்சைகள் என்கிற ஆயுதங்களையுடைய ஒஷதி என்கிற நாலுவகைச் சேனைகளைக்கொண்டு காலமறிந்து வியாதிகளென்கிற பகைவர்களை வென்று தேகத்தை ரக்ஷிக்கின்ற தென்றுணர்க.

அப்படியிருக்க இந்நூலுக்கு ஜீவரக்ஷாமிர்தம் எனப்பெயர்கூறிய தென்னையெனில், ரோகமூனது, சடமாகிய தேகத்தைப் பற்றியதாயிருந்தாலும், அந்தத்தேகத்தினுடன் சேர்ந்து தேகி யெனப்பெயர்பெற்று அபின்னமாயிருந்து ரோகத்தினல் உண்டாகின்ற துன்பத்தையும் ரோகம்

நீங்கியபோது உண்டாகின்ற இன்பத்தையும் அநுபவிப்பது ஜீவனுதலால் ஜீவரக்ஷாமிர்தம் என முதனூலாசிரியரே பெயர் கூறினர். —

## உதாரணம்.

தருமம் பொருள் காமம் வீடென நான்கும் உருவத்தாலாய பயன் என்றும்———உணர்வாவதெல்லாம் உடம்பின்பயனே என்றும்——— உடம்பாரழியி லுயிராரழிவர் திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவுமாட்டார். என்றும்—அனந்தஞ்சாஸ்திரங்கள் முறையிடுகின்றன வென்றுணர்க. —

இன்னும் இந்நூலால் யாவரும் வியப்புடன் அடையத்தக்க பெரும் பயன் ஒன்றுளது———அதாவது, தேவபூசனை சித்தசுத்தி ஜீவ காருண்ணியம் நல்லொழுக்கம் முதலிய சத்குணங்களையுடையவராகி கை பார்த்தற்குரிய நெடுநாடி லகுநாடி குறுநாடி தசநாடிஸ்தானம் அஷ்டபரீக்ஷை முதலிய பற்பலசாஸ்திரங்களில் மிகுந்த பழக்கமுள்ளவராய், தேகம் தேசம் காலம் ஜாடராக்கினி உண்டி பலம் வயது நித்திரை முதலிய பேதங்களை ஆராய்ந்து, விதிப்படி ரோகியின் கரங்களைப்பற்றி வாதாதி நாடிகளின் தன்னிலை பிறநிலை தொந்தம் பிறழல் முதலியவைகளை முக்கண் கொண்டறிந்து, அறிவைச்செலுத்தி ஒவ்வொருரோகங்களையும் அருமையாக நிதானஞ் செய்கின்ற பரம்பரைவைத்தியர்களைப் பார்க்கிலும் இந்த ஜீவரக்ஷாமிர்தமானது, சூரியன் உதயமாகி சகல காக்ஷிப்பொருள்களையும் ஐயந்திரிபறத் தெரிவிப்பதுபோல் தன்னைவிரும்பிய பெயர்கட்கெல்லாம் எவ்வளவு ரோகநிதானஞ் செய்யவேண்டுமோ அவ்வளவு ரோக நிதானங்களையும் அவ்வவற்றிற்குரிய சிகிச்சைகளையும் மிக எளிதாகத் தெரிவிக்கும் என்பதுதான்.

—

ஆதலால் இதனை ஆதியோடந்தமாக ஆராய்ச்சிசெய்யும் புத்திமான்களியாவரும் தங்கள் தங்கள் ஆன்மாவுக்குத் துணையாயிருக்குமென்று இதயசம்மதமாக மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்வார்கள்.

இந்த சாஸ்திரத்தில் சொல்லிய ரோகங்களையெல்லாம் நிவிர்த்தி செய்யத்தக்க தேவசிகிச்சை (1) ராக்ஷசசிகிச்சை (1) மானிடசிகிச்சை

(30) ஆகிய முப்பத்திரண்டு வகைச்சிகிச்சைக்குள் அடங்கிய பலவித அவுஷதங்களேயும் விரிவாகக்கூறுகின்ற சிகிச்சாசாரசங்கிரகம் என்னும் சாஸ்திரம் இனித் தனியேபதிப்பிக்கப்படும்.

மேற்கூறிய ரோகங்களுக்குரிய சிகிச்சைகளே, —அந்தந்த ரோகங்களின் முடிவில் தனித்தனியே காண்பித்திருந்தால் மிகுந்த பிரயோசனமாயிருக்குமேயென்னில் மேற்படி சாஸ்திரத்தில், ஒவ்வொரு ரோகங்களைக் குறித்துச் சொல்லிபிருக்கிற அவுஷதங்கள் விஸ்தாரமாயிருப்பதனுல் அவைகளே, ஈண்டெழுதப்புகின் இச்சாஸ்திரமும் பெரிதாகும் என்பது பற்றி அதனைத் தனியே பதிப்பிக்க நியமிக்கப்பட்டது.

ஆகையால், இந்தச் சாஸ்திரத்தையும் இனியுடனே பதிப்பிக்கப்படுகிற அந்த சாஸ்திரத்தையும் விவேகசாலிகள் முறையாகவாசித்துத் தங்கள் புத்தியில் அவகாகப்படுத்திக்கொண்டு கிரமப்படி சிகிச்சை செய்யில், இம்மை மறுமைக்குரிய பயன்களே இனிதிலடைந்து வாழ்வார்கள்.

முகவுரை முற்றியது.

வேலுமயிலுந்துணை.

உ

சிவ சுப்பிரமணியர் துணை.

# அணிந்துரை.

---

உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தே
னுடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டே
னுடம்புளே யுத்தமன் கோயிற்கொண் டானென்
றுடம்பினை யானிருந் தோம்புகின் றேனே. திருமந்திரம்.

---

உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து. திருக்குறள்.

## பரதநாடு.

கடவுளால் படைக்கப்பட்ட இப் பூவுலகத்திற் கோர் அணியாய் விளங்குவது நம் நாடாம் பரதநாடு.

இந் நாட்டின் பெயரையும் புகழையும் முற்றிலும் எடுத்துரைப்பது ஆயிர நாவுடையோ னன்றி, மானிடப்பிறவியின் ஆற்றலைக் கடந்ததாகும். அப் பெருமை தானும் பண்டைக்காலத்தே தலை சிறந்து விளங்கியது. நமது முன்னோர் இகத்திற் குரிய சகலசாதகங்களையும் அடைந்து, அதன் பின் அவைகளில் சிக்குண் டழியாமல், இக சுகங்களை அடக்கி ஆண்டு, மனத்தைப் பர சாதகங்களிற் செலுத்தி, இகபரதத்துவ நிதானங்களிற் கைதேர்ந்தவர்களாய், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப் புருஷார்த்தங்களையும் அடையும்படி எண்ணரிய வேதங்களையும் சாஸ் திரங்களையும் என்றென்றைக்கும் உலகம் உய்யுமாறு உதவித் தாமரை நீர் போல் ஒட்டியும் ஒட்டாமலும் உலகத்தில் வாழ்ந்துவந்த நாளில், ஏனைய உலகம் உதித்ததோ இலதோ என்னுமாறு மாக்கள் ஆங்காங்கு பற்பல தொகுதிகளாய்த் தோன்றி எண்ணும் எழுத்தும் ஏதென்று உணராது புன்மைவாய்ந்திருந்தனர் என்பது சரித்திர சித்தாந்தம். ஆயினும் இப்

பெருமையைக் கண்டு பரதநாட்டில் உதித்த நாம் இக்காலத்து அடையும் பெருமைதான் என்னே? பல்லாயிரம் வருடங்கட்கு முன்னரே பல்லாற்றானும் பெருமை மிகுந்த இப் புனிதநாட்டில் உதித்தும், அப் பெரும் பேற்றைக்கொண்டு மேன்மேலும் ஓங்கிவளரும் ஆற்றலை இழந்து, படிப் படியாய் நாளடைவில் அற்பாயுளாய்ப் பெருமைகுன்றிச்சீரழிந்துச் செல்வமுங் குறைந்து, இக்காலத்து "இவரினும் இழிந்தோர் யாரே?" என்று உலகமுழுதும் இகழ்ந்துரைக்கும்படி இருப்பதும் நாமே. ஆதலின் பண்டைக் காலத்துப் பெருமையை எண்ணி அகமகிழ்வதும், இக்காலத்துச் சிறுமையை உன்னி உளமழிவதும் பயனற்ற பாடாகும். இரண்டையும் நீத்து, இனி மேம்படும்வழிகளைத்தேடிக் கைக்கொள்வதே சான்றோர் அறிவாகும். அவ்வாறாயின் புராதன பெருமையால் நமக்காவது ஒன்றும் இல்லை என்று கூறலாமோ? அதுவும் உண்மையாகாது. நம் பெரியோர் பெருமைகளை எண்ணி எண்ணி, அதனால் மேன்மேலும் ஊக்கங்கொண்டு, நாமும் நமது காலத்தில் நம் நாடு அப்பெருமையை அடைவதற்கான முயற்சிகளை மேற்கொண்டுழைக்கவேண்டும். அவ் வுழைப்புச் சிறக்க வேண்டுமாயின் தற்போது நம்பால் உள்ள குறைகளைத் தெளிதல் வேண்டும். குறைகளைத் தெளிந்தபின்னரே களைதல் கூடும். அங்ஙனம் களைந்த பின்னரே நலம்பெற ஓங்க வேண்டும். நிற்க,

## தமிழ்மக்கள்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த பரதபூமியானது பாரதவருஷமென்றும் பரதகண்டமென்றும் பெயர்பூண்டு, தேவர் உலகம் பூவுலகில் இழிந்ததென்ன யாவரும் கொண்டாடுங் காலத்திற்கு நீண்டகாலம் முன்னரே, நந் தமிழ்நாடு கல்வி கேள்விகளிலும், நாகரிகத்திலும், மதக்கொள்கைகளிலுஞ் சீர்பெற்றுச் செழித்தோங்கி யிருந்த தென்பதும் சரித்திர சித்தாந்தமே.

ஆரியர்கள் பரதநாட்டிற்கு வடமேற்கில் மத்திய ஆசியா பூமியினின்றும் பல பிரிவுகளாகப் பிரிந்து வருவதற்குமுன், திராவிடர்களே ஒருகாலத்தில் அந் நாட்டின் பெரும்பாகத்திலும் பரவி, ஏனைய புராதன குடிகளை அடக்கி ஆண்டு, தலை சிறந்து இருந்தனரென்று சரித்திர வல்லார் இயம்புகின்றனர். அத் திராவிடரே தமிழ்மக்களாவர். பிறகு ஆரியர்கள் வந்து குடியேறின காலத்தில் தமிழ் மக்கள் தென்னாட்டிற் சுருங்கினர். அதற்குப் பின் இவ் விரு வகுப்பினரும்

ஒருவரோ டொருவர் கலந்து அவரவர் நாகரிகத்தையும் கல்வியறிவையும் மற்றவர்க்குதவி, இருவரும் மேம்பாடடைந்து நீண்டகாலம் ஒற்றுமையுடன் வாழ்ந்துவந்தனர். தமிழ்மக்கள் தம்மிடமுள்ள சாஸ்திரங்களையும் இலக்கிய இலக்கணங்களையும் வந்தவர்க்கு ஈந்ததுமன்றி, அவர்பாலுள்ள சாஸ்திரங்களையும், இலக்கிய இலக்கணங்களையும் ஆய்ந்தெடுத்துக்கொண்டனர். அதன் பயனாகப் பிற்காலத்தில் ஆரியர் நாகரிகமும், மதக் கோட்பாடுகளும், அவர்தங் கல்வி ஆராய்ச்சியும் பெற்றுத் தமிழ்மக்கள் தம்முடைய இலக்கிய இலக்கணங்களிலும், சமயக் கொள்கைகளிலும், யோகஞான வைத்தியம் முதலிய பரிபாஷைகளிலும் வடமொழிச் சொற்களை ஆளத் தொடங்கினர். காலவகையினால் யாவருக்கும் பழையன கழிதலும் புதியன புகுதலுமாகிய திரிபுகள் வழுவலவென்றபடி, இவ்வாறு மாறுதல்கள் அடைந்தபோதிலும், ஒருவருக்கொருவர் கொள்வனகொடுப்பன நேர்ந்தபோதிலும், தமிழ் மக்கள் தம் பெருமை குன்றாமலும், தனிமரபு அழியாமலும் உபநதிகளைக்கொண்டு பெருகியொழுகும் ஜீவநதிகளைப்போல் வளர்ந்து வந்தனர். அதற்குப் பின்னரும் அனேக ஆண்டுகள்சென்று இப் பரதபூமியையும் அதில் அடங்கிய தமிழ் நாட்டையும் துருக்கியரும் அவர் பின் இப்போது நம்மை ஆண்டு அளிக்கும் ஆங்கிலரும் கைக்கொண்ட நீண்ட காலத்திலும் தமிழ்மக்கள் தம்மியல்பு மாறாது வளர்ந்து வருவது யாவரும் கண்கூடாகக் காணும் காக்ஷியேயாம்.

## தமிழின்மகிமை.

தமிழ் மக்களின் பெருமையும் சிறுமையும் இவ்வாறு இருக்க, நம்மைச் சீராட்டித் தாலாட்டி ஊட்டி வளர்க்கும் தமிழ் என்னும் நமது இனியதாய் நமது நாடுபடும் பாட்டையேபடுவது சகசமன்றோ? நம்பாஷையில் இயன்று புராதனமாய்க் கிடைத்துள்ள தொல்காப்பியம் முதலாய பல நூற்களும், சரித்திரசாஸ்திர எல்லைக்குள் அகப்படாது புறம்பே இருந்து, இன்னும் ஆராய்ச்சி அளவாகவே நிற்கலாயின. அங்ஙன மிருக்க நூற்களில் முதல் நூல் எனப்படும் தொல்காப்பியமே இலக்கணமும் இலக்கியமுமாய் நின்று, அவ்விலக்கணந்தானும் பாஷையின் இலக்கணமேயன்றித் தமிழ் மக்களின் இலக்கணமுமாய் அமைந்து, எவ்வகையினுஞ் சிறப்பு வாய்ந்து இருக்கின்றது. எப்பாஷையிலும் முதல் நூல் தகளற்றிருப்பது மன்றி நடை

யொழுக்கிலும் பொருளடக்கத்திலும் நிகரற்றிருப்பது அசாத்திய மாதலாலும், யாதாமொருபாஷை அத்தகைய சிறப்படைவதற்குமுன் பல நூற்றாண்டுகளேனும் வளர்ந்து வந்திருக்க வேண்டுமாதலாலும், தமிழ்ப் பாஷையின் வரையறையை எங்ஙனங் கணிக்கக்கூடும்? இனிமை என்னும் பொருள்தரும் பெயர்பூண்ட தமிழ்மொழியானது, எழுத்து, சொல், பொருள், அணி, யாப்பு,என்னும் இலக்கணங்களில் பூர்த்தியான முதிர்ச்சி அடைந்துஇருப்பதுடன், தமிழ் ஒன்றேயன்றி வேறு எந்த பாஷையிலும் இல்லை என்று உறுதியாய்ச் சொல்லக்கூடியதான அகப்பொருள் இலக்கண இலக்கியங்களையும் பெற்றிருக்கின்றது. இவைகளேயன்றி இதிகாச புராண ஆகம நூற்களும் எண்ணிறந்தவை இயன்றுள்ளன.

அன்றியும் மக்கள்பாற்கொண்ட பெருங்கருணையால் சிவபெருமானார் பார்வதி அம்மையாருக்கு அருளிச்செய்து, உபவேதங்களில் ஒன்றாகி நிற்கும் ஆயுள்வேதத்தை வழிவழியே நந்திதேவரிடம் தாமுணர்ந்தபடி மஹாசித்துப் புருஷர்களாகிய அகஸ்தியர், திருமூலர், போகர், கொங்கணவர், தேரையர் முதலியோர், இத்தெய்வத் தமிழ் மொழியில் இயற்றிய அ[illegible] பெருஞ் சாஸ்திரங்கள் பலவற்றுள்ளும் காலகதியடைந்தன போக [illegible]ற்கும் நூற்கள் எண்ணிறந்தவை. அவற்றின் அருமை பெருமை க[illegible] ள்ளபடி உரைக்கப்புகின் பெருகுமாதலின் இப் பெரியோர்களால் நமக்குக் கிடைத்துள்ள நூற்களில் புதைந்து கிடக்கும் தனிச் சிறப்புகளில் சிலவற்றிற் கேனும் ஈண்டு இடந்தரல் வேண்டும்.

'ஏது' என்னும், பகுதியின் பாற்பட்ட வாத பித்த ஐயங்களின் குறைகுணங்களைத் தெளிவதற்கு நாடிப் பரீக்ஷையை அதி விரிவும் நுட்பமும் பொருந்திய பிரத்தியேக சாஸ்திரமாகச் செய்து இருக்கின்றனர். 'லிங்க'வகையிலும் மூத்திரப் பரீக்ஷையை அதிநுட்பமாகப் பரிசீலனை செய்து சர்வரோக நிதானங்களையும் இவ்வொன்றினின்றே கணிக்குமாறு ஆற்றலுஞ் சிறப்பும் வாய்ந்த "நீர்நிறக்குறி நெய்க்குறி" என்னுஞ் சாஸ்திரத்தை நிகரற்றபடி தந்துதவி இருக்கின்றனர். இன்னும் சிகிச்சாக் கிரமத்தில் அரும்பொருள்களாய் கிடைத்துள்ளவைகளில் தீநீர், திராவகம், ஜெயநீர், சரக்குவைப்பு இரத்தின வைப்பு, உருக்கினம், களங்கு, உபரசச்சத்து, குளிகை, சாரணை மணிகள், குருச்சுன்னம், இவைகளினின்றும் பெறப்படும் பஸ்ம செந்தூர சுன்னங்கள், கற்பவகைகள், இந்நோரன்னவைபலவுள. 'ஏது' முதலிய

மூன்றும் நீங்கலாக, நோய் அணுகாக் வண்ணமாய் காப்பு என்பதையும் 4-வது பிரிவாக ஒழுங்குறத் திரட்டி அமைத்துள்ளனர். நிற்க,

திருமூலர், தேரையர் முதலிய பெரியோர், கற்று வல்லோரல்லது ஏனையோர் தெரிந்துணரச் சாத்தியமில்லாத அருந்தமிழ்ப் பாக்களில் தமது நூற்களை இயற்றி இருக்கின்றனர். அகஸ்தியர் முதலிய வேறுசில பெரியோர் தமிழ் மணமறியாத புல்லறிவாளர்களும் எளிதில் படித்துத்தெரிந்துகொள்ளுமாறு, இலக்கிய விலக்கண வரையறைகளையுந் தம்பெருங் கருணையால் கடந்து, தமிழ் உலகம் உய்யுமாறு, மழலைச் சொற்களே யன்ன மொழிகளை உபயோகித்து, மனத்தில் நிலை பெறும்படித் தம் நூற்களை எளிய பாக்களாகத் தொகுத்துப் பேருதவி புரிந்திருக்கின்றனர். இவர் தம் பெருமை தான் என்னே? இவ்வுண்மையும் பெருமையும் உணராத சிறியோர், சிலர் தமிழ் வயித்திய முறைகளை இழித்துரைக்க எண்ணி, இலக்கண இலக்கியக் குறைகளை எடுத்துக்காட்டி இகழ்பவராவார். இச் சிறியோர்கட்கு விடையளிப்பது அனுவஸ்யமாயினும் அவர்களுரைப்பதையும் சிறிது ஆராய்வோம்.

நாவல்லோர் இயற்றும் பாக்களின் சிறப்பானது சொ[illegible], [illegible]ப்பு, அணி என்னும் இவ் வகைகளில் பொலிவுற்றிருப்பதே யன்றி, அவைகளை வாகனமாகக்கொண்டு செல்லும் பொருளின் பெருமையே சாலப் பெரிதெனச் சான்றோர் மதிப்பர். சொற்சுவை, பொருட்சுவை, இவ்விரண்டினுள் முதலது செவிக்கு இன்பந்தந்து ஆக்கியோன் கவித்திறனைப் புலப்படுத்தும். பொருட்சுவையானது, அவனது அறிவின் பெருமையையும் அதனால் உலகம் அடையும் நன்மையையும் பற்றி நிற்கும். எளிதென்றிகழப்படுகின்ற அந்நூற்களின் பொருட்சுவையை உற்று நோக்குமிடத்து அவைகளின் பெருமையும், அப் பெரியாரின் மகிமையும் இத்தன்மைத்தென உணரலாகும். இவ் வுண்மையை முற்றும் அறிந்த தமிழ் வைத்திய சிகாமணிகள் அப்பெரியாரை வணங்கி வாழ்த்துதல் சகஜமேயன்றோ? நிற்க, சொற்செறிவே பெரிதென்று எண்ணித் தமிழ் வைத்தியத்தை இகழ்ந்துபேசும் புன்மக்கள், தேரையர் இயற்றிய மோனையமுகம், கரிசல், மருத்துப் பாரதம் முதலிய நூற்களின் பெயர்களையுங் கேட்டிலர் போலும்.

## வைத்திய சாஸ்திரம்.

இனி, நமக்குக் கிடைத்துள்ள வைத்திய சாஸ்திரங்கள் உலகம் வியக்கத்தக்க பெருமையையும் நுட்பத்தையும் விஸ்தீரணத்தையும் கொண்டுள்ளன. நம் நாட்டு அரும்பெருஞ் சாஸ்திரங்கள் ஏனையநாட்டுச் சாஸ்திரங்களைப்போல் தத்தமக்கான விஷயப்போக்கையே கொண்டொழுகி நில்லாது, யாவும் பரசாதனங்களுக்குச் சாதகங்களாய் முன் நின்று பின்னரே மானிடரின் இகசுகங்கட்கு உபயோகமாகின்றன. இவ்வழியில் ஏனையசாஸ்திரங்களைக் காட்டிலும் வைத்திய சாஸ்திரமானது முதன்மையைப் பெற்றிருக்கின்றது.

ஆயுள்வேதமானது சரீர ஆரோக்கிய திடகாத்திரத்தையும், அழகையுங் கொடுத்து நீண்ட ஆயுளையுந்தருவதற்காக ஏற்பட்ட சாஸ்திரமென்று யாவரும் அறிவார்கள். இவையே சகல வைத்திய சாஸ்திரங்கட்கும் பொதுவான நோக்கங்களாகும். நம் நாட்டிலோ ஆயுள்வேதமானது முக்கியமாய் யோகிகளும் முனிவர்களும் சித்தர்களும் யோகவழிகளில் நின்று, மனோ வாக்குக் காயங்களிற் பரம் பொருளின் வயப்பட்டு, நீண்டகாலம் காலனைப் புறங்கண்டு, நிஷ்டையில் நிலைத்திருப்பதற்குச் சாதகமாகக் கற்பங்கள் முதலிய பல உபாயங்களைப் பெரிதும் போற்றுகின்றது.

கற்பமாக்கொளும விழ்தமென்னு மூலிகை
நச்சுவார்க்கமுதென்னவுண்ணலானது - சதகோடி
பொற் பிரகாசத்தை யுடலென்ன வாலிபம்
மிக்க வாய்ப்பது பெருமை யென்ன கூறுதல்
புத்திவார்த்தைகளி வைகளென்றுணர் வாரெனி-லறிவாளர்
நிற்ப ராத்தும வுறுதியுண்மை யாவது
நுட்ப மாத்திரமறிவ ரெண்ணிலாயுளை
நித்தமாக் குறிகொள்வழி கெண்ணிய ராகுவர்-நிசமாமே.

—தேரையர்.

இன்னம் அப்பெரியோர் பெரும் நோக்கங்கட்கு அனுகூலமாக ஆயுள்வேத நூற்களில் ஒரு பான்மையே தேவருணும் அமுதே என்ன மானிடரின் நோய்களைப் போக்கிச் சுகவாழ்க்கையைத் தருவதற்குச் சாதகமாக விருக்கின்றது,

பற்பமாத்திரை தைல வெண்ணெய் லேகிய
வர்க்க நேத்திர குளிகை வெண்ணெய்—சூரணி
பற்று வேர்ப்பனை சுடிகைசுண்ணிலானமை—குடிநீராம்
நற்பராக்கிர வகிழ்த மின்னும் மேலுள. —தேரையர்.

பெறற்கரிய இப் பெரும்பேற்றை அப்பெரியோர் மரபில் வந்த நாம் எண்ணிறந்த காலமாய் நமதெனக்கொண்டு கையாடுந்திறமற்று இருக்கும் நிலையானது நாம்செய்த தீவினையின் பயனே என்றுணரற் பாலதாகும்.

## தற்கால சுதேச வைத்திய நிலை.

இங்ஙனம் நமக்குக்கிடைத்துள்ள அரியசாஸ்திரங்களைப் புறக்கணித்து நிற்கும் நாம் எவ்வாறு பிணி நீக்கஞ்செய்து நலம் புரிதல் கூடும். வைத்தியப் பெருந் தொழிலுக்கு ஆதாரவாகவுள்ள சாதகங்கள் மூன்று; அவை (1) சாஸ்திர ஆராய்ச்சி (2) அநுபவம் (3) கைபாகம் முதலிய வைகளாம். முதலிரண்டும் ரோக நிதானத்திற்கு வேண்டியவை, பின்னது சிகிச்சைக்குரியவை. இம்மூன்றிலும் முக்கியமான சாஸ்திர ஆராய்ச்சியானது மிகவும் குன்றி இருக்கிறது. அதற்குக் காரணம் சாஸ்திரங்கள் வெளிவராமையேயாம். இச்சாஸ்திரங்கள் ஆங்காங்கு அவற்றின் மணமறியாதவர் கையிற் சிக்கிச் செல்லுக்கிரையாய்ச் சிதைந்து வருகின்றன. அவைகளைத்திரட்டி ஒழுங்குபடுத்தி விளக்கமாக உரை எழுதி வெளியிடுவதே நம் நாட்டு வைத்திய சாஸ்திர அபிமானங்கொண்டவர்களின் கடமையாம்!

வெளிவந்துள்ளனவாகிய சில நூற்கள் பெரும்பாலும் ஆராய்ச்சிக் குறைவினாலும் பல்வேறு காரணங்களினாலும் தம் பெருமை குன்றி எண்ணிலாப் பிழைகளுடன் உலவிவந்து இன்னல் புரிகின்றன. இப்பெருங் குறை நீங்குங்காலமும் வருமோ ? இக்காலத்து நமது வைத்தியமுறைகள் தம்பெருமைகளைக் காட்டாமல் இருக்கவில்லை. கல்வி யறிவிலும் ஆராய்ச்சியிலும் சிறந்ததெனப் பெரிதும் புகழ்ந்து பேசப்படும் மேனாட்டு வைத்திய முறைகளுக்கு எட்டாத பல பிணிகளை நம் நாட்டு வைத்திய சிகாமணிகள் எளிதில் உணர்ந்து சிகிச்சைசெய்தேவருகின்றனர். இத்திறமைக்குக் காரணம் அவர்கள் பரம்பரையில் தம் பெரியோர்களிடம் கற்றுக் கேட்டுப் பழகிவந்த அநுபவமே யாகும். இதனுடன் நூல் ஆராய்ச்சியும் கூடுமாயின் பொன்மலர் நாற்றமுடைத்தெனக் கூறலா மன்றோ ?

## தேசாபிமானம்.

இனியேனும் இப்பெருங்குறையை நீக்க வல்லார் நமக்குக் கருந்தனமாகக் கிடைத்துள்ள வைத்திய சாஸ்திரங்களை நிலைநாட்ட வேண்டும். இதுவே தேசாபிமானிகளின் முதற்கடமையாகுமென்று திட்டமாகக் கூறலாம். ஏனெனில் ஒவ்வொரு தேசத்தவரும் வெவ்வேறு நடையுடை பாவனை யுடையவர்களாய் உணவுகளிலும் வழக்க ஒழுக்கங்களிலும் மாறுபடுகிறார்கள். அவைகளைக் கொண்டே இவர் இந்நாட்டினர், அவர் அந்நாட்டினர் என்று உலகம்வரையறை ஏற்படுத்துகின்றது. நோய்கள் உணவாதிகளாலும் வழக்கவொழுக்கத் தவறுகளினாலுமே பிறக்கின்றன வாதலின் அவற்றின் நிதானமும் சிகிச்சையும் ஒவ்வொரு நாட்டிற்கும் பேதப்படுகின்றன. ஆதலின் அந்தந்த நாட்டிற்குரிய வைத்திய சாஸ்திரத்தை அந்நாட்டினர் பெரிதும் பாராட்டுவார்கள். அது போலவே, நம் நாடும் சிறக்க வேண்டுமாயின் ஆங்காங்குச் சிதறிக்கிடக்கும் ஏட்டுப் பிரதிகளைத் தேர்ந்து திரட்டுதல் வேண்டும். திரட்டியபின் அவைகளை அறிவுடையோரைக்கொண்டு ஒத்துப்பார்த்துச் சுத்த பாடமாக்கித் தெளிவுரை எழுதி அச்சிடவேண்டும். அங்ஙனம் வெளியிட்ட பின்னர் வைத்திய மாணவர்களைத் தேடி அவர்களுக்குப் பொருளுதவிச் செய்தாவது அந்நூற்களை ஐயம் திரிபறக் கற்றுணரச் செய்யவேண்டும். அதன்பின் அவர்கள் தத்தமக்கியன்ற தனியாராய்ச்சிகளைச் செய்து மேன்மேலும் வைத்தியம் விருத்தியடையச் செய்யவேண்டும் அதுவேயன்றி நம்நாட்டவரும் அவ் வைத்திய முறையைக் கைக்கொண்டு நன்மையுறும்படி ஆங்காங்கு சுதேச வைத்தியசாலைகளை நியமிக்கவேண்டும். இப்பெருங் காரியங்களெல்லாம் பெரும் பொருளாளிகளும் துரைத்தனத்தாரும் சிரத்தையுடன் மேற்கொண்டாலன்றி பயன்படுவது சாத்தியமன்று. இவ்விஷயத்தையே தேசாபிமானத்திற் கோர் அடிப்படையாகவும் அறிகுறியாகவும் கொள்ளல் வேண்டும்.

## பரதேசவைத்தியம்.

தேசாபிமானிகளின் செய்கை அதுவாக வைத்திய பண்டிதர்களும் மாணவர்களும் சுதேசவைத்திய விருத்தியின் பொருட்டுச் செய்யும் பேருதவி ஒன்றுண்டு. "முக்கண் காட்டினும் குற்றங்குற்றமே" என்று கூறிய நக்கீரருக்கு இணங்க இவர்கள் தமதுகல்வியின் பெருமையில் ஈடு

பட்டுத்திடம்படப்பேசினும், அறிவு ஒருவன்பாற் பட்டதன்று என்பதை உன்னிப் பிறவைத்திய முறைகளில் காணப்படும் புதிய ஆராய்ச்சி வகைகளைத்தாமும், தெளிந்து அவற்றுள் தமக்கு வேண்டியனவாயும் தம்மிடமில்லாதனவாயும் இருக்கும் விஷயங்களைத் தமதாக்கிக் கொள்ளல் வேண்டும்.

நமதாய் உள்ளன மாத்திரமே சிறப்புடையனவென்றும், பிறர் பால் நாம் அறியற்பாலன ஏதும் இலதென்றும் கொள்ளும் கொள்கையானது யாவருக்கும் பொருந்தாத தாகும். மேனாட்டு வைத்திய முறைகள் இந் நாட்டில் இக்காலத்தில் பரவி இருப்பதும் ஒரு பாக்கியமாக வெண்ணி, அதனின்றும் நாம் கொள்வனவற்றைக் கொள்ளுதல் வேண்டும். ஆயினும் அவ்வாறு செய்வதினும் ஒரு பெரிய அபாயம் உண்டு. அதாவது, சிலர் நமது வைத்திய நூல்களில் ஆராய்ச்சிக் குறைவினால்,அவற்றிலுள்ள எல்லா விஷயங்களையும் பரதேச முறைகளின் வாயிலாக விவரிக்கப் புகுந்து அல்லல்படுவதேயாம். இதனினும் நாம் நம்வைத்திய சாஸ்திரங்களுக்கு இழைக்கக்கூடிய பெருந்தீங்கு வேறொன்றில்லை. ஜாதி, பாஷை, சாஸ்திரம் இவைகளின் கலப்புகள் காலக்கிரமத்தில் அனேக நூற்றாண்டுகளில் படிப்படியாய் ஏற்படக்கூடியவையேயன்றி ஒருவன் நியமனத்தால் ஒரு நிமிஷத்தில் உண்டாகுந்தன்மையவன்று. இத்தகைய கலப்புகட்குக் குடிகள் எப்போதும் விரோதமேபாராட்டுவார்கள் என்று சரித்திர சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. நெருங்கிய சேர்க்கை பலத்தால் அவ் விரோதத்தையுங் கடந்து அவர்களும் அறியாது காலக்கிரமத்தில் கலப்பு ஏற்படுகின்றது. நமது நாடானது இத்தகைய கலப்புக்கு எளிதில் இடந் தருவதில்லை.

## ஜீவரக்ஷாமிர்தம்.

இனி ஜீவரக்ஷாமிர்தம் என்னும் பெயர் பூண்ட இந்நூலானது முற்றும் தோஷபேத ரோக நிதானங்களையும், அவைகளின் சிகிச்சை வழிகளையும் காட்டிய சாஸ்திரமாகும். இது நமது வைத்திய பண்டித சிகாமணிகளுக்குப் பேருதவியாய்ச் சுமார் 60 - வருஷகாலமாக வெளிவந்து உபயோகப் படுகின்றது.

இதில் அடியேன் செய்த சிற்றாராய்ச்சியிற் பல அரிய விஷயங்கள் வெளிவந்தன. அவற்றுள் முக்கியமாக முதல் நூலிலிருந்து படலவகுப்புக் கிரமங்களையும், அவ்வப்படலங்களின் ரோகங்களையும் எடுத்துக் கொண்டு, அவைகளுடன் சித்துப் புருஷர்களின் சாஸ்திரங்களையும் ஒப்பிட்டுப்பார்த்து, பேதப்படும் பலவிஷயங்களையும் தொகுத்து "என்பாரும் உளர்" என்றும், சிறியபேதங்களா யுள்ளவைகளை அந்தந்த ரோகத்தின் கீழே "அன்றியும்" என்றும், பெரும் பகுதிகளாய்ப் பேதப்படும் ரோக வகைகளை மதாந்தரம்என்னும் தலைப்புடன் தனியாகவேஎடுத்துஎழுதியும், இச்சாஸ்திரம் ஒன்றினிடமாகவே வடமொழி தென்மொழி இவ்விரண்டினுங் காணும் ரோக நிதானங்களை முற்றிலும் ஒருங்கே எளிதில் யாவரும் அறிந்து நிதானிக்கும் வகைக்கு நூலாசிரியர் விளங்கக்காட்டி யிருக்கின்றனர். 'அன்றியும்'என்பதைப் பின்பற்றிவரும் சிறுபேதங்கள்படிப்பவர்க்கு சித்தர்மதாந்தரம் என விளங்குமாதலின்அவைகட்கு மதாந்தரம் என்னும் தனித்தலைப்பு கொடுக்கவில்லை. அவைகளை விடுத்து, மதாந்தரம் என வருவனவற்றைச் சித்துப் புருஷர்களின் மதபேதங்களென அவர்களது சாத்திரங்களைக் கொண்டு தெளிந்து "சித்தர் மதாந்தரம்"என எழுதியுள்ளேன். இஃதன்றியும்,

(1) 125வது பக்கம் 5வது அஸ்மரிரோக படலத்தின்கீழ் மூத்திரக்கிரிச்சிரோற் பத்திலக்ஷணம் புதிதாய் எழுதியிருக்கிறது.

(2) 145வது பக்கம் ஷெ படலத்தின்கீழ் மேகரோக கால நிதானம் காட்டப்பட்டது.

(3) 252வது பக்கம் 9 வது மஹாவாத ரோகபடலத்தின்கீழ் சித்தர் மதாந்தரத்தலைப்பின் அடியில், அழல்பித்தம், மார்க்கபித்தம் என இரண்டும் சேர்த்துள்ளன.

(4) 399வது பக்கம் 13வது விரணபேத படலத்தில் சித்தர் மதாந்தரத் தலைப்பின்கீழ் பகந்தரரோகம் எனப்படும் பவுத்திரரோகம் 8-ம் சேர்க்கப்பட்டன.

(5) 461 வது பக்கம் கீடாதிபேத படலத்தில் காட்டுமசகத்தின் அடியில் மற்றைய மசகங்களின் பெயர்களைச் சித்தர் மதாந்தரப்படி எழுதி இருக்கின்றது. அவைகள் காரணப்பெயராய் அந்தந்த மசகத்தின் செயல்களைக் குறித்து நின்றன.

(6) ஷை படலத்தின் முடிவின் கீழ் தனியாகச் சித்தர் மதாந்தரத் தலைப்பின் அடியில் உளைமாந்தைரோகம், குடற்கரிரோகம், நாவொட்டிக் காய்ச்சல் இவைகள் ஏடுகளில் சோதித்து எடுத்து எழுதப்பட்டன.

## ரோகநிதானமகிமையும், படல அமைப்பும்.

ஆயுள்வேதத்தில் கூறப்பட்டுள்ள ரோகநிதான முறையின் மகிமை பெரிதும் பாராட்டற் பாலது. இச் சரீரத்தை வினையின் செய்கால் நிலமாக வைத்து, ரோக உற்பத்தியையும் அதன் வளர்ச்சியையும் ஆதி முதல் அந்தமாகச் சகல ரோகங்களையும் உட்படுத்திக்கூறும் இயல்பானது, ஒரு மரத்தின் வளர்ச்சிக்கு வித்துமுதலாகவும் கனி ஈறாகவும், இடையே அதன்உடல், அதனின்றும்பிறக்கும் பெருங்கிளைகள் சிறுகிளைகள், அதிற் றோன்றும் காய் கனிகள், அக்கனிகளில் அடங் கும் வித்துகள் ஆக இவையனைத்தும் பூமிக்குமேலாகவும், இவற்றின் வளர்ச்சிக்கும் செழுமைக்கும் சாதகமாகவும் காரணமாகவும் பூமியின் கீழ்வளர்ந்து செல்வன வேர்களாகவும், இத்தகைய பாகுபாடுபடுத்தி இருக்கின்றது. இவ்வுவமையின் பெருமையை இதனடியில் தேரையர் திருவாக்கால் காண்க.

நோயினுற் பத்திவெகு நோய்கள் வினைவிரையாய்
நோய்கள் வினைவயலாய் மெய்நோய்கள்வளர்பயிராய்
நோயுதவு பலனுகி நோய்கள்வெகுமேலாம். தேரையர்.

இந்தரோகங்கள் மானிடசரீரத்தில் கருப்பம், முயற்சி, கருமம்என்னும் மூவகைகளால் பிறக்கின்ற வெனக்கூறியபின்னர், அவை தானும் ஏது, லிங் கம் எனும் இருவகையில் நிதானிக்கப்பட வேண்டுமெனத் தெளிவாகக் கூறப்படுகின்றது.

இவ்விரண்டிலும் ஏது என்பதே பிரதானமாய் ஆயுள்வேத வைத்தி யர்களுக்கு ரோக நிதானஞ்செய்வதிலும் சிகிச்சையிலுங் கூட மிகவும் முக்கியமாக இருக்கின்றது. இவ்வகையைப் பின்பற்றி ஏற்படும் ரோக நிதானமானது, நிதானிக்கும் வைத்தியனுடைய கல்வி ஆராய்ச்சி அனு பவக்குறைவினாலே யன்றி பிழைபோவது அசாத்தியம். இதுவே ஆயுள் வேதத்தின் சிறப்பாகும்.

இனி, ஏது என்பது திரிதோஷ பேதங்களைக் குறிக்கின்றது. ரோகம் சரீரத்தில் தோன்றுவதற்கு முன்னர், திரிதோஷமெனப்படும் வாத பித்த ஐயங்கள் எத்தோஷமும் அடையாமல் தத்தமக்குரிய சரியான நிலையில் நின்று சரீரத்தைப்போஷித்து வருகின்றன. முற்கூறிய மூன்று வித காரணங்களால் வாதாதிகள் மூன்றும் தோஷமடைந்து தம் இயல்பு நிலைமாறி, ஒன்றை ஒன்று தாக்கிச் சரீரத்தில் ரோகத்தைப் பரவச் செய்து, 4448 என்று கணிக்கப்படும் ரோகங்களைப் பிறப்பிக்கின்றன.

லிங்கமாவது, திரிதோஷ பேதத்தால் பிறக்கும் நோய்கள் உள்ளும்புறம்புமாய் பற்பல பிணிகளாய் வெளிப்பட்டுப் பிரத்தியேக நாமங்கள் பெறுவது. இவற்றிற்கு ஆதிகாரண மாயிருப்பது திரிதோஷ பேதமாகையினாலே அப்பேதத்தை ஏதுவென்றும், அப்பேதத்தால் வெளிப்படும் நோயை லிங்கமென்றும் வகுத்துக்கூறப்பட்டது. முதல் முதலில் ஏது எனப்படும் திரிதோஷபேதங்களை நாடி வகையினால் அறிந்து ஆயுள்வேதவைத்தியன் ரோகங்களை நிதானிப்பான்.

நோய்நாடிநோய்முதல்நாடியதுதணிக்கும்
வாய்நாடிவாய்ப்பச்செயல். திருக்குறள்.

குறுமுனிக்குக்குகனருளிச்செய்த
முறைமுறைப்படிமுன்னியகாலமும்
நிறைமகிழ்ச்சிநிகழ்ச்சியுணர்வுடை
பொறையுமாய்ந்துபுகல்மருத்துவம். தேரையர்.

அதன்பின்னர் அந்தநிதானத்தில் ஏற்பட்டநோயை சரிஎன்று வலியுறுத்திக் கொள்ளும்பொருட்டு அஷ்டாங்க பரீக்ஷைகளைக் கைக்கொள்வான். அவ்வஷ்டாங்கபரீக்ஷையில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு ரோகத்தின் சிலபாகங்களையே காட்டிநிற்கும். இவ்வெண்வகை ஆராய்ச்சிகளில் முதன்மையாக எடுத்துக்கொள்ளப்பட்டது மூத்திரப் பரீக்ஷையேயாகும். நமக்குப் பெரியோர்களால் வகுத்துக் காட்டியிருக்கும் பரிமாணங்களைக் கொண்டு மூத்திரப் பரீக்ஷையை செய்வோமாயின் உடலில் உற்பவிக்கும் சகல ரோகங்களும் மூத்திரத்தில் குறிப்பாய்க் காட்டியே நிற்கும். ஆகவே நாடிலக்ஷணத்திற்கு இரண்டாவதாக மூத்திரப் பரீக்ஷையையே நம்மவர் பெரிதாகக் கைக்கொள்வர். இதன் விவரம் இந்நூலாசிரியரால் இயன்று

இத்துடன் வெளிவரும் "நீர்நிறக்குறி நெய்க்குறி" என்னும் நூலில் தெளி வாய் விளங்கும்.

இது நிற்க, முற்றிலும் தமிழ்ஆயுள்வேத முறையை ஒட்டி இயன் றிருக்கும் ஸ்ரீகண்டமுனிவரது ஜீவரக்ஷாமிர்தம் என்னும் நூலில் ரோகங் களைப் படலங்களாக வகுத்துக் காட்டியிருக்கும் பான்மையானது, அகஸ் தியர் திருமூலர் முதலிய பெரியோர் கணித்துள்ள ரோக உற்பத்தி விற் பத்திகளைப் பெரிதும் சார்பாகக் கொண்டிருக்கின்றது. இக்காரணம் பற் றியே இந்நூலாசிரியர் ரோகபடலங்கட்குத் தலைமையாக சித்த வைத்திய சாத்திரங்களில் தமக்குள்ள ஆராய்ச்சிப் பெருக்கினால் வாதபித்த சிலேஷ் மங்களின் இயற்கையான தன்மைகளையும், ரோகோற்பத்தியினால் அவை கள் அடையும் மாறுதல்களையும், முந்நூலிலும் சித்தர் நூலிலும் தாமு ணர்ந்தபடி திரட்டி எடுத்து, சாராம்சமாகத் தொகுத்து, தோஷாதிபேத படலம் எனப்பேர் கொடுத்துச் சேர்த்துள்ளார். இதன்றியும், ஆங்காங்கு, சிற்சில படலங்களின் ரோகதலைப்பிலும், இடையிடையே அவசரம் நேரிட்ட இடங்களிலும், வாதபித்த ஐயங்களின் தனி இயல்புகளையும் தொந்த திரி தோஷ மாறுபாடுகளையும் பெரிதும் சிறிதுமாக எடுத்துக் காட்டியுள்ளார்.

இனி, இந்நூலில் இரண்டாவது படலமாக எடுத்துக் கொண்டது சுரரோகபடலம்.

ரோக படலங்களில் முதன்மை ஸ்தானத்தை சுரரோகங்கட் குக் கொடுத்த காரணங்களை இந்நூலாசிரியர் தம் முகவுரையில்தெளி வாகக் கூறியிருக்கின்றார். அது வருமாறு, " இந்த சுரரோகங்கள் மற் றைய ரோகங்கட்கெல்லாம் பிறப்பிடமும் தலைமையும் கொடியதுமாயிருக் கும் தன்மையைப் பற்றியே சமஸ்தரோகங்கட்குத் தலைமையாக வைக்கப் பட்டன" சுரரோகங்களின் விசேஷங்கள் இவ்வாறிருக்க, அந்தரோகங்கள் பிறக்கும் விதத்தையும் மிகவும் தெளிவாக சுரரோகபடலத்தில் எழுதி இருக்கின்றார். (ஜீவரக்ஷாமிர்தம் சுரரோகபடலம் 27-வது பக்கம்பார்க்கவும்.)

ரோக உற்பத்திக்குக் காரணமாகக் கூறப்பட்டுள்ள முயற்சி, கருமம், கருப்பம்என்கின்ற மூன்றில் கருப்பம்என்பது தாய்தந்தைகளின் சுக்கில சோணிதவகையினாலும், தாயின் அறுசுவை அன்ன ரசபேத அப்த்தி யச் செய்கைகளினாலும், கருப்பத்தினின்றும் தொடர்ந்துவரும் ரோகங்க ளாதலின் அதை ஒருபுறம் வைத்து, மற்றைய இரண்டுவழிகளில், உணவு,

குடி,முழுக்கு, உழைப்பு, பசி, பட்டினி, உறக்கம், பயம், துக்கம், கோபம், நகைப்பு,மோகம், தகாதநடத்தை முதலிய குணக்கேட்டால் பித்தாதிக்கம் ஏற்பட்டு, மூல அபானவாயுவையும் ஆமாசயத்தையும் தாக்க, அதனால் சிலேஷ்மமானது தன்நிலைமாறி மேகரூபமாக ஊர்த்துவாங்கமாய்ச் சமான உதானஸ்தானங்களையுங் கடந்து, மூளையில் சென்று, அங்கு சிலேஷ்ம சம்பந்தம் பெற்றுப் பிராணஸ்தானத்தைவிட்டு இறங்கி, பீநசம், இருமல் முதலிய ரோகங்களாக உதானஸ்தானங்களிற் றங்கி, அங்குள்ள பித்த சம்பந்தத்தால் வாத மேகமாக வியானனைப்பற்றி இரத்தவோட்ட நரம்புகளின் வழியாகச் சப்ததாதுக்களிலும் பரவுகின்றது.

இதுவே ரோகோற்பத்தி என்றும், மேகோற்பத்தி என்றும்பொருள்பட, அகஸ்தியர் திருமூலர்முதலிய பெரியோர்கள் தெளிந்து உரைத்திருக்கின்றனர். இவ்விதம் தோன்றும் ரோகமானது, முதல் முதலில் நானாவித சுரங்களும், சந்நிபாதங்களுமாகத் தோன்றிச் சப்ததாதுக்களையும் மெலிவடையச்செய்து பல வகை ரோகங்களைப் பிறப்பித்துச் சரீரத்தைத் துன்புறுத்து கின்றது.

## 3 - வது ரத்தபித்த ரோகபடலம்.

இது, சப்ததாதுக்களும் மெலிவடைந்த வகையில், பிரதானமாகிய ரத்ததோஷங்களை அடுத்த ரத்தபித்தரோகத்தை இதில் கூறவந்து, அத்துடன் அசிர்க்கரம், அஸ்திசிராவம், காசம், க்ஷயகாசம், சுவாசம், விக்கல், க்ஷயம், குரற்கம்மல், அரோசகம், வாந்தி, மார்புரோகம் இவைகளையும் தொகுத்துக்கூறிய காரணம் யாதோ எனின்;—

ரத்தநாளங்களின் வழியாய் ரத்தத்தைப் பரவச்செய்யும் தொழிற்கொண்ட உதான, வியானவாயுக்கள் பித்தகபதோஷங்களுடன் பிரகோபித்து ரோகமுகமாகத்திரும்பி, மார்பினிடமாக, ரத்தபிலீகயகிருதிஸ்தானங்களில் இந்த ரத்தபித்தரோகத்தையும், இவ்வாயுக்களே மற்ற பிராண,சமான, அபான வாயுக்களையும் விகுணமடையச்செய்து சிலேஷ்ம பித்தங்களுடன் தனித்தோ தொந்தித்தோ மற்றய ரோகங்களையும் உண்டாக்குவதால், அவைகளும் இதில்சேர்க்கப்பட்டன.

## 4-வது தாகரோகபடலம்.

இது, உதான, வியானவாயுக்களின் ஆதிக்கம் பெற்றரோகங்களை முன்னரே சொல்லி, அவ்வாயுக்களால் நாபிஸ்தான சமானவாயுவும், பித்தமும் கெடுதியடைந்தவகைகளிலும் உணவு,சேர்க்கை, தகாதநடத்தை முதலியவற்றாலும் உண்டாகும் தாகரோகங்களைச்சொல்லி, இத்துடன் மதாத்தியயம், மதம்,மூர்ச்சை, சந்நியாசம், மூலம்,உதாவர்த்தம், சருமகீலம், அதிசாரம்,குதப்பிரம்சம், கிரகணி, அலசம்,விஷூசி,அசீரணரோகம் வரையில் தொகுத்துக்கூறிய காரணம் யாதோஎனின், சமானவாயுவின் பிரகோபத்தால், அபானவாயுவும், தோஷமடைந்து, பித்தவிருத்தியுங்கலந்து, ஆமத்தையும் அனுசரித்து அவ்வாத பித்தங்கள் தனித்தோ, தொந்தித்தோ, திரிதோஷித்தோ, ரசாதிதாதுக்களை தோஷமடையச் செய்து, உதான, வியான, பிராணவாயுக்களிலும் விகுணமுண்டாக்கி, மற்றய ரோகங்களையும் அடையச்செய்வதால் அவைகளும் இதில் சேர்க்கப்பட்டன.

## 5-வது அஸ்மரிரோகபடலம்.

இது, சமான, அபானவாயுக்களின் ஆதிக்கம் பெற்றரோகங்களை முன்னரேசொல்லி, அவைகளால் தாதுக்கள் தோஷமடைந்தவகையில் பித்தபிரகோபமாகி வாயுவுடன்கலந்த பித்தவாதங்களாக மாறிய அளவில், அதற்கடுத்த இப்படலத்தில் மூத்திரக்கிரிச்சிராஸ்மரி ரோகங்களைச் சொல்லவந்து, இத்துடன் மூத்திரதோஷரோகம், மேகரோகம், மேகக்கட்டிகள், மூத்திரக்குடல் அண்டவிருத்தி, அண்டம், குன்மம்இவைகளையும் தொகுத்துக்கூறிய காரணம்யாதோவெனின்; அப்பித்தவாதங்கள் உணவு, குடி, முழுக்கு, சேர்க்கை தகாதநடத்தை, யாகிய தொகுப்பின் காரியங்களால், அப்பித்தத்துடன் வாதபிரகோபமாகி அபானனைச்சேர்ந்து நாபிஸ்தான உள் உறுப்புகளிலும், ஆமாசயபீசகோச ஸ்தானங்களிலும் வாதபிரகோபமேயாகி, பித்தசிலேஷ்மங்களை அலைக்கச்செய்தும், வாதபித்த சிலேஷ்மங்களே தனித்தும், தொந்தித்தும் மற்றயரோகங்களையும் உண்டாக்குவதால் அவைகளும் இதில் சேர்க்கப்பட்டன.

## 6-வது ஆநாகரோகபடலம்.

இது, பித்தவாதத்தின் ஆதிக்கம்பெற்ற ரோகங்களை முன்னரேகூறி, அதற்கடுத்தவகையில் இப்படலத்தில் அப்பித்தவாயுவாலும் பிறகாரணங்

களாலும் விகுணமடைந்த வாயுக்களில் அபான, உதானனுகிய இவ்விரண்டும் தத்தமக்கு உரித்தான அதோங்க ஊர்த்துவாங்கமார்க்கங்களில் செய்யும் தொழிலேவிட்டு உந்தியில் உண்டாக்கும் ஆநாகரோகத்தைச் சொல்லி, இத்துடன் அஷ்டிலம், துனி, பிரதிதுனி, சலக்கூர்மம், சூலே, மகோதரம், பிலீகம், பாண்டு, காமாலே, சோபை, விசர்ப்பி, மசூரிகை ரோகம் முதலியவைகளேயும் தொகுத்துக் கூறியகாரணம் யாதோவெனின்;

உணவு, குடி, சேர்க்கை, பசி, பட்டினி, தூக்கம், உழைப்பு, திரிதல் முதலியவற்றுலும் அவ்வபான உதானவாயுக்கள் சமானவாயுவையும் பற்றி, அங்குள்ள பித்தசிலேஷ்மங்களேயும் பந்தித்து கொதிக்கச்செய்து, ஸர்வநரம்புகளிலும் தோஷமுண்டாக்கி, வாதபித்த கபங்கள் தொந்ததிரி தோஷங்களாகி க்ஷய ரோகங்களேயும் உண்டாக்குவதால் அவைகளும் இதில் சேர்க்கப்பட்டன.

## 7-வது விஸ்போடரோகபடலம்.

இது, உதான, அபானவாயுக்களின் ஆதிக்கம் கொண்ட ரோகங்களேத்தையும் முன்னரேகூறி, அதன் வகையிலும் பிறவகைகளிலும், அச்சமானத்தில் பித்த பிரகோபத்தையே முதன்மையாகக் கொண்டு ஏற்பட்ட விஸ்போடரோகம என்னும் கொப்புள ரோகத்துடன், சீத பித்தம், ஆமபித்தம், ஆம்லபித்தம், க்ஷுத்திர மசூரிகை, குஷ்ட்டு, கிருமிரோகம் முதலியவற்றைச் சேர்த்துக்கூறியகாரணம் யாதோவெனின்;—

சரீரத்தின் சப்த தாதுக்களும் மெலிவடைந்தாலும், அடையாவிட்டாலும், பித்த வஸ்துக்களின் உணவாதி சேர்க்கையால் அதிகரித்த பித்தமானது அச்சமானத்தையே அடைந்து பித்தம், பித்தவாதம், பித்த சிலேஷ்மம், திரிதோஷம், இவைகளில் தனித்தனியும் கூட்டுறவு மாகிய சம்பந்தங்களேக்கொண்டு ரத்த தாதுவைக் கொதிக்கச்செய்தும், ரஸதாதுவைக் கொதிக்கச்செய்தும், அச்சமானவாயு பிரகோபித்து பித்தஜயங்களே ஆங்காங்கு மார்க்கங்களில் செல்லாது தடுத்தும், அதிகரித்த தனிப்பித்தம் ஆமத்துடன்கூடி அவ்வாமத்தை விருத்திக்கச்செய்தும், க்ஷீணிக்கச்செய்தும், ரத்த சிலேஷ்ம, மல ஜலக்கெடுதிகளேக் கொண்டும் க்ஷய ரோகங்கள் வருகின்றமையால் அவைகளேயும் இதில் தொகுத்துக் கூறப்பட்டன.

## 8-வது வாதரோகபடலம்.

இது, பித்தமே ஆதிக்கமாக ஏற்பட்டு, வாதசிலேஷ்ம பிரகோபத்தா லுண்டாகும் ரோகங்களை முன்னரே கூறி, அவ்வகையாலும் பிறவாற்றாலும் அதைஅடுத்த இப்படலத்தில் வாதமே முதன்மையாகி அதனால் உண்டாகும் 84 வகை வாதரோகங்களும் கூறப்பட்டன.

இதுவரையில் முன்சொல்லிய ரோகங்களுக்கும், பின் சொல்லப் போகும் ரோகங்களுக்கும், ஒவ்வொன்றிற்கும் வாதமே அரசனாகவிருந்து பித்தகபங்களை நடத்தி அவைகளை ரோகங்களிலும் தூண்டுவதாய் நிற்க, வாதரோகபடலம் எனத்தனியாகத் தொகுத்தகாரணம் யாதோஎனின்,

முன்னர்கூறிய மூன்றில் முயற்சி முழுக்கு, குடி, பயம், துக்கம் அதிர்கைப்பு, இடம், காலம் 14 வேகங்களைமறித்தலாகிய தொகுப்பின் பேதங்களாலும், தேகத்தைத்தாக்குந் தனிமையுள்ள பஞ்சவாயுக்களுமே ரோகவழிகளில் திரும்புவதால் அவ்வாதத்தின் பெயரையே கொண்டது.

## 9-வது மகாவாதரோகபடலம்.

இதை முன்படத்திலேயே சேர்க்காமல் முன்படல ரோகங்களில் உள்ளவைகளான பாதஹரிஷவாதரோகம் முதல் ஸர்வாங்கவாதம் ஈறாக 16 ம் அநுசிரம்சவாதம் முதல் பாததாகவாதம் ஈறாக 8 ஐயுங் கூட்டி 24-ஆக்கி மகாவாதரோகபடலம் எனப்பெயரிட்டு இத்துடன் பித்தரோகம், சிலேஷ்மரோகம், வாதசோணிதம், பிராணாதி பஞ்சவாயுக்களின் விகுணலக்ஷணம், வாதசாமம், வாதநிராமம், ஆவிருதவாதலக்ஷணம் அருந்தும் வகையிலுண்டாம் விஷபாக ரோகம் வரையில்இப்படலத்தில் அடக்கிக்கூறிய காரணம் யாதோஎனின்;

அவ் வாதமே தொந்த திரிதோஷங்களாகி சிலேஷ்மபித்தங்களையும் விருத்திக்கச்செய்து சிகிச்சைக்குக் கஷ்டசாத்திய அசாத்தியங்களாக மீறி தெய்வானுக்கிரகத்தாலும், வைத்தியர்களின் சாமர்த்திய ஔஷதபிரயோகங்களினாலும் ஒருவேளை சௌக்கியப் படினும் அங்க உறுப்புகளைப் பங்கப்படுத்தியே தீருமாதலால் மகாவாதரோகம் எனவகுக்கப் பட்டது. இவ்வாயுக்களின் பிரகோபத்தினிடமாகவே நின்று பித்த சிலேஷ்ம

ரோகங்களும் விருத்தியாகின்றன வாதலால் அவைகளும் அப்பித்த சிலேஷ்மங்களின் துணையைப்பற்றிவரும் மற்றய ரோகங்களும் இதில் சேர்க்கப்பட்டன,

## 10-வது அதிதூலரோகபடலம்.

வாததோஷங்களால் ஏற்பட்ட ரோகங்களை முன்னரே கூறி, அவ் வாயுவின் சேர்க்கையாலும் பிறவாற்றாலும் சமானவாயு விகுண மடைந்த வகைகளில் உண்டாகிய அதிதூல ரோகத்தை இப்படலத்தில் கூறவந்து, அவ் வதிதூலத்துடன் அதிசுட்கம்,மலடு,வஷ்டி, பாலரோகம், முதலியவற் றைச்சேர்த்துக் கூறிய காரணம்யாதோஎனின்,உணவின்பேத அதிதிண்டி களாலும், சமாக்கினிக்குத் தக்க உணவில்லாக்குறைவினாலும், மற்றதகாத நடத்தைகளாலும், சமானவாயுவின் குணக்கேட்டாலாகிய தீக்ஷணக்கினி, விஷமாக்கினி, மந்தாக்கினி வகைகளில் அதிதூலம், அதிசுட்கம், மலடு, கருப்பம், முதலியவற்றைஒன்றசேர்த்து, அதன் பின்னர், தாயின் பாலையும், ஆகாரத்தையும் உட்கொள்ளும், குழந்தைகட்கும் அச்சமான வாயுவின் கெடுதியே ரோகங்களைப் பிறப்பித்தலால் பாலரோகங்களும் இத்துடன் சேர்க்கப்பட்டன.

## 11-வது உன்மாத ரோகபடலம்.

இது, சமானவாயுவின் ஆதிக்கம் பெற்ற ரோகங்களை முன்னரேகூறி, அவ்வகைரோகங்களினால் விகுணமடைந்த சமான, அபானவாயுக்களின் தோஷத்தாலும், பிறவாற்றாலும் உண்டாகும் உன்மாதரோகத்தை அதற் கடுத்த இப்படலத்தில் சொல்லவந்து உன்மாதம், அபஸ்மாரம், வலி, இவற் றுடன் ஊர்த்துவாங்க ரோகங்களில் ஒன்றாகிய நேத்திர ரோகத்தையும் சேர்த்துக்கூறிய காரணம் யாதோவெனின்:—

முயற்சி, கருமம், எனும் இருவகைகளில், உணவு, குடி, முழுக்கு, பசி, சிந்தனை, துக்கம், பயம், முதலிய காரணங்களால் அவ்வாயுக்கள் தோஷ பிரகோபமாகி வாத, பித்த, கபங்களை அதனதன் மார்க்கங்களைத் தவறி நடக்கச்செய்வதாலும், இருதயம் முதலிய மனோபுத்திஸ்தான நரம்புகள் உலர்ந்து போவதாலும், வலி ரோகம்வரையுஞ் சேர்க்கப்பட்டு, நேத்திரரோகங்கள் அபானஸ்தான மூன்று நரம்பின் வழிகளாகத் திரி

தோஷ நீர்கள் கபால மூளையைப்பற்றி நரம்பின் வழியாய்க் கண்ணுறுப்பைக் கெடுக்கின்றமையால், பிறப்பிடத்தை நோக்கி இதையும் இப் படலத்திலேயே சேர்க்கப்பட்டது.

## 12-வது கர்ணரோகபடலம்.

இது, அதோங்கங்களில் வெளிப்பட்ட ரோகங்களை முன்வரையிலுங் கூறி, அதற்கு அடுத்த இப்படலத்தில் நேத்திரரோகம் நீங்கலாக கர்ணம், நாசி, நகம், ஒஷ்டம், தந்தம், நா, தாலு, கண்டம், சுரைக்கினம், சர்வமுக ரோகம், சிரோரோகம், கபாலரோகம் வரையிலும் ஊர்த்துவாங்க உறுப்புகளைக்கொண்ட ரோகங்களைக் கூறியுள்ளன. ரோக நிகழ்ச்சி வகைகளிலும், பலவேறு காரணங்களாலும், வாத பித்த ஐயங்களின் தோஷங்களைக் கொண்டேவரும் இவைகளனைத்தும் பொதுத்தலைப்பில் வைக்கப்பட்டன.

## 13-வது விரணபேதபடலம்.

இதுவரையில் அதோங்க ஊர்த்துவாங்க ரோகங்களைச்சொல்லிவந்து, விரணபேத ரோகத்தையும் பொதுத் தலைப்பாகவைத்து, விரணபேதம், கிரந்தி, பாதவன்மீகம், கண்டமாலை, நாடிவிரணம், சூத்திரவிரணபேதம், பாதபேதரோகம், குய்யரோகம், பிரமேகம், யோனிரோகம் வரையும் சேர்த்துள்ளன. இவ்வகை ரோகங்களனைத்தும் முயற்சி கருமம் எனும் இரண்டு வழிகளில் உணவு, குடி, மோகம், பட்டினி, சேர்க்கை, தகாத நடத்தை, 14 வேகங்களைமறிக்குதல் முதலியவற்றாலும் சமான அபான வாயுக்களின் தொந்த திரிதோஷ பேதங்களாலும், பற்பல ரோகமுயற்சியினாலும், பிறவாற்றாலும், ரசாதி சப்ததாதுக்களிலுங் கலந்து உள்ளும்புறமும் உண்டாகும் ரோகங்களைக் கூறப்பட்டன.

## 14-15-வது ஆகிய விஷாதிபேதபடலமும், கீடாதிபேத படலமும் கூறப்பட்டது.

இதுவரையில் முயற்சி, கருமம் கருப்பம் என்னும் முக்காரணங்களால் தோன்றும் ரோகங்களனைத்தையுங் கூறி,

இனி மேற்கூறிய முக்காரணங்களின்றி புறம்பே நின்று நோக ரசாத்த தாதுக்களில் கலந்து, வாத பித்த ஐயதொந்த திரிதோஷ பேதங்களோடு கூடி, வாயுவைத்தாக்கிக் கெடுதிகளை விளைவிக்கும் சர்ப்ப கீடவிஷபேதங்களை இவ்விரண்டு படலங்களிலும் வகுத்து, விரணபேத படலம் முதல் இப்படலம் வரையிலும் உபயாங்கரோகங்களையுஞ்சொல்லி முடித்தனர். நிற்க, பிராணவாயுவு ஒன்று நீங்கலாக மற்ற நான்கு **வாயுஸ்தானங்களில் உண்டாகும்** ரோகங்களெல்லாம் அப்பிராண

வாயுவுக்கே துன்பஞ்செய்யினும், அதற்கே நேராக விரைவில் கெடுதி செய்யக்கூடியரோகங்கள் இல்லை ஆதலாலும், ரோகநிதானங்களைப் படலங்களாக வகுக்கும் வகையில் உதானஸ்தானம்முதல் நான்கு வாயு ஸ்தானங்களையும் வரிசைக்கிரமமாக எடுத்துக்கொண்டு, அவற்றால் உண்டாகும் ரோகங்கள் முறையாகக் கூறப்பட்டு, அவை நீங்கலாக பிராணவாயுவுக்கு நேரிலே ஹானிசெய்யக்கூடியதான காரணங்களை நோக்கி இவ் விரண்டுபடலங்களில் தொகுத்து நூலின் இறுதியில்சேர்த்தனர்.

கல்விமான்கள் இவ்வகை ஆராய்ச்சியில் புகுவாராயின் இந்நூலில் புதைந்து கிடைக்கும் அரும்பெரும் விஷயங்கள் அநந்தங்கோடி என்றும், நமது ஆயுள்வேதத்தினுஞ் சிறந்ததோர் வைத்தியசாஸ்திரம் இவ்வுலகில் இல்லை என்றும் திட்டமாக எடுத்துக் கூறலாம்.

"தொட்டனைத் தூறுமணற்கேணிமாந்தர்க்குக்
கற்றனைத் தூறுமறிவு"— திருக்குறள்.

## வைத்திய நூலாராய்ச்சி.

முழுமுதற் கடவுளின்கருணையால் உபதேசக் கிரமத்தில் நம் தமிழ் மக்களுக்கு நன்கொடையாக உதவி இருக்கின்ற வைத்தியசாஸ்திரங்கள் அனந்தங்கோடி என்னலாம். இவைகளில் பெரும்பான்மையும் காலப் போக்கில் போற்றுவாரற்று சிதைந்து போயின. போனதுபோக எஞ்சி நிற்கும் நூற்களும் எழுத்தறியாமாந்தர் கையில் சிக்குண்டு அல்லல்படுகின்றன. தேசாபிமானமும் செல்வப்பெருக்கும் வாய்ந்துள்ள சீமான்கள் அவைகளைக் கற்றோர் பால்சேர்த்து ஆராய்ச்சிசெய்து பரிசோதித்து வெளியிட்டாலன்றி ஆயுள்வேத சாஸ்திரங்கள் நாளடைவில் அறவே ஒழிந்துபோகக்கூடும். இது நிற்க அகஸ்தியர் முதலிய பெரியோர் கல்வி அறிவில்லாத ஏழைமக்களின் நன்மையைக் கருதிசாமானிய தமிழ் நடையில் எழுதியுள்ள சில ஏடுகளை கண்ணுற்ற்கிய மக்களிற் சிலர், அப்பெரியோர் எழுதிய எளிய நடையில் தம்மனம் போனவாறு கண்டதை எல்லாம் பிதற்றி, அப்போலி நூற்களுக்குப் பெரியோர் பெயரையிட்டு உலகத்தை வஞ்சித்து வருகின்றனர். இவரினுங் கொடியவர் இவ்வுலகில் உண்டோ? இவர்கள் ஒருபுறம் இருக்கக் கற்றோர் என்று சொல்லிக்கொண்டு வைத்தியத் தொழிலைக் கையாண்டு வருஞ் சிலர், நூலில்லாக் குறையினாலும், வெளிப்படாத நூல்களை பிரசுரித்துப் பெருமையும் பொருளும் அடையவேண்டு மென்னும் அவாவினாலும், பல பிரதிகளைக்கொண்டு ஒத்திட்டு ஒழுங்குபடுத்த வேண்டிய நூற்களைத் தமக்கு இலவசமாய்க்கிடைத்துப் பிழைகளுடன் இருக்கும் தனிப்பிரதிகளை ஆதாரவாகக்கொண்டு,அதிலடங்கிய விஷயங்களை அரைகுறையாகத் தாம் உணர்ந்தபடி அச்சிட்டு, அளவிலா இன்னல் புரிந்து வருகின்றனர். இவ்விருபான்

மையருள் பின்னவரினும் முன்னவரே நல்லவரெனக்கொள்ளக்கூடும்.ஏனெனில், முன்னவர் வெளியிடும் போலி நூற்களை அறிவாளிகள் எளிதில் உணரக்கூடும். ஆனால் பின்னவர் செய்யும்பெரும் பாதகத்தை அவ்வாறு உணர்வது எளிதன்று. இவ்வித குறைகளை நாம் நீக்கவேண்டுமாயின் நமது அருமை வாய்ந்த வைத்திய சாஸ்திரங்கள் விரைவில் நன்மையுற வெளிவருதல் வேண்டும்.

## ஆயுள்வேத சிகிச்சை.

வெண்பா.

சூதகந்தி தாதுபஸ்பம் சொன்னநாட் டார்சிகிச்சை
ஓதரிய மூலியிம்மண் ணூர்ச்சிகிச்சை—வேதடரும்
சத்திரக்ஷா ராக்கினிசி சாசரச்சி கிச்சையொன்றே
முத்திறத்த தாகும் மொழி.— தேரையர்.

இவ்விஷயத்தை எழுதப்புகின் மிகவும் விரிவுபெறுமாயினும் அதனையும் ஒரு சிறிது சுருக்கிக்கூறுகின்றேன். ஆயுள்வேத விதிப்படி சிகிச்சையானது, தேவசிகிச்சை, மானிடசிகிச்சை, அசுரசிகிச்சை என்று மூன்று வகைப்படுகின்றது. இம் மூவகைப்பகுதியும் 32-வித சிகிச்சைகளை அடக்கிக்கொண்டுள்ளன.

தேவசிகிச்சை-இதுமுறைமைப்படி செய்த பஸ்பசெந்தூரப் போக்குகளைக்கொண்டு, சாத்தியகஷ்டசாத்திய அசாத்தியரோகங்களைநீக்குவதன்றியும், ரோகங்களின் தச அவஸ்தைகளில் ஒன்பதாவது அவஸ்தை வரையினும்உதவுகின்றது. மேலும், அணிந்துரை முகப்பில் எடுத்துக்காட்டிய "உற்றவன் தீர்ப்பான் மருந்து" என்னும் திருக்குறளின்படி அப்பஸ்ப வருக்க மருந்துகள், சுவை, வீரியம், ஒருமருந்தே பல பிணிகட்கும் அனுபான பேதங்களில் ஆற்றலுடையதாய் ஏற்றல், எளிதில் கிடைத்தல், கடுகின் அளவுபோன்று உபயோகமாதல் முதலிய தன்மைகளைக் கொண்டுள்ளது. இதில் பல பஸ்பவகைகளிருப்பினும், ஒரேசிகிச்சை எனப்படும். மானுடசிகிச்சை, இது மூலிகை, சுரசம், கஷாயம், சூரணம், லேகியம், கிருதம், தைலம், எண்ணெய், முதலிய 30 வகைகளைக் கொண்டுள்ளது. ஆக இவை இவ்விரண்டு வகைகளினும் 31 வித சிகிச்சைகளாகி நமது ஆயுள்வேதபண்டிதர்கட்கு சமஸ்தரோகங்களையும் நிவாரணஞ்செய்யப் பெருஞ் சாதகங்களாகப் பாராட்டப்பட்டு, அதிநுட்பமானவகைகளில், ஆச்சரியமான முதிர்ச்சியும் பெற்றிருக்கின்றன. அவற்றின் பெருமையை என்னென்றுரைப்பது? அவைகட்குத் தலைவணங்காத ரோகங்களும்இவ்வுலகில் உண்டோ? இவ்வகை மேம்பாட்டை அடைந்த நம்மவர்கள் மேற்கூறிய மூவகைச் சிகிச்சையில் மூன்றுவதாகச் சொல்லும் அசுரசிகிச்சை என்னும் 32-வது சூத்திரச் சிகிச்சையை, முன் மருந்து

களில் நீங்காத வழியிலுள்ள சிலவற்றிற்கே உதவும் எனத்தெளிந்து இதைமுழுதும் நம்பாமல் அதிகமாகப் பாராட்டவில்லைபோலும்.

ஆயினும் ஆயுதவர்க்க நூல் ஒன்று திருமூலராலும், சாரீரம் என்று ஒருநூல் இடைக்காடராலும் இயன்றுள்ளன. இவை இக்காலத்தில் அரும் பெரும் ஆராய்ச்சிகளால் பெரிதாகவும் அதிநுட்பமாகவும்வளர்ந்திருக்கும் மேனுட்டு சுஷத்திர சாஸ்திரங்கட்குப் பொருந்தா தென்பது யாவரும் அறிந்த விஷயமே. இந்தசாஸ்திரங்களை வைத்தியமாணவர்கள் மேனுட்டா ரிட மிருந்து தெரிந்தெடுத்துக்கொள்வது சாலச்சிறப்பாகும்.

## ஒற்றுமை.

இத்தகைய அருமையும் பெருமையும் வாய்ந்த நமது வைத்திய முறைகள் ஓங்கி வளர்ந்து உலகத்திற்கு நன்மைபயக்க வேண்டுமாயின் அறிவின் மேம்பாட்டால் கிடைக்கும் ஒற்றுமை என்னும் ஒப்பற்ற மருந் தை ஆயுள்வேத வைத்திய சகோதர பண்டிதர்களனைவரும் உட்கொண்டு பெரும் நன்மைகளை அனுபவிப்பதன்னியில், பிறரையும் அனுபவிக்கச் செய்யவேண்டும்.

"புத்தேளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவினல்ல பிற.— திருக்குறள்.

வடமொழி ஆயுள்வேதம் நமதல்லவென்றும், தென்மொழி ஆயுள் வேதம் நமதல்லவென்றும், ஒருவருக்கொருவர் இடர்ப்பட்டு, இதனின்றும் அது வந்தது, அதனின்றும் இது வந்தது, என வீண்சண்டையிட்டுக் கொண்டு, சாஸ்திர விருத்திக்குண்டான பெரிய நோக்கங்களை இழப் பது மிகவும் வியசனிக்கத்தக்கது.

நீண்டகாலமாக இவ்விரண்டு முறைகளும் ஒன்றேடொன்று கலந்து, ஒன்றுக்கொன்று பேருதவி புரிந்துகொண்டு, அதன்பின் அராபியர்கள் தென்னுட்டில் வியாபித்தகாலம் இந்த ஆயுள்வேதத்தையே கைக் கொண்டு அவர்கள் முறையும் நம்மவர் வைத்தியமேயாகி, தத்தம் தனி இயல்புகளும் மாருது முதிர்ந்து வளர்ந்திருக்கின்றன வாதலால், இதனை, செவ்வனே ஓர்ந்து வடமொழி வல்லாரும், தென்மொழி வல்லாரும், ஆகிமகளும் ஒரு தாய்வயிற்றிற் பிறந்த சோதரர் என்னும் எண்ணத் தைச் சிறிதும் மனத்தைவிட்டகலாது ஒத்து உழைக்கும்படியும், மாகூழிமை தங்கிய நமது இராஜாங்கத்தார் நம் முன்னேற்றத்திற்கு உதவி செய்யும்படியும், எல்லாம் வல்ல இறைவன் இன்னருள் புரிவாஞக.

சி. த. ஆறுமுகம் பிள்ளை.

அணிந்துரை முற்றியது.

---

உ

சுப்பிரமணியர் துணை.

# ஜீவரக்ஷாமிர்தம்.

---

## கடவுள் வணக்கம்.

---

### விநாயகர் துதி.

நேரிசை வெண்பா.

உலகமதிற் * கோடதக மோங்குயிர்கட் கெல்லாம்
இலகக்காப் பாகுமுறை யேபோற்—றிலக
அருஞ்சீவ ரக்ஷாமிர் தக்காப்பா மின்பந்
தருஞ்சீர் விநாயகன்பொற் றாள். (1)

---

### சுப்பிரமணியர் துதி.

கட்டளைக்கலித்துறை.

விரைத்தா ரணிந்திடு நல்லாயுள் வேதியர் வெற்றியுறத்
திரைத்தா மணிமுதன் மூன்றுந்தம்பால்வைக்குந்திண்மையைப்போல்
உரைத்தாரும் வாழ்த்துமிந் நூன்முற்றச் செவ்வே ளுபயசெந்தா
மரைத்தாளை வேலை மயிலைநம் முள்ளத்தில் வைத்தனமே. (2)

---

* கோடதகம்—சுக்கு.

## பரமசிவவணக்கம்.

பூபதிமாத்திரைக்கும், பரமசிவத்திற்கும் சிலேடை.

அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

சுருதியைவெண் பொடிமணிகம் படிகமட னீலகண்டஞ்
சுசிபொன் வில்லம்
பொருதனிவீ ரங்கனனற் பரைபுரம்பெற் றழலாடி
யுரக்கால் வீட்டிப்
பொருதுசன்மப் பிணிதீர்க்கும் பூபதிமாத் திரைபோன்றிப்
புடவி யெங்குங்
கருதரிய சுகமளிக்கும் பசுபதிதாட் டுணைமலரைக்
கருத்துள் வைப்பாம். (3)

---

## இதன் பொருள்.

மாத்திரையைக் குறிக்கும்போது—சுருதி - ஆயுள்வேதத்தினால் சொல்லப்படுகின்ற, ஐவெண்பொடி-வெண்மைநிறமுள்ள ஐந்துவகைப் பஸ்பங்கள், மணி-அறுவகைஇரத்தினங்கள், கம்-வெள்ளைப்பாஷாணம், படிகம்-படிகாரம், மடல்-மடல்துத்தம், நீலகண்டம்-துருசு, சுசி-பாதரசம், பொன்-அரிதாரம், வில்-மனோசிலை, அம்-நவாச்சாரம், வீரம்-சவ்வீரம், கனல்-ஜாதிலிங்கம், நற்பரை- நல்லநெல்லிக்காய்க்கந்தகம், புரம்-இரசகர்ப்பூரம் என்னுமிவைகளை, பெற்று-சேர்த்து அரைத்து, அழலாடி-குப்பியில் வைத்து எரிக்கப்பட்டு, உரக்கால் வீட்டி-பலம் பொருந்திய வாதரோகத்தை நீக்கி, பொருதுசன்மப் பிணிதீர்க்கும்-சரீரத்தில் பொருந்தி வருத்துகின்ற மற்றரோகங்களையுந்தீர்த்து (உயிர்களுக்குச்) சுகத்தைக் கொடுக்கும்படியான, பூபதிமாத்திரை போன்று - பூபதிமாத்திரையை யொத்து, இப்புடவியெங்கும் -திரிலோகங்களிலுமிராநின்ற (உயிர்களுக்கெல்லாம்), கருதரிய - (இத்தன்மையதென மனதினாலும்) நினைத்தற்கரிய, சுகமளிக்கும் - சுகத்தைத்தரும்படியான, பசுபதி - பரமசிவத்தினுடைய, தாட்டுணை மலரை - இரண்டு திருவடித் தாமரைமலரையும், கருத்துள்வைப்

பாம்- எம்முடைய இருதயத்தில் வைத்துத் தியானஞ் செய்வாம் என்க.

பூரமெனற்பாலது விகாரவகையால் புரமெனக் குறுகிநின்றது. ஐவகைப்பொடியாவன: காந்தம், இரும்பு, நாகம், தங்கம், செம்பு இவைகளின் பஸ்மம். அறுவகைமணியாவன: பவளம், முத்து, புஷ்பராகம், பச்சை,வயிரம், மாணிக்கம்.

பரமசிவத்தைக் குறிக்கும்போது—சுருதி- வேதத்திற் சொல்லப்படுகிற, ஐ-அழகிய, வெண்பொடி-விபூதியும், மணி-உருத்திராக்ஷமும், கம்-பிரமகபாலமும், படிகம்- படிகமாலையும், அடல்நீலகண்டம்-வலியகாளகண்டமும், சுசி-பரிசுத்தமும், பொன்வில்-பொன்மலையாகிய வில்லும், அம்-கங்கையும், பொரு- பொருதுகின்ற, தனி-ஒப்பற்ற, வீரம்-பராக்கிரமமும், கனல்-தீயும், நற்பரை - நல்லபராசக்தியையும், புரம்பெற்று-தமது திருமேனியிற்கொண்டருளி, அழலாடி-அக்கினியில் நடனஞ்செய்து, உரக்கால்வீட்டி - பலம்பொருந்திய எமனைக்கொன்று, இப்புடவியெங்கும் - திரிலோகங்களிலுமிராநின்ற உயிர்களுடைய, பொருது- வருத்துகின்ற, சன்மப்பிணிதீர்க்கும்-பிறவிப்பிணியைத்தீர்த்து, கருதரிய- மனதினாலும் நினைத்தற்கரிய, சுகமளிக்கும்-சுகாநுபவத்தை அருளுகின்ற,பசுபதி- பரமசிவ மெனப் பொருள் கொள்க. பூபதிமாத்திரையானது உடற்பிணிகளை நீக்கிச் சுகமளிப்பதுபோல், பிறவிப்பிணியை நீக்கி உயிர்களுக்குச் சுகாநுபவத்தை அருளிச்செய்கின்ற பரமசிவத்தைத் தியானஞ் செய்வா மென்பது கருத்து.

இவ்வுலகத்தில் அவுஷதங்களுக்குள் சிறந்ததாதலின் பூபதி மாத்திரையைப் பரமசிவத்திற்கு ஒப்பாகக்கூறினர். (அணியுமமுது மென்னுவிபு மாயவன்றில்லைச் சிந்தாமணி) என்னுந் திருக்கோவையாலுமுணர்க. மனதினாலும் நினைத்தற்கரிய தெனவே வாக்கினாலுஞ் சொல்லுதற்கரியதெனக் கொள்க. மனமென ஒரு சொல் வருவித்துரைக்கப்பட்டது. ஈண்டு உயிர் என்றது-மக்களுயிரை-----. படிகமணியை ஜெபமாலையாகக் கொள்வது ஒரு மூர்த்தம். நிருமலன் என்னும் கருத்தைப்பற்றி,சுசி பெற்றென்றார்.

—

## பார்வதி தேவியார் துதி.

கலிவிருத்தம்.

பிணியெழுமு வகைமேகப் பிணிதனைக்கொண் டார்க்கெல்லாந்
தனியமிர்தக் கொடியினது தாட்டுணையா குதல்போலத்
துனியினத்தைத் தனித்தனியே சொற்றிடுமிந் நூற்கெழிலார்
பனிமலையின் முளைத்ததொரு பசுங்கொடிதாட் டுணையாமால். (4)

---

## திரிமூர்த்திகள் துதி.

அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

பத்தொடொரு பான்மூன்றிற் பெருகுசுர மாதியநோய்ப்
பரப்பை யெல்லாங்
கொத்தொடெடுத் துரைக்குமிந்த நூற்புகலத் தத்தநடை
கூடிக் கையில்
ஒத்தொருநா டிபிற்சுழலும் வாதபித்த வையம்போ
லொன்றிற் றோன்றி
முத்தொழிலைப் புரியுமொரு மூவரிரு பதமலரை
முடிமேற் கொள்வாம். (5)

---

## தன்வந்தரியார் துதி.

அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

தொந்தவல் வினையூக் கத்தாற் றொடர்தனு வெனும்பு லத்தில்
மந்தமாம் வித்தாற் றோன்றி வளர்பிணிக் காட்டுக் கெல்லாஞ்
செந்தழற் போலெ ழுந்து தேவபண் டிதராய் முன்னம்
வந்தகி லங்காக் குந்தன் வந்தரி பாதம் போற்றி. (6)

---

## சித்துப்புருஷர் துதி.

கலிவிருத்தம்.

தீர்த்திடு மருந்துக டிகழ்தர வுன்னிய
தார்த்தநன் முப்பூ தனைச்சேர்த்தல் போலச்
சீர்த்திகொள் பதினெண் சித்தர்தா ளொன்னுட்
சேர்த்தன னிந்நூற் றிகழ்தரற் பொருட்டே. (7)

## ஸ்ரீ கண்டமுனிவர் துதி.

அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

கரிந்ததிமி ரம்போக்கிக் கட்கொளிசெய் வயிரரத்தி னுகரம் போல்
விரிந்தமன விருளொழிய வாரியத்திற் சிவரக்ஷா மிருதஞ் சொன்ன
அருந்தவனுஞ் சீகண்ட னடிபரவி யந்நூலி னருத்த முற்றும்
பரிந்துலகில் யாருமுண ரத்தமிழில் வாக்கியமாப் பகர்ந்து ளேமால். (8)

## குருதோத்திரம்

எண்சீர்க்கழிநெடிலடி விருத்தம்.

உண்மையெனு மொருமொழியா முறையருத்தி யதனுக்
கொத்திடச்சா தனமெனுநற் பத்தியமும் வைத்துத்
திண்மையுறு மடியர்பவப் பிணியொழித்தின் புருவாய்த்
திகழ்ஞான பண்டிதனைப் புகழாயுள் வேத
நுண்மையுண ரறிஞரெலா முப்போது மிறைஞ்சும்
நோக்கரிய நோக்கையன்பர் தேக்குசுகோ தயத்தைத்
தண்மையுறை மதிற்றில்லைப் பதியிலினி தமருஞ்
சபாபதிப்பேர் கொளுமெங்கள் சற்குருவைப் பணிவாம். (9)

## அவையடக்கம்.

எழுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

படிதனிற் சரக மாதிமு தறிஞர்
பகர்பெரு நூற்கொளும் பிடகர்
அடியனிங் குரைக்கும் புன்சொனூ லினையு
மருவருப் பின்றியே கொள்வர்
வடிகொள்தீஞ் சுவைச்சா றுறுகனி களையு
மங்குழுக் கைப்பதே வடிவாம்
இடிகரைக் கலிங்கக் கனியையுஞ் சமமா
யேற்றிடுந் தகைமையான் மாதோ. (10)

கடவுள் வணக்கம்
முற்றியது.

முதலாவது

# தோஷாதிபேதபடலம்.

## வாதரூபலக்ஷணம்.

வாதமானது, வெப்பம் இலேசத்துவம் குளிர்ச்சி சுறசுறப்பு அணுத்துவம் ஆகிய இவைகளை ரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## பித்தரூபலக்ஷணம்.

பித்தமானது,பளபளப்பு அதிஉஷ்ணம் இலேசத்துவம் பேதி சலத்தைத்தருதல் ஆகிய இவைகளை ரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## சிலேஷ்மரூபலக்ஷணம்.

சிலேஷ்மமானது, வழுவழுப்பு சீதளம் கனத்தல் மந்தத்துவம் நாறுதல் மினுமினுப்பு ஸ்திரம் ஆகிய இவைகளை ரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## வாதஸ்தானநிதானம்.

வாதமானது, செவி நாபியின்கீழ் இடுப்பு தொடை எலும்பு சருமம் ஆகிய இவ்விடங்களிற் சஞ்சரித்துக்கொண்டு விசேஷமாக நாபியின் கீழ்ஸ்தானத்திலேயே இருக்கும்.

## பித்தஸ்தானநிதானம்.

பித்தமானது, உந்தி கண் ஆமம் ரசதாது உதிரம் வியர்வை சருமம், உருசியையுணர்த்தநாவிலூறுகின்றசலம் ஆகிய இவ்விடங்களிற் சஞ்சரித்துக்கொண்டு விசேஷமாக உந்திஸ்தானத்திலேயே இருக்கும்.

## சிலேஷ்மஸ்தானநிதானம்.

சிலேஷ்மமானது,மார்பு சிரசு நாசி நா கண்டம் புத்தி கணுக்கள் உரோமம் ஆமம் இரசதாது மேதோதாது ஆகிய இவ்விடங்களிற்சஞ்சரித்துக்கொண்டு விசேஷமாக மார்புஸ்தானத்திலேயே இருக்கும்.

---

* தோஷம்-என்பது-வாதம்-பித்தம்-சிலேஷ்மம்-என்னும்- இவைகளுக்குரிய ஒரு பொதுப் பெயராகும்.

## சித்தர்மதாந்தரம்.

வாதத்திற்குப் பாதமுதல் நாபிவரைக்கும் இடமென்றும், பித்தத்திற்கு நாபிமுதல் கண்டம்வரைக்கு மிடமென்றும், சிலேஷ்மத்திற்குக் கண்டமுதல் சிரசுவரைக்கும் இடமென்றும் சிலநூலிற் சொல்லப்படுகின்றன. அன்றியும், மலத்தைப்பற்றியது வாதமென்றும், மூத்திரத்தைப்பற்றியது பித்தமென்றும், விந்துவைப்பற்றியது சிலேஷ்மமென்றும் சிலநூலிற் சொல்லப்படுகின்றன.

மதாந்தரமுற்றியது.

## வாதசுபாவகுணமாவது.

வாதம் பித்தம் சிலேஷ்மம் இரசாதிசப்ததாதுக்கள் மலமூத்திராதிகள் என்பவைகளைத் தனக்குக் காரணமாகப் பெற்றிருக்கின்ற தேகத்தை, மனோச்சாகம் உசுவாசநிசுவாசங்கள் *பதினலுவேகப் பிரவர்த்திகள் சப்த தாதுக்களின் சுபாவங்கள் நேத்திராதி இந்திரியங்களின் சுபாவங்கள் ஆகிய இவைகளைக் கொண்டு போஷித்துத் தான் விகாரமில்லாதிருப்பதாம்.

## பித்தசுபாவகுணமாவது.

சீரணம் உஷ்ணம் பார்வை பசி தாகம் சுவை காந்தி புத்தி ஞாபகம் சவுரியம் மிருது முதலியகுணங்களைக் கொண்டு தேகத்தைப் போஷித்துத் தான் விகாரமில்லாதிருப்பதாம்.

## சிலேஷ்மசுபாவகுணமாவது.

மழமழப்பு அசையாமை கீல்களுக்குறுதி முதலிய குணங்களைக் கொண்டு தேகத்தைப் போஷித்துத் தான் விகாரமில்லாதிருப்பதாம்.

## வாதத்தின்தொழிலாவது.

சரீரத்தில் கருநிறம் செந்நிறம் சஞ்சரிப்பு பிருத்தல் முடக்குதல் நோவு நித்திரையின்மை இளைப்பு ரோகம் குத்தல் குடைச்சல்

---

* பதினலு வேகங்களாவன:அபானவாயு தும்மல் மலம் மூத்திரம் கொட்டாவி பசி தாகம் இருமல் நித்திரை கண்ணீர் சுக்கிலம் சுவாசம் வாந்தி இளைப்பு என்பவைகளாம்.

துவைத்தல்போலும் பிடித்தல்போலுமிருக்குதல் திமிர்முறுக்குதல் குன்றல் புரளல் சந்தோஷம் தாகம் நடுக்கல் தடித்தல் குழிவிழுதல் களைத்தல் அவயவபின்னம் திருகிக்கொள்ளல் அசைதல் மரம்போற் கிடத்தல் துவர்ப்பாகவாய்நீரூறல் என்னு மிக்குணங்களை யுண்டாக்குதலாம்.

## பித்தத்தின்தொழிலாவது.

சரீரத்தில் மஞ்சள்நிறம் வெப்பம் தாகம் ரோகமில்லாது போலிருத்தல் சீரணவேளையிற்காங்கைசெய்தல் வியர்வை எப்போதும் வியர்வைகசிதல் ஞாபகம் கோபம் அசைவின்மை மூர்ச்சை அவமதிப்பு புளிப்பாகவும் கசப்பாகவும் காரமாகவும் வாய்நீரூறல் என்னும் இக்குணங்களை யுண்டாக்குதலாம்.

## சிலேஷ்மத்தின்தொழிலாவது.

சரீரத்தில் சுவேதநிறம் வழுவழுப்பு பாரிப்பு தினவு சீதளம் மரியாதை கீல்களசையாமை கர்வம் மந்தகுணம் மினுமினுப்பு விரைவில் சீரணித்தல் அநித்திரை உப்பாகவும் தித்திப்பாகவும் வாய்நீரூறல் என்னும் இக்குணங்களை யுண்டாக்குதலாம். இது வெகுநாள் நீடித்து உபத்திரவம் பண்ணத்தக்கதென்றறிக.

## வாயுவின் பேதம்.

தேகத்தில் வாயுவானது, பிராணன் உதானன் வியானன் சமானன் அபானன் என ஐந்துபிரிவாயிருக்கின்றது.

## 1-வது பிராணவாயு.

சிரமே இடமாக இருந்துகொண்டு, மார்பிலும், கண்டத்திலும், சஞ்சரிப்பதுமன்றி இருதயம் பஞ்சேந்திரியம் சித்தம் புத்தி என்னும் இவைகளைத் தன் வசப்படுத்திப் பின்னும் உமிழ்தல் இருமல் ஏப்பம் உசுவாசம் நிசுவாசம் அருந்தும் அசனத்தை யுட்செலுத்துதல் என்னும் இச்செய்கைகளை யுண்டாக்கும். இது உசுவாசநிசுவாச ரூபமாகவிருக்குங் காரணத்தால் பிராணவாயுவெனப் பேர்பெற்றது.

பிராணம் என்பது சுவாச ரூபம்.

## 2-வது உதானவாயு.

மார்பே இடமாக இருந்துகொண்டு நாசி கண்டம் தொப்புள் என்னும் இம்மூன்றிடங்களிலுஞ்சஞ்சரித்துப் பேச்சுண்டாக்குதற்கு முதற் காரணமாயிருப்பது மன்றிச், சரீரத்திற்கு வன்னம் ஒளி நினைப்பு என்னும் இக்குணங்களையும் உண்டாக்கும். இது ஊர்த்துவ மாக ஒலியை யெழுப்புங் காரணத்தால் உதானவாயு வெனப் பேர் பெற்றது. உது என்பது மேல்.

## 3-வது வியானவாயு.

இருதயமே இடமாக இருந்துகொண்டு பாதாதிகேசபரியந்தஞ் சஞ்சரிப்பதுமன்றி நடத்தல் குனிதல் நிமிர்தல் இமைத்தல் விழித் தல் என்னும் இச்செய்கைகளை உண்டாக்கும். இது தேகமுற்றிலும் வியாபிக்குங் காரணத்தால் வியானவாயுவெனப் பேர்பெற்றது.

வியானம் என்பது பரவுதல்.

## 4-வது சமானவாயு.

சரீரத்திற்கு நடுவான பக்குவாசயஸ்தானமே இடமாக இருந்து கொண்டு, வயிறு முற்றிலும் சஞ்சரிப்பதுமன்றி உண்ணும் உணவு களை உள்ளிழுத்துக்கொண்டு அவைகளைச் சீரணிப்பித்துச் சாரம் வேறு திப்பிவேறாகப் பிரித்து, அவைகளை மலமூத்திரமாகச் செய் யும். இது தேகத்திற்கு நடுவான சமாக்கினி சமீபத்திலிருக்குங் கார ணத்தால் சமானவாயுவெனப்பேர்பெற்றது. சமம் என்பது நடு.

## 5-வது அபானவாயு.

குதஸ்தானமே இடமாக இருந்துகொண்டு * பிருஷ்டத்திலும் ஆண்குறியிலும் அடிவயிற்றிலும் அடித்தொடையிலும் சஞ்சரிப்பது மன்றிச், சுக்கிலம் சுரோணிதம் மலம் மூத்திரம் கருப்பம் என்னும் இவை முதலியவைகளை வெளிப்படுத்தும். இது குதஸ்தானத்தைப் பற்றியிருக்குங் காரணத்தால் அபானவாயு வெனப்பேர் பெற்றது.

அபானம் என்பது கீழ்.

*பிருஷ்டமென்பது இடுப்பின் பூட்டு,

## சித்தர் மதாந்தரம்.

இந்தப் பஞ்சவாயுக்களு மல்லாமல் வாயிலிருந்து வாந்திபண்ணச் செய்வது நாகனென்றும், நேத்திரத்திலிருந்து விழிக்கச் செய்வது கூர்மனென்றும், மூக்கிலிருந்து குருகுருத்துத் தும்மச் செய்வதுகிரதரனென்றும்,கொட்டாவி கொள்ளச்செய்வது தேவதத்தனென்றும், வீங்கச்செய்வது தனஞ்செயனென்றும் சிலநூலிற் சொல்லப்படுகின்றன.

மதாந்தர முற்றிற்று.

---

## பித்தபேதம்.

தேகத்தில் பித்தமானது, அனலம், இரஞ்சகம், சாதகம், ஆலோசகம், பிராசகம் என ஐந்துபிரிவாயிருக்கின்றது.

### 1-வது அனலபித்தம்.

(1) ஆமாசயஸ்தானத்திற்கும் (2) பக்குவாசயஸ்தானத்திற்கும் மத்தியில் இருந்துகொண்டு பஞ்சபூதங்களுக்கும் பிரதானமாகித் தனது அக்கினி ரூபகுணோதயத்தைக் கொண்டு சலரூபவஸ்துக்களை வறளப்பண்ணி உண்பதைச் சீரணிக்கச் செய்யும். இது அக்கினித் தொழிலைச் செய்யுங்காரணத்தால் அனலபித்த மெனப் பேர் பெற்றது. அனலம் என்பது அக்கினி.

அப்படிச் சீரணிக்கச் செய்த பின்பு மலம் வேறும் சலம் வேறுமாகப் பிரித்துவிட்டு, முன்னிருந்த ஸ்தானத்திலேயே இருந்துகொண்டு மற்றநான்கு வகைப் பித்தத்திற்கும் பலத்தைக்கொடுத்துக் காப்பதா லந்தப் பித்தத்திற்கே பாசகமென்றும் ஒரு பேருண்டு. பாசகம் என்பது அன்பு.

---

(1) ஆமாசயம் என்பது சீதக்கட்டுஸ்தானம் (2) பக்குவாசயம் என்பது நாபிஸ்தானம்.

## 2-வது ரஞ்சகபித்தம்.

ஆமாசய ஸ்தானத்தில் வாசம் பண்ணிக் கொண்டு இரசதாதுவைப் போஷிக்கும். இது இரச தாதுவைப் போஷிக்குங் காரணத்தால் ரஞ்சகபித்தமெனப் பேர் பெற்றது.

ரஞ்சகம் என்பது போஷித்தல்.

## 3-வது சாதகபித்தம்.

இருதய ஸ்தானத்தில் வாசம் பண்ணிக் கொண்டு, அறிவு, அபிமானம், முதலானவைகளைத்துணைக்கொண்டு இஷ்டமான பிரயோஜனங்களைச் சாதிக்கும். இது இஷ்டத்தை நிறைவேற்றுங் காரணத்தால் சாதக பித்தமெனப் பேர் பெற்றது.

சாதகம் என்பது துணைக்காரணம்.

## 4-வது ஆலோசகபித்தம்.

கண்களில் வாசம்பண்ணிக் கொண்டு எல்லாப் பொருள்களையும் நன்றாகத் தெரியப்படுத்தும். இது நேத்திரங்களைக் கொண்டு உருவங்களைத்தெரிவிக்குங் காரணத்தால் ஆலோசக பித்தமெனப்பேர்பெற்றது.

ஆலோசகம் என்பது அறிவிப்பு.

## 5-வது பிராசகபித்தம்.

சருமத்தில் வாசம் பண்ணிக் கொண்டு அந்தச் சருமத்தின் ஒளி கெடாமல் காந்தியை யுண்டாக்கும். இது சருமத்தைப் பிரகாசிப்பிக்குங் காரணத்தால் பிராசக பித்தமெனப் பேர் பெற்றது.

பிராசகம் என்பது காந்தி.

## சிலேஷ்ம பேதம்.

சிலேஷ்மமானது அவலம்பகம், கிலேதகம், போதகம், தருப்பகம், சந்திகம் எனஐந்து பிரிவாகி இருதயஸ்தானத்திலிருக்கின்றது.

## 1-வது அவலம்பகசிலேஷ்மம்.

இருதயஸ்தானத்திலேயே வாசம் பண்ணிக்கொண்டு தனது சுபாவ பராக்கிரமத்தைக் கொண்டு * திரிகஸ்தானத்திற்கும்; அன்ன சாரத்தைக் கொண்டு இருதயஸ்தானத்திற்கும்; சலத்தொழிலைக் கொண்டு மற்ற நான்கு சிலேஷ்மங்களுக்கும் ஆதாரமாயிருக்கும். இது திரிகஸ்தானத்திற்கு ஆதாரமாயிருக்குங் காரணத்தால் அவலம்பக சிலேஷ்மமெனப் பேர் பெற்றது. சலத் தொழிலைக் கொண்டென்று சொன்னமையால் இது ஒவ்வொரு வேளை யிளகியும் கீல்களை விட்டு நீங்கியும் பின்பு கூடியும் இருக்கும். இப்படியிருந்தாலும் நிகழ்ச்சி ரூபமாகவே யிருக்கும். இந்தத் தொழிலைக் கொண்டு மற்ற நான்கு சிலேஷ்மங்களுக்கும் ஆதாரமாயிருக்கும்.

அவலம்பகம் என்பது பற்றுதல்.

## 2-வது கிலேதகசிலேஷ்மம்.

ஆமாசயஸ்தானத்திலேயே வாசம் பண்ணிக்கொண்டு உண்ணப் பட்ட அன்னபலாதிகளை மிருதுவாக்கும். இது உண்ட அன்னத்தை ஈரப்படுத்தி மிருதுவாக்குங் காரணத்தினால் கிலேதக சிலேஷ்மமெனப் பேர் பெற்றது. கிலேதகம் என்பது ஈரம்.

## 3-வது போதகசிலேஷ்மம்.

நாவில் வாசம் பண்ணிக்கொண்டு உண்ணுகின்ற அறுசுவைகளை யும் தெரிவிக்கும். இது நாவிலிருந்து சுவையைத் தெரிவிக்குங் காரணத்தால் போதக சிலேஷ்மமெனப் பேர் பெற்றது.

போதகம் என்பது உணர்த்தல்

## 4-வது தருப்பகசிலேஷ்மம்.

சிரசில் வாசம்பண்ணிக்கொண்டு இரண்டு கண்களுக்குங் குளிர்ச்சியைத்தரும். இது நேத்திரத்திற்குக் குளிர்ச்சியைத் தருங் காரணத்தால் தருப்பக சிலேஷ்மமெனப் பேர் பெற்றது.

தருப்பகம் என்பது சுகம்.

---

* திரிகஸ்தானமாவது முதுகின் கீழ் நடுத்தண்டெலும்பின் மூட்டும் இரண்டு தொடைகளினெலும்பின் மூட்டுஞ் சேர்ந்திருக்கும் இடமாம்.

## 5-வது சந்திகசிலேஷ்மம்.

கீல்களில் வாசம் பண்ணிக் கொண்டு சுபாவமாகச் சகல கீல்களையுந் தளரச் செய்துகொண்டிருக்கும். இது சகல கீல்களையுந் தளரச் செய்யுங் காரணத்தால் சந்திக சிலேஷ்மமெனப் பேர் பெற்றது.

சந்திகம் என்பது கீல்.

இப்படி ஐந்து வகையான வாத பித்த சிலேஷ்மங்கள் கூட்டமாகத்தேகத்தில் நிறைந்திருந்தாலும் தோஷரகிதமாகவே யிருக்கும். ஆகையால், அவைகள் நிற்கும் ஸ்தானங்களையும் அவைகள் செய்யுங் கிரியைகளையும் தனித்தனியே அதிநுட்பத்துடன் அறிகின்றவர்களே பண்டிதர்கள். இவை நிற்க; முற்கூறிய வாத, பித்த, சிலேஷ்மங்களில், வாதமானது அதிபராக்கிரமத்தையுடைத்தாய்ப் பித்தத்தையும் சிலேஷ்மத்தையும் அதிகரிக்கச் செய்து அவ்விரண்டினாலுமுண்டாகின்ற சகல ரோகத்திற்குந் தானே கர்த்தாவாகி அந்த ரோகங்களைப் பார்க்கிலுங் கோரமான அநந்த நோய்க் கூட்டங்களை உண்டாகச் செய்து அவைகளுக்கும்தான் அரசனாக இருக்குதலால் அந்த வாதத்திற்கு அரசன் என்றொரு பேருண்டு.

## வாததேகிலக்ஷணம்.

வாததேகிக்குப் பித்தமும் கபமும் குறைந்து வாதம் அதிகமாயிருப்பதுமன்றி மெலிந்து உயர்ந்த தேகமும், பருத்த அடித்தொடைகளும், நடந்தால் கீல்கள் நெட்டையிடுதலும், தடித்த இமைகளுடன் வட்டமாக விகாரித்துச் சாக்கண்போன்று சுறசுறப்பாகிக் கொஞ்சம் வெண்மை கலந்த கண்களும் குளிர்ந்தபார்வையும், கொஞ்சங் கருமை வெண்மை கலந்தொளிருஞ் சரீர நிறமும், அவ்வாறு கறுத்து முனை பிளந்த தலைமயிரும், தெளிவான வார்த்தையும், சிலவேளை மனச்சஞ்சலத்துடன் பட்டும் படாமையுமான தடுமாற்ற வார்த்தையும், தித்திப்பு, புளிப்பு, உப்பு, சூடு முதலிய வஸ்துக்களிற் சொற்ப இச்சையும், சீதளவஸ்துவில் விரோதமும், விசேஷ வுண்டியும், விசேஷவுண்டியெனினும் அற்பபலனும், மாதர்களிடத்தில் அற்ப இச்சையும், வீரிய விர்த்தி குறைவும், சந்தான விர்த்தியும், தயிரியம், புத்தி, அறிவு இவை நிலையின்மையும், கேளிவிலாசம், சங்கீதம், ஆசியம், அங்கமர்த்தனம், வேட்டையாடலாகிய இவைகளில் இச்சையும், அயோக்கிதை, மாச்சரியம், லோபம், பொன் வஸ்துக்களை அபகரிக்கும் நினைப்பு முதலிய

குணங்களும், கீர்த்தியின்மையும், அரைக்கண் மூடிய கொஞ்ச நித்திரையும், அந்த நித்திரையில் ஆகாயம், மலை,வனம், இவைகளில் தான் நடப்பதாகக் காணுகின்ற கனவும், கவித்துவஞ் செய்கின்ற தன்மையும் உண்டாயிருக்கும். அன்றியும் நாய், நரி, ஒட்டை, எலி, பருந்து, காகம், கோட்டான், என்னும் இவைகளுக்கும் மேற்கூறிய குணங்கள் உண்டாயிருக்கும்.

## பித்த தேகிலக்ஷணம்.

பித்ததேகிக்குப் பித்தம் அதிகமாயிருப்பதுமன்றி, அஸ்திகளிலும் கீல்களிலும் மாமிசங்குறைந்து எப்போதும்,வெப்பம், வியர்வை, அற்ப துர்க்கந்தம், சருமஞ் சுருங்கித் திரைதல், முதலானவை பொருந்திய மேனியும், மஞ்சள் சிவப்பு கலந்தொளிரும் நிறமும், முகம் உள்ளங்கை உள்ளங்கால் சிவந்தும், சிறுத்து மஞ்சள் வன்னம் பெற்றும் அதிசஞ்சரிப்பும் மெல்லிய இமைகளுமுடையவாய், வெயில் கோபம் பசி மதுபானம் இவைகளால் அதிவிரைவிற் சிவக்கின்ற கண்களும் சிரத்திற் கொஞ்சம் மஞ்சள்வன்ன ரோமமும் தேகத்தில் சொற்ப ரோமமும் நரையும் முகப் பருவுடன் கறுத்த மச்சங்களும், தித்திப்பு துவர்ப்பு கசப்பு சீதளம் என்னு மிவைகளுள்ள பதார்த்தத்திலிஷ்டமும், அற்ப வுண்டியும், பசி தாகம் கோபம் உஷ்ணம் கிலேசம் ஆகிய இவைகளைச் சகிக்காத தன்மையும், சுகந்த மாலை சந்தனப்பூச்சு முதலிய அலங்காரத்திலும் பணியிலும் விருப்பமும், அற்ப சுக்கிலமும் அற்ப காமமும் மாதரிடத்தில் அற்ப விருப்பமும் வீரம்,பகைஞர்க்கு அஞ்சாமை துணிவு அதிமானம் வல்லமை தெளிந்த புத்தி மிகுவார்த்தை ஆசாரம் நற்செய்கை அடுத்தவரிடத்தில் அன்பு என்னு மிக்குணங்களும், நித்திரையில் புட்பம் நிறைந்த கோங்குமரம் சரக்கொன்றைமரம் முருக்குமரம் மின்னல் சூரியன் வாயு கொள்ளி நாலுபுறத்திலும் பற்றி யெரிகின்ற வெளிச்சம் என்னும் இவைகளைக் காணுகின்ற சொப்பனமும், நல்ல போகமும் வித்துவக்கவித்திறமும் உண்டாயிருக்கும். இவன் முக்காற் பலமும் அறுபத்தாறு வயதுமுடையவனாக இருப்பான். இதன்றியும், புலி கரடி குரங்கு பூனை பாம்பு யக்ஷர்கள் என்பவைகளுக்கும் முற்கூறிய தேகாதிகுணங்கள் உண்டாயிருக்கும். அன்றியும், அக்கினியாலுற்பத்தியாகின்ற செந்துக்களுக்கெல்லாம் பித்ததேகமென்றே சொல்லுகிறார்கள்.

## சிலேஷ்ம தேகிலக்ஷணம்.

சிலேஷ்மதேகிக்குக் சபம் அதிகமாயிருப்பதுமன்றி நீக்கமற நரம்புகளையும் அஸ்திகளையும் கீல்களையும் தசைகள் நிறைந்துமறைக்க மேடுபள்ளமில்லாமல் மிருதுவுடனழகிய தேகமும், பரந்த நெற்றியும் அகன்று உயர்ந்த மார்பும் முழங்காலளவும் நீண்ட கையும் குறைவில்லாத அவயவங்களும், அகன்று நீண்டு கடைசிவந்து கருவிழி வெள்விழி ஒளிவாய்த் தெளிவாய்த்தூரப்பார்வை தோற்றுவதாய்ச் சுற்றிலுங் கறுத்து நெருங்கிய இமை மயிருடன் எண்ணெய் தடவினது போல மினுமினுத்து அழகிய கண்களும், மஞ்சட் சோளம், அறுகு முளை பாணத்தொளி கத்தியொளி கோரோசனை தாமரைப்பூ பொன் என்னும் இவையொத்த சரீரநிறமும், சிலேஷ்மப்பசையால் மிகவுங் கறுத்து நெருங்கி முளைத்த ரோமமும், மதத்த யானை நடையும், மேகம் கடல் சிங்கம் மத்தளம் என்பவைகளின் ஒலிபோன்ற கண்டத்தொனியும், கசப்பு துவர்ப்பு காரம் உஷ்ணம் இன்னும் அதிகாங்கையான பதார்த்தங்கள் கூடிய அற்பவுண்டியும், அற்ப வுண்டி யென்னினும் அதிக பலனும் பசி தாகம் துக்கம் கிலேசம் உஷ்ணம் ஆகிய இவைகட்குப் பின்வாங்காத தன்மையும், ரசதாது சுக்கிலதாது சந்தானம் பரிசனம் நடை புத்தி ஆகிய இவைகளின் பெருக்கமும், வாலிபத்திலும் அதிக அழைபின்மையுடன் கோபம் கடுஞ்சொல் சஞ்சல புத்தி தீர்க்கவயிரம் அதிவிஷயம் அதிதாகம் என்னும் இவையின்மையும், சத்துவகுணம் ஞாபகசுத்தி மேலான புத்தி முன்யோசனை பெரியோர்க்கன்பு செய்யும் பத்தி வணக்கம் நீங்காச்சிநேகம் நம்பிக்கை சத்தியம் பிரதிக்ஞை பொறுமை நாணம் பொறுத்தவுத்தரம் தருமத்திலிச்சை நன்றிமறவாமை ஈகை ஒருவேளை மிகுந்த ஈகை பிறர் நன்கு மதித்தல் நற்செய்கை என்னும் இக்குணங்களும், சுகநித்திரையும் அந்த நித்திரையில் பக்ஷிகளுள்ள தாமரைக்குளம் சீதளமேகம் என்னும். இவைகளைக் காணுகின்ற கனவும், கவித்துவஞ் செய்கின்ற தன்மையுடன் மிகுந்த செல்வமும் உண்டாயிருக்கும். இதன்றியும் பிரமன் உருத்திரன் இந்திரன் வருணன் என்னும் இவர்களுக்கும், சிங்கம் யானை குதிரை எருது பசு கருடன் அன்னம் என்னும் இவைகளுக்கும் முற்கூறிய விழிகளும் குணங்களும் தேகமும் உண்டாயிருக்கும். இச்சிலேஷ்மமென்பதைச் சந்திர சொரூபமென்றே சொல்லுகிறார்கள். மேற்கூறிய வாததேகி, பித்ததேகி சிலேஷ்மதேகி, என்னும்

இம்மூன்று தேகிகட்கும் பொதுவாகச் சுத்த தேகிகளென்று பெயர். அம்மூன்றின் தொந்தத்தையுடைய தேகிகட்குத் தொந்ததேகிகளென்று பெயர். இந்தத் தொந்ததேகிகட்கு மேற்கூறிய குணங்களெல்லாம் மாறுபட்டிருக்கும்.

## வாதகோபகாலம்.

கசப்பு துவர்ப்பு காரம் காங்கை உள்ள வஸ்துக்களை அருந்துங் காலம் அகாலபோசனகாலம் நித்திரைப்பங்ககாலம் யோகாப்பியாச காலம் உரத்துப் பேசுங்காலம் வாந்தியாவது பேதியாவது அதிகரிக்குங்காலம் பயகாலம் துக்ககாலம் சிந்திக்குங்காலம் அதிசையோக காலம் ஆவணி புரட்டாசி மாதகாலம் மாலைக்காலம் விடியுங்காலம் புசித்தததற்காலம் ஆகிய இக்காலங்களில் மனிதர்களுக்கு வாதம் அதிகரிக்கும்.

## பித்தகோபகாலம்.

உப்பு புளி காரம் அதிதீக்ஷணம் உஷ்ணம் உள்ள இவ்வஸ்துவையும் தாகமீறும் வஸ்துவையும் மிதமின்றி அநுசரிக்குங்காலம், கோபகாலம் சீரணகாலம் மத்தியான காலம், நடுநிசிகாலம் ஐப்பசி கார்த்திகை மாதகாலம் என்னும் இக்காலங்களில் மனிதர்களுக்குப் பித்தம்அதிகரிக்கும்.

## சிலேஷ்மகோபகாலம்.

தித்திப்பு புளிப்பு உப்பு குழகுழப்பு மந்தம் சலம்வடிதல் சீதளம் உள்ள வஸ்துக்களையும், கெடுதியான பதார்த்தங்களையும் அருந்துங்காலம் சீதள வஸ்திராதிகளைப் புனையுங்காலம், பகலில் நித்திரையும் இரவில் அநித்திரையுங் கொள்ளுங்காலம், அசீரண காலம், பேதி வாந்தி ஆகிய காலம் சுககாலம், தகாத நடக்கைகள் நடத்துங் காலம் இவைகளை மிகவும் அநுசரிக்குங்காலம் சித்திரை வைகாசி மாதகாலம் உதயமுதல் பத்துநாழிகை அளவான காலம் அஸ்தமன முதல் பத்து நாழிகை யளவான காலம், புசித்தததற்காலம்ஆகிய இக்காலங்களில் மனிதர்களுக்குச் சிலேஷ்மம் அதிகரிக்கும்.

## சந்நிபாத லக்ஷணம்.

புளிப்பு கசப்பு தித்திப்பு என்னும் சுவையுள்ள வஸ்துக்களை மிதமின்றிப் புசிப்பதனால், வாதமும் பித்தமும் சிலேஷ்மமும் தனித் தனியே அதிகரிக்கும்; அப்படி அதிகரித்த மூன்று தோஷங்களும் ஒன்றாகக்கூடி மிகவுமதிகரிப்பதே சந்நிபாதமாம். இதனைத் திரிதோஷம் எனவும் முத்தோஷம் எனவும் ஆயுள்வேதியர் கூறுவர்.

## சந்நிபாதகோபகாலம்.

நாட்சென்றபுராதன அன்னம், மிகவுங் கெடுதியன்னம் கொழிய லரிசியன்னம் கெடுதலான மத்தியபானம் புதுமது கலங்கிய சலம் வதங்கிய பதார்த்தம் வேகாப் பதார்த்தம் புளிப்பிலைக்கறி அதி புளிப்பு முள்ளங்கிக்கிழங்கு கடுகுபச்சடி பிண்ணாக்கு மண் துர்க் கந்த மாமிசம் அழுகி யுலர்ந்தமாமிசம் ரோகங்கொண்ட மிருகாதி மாமிசம் ஏட்டுத் தயிர், ஆகிய இவைகளைப் புசிக்கும் காலம், * சங்கீரண போசனம் அசீரண போசனம் விஷமபோசனம் ஆறியபோசனம் அகால போசனம் தேசாசாரபோசனம்தவிர்ந்த நூதன போசனம் ஆகிய இந்தப் போசன காலம் கீழ்த்திசைக்காற்று பிசாசம் பில்லி சூனியம் இடுமருந்து விஷம் மலைவாசம் இவை முதலானவை யணுகிய காலம் நவக்கிரகங்களின்வேதை சன்மநட்சத்திர பீடைதொடருங்காலம்து ரோகம் கொலை மகாபாதகம் கெடுதிச்சிந்தை இன்னும் நானாவிதமான கருமம் என்னும் இவைகள் அநுசரிக்குங்காலம் ஆகிய இக்காலங்களில் மனிதர்களுக்குச் சந்நிபாதம் அதிகரிக்கும். இவை நிற்க மாதர்கட்கு வயிற்றில் மரித்த பிண்டத்தைக் கைதேறாத மருத்துவச்சி கண்டித்து வெளிப்படுத்தலாலும் பிரசவிக்குங் காலத்தில் தகுந்த அவுஷதங் கொடாமையினாலும் சந்நிபாதம் அதிகரிக்கும். அதிகரித்த திரிதோஷமானது அநந்தரோகத்தையுண்டாக்கும். அதன் விவரம்: வாதாதி முத்தோஷங்கள் தங்கள் தங்கள் அதிகரிப்பினாலே எந்தெந்த ரோகத்திற்கு எதுவெது கர்த்தாவோ அதுவது அதனை யநுசரித்து அந்தந்த ரோகங்களையெல்லாம்அளவு படுத்துதற்குக் கூடாமையான கணக்கில் உண்டாக்கிவிடு மென்றறிக.

---

* சங்கீரணம் என்பது கலப்பு.

## வாதவிருத்தி லக்ஷணம்.

வாதமானது சுபாவத்திற்கு அதிகரித்தால் தேகம் இளைத்தலோடு தேசசு கெட்டுக்கறுக்குதல் விடவிடென்று நடுக்குதல் ஓய்ச்சல் பல வீனம் அதிவெப்பம் வயிறுப்பிசம் மலபந்தம் பஞ்சேந்திரியங்களுக் குத்துர்ப்பலம் நித்திரை பிடியாதிருத்தல் ஒருவேளை பிதற்றல் பிர மை அதயிரியம் சகல பொருள்களிலும் அதிக விருப்பம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## பித்தவிருத்திலக்ஷணம்.

பித்தம் அதிகரித்தால், மலம், சிறுநீர், கண்கள், சருமம் இவை கள், மஞ்சளாகுவதன்றியும், அதிகபசி, தேகவெரிச்சல், தாகம் உண் டாதல் போலிருத்தல், சொற்ப நித்திரை என்னுமிக்குணங்கள் உண் டாகும்.

## சிலேஷ்மவிருத்திலக்ஷணம்.

சிலேஷ்மம் அதிகரித்தால், அக்கினிமந்தம், வாய்நீரூறல், தாம சம் வெண்மைநிறத்துடன் தேகபாரிப்பு, சில்லிடல், ஒருவேளை சரீர மாதியந்தமுங் கட்டுவிட்டுப்போவது போலிருக்குதல், இரைப்பு, உப் பிசம், இருமல் மிகுந்த நித்திரை என்னும் இக்குணங்கள் உண்டா கும்.

## வாதசீரணலக்ஷணம்.

வாதங்குறைந்தால், சரீர மிகவும் இளைத்தலோடு ஈனத்தொனி யும் அதிக மறதியு முண்டாகும். அன்றியும் மேற்கூறிய சிலேஷ்ம விருத்தியின் துர்க்குணங்களும் இதில் உண்டாகும்.

## பித்தசீரணலக்ஷணம்.

பித்தங் குறைந்தால், மந்தாக்கினியும், சைத்தியமும் உண்டா கும். அன்றியும் சுபாவசிலேஷ்ம விருத்திக்கும் நாசம் உண்டாகும்.

## சிலேஷ்மசீரணலக்ஷணம்.

சிலேஷ்மங் குறைந்தால், பிரமையுண்டாவதன்றியும், சிலேஷ்

மஸ்தானங்களின் கோழை குறைந்தும், மார்பைப் பற்றியிருக்குஞ் சிலேஷ்மங் கரைந்தும் ரோமக்கால்களில் நின்றும் வியர்வை பெருகும். அன்றியும் சந்திக சிலேஷ்மம் முழுமையும் விலகிவிடும். இத ஞல் தேகத்தின் கீல்களெல்லாம் நன்ருக வெளியில் தோற்றமுண்டாகும்.

## தாதுவின்பேதம்.

தேகத்தில் தாதுவானது, இரசதாது, இரத்ததாது, மாமிச தாது, மேதோதாது, அஸ்திதாது, மச்சாதாது, சுக்கிலதாது என ஏழுபிரிவாக இருக்கின்றது. இவை அன்றியும் சருமத்தையும் தாது என்று சிலர் சொல்லுகிருர்கள்.

## சப்ததாதுக்களின் சுபாவசெய்கை.

சப்ததாதுக்களானவை சரீரத்தைத் தாங்கிச் சோர்வில்லாமல் காப்பாற்றிப் புஷ்டியாக்கிப் பூரிக்கப்பண்ணி மினுமினுப்பும் காந்தியும் உண்டாகச் செய்வதுமன்றி, உயிராகிய அரசனை வாழப்பண்ணியும் கருப்பவுற்பத்திக்குக் காரணமாயும் இருக்கின்றனவாம்.

## மலசுபாவசெய்கை.

மலமானது சரீரத்தைத் தாங்கி நிலைக்கப்பண்ணும்.

## மூத்திரசுபாவசெய்கை.

மூத்திரமானது, தேகத்தில் உப்பை உண்டாக்கும்.

## வியர்வையின் சுபாவசெய்கை.

வியர்வையானது தேகத்தில் மெருகை யுண்டாக்கும். ஆயினும் சப்த தாதுக்கள் மலம், மூத்திரம், வியர்வை என்னும் இவைகள் தோஷ ரகிதமாக இருப்பதே சுபாவமென்றறிக.

## விருத்தி ரசதாதுவின்லக்ஷணம்.

இரசதாது அதிகரித்தால், சிலேஷ்ம விருத்தியினுல் உண்டாகிற துர்க்குணம் எவ்வளவோ அவ்வளவும் உண்டாகும்.

## விருத்தி ரத்ததாதுவின் லக்ஷணம்.

இரத்ததாது அதிகரித்தால், பிலீகரோகமும் விசர்ப்பியும் வித்திரிதிக்கட்டியும், குஷ்டமும், சிவந்த இரத்தத்தடிப்பும் இரத்தவாதமும், இரத்த பித்தமும், குன்மமும், உதிர விருத்தி ரோகமும், காமாலையும், பெரு வியாதியும் அக்கினி மந்தமும், உன்மாதமும், சருமச் சிவப்பும், இரத்த மூத்திரமும், இரத்த நேத்திரமும் உண்டாகும்.

## விருத்தி மாமிசதாதுவின் லக்ஷணம்.

மாமிசதாது அதிகரித்தால், கண்டமாலையும், ஆச்சரியமான கிரந்தியும் உண்டாம். அன்றியும், கன்னம், தொடை, வயிறு, ஆண்குறி இவைகளில் கண்டுக்கண்டாகக் கட்டிக்கொள்ளுதலோடுகண்டத்தின் சதை மிகவும் பருக்கும்.

## விருத்திமேதோ தாதுவின் லக்ஷணம்.

மேதோதாது அதிகரித்தால், முற்கூறிய மாமிசதாது விருத்தியினால் பிறக்கப்பட்ட குணங்களெல்லாம் இதில் பிறப்பதன்றியும், ஆயாசமும், கொஞ்சம் வேலை செய்யினும் பெருமூச்சும், தனத்திலும், வயிற்றிலும் தொடையிலும் தொங்கும்படியாகிய சதையும் உண்டாகும்.

## விருத்தி அஸ்திதாதுவின் லக்ஷணம்.

அஸ்திதாது அதிகரித்தால், அஸ்திகளும், தந்தங்களும் அதிகப்படும்.

## விருத்தி மச்சா தாதுவின் லக்ஷணம்.

மச்சாதாது அதிகரித்தால், கண்கனப்பு, தேகம் பாரிப்பு, கைகால்களின் விரல் கணுக்கள் இவைகளில் வீக்கமும், மூத்திர கிருச்சரமும் உண்டாகும்.

## விருத்தி சுக்கிலதாதுவின்லக்ஷணம்

சுக்கிலதாது அதிகரித்தால், மாதர்களிடத்தில் அதிக விருப்பமும், சுக்கிலாஸ்மரிரோகமும் உண்டாகும்.

## விருத்திமலலக்ஷணம்.

மலமானது அதிகரித்தால், வயிற்றில் இரைச்சலுடன், உப்புசமும், கனத்தலும், வேதனையும் உண்டாகும்.

## விருத்திமூத்திரலக்ஷணம்.

மூத்திரமானது அதிகரித்தால், அடிவயிற்றில் குத்தலுண்டாகும், கொஞ்சம் மூத்திரம் வெளிப்பட்டால் மறுபடியும் வருவதுபோலவே இருக்கும். மறுபடி வெளிப்பட்டாலும் முன்போலவே இருக்கும்.

## விருத்திவியர்வைலக்ஷணம்.

வியர்வையானது அதிகரித்தால், அதிவியர்வையும் தேகத்தில் மிகுந்த துர்க்கந்தமும் தினவும் உண்டாகும்.

## விருத்திநேத்திரமலலக்ஷணம்.

நேத்திரமலம் அதிகரித்தால், அதிக பீளைசாரலுடன், கண்கனத்தல் நீர்க்கம்மல், இமையொட்டிக்கொள்ளல், முதலிய குணங்களும், உண்டாகும். இப்படியே மற்ற இந்திரிய மலங்களின் விருத்தியையுங் காண்க.

## க்ஷீண ரசதாதுவின்லக்ஷணம்.

இரசதாது குறைந்தால், தேகத்தில்சருமஞ் சுறசுறப்பும், வாடலும், உலரலும், ஆயாசமும், வார்த்தை கேட்க அசங்கியமும், உண்டாகும்.

## க்ஷீண ரத்ததாதுவின்லக்ஷணம்.

இரத்ததாது குறைந்தால், புளிப்பு வஸ்துக்களில், சீதள வஸ்துக்களில் விருப்பமும், நரம்புகள் தளரலும், சரீர நிறக்குறைவும் உண்டாகும்.

## சீரணமாமிசதாதுவின் லக்ஷணம்.

மாமிசதாது குறைந்தால், கண்கள் வாடலோடு சுருக்கமும், கன்னமும் தொடைச்சதையும் வற்றுதலும், கீல்கள் நோகுதலும் உண்டாகும்.

## சீரணமேதோதாதுவின்லக்ஷணம்.

மேதோதாதுகுறைந்தால் இடுப்புப்பக்கங்களுக்குப் பலனில்லாமையும், தேகமிளைத்தலும், பிலீகஸ்தானவிருத்தியும் உண்டாகும்.

## சீரணஸ்திதாதுவின்லக்ஷணம்.

அஸ்திதாதுகுறைந்தால், அஸ்தி சந்துக்களில் நோவும், தந்தங்களிலும் மயிர்களிலும் நகங்களிலும் வெடிப்பும் உண்டாகும்.

## சீரணமச்சாதாதுவின்லக்ஷணம்.

மச்சாதாது குறைந்தால், எலும்புகளில்துவாரம் விழுதலும், பிரமையும், கண்களில்இருட்கம்மலும் உண்டாகும்.

## சீரணசுக்கிலதாதுவின்லக்ஷணம்.

சுக்கிலதாது குறைந்தால், சுக்கிலம் வற்றுதலுடன் வெகுநேரம் பொறுத்து ஒருதுளி விழுதலும், விதையில் நோவும், ஆண்குறியில் புகைபட்டவஸ்துபோலக்கறுத்தலும் உண்டாகும். இப்படியே மாதர்கட்கும் நாதமானது சிரணித்தால், மேற்படி குணங்கள்பிறக்குமென்றறிக.

## சீரணமலலக்ஷணம்.

மலம் குறைந்தால், வயிற்றில்சத்திப்புடன் ஒரு வாயுவுண்டாகிக் குடலை முறுக்கிப்பிடிப்பதுமன்றி மார்பிலும், விலாப்பக்கங்களிலும், நோயுண்டாக்கிச்சஞ்சரித்து மேல் எழும்பி உபத்திரவத்தை விளைக்கும்.

## சீரணமூத்திரலக்ஷணம்.

மூத்திரங்குறைந்தால், முன்வன்னம்பேதித்துச் சிவப்பாகிக் கொஞ்சங்கொஞ்சமாகப்பிரயாசையோடு நீரிறங்கும்.

## சீரணவியர்வைலக்ஷணம்.

வியர்வை குறைந்தால், மயிர்களுதிர்தலும், சிலமயிர்கள், முறைத்தலும், சருமங்களெல்லாங்கீற்றுக் கீற்றாக வெடித்தலும் உண்டாகும்.

## சீரணநேத்திரமலலக்ஷணம்.

நேத்திர மலங்குறைந்தால், கண்களில்சுபாவபீளை விளைவின்மையும், அதுவுண்டாகுமிடத்தில் வறளலும் நோவும் உண்டாகும். ஒருவேளை அற்பபீளை வந்தாலும் வரும். இப்படியே மற்ற மூக்கு, வாய், செவி, முதலியவைகளின் மலக்குறைவினால் வருங்குணங்களையும் அறிக.

## உதராக்கினிபேதம்.

உதராக்கினியானது நான்குவகைப்படும். அவையாவன: முற்கூறிய சமானவாயு, எதாஸ்தானத்திலிருந்தால் சமாக்கினி, அது இடந்தப்பி நின்றால் விஷமாக்கினி, அதனைப் பித்தஞ் சூழ்ந்தால் தீக்ஷ்ணாக்கினி, அதனைக் கபஞ் சேர்ந்தால் மந்தாக்கினி எனப்படுபவைகளாம்.

### 1-வது சமாக்கினி.

ஒருவன் வேண்டுமளவும் புசிக்கா நின்ற அன்னபானாதிகளையெல்லாம் முறைமைப்படி கால அளவைக்கு மாறுபடாமல் நன்றாகத் தகிக்கும்.

### 2-வது விஷமாக்கினி.

புசிக்கப்பட்டவைகளை உடனே தகிக்காமல் வெகு நேரம் பொறுத்துத்தகிக்கும். அப்படித் தகிக்கப்பட்டாலும் அவைகள் விஷமசீரணமேயாம்.

### 3-வது தீக்ஷ்ணாக்கினி.

வெந்தும் வேகாத அன்னபானாதிகள் முதலான கெட்ட வஸ்துக்களைப் புசித்தாலும், அவைகளை இரசத்தோடுங்கூடவே தகிக்கும்.

### 4-வது மந்தாக்கினி.

இஷ்டமாகப் புசித்த பாகமான அன்னபானாதிகளை உடனே தகிக்காமல் வாயுவால் வயிற்றிரைச்சல், குடலிரைச்சல், வயிற்றுப்பிசம், தேகங்கனத்தல் என்னும் இவைகளை யுண்டாக்கி வெகு நேரத்தின் பின்பு தகிக்கும்.

### தேகபலபேதம்.

தேகபலமானது மூவகைப்படும். அவையாவன: சகசபலம், காலபலம், யுத்திகிருதபலம் என்பவைகளாம்.

### 1-வது சகசபலம்.

விஷயாதிகளில் அடிபடாத யவ்வன பருவமுள்ள தாய் தந்தையர்க்குப் பிறந்தவர்க்குச் சுபாவமாக இருப்பதாம்.

### 2-வது காலபலம்.

பிண்டந்தரித்த காலபலத்தினாலும், பருவகாலத்தினாலும் வருவதாம். யவ்வனகாலத்தில் விந்துதரித்துப் பிறந்தவர்கட்கு இருப்பது கால பலமென்றுஞ் சிலர் சொல்லுகிறார்கள்.

### 3-வது யுத்திகிருதபலம்.

சிலம்ப முதலிய பழக்கத்தினாலும், நன்றாகப் புசித்தலினாலும், தாது விருத்திக்குரிய அவுஷதங்களை அநுசரிப்பதினாலும் வருவதாம்.

### வாதரோகிலக்ஷணம்.

வாதரோகிக்குச் சரீரமானது கரிய நிறமாயுங், கையால் தொடில் சில இடத்தில் குளிர்ச்சியாயும், உஷ்ணத்தோடு துடிப்பாயும்

பேசில் சம தொனியாயும், கண்களிற் கருமையோடு சலம்பாய்வதா யும், மலமானது கருமையோடு பந்தமா யிறங்குவதாயும், சிறுநீர் வெண்மையாய்த் தெளிந்திறங்குவதாயும், நாவானது கருமையோடு முள்ளுகளை யொத்துக் கொஞ்சம் வெடித்திருப்பதாயு மிருக்கும். அன்றியும் கையில் வாதநாடியானது சிறுபிள்ளை தொட்டிலாட் டம்போல் வளைந்தசைவதாய்த் தவளை, ஓணான், பாம்பு, அட்டை, குருவி இவை முதலிய செந்துக்களின் நடையைப்போல் நடக்கும்.

## பித்தரோகிலக்ஷணம்.

பித்தரோகிக்குச் சரீரமானது மஞ்சள் நிறமாயும், கையால் தொடில் அதிக உஷ்ணமாயும், விழி மஞ்சளாயும், அல்லது சிவப்பா யும் மலமானது சிவந்து மஞ்சளித் திறங்குவதாயும், சிறு நீரானது உஷ்ணத்தோடு செம்மை பசுமையாயிறங்குவதாயும், நாவானது இரத்தவன்னம், மஞ்சள் வன்னம் பெற்றிருப்பதாயும், பேசில் உர த்த தொனியாயு மிருக்கும். அன்றியும் கையில் பித்தநாடியானது அன்னம், மயில், தாரா, மாடப்புறா, ஊர்க்குருவி இவை முதலிய செந்துக்களின் நடையைப்போல நடப்பதன்றியும், ஓங்கிக் கருடனைப்போலும் வண்டைப்போலு மெழும்பி விசையாகவும் நடக்கும்.

## சிலேஷ்மரோகிலக்ஷணம்.

சிலேஷ்ம ரோகிக்குச் சரீரமானது வெள்ளை நிறமாயும், கை யால் தொடில் மிகுந்த குளிர்ச்சியாயும், கண்கள் வெளுப்போடு பீளை சாருவதாயும், மலமானது வெளுத்துச் சிதறலாகக் கொஞ்சஞ் சீதங் கலந்திறங்குவதாயும், சிறு நீரானது சேறுபோற் குழம்பி, வெளுத்து, நுரையோடிறங்குவதாயும், நாவானது வெண்மையோடு சலம் பொருந்தியதாயும் பேசில், ஈனத்தொனியாயும் இருக்கும். கையில் சிலேஷ்ம நாடியானது கோழி, ஊர்க்குருவி, கொசு சிலந் திப்பூச்சி இவை முதலிய செந்துக்களின் நடையைப் போலத் தோற் றியுந் தோற்றமலும் நடக்கும். அன்றியும், அதிசையோகத்தில் முந் தினவன் நாடிபோலும் கொக்கினுறக்கம்போலு மெல்ல நடக்கும்.

### தொந்தரோகிலக்ஷணம்.

தொந்தரோகிக்குச் சரீரமானது பலவன்னமாயும், கையால் தொடில் குளிர்ச்சியாயும் உஷ்ணமாயும் இவ்விரண்டு மில்லாததாயும், கண்கள், மலம், மூத்திரம், நா, இவைகள் நானாவிதவன்னமாயும், பேசில் நானாவித தொனியும் இருக்கும். அன்றியும் கையில் நாடியான து முற்கூறிய செந்துக்களின் நடைகளையெல்லாம் ஒத்துத்தொந்திப்பாக நடக்கும். இவ்விதப் பரீக்ஷைகளினாலும், தேச, கால, அக்கினி பேதங்களினாலும் மேற்கூறிய ரோகங்களை நிதானித்து வைத்தியஞ் செய்யவேண்டும். இதனைத் தானபரீக்ஷை எனவும், அஷ்டபரீக்ஷை எனவுங் கூறுவர்.

முதலாவது தோஷாதிபேதபடலம்

முற்றியது.

---

## 2-வது சுரரோகபடலம்.

### சுரபேதம்.

சுரரோகமானது, சகலரோகங்களுக்குந்தலைமையாயும் கொடிதாயும் இருக்கின்றது. அது, வாதசுரம் பித்தசுரம் சிலேஷ்மசுரம் வாதபித்தசுரம் வாதசிலேஷ்மசுரம் சிலேஷ்மபித்தசுரம் சந்நிபாதசுரம் ஆகந்துகசுரம் என எண்வகைப்படும். இவற்றுள் ஆகந்துகமானது, அபிகாதசுரம் சாபசுரம் அபிசாரசுரம் அபிஷங்கசுரம் என நான்குவகைப்படும். இவற்றுள் அபிஷங்கமானது பூதாவேசசுரம் அவுஷதகந்தசுரம் விஷசுரம் கோபசுரம் பயசுரம் துக்கசுரம் காமசுரம் என ஏழுவகைப்படும். இதுவும் அன்றி வாதாதிதோஷபலாபலங்களினாலும் ஆறாருதுகால பேத பலாபலங்களினாலும் சந்நிபாதங்களினாலும் சந்ததாதி யென்னும் சுரம் பிறக்கும். அது, சந்ததசுரம், சததசுரம் அந்நியேத்துகசுரம் துவியாகிகசுரம்திரியாகிகசுரம் சாதுர்த்திகசுரம்என ஆறுவகைப்படும். ஆக இந்த

இருபத்துமூன்று சுரங்களும், சாரீரசுரம் மானஸிகசுரம் சௌமிய சுரம்தீக்ஷ்ணசுரம் உட்சுரம் புறச்சுரம் பிராகிருதசுரம் வைகிருதசுரம் சாத்தியசுரம் அசாத்தியசுரம் சாமசுரம் நிராமசுரம் என்னும் இப்பன்னிரண்டு சுரங்களோடும் தனித்தனியே சேர்ந்து, இருநூற்றெழுபத்தாறு சுரங்களாகின்றன. அதன்விவரம், சாரீரசுரம் முதலாகிய இந்தப்பன்னிரண்டு சுரங்களுடன் மேற்கூறிய வாதசுரம் ஆதியாகிய இருபத்து மூன்று சுரங்களும் தனித்தனியே சேரும்போது வாதசாரீரசுரம் வாதமானஸிகசுரம் வாதசௌமியசுரம் வாததீக்ஷ்ணசுரம் வாத உட்சுரம் வாதபுறச்சுரம் வாத பிராகிருதசுரம் வாதவைகிருதசுரம் வாதசாத்தியசுரம் வாத அசாத்தியசுரம் வாதசாமசுரம் வாதநிராமசுரம் எனப் பெயர் பெறும். இவ்வாறேமற்றையசுரங்களுக்கும் பெயருரைத்துக்கொள்க. இந்தச் சுரங்கள் தனித்தனியாக இருக்கும் போது, அவ்வவற்றிற்கிருக்கும் குணங்கள் மேற்படிசுரங்கள் இரண்டிரண்டாகத் தொந்திக்குங்காலத்தினுந் தொந்தப்பட்டிருக்குமென்றறிக.

## சுரப்பிறப்பின் லக்ஷணம்.

அறுசுவை வஸ்துபேதங்களாலும், தகாதநடக்கைகளாலும் வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் மூன்று தோஷங்களும் ஒன்றாகச் சேர்ந்தாவது இரண்டிரண்டாகத் தொந்தித்தாவது தனித்தனியே ஆவது அதிக்கிரமித்து ஆமாசயஸ்தானத்தைப்பற்றி அங்குமிருதுகடினரூபமாக இருக்கின்ற ஆமம் என்கிற சீதக்கட்டாகிய சிலேஷ்ம அடையைத் தங்கள் தங்கள் வன்மைக்குத் தகுந்தபடி இளக்கி உப்பப்பண்ணிப் பின்பு சீரணம் ஆகாத அன்னரசத்தை அநுசரித்து நாடோறும் அன்னரசத்தைச் செலுத்துகின்ற நரம்புகளின் துவாரங்களையும் ரோமத்துவாரங்களையும் மறைத்துப் பிறகு பக்குவாசயஸ்தானத்திற் சேர்ந்து அங்கு இயல்பாகச் சொலிக்கின்ற சாடராக்கினியைமேலில் விசிறும்படி எழுப்பி அதினுடன் கலந்து கொண்டு, சரீரம் முழுதும் வியாபித்துச் சுரமாகும். இதுவே சுரப்பிறப்பாம்.

இதில் மேற்படி அக்கினியானது வெளிப்படுதலால் ஆகாரஞ் செல்லாமலும் நரம்பின் துவாரங்கள் ரோமத்துவாரங்கள் அடை

பயிதலால் சுரம் உண்டாகும் போது வியர்வைகாணாமலும் இருக்கும். அந்த ஆமத்தில், பித்தகபதோஷம் அணுகுமாயின் வியர்வையும் உண்டாகும். ஆகையால் இவ்வாறு பிறக்கின்ற சகலசுரரோகங்களிலும் பிரகோபித்ததோஷங்களை சமப்படுத்தவும் உப்பிய சிலேஷ்ம அடையை யதாப்பிரகாரம் சருக்கவும்வெளியில்விசிறிய அக்கினியைப்பக்கு வாசயத்தில் அடக்கவுமே ஆயுள்வேதத்தில் முதலில் லங்கனம் சுரசம் கஷாயம் வேது முதலியசிகிச்சைகளும் அரும்பத்தியங்களும், விதிக்கப்பட்டிருக்கின்றன. இப்படியிருக்கச் சிலர் ரத்தக் கொதிப்பையே சுரத்திற்குக் காரணமாகச் சொல்லுகிறார்கள்.

## சுரபூருவரூபம்.

சுரமானது ஆலசியம் எந்தப்பதார்த்தங்களிலும் நிராசை தேகபாரிப்பு,நாவிற்சலம் வறளல், சரீரத்தைத்துவைத்தது போலிருத்தல், அரோசகம், கொட்டாவி, கண்ணிற்சலக்கோவை, உண்ணும்வஸ்துகள் சீரணியாமை, பலக்குறைவு, அதிநித்திரை, ரோமச்சிலிர்ப்பு, திமிர் முறுக்குதல், அடித்தொடைச் சதையும், முழங்கால் கண்டச்சதையும் நோதல், இளைப்பு, வார்த்தையில் அசங்கிதம் புளிப்பு, உப்பு காரங்களிலிச்சை தித்திப்புவஸ்துகளில் விரோதம் அருகிருப்பவரிடத்து வெறுப்பு, மனைவியரிடத்தும் புத்திரரிடத்தும் விரோதம், கீதவாத்திய நாதத்தில் அக்கினியில் குளிர்ச்சியில் காற்றில், சலத்தில் நிழலில், உஷ்ணஸ்தானத்தில் காரணமில்லாமலே விருப்பும் வெறுப்பும் உண்டாகுதல் என்னுமிக்குணங்களைத் தனக்குப்பழைய ரூபமாகப் பெற்றிருக்கின்றது. இவற்றுள் சிற்சிலகுணங்கள் பிறந்தாலும் சுரம் உண்டாகும். ஆகையால் இப்பூர்வ ரூபத்தை நிதானித்தபண்டிதர்கள் சுரம்வருவதற்கு முன்னரே அதைவரவொட்டாதஉபாயத்தைச்செய்வதுமன்றி, இது போலவே எந்தரோகங்களுக்குப்பூர்வரூபம் சொல்லியிருக்கிறதோ அந்தரோகங்களுக்குமவ்வாறே செய்யக்கூடவர்கள்.

## க-வது வாதசுரம்.

உற்பத்தியாகும்போது, சிலுசிலுப்புகண்டுமறைந்து, சுரம்விட்டது போலிருந்து சற்றுநேரம் பொறுத்து மறுபடி உண்டாகி அதி

கரித்துச்சொற்பமாகும். அதன்பின்பு, அலையடிப்பதுபோல உபுக்கல் உபுக்கலாக உண்டாகும். அப்போது உடம்பெங்கும் வேதனையுடன் எரிச்சல், ஒருவேளை குளிர்ச்சி, ஒருவேளை உள்ளங்கையிலும் உள்ளங்காலிலும் எரிச்சல், ஒருவேளை அவைகளில் குளிர்ச்சி, ஒருவேளை அவயவங்களில் அதிகவேதனை, ஒருவேளையில்லாமை, ஒருவேளை கால்களில் திமிர், ஒருவேளை சர்வாங்கமுமரத்தல், ஒருவேளை தொடைச்சதை கனத்துடன் நோவு, ஒருவேளை சுருங்கினதுபோலிருக்குதல், ஒருவேளை கீல்களெல்லாமுறிந்து போவதுபோலே தோற்றல், ஒருவேளை இடுப்பு நோவுடன், முதுகெலும்பை நொறுங்க அடிப்பதுபோலிருத்தல், ஒருவேளை வயிற்றை மிகுதியுமிழுத்துக் கொண்டு உப்பிசமாகவிருத்தல், ஒருவேளைபக்க எலும்பு முதல் சகல எலும்புகளும் நொறுங்கிப்போவது போலிருத்தல், ஒருவேளை மார்பில் பாரம் வைத்தாற்போலிருத்தல், ஒருவேளை மார்பிலும் பிடரியிலும் அக்குளிலும் அங்குசத்தாற் குத்துவதுபோல் குத்தல், ஒருவேளை தோள்களில் நோவு, ஒருவேளை எந்த வஸ்துவையாகிலும் மெல்லுதற்குத் தாளசதி, கொட்டாவி, காதிரைச்சல், இரண்டு நெறிகளிலுந் தெறித்தல், உச்சித்தலையில் வேதனை, அரோசகம், வாய்துவர்த்தல். மலமூத்திரந்தாராளமின்றிக் கொஞ்சங் கொஞ்சமாக வெளிப்படுதல். முகம், கண், நகம், சருமம், மலம், மூத்திரம், என்னும் இவைகள் உஷ்ணமாய் வறண்டு கருமைகலந்த சிவப்பாயிருக்குதல் கோட்டுவாய்ச் சலம் வடிதல், எந்த வஸ்துக்களிலும் இச்சை நீங்கல், எந்தப்பதார்த்தங்களை வாயில் வைத்தாலும் அருசி, புசித்த அன்னம் சீரணியாதிருத்தல், வியர்வை காணாமை, நித்திரை பிடியாமை, தொண்டையும் உதடும் வறளல், வறட்டிருமல், வெள்ளோக்காளம், தாகம், நா வறட்டல், மனோதுக்கம், ரோமச்சிலிர்ப்பு, நடுக்கல் தந்தங்களெல்லாம் புளிப்பைத் தின்றதுபோலக்கூசுதல், ஒரு வேளை தூக்கிப்போடுவதுபோல் சரீரத்தைக் குலுக்கல், தும்மலில்லாமை, எழுந்தால் சுற்றுவதுபோலிருத்தல், பித்தனைப்போல் பிதற்றல், வெய்யிலிலிருப்பதற்கே நினைப்பு, தேகங்குன்றுதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும் உதடுகறுத்தல், கண்களிலும் புருவத்திலும் நோவு, தேகம்பாரித்தல், மலபந்தம் என்னுமிக்குணங்களையும் உண்டாக்குமென்பாருமுளர். இதற்குத் தருணசுரம் வரையிலும் சுத்தலங்கனத்தினாலும் வாதாரிகஷாயத்தினாலும் தேகத்

திற்குத்தகுந்தபடி உபாயஞ் செய்து, அந்த ஒன்பதுநாளுஞ் சென்ற பின்பு, சுரசம் மாத்திரை ஆதியான சிகிச்சையைச் செய்யவேண்டும்.

## 2-வது பித்தசுரம்.

கேசாதி பாதம் வரைக்கும் குபீரென்று உண்டாகும். அப்போது பிதற்றலுடன் அபத்த வார்த்தை, வாயானது காரமாயிருத்தல், நாவிலும் நாசியிலும் வெடித்துப்புண்காணல், சீதளவஸ்துவில் விருப்பம், தலைசுற்றல், மூர்ச்சை, கர்வம், எந்த வஸ்துக்களிலும் இச்சையில்லாமை, அற்ப பேதி, கசப்புத்தண்ணீராக வாந்தி, உமிழ்நீரில் கொஞ்சம் ரத்தம் வீழல், புளியேப்பம், தேகத்தில் சிவந்த படை, முகம் கண் சருமம் நகம் மலம் மூத்திரம் என்னும் இவைகள் மஞ்சளைப்போலும் பச்சிலை ரசத்தைப்போலும் தோற்றல், வியர்வை பெருகல், சுவாசத்தில் துர்க்கந்தம் வீசல், அதிகதாகம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும், தேகத்தில் வேதனை, தலைநோவு, கண்ணோவு, நடுக்கல், நித்திரைப்பங்கம், துர்ப்பலம், விக்கல், ஏப்பம் என்னுமிக்குணங்களையும் உண்டாக்குமென்பாருமுளர். இதற்குத் தாரகலங்கனமும், சுகுமார கஷாய முதலிய சிகிச்சைகளும் ஆம்.

## 3-வது சிலேஷ்மசுரம்.

ஆலசியம், அற்ப மலசலஞ்சாரல், மிகுந்த அரோசகம், நரம்புகளெல்லாம் விருத்தல், வாயில் இனித்த சலமூறல், மார்பு விருத்தலுடன் துடித்தல், சுவாசத்தோடிரைப்பு, நாசியடைப்பு, வாந்தி, இருமல், சரீரமெல்லாம் விருத்தல், முகம், கண், சருமம், நகம், மலம் மூத்திரம் இவைகள் வெளுத்தல், சர்வாங்கத்திலும் நோவின்றிச் சிறிதும் பெரிதுமாய்க் கண்டு கண்டாகத் தடிப்பெழும்பல், தேகம் சுற்றிவருதல் போலிருத்தல், சோம்பல், உடம்பிற் கொஞ்சம் வீக்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். அன்றியும் சர்வாங்க சீதளம், தலையிலும் எல்லாக் கீல்களிலும் நோவு, குளிர், மந்தாக்கினி மலபந்தம், சிரோபாரம், கண்டத்துள் நோவு, நெஞ்சிற்கோழை, மரத்தல், திணறல், விக்கல், தயக்கம், தாகம், நமைச்சல், ஏப்பம், நித்திரைப் பங்கம், நாக்கும் மூக்கும் வெளுத்தல் என்னு மிக்குணங்களையுச்

உண்டாக்கு மென்பாருமுளர். இதனை, லகு லங்கனம் ஆதியான சிகிச்சைகளால் வசப்படுத்தவும்.

இம்மூன்றும் ஒவ்வொரு தோஷங்களாற் பிறந்த சுரங்களாம்.

## 4-வது வாதபித்தசுரம்.

தலைநோவு, மூர்ச்சை, வாந்தி, எரிச்சல், சோர்ந்துவிழல், தொண்டை வறளல், வாயுலரல், எந்தப் பதார்த்தத்திலும் இச்சை யில்லாமை, கீல்களில் நோவு, அசதியான நித்திரை, தாகம், பிரமை ரோமச்சிலிர்ப்பு,கொட்டாவி பிதற்றல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும், அன்றியும் சர்வாங்கவேதனை நடுக்கல் தேகங்குன்றல் தயக்கமொடு அறிவுகெடுதல் சீதளம் அதிநித்திரை ஏப்பம் வாய்கைத்தல் மலம்வெளுத்தல் வியர்வை ஆயாசம் மந்தாக்கினி மலபந்தம் கண்ணிற்சலம்வடிதல் நாவிலும் முகத்திலும் முள்ளுப் போலிருத்தல் தொடைச்சதையிலும் முழங்காற்சதையிலும் நோவு என்னும் இக்குணங்களையும் உண்டாக்குமென்பாரு முளர். இதில் இரண்டு தோஷம் சேர்ந்தமையால் இதற்குச் சுத்தலங்கனம்நீங்கலாக வாதாரி பித்தாரி அவுஷதங்களும், மேற்சொல்லிய வாதசுர பித்தசுர சிகிச்சைகளும் ஆம். இவ்வண்ணமாகவே இரண்டிரண்டுதோஷங்களாவது மூன்று தோஷங்களாவது, சேர்ந்தசுரங்களுக்கெல்லாம் அந்தந்தத் தோஷாரிவஸ்துகளும் அவ்விதச்சிகிச்சைகளும் ஆம்.

## 5-வது வாதசிலேஷ்மசுரம்.

முகம் வற்றல் அரோசகம் கீல்களிலும் தலையிலும் நோய் நாசியில்பீநசம் போல் சலம் பெருகல் இருமல் இரைப்பு மலபந்தம், சயித்தியம் கண்களிலிருண் மூடல் பிரமை உடம்புதிருப்புகிறது போலசைதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும், சர்வாங்கவேதனை நடுக்கல் ரோமச்சிலிர்ப்பு நாவெளுப்பு தாகம் மந்தாக்கினி நெற்றி புருவம் கழுத்து காது என்னும் இவைகளில் நோவு பிதற்றல் அழுதல் பிரலாபம் நித்திரை பங்கம் வாயில் தித்திப்போடுவாந்தி வியர்வை சுவாசம் என்னும் இக்குணங்களையும் உண்டாக்குமென்பாருமுளர்.

## 6-வது சிலேஷ்ம பித்தசுரம்.

சைத்தியம் தேகமானது தம்பம் போலமரத்தல் சரீர அவஸ்தை ஆயாசம் வியர்வை எரிச்சல் தாகம் இருமல் சிலேஷ்ம பித்தகுணம் சோர்ந்து வீழல் சோம்பல் வாயில் கசப்பைத்தேய்த்தது போலிருக்குதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். அன்றியும், ரோமச்சிலிர்ப்பு மார்பிலும் பிடரியிலும் நோவு நாவில், முள்ளுப்போலிருத்தல் பிதற்றல் கண்ணிற் சலம் வடிதல் தலை நோவு அதிநித்திரை அல்லது நித்திரைப்பங்கம் ஏப்பம் எரிச்சல் வாந்தி மூர்ச்சை இரைப்பு சரீரம் நருக்கித்துவைத்ததுபோலிருத்தல் என்னும் இக்குணங்களையும் உண்டாக்கு மென்பாருமுளர். இம்மூன்றும், இவ்விரண்டு தோஷங்களாற் பிறந்த தொந்த சுரங்களாம்.

## 7-வது சந்நிபாதசுரம்.

வாதாதி தொந்தங்களின் சேர்க்கையால் தோன்றி அடிக்கடி தேகளிச்சல், அதுபோலவே சயித்தியம், பகலில் நித்திரை, இரவில் நித்திரை யின்மை, ஒருவேளை இரவிலும் பகலிலும் நித்திரை, அல்லது இன்மை, அடிக்கடி வியர்வை, ஒருவேளையின்மை, பாடல், ஆடல், ஆசியம் நகைப்பு முதலிய விகாரச் சேட்டை கண்களில் நீர்க்கம்மலோடு கலங்கிச் சிவந்து சொருகுதல் கண்களின் இமையொட்டிக்கொள்ளல் விலாப்பக்கங்களிலும் சிரசிலும் அடித்தொடைகளிலும் கீல்களிலும் எலும்புகளிலும் நோவு பிதற்றல் காதிலிரைச்சலுடன் நோவு கண்டத்தில் முட்சொருகுதல் போலிருத்தல் நாவு துவளலின்றிச் சுட்டதுபோலிருத்தல் தேகங்கனத்தல் எல்லாக்கணுக்களிலும் துர்ப்பலம் உமிழ் நீரானது சிவந்து நுரைத்திருத்தலோடு கசப்பு தலை நடுக்கலுடன் அதிக நோவு தேகமுற்றிலும் கரிய நிறம் அல்லது சிவந்த நிறமான தடிப்பு மார்பு நோவு மலபந்தம் அல்லது கொஞ்சங்கொஞ்சமாக மலம் வெளிப்படுதல் முகத்தில் பளபளப்பு ஈனத்தொனி பிரமித்தல் துர்ப்பலம் என்னும் இச்குணங்களை யுண்டாக்கும். இந்தக் குணங்களையுடைய தோஷமானது சிற்சில நாள் பொறுத்துச் சாத்தியப்படும். ஒருவேளை இதுவே அசதியாகிய சோம்பலை யுண்டாக்கிக் கண்டத்தில் குறு குறுவென்னு மொரு சத்தத்தை யெழுப்பி, முகவொளியைக் கெடுத்து மரணத்தைக் கொ

டுப்பதால் இது அபிநியாச சந்நிபாதம் என்றுஞ் சொல்லப்படும். அன்றியும், வியாபிக்குஞ் சுபாவமும் சூக்ஷ்மரூபமும் உள்ளபித்தமானது சிலேஷ்மத்தால் மறிபட்ட வாயு கலக்க, உள்ளிருந்து எழும்பி வெளிப்படுதலால், சந்நிபாத சுரத்தில் கண்கள் மஞ்சள் நிறமாயிருக்கும். தோஷம் ஸ்திரமாயிருக்கையில் முற்கூறிய பித்தத்தின் சொரூபம் நஷ்டமானால், அவயவங்களில் சகல துர்க்குணங்களையும் உண்டாக்கிய இச்சந்நிபாதசுரம் அசாத்தியமென்னப்படும். முற்கூறிய தோஷமும் அக்கினி நஷ்டமுந்தவிர மற்றதுர்க்குணங்களை யுண்டாக்கிய சந்நிபாதசுரம் கஷ்டசாத்தியமென்னப்படும். ஒருவேளை இது சாத்தியமானால் அங்கவுறுப்புகளைக் கெடுத்தாலுங் கெடுக்கும். அன்றியும், சர்வாங்கமும் நருக்கித்துவைத்ததுபோலிருத்தல் உள்ளங்கை உள்ளங்காலில் வியர்வை நெஞ்சுலரல் தலைநோவோடு சுழற்றல் விக்கல் ஏப்பம் வாந்தி கொட்டாவி வயிறுப்பிசம் பேதி சுவாசம் மூர்ச்சை என்னும் இக்குணங்களையும் உண்டாக்குமென்பாருமுளர்.

முற்கூறியசந்நிபாதசுரம்ஒன்றுதானே, வாத பித்த சிலேஷ்மங்களின் மிகுதலினாலும் குறைதலினாலும், பதின்மூன்றுவகையாகப் பிறக்கும். அவையாவன: வாதமும் பித்தமும் அதிகரித்தலினாலும், சிலேஷ்மம் குறைதலினாலும் பிறப்பது கண்டகுப்சசந்நிபாதசுரம், வாதமும் சிலேஷ்மமும் அதிகரித்தலினாலும் பித்தங் குறைதலினாலும் பிறப்பது சந்திகசந்நிபாதசுரம், சிலேஷ்மமும் பித்தமும் அதிகரித்தலினாலும் வாதங் குறைதலினாலும் பிறப்பது தாந்திரிகசந்நிபாதசுரம், இம்மூன்றும் ஒருவகை. வாதம் அதிகரித்தலினாலும் பித்தமுஞ் சிலேஷ்மமுங்குறைதலினாலும் பிறப்பது புக்கினநேத்திரசந்நிபாதசுரம். பித்தம் அதிகரித்தலினாலும் வாதமுஞ் சிலேஷ்மமும் குறைதலினாலும் பிறப்பது ருத்தாக சந்நிபாதசுரம், சிலேஷ்மம் அதிகரித்தலினாலும் வாதமும் பித்தமும் குறைதலினாலும் பிறப்பது ஜிம்மகசந்நிபாதசுரம் இம்மூன்றும் ஒருவகை. வாதம்அதிகரித்தலினாலும் பித்தம்கொஞ்சங் குறைதலினாலும் சிலேஷ்மம் மிகுதியாகக் குறைதலினாலும் பிறப்பது பிரலாபசந்நிபாதசுரம், வாதம் அதிகரித்தலினாலும் சிலேஷ்மம் கொஞ்சங்குறைதலினாலும் பித்தம் மிகுதியாகக் குறைதலினாலும் பிறப்பது அந்தகசந்நிபாதசுரம்,பித்தம் அதிகரித்தலினாலும் வாதம் சற்று குறைதலினாலும் சிலேஷ்மம் மிகுதியாகக் கு

றைதலினுலும்பிறப்பது ரச்திஷ்டவி சந்நிபாதசுரம் இம்மூன்றும்ஒரு வகை. பித்தம் அதிகரித்தலினுலும் வாதம் அதிகமாகக் குறைதலி னுலும் சிலேஷ்மம் சற்றுச்குறைதலினுலும் பிறப்பது சித்தவிப்பிரம சந்நிபாதசுரம், சிலேஷ்மம் அதிகரித்தலினுலும் வாதம் அதிகமாசக் குறைதலினுலும் பித்தம் சற்றுக்குறைதலினுலும் பிறப்பது சீதாங்க சந்நிபாதசுரம், சிலேஷ்மம்அதிகரித்தலினுலும் பித்தம் அதிகமாகக் குறைதலினுலும் வாதம்சற்றுக்குறைதலினுலும் பிறப்பது கர்ணிகசந் நிபாதசுரம் இம்மூன்றும் ஒருவகை. வாதமும் பித்தமும் சிலேஷ் மமும் சமமாக அதிகரித்தலினுல் பிறப்பதுஅபிநியாசசந்நிபாதசுரம். இப்பதின்மூன்று சந்நிபாதசுரங்களும் முறையே வருமாறுகாண்க.

## 1-வது கண்டகுப்சசந்நிபாதசுரம்.

கண்டத்தைக்குறுக்கிப் பிடிப்பதுபோலிருத்தல் வாயில்வந்த பிரகாரம் பிதற்றல் தாகம் வாயுவதிகரித்தல் பிரமை தேகம் அதி காங்கையோடுகனத்தல் அலறி அலறி எழுந்தோடி வீழ்தல் நடுக்கல் மூர்ச்சை இரைப்பு தலைநோவு காதில்நோவுடனிரைச்சல் கண்டத் தில்முட்சொருகுதல்போலிருத்தல் என்னு மிக்குணங்களையுண்டாக் கும். இதுகண்டத்தைக் குறுக்கிப்பிடிப்பதால் கண்ட குப்சசந்நிபாத சுரம் எனப்பேர்பெற்றது. குப்சம் என்பது குறுகல். இதற்குச்சுவச் சந்தபைரவ முதலிய சிகிச்சைகளும் ஆம்.

## 2-வது சந்திகசந்நிபாதசுரம்.

கீல்களெல்லாம்நோதல் வாயில்நீங்காதகபம் இருமல் வயிற்று வலி ஆயாசம் அவயவங்களில் எரிச்சல் தாகம் கொஞ்சம்பிரமை என்னுமிக்குணங்களையுண்டாக்கும். இதுகீல்கள்தோறும் அதிகநோ வை யுண்டாக்குவதால் சந்திகசந்நிபாதசுரம் எனப்பேர்பெற்றது. இதற்கு பூதபைரவம் முதலிய சிகிச்சைகளும் ஆம்.

## 3-வது தாந்திரிக சந்நிபாதசுரம்.

அதிக அசத்தி இருந்திருந்துபெருமூச்சு சரீரமெரிச்சல் பேதி ஆயாசம் கருணைக்கிழங்குமுதலிய காறலானவஸ்துக்களின் காறலைப் போலத்தொண்டைக்குள்காறல் கொஞ்சங்காதுமந்திபம் நாக்குமுள்

ளுப்போலிருத்தலோடுகேறுத்தல் சரீரத்தில் அதிகாங்கை அரோசகம் பீநசம்போல மூக்கில் சலம்விழுதல் கொஞ்சம் வயிற்றுநோவு என்னு மிக்குணங்களையுண்டாக்கும். இது அசத்தியைத்தருவதால் தாந்திரிக சந்நிபாதசுரம்எனப்பேர்பெற்றது. இதற்கு மனோகரபைரவம் ஆதி யசிகிச்சைகளும் ஆம்.

## 4-வது புக்னநேத்திர சந்நிபாதசுரம்.

கண்கள் கம்மலோடுகலங்கிச்சிவந்து இடுக்கம் பிடித்திருத்தல் இமைகள் அடிக்கடி ஒட்டிக்கொள்ளுதல் தொடைச்சதையிலும் சிரசி லும் விலாப்பக்கத்திலும் எலும்புகளிலும் கீல்களிலும் நோவு பிரமை இரைப்பு பிதற்றல் நடுக்கல் நித்திரை என்னும் இக்குணங்களை யுண் டாக்கும். இது கண்களை நெருக்குவதால் புக்னநேத்திர சந்நிபாத சுரம் எனப்பேர்பெற்றது. இதற்கு விதாரணபைரவம் ஆதிய சிகிச் சைகளும் ஆம்.

## 5-வது ருத்தாகசந்நிபாதசுரம்.

அவயவங்களில்மிகுந்தநோவு உடம்பெரிச்சல் காங்கை கழுத் திற்குள் நோவோடுதினவு பிரமை சோருதல் பிரலாபப்பேச்சு தாகம் பலம் அதிகபேதி அல்லது சொற்பபேதி என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது, சரீரமுழுவதிலும் நோவும் எரிச்சலும் உண்டாக்குவதால் ருத்தாகசந்நிபாதசுரம் எனப்பேர்பெற்றது. இதற்குச் சங்கரபைரவமாத்திரை ஆதியசிகிச்சைகளும் ஆம்.

## 6-வது ஜிம்மகசந்நிபாதசுரம்.

நாவுவிகுத்தலோடு முள்ளுமுள்ளாயிருத்தல் இரைப்பு இருமல் தூர்ப்பலம் மலசலவிபரீதம் கழுத்திற்குளொதுவோபூசினாற் போல் தோன்றி அதைத்துடைக்கவேண்டும் என்கிறநினைப்பு காதுமந்திபம் வாய்பேசக்கூடாமை என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது நா வைப்பற்றியதால் ஜிம்மகசந்நிபாதசுரம் எனப்பேர்பெற்றது. இதற் குச் சித்தபைரவமாத்திரை ஆதியானசிகிச்சைகளும் ஆம்.

## 7-வது பிரலாபசந்நிபாதசுரம்.

அதிகபிதற்றல் உடம்பெரிச்சலுடன்மிகுவேதனை மனோசிந் தனை முன்கால் வீங்கி நோதல் நடுக்கல் மாறுபாடானபுத்தி என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதுநானாவிதமாகப் பிதற்றச் செய்த லால் பிரலாப சந்நிபாதசுரம் எனப்பேர்பெற்றது. இதற்குக் காருண்ய பைரவ மாத்திரை முதலிய சிகிச்சைகளும் ஆம்.

## 8-வது அந்தகசந்நிபாதசுரம்.

தாகம் சோருதல் தலைநோவு விக்கல் சரீரமுழுதும் உதறல்எரிச் சல் அற்பமலபந்தம் அக்கினிமந்தம் இரைப்பு உப்பிசம் என் னும் இக்குணங்களையுண்டாக்கும். இதுமுடிவைச்செய்வதால் அந் தகசந்நிபாதசுரம் எனப்பேர்பெற்றது. இதற்கு விஜயபைரவமாத் திரை முதலிய சிகிச்சைகளும் ஆம்.

## 9-வது ரக்திஷ்டீவிசந்நிபாதசுரம்.

ரத்தம் ரத்தமாகக்கக்கல் வாந்தி தாகம் பிரமை பேதி அற்ப சுவாசம் விக்கல் ஞாபகபங்கம் சரீரத்தில் அதிகாங்கையுடன்நோவு அன்றியும்மேலெங்கும் கறுப்புக்கறுப்பாகத்தடித்தல் இரத்தப்புடை என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது இரத்தக்கோழையைக் கக்கச் செய்யுங்காரணத்தால் ரக்திஷ்டீவிசந்நிபாதசுரம் எனப்பேர் பெற்றது. இதற்குச்சந்நிபாதபைரவமாத்திரை முதலிய சிகிச்சை களைச்செய்யவேண்டும்.

## 10-வது சித்தவிப்பிரமசந்நிபாதசுரம்.

பிரமை சோருதல் மதம் உடம்பெரிச்சல் பரியாசம்பண்ணுதல் பாடல் ஆடல் சரீரநோவு பிதற்றல் கீல்களெல்லா முறிவது போலி ருத்தல் இரண்டுபக்க இடுப்பை அடிக்கடி பார்த்தல் பயத்துடன் திரும்பித் திரும்பிவிழித்தல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதுசித்தத்தைமயக்குவதால் சித்தவிப்பிரமசந்நிபாதசுரம் எனப் பேர்பெற்றது. இதற்குமதனபைரவமாத்திரை ஆதியான சிகிச்சை களைப் பிரயோகிக்கலாம்.

## 11-வது சீதாங்கசந்நிபாதசுரம்.

சரீரமுழுவதும் மிகுந்தசீதளத்தோடு நோவு குரற்கம்மல் அடிக்கடி ஓக்காளம் பேதி விக்கல் இரைப்பு பலவீனம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதுசர்வாங்கத்திலுஞ் சீதளத்தை உண்டாக்குந்தன்மையினுல் சீதாங்கசந்நிபாதசுரம் எனப்பேர்பெற்றது. இது ஆனந்தபைரவமாத்திரை முதலிய அவுஷதங்களால் வசப்படும்.

## 12-வது கர்ணிகசந்நிபாதசுரம்.

காதின்மூலத்தில் வீக்கத்துடன் சத்தங்கேளாமை வாய்திறக்கக்கூடாமல் கண்டத்தைபிறுக்கிப்பிடித்தல் போலிருத்தல் உடம்பெரிச்சலுடன் நடுக்கல் கொஞ்சநோவு வயிறுகொதித்தல் பிதற்றல் மார்பு இடித்தல் இரைப்பு இருமல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதுகாதைப்பற்றி வருங்காரணத்தால் கர்ணிகசந்நிபாதசுரமெனப் பேர்பெற்றது. இதுகல்யாணபைரவம் ஆதியானசிகிச்சைகளால் நீங்கும்.

## 13-வது அபிநியாசசந்நிபாதசுரம்.

பசிநீங்குதல் முகத்தில் பளபளப்பு பேச்சில்லாமை துர்ப்பலம் பஞ்சேந்திரியத்தன்மைகுறைவு மயங்கிய நித்திரை அறிவின்மை என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது தேகவியாபாரங்களை நீக்குதலால் அபிநியாசசந்நிபாதசுரம் எனப்பேர்பெற்றது. இதனைக்காபாலபைரவம் முதலிய வற்றால் நிவிர்த்திக்கவேண்டும். மேற்கூறிய சந்நிபாதங்கள்மாதர்கட்குச் சூதககாலத்தில்கண்டால்சூதகசந்நியென்றும், கருப்பகாலத்தில் கண்டால் கருப்பசந்நியென்றும், பிரசவித்த பிறகுண்டானுல் பிரசவசந்நியென்றும், விரணத்திலுல் கண்டால் விரணசந்நியென்றும்பெயர் பெறும். அன்றியும்முகத்தில் விகாரம் உண்டானுல், முகசந்நியென்றும், கைகால்களில் உதறல்உண்டானுல் உதறுசந்நியென்றும், வாதபித்த சிலேஷ்மங்களின் சேஷ்டைகள் அதிகரித்தால் அவைகளின்பேர்கொண்ட சந்நிகளென்றும், அவைகளின் தொந்தகுணம் அதிகரித்தால் தொந்தசந்நியென்றும், திரிதோஷகுணம் அதிகரித்தால் திரிதோஷசந்நியென்றும், அலறி அலறியெழுந்தால் அலறு சந்நியென்றும்பலவாறுகச் சொல்லுகிறுர்கள்.

## சந்நிபாதசுரசாத்தியாசாத்தியம்.

முற்கூறிய சந்நிபாதசுரம் பதின்மூன்றினுள், சந்திகம் தாந்திரிகம் இவ்விரண்டும்சுகசாத்தியம்; கண்டகுப்சம்கஷ்டசாத்தியம்; கர்ணிகம் ஜிம்மகம் இவ்விரண்டும் கஷ்டத்திலும் கஷ்டசாத்தியம், சித்தவிப்பிரமம் சாத்தியாசாத்தியம், ஆயினும் இந்த ஆறும் சாத்தியங்களாம். இவைதவிர்ந்த ருத்தாகம் அந்தகம் புக்னநேத்திரம் ரக்திஷ்டீவி பிரலாபம் சீதாங்கம் அபிநியாசம் ஆகிய இவ்வேழும் அசாத்தியமென்றும், சந்திகம் தாந்திரிகம் பிரலாபம் சித்தவிபிரமம் ஜிம்மகம் கர்ணிகம் ஆகிய இவ்வாறும் சாத்திய மென்றும் சொல்லப்படுகின்றது.

## சந்நிபாதசுரங்களின் ஆயுளாவன.

சந்திகத்திற்கு (நாள் - 7) அந்தகத்திற்கு (நாள் - 10) ருத்தாகத்திற்கு (நாள் - 20) சித்தவிப்பிரமத்திற்கு (நாள் - 18) சீதாங்கத்திற்கு (நாள் - 15) தாந்திரிகத்திற்கு (நாள் - 25) கண்டகுப்சத்திற்கு (நாள்- 13) கர்ணிகத்திற்கு(நாள்-90)புக்னநேத்திரத்திற்கு (நாள்-8) ரக்திஷ்டீவிக்கு(நாள் - 10) பிரலாபத்திற்கு(நாள் - 14)ஜிம்மகத்திற்கு (நாள் - 16) அபிநியாசத்திற்கு (நாள் - 15) என்றறிக. இவற்றுள், சிலசந்நிபாதசுரங்கள் உண்டானவுடனேயுங்கொல்லும். சிலநூலில் ருத்தாகத்திற்கு (12) நாளென்றும், சித்தவிப்பிரமத்திற்கு (21) நாளென்றும், தாந்திரிகத்திற்கு (7) நாள் அல்லது (25) நாளென்றும் சொல்லுகின்றது. இது தேசபேதபேதிப்பாம்.

## சித்தர்மதாந்தரம்.

### 1-வது சந்திக சந்நிபாதசுரம்.

நெற்றியில்குத்தல் வீக்கம் வாதம்அதிகரித்தல் மிகுவேதனை வியர்வை துர்பலம் இவில் நித்திரையின்மை தேகம்பாரித்தலோடு சீதளம் எரிச்சம் ஆலசியம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது, சாத்தியம்.

## 2-வது தாந்திரிகசந்நிபாதசுரம்.

துக்கம் சுரம் கபம் அதிகரித்தல் தாகம் நாவுதடித்தலுடன் மரத்து வறண்டு விரிந்திருத்தல் இரைப்பு உடம்பில்கொஞ்சம்வீக்கத்துடன் நோவு ஒருவேளை அதிவேதனை தினவு பரிதாபம் காதுநோவு கண்டத்துள்தினவு உதடு உலரல் தபித்தல் கண்கள் கனத்து உப்பி இருப்பதுமன்றிச் சலம் பாய்தல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது சாத்தியம்.

## 3-வது சித்தவிப்பிரமசந்நிபாதசுரம்.

தேகம்பாரித்து நருக்கித்துவைத்தது போலிருத்தல் பூரணமான சுரம் பித்தனைப்போற்பார்க்குதல் நகைத்தல் பிதற்றல் புருவமுறுக்கிக் கொள்ளல் இரைப்பு மேல்சுவாசம் இடம்விட்டோடல் பேதி நாநாவிதமானகுணத்தோடு நலிதல் அற்பவாதம் பித்தம் அதிகரித்தல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது சாத்தியம்.

## 4-வது கண்டகுப்சசந்நிபாதசுரம்.

சிரசிலும் மார்பிலும்நோவு சோருதல் சுரம் காறியுமிழ்ந்தால் ரத்தம் வீழ்தல் வாந்தி இருமல் விக்கல் சரீரநோவு தாள்பிடிப்பு எரிச்சல் அதிவார்த்தை தலைசுற்றல் கழுத்து வளைதல் ஒருவேளை சந்தோஷம் பயம் என்னும் இச்குணங்களையுண்டாக்கும். இது சஷ்ட சாத்தியம்.

## 5-வது கர்ணிகசந்நிபாதசுரம்.

விடாத எரிச்சல் காது கேளாமை உடம்பெல்லாம் நோவுடன் அசைதல் கோட்டுவாய் தலைநோவு காதின்முன்பக்கத்தில் கட்டிகளெழும்புதல் அவ்விடத்தில் வீக்கம் சத்தங்கேளாமை பிரலாபம் நாவு வெடித்துக் கறுக்குதல் அடிக்கடி தண்ணீர்வேண்டித்தபித்தல்விக்கல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதுகஷ்டசாத்தியம்.

## 6-வது ஜிம்பக சந்நிபாதசுரம்.

கைகால் எரிச்சல் உடம்பெல்லாம் நோவு கண்கள் மூடிக்கொள்

ஸல் வாயில் நுரைநுரையாகவீழ்தல் இருந்திருந்து பெருமூச்சு உண்டாகுதல் அந்தமூச்சில் அனல்வீசல் கொஞ்சநேரம் ஊமைபோலிருக்குதல் தேகபாரிப்பு சுரம் விக்கல்நாக்குக்கறுத்தலுடன்வெடித்தல் தாகம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது சாத்தியம்.

## 7-வது ருத்தாசசந்நிபாதசுரம்.

இரைப்பு இருமல் உடம்பு சுற்றல் கழுத்து நரம்பு விகுத்தலுடன் வேதனைதாழ்வாய்க்கீல்கள்பிடித்தலோடுநோவு சர்வாங்கத்திலுங் குத்தலுடன் நடுக்கல் கழுத்திலும் நெற்றியிலும் வியர்வை பிதற்றல் தபித்தல் தயக்கம் கண்டபேருடன் முறையிடல் கிடைபொருந்தாமற் புரளல் உதடு உலர்தல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது சாத்தியாசாத்தியம்.

## 8-வது அந்தகசந்நிபாதசுரம்.

இருந்திருந்துதேகமறதி நிமிஷத்திற்கொருதரம் தலைநடுக்கமும் கனமும் சுழலலு முண்டாகுதல் இருமல் கைகாலசதி பொய்ப்பிதற்றல் பிரமை நாவறளல் சுரம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது அசாத்தியம்.

## 9-வது சீதாங்கசந்நிபாதசுரம்.

சரீரமெல்லாம் நருக்கித்துவைத்ததுபோலிருத்தல் அதிக எரிச்சல் வாய்நீரூறல் ஈனத்தொனி இளைப்பு வாந்தி இருமல் உள்ளோக்காளம் அசதி அழுதல் மூர்ச்சை தேகம்பதைத்தல் பிதற்றல் புலம்பல் பிரலாபவார்த்தை என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது அசாத்தியம்.

## 10-வது புக்னநேத்திரசந்நிபாதசுரம்.

அக்கினிபோற்சுரமதிகரித்தல் புத்திதெளிவின்மை இரைப்பு கண்வளையமிட்டுச்சிமிட்டாதிருத்தல் அன்றியும் பார்வைதோற்றாமை சோருதல் கூச்சல் சர்வாங்கசீதளம் பிரலாபம் சரீரங்கனத்துலுடன் பதைத்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது அசாத்தியம்.

## 11-வது ரக்திஷ்டீவி சந்நிபாதசுரம்.

வாயில் உதிரம்வீழ்தல் அதிகசுரம் எரிச்சல் சோருதல் சூலை வயிறுப்பிசம் மிகுசுவாசம் மறதி உதடுவெடித்துக் கறுத்தல் சரீரம் மஞ்சள்நிறமாகுதல் தயக்கம் நினைவழிந்துபுரண்டிக்கொள்ளல் தலை சுழற்றல் காதுமத்திபம் வாயுளறல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது அசாத்தியம்.

## 12 வது பிரலாபசந்நிபாதசுரம்.

அதிககாங்கை உடம்பெல்லாம் பச்சைப்புண்போல்நோதல் ஒருவேளைநருக்கித்துவைத்ததுபோலிருத்தல் கால்வீக்கம் பலவேதனை மனக்கெடுதி மிகுந்தவார்த்தை புலம்பல்இருமல் முகம்வாடல் ரோமச் சிலிர்ப்பு அடிக்கடி விக்கலோடுமூர்ச்சை அலறியோடுதல் தாபச்சுரம் வாதம் கபம் அதிகரித்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது அசாத்தியம்.

## 13-வது அபிநியாசசந்நிபாதசுரம்.

திரிதோஷமிகுதியினால் முகமானது மினுமினென்று எண்ணெய் தடவினதுபோலிருத்தல் உடம்பெல்லாம்நோவு புத்தி தெளிவின்மை இருமல் சுவாசம் அதிகவேதனை மிகுதுக்கம் தேகம்அழலல் வியர்வை நாவானது பலநிறமாக இருப்பதன்றியும் வறளல் சுரம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது கெடுதியைச்செய்யும்.

## தாகாதிசந்நிபாதசுரோற்பத்தி.

முன்புசொல்லிய சந்நிபாதசுரங்களும் அல்லாமல், தாகபூர்வக சந்நிபாதசுரம் சீதபூர்வகசந்நிபாதசுரம் என இரண்டு உண்டென்றும் சில நூல் சொல்லுகின்றன. அதன்விவரம்: பித்தமானது வாத சிலேஷ்மங்களைப்பார்க்கிலும் அதிகரித்து அவைகளுடன் கூடாமல் தனித்தேநிற்கும்; ஒருவேளை அப்படி இல்லாவிடில் சருமத்தைப் பற்றித் தன் குணங்களை எல்லாங்காட்டிக் காங்கையை உண்டாக்கும். அப்போது, வாதசிலேஷ்மங்கள் கருப்பத்தில் தனித்தேநிற்கும்; ஒருவேளை அப்படி இல்லாவிடில் சீதளத்தையுண்டாக்கும். ஆகையால், முதல்முதல் எரிச்சலுடன் அதிககாங்கையான சுரம்பிறந்து உடனே

சீதளம் உண்டாகும். இதுவே தாகபூர்வகசந்நிபாதசுரப்பிறப்பாம். இந்தப்பிரகாரமாகவே சருமத்தில் வாதசிலேஷ்மங்களும் கருப்பத்தில் பித்தமும்நிற்கும். அப்படி நின்றெழும்புங்காலத்தில், முதல் முதல் சீதளம் உண்டாகி, உடனே எரிச்சலுடன் அதிக காங்கையான சுரம் உண்டாகும். இதுவே சீதபூர்வகசந்நிபாதசுரப்பிறப்பாம்.

## 1-வது தாகபூர்வகசந்நிபாதசுரலக்ஷணம்.

தாகபூர்வக சந்நிபாதசுரத்தில் அசதியாகியசோம்பல் காறியுமிழ்தல் வாந்தி ஆயாசம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இந்தப்பிரகாரமே சீதபூர்வகசந்நிபாதத்திற்கும் அறியவேண்டியது. இது முதல்முதல் உண்டாகும்போது எரிச்சலைக்கொண்டுவருதலால் தாகபூர்வகசந்நிபாதசுரம் எனப்பேர்பெற்றது. தாகம் என்பது எரிச்சல் இதுஅசாத்தியம். அசாத்தியமானபோதிலும் இதற்குச்சிகிச்சா சாரம் என்னும் சாத்திரத்திற்சொல்லிய சிகிச்சையை முறைப்படி செய்தால் சாத்தியமானுலுமாகும்.

## 2-வது சீதபூர்வகசந்நிபாதசுரலக்ஷணம்.

சீதபூர்வகசந்நிபாதசுரத்தில் பித்தாதிக்கத்தினாலே கபங்கரைந்து நாசம் அடையும் இதனால், சிலேஷ்மகுணமாகிய சீதளஞ் சாந்தமாகும். அது சாந்தமாகிறகாலத்தில், புளியேப்பம் மூர்ச்சை மதம் தாகம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது ஆரம்பத்தில் சீதளத்தைக்கொண்டுவருவதால், சீதபூர்வகசந்நிபாதசுரம் எனப்பேர் பெற்றது. இது அசாத்தியம். இதற்குப் பூரணசந்திரோதயமாத்திரைகளும் உதவும்.

## சுகசந்நிபாதசுரம்.

மந்தப்பட்டிருக்கையில் அப்பியங்கனஞ்செய்து தயிருஞ்சாதமும் புசித்து சையோகம்பண்ணுவதால் பிறக்கும். இதனால் சர்வாங்கத்திலுமாவது கண்டஸ்தானத்திலாவது வியர்வை கண்கள்சிவத்தல் சுரம் அன்னத்திவேஷம் தோஷமதிகரித்தல் என்னுமிக்குணங்களுண்டாம். இது சையோகத்தால்வருதலால், சுகசந்நிபாதசுரம் எனப் பேர்பெற்றது.

இதற்கு லங்கநம் ஆதியான வைத்தியஞ் செய்யவேண்டும்.

## சப்ததோஷசுரபேதம்.

சுரம்பிறந்த ஒன்பதுநாள்வரைக்கும் தருணசுரமென்றுபேர். அந்தத்தருணசுரத்தில், பரிமளபோசனம் குளிர்ந்தசலம் புளிப்பு கசப்பு காரம் துவர்ப்பு நெய் நல்லெண்ணெய் வெல்லம் சயித்திய பண்டம் தாம்பூலம் புதுவஸ்திரம் சிவந்தவஸ்திரம் சுகந்தபுஷ்பம் சந்தனம் பச்சைக்கருப்பூரம் கஸ்தூரிமுதலிய பரிமளதிரவியங்கள், காற்றுவீடு பஞ்சணை சந்திரன் சீதளஉபசாரம் மாதர்களை விருப்புடன்பார்த்தல் அவர்களால் பரிசிக்கப்படுதல் சையோகம் புத்தகம் வாசித்தல் யானைகுதிரையேறுதல் அதிதூரநடை கோபம் அழுகை தேகம் அரிதல் என்பவைகள் அணுகில், வாதாதிகள் நாபியிற்பற்றி நாடியைக்குடிலப்படுத்தி முகம் கண் நாசி நா என்னும் இவைகளைச் சுருக்கி வெரித்தபார்வையை உண்டாக்க தோஷம் பிரபலப்படும். அது ஏழுவிதப்படும். அவையாவன: அபத்தியதோஷசுரம் சங்கமதோஷசுரம் விஷமதோஷசுரம் விஷமசீததோஷசுரம் ரக்தஜிம்மகதோஷசுரம் பீதஜிம்மகதோஷசுரம் கிருஷ்ணஜிம்மகதோஷசுரமென்பவைகளாம்.

### 1-வது அபத்தியதோஷசுரம்.

சோம்பல் மூர்ச்சை பிரமை தாகம் அதிகபிரலாபம் மார்புநோவு என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது சுத்தலங்கனம் கருக்குக் கஷாயம்முதலிய சிகிச்சைக்கு வசப்படும்.

### 2-வது சங்கமதோஷசுரம்.

சையோகத்தினால்பிறந்து சர்வாங்கநோவு நடுக்கல் மார்பெரிச்சல் பொய்பேசல் அடிக்கடி எழுந்திருத்தல் பிரமை உள்ளங்கை உள்ளங்கால் குளிர்ச்சி என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதற்குச் சுகசந்நிபாதசுரச் சிகிச்சைகளையும் உபயோகிக்கலாம்.

### 3-வது விஷமதோஷசுரம்.

சுரம் எரிச்சல் அதிதாகம் நாடிகுடிலத்தோடு தீவிரமாக நடக்குதல் வயிறெரிச்சல் வியர்வை அழலை என்னும் இக்குணங்களை யுண்

டாக்கும். இது சப்தானந்தபைரவம் மாந்தக்கருக்கு முதலியவற்றால் நீங்கும்.

## 4-வது விஷமசீததோஷசுரம்

ஒருதினத்திலேயே, இரண்டுதரம் மூன்றுதரம் அல்லது நாலு தரம் குளிரோடுசுரத்தை யுண்டாக்குவதன்றியும், தாகம் புறண்டல் தலைநோவு நாக்குத்தடித்து முட்போலிருத்தல். பிரலாபம் சித்தப் பிரமை புரளல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதற்குக் கோரோசனமாத்திரை முதலிய சிகிச்சைகள் நன்றாம்.

## 5-வது பீதஸ்லேஷ்மகதோஷசுரம்.

நாக்கு மஞ்சள்நிறமாகவெடித்து ஈரமில்லாமல் முட்போலிருத் தல் சுரம் பிரமை வியர்வை மூர்ச்சை தொண்டைக்கம்மல் வெருட்சி நடுக்கல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இதற்குச்சித்தாக்கி னிக் குமார மாத்திரை ஆதியான சிகிச்சைகளைச் செய்யவேண்டும்.

## 6-வது ரக்தஸ்லேஷ்மகதோஷசுரம்.

நாக்குசிவந்து முட்போன்று கொஞ்சம் நீண்டிருக்குதல் சுரம் தாகம் எரிச்சல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதற்கு உத்த மாக்கினிக் குமாரமாத்திரைகளும் உதவும்.

## 7-வதுகிருஷ்ணஸ்லேஷ்மகதோஷசுரம்.

நாக்குக்கறுத்து வறண்டு முட்போலிருத்தல் அடிக்கடி எழுந்தி ருத்தல் சித்தப்பிரமை வயிறுப்பிசம் தினவு வியர்வை தாகம்சோபம் அழலை துடிப்பு கைகால் அசதி சரீரங்கறுத்தல் என்னும் இக்குணங் களையுண்டாக்கும். இது திவ்வியாக்கினி குமாரமாத்திரையால் சாத் தியமாம்.

இந்தத்தோஷம் ஈறுகச்சொல்லிய சப்ததோஷங்களும், ஏழு நாள் அல்லது பதினைந்துநாள்சென்றால், சாத்தியப்படும்.

மதாந்தரம் முற்றியது.

## ஆகந்துகசுரம்.

அபிகாதசுரத்திற்கும், அபிஷங்கசுரத்திற்கும், சாபச்சுரத்திற்கும், அபிசாரசுரத்திற்கும் ஆகந்துகமெனப்பெயராம். ஆகந்துகம் என்பது அருந்துகின்ற அறுசுவை வருக்கங்களின் காரணமில்லாமல் வருவதாம்.

## 1-வது அபிகாதசுரம்.

குத்துக்காயம் முதலிய விரணங்களினாலும் அக்கினியிடத்திருந்து நடத்துந்தொழிலினாலும் அதிநடையினாலும் பயிரிடுதல் முதலிய உழைப்பினாலும் பிறக்கும். இதனால், முதல்முதல் உடம்பில் வாய்வானது நீக்கமற நிறைந்து அதிகரித்து ரத்தத்தை வேதனையுடன்கெடுத்து வாயுலரல் தேகநிறக்கெடுதி சர்வாங்கநோவு என்னுமிக்குணங்களையுண்டாக்கி மேலிடும்.

இது, அதிக உழைப்பினால் வருவதால், அபிகாதசுரமெனப் பேர்பெற்றது.

இதனைப் போசனோபசாரமுதலிய சாந்தச்சிகிச்சைகளால் நீக்கவும்.

## 2-வது சாபச்சுரம்.

அதிகோரமாயும் சந்நிபாதகுணங்களாயும் பொறுக்கக்கூடாமையாயும் இருக்கும். இதனால், மனதுதபித்தல் தேகளரிச்சல் தாகம் மூர்ச்சை உடம்பெங்குங்கொப்புளம் பிரமை அதிகசுரம் என்னும் இக்குணங்கள் உண்டாகி நாளுக்குநாள் அதிகரிக்கும். இது, பெரியோர்கள் சபித்தலினாலுண்டாதலால், சாபச்சுரமெனப் பேர்பெற்றது. இது யதீஸ்வரபூசை அன்னதானம்முதலிய நற்செய்கைகளினால் நிவிர்த்தியாம்.

## 3-வது அபிசாரச்சுரம்.

அதர்வணவேத மாரணமந்திரங்களைக்கொண்டு ஒருவன் பெயரைச்சொல்லி ஓமஞ்செய்தலினாற்பிறந்து, ஆச்சரியமானகொப்புளங்

கள் மனது தபித்தல் தாகம் என்னும் இக்குணங்களை யுண்டாக்குவ தன்றியும், சாபச்சுரக்குணங்களையும் உண்டாக்கும். இது ஓமாகுதி களால் பிறப்பதால் அபிசாரசுரம் எனப்பேர்பெற்றது. இதுவும் சாபச்சுரமும் கொடியது.

இது மணிமந்திர அவுஷதாதிகளால் நீங்கும்.

## 4-வது அபிஷங்கசுரம்.

பூதாவேசசுரம் அவுஷதகந்தசுரம் விஷசுரம் கோபச்சுரம் பயச் சுரம் துக்கசுரம் காமச்சுரம் ஆகிய இவ்வேழிற்கும் அபிஷங்கம் என்று பெயராம். அபிஷங்கம் என்பது சேர்க்கை.

## 1-வது பூதாவேசசுரம்.

காரணமின்றி காரணமின்றி நகைப்பு அழுதல் அதிகசுரம் குமர கண்டவலியைப்போலிழுத்தல் கண்ணையுருட்டிவிழித்தல் சரீரங்கறுக் குதல் பிரலாபம் அதிதிண்டி சகலவஸ்துக்களிலும்அபேக்ஷை பாடல் ஆடல் உரோமச்சிலிர்ப்பு நித்திரை என்னும் இக்குணங்களையுண்டாக் கும். அப்போது வாதமும் பித்தமும் சிலேஷ்மமும் அதிகரித்திருக் கும். அன்றியும், எரிச்சல் களிர் தலைநோவு கண்சிவத்தல் வாந்தி விக் கல் சுவாசம் பலவீனம் ஏப்பம் கொட்டாவி சிரமை மனோவேதனை தொடை முழங்கால்பாதம் வரைக்கும்வியர்வை ஒருவேளை சர்வாங்க சீதளம் ஈனத்தொனி பேதி என்னும் இக்குணங்களையும் உண்டாக்கு மென்பாருமுளர். இதனைப்பைசாசசுரமெனச்சொல்வர். இது புகை முதலிய சிகிச்சைகளினால் விடும்.

## 2-வது அவுஷதகந்தசுரம்.

ரசம் கந்தகம் பாஷாணம் சேராங்கொட்டை முதலியவைகளின் வேகத்தால் பிறந்து; மூர்ச்சை தலைநோவு தேகவீக்கம் தும்மல் அதிக சுரம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். அப்போது திரிதோஷங் களும் அதிகரித்திருக்கும். இதற்குவிஷப் பிரதிவிஷச்சிகிச்சைகள் பொருந்தும்.

## 3-வது விஷசுரம்.

மூர்ச்சை பேதி முகங்கறுத்தல் எரிச்சல் மார்புநோவு அதிக சுரம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்; அப்போது வாதமும் பித்தமும் அதிகரித்திருக்கும். இதற்கு மஹாவசந்தகுசுமாகரம் நன்றாம்.

## 4-வது கோபச்சுரம்.

தலைநோவு அதிகசுரம் உடம்புபதைத்தல் என்னும் இக்குணங் களையுண்டாக்கும். அப்போது பித்தமே அதிகரித்திருக்கும். இதற் குக்கோபந்தணியச்செய்வதும் அன்றி பித்தாரி அவுஷதங்களும் உதவும்.

## 5-வது பயச்சுரம்.

புலம்பல் நடுக்கல் சுரம் அடிக்கடிபயப்படல் என்னும் இக்குணங் களையுண்டாக்கும். அப்போது, வாதமாத்திரம் அதிகரித்திருக்கும். அன்றியும், அதிகவார்த்தை வியர்வை மிகு எரிச்சல் கண்கள் சிவத் தல் பலவீனம் சிரசிலும் கண்ணிலும்நோவு தூர்ப்பாஷை அசனத்தி லிச்சை நித்திரைபங்கம் தலைசுழலல் சுவாசம் சூலை தேகம் நருக் கித்துவைத்ததுபோலிருத்தல், ரோமச்சிலிர்ப்பு சயித்தியம் வாய்வி னால் மார்பிலும் இடுப்பிலும் தடிப்பு பற்கடித்தல் முதலிய குணங்க ளையும் உண்டாக்கும் என்பாருமுளர்.

## 6-வது துக்கசுரம்.

வாயில்வந்தபிரகாரம் பிதற்றல் அதிகசுரம் அழுதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். அப்போது வாதமாத்திரம் அதிகரித் திருக்கும்.

## 7-வது காமசுரம்.

வெட்கம் நித்திரை புத்தி தயிரியம் ஆகிய இவைகளைக்கெடுத்து மோகம் எரிச்சல் அருசி அதிகசுரம் என்னும் இக்குணங்களை யுண் டாக்கும். அப்போது வாதமாத்திரம் அதிகரித்திருக்கும்; அன்றி

யும், ஆண்குறி தொப்பிளின் கீழ்ஸ்தானம் தனங்களின் கீழ்ஸ்தானம் புருவம்நெற்றி ஆகிய இவ்விடங்களில் எரிச்சல் சையோகத்திலிச்சை நாட்டியஞ் செய்யநினைவு கெம்பீரம் சரீரபலம் அதிகதாகம் கண் சிவத்தல் அடிக்கடி அசனத்திலிச்சை புன்சிரிப்பு நித்திரைபங்கம் என்னுமிக்குணங்களையு முண்டாக்கு மென்பாருமுளர். இந்தக்காமச் சுரத்திற்கும் மேற்சொல்லிய பயச்சுரத்திற்கும் துக்கச்சுரத்திற்கும் வாதாரி அவுஷதங்களைக்கொண்டு வைத்தியஞ்செய்வதும் அன்றி இதுகள் உற்பத்திக்குக் காரணமானதுகளையும் சாந்தப்படுத்த வேண் டும். இந்த ஏழுவகைச்சுரங்களும் சாரீரசுரம் மானஸிகசுரம் என் னும் இருவகைக்குள் அடங்கும்.

## சந்ததாதிசுரபேதம்.

சந்ததாதிசுரமானது திரிதோஷ பலாபலங்களினாலும் ஆறு ருதுகாலபேத பலாபலங்களினாலும் பிறக்கும். இது சந்ததசுரம் சததசுரம் அந்நியேத்துகசுரம் துவியாகிகசுரம் திரியாகிகசுரம் சாதுர் த்திகசுரம் என ஆறுவிதப்படும்.

## 1-வது சந்ததசுரலக்ஷணம்.

தேகத்தில் அன்னரசத்தைத் தாங்கிக்கொண்டிருக்கும் நரம்பு கள் அந்த ரசசேஷசமீபத்தில் வாயைத்திறந்திருப்பதால் முன்பு பரி சுத்தப்படாமலொளித்திருக்கும் சுரமானது சர்வாங்கத்திலும் வியா பித்து உள்ளவேகாயும் இது உள்ளில்மாறாது காய்வதால் சந்ததசுர மெனப் பேர்பெற்றது. அன்றியும் பகலும் இரவும் காய்வது சந்தத மெனச் சிலர் சொல்வர்.

## 2-வது சததசுரலக்ஷணம்.

முற்கூறிய சந்ததசுரந்தானே அபத்தியத்தினால் விபரீதசுரமாம் அந்த விபரீதசுர ஆரம்பத்தில் விஷமகுணம்பிறந்தால் விஷமசுரமாம் அதற்குத்தகுந்த வைத்தியம் பண்ணாவிடில், அது ரத்ததாதுவைப் பற்றிச் சததசுரமாகும். இது, அல்லும்பகலுமாறாமல் மேலெங்குங் காய்வதால் சததசுரமெனப் பேர்பெற்றது; அன்றியும் பகலிலொரு தரமும் இரவிலொருதரமும் வருவது சததசுரமென்றும் இதனால்

அதிக கூச்சலுடன், துர்ப்பாஷை தலைதிருப்பல் அதிதிண்டி என்னு மிக்குணங்களுண்டென்றும் சிலர் சொல்வர்.

## 3-வது அந்நியேத்துகசுரலக்ஷணம்.

முற்கூறிய சததசுரத்தில் அபத்தியம் உண்டாகில் அது மறுநாளும் அப்படியேகாயும். அப்போது வாதம் அதிகரித்தலினால் அந்தச்சுரமானது மாமிசதாதுவைப்பற்றிக்கொண்டு இரண்டுநாள் விடாமல் காய்ந்து இரண்டு நாள் விட்டிருந்து மறுபடியும் அப்படியே காயும். இது மறுநாளில் வருவதால் *அந்நியேத்துகசுரமென்று பேர்பெறும். அன்றியும் ஒருதினத்திற்கு ஒருதரம் வருவது அந்நியேத்துகசுரமென்றும், இதனால் மிகு சீதளம் தேகளரிச்சல் ஏப்பம் புருவவேதனை கைகால் எரிச்சல் அநித்திரை துர்ப்பலம் நுரைத்தமலம் ஒருவேளை உள்ளங்கால் உள்ளங்கைகுளிர்ச்சி என்னும் இக்குணங்களுண்டென்றும் சிலர் சொல்வர்.

## 4-வது துவியாகிகசுரலக்ஷணம்.

முற்கூறிய அந்நியேத்துகசுரலக்ஷணங்களுடன் இரண்டுநாளில் வருவதால் துவியாகிகசுரமெனப் பேர்பெறும்.

## 5-வது திரியாகிகசுரலக்ஷணம்.

முற்கூறிய அந்நியேத்துகசுரத்தில் அபத்தியம் உண்டாகில் வாதம் அதிகரித்துச்சுரத்தோடுங்கூடி, மேதோதாதுவைப்பற்றும். அப்படிப்பற்றியவாதத்தில் பித்தமுங்கூடினால் அந்தச்சுரம் சிரசைப் பற்றும். அத்தப்பித்தத்தில் சிலேஷ்மமுங்கூடினால் அந்தச்சுரம் திரிகஸ்தானத்தைப்பற்றும் முன்வாதத்தில் சிலேஷ்மமுங்கூடினால், அந்தச்சுரம் பின்னிடுப்பைப் பற்றும். இப்படிப்பற்றியசுரமானது, வாதாதிதொந்தங்களினால் முன்சொன்ன ஸ்தானங்களைவிட்டுத் திரும்பிவருவதற்கு ஒருநாளெல்லாஞ் செல்லும்; ஆகையால், சுரம் காய்ந்த நாளுக்கு மறுநாளில்லாமல் மூன்றாம்நாளில்வந்து வந்து போராடும். இது மூன்றுநாளில் வருவதால் திரியாகிகசுரமெனப்பேர்பெற்றது. அன்றியும், இதனால் அதிகசீதளம் முகமும் தேகமுமதிரல் வருத்தம் சரீர

* அந்நியேத்துகம் என்பது மறுநாள்,

சுட்கம் கண்ணில் நீர்பாய்தல் அக்கினிமந்தம் அரோசகம் கீல்கள்மரத்தல் அசிரணம் புழுக்கைபோல்மலம்வீழ்தல் அன்னத்திவேஷம் என்னும் இக்குணங்களுண்டாகு மென்பாருமுளர்.

அகிகம் என்பதுநாள்.

## 6-வது சாதுர்த்திகசுரலக்ஷணம்.

முற்கூறிய திரியாகிகசுரத்தில் அபத்தியம் உண்டாகில், மேதோதாதுவைப்பற்றிநின்ற வாதமானது மச்சாதாதுவிற்கு இடமான அஸ்தி தாதுவைப்பற்றும்; அப்படிப் பற்றிக்கொண்டசுரம் முன்போலவே சிரசைப்பற்றிய வாதத்தினின்றும் ஊர்த்துவாங்கத்தைக் கடந்து, அதோங்கத்தில் கணுக்கால்மட்டும் சிலேஷ்மத்தால் வியாபித்து மூன்றுநாள் விட்டிருந்து நாலாநாள் வந்துவந்து போராடும். இது நாலாநாளில்வருவதால், சாதுர்த்திகசுரமெனப்பேர்பெற்றது. அன்றியும், இதனால் முதலில் அதிககாங்கை சீதளம் அதிக்சோஷை சரீரசுட்கம் தலைக்குத்தல் ஏப்பம் உள்ளங்கால் உள்ளங்கைகுளிர்ச்சி அக்கினிமந்தம் அரோசகம் அன்னத்திவேஷம் அசிரணம் என்னும் இக்குணங்க ளுண்டாகுமென்பாருமுளர். இது கஷ்டசாத்தியம். இப்படியிருக்க முன்பு மேதோதாதுவைப்பற்றிநின்ற வாயு மச்சாதாதுவைப்பற்றியபோதே சாதுர்த்திகசுரம் ஆகுமென்பாருமுளர்.

## 7-வது சாதுர்த்திகவிபரீதசுரலக்ஷணம்.

முற்கூறிய அஸ்திதாதுவிலும் மச்சாதாதுவிலும் அந்தவாயு பிரவேசிக்க உண்டானசுரம் மூன்றுநாளாவது இரண்டுநாளாவது காயும்; அல்லது ஒருநாள் காய்ந்து நீங்கிவிட்டாலும் விடும். இது சாதுர்த்திகவிபரீத சுரமென்றும், பஞ்சாகிகசுரமென்றும் சொல்லப்படும். அன்றியும் எந்தச்சுரமாவது நாலாநாள் பகலிலில்லாதிருந்து இரவில் காணுமாகில், இதுவே சாதுர்த்திகசுரமென்றும், பஞ்சாகிகசுரமென்றும் இதனால் வாதசிலேஷ்மத்துடன் மிகுகுளிர் ஐந்தாநாள் மாறிவருதல் ஆயாசம் கபாதிக்கம் அநித்திரை சரீரசுட்கம் ஈனத்தொனி நடுக்கல் கண்சிவத்தல் வேதனை குத்தல் உள்ளெரிச்சல் தலைதிருப்பல் அக்கினிமந்தம் அன்னத்திவேஷம் அந்தர்த்தாகம் அசீரணம் வீக்கம் சூலை என்னும் இக்குணங்களும் உண்டாகுமென்றுஞ் சிலர் சொல்வர். இதனை சீதசுரம் நளிர்ச்சுரம் குளிர்ச்சுரம் முறைக்

காய்ச்சல் எனவும் வழங்குகிருர்கள். வாதசுரம் ஆதியாகச்சந்ததாதி சுரம் ஈருகச்சொல்லிய (23) சுரங்களும் முற்றுப்பெற்றன வென் றறிக.

இந்தச்சந்ததாதியென்னும் ஆறுவகைச்சுரங்களுக்கும் நிம்பசூர ணேதகமும் பர்ப்பாடகக்குவாதமும் தாளகேஸ்வரமாத்திரையும் ஆரநாளத்தயிலமுதலிய சிகிச்சைகளும் உதவும். ஆனல் தேகத்தை நிதானிக்கவும்.

## சாரீராதிசுரபேதம்.

சாரீரசுரம் மானஸிகசுரம் சௌமியசுரம் தீக்ஷணசுரம் உட்சுரம் வெளிச்சுரம் பிராகிருதசுரம் வைகிருதசுரம் சாத்தியசுரம் அசாத்திய சுரம் சாமச்சுரம் நிராமச்சுரம் எனப்பனிரண்டு விதப்படும்.

## 1-வது சாரீரசுரம்.

ஆரம்பத்தில் சரீரத்தில் தபித்தலை உண்டாக்கிப் பிறகு சுரத்தி னது குணத்தை யெல்லாம் உண்டாக்கும். இது ஆதியில் சரீரத் தைப்பற்றி வருங்காரணத்தால் சாரீரசுரமெனப் பேர்பெற்றது.

## 2-வது மானஸிகசுரம்.

முதலில் மனதைத்தபிக்கப்பண்ணிப்பிறகு சுரக்குணங்களை உண் டாக்கும். இது மனதைப்பற்றியதால் மானஸிகசுரமெனப் பேர் பெற்றது.

## 3-வது சௌமியசுரம்.

முதல்முதல் பித்தமும் சிலேஷ்மமும் தொந்தித்துப் பின்பு வாத சிலேஷ்மத்தோடு கூடுவதால் பிறக்கும். இதனல் சீதளமீறிச் சரீர மெல்லாம் எரிச்சல் எழும்பிப் பிறகு சுரக்குணமெல்லாம் உண்டா கும். இது முதலில் சாந்தமாகப் பிறப்பதால் சௌமியசுரமெனப் பேர்பெற்றது. அன்றியும் வியர்வை பலவீனம் வாந்தி விக்கல் வீக் கம் இருமல் இரைப்பு கபாதிக்கம் தலைசுழலல் மார்புநோவு நாடியுள் ளடங்கல் கண்சிவத்தல் நாக்கு சிவப்போடு முள்ளைப்போலிருத்தல்

சித்திரைப்பங்கம் என்னும் இக்குணங்களு முண்டாகு மென்பாரு முளர்.

## 4-வது தீக்ஷணசுரம்.

பித்தமானது வாதகபங்களுடன் சேராமல் அவ்விரண்டைப்பார்க்கிலும் அதிகரித்துச்சருமத்தைப்பற்றி அதிதீக்ஷணமான வெப்பத்தையுண்டாக்கக் கருப்பத்திலிருந்த வாதகபங்கள் நடுக்கலையும் சீதளத்தையும் உண்டாக்கப்பிறந்து கோரமான சுரரூபங்களையெல்லாம் உண்டாக்கும். இது முதலில் அதிக உக்கிரமாகவருதலால் தீக்ஷணசுரம் எனப் பேர்பெற்றது.

## 5-வது உட்சுரம்.

சிலேஷ்மமும் பித்தமும் தொந்தித்து நிற்கையில் வாதமானது வயிற்றிற்குள் அடங்குவதால் பிறக்கும். இதனால் வயிற்றில் அதிக சங்கடம் மலபந்தமுதலிய விகாரமுண்டாகிப் பிறகு சுரக்குணமெல்லாம் உண்டாகும்.

## 6-வது வெளிச்சுரம்.

சப்ததாதுக்களைப் பற்றாமல் சருமத்தின்மேலேயே குபீலென்று கண்டு பின்னுஞ் சிலநேரத்தில் தோஷமொன்றும் இல்லாமலே போய்விடும். இது, சருமத்தைப் பற்றியதால், வெளிச்சுரம் எனப் பேர் பெற்றது.

## 7-வது பிராகிருதசுரலக்ஷணம்.

வருஷருதுகாலமாகிய ஆவணி புரட்டாசி மாதத்தில், வாதம் அதிகரித்து வாதசுரம்போலவே காணும். சரருதுகாலமாகிய ஐப்பசி கார்த்திகை மாதத்தில், பித்தம் அதிகரித்துப் பித்தசுரம்போலவே காணும். வசந்தருதுகாலமாகிய சித்திரை வைகாசி மாதத்தில், கபம் அதிகரித்துச் சிலேஷ்மசுரம்போலவே காணும். இப்படி கண்டாலும் இவைகளைப் பிராகிருதசுரமென்றே நிதானிக்கவேண்டும். இம்மூன்றில், வாதசுரம் கஷ்டத்தின் மேல்சாத்தியம்.

## 8-வது வைகிருதசுரலக்ஷணம்.

சிசிரருதுகாலமாகிய மாசி பங்குனிமாதத்தில், வாதம் அதிகரித்து வாதசுரம்போலவே காணும். கிரீஷ்மருதுகாலமாகிய ஆனி ஆடி மாதத்தில் பித்தம் அதிகரித்துப் பித்தசுரம்போலவே காணும். ஏமந்தருதுகாலமாகிய மார்கழி தைமாதத்தில், சிலேஷ்மம் அதிகரித்துச் சிலேஷ்மசுரம்போலவே காணும். இப்படி கண்டாலும் இவைகளை வைகிருதசுரமென்றே நிதானிக்கவேண்டும். இந்தமூன்று சுரமும் மிகவுங்கஷ்டசாத்தியம்.

## 9-வது சாத்தியசுரலக்ஷணம்.

வருஷருதுகாலத்தில், வாதம் அதிகரித்து, சரருதுகாலத்தில் அதிகரித்த பித்தத்தோடும், கிரீஷ்மருதுகாலத்தில் அடங்கிய சிலேஷ்மத்தோடும் கூடிச் சுரத்தையுண்டாக்கும். இப்படி வாதத்தாற் பிறந்த பிராகிருத சுரத்திற்குப் பித்தசிலேஷ்மங்கள் உபபலமாயிருக்கும். சரருதுகாலத்தில் அதிகரித்த பித்தமானது சுரத்தைபுண்டாக்கும். அந்தப் பித்தத்தாற்பிறந்த பிராகிருதசுரத்திற்கு வாதசிலேஷ்மங்கள் உபபலமாயிருக்கும். அந்தப்பிராகிருத வாதபித்தசுரங்களுடைய சுபாவகுணத்தினாலும் ருதுகாலபலங்களினாலும் அந்தச்சுரரோகிக்கு லங்கனத்தால் பயமில்லை யென்றறிக. வசந்தகாலத்தில் அதிகரித்த சிலேஷ்மம் சுரத்தையுண்டாக்கும். அந்தச்சிலேஷ்மத்தாற் பிறந்த பிராகிருதசுரத்திற்குக் கிரீஷ்மருதுகாலத்தில் க்ஷீணமான வாதமும் அதின் சமீபத்தில் அடங்கிய பித்தமும் உபபலமாயிருக்கும். இப்படியே வைகிருதசுரத்திற்கும் அறியவேண்டியது. ஆயினும் ருதுபேதங்களின் உபபலத்தினாலும் வாதபித்தசிலேஷ்மங்கள் அதிகரித்து அவைகளின் சுரங்களைப்போலவே பலத்திருந்தாலும் அவைகள் பிறக்குங் குணங்களும் மிருதாகமும் மகாநித்திரையும் சந்நிபாதங்களின் குணங்களும் இல்லாதிருத்தல் சாத்தியம்.

## 10-வது அசாத்தியசுரலக்ஷணம்.

சப்ததாதுவிலும் பிரவேசித்து நெடுநாளாகியும் நீங்காமல் பிரலாபம் பிரமை சுவாசம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கியசுரமும், கொஞ்சம் வீக்கம் இளைத்தல் மந்தாக்கினி வாய்குளரல் மார்பு

நோவு கண்சிவத்தல் இவைகளையுண்டாக்கியசுரமும், காலை மாலையி லும் சுடுகையுடன் பொடியிருமலை உண்டாக்கியசுரமும், தேகபலத் தையும் மாமிசத்தையும் குறைத்துக் கோழை விழும்படி இருமலை யுண்டாக்கியசுரமும் அசாத்தியம்.

## 11-வது சாமச்சுரம்.

சுரங்களுக்குக் காணவேண்டிய இரைப்பு மூர்ச்சை பிரமை ஓக் காளம் தாகம் பேதி கொட்டாவி விக்கல் சரீரவேதனை மலபந்தம் ஆ கிய இப்பத்து ரூபங்களையும் அதிகமாகப்பிறப்பித்து, பின்னும் இளை ப்பின்மை அடிக்கடி நீரிறங்கல் மலபந்தம் அல்லது அக்கினிமந்தம் அசீரணபேதி என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும் அதிகசீதம்வீழ்தல் வயிற்றுநோவு துர்ப்பலம் நடுக்கல் தாகம் இளை ப்பு தலைதிருப்பல் கைகால்குளிர்ச்சி இருமல் உப்பிசம் கபாதிக்கம் நித்திரைப்பங்கம் கண்களில் சலம்வடிதல் என்னும் இக்குணங்களையு முண்டாக்கு மென்பாருமுளர். இது ஆமத்துடன் கூடுவதால் சாமச் சுரம் எனப் பேர்பெற்றது.

## 12-வது நிராமச்சுரம்

அதிகாங்கை அடிக்கடி தாகம் பிரலாபம் பெருமூச்சு பிரமை மிகுபேதி மனோவியாகுலம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது ஆமாசயக்கெடுதியால் அருந்தும் அசனம் சீரணியாமல் காணு வதால் நிராமச்சுரம் எனப் பேர்பெற்றது. இது ஏழுலங்கனம்போட் டால் முன்பு சொன்ன துர்க்குணங்கள் மாறிச் சீரணசக்தியுண்டாகிச் சாத்தியப்படும். அன்றியும் சுவாசம் இருமல் வாதகபங்கூடியசுரம் துர்ப்பலம் காந்தியீனம் சிரோபாரம் தேகஞ்சுருங்கல் கண்டத்திலும் நெற்றியிலும் வியர்வை கண்சிவத்தல் நாவறளல் என்னுமிக்குணங்க ளையும் உண்டாக்குமென்பாருமுளர். இது நித்தியமும் தயிர் அதிக பானம் விஷத்தையொத்த வஸ்துக்கள் தாவரவிஷம் பாஷாணம் அபினி சருப்பூரம் நாபி என்னும் இவைகளைப்புசித்தல் அகாலஅப்பி யங்கனம் சீதளஸ்நானம் போசனவிகற்பம் சதாசந்தனபுஷ்பங்களைத் தரித்தல் நிதம் முக்காதம் நாற்காத நடக்குதல் கல்லடிபடுதல் பகற் காலம் மாலைக்காலம் விடியற்காலங்களில் புணர்ச்சி நித்திய சையோ கம் போசனந்தத்தில் நித்திரை என்னும் இச்செய்கைகளினால் பிறக் கும்.

இந்தச்சாரீராதி பனிரண்டு சுரங்களுக்கும் ஏலக்சாய்த்தோல் கஷாயமும் பலாடமர்குத் தயிலமுதலிய சிகிச்சைகளும் உதவும்.

## முச்சியமானசுரம்.

நெட்டுயிர்ப்பு வியர்வை பிதற்றல் வாந்தி புரளல் நடுக்கல் பெருங்கூச்சல் தேகம் சில்லிட்டு நிறமாறுதல் சுரவேகத்தினுல் வருத்தம் ஞாபகமறதி கோபப்பார்வை, ஆசனத்திலிரைச்சல் விரைவில் சலஞ் சலமாகப்பேதி என்னு மிக்குணங்களை யுண்டாக்கும். இது, வாதாதி தோஷமானது சப்ததாதுக்களையும் கலங்கப்பண்ண உண்டாகியசுரம் விடுகிற தருணத்தில் மேற் குணங்களெல்லாம் பிறப்பதால், முச்சிய மானசுரம் எனப் பேர்பெற்றது. முச்சியமானம் என்பது விட்டு வருதலாம்.

## விஷமசுரம்.

ரோகாதிகளின்விஷமத்தினுல் சுரமானது நெடுநாளாகி உள்ளுக்குள்ளே விஷமித்தால், மும்மூன்று நாட்களுக் கொவ்வொரு தாதுக்களைப்பற்றி, ரசதாதுகதசுரம் ரத்ததாதுகதசுரம் மாமிசதாதுகதசுரம் மேதோதாதுகதசுரம் அஸ்திதாதுகதசுரம் மச்சாதாதுகதசுரம் சுக்கிலதாதுகதசுரம் என ஏழுபிரிவாகிப் பலத்துக்கொண்டு, வனத்திற் பெருந்தீவிழுந்து தகிப்பதுபோல் ரோகியைத்தகிக்கும். மேற்கூறிய சுரமானது, ரசதாதுவைப்பற்றி ஏழுநாளைக்குமேல் ரத்ததாதுவிலும் இருபத்தொருநாளைக்குமேல் மாமிசதாதுவிலும், இரண்டுமாதத்திற்குமேல் மேதோதாதுவிலும், ஐந்துமாதத்திற்குமேல் அஸ்திதாதுவிலும், இரண்டுவருஷத்திற்குமேல் சுக்கிலதாதுவிலும் வியாபிக்குமென்று சிலநூலிற் சொல்லப்படுகின்றன.

### 1-வது ரசதாதுகதசுரம்.

வாயிற்சலமூறல் அதயிரியம் உடம்பெல்லாம் நோவுடன் கனத்தல் பெருங்கொட்டாவி அரோசகம் வாந்தி முகவிகாரம் பலவீனம் ரோமச்சிலிர்ப்பு என்னும் இக்குணங்களையுண்டாக்கும். அன்றியும், அதிக எரிச்சல் மிகுதாகம் நித்திரைப்பங்கம் பிரமை இரைப்பு தலைவலி சுவாசம் கபாதிக்கம் கண்டத்தில் வியர்வையுடன் சீதளம், நாடி

வேகமாக நடக்குதல் ஈனத்தொனி நாவுவரளலுடன் முட்போலிருத்தல் என்னும் இக்குணங்களையு முண்டாக்கு மென்பாருமுளர்.

## 2-வது ரத்ததாதுகதசுரம்.

உமிழ்நீரில் ரத்தம்வீழ்தல் தாகம் உடம்பெங்குஞ் சிவந்ததடிப்பு எரிச்சல் தேகஞ்சிவத்தல் பிரமை மதம் பிரலாபம் இரண்டுநெரியும் இடித்தல் கீல்களெல்லாம் நோவுதல் வியர்வை சரீரமெல்லாம் நோவுடன் கன்றுதல் மூர்ச்சை நாக்கு வழுவழுப்புடன் மஞ்சள்நிறமாயிருத்தல் நெஞ்சிற்கபாதிக்கம் நித்திரை மலபந்தம் என்னுமிக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும் சீதளம் சோருதல் தலைபுரட்டல் தூர்ப்பலம் அவயவங்கள் சுருங்கல் நேத்திரங்களிற் சலம்வடிதல் மார்பெரிச்சல் தேகம் நருக்கித் துவைத்ததுபோ லிருத்தல் உள்ளங்கை உள்ளங்கால் எரிச்சல் பேதியுடன் சீதக்கழிச்சல் உடம்பு கிறுகிறு வென்று சுழலல் சிரோபாரம் ஆடல் என்னும் இக்குணங்களையுமுண்டாக்குமென்பாருமுளர்.

## 3-வது மாமிசதாதுகதசுரம்.

தாகம் இளைப்பு உள்ளெரிச்சல் பிரமை கண்ணில்இருள்கம்மலுடன் நீர்க்கம்மல், வாய்நாற்றம் அசதியால் கைகால்களைத் தூக்கிப் போடுதல் சரீரத்தில் எதுவோ பூசினதுபோல் வரவரப்பாகவிருப்பதுமன்றிஉலரல் பதைத்தல் நோதல் மினுமினுப்பு வயிறுப்பிசத்துடன் நோவு சுவாசம் வியர்வை உதடுஉலரல் ஆலாபித்தல் புளகித்தல் ரோமச்சிலிர்ப்பு மனந்தடுமாறல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும் சீதளம் வீக்கம் தூர்ப்பலம் ஈனத்தொனி ஏப்பம் வாந்தி கொட்டாவி விக்கல் வாதாதிக்கம் நாவுகசத்தல் என்னும் இக்குணங்களையு முண்டாக்கு மென்பாருமுளர்.

## 4-வது மேதோதாதுகதசுரம்.

மாமிசதாதுகதசுர குணத்தையெல்லா முண்டாக்கும். அன்றியும், பரிமளத்திலசங்கிதம் சிரசில்மிகுகுத்தல் தலைபுரட்டல் நடுக்கல் கண்ணேவுடன் சலம்வடிதல் அக்கினிமந்தம் சலம்சாப்பிட்டால் சீரணமாகாமை அன்னத்திவேஷம் என்னும் இக்குணங்களையு முண்டாக்குமென்பாருமுளர்.

## 5-வது அஸ்திதாதுகதசுரம்.

ரத்தநரம்பு சன்னநரம்பு எலும்பு கீல் இவைகளில் நோவு விக்கல் கள்ளச்சுரம் சரீரம்வெளுத்துப் பஞ்சைப்போல் மெலிவதுமன்றி எரிச்சல் ஒருவேளை சீதளம் அடிவயிறுநோவு வேகமானபேதி என்னும் இக்குணங்களையுண்டாக்கும். அன்றியும், அவயவங்கள் சுருங்கல் துர்ப்பலம் சர்வாங்க வீக்கம் காந்தியீனம் எழுந்திருக்கப் பிரயாசை தலைதிருப்பலுடன் நோவு கண்களில் மஞ்சள்வன்னம் கைகால்நகங்களில் ரத்தம்வற்றியுப்பல் அக்கினிமந்தம் அன்னத்திவேஷம் அசீரணம் அரோசகம் ஏப்பம் வாந்தி சுவாசம் என்னுமிக்குணங்களையு முண்டாக்குமென்பாருமுளர்.

## 6-வது மச்சாதாதுகதசுரம்.

தோஷாதிக்கம் மேல்மூச்சு கீழ்மூச்சு கண்டத்தில் குறுகுறுவென்னுஞ்சத்தம் உள்ளில்எரிச்சல் வெளியிற்குளிர்ச்சி விக்கல் இருமல் பிரமை தேகஞ்சுட்கித்தலுடன்நோவு பிராணவாயுவும் அபானவாயுவும் ஸ்தம்பித்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும் துர்ப்பலம் தொடையின்கீழும் முழந்தாளின்கீழும் வேதனை தலை முகம் கண் இவைக்களில் நடுக்கல் காந்தியீனம் ஏப்பம் கசப்பான் வாந்தி அதிசாரம் ஈனத்தொனி மூர்ச்சை வயிறுப்பிசம் அக்கினிமந்தம் அன்னத்திவேஷம் அசீரணம் கொட்டாவி மறதி என்னு மிக்குணங்களையு முண்டாக்கு மென்பாருமுளர்.

## 7-வது சுக்கிலதாதுகதசுரம்.

கண்களிலிருள் கம்மல் *மர்மஸ்தானமாகிய புருவம் உச்சி கண்டம் மார்பு மார்புக்குங்கீழ் உந்தி உதடு பீசம் முழங்கால் கணுக்கால் இடுப்பு காலின்பெருவிரல் சுட்டுவிரல் தோல் இப்பதினன்கு ஸ்தானங்களிலும் நோதல் ஆண்குறிசுருங்கல் இந்திரியசீரணம் அதிகநித்திரை பிரலாபம் ஞாபகமறதி என்னும் இக்குணங்களையுண்டாக்கும். அன்றியும் அவயவங்கள்சுட்கித்தல் ஈனத்தொனி தலை

* மூன்று மூன்று முடிச்சுகளுள்ள நரம்புஸ்தானங்களை மர்மஸ்தானங்கள் என்று கூறினும் அமையும்.

திருப்பல் பல்நோவு ஏப்பம் விக்கல் அசீரணம் அரோசகம் பேதி இருமல் சுவாசம் பிரமை சர்வாங்கவெளிறலுடன் வீக்கம் தடித்தல் வாந்தி நடுக்கல் நித்திரைப்பங்கம் சோஷை அன்னத்திவேஷம் அக்கினிமந்தம் வாய்தித்திப்பு முகத்தில்வியர்வை கால்கை குளிர்ச்சி என்னுமிக்குணங்களையு முண்டாக்குமென்பாருமுளர். மேற்சொல்லி வந்த சப்ததாதுக்குள் ரசம் ரத்தம் மாமிசம் மேதை அஸ்திஎன்னும் இவைகளைப்பற்றிய சுரமானது ஒன்றுக்கொன்று கஷ்டசாத்தியமாக உயரும். ஒருவேளை கஷ்டசாத்தியத்திலும் கஷ்டசாத்தியமாகிறது முண்டு. இதல்லாமல் மச்சையையும் சுக்கிலத்தையும் பற்றிய சுரமானது தப்பாமற்கொல்லும்.

இவைநிற்க சிந்தாமணி என்னும்சாஸ்திரத்தில் சருமதாதுகத சுரம் ஒன்று அதிகமாகச்சொல்லுகின்றது. அதனை இதன் அடியிற் காண்க.

## சருமதாதுகதசுரம்.

சரீரத்தின்மேல் காய்தல் நாடிகுடிலப்பட்டு மந்தமாகநடத்தல் தலைநோவு சலத்தில் விருப்புடன்தாகம் தேகம்வெளிறல் எரிச்சல் பிரமையாகப்பேசல் வாய்நீரூறல் மயக்கம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது தோலைப்பற்றிவருவதால் சருமதாதுகதசுரமெனப் பேர்பெற்றது.

மேற்சொல்லிவந்த ரசதாதுமுதல் ஏழுதாதுவையும்பற்றிச் சரீரத்தை மிகவும் துர்ப்பலமாக்கிய சுரங்களுக்கெல்லாம் பலவித சிகிச்சைகள் இருந்தபோதிலும் அசுவகந்தபலாலாக்ஷாதிதைலமுதலிய அரக்குச்சேர்ந்த தைலச்சிகிச்சைகள் முக்கியமாம்.

## அசாத்தியசுரலக்ஷணம்.

மேற்கூறிய வாதசுரம் ஆதியானசுரங்களையுடைய ரோகிகட்கு தேகநடுக்கலுடன் நோவு மேல்மூச்சு மூர்ச்சை சற்றுநேரத்திற்கொருக்கால் இளைப்பு மார்புநோவு கண்ணில் நோவுடன்குத்தல் முகம் குங்குமம்போற்சிவத்தல் உசுவாசநிசுவாசம் கழுத்துகுறுகுதல் அல்லது நீளுதல் இரவில் எரிச்சல் பகலில்குளிர்ச்சி நாவுகறுத்தல் அல்

லநுசிவத்தல் ஆசனம் வெளிப்படல் ஈனத்தொனி சிலேஷ்மநாடி அதிக வேகமாக நடக்குதல் என்னும் இக்குணங்களிருந்தாலும் சுவாசஞ்சில்விடல் வாயினால் குபீரென்றுவருஞ் சுவாசமாத்திரம் சுடுதல் மார்பு உந்தி மூக்கு உள்ளங்கை உள்ளங்கால் ஆகிய இவ்வைந்து இடங்களில் மிகுகுளிர்ச்சி சிரசுமாத்திரம் அக்கினிபோற் சுடுதல் என்னும் இக்குணங்களிருந்தாலும் வாதநாடி பித்தநாடியிற் சேர்ந்தும் பித்தநாடி சிலேஷ்மநாடியிற் சேர்ந்தும் சிலேஷ்மநாடி கண்டஸ்தானத்திற் சேர்ந்தும் குடிலமாகநடந்தாலும் தேகமுழுதுங் குளிர்ச்சி மேல்சுவாசம் இரண்டுதொடைக்கவட்டியிலும் வீக்கம் அசவுக்கியம் என்னும் இக்குணங்களிருந்தாலும்; விரோதமாகிய அபத்தியவஸ்துக்களில் அடிக்கடி மிகுந்தவிச்சையிருந்தாலும் ராத்திரிகாலத்தில் சரீரமுழுதுமெரிச்சலும் பகற்காலத்திற்குளிர்ச்சியும் கண்டத்தில் சிலேஷ்மநிறைவு முண்டாயிருந்தாலும்; மார்புநோவு நாசி கை கால் ஆகிய இம்மூன்றிடங்களில் குளிர்ச்சி தலைநோவு என்னும் இக்குணங்களிருந்தாலும் சர்வாங்கநோவும் நடைதத்தளித்தலும் தேகநிறக்குறைவும் வாசனாபங்கமு முண்டாயிருந்தாலும்; தன்முகத்தைத் தன்கையினாலடிக்கடி தடவிப்பார்த்தல் முழங்காலிரண்டையுஞ் சேர்த்துச் சேர்த்துத்தட்டுதல் பாதமிரண்டையுந் தூக்கித் தூக்கிப் பூமியிலடிக்கடியடிக்குதல் என்னும் இக்குணங்களிருந்தாலும் சுரமேலிடுதல் ரோமங்களெல்லாமுறைத்தல் சிறுநீர்குழம்பாயிறங்கல் அடிக்கடி அதிக நகைப்பு இருந்திருந்து கூக்குரல்செய்தல் தன்படுக்கையைக் காலினாலடிக்கடிதட்டுதல் அபத்தியவஸ்துக்களை கொண்டுவரும்படி தொந்தரவுசெய்தல் வறட்டிருமல் நகங்களையும் மயிர்முனைகளையுந் துரும்புகளையும் பல்லினால்கடித்தல் ஒருவோட்டின்மேல் மற்றொரு ஓட்டைவைத்து அடித்துக்கொண்டிருக்குதல் நிலத்தில் துரும்பைக்கொண்டெழுதுதல் என்னும் இக்குணங்களிருந்தாலும், ரோகங்கள் சம்பவித்து உடனே அதிக துர்ப்பலமாக்கிவிட்டாலும் வைத்தியன் அவுஷதங்கொடுக்க எத்தனிக்கும்போது நினைத்தஅவுஷதாதிகள் கிடைக்காவிட்டாலும்; இன்னரோகத்திற்கு இன்னஅவுஷதம்பண்ணும்போது அந்த அவுஷதத்தின்நிறமும் பரிமளமும் கெடுதியானாலும் தைலாதிகிருதங்கள்செய்யும்போது அவைகள் அதிகமாகச்சீறிக் கொதித்தாலும் அப்பாத்திரம்வெடித்தாலும் அசாத்தியக்குறிகளென்றே நிதானிக்கவேண்டும். மேற்கண்ட துர்க்குண

விகாரமெல்லாம் நாளுக்குநாள் அதிகரித்து நற்குணங்களெல்லா மாறு பட்டிருக்கையில் அவைகட்கு வைத்தியஞ்செய்ய எண்ணங்கொள் ளும் பித்தனுக்கு வேறுவைத்தியன் உலகத்தில் இல்லவேயில்லை.

இரைப்பிருமலுடன் தேகமிகவும் சுட்கித்து வாதநாடி பல வீனப்பட்டு ஈனத்தொனியுண்டாகி வெகுநாளாகியும் அப்படியே யிருக்குமாயின், அதற்குவைத்தியம் பண்ணக்கூடாது. ஆயினும்; காலவேற்றுமையினால் சாத்தியம்போலிருந்து அசாத்தியமாகிறதும் அசாத்தியம்போலிருந்து சாத்தியமாகிறதும் உண்டென்பதினாலும் எதுவரையிலும் கண்டத்தில் பிராணனும் தேகத்தில் இந்திரிய வியா பாரங்களும் இருக்கின்றனவோ அதுவரையிலும், அவைகள் நீங் கியபின்பும், வைத்தியம்பண்ணச்சொல்லி முன்னோர்கள் வாக்கியங்க ளிருப்பதினாலும் அவைகளைநம்பி வைத்தியஞ் செய்யத்துணிந்த வைத்தியன் இது அசாத்தியமென்றுமுதலில் தெரியப்படுத்திப் பின்பு வைத்தியஞ்செய்யவேண்டும் என்பது மத்திமபக்ஷமாம்.

முற்கூறிய அசாத்திய ரோகிகட்கு வைத்தியன் கைபார்த்துக் குணகுணங்களை யறியுங்காலத்தில் தான்அறிந்தவிதங்களை அந்தரோ கிகளின் பந்துசனங்களுக்குஞ் சொல்லக்கூடாது; மிஞ்சிச்சொன்னால் அந்தரோகி திகிலடைவதுமன்றி அவனுக்கு நடத்துகின்ற வுபசாரங் களும் மட்டிடும். ஆகையால் அந்தவைத்தியத்தை ஒப்புக்கொள்ள வுங்கூடாது. ஒருவேளை துணிந்து ஒப்புக்கொண்டு மருந்துரைக்க வெத்தனித்தால் அந்த மருந்துகளின் வீரியங்களெல்லாம் அந்தரோகி கட்கு அக்காலத்தில் பிரத்தியக்ஷமான யமதூதர்களாலும் பசாசுக ளாலும் கெடுமென்றறிக.

## இனி சுரத்தின் தசாவஸ்தைநிதானம்.

1-வது கொஞ்சம் ஞாபகமிருக்குதல்; 2-வது முன்னிறந்தவர்க ளைக் கண்ணிற்கண்டு பேசுதல்போலிருத்தல்; 3-வது சித்தப்பிரமை யாகுதல்; 4-வது மேல்மூச்சுவாங்குதல்; 5-வது விழித்தவிழி விழித் ததுபோலிருக்குதல்; 6-வது வேற்றுக்குரலுண்டாகுதல்; 7-வது சரீரமுழுவது மரணஎரிச்ச லெழும்புதல்; 8-வது தன்கையினால் முகத்தைத் தடவிக்கொள்ளுதல்; 9-வது சரீரமுழுவதும் சிலேஷ்ம வியர்வை காணுதல்; 10-வது தேகத்தைவிட்டு ஆவியானது நீங்குத லென்றறிக.

இப்பத்தவஸ்தைக்குள் மூன்றுவதவஸ்தைவரைக்கும் வைத்தியஞ்செய்யலாமென்பது தன்வந்தரியார் கருத்து. சித்தர்களின் சில நூலில் ஒன்பதாவதவஸ்தைவரைக்கும் வைத்தியஞ் செய்யலாமென்று சொல்லுகின்றன.

அசாத்தியசுரவிதி முற்றிற்று.

---

## இனி சாத்தியசுரலக்ஷணம்.

முற்கூறிய சுரரோகிகட்குக் கண் பார்வை சரீரம் ப சேந்திரியம்என்னும் இவைகள் சுபாவமாக இருந்தாலும் மனம்சோகத்துடன் இளைக்காதிருந்தாலும் இரண்டு உள்ளங்கைகளும் இரண்டு உள்ளங்கால்களும் அதிகூடுபிறந்து கொஞ்சந்தாகம் உண்டாகி நாவில் துவளலோடு சலமிருந்தாலும் சரீரத்தில் வியர்வையில்லாமலே சுரங்கண்டு அந்தச்சுரம்விட்டபின்பு இரைப்பும் உப்பிசமும் இருமலும் உண்டாகி அந்த இருமலினால் கண்டத்தில் கபங்கட்டிக்கோழை வெளிப்படாத சுகுணம் இருந்தாலும் ராக்காலத்தில் அயர்ந்தநித்திரையும் எழுந்திருந்தாலும் உட்கார்ந்தாலும் சரீரங்கனத்தலின்றிச் சுளுவு உண்டாயிருந்தாலும் தேடியுங்கிடையாத மூலிகைசமுதலிய அவுஷதங்கள் எளிதில்கிடைத்தாலும் சாத்தியமென்றறிக.

வைத்தியன் தைலகிருதங்கள் காய்ச்சும்போது அவைகளில் உண்டாகிய கொதியானது சதங்கையோசையையொத்துக் கலகலத்து அமர்ந்த சத்தத்தோடு கொதித்தாலும் அவைகள் சுண்டிவரும்போது பரிமளம் உண்டாயிருந்தாலும் சுகசாத்தியகுறிகளென்றே நிதானிக்கவேண்டும்.

சுரசாத்தியவிதி முற்றிற்று.

---

## விட்டசுரலக்ஷணம்.

எந்தச்சுரரோகிக்கானாலும் எப்பதார்த்தங்களிலும் வீண் அபேக்ஷை சரீர எரிச்சல் களைத்தல் முகதுர்க்கந்தம் அங்கவேதனை மனச்

சஞ்சலம் இவைகளில்லாமல் தேகத்திலுள்ளுவு பஞ்சேந்திரியசுபாவம் வியர்வை தும்மல் பசியுடன் அன்னத்தில் மிகுந்த இச்சை சிரசில்நமைச்சல் என்னும் இக்குணங்களிருக்குமாகில் சுரம் விட்டதென்றறியவும்.

இவைநிற்க, சிலஆயுள்வேதியர் சுரரோகத்தை அறுபத்துநான்கு விதமாகவுஞ் சொல்வர். அவையாவன: வாதசுரம் பித்தசுரம் சிலேஷ்மசுரம் வாதபித்தசுரம் வாதசிலேஷ்மசுரம் பித்தசிலேஷ்மசுரம் சந்நிபாதசுரம் பூதசுரம் கோபச்சுரம் அபிசாரசுரம் பயச்சுரம் பைசாசசுரம் காமச்சுரம் விஷமசுரம் ஆமச்சுரம் (அல்லது) சாமச்சுரம் நிராமச்சுரம் ரசதாதுகதசுரம் ரத்ததாதுகதசுரம் மாமிசதாதுகதசுரம் மேதோதாதுகதசுரம் அஸ்திதாதுகதசுரம் மச்சாதாதுகதசுரம் சுக்கிலதாதுகதசுரம் ஏகாகிகசுரம் துவியாகிகசுரம் திரியாகிகசுரம் சாதுர்த்திகசுரம் பஞ்சாகிகசுரம் தெய்வப்பிரகோபசுரம் காந்தர்வசுரம் தாந்திரிகச்சுரம் மூர்ச்சைசுரம் பிரலாபசுரம் சீதசுரம் வியர்வைச்சுரம் கிருமிச்சுரம் அரித்திராசுரம் உதயசுரம் மத்தியானசுரம் மாலைச்சுரம் நிசிசுரம் சோஷச்சுரம் தாபச்சுரம் விரணச்சுரம் ஆதபச்சுரம் ஈனத்தொனிசுரம் அக்கினிமந்தசுரம் ஏப்பசுரம் வாந்திசுரம் கொட்டாவிச்சுரம் விக்கல்சுரம் அநித்திரைச்சுரம் காசச்சுரம் சுட்கசுரம் புராணசுரம் பக்ஷசுரம் மாதச்சுரம் வருஷசுரம் பிடகசுரம் போடகசுரம் கம்பச்சுரம் சோபைச்சுரம் ஆநாகசுரம் திரிகாலசுரமென்பவையாம். இவற்றுள், வாதசுரமாதியாகப் பஞ்சாகிகசுரமீறாகச் சொல்லிய (28) சுரங்களும் முற்கூறிய சுரத்தொகை (276) ல் அடங்கலால், இவைதவிர மற்ற சுரங்கள் கூறப்படும்.

## சித்தர்மதாந்தரம், 64, ல்-36.

### 29-வது தெய்வப்பிரகோபசுரம்.

தெய்வகுற்றத்தினால் பிறந்து, சயித்தியம் சிரோபாரம் வியர்வை சர்வாங்கசீதளம் ஏப்பம் விக்கல் தலைதிருப்பல்சடத்துவம் சூலை என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 30-வது காந்தர்வசுரம்.

சர்வாங்கமுஞ்சுருங்கல் பலவீனம் அற்பசூலை கண்களில் மஞ்சள்நிறத்துடன் சலம்வடிதல் பரியாசம்பண்ணல் பாடல் தலைவலி சடத்துவம் சர்வசந்திஸ்தானங்களும் அசையக்கூடாமை எழுந்தாற் சுற்றுதல் ஆலசியம் மதிப்பிரமை கோபம் பசியில்லாமை பெருமூச்சு சயித்தியம் அடிக்கடிமூர்ச்சை சர்வாங்க வீக்கம் கனவில்விந்துநஷ்டம் ஏப்பம் விக்கல் அடிக்கடிநீரிறங்கல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 31-வது தாந்திரிகசுரம்.

உடம்பு சுழன்றுவருதலுடன் நோவு பிரலாபம் பலவீனம் நெற்றியிலுங்கழுத்திலும் வியர்வை நாடிசூட்சுமம் அல்லது அதிகவேகம் என்னுமிக்குணங்களையுண்டாக்கும்.

## 32-வது மூர்ச்சைச்சுரம்.

மூர்ச்சை பலவீனம் தலைபுரட்டல் பேதி பிரலாபம் மிருவார்த்தை வாதாதிக்கம் சோஷை சூலை ஒருவேளை பேசாமலிருத்தல் ஈனத்தொனி வாயிற்கசப்பு சுவாசம் சீதளம் கண்சிவந்து நீர்கம்மல் கைகால் குளிர்ச்சி ரத்தமூத்திரம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 33-வது பிரலாபசுரம்.

பிரமை சர்வாங்கமும் வெளிறல் வாழைத்தண்டைப்போற் சீதளம் நகங்களில் உதிரமின்மை நாக்குமஞ்சள்வன்னத்துடன் முட்போலிருத்தல் நெஞ்சு நோவு நித்திரைப்பங்கம் கழுத்திலும் நெற்றியிலும் வியர்வை என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 34-வது சீதசுரம்.

கபாதிக்கம் வியர்வை பலவீனம் வாந்தி விக்கல் வீக்கம் இருமல் இரைப்பு தலைசுழற்றல் மார்புநோவு நாடியுள்ளடங்கல் கண்சிவத்தல் நாக்கு சிவப்போடு முட்போலிருத்தல் நித்திரைப்பங்கம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 35-வது வியர்வைச்சுரம்.

மிகுவியர்வை கபாதிக்கம் அதிவார்த்தை துர்ப்பாஷை தேகம் சுற்றல்போலிருத்தல் குன்றல் அற்பசுரம் தலைதிருப்பல் சுவாசம் மூர்ச்சை சிரமை பிரமை நாவுமுட்போலிருத்தல் விகாரம் வேதனை ஏப்பம் விக்கல் வயிறப்பல் தலையிலுங் காதிலும்நோவு சோருதல் கை காலில் மஞ்சள்வன்னம் தலையில்சதாவேதனை நாடியானது சூட்சும த்திலும் வேகமானநடை ஒருவேளை சபலநடை என்னும் இக்குணங் களையுண்டாக்கும்.

## 36-வது கிருமிச்சுரம்.

வயிற்றில்மிகுசூலை உப்பிசம் கனத்தல் ஏப்பம் வாந்தி இரைப்பு தேகபுழுக்கம் சர்வாங்கசீதளம் விக்கல் தலைசுழற்றல் மூர்ச்சை சோஷை துர்ப்பலம் வாயினுலும் அபானத்தினுலும் 20, 30, 40, 50, 100, 200, 300, 400 (அல்லது) 500 பூச்சிசள்விழுதல், அக்கினிமந் தம் நித்திரைப்பங்கம் மனோதுக்கம் என்னும் இக்குணங்களையுண் டாக்கும்.

## 37-வது அரித்திராசுரம்.

சர்வாங்கத்திலும் மஞ்சள்வன்னத்துடன் தடிப்பு சயித்தியம் சடத்துவம் முகத்தில் எண்ணெய்தடவினதுபோலப் பிசுபிசுத்தல் நகங்களிலும் கண்களிலும்நோவு கீல்களில் வீக்கம் ஏப்பம் கொட்டாவி விக்கல் கைகால் குளிர்ச்சி சிரோபாரம் தலைதிருப்பல் நாவுகசத்தல் தாகம் நெஞ்சுலர்தல் மார்பெரிச்சல் அக்கினிமந்தம் மலபந்தம் பல வீனம் அரோசகம் வாயில்நுரைவீழ்தல் அதிபேச்சு என்னும் இக் குணங்களையுண்டாக்கும்.

## 38-வது உதயசுரம்.

உதயகாலத்திற்பிறந்துதாகம் தேகம்நருக்கித்துவைத்ததுபோல் நோவு கொட்டாவி ஏப்பம் அக்கினிமந்தம் நாவுகசத்தல் பிரலாபம் மிகுபேச்சு உள்ளங்கை உள்ளங்கால்சில்லிடல் என்னும் இக்குணங் களையுண்டாக்கும்.

## 39-வது மத்தியானசுரம்.

மத்தியானகாலத்திற்பிறந்து தாகம் சோருதல் நெஞ்சுலர்தல் நாவறளல் கண்டத்திலும் நெற்றியிலும் வியர்வை உமிழ்நீர் சிவத்தலுடன் துர்க்கந்தம் மூர்ச்சை விக்கல் அதிவருத்தம் தினவு அதிகவார்த்தை அதிமூத்திரம் துர்ப்பலம் ஏப்பம் கொட்டாவி தலையில்நோவுடன் நடுக்கல் அதிசீதளம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 40-வது மாலைச்சுரம்.

மாலைக்காலத்திற்பிறந்து குளிர் சோபம் தாகம் பிரலாபம் மலபந்தம் வயிறுப்பல் விக்கல் கொட்டாவி தலைவலி வாய்கசப்பு வாந்தி என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 41-வது நிசிசுரம்.

பாதிராத்திரிகாலத்திற்பிறந்து, அதிககுளிர்ச்சி வியர்வை தாகம் தேகஞ்சுற்றல்போலிருத்தல் பிரலாபம் துர்ப்பலம் தலையிலுங் காதிலும் இரைச்சல் நித்திரைப்பங்கம் மிகுதாகம் கைகால்குளிர்ச்சிபேதி அதிமூத்திரம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 42-வது சோஷைச்சுரம்.

சோஷை தபித்தல் மூர்ச்சை பிரலாபம் அதிவேதனை கண்களிற்புகை கம்மலுடன் சலம்வடிதல் தேகஞ்சில்லிடல் வயிற்றிலுப்பலுடன் நோவு சுட்கித்தல் அடிக்கடி மிகுமூத்திரம் ரோமச்சிலிர்ப்பு அக்கினிமந்தம் சுவாசம் படுக்கைபொருந்தாமை வாந்தி வாயும்நாவும் உலர்ந்து சிவத்தல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 43-வது தாபச்சுரம்.

அதிகஎரிச்சல் மிகுசீதளம் நீருருந்தினும் நாவுலரல் மார்பெரிச்சல் நித்திரைப்பங்கம்பிரலாபம் பலவீனம் சுவாசம் சீதாதிக்கம் அக்கினிமந்தம் அதிவேதனை என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 44-வது விரணசுரம்.

ரணங்களினுற்பிறந்து, அதிசூலையுடன் சர்வாங்கநோவு சயித்தியம் தலைவலி சுவாசம் துர்ப்பலம் நித்திரைப்பங்கம் பிரமை சரீரமிளைத்தல் அரோசகம் வாய்கசப்பு நெற்றியுங் காதும் வறட்டல் கண்ணோவு நடுக்கல் கால் கை குளிர்ச்சி என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 45-வது ஆதபச்சுரம்.

சித்திரை வைகாசி ஆனி ஆடி ஆகிய இந்நான்குமாதங்களின் வெய்யிலில் உதயமுதலிரண்டு சாமம்வரைக்கும் நிற்காமல் வழிநடப்பதினுல் பிறந்து, எரிச்சல் பிரலாபம் அதிகவேதனை பல்நோவு தாகம் சோருதல் தலைவலி முகத்தில் குங்குமவன்னம் வாயுலரல் பேதி தலைசுழலல் அடிக்கடி நித்திரை பிரமை மார்படைப்பு கால் கை நடுக்கல் கண்களில் சலம் வடிதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 46-வது ஈனத்தொனிச்சுரம்.

ஈனத்தொனி சோருதல் பிரலாபம் வியர்வை சர்வாங்கசீதளம் நருக்கித்துவைத்ததுபோலிருத்தல் நடுக்கல் கருநிறம் சூலை அதிகவுபாதி சடத்துவம் நாவு முள்போலிருத்தல் வாயில்கசப்பான நுரை அறிவின்மை நாடிசூட்சுமத்திலும் வேகநடை என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 47-வது அக்கினிமந்தசுரம்.

ஏழுநாள் பத்துநாள் பசிதாகமின்மை துர்ப்பலம் தேகத்தில் நிறக்குறைவுடன் எரிச்சல் சுட்கல் மலபந்தம் சிலவேளைதாகம் தலைவலி இருமல் இரைப்பு அன்னத்திவேஷம் அரோசகம் ஏப்பம் வாந்தி விக்கல் இக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும், சிலநாளைக்குள் நாளுவிதசுரம் விஷமசந்நிபாதம் மசூரிசம்பந்தமானவியாதி பேதி வாந்தி அழுகை என்னும் இக்குணங்களையு முண்டாக்கும்.

## 48-வது ஏப்பச்சுரம்.

ஏப்பம் வாந்தி மார்பெரிச்சல் தலைவலி தாகம் நெஞ்சுலர்தல் தேகத்தைத்திருப்பல்போலிருத்தல் பிரமை தலைநடுமச்சலுடன்நடுக்கல் மந்தாக்கினி மலபந்தம் தலைக்குத்தல் கண்களில்நோவுடன் நீர் வடிதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 49-வது வாந்திச்சுரம்.

புளித்தரத்தவாந்தி தபித்தல் மார்பில் தீப்பட்டதுபோ லெரிச்சல் கண்டத்திலும் நெற்றியிலும்வியர்வை பேதியிற் சீதம்வீழ்தல் சதாதாகம் துர்ப்பலம் கைகால்குளிர்ச்சி உடம்பெல்லாம்துவைத்தது போலிருத்தல் நிறக்குறைவு இந்திரியநஷ்டம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 50-வது கொட்டாவிச்சுரம்.

மிகுகொட்டாவி விக்கல் சீதளம் வயிறுப்பல் அக்கினிமந்தம் சர்வாங்கத்திலும் சயித்தியவியர்வை கசப்பும்புளிப்புமானவாந்தி தலையிலுங்காதிலும் நோவுடன்இரைச்சல் இருந்திருந்து தேகம் நடுக்கல் அதிதாகம் நித்திரைப்பங்கம் பல்நோவு தேகந்தடித்தல் ஈன வார்த்தை தலைசுழலல் நெஞ்சிற்கபாதிக்கம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 51-வது விக்கல்சுரம்.

அதிகவிக்கல் வாதமும் சிலேஷ்மமும் அதிகரித்தல் வியர்வை மந்தாக்கினி தாகம் மூர்ச்சை வாந்தி மேற்சுவாசம் துர்ப்பலம் பிரலாபம் பேதி நித்திரைப்பங்கம் சிரோபாரம் மார்பெரிச்சல் இல்கனில் நோவு என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 52-வது அநித்திரைச்சுரம்.

நித்திரையின்மை தேகவெரிச்சல் தாகம் மயக்கம் தலைதிருப்பல் நாவும்வாயுமுலரல் மேற்சுவாசம் சீதளம்அதிகரித்தல் மிகுகூச்சல் அடித்தொடைச்சதையும் முழங்காற்சதையும்நோவு ஈனத்தொனி

யானவார்த்தை சதாஇருமல் மூர்ச்சை என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 53-வது காசசுரம்.

சதா இருமல் சிவந்தும் நுரைத்தும் வெளுத்தும் நானாவிதமாகிய கோழைவிழுதல் தாகம் மூர்ச்சை வியர்வை சிரமை பிரமை ஏப்பம் வாந்தி தலைதிருப்பல் நடுக்கல் துர்ப்பலம் ஈனத்தொனி தலையிலும் கண்ணிலும் எரிச்சல் வயிற்றுநோவு பேதி கொட்டாவி விக்கல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். காசம் என்பது இருமல்.

## 54-வது சுட்கசுரம்.

தேகமுலரல் அதிகவெப்பம் எரிச்சல் சிரசிலும் கண்ணிலும் நோவு சீதளம் வியர்வை பிரலாபம் பல்நோவு சவம்போற்கிடத்தல் சரீரம்நருக்கித்துவைத்ததுபோலிருத்தல் அக்கினிமந்தம் ரோமச்சிலிர்ப்பு அநித்திரை சோம்பல் துர்ப்பாஷை கோபம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 55-வது புராணசுரம்.

தேகஞ்சுட்கித்தல் துர்ப்பலம் இருமல் கபாதிக்கம் தலைதிருப்பல் சூலை அக்கினிமந்தம் அன்னத்திவேஷம் அசீரணம் அரோசகம் விந்துநஷ்டம் சோஷை சர்வாங்கவியர்வை சிலேஷ்மமும் வாதமுங் குறைதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கி நெடுநாளாகியும் நீங்காதிருக்கும். இதுவே பழஞ்சுரமாம். இது தைலங்களால் நீங்கும்.

## 56-வது பக்ஷாந்திரசுரம்.

பக்ஷத்திற்கொருதரம்பிறந்து, சீதத்துடன்வெப்பம் தாகம் புத்தியில் ஒன்றுந்தோன்றாமை தலைநோவு அசீரணம் அரோசகம் இருமல் காமாலை துர்ப்பலம் சரீரம் வெளிறல் வீக்கம் அல்லது சுட்கல் சத்துவக்குறைவு மாறுவன்னம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 57-வது மாதச்சுரம்.

மாதத்திற்கொருதரம்பிறந்து, சுரக்குணங்களையெல்லாம் ஒருங்கேஉண்டாக்கும். இதற்குப் பிறைக்காய்ச்சலென்றும் ஒருபேருண்டு.

## 58-வது வருஷசுரம்.

வருஷத்திற்கொருதரம்பிறந்து சுரக்குணங்களை யுண்டாக்கும்.

## 59-வது பிடகசுரம்.

சர்வாங்கத்திலுங் கடுகைப்போற் சிறிதாகவும் பெரிதாகவும் கட்டிகள் எழும்புதல் எரிச்சல் தாகம் சோருதல் தலைதிருப்பல் வியர்வை நாவுஉலர்ந்து முட்போலிருத்தல் பிரலாபம் நித்திரைப்பங்கம் அதிகவார்த்தை கண்களில்வேதனை வாயால்நுரைவிழல் ஈனத்தொனி சயித்தியம் நடுக்கல் தொடையிலும் முழங்காலிலும் நோவு ஏப்பம் வாந்தி விக்கல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

பிடகம் என்பது கட்டி.

## 60-வது போடகசுரம்.

பயறுபிரமாணமாகச் சரீரமுழுவதிலும் விஸ்போடகமெழும்பல் தாகம் பிரலாபம் அதிகவேதனை தேகம் எரிச்சலுடன் பதறல் சிலவேளை மார்பெரிச்சல் பலவீனம் எழுந்திருக்கக்கூடாமை படுக்கை பொருந்தாமை வயிறுநோவு பேதி சுவாசம் நிறக்குறைவு ஆசியம் பாடல் நித்திரைப்பங்கம் கண்சிவத்தல் நாடி சூக்ஷுமமாக நடக்குதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

போடகம் என்பது சிறு கொப்புளம்.

## 61-வது கம்பச்சுரம்.

நடுக்கல், சர்வாங்கசீதளம் வியர்வை கொட்டாவி தலைப்பாரம் அருசி கண்ணிற் சலம்பெருகல் தாகம் சோருதல் தலைபுரட்டல்

சுவாசம் அதிகவேதனை துர்ப்பலம் கூச்சல் வாயிலும்நாவிலுங் கொப்புளமெழும்புதல் நித்திரைப்பங்கம் பேதி ஏப்பம் புளித்தவாந்தி சடத்துவம்கீல்களில்நோவு நாடிசூக்ஷமமாகவும் வேகமாகவும் நடக்குதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

கம்பம் என்பது நடுக்கல்.

## 62-வது சோபைச்சுரம்.

கீல்களில் வீக்கம் அதிகசீதளம் சூலை தலையிலும் நெற்றியிலும் நோவு காதிரைச்சல் துர்ப்பலம் வாந்தி விக்கல் ரோமச்சிலிர்ப்பு மூர்ச்சை எரிச்சல் கால் கை கொதித்தல் மார்படைப்பு கண்களில் நோவுடன் சலம்பெருகல் பெருமூச்சு கொட்டாவி தலைபுரட்டல் வயிற்றிலுப்பிசத்துடன் நோவு நடுக்கல் அக்கினிமந்தம் மலபந்தம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

சோபை என்பது வீக்கம்..

## 63-வது ஆநாகசுரம்.

மலபந்தம் மலத்துவாரத்திற்சூலை அக்கினிமந்தம் சீதளம் சிரோபாரம் நடுநெற்றியிலிரைச்சல் தாகம்நெஞ்சுவறளல் துர்ப்பலம் தேகம் கனத்து வெளிறல் கண்சிவத்தல் ரோமச்சிலிர்ப்பு அடிக்கடி நீரிறங்கல் நாடிநிலையற்று அலைவுற்று சூக்ஷமமாகவும் வேகமாகவும் நடக்குதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

ஆநாகம் என்பது கட்டுதல்.

## 64-வது திரிகாலசுரம்.

காலை மத்தியானம் மாலை என்னும் இம்மூன்றுகாலங்களிலு மாறுதுபிறந்து பிரலாபம் பற்கடித்தல் பாடல் விகாரகுணம் முகத்தில் குங்குமநிறம் பலவீனம் அற்பவெப்பம் உடம்புபதறல் கொஞ்சம் நித்திரை தாகம் நாக்குமுள்போலிருத்தல் மூர்ச்சை இளைப்பு பிரமை சுவாசம் வியர்வை விக்கல் காதடைப்பு அதிசாரம் காசம்

ஒக்காளம் பேதி கொட்டாவி என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதுவே சர்வகாலசுரமுமாம்.

ஆக மதாந்தரசுரம் அறுபத்துநான்கும் முற்றுப்பெற்றனவாம். இவைநிற்க: வாதசுரம் (20) என்றும், இவற்றுள் சாத்தியம் (12) என்றும், பித்தசுரம் (24) என்றும், இவற்றுள் சாத்தியம் (10) என்றும் சிலேஷ்மசுரம் (20) என்றும், இவற்றுள்சாத்தியம் (10)என்றும் சிலநூற்கள் சொல்லுகின்றன.

இரண்டாவது சுரரோகபடலம் முற்றியது.

---

# 3-வது ரத்தபித்தரோகபடலம்.



## ரத்தபித்தரோகலக்ஷணம்.

இது ரத்தவிருத்தியினாலும் ரத்தக்கெடுதியினாலும் வாதாதிகளின் கூட்டத்தினாலும் வெளிப்பட்டு அபாயத்தைத் தருகின்ற ரத்தத்திற்குத் துர்க்கந்தமின்றிச் சுபாவகந்தமாகவும் சுபாவவன்னமின்றி மாறுவன்னமாகவும் இருப்பதால், இதனை ரத்தபித்தரோகமென ஆயுள்வேதம் கூறுகின்றது. இந்தரோகம், ரத்தஸ்தானத்தி லிருந்தாவது *பிலீகஸ்தானத்திலிருந்தாவது ○ யகிருதிஸ்தானத்திலிருந்தாவது பிறக்குமென்றறிக.

## ரத்தபித்தரோகபேதம்.

மேற்கூறிய ரத்தபித்தரோகமானது வாதத்தினாலும் பித்தத்தினாலும் சிலேஷ்மத்தினாலும் வாதபித்தத்தினாலும் வாதசிலேஷ்மத்தி

---

* பிலீகஸ்தானம் என்பது இருதயத்திற்குக்கீழ் இடப்புறத்திலிருக்கும் மாமிச கண்டம்.

○ யகிருதிஸ்தானம் என்பது இருதயத்திற்கு வலப்புறத்திலிருக்கும் மாமிசகண்டம்.

னாலும் சிலேஷ்மபித்தத்தினாலும் சந்நிபாதத்தினாலும் ஏழுவிதப்படும். இப்படி உற்பத்தியாகிய ரத்தபித்தமானது, ஊர்த்துவமுகம் அதோமுகம் உபயமுகம் என்னும் மூன்றுவிதமுகமாக மேல்நோக்கியும் கீழ்நோக்கியும் கூறிய இரண்டிடத்தைநோக்கியும் கண் காது நாசி வாய்ரோமம் சலத்துவாரம் மலத்துவாரம் என்னும் இவ்வேழுவாசல் வழியாக வெளிப்படும்.

## ரத்தபித்தரோகபூர்வரூபம்.

ரத்தபித்தரோகமானது தலைப்பாரம் அரோசகம் சீதளம் புளிப்பு வஸ்துக்களிலிச்சை புகைபட்டாற்போல் தேகங்கறுக்குதல் இருமல் இரைப்பு ஈனத்தொனி பிரமை என்னும் இக்குணங்களையும், வாயில் சிவத்தலுடன் களிம்பு கவிச்சு புளிப்பு என்னும் இவ்வாசனைகளையும் கண்முதலிய இடங்களில் மஞ்சள் சிவப்பு பச்சிலையின் ரசம் வெண்மை என்னுமிவ்வன்னங்களையும் கறுப்பு சிவப்பு மஞ்சள் முதலிய வன்னங்களையும் இன்ன வன்னங்களென அறியக்கூடாத பார்வையையும், நித்திரையில் மேற்கூறிய ரத்தநிறங்களைப்போலக் காணுகின்ற கனவுகளையும் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கிறது. இக்குணங்கள் யாருக்கேனும் இருந்தால் அவர்களுக்கு ரத்தபித்தரோகம் காணுமென்றே நிதானித்து உடனே வைத்தியஞ் செய்யவேண்டும்.

## 1-வது ஊர்த்துவமுகரத்தபித்தரோகம்.

கண் செவி நாசி வாய் என்னும் இந்நான்குவழிகளால் ரத்தத்தை வெளிப்படுத்தும். இது சாத்தியம்.

## 2-வது அதோமுக ரத்தபித்தரோகம்.

சலத்துவாரம் மலத்துவாரம் ரோமத்துவாரம் என்னும் இம்மூன்று வழிகளால் ரத்தத்தை வெளிப்படுத்தும். இது கஷ்டசாத்தியம்.

## 3-வது உபயமுகரத்தபித்தரோகம்.

முற்கூறிய ஊர்த்துவ முகத்திலும், அதோமுகத்திலும், ஒரே காலத்தில் ரத்தத்தை வெளிப்படுத்தும். இதற்குத் தகுந்த அவுஷதம் எந்தக்கிரந்தங்களிலும் சொல்லாமையினால் இது அசாத்தியம்.

## 4-வது வாதரத்தபித்தரோகம்.

நுரையுடன் காந்தியானரத்தத்தை வெளியாக்கும். இந்தரோகத்தில் அற்பவாதமும் அதிகபித்தமும் இருப்பதால் இது அசாத்தியம்.

## 5-வது பித்தரத்தபித்தரோகம்.

கோமூத்திரத்தின் வன்னமாகவும், கஷாயத்தின் வன்னமாகவும், குழம்பாகவும் ரத்தத்தை வெளிப்படுத்தும்.

## 6-வது சிலேஷ்மரத்தபித்தரோகம்.

வெளிறாகவும் தேய்த்துக்கழுவினால் வழுவழுத்திருப்பதாகவும் இருக்கின்ற ரத்தத்தை வெளிப்படுத்தும். இப்படியே கக்குகின்ற ரத்தத்தைத் தரையில் விழுந்தவுடன் சோதித்துப் பார்க்கவேண்டும். அன்றியும், வாதபித்தங்கூடிய தொந்தரத்தபித்த ரோகங்களையும் வாதபித்தகபங் கூடிய சந்நிபாத ரத்தபித்தரோகத்தையும் அசாத்தியமென்றறிந்து தள்ளிவிடவேண்டும்.

## அசாத்திய ரத்தபித்தரோகம்.

விழுகின்ற ரத்தமானது மிகுசிவப்பாகவும் கறுப்பாகவும் இந்திர தனுவின் வன்னமாகவும் தாம்பிரவன்னமாகவும் மஞ்சள்வன்னமாகவும் பச்சிலைரசவன்னமாகவும் காணப்பட்டாலும் துர்க்கந்தமானாலும் அதிகமாகவும் விரைவாகவும் விழுந்தாலும் ரோமத்துவாரம் செவி வாய் இருதயம் கண் என்னுமிவ்விடங்களில் நின்று ஏககாலத்திலதிகமாக வெளிப்பட்டாலும் அது வஸ்திரத்திற்பட்டால் எப்படி கசக்கினாலும் எளிதில் விடாதிருந்தாலும் அசாத்தியம். அன்றியும், இந்தரோகம் விருத்தியானால் தேகம் வெளிறல் சுரம் வாந்தி காசம் சோபை என்னும் இக்குணங்களையுண்டாக்கிப் பின்பு அதிசாரத்தைப்பிறப்பித்துமரணத்தைக் கொடுக்கும். இப்படிக்கு அசாத்தியம் எனச் சொன்னபோதிலும், ரத்தத்தை உள்ளில் தங்கும்படியான சிகிச்சைகளைச்செய்தால் சாத்தியம் ஆனாலுமாகும்.

## அசிர்க்கரரோகலக்ஷணம்.

மாதர்கட்குக் கருப்பாசயஸ்தானத்தில் சன்னநரம்புகளில் நின்றும் உதிரமானது ஒழுகிச்சேர்ந்து அல்குல்வழியாகவெளிப்படுவதே மாதாந்தருதுகாலமாம். அது உபவாசத்தினாலும், துக்கத்தினாலும், மிகுசையோகத்தினாலும், சாங்கைவஸ்துக்களினாலும் அதிகரித்தவாதாதி திரிதோஷங்களினால் கெடுதியையடைய ருதுகாலந்தப்பும்; அக்காலவித்தியாசத்தில் நின்றும் அசிர்க்கரரோகம் பிறக்கும் அதன்விவரம்: அல்குலுக்குள்ளிருக்குந்துவாரமானது ராத்திரிகாலத் தாமரைப்புஷ்பம்போல் சுருங்கி மூடிக்கொள்ளும். இதனால் முன்பு நரம்புகளின் மார்க்கமாகச்சிரவித்துச் சேர்ந்திருக்கும் உதிரத்திற்கு வாயுவானது கரியநிறத்தையும் துர்க்கந்தத்தையுங்கொடுத்து இரண்டாவது ருதுகாலத்தில் அல்குல் மார்க்கமாக அதனை அகாலத்தில் உபத்திரவத்தையுண்டாக்கி வெளிப்படுத்தும். இதுவே அசிர்க்கரரோகமாம். இதற்குப்பிரதரரோகமென்றும் ஒருபேருண்டு.

## அசிர்க்கரரோகபேதம்.

முன்புசொன்ன அசிர்க்கரரோகமானது, வாதாசிர்க்கரம், பித்தாசிர்க்கரம், சிலேஷ்மாசிர்க்கரம், சந்நிபாதாசிர்க்கரம் என நான்கு விதப்படும். அன்றியும், இந்தரோகத்தைப் பெரும்பாடு பிரமேகம் பிரமியம் எனவும் சிலமதாந்தரத்தில் வழங்குகிறார்கள். இப்பிணியைக்கொண்டமாதர்கட்கு, அல்குல் மார்க்கத்தையும் அன்றி, வாயினாலும் ரத்தம் விழுமென்றறிக. அசிர்க்கு என்பது ரத்தம்.

## 1-வது வாதாசிர்க்கரரோகம்.

மாதர்கட்கு வயிற்றுநோயையுண்டாக்கி கறுத்தரத்தத்தை அல்குல்மார்க்கமாக வெளிப்படுத்தும். இந்தவாதத்தில் பித்தமுங்கூடினால் அந்தரத்தமானது கண்டவுடன் மறைந்துவிடும்.

## 2-வது பித்தாசிர்க்கரரோகம்.

மாதர்கட்குச்சுரத்தோடுங்கூட அல்குல்மார்க்கத்தில் நீலநிறமான ரத்தத்தைவெளிப்படுத்தும். இந்தப்பித்தத்தில் சிலேஷ்மமுங்கூடினால் அந்த ரத்தமானது உருண்டை யுருண்டையாகவிழும்.

## 3-வது சிலேஷ்மாசிர்க்கரரோகம்.

மாதர்கட்கு அல்குல்மார்க்கத்தில் பிரேதநாற்றத்துடன் வெண்மையாகிய ரத்தத்தை வெளிப்படுத்தும். இந்தச்சிலேஷ்மத்தில் வாதமுங் கூடினால் அந்தரத்தமானது சீழைப்போலவேவிழும்.

## 4-வது சந்நிபாதாசிர்க்கரரோகம்.

மாதர்கட்கு அல்குல்மார்க்கத்தில் மேற்கூறிய வாதபித்தசிலேஷ்மம் என்னும் மூன்று அசிர்க்கரரோகநிறங்களாகவும், மலமூத்திர நிறமும் நாற்றமும் உள்ளதாகவும் இருக்கின்ற ரத்தத்தையும் சரீரத்தில் சுரத்தையும் மூர்ச்சையையும் உண்டாக்கும். இதுவும் தொந்தமும் அசாத்தியம்.

மேற்சொல்லிவந்த அசிர்க்கரரோகங்களை, பலாசகிருதம் பலாமடக்குத்தயிலம் கட்டுவாங்கத்தயிலம் முதலிய சிகிச்சைகளினால் வசப்படுத்தவும்.

### மதாந்தரம்

## அஸ்திசிராவோற்பத்திலக்ஷணம்.

ரசதாதுகொதித்தலினால் ரத்தத்தின் சுபாவவன்னங்கெட்டால் இதை அஸ்திசிராவரோக மெனச்சொல்வது காசிபர்சம்மதம். அல்குல்மார்க்கமாக ரத்தமானது வெளுத்து அல்லது மிகவுஞ்சிவந்து துர்க்கந்தத்துடன் விழுந்தால், இதைரத்தசிராவரோகமெனச்சொல்வது சில ஆயுள்வேதியர் சம்மதம். எலும்புகளின் மத்தியிலிருக்கிற மச்சையை யுருக்கிக்கொண்டு சூலையுடன் வெளிப்பட்டால், இதை அஸ்திசிராவரோகமெனச்சொல்வது ஆத்திரேயர் சம்மதம். இதனை எலும்புருக்கி ரோகமெனச்சொல்வது திருமூலர்முதலிய சித்தர்கள் சம்மதம். இது அசாத்தியம்.

மதாந்தரம்முற்றிற்று.

---

## காசரோகபேதம்.

காசரோகமானது, வாதகாசம் பித்தகாசம் சிலேஷ்மகாசம் ரத்தகாசம் க்ஷயகாசம் என ஐந்துவகைப்படும். இவற்றுள், வாதகாசத்தினும் பித்தகாசம் அதிகபலன்; பித்தகாசத்தினும் சிலேஷ்மகாசம் அதிகபலன்: சிலேஷ்மகாசத்தினும் ரத்தகாசம் அதிகபலன்; ரத்தகாசத்தினும்க்ஷயகாசம் அதிகபலன் என்றறிக. இக்காசங்கள்தேகத்தைநாசம்பண்ணும். ஆதலால், இவைகட்கு உடனே வைத்தியம்பண்ணுவிடில் அசாத்தியமாம்.

## காசரோகபூர்வரூபம்.

காசரோகமானது, முதல்முதல் கண்டத்திற்குட்புறத்தில்நமைச்சலுடன் முட்சொருகல்போலிருத்தலையும் அரோசகத்தையும், அதோமுகமாகச் சஞ்சரிக்காநின்ற வாயுவு மேல்நோக்கி மார்பில்சேர்ந்துகொண்டு கண்டத்தில் இருமலையும் உண்டாக்கிச் சிரசின்நரம்புகளில் நிறைந்து பின்பு அவயவங்களுக்கெல்லாம் நருக்கித் துவைத்ததுபோல் அதிகவேதனையையும் பிறப்பித்துக் கண்களில் மின்மினிப்பூச்சி பறப்பதுபோலச்செய்து முதுகு மார்பு விலாப்பக்கம் இவைகளில் நோவையுண்டாக்கி ஓட்டைவெண்கலத்தொனியைப்போல் கண்டத்தில் தொனியைப் பிறப்பித்துப் பின்பு தானும் வாயினுல் உப்புக்கலுபுக்கலாகப் புறப்படும். இப்படிக்கு வாயுவினுல்செய்யப்படும் செய்கைகளையும் தனக்குப்பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது. அன்றியும், பஞ்சகாசங்களைப் பிறப்பிப்பதற்கும், அவைகளில் கண்டத்தொனியைக் கெடுப்பிப்பதற்கும், வாயுவே கர்த்தாவாம்.

## 1-வது வாதகாசரோகம்.

வாதாதிக்கவஸ்துக்களினுல் அதிகரிக்கின்ற வாதத்தைக்கொண்டு மார்பு கண்டம் முகம் என்னும் இவைகளைவற்றப்பண்ணிச் சிரசு விலாப்பக்கம் குண்டிக்காய் மார்பு இவைகளில் குத்தலையுண்டாக்கி, சோருதல் மனக்கலக்கம் ஈனத்தொனி அதிகவேதனை பொடிஇருமல் வேற்றுக்குரல் ரோமங்களெல்லாஞ் சிலிர்த்தல் என்னும் இக்குணங்க

ளேயும் உண்டாக்கும். அன்றியும், நெஞ்சில் இளகிய கோழையைக் கெட்டிப்படுத்திக் கொஞ்சங்கொஞ்சமாக வெளிப்படுத்தும்.

## 2-வது பித்தகாசரோகம்.

கண்களும் நகங்களும் மஞ்சள் நிறமாயிருத்தல் வாய்க்கசப்பு கசந்தமஞ்சள்கோழை வீழல் ரத்தவாந்தி பிரமை தாகம் கம்மிய பேச்சு நெஞ்சிற்கமறல் புளியேப்பம் எப்போதும் பொடி இருமல் கண்களில் இருட்கம்மல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மகாசரோகம்.

மார்பில்கொஞ்சம்நோவு தலைநோவு இறுக்கிப்பிடித்ததுபோற் குண்டிக்காயில்நோவு தேகபாரிப்பு நெஞ்சுக்குள் எதுவோ பூசினது போல் அருவருப்பு எழுதலில் நடப்பதில் அசமாதானம் நாசியில் மா ருச்சலம் வாந்தி அரோசகம் மிகவும் ரோமமுறைத்தல் சரீரமினுமி னுப்பு வெளுப்பாகிய கோழைவாந்தி என்னும் இக்குணங்களையுண் டாக்கும்.

## 4-வது ரத்தகாசரோகம்.

யுத்தம் சேவகாவிர்த்தி சிலம்பமுதலிய சாதகங்கள் இவைக ளால் மெலிந்தவர்கட்கு, சரீரத்தில் முன்புள்ள சுபாவபலமொடுங்கிய வாயுவானது மார்புக்குள்சேர்ந்து, பித்தத்துடன் கலந்து பலத்தி ருந்து கொள்ளும்; இப்படியிருக்கிற இந்தவாயுவைக்கொண்டு கண் டத்தில் வேதனையையுண்டாக்கி, ரத்தத்துடன் மஞ்சள்வன்னமாக வும் உலர்ந்ததுபோலவும், உருண்டையுருண்டையாகவும் கபத்தைவா ந்தியாக்கும். ஒருவேளைமார்பை விருவாக்கிச் சுத்தரத்தத்தையே வா ந்தியாக்கும். ஒருவேளை ஊசிகளால் குத்துதல்போல் மார்பில் குத்த லையுண்டாக்கி ரத்தத்தை விழப்பண்ணும். அப்போது, கீல்களில் நோவு சுரம் சுவாசம் தாகம் ஈனத்தொனி நடுக்கல் நெஞ்சில் புறுச் சுத்தத்தைப்போல் சத்தம் பக்கநோவு என்னுமிக்குணங்களுண்டா வதன்றியும், இந்திரியம் பசி பலம் தேகவன்னம் இவைகள் குறைந்து ரத்தமூத்திரமும் முதுகுநோயும் உண்டாம்.

## 5-வது க்ஷயகாசரோகம்.

வாதாதிக்கத்தால் சப்ததாதுக்களுமதிகரித்து க்ஷயரோகத்திற்குப் பிரசம் சுவாசமுதலிய பதினொருரூபங்களையும் பிறப்பிப்பதற்குக்காரணமான அறுசுவை வஸ்துபேதங்களைக் கொண்டு, முதல் முதல் இருமலைப்பிறப்பித்துப் பின்பு துர்க்கந்தச்சீழாகவும்; மஞ்சள் வன்னம் பச்சிலைரசவன்னம் ரத்தவன்னம் என்னும் இவ்வன்னமாகவும், புளிப்புவாசனையாகவும் வாயினூற்கோழையைக் கக்கப்பண்ணும். அப்போது பக்கங்களில் அடித்தல்போல்நோவு மார்புபிளந்து போவதுபோலிருத்தல் காரணமின்றி உஷ்ணவஸ்துவில் சீதளவஸ்துவில் இச்சை அடிக்கடி அன்னத்தில்அபேக்ஷை துர்ப்பலம் முகத்தில் தேஜசு கண்களில் நல்லகாந்தி என்னும் இக்குணங்களுடன் க்ஷயரூப குணங்களும் உண்டாகும். இது, க்ஷயரூபத்தோடு இருமலைப்பிறப்பிப்பதால், க்ஷயகாசரோகமெனப் பேர்பெற்றது. இந்தரோகம் மெலிந்தவர்களுக்கும் முதிர்ந்தவர்களுக்கும் வந்தால், கொல்வதே நிச்சயமென்றறிக. சரீரபலமுள்ளவர்களுக்குவந்தால், ஒருவேளை சாத்தியப்படும். ஆயினும், முற்கூறியரத்தகாசமும், இந்தக்காசமும் மருத்துவர்திறத்தினாலும் மருந்தின்திறத்தினாலும் சாத்தியத்திற்கு வந்தாலும்வரும். மற்ற வாதகாசம் பித்தகாசம் சிலேஷ்மகாசம் இம்மூன்றும் சாத்தியம். இரண்டிரண்டாகத் தொந்தித்த தொந்தகாசங்களும் கஷ்டத்தின்மேல் சாத்தியத்திற்கு வருமென்றறிக. ஒருவேளை கிழவர்கட்கு இருமலினாலும் இரைப்பினாலும் தேகமிளைத்தல் வாந்தி குரல்கம்மல் முதலிய ரோகங்கள் பிறக்கும். அவை சப்ததாதுக்களின் கெடுதியால் பிறந்ததென்றறிந்து, அதற்குத்தகுந்த அவுஷதங்கொடுத்து வசப்படுத்தவேண்டும்.

## அசாத்தியகாசரோகம்.

இருமல் இரைப்பு சுரம் வாந்தி தாகம் பேதி என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இக்குணங்களையுடைய காசரோகி இறந்தவனே.

மேற்சொல்லிய காசரோகங்களை, ஆடாதோடைக்கிருதம், தாள சுபஸ்மம், மகாவசந்த குசுமாகரமாத்திரை, சஜகர்ணிகாதயிலம் முதலிய சிகிச்சைகளைக்கொண்டு நிவிர்த்திசெய்யவேண்டும்.

காசரோகம்முற்றிற்று.

---

## சுவாசரோகபேதம்.

இருமல்விருத்தியினாலும் வாதாதிக்கவஸ்துபேதங்களினாலும் அசீரணபேதியினாலும் வாந்தியினாலும் விஷபாண்டுரோகத்தினாலும் நாள்தோறும் அநுசரித்தசுரத்தினாலும் தானியச்சுண்ணகளினாலும் புகைகளினாலும் காற்றினாலும் மர்மஸ்தானங்களில் அடிபட்டதினாலும் அதிகசீதளசலத்தினாலும் இரைப்பாகிய சுவாசரோகம்பிறக்கும். இது, க்ஷுத்திரசுவாசரோகம் தமகசுவாசரோகம் விச்சின்ன சுவாசரோகம் மகாசுவாசரோகம் ஊர்த்துவசுவாசரோகம் என ஐந்து விதப்படும்.

## சுவாசரோகபூர்வரூபம்.

சுவாசரோகமானது, மார்பிலும் விலாப்பக்கங்களிலும் குத்தல் திணறித்திணறி மூச்சுவருதல் வயிறுப்பிசம் இரண்டுநெறியிலும் நோவு என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப்பெற்றிருக்கின்றது.

## 1-வது க்ஷுத்திரசுவாசரோகம்.

முற்கூறிய பூர்வலக்ஷணம் சண்டிருக்கும்போது வருவித்துக்கொண்ட ஆயாசத்தினாலும் அபத்தியத்தினாலும் அதிகரித்த வாயுவானது சுபாவகுணத்தோடுமிருக்கிற பித்தகபங்களுக்குப்பலத்தைக் கொடுத்தலினால் பிறந்து அற்பசுவாசத்தைபுண்டாக்கும். க்ஷுத்திரம் என்பது அற்பம்.

## 2-வது தமகசுவாசரோகம்.

சிலேஷ்மத்தில்கூடிக்கொண்டு நரம்புகளின் துவாரங்களில் பிரதிகூலமாகப்பிரவேசித்துச் சிரசையும் கண்டத்தையும் பற்றிய வாயு

வைக்கொண்டு, மார்பிலும் இருபக்கவிலாவிலும் நோவையுண்டாக்கிக் கண்டத்தில் குருகுருவென்னும் ஒருசத்தத்துடன், இருமல் சோருதல் அருசி பீநசம் தாகம் என்னுமிக்குணங்களை விரைவில் அதிகரிக்கச்செய்து மரணகாலசுவாசத்தைப்போலச் சகிக்கக்கூடாதசுவாசத்தையுண்டாக்கும். அப்போது, இரைப்பினால் சரீரமெல்லாம் அதிர்ந்துகுலுங்கல் கண்டத்தில் அடைந்த கோழை விழுந்து விட்டால் கொஞ்சம் சவுக்கியம் பிரயாசத்துடன்படுக்குதல் படுத்தால் பெருமூச்சுவிடுதல் உட்கார்ந்தால் அற்பசவுக்கியம் மேற்பார்வை நெற்றியில் வியர்வையோடுநோவு சுவாசம் நீடுதலால் அடிக்கடி வாயுலர்தல் தேகம்நடுங்கல் உஷ்ணதிரவியத்தில் இச்சை என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது, பஞ்சேந்திரியங்களுக்கும் இருள் மூடுவதுபோல் மயக்கத்தையுண்டாக்குவதால், தமகசுவாசரோகமெனப் பேர்பெற்றது. அன்றியும், சீதளமேகம் மிகுகுளிர்ச்சியானசலம் சீதளவஸ்து கீழ்த்திசைக்காற்று சிலேஷ்மாதிக்கவஸ்து ஆகிய இவைகளால் அதிகரிப்பதினால் இதற்கு மந்தாரசுவாசரோகமென ஒருபேருண்டு. இதனை மந்தாரகாசமெனச் சிலர் சொல்லுகிறார்கள். இந்தரோகமானது, முன்சொன்னமட்டிலேயேயிருந்தால், ஒருவேளைசாத்தியத்திற்கு வந்தாலும்வரும். இதற்குமேல் சுரமும் மூர்ச்சையும் உண்டாகில் அசாத்தியம்.

## 3-வது விச்சின்னசுவாசரோகம்.

சாதாரணமாகவராநின்ற சுவாசமானது உள்ளில்மறிபட்டுமறிபட்டுப்பெருஞ் சுவாசமாகவருதல், மர்மஸ்தானங்களாகிய பதினாலுஸ்தானங்களிலுமதிகநோவு வியர்வை மூர்ச்சை மேல்வயிறுப்பிசம் அடிவயிற்றிலும் தேகத்திலும்எரிச்சல் மலமூத்திரச்சிக்கல் கவிழ்ந்தபார்வையோடு கலங்கியகண்களில் சிவப்பு வாயுலரல் பிரலாபம் தேகநிறமாறல் அதயபீரியம் ஞாபகமறதி என்னுமிக்குணங்களையுண்டாக்கும். இது, சுவாசத்தை அறுபட்டதுபோல் திணறலுடன் விடுவிப்பதால் விச்சின்னசுவாசரோகமெனப் பேர்பெற்றது, இந்தரோகி மயக்கத்துடன் சோர்ந்திருப்பானென்றறிக.

## 4-வது மகாசுவாசரோகம்.

கண்டத்தில் மேன்மேலும் களகளவென்னும் ஒருசத்தம் பெருஞ் சுவாசம் வயிற்றில் அதிகவுப்பிசம் மழைக்கெதிர்ப்பட்ட மாட்டுத் தலைபோல் தலைகுனிதல் சாஸ்திரமுதலிய விபகாரங்களில் வழுவுதல் முகத்திலும் கண்களிலும் காந்தியின்மை கையினால் மார்பில் அறைந்துகொள்ளல் மலமூத்திரச்சிக்கல் பிறருக்குத் தெரிந்துகொள்ளக் கூடும் கூடாமையுமாகப் பேசுகின்ற வார்த்தை நெஞ்சுவறளால் அடிக்கடிசோருதல் காதிலும் நெறியிலும் சிரசிலும் நோவு என்னும் இக் குணங்களையுண்டாக்கும். இது, பெருஞ் சுவாசத்தை யுண்டாக்கலால் மகாசுவாசரோகமெனப் பேர்பெற்றது.

## 5-வது ஊர்த்துவசுவாசரோகம்.

சாதாரணமாகவராநின்றசுவாசமானது நீண்டு மேல்நோக்கிவருதலால் தலைகுனியக்கூடாமல்நிமிரல் சிலேஷ்மநிறைவினால் முகத்து நரம்புகளெல்லாம் உப்புதல் அதிகசுவாசவருத்தத்தால் மேற்பார்வை மயக்கம் சுற்றிச்சுற்றிப்பார்த்துவிழித்தல் மர்மஸ்தானங்களின்நோவினாலழுதல் வார்த்தைசொல்லக்கூடாமை என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது மேல்நோக்கிக் காணுதலால் ஊர்த்துவசுவாச ரோகமெனப் பேர்பெற்றது. இதற்கு வைத்தியம்பண்ணிக்கொண்டு வரும்போது மேற்கூறிய குணங்கள் ஒவ்வொன்றாகக்குறைந்தால் சாத்தியம்; விருத்தியானால் அசாத்தியம்.

## அசாத்தியசுவாசரோகம்.

சுவாசரோகிக்கு, சுரம் வாந்தி தாகம் பேதி வீக்கம் என்னும் இக்குணங்கள் காணுமாகில் அசாத்தியம்.

மேற்சொல்லிவந்த சுவாசரோகங்களை வமனமருந்து சங்குப்பிரசம், தூதுளைக்கிருதம், திரிலோகரக்ஷாமணிமாத்திரைமுதலிய சிகிச்சைகளைக்கொண்டு நிவர்த்திசெய்யவேண்டும்.

சுவாசரோகம் முற்றிற்று.

---

## விக்கல்ரோகபேதம்.

விக்கல்ரோகமானது அசனோற்பவவிக்கல் க்ஷுத்திரவிக்கல் யமளவிக்கல் மகாவிக்கல் கம்பீரவிக்கல்என ஐந்துவிதப்படும். இவை கட்குப்பொதுவாக இத்மரோகமென்றும் ஒருபேருண்டு.

### 1-வது அசனோற்பவவிக்கல்ரோகம்.

காரவஸ்து மிகுதீக்ஷணவஸ்து சீரணமாகாதவஸ்து கடினபதார்த்தம் அன்னபானாதி வித்தியாசம் ஆகிய இவைகளினால்பிறந்து: நோவில்லாமல் கண்டத்தில் அற்பத்தொனி அற்ப இருமல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது, அன்னபானாதி வித்தியாசங்களால் பிறப்பதால், அசனோற்பவவிக்கல் ரோகமெனப் பேர்பெற்றது. இது சாத்தியாசாத்தியம்.

### 2-வது க்ஷுத்திரவிக்கல்ரோகம்.

ஆகாரகாலங்களில் அதிகரித்தவாயுவினால் அற்பவிக்கல் உண்டாகும். ஆனால், இந்தரோகிக்குப் பசி களை முதலியவற்றால் வருமாயாசகாலங்களில், நெஞ்சுக்குழியிலிருந்து அவ்விக்கலானது அதிகரிக்கும். அப்போது கொஞ்சம் போசனம்பண்ணினால் சற்றே சாந்தமாகும்.

### 3-வது யமளவிக்கல்ரோகம்.

ஆகாரம் சீரணிக்குந்ததியில், சற்றுநேரம் பொறுத்துப்பொறுத்து இரண்டிரண்டாகப்பிறந்து, மிகுதாகம் வயிறுப்பிசம் பிரலாபம் வாந்தி பேதி கண்கலங்கல் மிகுந்தகொட்டாவி என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது இரண்டிரண்டா யதிகவேகத்துடன் வெளிப்படுதலால் யமளவிக்கல் ரோகமெனப் பேர்பெற்றது. யமளம் என்பது இரண்டு.

### 4-வது மகாவிக்கல்ரோகம்.

அதிகவிக்கலினால், இரண்டு கண்புருவமும் இரண்டுநெறிகளும் தெறித்து விழுவதுபோ லிருத்தல், சலம் வடிதலுடன் கண்கலங்கல்

சர்வாங்கமுமரத்தல் நினைப்புமாறல் அன்னமிறங்கும் வழிமறிபடுதல் கால்களில்நோவு முதுகுவளைதல் நெஞ்சுக்குழிபுலர்தல் என்னுமிக்கு ணங்களையுண்டாக்கும். இது, தேகத்தில் நன்முகப்பற்றி மகாசத்த த்துடன் அதிக பலங்கொண்டு வேகமாகப்பிறப்பதால், மகாவிக்கல் ரோகமெனப் பேர்பெற்றது. இது விக்கல்ரோகம் ஐந்திற்குள் மிக வும் கொடிதென் றறிக.

## 5-வது கம்பீரவிக்கல்ரோகம்.

பக்குவாசய ஸ்தானத்திலாவது நாபிஸ்தானத்திலாவது பிற ந்து, முன்புகூறிய மகாவிக்கல்ரோககுணங்களைப்பெற்று அடிக்கடி கொட்டாவி தேகமுறுக்குதல், அதிகசத்தத்துடன் நீண்டுவருகின்ற விக்கல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். கம்பீரம் என்பது ஆழம்.

## சாத்தியாசாத்தியவிக்கல்ரோகம்.

மேற்கூறிய விக்கல்ரோகம் ஐந்திற்குள், அசனோற்பவ விக்கல் ரோகமும் க்ஷுத்திரவிக்கல்ரோகமும்சாத்தியம். யமளவிக்கல்ரோகம் கஷ்டசாத்தியம். மகாவிக்கல்ரோகமும் கம்பீரவிக்கல்ரோகமும்அசா த்தியம்.

## சர்வசாதாரணவிக்கல்ரோகலக்ஷணம்.

முற்கூறிய விக்கல்ரோகங்களுக்குள்ள குணங்களையெல்லாம் பெ ற்று, இடைவிடாமல்அடிக்கடி அலையடிப்பதுபோல் விக்கலுண்டாம். மேற்கூறிய ரோகங்களெல்லாம் இதனிடத்திலிருப்பதினால் சர்வசா தாரணவிக்கல்ரோகம் எனப்பேர்பெற்றது. இது அசாத்தியம். சகல ரோகங்களைப்பார்க்கிலும், விக்கல்ரோகம் அதிகசீக்கிரத்தில் கொல் லும்.

மேற்சொல்லிய விக்கல்ரோகங்களை, குளவிக் கூண்டுக் கஷாயம் நண்டுவளைச்சலம் மயிலிறகின் பஸ்மம் மகா வசந்தகுசுமாகர மாத் திரை முதலிய சிகிச்சைகளினால் விலக்கவும்.

விக்கல்ரோகம் முற்றிற்று.

---

## க்ஷயரோகம்.

க்ஷயரோகமானது, சுரரோகம் அரசனாகவும் காமாலை ரோகம் மனைவியாகவும் பாண்டுரோகம் சேனாதிபதியாகவும் ரத்தபித்தரோகம் புத்திரனாகவும் காசரோகமும் சுவாசரோகமும் மந்திரிகளாகவும் வாதபித்தரோகங்கள் காவற்காரர்களாகவும் வாந்திரோகமும் அரோசகரோகமும் கட்டியக்காரர்களாகவும் சோபைரோகமும் அதிசாரரோகமும் சிநேகிதர்களாகவும் பீநசரோகம் பொக்கிஷத்திரவியமாகவும் கண்டத்தொனிகள் பேரிகை முதலிய வாத்தியங்களாகவும் மற்ற ரோகங்கள் பரிசனங்களாகவும் பெற்றிருப்பதாலிதனை ராஜரோகமென்றே ஆயுள்வேதஞ் சொல்லுகின்றது. அன்றியும், இதற்கு யக்ஷ்மரோகம் ராஜயக்ஷ்மரோகம் ரோகராஜம் கபரோகம் க்ஷீணரோகம் எனவும் பெயர்களாம். இது தேகத்தை நாளுக்குநாள் குறையப் பண்ணுங் காரணத்தால் க்ஷயரோகமெனப் பேர்பெற்றது. இதனை இளைப்புநோய் எனவுஞ் சொல்லுவர்.

## க்ஷயரோகபேதம்.

வன்மையுள்ள க்ஷயரோகமானது, வாதக்ஷயரோகம் பித்தக்ஷயரோகம் சிலேஷ்மக்ஷயரோகம் திரிதோஷக்ஷயரோகம் என நான்கு விதப்படும்.

## க்ஷயரோகபூர்வரூபம்.

க்ஷயரோகமானது, பீநசம் அதிக இருமல் வாய்நீரூறல் வாயினிப்பு மந்தாக்கினி தேகம்வற்றல் அதிகபோஜனம் இன்பமான பதார்த்தங்களை இன்பமில்லாதுபோல்பார்க்குதல், அன்னபானாதிகளில் மயிர் துரும்பு ஈ எறும்பு இவைகளிருப்பதுபோற் றோற்றல் மார்பு அதிரல் வாந்தி அரோசகம் எப்போதும்போல் புசித்தாலும் துர்ப்பலம் கையைத் திருப்பித்திருப்பிப் பார்க்குதல் முன்காலில் வீக்கம் கண்கள்வெளிறல் இரண்டுகைகளும் இளைத்ததென்றும் இளைக்கவில்லையென்றும் பரீக்ஷைபார்க்குதல் தன்தேகத்தைத்தானே பார்த்துத் திடுக்கெனப் பயப்படுதல் மாதர்களிடத்தும் மாமிசாதிகளிட

* "இளைப்பான ரோகம்" என்பது.

ததியபான்னங்களை ... ம் விருப்பம் வாந்தியிலும் கோழைமிங்கிதமில்லாதிருத்தல், வஸ்திரத்தினால் முக்காடிட்டுக் கொள்ளுதற்கே யிச்சை நகமும் மயிரும் சீக்கிரத்தில் வளரல் ஆகிய இக்குணங்களையும் நித்திரையில் ஓணான் பாம்பு குரங்கு நரி நாய் பெரும்பக்ஷி, சிறுபக்ஷி இவைகளினால் தனக்கு ஒருவேதனை யுண்டானதாகவும், மயிர் எலும்பு உமி சாம்பல் இவைமுதலிய குவியலின்மேல் தான் ஏறினதாகவும், நாடுதேசங்கள் பாழாயினவாகவும், ஏரி குளங்களில் தண்ணீர்வற்றியனவாகவும் நக்ஷத்திரங்களும் மலைகளும் கீழே மோதிவிழுந்தனவாகவும், வீதிகளெரிந்து விழுந்தனவாகவும் காணுகின்ற கனவுகளையும் தனக்குப்பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது. இப்பூர்வரூபங்களைப்பெற்ற க்ஷயரோகம் நாலுக்குள் பதினொரு ரூபங்களையுடைய ஐவகைத் தோஷங்களுண்டு. அவைகளையும் அவற்றாற் பிறக்கும் உபத்திரவத்தையும் முறையே இதனடியிற் காண்க.

## 1-வது ஊர்த்துவகததோஷம்.

பித்தகபஸ்தானத்திற்குமேலாக வாயுவைச் சஞ்சரிக்கச்செய்து பீநசம் இருமல் இரைப்பு தோளிக்நோவு அல்லது தலைநோவு குரற்கம்மல் அரோசகம் என்னும் ஆறு ரூபங்களையுண்டாக்கும்.

## 2-வது அதோகததோஷம்.

நாபிஸ்தானத்தின்கீழ் வாயுவைச்சஞ்சரிக்கச்செய்து அடிக்கடி மலம் நழுகல் வாயுலரல் என்னும் இரண்டுரூபங்களையுண்டாக்கும்.

## 3-வது கோஷ்டகததோஷம்.

வயிற்றிற்குள் வாயுவைச்சஞ்சரிக்கச்செய்து, வாந்தியாகிய ஒரு ரூபத்தைமாத்திரம் உண்டாக்கும். கோஷ்டகதம் என்பது வயிறு.

## 4-வது திரியக்கததோஷம்.

இருபக்கவிலாக்களிலும் குறுக்கேவாயுவைச்சஞ்சரிக்கச்செய்து அவ்விடங்களில் சூலைநோய் என்னும் ஒரு ரூபத்தை மாத்திரம் உண்டாக்கும். திரியக்கு என்பது குறுக்கு.

## 5-வது சந்நிகதோஷம்.

சகல இல்களிலும் வாயுவைச் சஞ்சரிக்கச்செய்து, சுரமாகிய ஒரு ரூபத்தைமாத்திரம் உண்டாக்கும். ஆகதோஷம் (5) ம் அவற்றுள் அடங்கிய பதினொரு ரூபங்களு முற்றுப்பெற்றனவாம்.

## க்ஷயோபத்திரவ நிதானம்.

க்ஷயரோகத்தைக்கொண்ட ரோகிகளுக்கு முற்கூறிய பதினொரு ரூபங்களும் அதிகரிக்கும்போது கண்டத்திலும் மார்பிலும் நோவு தேகவேதனை கொட்டாவி வாயால் கோழைவிழுதல் மந்தாக்கினி வாயில் துர்க்கந்தம் வீசுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 1-வது வாதக்ஷயரோகம்.

சிரசு தோள் கண்டம் ஆகிய இவ்விடங்களில் நோவு விலாப்பக்கங்களில் குத்தல் குரற்கம்மல் கருமை வெண்மை நிறங்கலந்த கோழைவிழுதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 2-வது பித்தக்ஷயரோகம்.

கை கால் முகம் இவைகளில் எரிச்சல் ரத்தவாந்தி பேதி வாயில் துர்க்கந்தம்வீசுதல் மஞ்சள்கோழை அல்லது சிவந்தகோழைவிழுதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மக்ஷயரோகம்.

அரோசகம் வாந்தி இருமல் சிரசும் தேகமும் பாரித்தல் வாயிற் சலமூறல் பீநசம் இரைப்பு ஈனத்தொனி மந்தாக்கினி வெண்மைநிறமாகிய கோழைவிழுதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 4-வது திரிதோஷக்ஷயரோகம்.

அக்கினிமந்தத்தினால், சிலேஷ்ம விருத்திகட்கேதுவான வாதாதிதோஷங்கள் அதிகரித்து நரம்புகளின் துவாரங்களையெல்லாம் அடைத்துச் சப்ததாதுக்களிலும் இருக்கின்ற உஷ்ணத்தை அற்பமாக்கி அவைகளில் ஒன்றாயிருந்த ரசதாதுவைமாத்திரம் அவ்வவ்விடங்

களிலேயே மிகவும் கொதிப்பித்து வற்றப்பண்ணும். அப்படி வற்றிய ரசதாதுவானது, மாமிசதாதுவில் பாயாமல் தனது ஸ்தானத்திலிருந்துகொண்டு மற்றைய தாதுக்களால் பிறக்கின்ற உபத்திரவங்களை யெல்லாம் பிறப்பித்து ரத்தத்தை மேல்நோக்கப்பண்ணும். அப்போது வாதாதி மூன்று க்ஷயரோகங்களுக்குள்ள துர்க்குணங்களெல்லாம் ஏககாலத்தில் உண்டாகும். இவைநிற்க, அன்னபானாதிகளால் உண்டாகிற ரசமானது, முன்பு கெடுதியையடைந்த ரசதாதுவில் சேர்ந்து நற்குணத்தைச் செய்யாதோவென்றால் ஒருக்காலுஞ்செய்ய மாட்டாது. துர்க்குணத்தையே செய்யும். அதன்விவரம்: நித்திய மும்புசிக்கின்ற அன்னத்தைத் தகிக்கப்பண்ணுகிறதெதுவோ அது அன்னத்தைத் தகிக்கப்பண்ணும்போதே, அந்த அன்னத்தால் உண்டாகிற ரசத்தையும் வயிற்றிலேயே தகிக்கப்பண்ணுதலால், அந்தரசமானது மலரூபத்தையடைந்து மலத்தால் மறிக்கப்பட்டுத் தாது விருத்தியையும் ரத்தவிருத்தியையும் கெடுத்து மாமிசதாதுவிற்குப் பலத்தைக் கொடாமல் தேகத்தைச் சுட்கப்பண்ணுகிற முயற்சியிலேயே மிகவுந்துரிதமாயிருக்கு மென்றறிக.

## க்ஷயரோகசாத்தியாசாத்தியலக்ஷணம்.

முற்கூறியக்ஷயரோகிகட்கு, பக்கநோவு வயிறுப்பிசம் ரத்தவாந்தி சீழானவாந்தி இருதோட்களும் அற்றுவிழல்போலிருத்தல் என்னும் இக்குணங்களிருந்தாலும், சீழாகவும் ரத்தம்போற் சிவப்பாகவும் கறுப்பாகவும் கோழைகண்டு இதனுடன் சுரமும் இருமலும் உண்டாகிப், பின்பு தேககாந்தி பலம் தொனி என்னும் இவைகள் நாளுக்கு நாள் குறைவுபட்டாலும், அதிக திண்டி நாளுக்கு நாள் சரீரஞ்சுட்கல் பேதி பீசத்திலும் வயிற்றிலும் வீக்கம் என்னும் இக்குணங்களுண்டானாலும் மேற்கூறிய துர்க்குணங்களெல்லாம் அற்பமாகக்கண்டிருந்தாலும்; தேகஞ்சுட்கித்து அவுஷதஞ்சாப்பிடப்பலமில்லாதிருந்தாலும் அசாத்தியம். இவைகளில்லாதிருந்தால் சாத்தியம். இவைநிற்க, சில ஆயுள்வேதியர் க்ஷயரோகத்தை வாதக்ஷயம் பித்தக்ஷயம் சிலேஷ்மக்ஷயம் திரிதோஷக்ஷயம் வாதபித்தக்ஷயம் சிலேஷ்மவாதக்ஷயம் சிலேஷ்மபித்தக்ஷயம் சுட்கக்ஷயம் சூலைக்ஷயம் ராஜயக்ஷ்மக்ஷயம் விவர்னக்ஷயம் மந்தாக்கினிக்ஷயம் வாந்திக்ஷயம் ஏப்பக்ஷயம் சோஷைக்ஷயம் மூர்ச்சைக்ஷயம் எரிச்சல்க்ஷயம்

விக்கல்க்ஷயம் அரோசகக்ஷயம் பாண்டுக்ஷயமென இருபதாகச் சொல்வர். இவற்றுள், வாதமுதலானநான்கு க்ஷயங்களும் முற்கூறியவைகளேயாம். மற்றை (16) க்ஷயங்களும் அந்நான்கின் உறுப்புகளேயாம்.

ராஜரோகம் என்னும் க்ஷயரோகங்களுக்கு, முத்துப்பஸ்மம் க்ஷயகுலாந்தகமாத்திரை மகாராஜமிருகாங்கம் ஆதியானசிகிச்சைகளும் ஆகும்.

## குரற்ககம்மல்ரோகபேதம்.

குரற்கம்மல் ரோகமானது, வாதகுரற்கம்மல் பித்தகுரற்கம்மல் சிலேஷ்மகுரற்கம்மல் திரிதோஷகுரற்கம்மல் க்ஷயகுரற்கம்மல் மேதோகுரற்கம்மல் என ஆறுவிதப்படும். இவைகளுக்கெல்லாம் பொதுவாகச் சுரஸாதரோகமென்று ஒருபேருண்டு.

## 1-வது வாதகுரற்கம்மல்ரோகம்.

குரல்வளையானது, உள்ளீரம்வறண்டுசுட்கித்து ஒருவேளை முட்சொருகுதல்போல்நோதல், வழுவழுத்த பதார்த்தத்திலும் உஷ்ண பதார்த்தத்திலும் விருப்பம் நடுக்கலானதொனி என்னுமிக்குணங்களையுண்டாக்கும்.

## 2-வது பித்தகுரற்கம்மல்ரோகம்.

குரல்வளையிலும் தாழ்வாய்த்தாளிலும் எரிச்சலுடன் வறட்டல், பேச்சு பேச அசங்கிதம், கம்மியபேச்சு என்னும் இவைகளையுண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மகுரற்கம்மல்ரோகம்.

குரல்வளைக்குள் கோழை பூசினதுபோலிருத்தல், குறுகுறுவென்னும் அற்பசத்தம் கம்மல் வார்த்தை என்னுமிக்குணங்களையுண்டாக்கும்.

## 4-வது திரிதோஷகுரற்கம்மல்ரோகம்.

குரல்வளையை இறுக்கிப்பிடிப்பதுபோ லிருப்பதுமன்றி வாதாதி மூன்று குரற்கம்மலுக்குள்ள குணங்களெல்லாமிருத்தல் தொனி

யை மறிப்பதுபோல் தோற்றல்" கிச்சுக்குரலென்னு மிக்குணங்களை யுண்டாக்கும்.

## 5-வது க்ஷயகுரற்கம்மல்ரோகம்.

குரல்வளையில் மிகவும் புகைகம்மிக்கொண்டதுபோலிருத்தல் குரற்கம்மல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 6-வது மேதோகுரற்கம்மல்ரோகம்

குரல்வளையில் வழுவழுப்புடன் முற்கூறிய சிலேஷ்மகுரற்கம்மல் ரோகத்திற்குள்ள குணங்களையெல்லாம் உண்டாக்கும்.

## சாத்தியாசாத்தியகுரற்கம்மல்ரோகநிதானம்.

குரற்கம்மல்ரோகம் ஆறுக்குள், வாதம் பித்தம் சிலேஷ்மம் க்ஷயம் என்னும் நான்கு குரற்கம்மல் ரோகங்களும் சாத்தியம். மற்றைத் திரிதோஷகுரற்கம்மலும் மேதோகுரற்கம்மலும் அசாத்தியம்.

இந்தக்குரற்கம்மல் ரோகங்களுக்கு ஏலாதிசூரணம் ஜெயரச பஸ்மம் அரக்குத்தயிலம் முதலிய வைத்தியங்களும் ஆகும்.

குரற்கம்மல்ரோகம் முற்றிற்று.

---

## அரோசகரோகபேதம்.

நாவையும் மனதையும் அனுசரித்ததிரிதோஷங்களினால் அரோசகரோகம் பிறக்கும். இது வாதாரோசகம் பித்தாரோசகம் சிலேஷ்மாரோசகம் சந்நிபாதாரோசகம் துக்காரோசகம் என ஐந்துவிதப்படும்.

## 1-வது வாதாரோசகரோகம்.

வாயைத் துவர்ப்பாக்குவதுமன்றி வாயில்வைக்கும் பதார்த்தங்களையும் வாயிலூறுஞ் சலத்தையும் துவர்ப்பாக்கி ஒக்காளம் வருவது போற்செய்யும்.

## 2-வது பித்தாரோசகரோகம்.

வாயை வேப்பங்காயைப்போலக் கசப்பாக்குவதுமன்றி, வாயில் வைக்கும் பதார்த்தங்களேயும் வாயினூறுஞ்சலத்தையும் கசப்பாக்கிக் கசப்பான ஓக்காளம் வருவதுபோற் செய்யும்.

## 3-வது சிலேஷ்மாரோசகரோகம்.

வாயைத் தித்திப்பாக்குவதுமன்றி, வாயில்வைக்கும்பதார்த்தங் களேயும் வாயினூறுஞ் சலத்தையும் தித்திப்பாக்கி, இளகிய கோழை யுடன் இனிப்பான ஓக்காளம் வருவதுபோற் செய்யும்.

## 4-வது சந்நிபாதாரோசகரோகம்.

வாயையும் வாயில்வைக்கும் பதார்த்தங்களேயும் வாயினூறுஞ் சலத்தையும் நானுவித வுரிசைகளாகவும் ஒருவேளே அவ்வுரிசைகள் ஒன்றுந் தெரியாமையாகவும், அவ்வாறே ஓக்காளம் வருவது போல வுஞ் செய்யும்.

## 5-வது துக்காரோசகரோகம்.

துக்கத்தினுலும் கோபத்தினுலும் அதிகரித்த வாதபித்த சிலே ஷ்மங்கள் எந்தப்பிரகாரம் - விகாரத்தையடைந்திருக்குமோ அவைக ளுக்குத் தகுந்தபடி கோழையாகியசலம் ஊறும்; அப்படி ஊறியதை வாயுவானது உள்ளிலிருந்து வெளியில் தள்ளுவதாற்பிறந்து வாயில் கோழையாகிய சலத்தைமாருமல் ஊறும்படிச் செய்யும். இதற்குக் கபப்பிரஜேகமென்றும் ஒருபேருண்டு. இந்தரோகத்தை, மிருது திரவியத்தினுலும் உஷ்ணதிரவியத்தினுலும் வசப்படுத்தவேண்டும்.

பிரேஜகம் என்பது சுரப்பு.

இந்த அரோசகரோகங்களுக்கு நிம்பஅலர்த்தித்திப்பு நவரசத் துவையல் தீபாக்கினிச்சூரணம் வில்வாதிலேகம் ஆதியான சிகிச்சை களே நடத்துவதும் அன்றி ரோகியைச் சந்தோஷப்படுத்தவும்.

அரோசகரோகம் முற்றிற்று.

## வாந்திரோகபேதம்.

வாந்திரோகம் என்பது, வாதவாந்தி பித்தவாந்தி சிலேஷ்மவாந்தி திரிதோஷவாந்தி திருஷ்டான்னவாந்தியென ஐந்து விதப்படும். அன்றியும், கிருமிவாந்தி என்பது ஒன்றுண்டு. இவைகட்கெல்லாம் பொதுவாகச் சர்த்திரோகமென்றும், வமனரோகமென்றும் பெயராம்.

## வாந்திரோகபூர்வரூபம்.

சுபாவகுணத்துடனிருக்கும் உதானவாயு வாதபித்தசிலேஷ்மங்களை மேல்நோக்கப்பண்ணுவதால் பிறந்த வாந்திரோகமானது, வாய் நீர்ஊறல் அரோசகம் துக்கம் வாயிலுப்புக்கரித்தல் என்னுமிக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## 1-வது வாதவாந்திரோகலக்ஷணம்.

நாபிஸ்தானத்திலும் அடிமுதுகிலும் அதிக நோவையுண்டாக்கி இரண்டு விலாப்பக்கங்களிலும் நிற்கின்றவாயுவானது புசிக்குமாகாரத்தைக்கீழிறங்கவொட்டாமல்மேல்நோக்கச்செய்து, கொஞ்சம்கொஞ்சமாக வாயில் நுரையோடுங்கூடத் துவர்ச்சலமாக வாந்திபண்ணச் செய்யும். அப்போது, கண்டத்தில் ஒருசத்தத்துடன் வேதனை கறுத்தசலமாகவும் நல்லசலமாகவும்வேகத்துடன் வாந்தியாகுதல், வாய் வறளல் மார்புநோவு தலைநோவு குரற்கம்மல் இருமல் இளைப்பு என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 2-வது பித்தவாந்திரோகலக்ஷணம்.

உப்புநீராகவும் புகைநிறச்சலமாகவும் பச்சிலைரசவன்னமாகவும் மஞ்சள் வன்னமாகவும் ரத்தத்தோடுபுளிப்பாகவும் காரமாகவும் சுடுகையாகவும் வாந்தியாகும். அப்போது, தாகம் தேகவெரிச்சல் காங்கை தலைசுழலல் மூர்ச்சை என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 3-வது சிலேஷ்மவாந்திரோகலக்ஷணம்.

வழுவழுப்பாகவும் தடிப்பாகவும் சீதளமாகவும் கோழையாகவும் நூலைப்போல் கொடிகொடியாகவும் பூமியில்விழுந்தால் சிறுசிறு

குமிழிகளைப்போல் அனந்தங்கண்கள் விழுவதாகவும் இனிப்பாகவும் உப்பாகவும் ரத்தம் பூசினதுபோலும் விசேஷமாகவும் வாந்தியாகும். அப்போது, ரோமச்சிலிர்ப்பு முகத்திற்கொஞ்சம் அதப்பு சோருதல் வாயில் மிகுந்த இனிப்பு மார்புதுடித்தல் இருமல் என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 4-வது திரிதோஷவாந்திரோகலக்ஷணம்.

இருபக்கத்திலும் இசிவு மார்பிலும் கண்டத்திலும் தலையிலும் நோவு கண்பிதுங்குவதுபோலிருத்தல் கண்ணிலும் நாசியிலும் சலம் பெருகல் சர்வாங்கத்திலும் பொறுத்துப்பொறுத்துக் குபீலென்று எரிச்சலுண்டாகுதல் அதிகதாகம் பிரமை மூர்ச்சை தலைசுழலல் கை கால் விலவிலத்தல் நடுக்கல் தொண்டைக்குள் கொழுவைக்காய்ச்சி வைத்ததுபோல் வேதனைபிறக்குதல் உப்பாகவும் கசப்பாகவும் இனிப்பாகவும் வாயில் சலமூறி வாந்தியாகுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். அன்றியும், வாதமுதலான மூன்று வாந்தி ரோக குணங்களும் அசாத்திய வாந்திரோக குணங்களும் இதில் உண்டாகும். இது சிகிச்சைகளுக்கு வசப்படாது.

## 5-வது திருஷ்டான்னவாந்திரோகலக்ஷணம்.

கபடம் வஞ்சனை கெடுதிநினைப்புமுதலிய துர்க்குணங்களையுள்ளவர்கள் பார்க்கும்படியாகப் புசித்தவனுக்கும்; சகல பதார்த்தங்களோடு திருப்தியாகப் புசிக்கிறவனைப்பார்த்து, நமக்கில்லையேயென்று ஏக்கத்தையடைந்தவனுக்கும் அறுசுவை வருக்கத்தோடு குறைவில்லாமல் புசித்து வந்தவன் தான்புசித்ததைச் சொல்லக்கேட்டு நமக்குக் கிடைக்கவில்லையே என்று விசனத்தை அடைந்தவனுக்கும் வாந்திரோகங்காணும். அந்தவாந்தியில் நாற்றமும் அசுசியும் அதிதுர்க்கந்தமு முண்டாயிருக்கும். இதற்கு திருஷ்டிதோஷம் திருஷ்டார்த்தயோகசம் கண்ணேறு வாந்தி எனவும் பெயராம். இந்தரோகத்திற்குத் தந்திரசாந்தியான எரி எண்ணெய் முதலியவைகளால் வைத்தியம்பண்ணவேண்டும். திருஷ்டம் என்பது பார்வை.

## கிருமிவாந்திரோகலக்ஷணம்.

வாதாதிகளினாலும் திரிதோஷத்தினாலும் கிருமிகள் உற்பத்தியாகி வெளிவதினால், வயிற்றுநோவு தேகம்நடுக்கல் மார்பில் துடித்தலுடன் மிகுந்தநோவு என்னும் இக்குணங்களுண்டாகி வாந்தியாகும். இதில் கிருமிகளும் விழும். இதற்குக்கிருமிசம் என்றும் ஒரு பேருண்டு.

## அசாத்திய வாந்திரோகலக்ஷணம்.

மலமாகவும் ரத்தமாகவும் சீழாகவும் மலமூத்திர நாற்றமாகவும் ரத்தப்புள்ளிகளிருப்பதாகவும் இடைவிடாமல் விசேஷம் விசேஷமாகவும் சீக்கிரஞ்சீக்கிரமாகவும் பூமியில்விழுந்தால் அவைகளில் சல்லடைக்கண்களைப்போல் துவாரங்கள் விழுவதாகவும் வாந்தியாகி இருமலும் இரைப்பும் உண்டாகித் திரிதோஷவாந்தியில் சொல்லிய குணங்களும் பிறந்து வைத்தியத்திற்குக் கட்டுப்படாமலும் இருந்தால் அசாத்தியம்.

இவைகளுக்கு ஏலக்காய்த்தோலும் விலாமிச்சம்வேரும் சேர்த்திறக்கிய கஷாயத்தில் இஞ்சிச்சாறுகூடியரசாயனம் குங்குமப்பூக் குழம்பு பாவனகடுக்காய் மகாவில்வாதிலேகியம் முதலியசிகிச்சைகளும் ஆகும்.

வாந்திரோகம் முற்றிற்று.

---

## மார்புரோகபேதம்.

மார்புரோகமானது, வாதமார்புரோகம் பித்தமார்புரோகம் சிலேஷ்மமார்புரோகம் திரிதோஷமார்புரோகம் கிருமிமார்புரோகம் என ஐந்துவிதப்படும். இவைகட்குப்பொதுவாக இருத்ரோகமென்றும் ஒருபெயருண்டு. இதனைத் தமர்வாதம் என்பது சிலர்பக்ஷம். இருத் என்பது மார்பு, தமர் என்பது துவாரம். இது ருத்திரவாதமென வழங்கப்படுகின்றது.

## 1-வது வாதமார்புரோகம்.

மார்பில் சூலத்தால் குத்துதல்போல் குத்தல் நோவு அதிரல் உடைதல்போலிருத்தல் மரத்தல் மார்பில்லாததுபோல்தோற்றல் உள்

ளில் ஈரமில்லாதுபோலிருத்தல்ஆகிய இக்குணங்களையுண்டாக்குவது மன்றி காரணமில்லாமலே அதயிரியம் துக்கம் பயம் புரளல் பேச்சில் அசங்கிதம் சரீரம்நடுங்கல் மூச்சுப்பிடிப்பு ஒருவேளை திணறலான மூச்சு அற்பநித்திரை என்னும் இக்குணங்களையும் உண்டாக்கும்.

## 2-வது பித்தமார்புரோகம்.

மார்புக்குள் நோவுடன் எரிச்சல் தாகம் மனதிற்பிரமை மூர்ச்சை சரீரம்எரிச்சல் வியர்வை புளியேப்பம் இளைப்பு வாந்தி ஆமல பித்தரோகசூணங்கள் தாமாஅசீரணரோககுணங்கள் என்னும் இக்குணங்களை புண்டாக்குவதுமன்றி, எந்தப்பதார்த்தத்தையாவது புசிக்கவேண்டும் என்கிற இச்சையையும் சுரரோகத்தையும் உண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மமார்புரோகம்.

மார்பைக் கெட்டியாக மூச்சுப் பிடித்ததுபோல் ஸ்தம்பமாக்கிப் பிடித்தல் அவ்விடத்தில் பாராங்கல்லை வைத்ததுபோலிருத்தல் இருமல் மந்தாக்கினி வாயிற்கோழைபெருகல் நித்திரை சோம்பல் அரோசகம் சுரம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 4-வது திரிதோஷமார்புரோகம்.

மார்பில் ஈட்டியால் குத்துதல்போல் ஓடிஓடிக்குத்துதல் அவ்விடத்தில் பிளந்து போவதுபோலிருத்தல் எரிச்சல் கனத்தல் அழுகை பிரமை தாகம் சுரம் ஆகிய இக்குணங்களைப்பிறப்பிப்பதன்றியும், வாதாதிமூன்று மார்புரோக துர்க்குணங்களையெல்லாம் ஏககாலத்திலுண்டாக்கும். இது, மரணவேதனையைத்தருவதால், கஷ்டசாத்தியம்.

## 5-வது கிருமிமார்புரோகலக்ஷணம்.

சிலேஷ்மாதிக்க வஸ்துக்களினாலும் கருணைசேம்புமுதலிய கிழங்குகளினாலும் ஆமாசயஸ்தானத்தில் பெரும் பூநாகத்தைப்போலும் நீர்ப்பாம்பைப்போலும் பெரிதாகவும் சிறிதாகவும் பூச்சிகள் உற்பத்தியாகிச் சாதாரணமாகப் பூமியிற்சஞ்சரிப்பதுபோல் உள்ளேயே குடலில் ஒட்டிப் பின்னிக்கொண்டு இருதயஸ்தானத்திற்கு மேலும்

எதிர்த்தேறுவதால், மார்பில் துடித்தலுடன் அதிரல் அவ்விடத்தில் வீக்கம் அதிக நமைச்சல் ஒருவேளை மார்புதெறித்து விழுவதுபோலும் வாளாலறுபடுவதுபோலுமிருத்தல் கண்கள் கறுப்பாகத்தோற்றல் சிலவேளை இருட்டிக்கொள்ளல் வாயில் கோழைவிழுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இந்த ரோகமானது சுவாசம் வருகின்றமார்க்கத்தையடைத்து அகாலமரணத்தைத் தருவதால் இதற்கு அதிகவிரைவில் கிருமிகள் விழும்படியான கசப்புள்ள விரேசன அவுஷதம் கொடுக்கவேண்டும்.

## சாத்தியாசாத்தியமார்புரோகநிதானம்.

மார்புரோகம் ஐந்திற்குள், வாதமார்பு ரோகமும் பித்தமார்பு ரோகமும் சிலேஷ்மமார்புரோகமும் சாத்தியம். திரிதோஷமார்பு ரோகம் கஷ்டசாத்தியம். கிருமிமார்புரோகம் அசாத்தியம். உடனே தகுந்தசிகிச்சைகள் நடக்குமாகில் கஷ்டத்திலும் கஷ்டசாத்தியம்.

இந்தமார்பு ரோகங்களை, மது நீராகாரம் சுகுமாரவிரேசனம் பன்னீர்ப்பூவாதிக்கஷாயம் மதுஸ்நிகிரசாயனம் மகாவில்வாதிலேகியம் முதலிய சிகிச்சைகளைக்கொண்டு நிவிர்த்திசெய்யவும்.

மார்புரோகம் முற்றிற்று.

மூன்றாவது ரத்தபித்தரோகபடலம் முற்றிற்று.

---

# 4-வது தாகரோகபடலம்.



## தாகரோகபேதம்.

வாதபித்த முயற்சியினால் தாகரோகம்பிறக்கும். இது வாததாகம் பித்ததாகம் சிலேஷ்மதாகம் திரிதோஷதாகம் ரசக்ஷயதாகம் உபசர்க்கதாகம் என ஆறுவிதப்படும். இது சப்ததாதுக்களும் எப்போது இளைத்து மெலியுமோ அப்போது அதிக பலத்துடன் மேலிடுமென்றறிக.

## தாகரோகபூர்வரூபம்.

தாகரோகமானது மனதிற்குப் பிரமையுண்டாக்குதல் அதினால் அவயவங்கள்நடுக்கல் சரீரத்தில் எரிச்சலோடு காங்கை தாகம் சோருதல் நாவின்மூலத்திலும் கண்டத்திற்குள்ளிலும் *குலோமத்திலும் தாடையிலும் சலத்தைத்தாங்கிப் பசையோடிருக்கின்ற நரம்புகளெல்லாம் உலரல் வாயுலரல் எவ்வளவுசலம் அருந்தினும் பூர்த்தியடையாமை அன்னத்திவேஷம் குரற்கம்மல் நெஞ்சுக்குழியிலும் நாவிலும் உதட்டிலும் சலம்வறண்டு வறவறப்பு பாம்புநாக்கைப் போல் அடிக்கடி நாவானது வெளிப்படல் அந்தநாக்கினால் மாறாது உதடுகளைத்தடவல் இளைப்பு பிரலாபம் மனக்கெடுதி மலம் நழுகல் என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப்பெற்றிருக்கின்றது.

## 1-வது வாததாகரோகம்.

இளைப்பு அதயிரியம் நெறிகளதிரல் தலைநோவு வாசனுபங்கம் அரோசகம் காதுமந்தம் நித்திரையும் பலமும் குறைதல் குளிர்ந்த சலம் எவ்வளவு அருந்தினும் தாகமதிகரித்தல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 2-வது பித்ததாகரோகம்.

மூர்ச்சை வாய்க்கசப்பு கண்கள்சிவப்பு மிகவும்நாவறளல் எரிச்சல் வாயிற்புகையெழல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மதாகரோகம்.

நெஞ்சில் முட்சொருகல் போலிருத்தல் நித்திரை வாயினிப்பு ...ப்பிசம் தலைபாரம் தேகமரத்தல் வாந்தி அரோசகம் சோம்பல் ...ணரோகக்குறி என்னும் இச்குணங்களை யுண்டாக்கும். கட...ன்து அதிக்கிரமித்து பசையுள்ளசலநரம்புகளில் வாயுவைச்செல்ல...ஙட்டாமல் மறித்து தானும் சேறுபோற் சோஷிப்பதினால் இந்த...ரகம் பிறக்கும்.

---

*குலோமம் என்பது வலப்பக்கத்து ஸ்தனத்தின்கீழ் குடித்த சலமிறங்கி நிற்கும் இடமாம்.

## 4-வது திரிதோஷதாகரோகம்.

வாதாதிதாகரோகங்களுக்குள்ள குணங்களையெல்லா முண்டாக்கும்.

## 5-வது ரசக்ஷயதாகரோகம்.

நாக்கு உலரல் மதிப்பிரமை தேகஞ்சுட்கல் இளைப்பு எந்தச் சத்தத்திலும் அசங்கிதம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது ரசதாது சீரணப்படுங்காலத்தில் பிறப்பதென்றறிக.

## 6-வது உபசர்க்கதாகரோகலக்ஷணம்.

தித்திப்பு உப்பு முதலிய வஸ்துக்களைப் பிரமாணந்தப்பி அருந்துங்காலத்தும் களைத்தகாலத்தும் சோர்வு அடையுங்காலத்தும் தாபச்சுரகாலத்தும் சரீரத்தில் நெடுநாளாகப்பற்றிய ரோகங்களின் விஷமகாலத்தும் தாகரோகம்பிறக்கும். இதுவே உபசர்க்கதாகரோகமாம். இதற்குத்தந்திரசாந்திகளே முக்கியமாம். உபசர்க்கம் என்பது சேர்க்கை.

## அசாத்தியதாகரோகம்.

அறிவழிந்தகாலத்தும் நாவானது தொழிற்படாமல் ரோகத்தால் வெளியில் நீண்டுவிட்டகாலத்தும் வாய்க்குள் உண்டான ரோகத்தால் தொண்டைக்குள் சலமிறங்காதகாலத்தும் தாகரோகம்பிறந்தால் கொல்லும்.

இவைகளுக்கு வானுகாஷ்டிகக்கஷாயம் அமிர்தாதிச்சூரணம் தாககோபசமனமாத்திரை கர்ப்பூரக்குளிகை முதலிய சிகிச்சைகளும் ஆகும்.

தாகரோகம் முற்றிற்று.

---

## மதாத்தியரோகபேதம்.

சுக்கிலம் காமச்சலம் பலம் கொழுப்பு முதலியவைகளுக்கு மதம் என்றுபேர். இவைகளை அத்தியயம்பண்ணுவதால், இதுமதாத்தியயம் எனப்பேர்பெற்றது. அத்தியயம் என்பது நாசம். இந்த

ரோகமானது வாதமதாத்தியயம் பித்தமதாத்தியயம் சிலேஷ்மமதாத்தியயம் திரிதோஷமதாத்தியயம் என நான்குவிதப்படும். அன்றியும், தும்பிசகம் விக்ஷயம் என இரண்டு ரோகங்கள் தனித்தனியே உண்டாம்.

## மதாத்தியயரோகபூர்வரூபம்.

மதாத்தியய ரோகமானது மிகவுஞ் சோருதல் நானாவிதமலம் நழுகல் இடைவிடாததாகம் உஷ்ணசுரம் சீதசுரம் அரோசகம் மார்பிலும் சிரசிலும் தோட்களிலும் விலாப்பக்கங்களிலும் மர்மஸ்தானங்களிலும் தொடைகளிலும் அதிகநோவு நடுக்கல் கல்லடைத்துக்கொண்டதுபோல் மார்பில் அடைப்பு கண்களில் இருட்கம்மல் இருமல் இரைப்பு நித்திரைப்பங்கம் வியர்வை ஒருவேளை மலபந்தம் வீக்கம் சித்தப்பிரமை பிரலாபம் வாந்தி மார்பிற்சங்கட்டம் மயக்கம் துர்ச்சொப்பனம் என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## 1-வது வாதமதாத்தியயரோகம்.

இரவும்பகலும் நித்திரைப்பங்கம் இரைப்பு நடுக்கல் தலைநோவு துர்ச்சொப்பனங்கண்டு பிரமித்தல் திடீலென்று சரீரங்குலுங்குதல் பைசாசத்தோடும் முன்புஇறந்தவர்களோடும் தான்பேசுவதாகவிருத்தல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 2-வது பித்தமதாத்தியயரோகம்.

தேகம் பச்சிலைரசவன்னமாகவும் மஞ்சள்வன்னமாகவும் தோற்றல் கன்னமும் கண்ணும் சிவப்பாகவிருத்தல் எரிவு சுரம் வியர்வை சோருதல் பேதி தாகம் பிரமை என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மமதாத்தியயரோகம்.

வாந்தி மார்பு அதிரல் அதிகநித்திரை சரீரத்தில் தடிப்புகளுடன் பாரிப்பு என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 4-வது திரிதோஷமதாத்தியயரோகம்.

இது வாதமுதலான மூன்று மதாத்தியய ரோகங்களுக்குள்ள குணங்களையெல்லாம் ஏககாலத்தில் உண்டாக்கும்.

## தும்மிசக விக்ஷயரோகபூர்வரூபம்.

வழக்கமாகப்புசிக்கின்ற வஸ்துக்களைவிட்டு நாள்தோறும் சாராயத்தையும் மாமிசத்தையும் அதிகவிருப்பமோடு மிகுதியும் குடித்துப் புசித்தவர்கட்கு தும்மிசகமென்றும் விக்ஷயமென்றும் இரண்டுரோகங்கள் பிறப்பனவாம். இவ்விரண்டிற்கும் இச்செய்கைகளே பழைய ரூபமாம்.

## 1-வது தும்மிசகரோகம்.

வாயினால் கோழைகோழையாகக்கக்கல் வார்த்தைகேட்க அசங்கிதப்படுதல் நெஞ்சுலரல் அதிகநித்திரை சோம்பல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது தேகத்தைச்சீக்கிரத்தில் நாசம் பண்ணுவதால் தும்மிசகரோகம் எனப்பேர்பெற்றது.

## 2-வது விக்ஷயரோகம்.

தேகம் சிரசு மார்பு ஆகிய இவ்விடங்களில் அதிகநோவு கண்டத்தையிறுக்கிப்பிடித்தது போலிருத்தல் சோருதல் இருமல் தாகம் வாந்தி சுரம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது பலத்தையுஞ் சரீரத்தையும் ஒடுங்கப்பண்ணும். விக்ஷயம் என்பது குறைதல்.

## அசாத்தியமதாத்தியயரோகநிதானம்.

எந்தமதாத்தியயரோகத்திலேனும் அதிகசீதளத்தினால் சொல்லக்கூடாத வருத்தம் உண்டாகிச் சரீரமிகவுஞ்சுட்கித்து முகத்தில் எண்ணெய் தடவினதுபோல் துர்க்குணமும் பிறந்தால் மரணமே.

இவைகளுக்குப் பூரணசந்திரோதயம் காமாங்குரரசம் திரிகடுகாதிமண்டூரம் முதலிய மருந்துகளும்; சரீரத்திற்குப்பலத்தைக்கொடுக்கின்ற எவ்வித ஔஷதிஔஷதங்களும் ஆகும்.

மதாத்தியயரோகம்முற்றிற்று.

---

## மதரோகபேதம்.

மதத்தையுண்டாக்குவது மதரோகமாம். இந்த ரோகமானது வாதமதரோகம் பித்தமதரோகம் சிலேஷ்மமதரோகம் சந்நிபாதமத ரோகம் ரத்தமதரோகம் மத்தியபானமதரோகம் விஷமதரோகம் என ஏழுவிதப்படும். மதம் என்பது அகங்காரம்.

### 1-வது வாதமதரோகம்.

ஈனத்தொனி இடைவிடாதவார்த்தை ஒன்றிருக்க ஒன்றைச் செய்கின்ற கெடுதிநடத்தை தேகத்தில் கறுத்தவன்னம் (அல்லது) சிவந்தவன்னமாகவிருத்தல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

### 2-வது பித்தமதரோகம்.

கோபம் கலகப்பிரியம் சரீரம் மஞ்சள்வன்னம் (அல்லது) சிவப்பு வன்னமாகப்பேதிக்குதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

### 3-வது சிலேஷ்மமதரோகம்.

தியானஞ் செய்பவர்போலிருத்தல் ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாமல் அதிவிரைவாகப் பேசுகின்றவார்த்தை தேகம்வெளுத்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

### 4-வது சந்நிபாதமதரோகம்.

வாதமுதலான மூன்று மதரோகங்களுக்குள்ள குணங்களை எல்லாம் ஏககாலத்தில் உண்டாக்கி விருத்திசெய்யும். இது அசாத்தியம்.

### 5-வது ரத்தமதரோகம்.

தேகமுங் கண்ணும் மரத்தலுடன் பித்தமதரோககுணங்களையு முண்டாக்கும்.

### 6-வது மத்தியபானமதரோகம்.

சரீரத்திற்பலவீசக்கெடுதி முகத்தில் ஒளிநீங்குதல் தொனிகெடல் எவர்களிடத்திலும் நிராசை என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 7-வது விஷமதரோகம்.

முற்கூறிய மதரோகங்களின் குணங்களைப்பார்க்கிலும் அதிக துர்க்குணங்களையும் பிறப்பிப்பதன்றியும் நடுக்கலையும் மிகு நித்திரையையும் உண்டாக்கும். இவ்வேழுமதரோகங்களும் முன்பு (3-ம்) படலத்தில் சொல்லிய ரத்தபித்தரோகங்களின் குணங்களையெல்லாம் பெற்றிருக்கும்.

இவைகளுக்கு சீதோஷ்ணமானவிரேசனம் கார்ப்பாசசூரணம் கூவிளலேகம் விலாமிச்சுச்சந்தனத்தயிலம் முதலிய சிகிச்சைகளும் உதவும்.

மதரோகம் முற்றிற்று.

---

## மூர்ச்சாரோகபேதம்.

மூர்ச்சாரோகமானது வாதமூர்ச்சை பித்தமூர்ச்சை சிலேஷ்மமூர்ச்சை திரிதோஷமூர்ச்சை என நான்குவிதப்படும். அன்றியும் சந்நியாசரோகம் என்பதும் ஒன்றுண்டு.

## 1-வது வாதமூர்ச்சாரோகலக்ஷணம்.

ஆகாயத்தைப்பார்த்தால் நீலவன்னம் கறுப்புவன்னம் சிவப்புவன்னம்போல் தோற்றப்பட்டு மூர்ச்சையுண்டாகி உடனேதெளியும். பின்பு மார்புநோவு நடுக்கல் பிரமை என்னும் இக்குணங்களுண்டாகித் தேகம் இளைக்கும். அப்போது சரீரங்கறுத்து அல்லதுசிவந்து இருக்கும்.

## 2-வது பித்தமூர்ச்சாரோகலக்ஷணம்.

ஆகாயத்தைப்பார்த்தால் மஞ்சள் வன்னமாகவும் சிவப்புவன்னமாகவும் தோற்றப்பட்டு மூர்ச்சையுண்டாகி உடனே தெளியும். பின்புதேகளரிச்சல் காங்கை தாகம் வியர்வை துண்டுதுண்டாக மலம் நழுகல் என்னுமிக்குணங்கள் உண்டாகும். அப்போது தேகம் மஞ்சள்வன்னம் அல்லது கறுத்தவன்னமாகத்தோற்றும். அன்றியும் இரண்டு கண்களும் கலங்கிச் சிவந்தாயது மஞ்சள்நிறத்தைப்பெற்றாவது இருக்கும்.

## 3-வது சிலேஷ்மமூர்ச்சாரோகலக்ஷணம்.

ஆகாயத்தைப்பார்த்தால் மேகங்கள்கம்மினாற்போல் தோற்றப்பட்டு மூர்ச்சையுண்டாய் உடனேதெளியாமல் வெகுநேரம் பொறுத்துத்தெளியும். அப்போது, மார்பதிரலும் வாயில் சலம்வடிதலுமுண்டாகி அவயவங்களெல்லாம் அசைக்கக்கூடாமையாக நனைந்து தடித்த சருமத்தைப்போர்த்துக்கொண்டதுபோல் சரீரம் கனத்திருக்கும்.

## 3-வது திரிதோஷமூர்ச்சாரோகலக்ஷணம்.

முற்கூறிய வாதாதிமூர்ச்சாரோககுணங்களெல்லாம் பிறந்து கோரசேட்டை தவிர்ந்த பித்த அபஸ்மாரரோகத்தைப்போல் இந்திரியவியாபாரங்கெட்டு மூர்ச்சையுடன் விழுந்துகிடக்குந்தன்மை யுண்டாயிருக்கும். இந்தரோகத்திலும் முற்கூறிய சந்நிபாதமதரோகத்திலும் அதிகரித்ததோஷங்களினால் தனக்குத்தானே பிறந்த துர்க்குணங்கள் சந்நியாசரோகச் செய்கையைச் செய்வனவாம். இவைகளுக்கு அவுஷதங்களாற் பயனில்லை.

மேற்சொல்லிவந்த மூர்ச்சாரோகங்களைத் திரிதோஷ பரிகாரமான வமன விரேசன ஆக்கிராண கலிக்கமருந்துகளினாலும் மகாவிஷமுஷ்டித்தயிலமுதலிய சிகிச்சைகளினாலும் பரிகரிக்கவேண்டும்.

மூர்ச்சாரோகம் முற்றிற்று.

---

## சந்நியாசரோகலக்ஷணம்.

வாதபித்த சிலேஷ்மங்களானவை பிராணஸ்தானங்களில் அதிபராக்கிரமத்தோடுசேர்ந்து அதிகரித்துச்சந்நிபாதமாகி மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்களின்செய்கைகளை அடக்கிவிட்டுப் பின்பு தாமும் அடங்கிச் சந்நியாசரோகத்தைப் பிறப்பிப்பனவாம். அப்போது இந்தரோகி திடீரென்று வெட்டிமுறித்த மரத்தைப்போலவே விழுவான், விழும்போது உயிரிருந்தாலும் உயிரில்லாத சவத்தைப் போலவேகிடந்து இறந்துவிடுவான். இதுவே சந்நியாசரோகச்செய்கையாம். ஒருவேளை இவன் பிழைப்பானென்றெண்ணும் வைத்தி

யர்கள் எண்ணம் எதுவாமென்றால், மனிதர்கள் சஞ்சாரமில்லாமலும் பிடித்தேறுவதற்கு ஆதாரமில்லாமலும் ஆழ்ந்து முதலைகளையுடையதா யிருக்கின்ற பெரியமடுவில் விழுந்தவனைப் பிழைப்பானென் றெண்ணுவதுபோலாம். இந்த உவமையின்கருத்து சீதள பிரபலத்தையும் அசாத்தியக்குறிகளையுந் தெரிவித்தது.

இப்படிக்குச் சொல்லியபோதிலும், சிகிச்சாசாரத்திற் சொல்லியபிரகாரம் சிகிச்சைசெய்தால் ஒருவேளை சாத்தியத்திற்கு வந்தாலும் வரும்.

சந்நியாசரோகம் முற்றிற்று.

---

## மூலரோகபேதம்

இது, ஆசனவளையங்களில் கிழங்குமுளைகளைப்போலும் வேர்களைப்போலும் மாமிசமுளைகளைப்பெற்றிருக்குங் காரணத்தால் மூலரோகமெனும் பெயரும்; குதகீலம் குதாங்குரம் துர்நாமம் அரசம் எனும் நான்கு பரியாயப் பேர்களும் உடைத்தாய்ப் பலவிதப் பிறப்பையும் பலவிதப் பேரையும் பெற்றிருந்தாலும் முடிவிலிருவிதப் பிறப்பினுள்ளு மிருவிதப்பேரினுள்ளும் அடங்கு[illegible]தென்விவரம்: தாய்தந்தைகள் வழியாகத் தேகத்தில் கூடவே [illegible] ஒருவிதம்; இதற்குச் சகசமூலரோகமென்றுபேர். கொடிய [illegible] வஸ்துகள் முதலியவையால் சுபாவதேகத்தில் பிறப்பது ஒருவிதம்; இதற்கு உத்தாசமூலரோகமென்று பேர். இவ்விரண்டில் உலர்ந்ததுபோல் சுருங்கியிருப்பது சுட்கமூலயென்றும் ரத்தமுதலியகசிவைத்தருவது ஆர்த்திர மூலமென்றும் பேர்பெறும். இவை நீறக உத்தாஸ்தானம் என்கிற வைத்தியகிரந்தம் மூலரோகத்தை வாதமூலரோகம் பித்தமூலரோகம் சிலேஷ்மமூலரோகம் தொந்தமூலரோகம்திரிதோஷமூலரோகம் ரத்தமூலரோகம் என ஆறுவிதமாகச் சொல்லுகின்றது.

## மூலரோகபூர்வரூபம்.

மூலரோகமானது, அக்கினிமந்தம் மலபந்தம் அடித்தொடைச்சதையிலும் கணுக்கால் கண்டச்சதையிலும் அதிகநோவு ஆயாசம் உடம்புநாளுக்குநாளிளைத்தல் கண்அதைப்பு பேதியல்லது மலக்கட்டு ஆசனத்தில் மிகுநோவு அபானவாயுபறிதல் என்னும் இக்குண

ங்களையும் அவ்வாயு எந்நேரமும் நாபிக்குக்கீழ்வயிற்றில் ஒருசத்தத் தோடும் நோவையுண்டாக்கிச் சஞ்சரித்தலால், நோவுடன் கொஞ்சங் கொஞ்சம் மலம் பிரயாசையாக வெளிப்படல் ஆசனம் குடல் இவற் றிலிரைச்சல் என்னுமிக்குணங்களையும் பின்னும் அவ்வாயுவே மேல் நோக்கலால் இளைப்பு ஏப்பம் அடிக்கடி நீரிறங்கல் சொற்பமலம் நழு கல் எந்தக்காரியத்திலும் புத்திசெல்லாமை சிரசு முதுகு மார்பு என் னும் இவ்விடங்களில் குத்தல் சோம்பல் சரீரத்தில் மாறுவன்னம் பஞ்சேந்திரியங்களுக்கு அயர்ச்சி துர்ப்பலம் கோபம் மனோதுக்கம் என்னுமிக்குணங்களையும் கிரகணிதோஷம் பாண்டு குன்மம் மகோ தரம் என்னும் இவைகளால் உண்டாகுந் துர்க்குணங்களையுந் தனக் குப் பழையரூபமாகப்பெற்றிருக்கின்றது.

## 1-வது சகசமூலரோகம்.

முளையானது கடினமாகவும் யாரேனும் பார்க்கக்கூடாமையாக வும் உள்ளுக்குள்ளே முகங்காணப்பட்டு வெண்மையாய் அதிக உபத்திரவத்தை யுண்டாக்கும். சகசம் என்பது உடன்பிறப்பு.

## 2-வது உத்தரசமூலரோகம்.

அதிகஉஷ்ணத்தால் பிறந்தசீதளம் அழலை கிரந்தி சகிக்கக்கூடா தவுஷ்ணம் மிகுசையோகம் கோபத்தைச்சகித்தல் அதிகஉப்புவஸ்து காரவஸ்து தனநஷ்டம் என்னும் இவைகளினால் சுபாவதேகத்திற் பிறந்து பலவிதமான முளைகளைக்கொண்டு உபத்திரவங்களையுண்டாக் கும்.

## சுட்கமூலரோகம்.

முளையானது உலர்ந்ததுபோல் சுருங்கிக்கொண்டு நோவையுண் டாக்கும். இது வாதசிலேஷ்மத்தினால் பிறக்குமென்றறிக.

சுட்கம் என்பது சுருங்கல்.

## ஆர்த்திரமூலரோகம்.

எந்நேரமும் ரத்தமுதலியகசிவையுண்டாக்கும். இது ரத்தத்தி னாலும் பித்தத்தினாலும் பிறக்குமென்றறிக.

ஆர்த்திரம் என்பது கசிவு.

## 1-வது வாதமூலரோகலக்ஷணம்.

முளைகள்உலர்ந்தும் வாடியும் நெறித்தும் பரபரப்புடன்சிவந்தும் கறுத்தும் மேடுபள்ளமாகவும் கடினமாகவும் சுறசுறத்தும் நெருங்கியும் வளைந்தும் முனைகூர்மையாகவும் முகம்விரிந்தும் குத்தலோடு நெருப்பிட்டதுபோல் எரிச்சலாகவும் இருக்குதல் அம்முளைகள் கோவைப்பழம் இலந்தைப்பழம் பேரீச்சங்காய் பருத்திக்காய் கடுகு கடப்பம்பூ இவைகளின் பிரமாணங்களையும் நிறங்களையும் ஒத்திருக்கும். மேலும் இந்தரோகிக்குச் சிரசு விலாப்பக்கம் தோள் இடுப்பு தொடை இருகவுட்டி ஆகிய இவ்விடங்களில் அதிகநோவு தும்மல் ஏக்காளம் மலபந்தம் மார்புஅதிரல் அரோசகம் இருமல் இரைப்பு விஷமாக்கினி காதிரைச்சல் பிரமை என்னுமிக்குணங்களுண்டாவதன்றியும் முக்கலினால் ஆசனத்தில் மிகுநோவுண்டாகிக் கொஞ்சங் கொஞ்சமாக இரைச்சலோடுங்கூட அடிக்கடி வருவதுபோல் துண்டு துண்டாக நுரைத்துப் பிசின்போலவே மலம்விழும்; விழுந்தாலும் நடுவேயிருக்கின்றமலம் மிகவுந்தீய்ந்து கெட்டிப்பட்டதுபோலவேயிருக்கும். இந்த மலமும் மூத்திரமும் கண்களும் முகமும் சருமமும் நகங்களும் கறுப்பாகவேதோற்றும். இந்தரோகம் நாள்பட்டதேகத்தில்பற்றுமாகில் குன்மரோகத்தையும் பிலீகரோகத்தையும் மகோதரரோகத்தையும் அஷ்டிலாரோகத்தையும் உண்டாக்கிவிடும்.

## 2-வது பித்தமூலரோகலக்ஷணம்.

முளைகள் சிவந்தநிறமாகவும் மஞ்சள்நிறமாகவும் காந்தியாகவும் வெண்மையாகவும் முனைகறுத்துமெல்லியதாகவும் கொஞ்சம் ரத்தத்துடன்துர்க்கந்தமாகவும் கொஞ்சமிருதுவாகவும் அசையப்படுவதாகவும் இருக்கும். முளைகள் *யகிருதிகண்டம் அட்டைமுகம் இவைகளையொத்திருக்கும் இந்தரோகிக்குத்தாகம் சீரணம் சுரம் வியர்வை உதடுலரல் மூர்ச்சை அரோசகம் சோருதல் என்னும் இக்குணங்களுண்டாகி உஷ்ணத்தோடு சலமாகவும் மஞ்சளும் சிவப்பும் கலந்த நிறமாகவும் கொதிப்பாகவும் சீதமாகவும் மலம்விழும். அன்றியும், சருமம் முகம் முதலான அவயவங்கள் கோதுமைச்சாராய் பச்சிலைரசம் இளமஞ்சள் இவைகளின் வன்னமாகத்தோற்றும்.

---

* யகிருதிகண்டம் என்பது கறுத்தமாமிசகண்டம்.

## 3-வது சிலேஷ்மமூலரோகலக்ஷணம்.

முளைகள்பெருத்து ஆழ்ந்தவேருள்ளதாகவும் வெண்மையாகவும் உப்பலாகவும் அடிபட்டதுபோல நைந்ததாகவும் மினுமினுப்பாகவும் முறைத்ததாகவும் வட்டமாகவும் கனத்ததாகவும் அசையாமையாக வும் எண்ணெய்க்கசிவாகவும் நீங்காதவழுவழுப்புள்ளதாகவும் அற்ப நோவைத்தருவதாகவும் நமைச்சலுள்ளதாகவும் சொறிந்தால் இத வுள்ளதாகவும் இருக்கும். அம்முளைகள் மூங்கில்முளை பலாப்பிஞ்சு எலும்பு திராக்ஷைப்பழம் இவைகளையொத்திருக்கும். இந்தரோ கிக்கு இரண்டுகேவுட்டியிலும் உப்பல் குதஸ்தானத்திலும் அடிவயிற் றிலும் தொப்புளிலும் அறுப்பதுபோல்நோவு இருமல் இரைப்பு மார்புதுடித்தல் வாய்நீரூறல் அரோசகம் பீநசம் சோர்வு ஒழுக்கு மூத்திரம் தலைநோவு குளிர்ச்சுரம் விந்துநஷ்டம் அக்கினிமந்தம் வாந்தி அசீரணமுதலிய விகாரங்களுண்டாகி வசம்பு நாற்றத்தோடு சீதமும் நுரையுங்கூடியதாக அடிக்கடி அதிகமாக மலம் விழும். அன்றியும் தேகத்திற் சருமத்துடன் அவயவங்களெல்லாம் வெண் மையாகவும் மினுமினுப்பாகவு மிருக்கும். இது எளிதில் வசப்படா தென்றறிக.

## 4-வது தொந்தமூலரோகலக்ஷணம்.

முளைகளில் வாதமூலகுணமும் சிலேஷ்மமூலகுணமும் உண் டாயிருக்கும். இப்படியே மற்றையதொந்தங்களையும் அறியவேண் டும்.

## 5-வது திரிதோஷமூலரோகலக்ஷணம்.

முளைகளில் மேற்கூறியவாதம் முதலிய மூன்று மூலரோகங்க ளுக்குள்ள குணங்களெல்லாம் உண்டாயிருக்கும்.

## 6-வது ரத்தமூலரோகலக்ஷணம்.

இந்தமுளையானது பித்தமூலமுளைகளையும் ஆலந்தளிர்முகிழை யும் ஒத்திருப்பதும்அன்றி மலத்தினால் அடிபடுவதால் இம்முளையில் நின்றும் கெட்டிராகின்ற ரத்தமானது உஷ்ணத்தோடும் விசேஷமா பொழுகும். இந்தரோகிக்கு ரத்தப்போக்கு அதிகமாகையினால் தேகம் கொக்கைப்போல் வெளுத்துச் சகலவேதனையும் உண்டாகிப்

பிறகு சரீரநிறமும் பலமும் உற்சாகமும் ஒளிவும் பஞ்சேந்திரியங்களுடைய பலமும் அதிசீக்கிரத்தில் கெடும். இவைநிற்க மூலரோகம் ஆறுக்குள் நான்காவது இலக்கத்தில் வாதபித்தம் வாதசிலேஷ்மம் சிலேஷ்மபித்தம் என இரண்டிரண்டு தோஷமாக மூன்றுசேர்க்கையைப் பெற்றிருக்கும் தொந்தமூலம் ஒன்றையே சிலர் மூன்றாகக் கொண்டு மூலரோகம் எட்டுவிதமென்று சொல்லுகிறார்கள். அன்றியும் சிந்தாமணி என்னும் ரோகநிதானநூல், மேற்கூறிய ஆறுவிதத்துடன் மூலரோகம் இருபத்தொன்றென்று சொல்லுகிறது. இவ்விரண்டும் அவ்வவ்வாசரியர்களின் கொள்கைகளாம். ஆதலின் அவைகள் விடப்பட்டன. இஃதன்றியும் இது நவமூலமெனவும் சொல்லப்படுகின்றது. இன்னும் மூலரோக முளைகள் உள்ளில் மறைந்திருந்தால் உள்மூலமென்றும், வெளிப்பட்டிருந்தால் வெளிமூலமென்றும், செண்டுபோலிருந்தால் செண்டுமூலமென்றும், அதில் சீழ்கசிந்தால் சீழ்மூலமென்றும், ரத்தங்கசிந்தால் ரத்தமூலமென்றும், சலங்கசிந்தால் சலமூலமென்றும் ஆணிபோலக்கடினமாயிருந்தால் ஆணிமூலமென்றும், கிரந்தியுடனிருந்தால் கிரந்திமூலமென்றும், அந்தமூலரோகம் ஆறையுமே பலபலவிதமாகச் சொல்லுகிறார்கள்.

## வளையமூலசாத்தியாசாத்தியம்.

அபானவாசலுக்குள் அடிவளையம் நடுவளையம் மேல்வளையம் என மூன்றுவளையங்கள் இருக்கின்றன. அவற்றுள் அடிவளையத்தில் திரிதோஷங்களால் சகசமூலமுளை ஆதியான முளைகள்பிறந்தால் அசாத்தியமென்றே சொல்லவேண்டும். ஆயினும் ஒருவேளை அக்கினிச்சூட்டினாலும் காரசாரத்தினாலும் ஆயுதத்தினாலும் சாத்தியப்பட்டாலும்படும். இரண்டாம் வளையமான நடுவளையத்தில் உபயதோஷங்களினால் பிறந்த முளைகள் சாத்தியம் ஆவதுபோலாகி வருஷந்தோறுங் கண்டு மறைவதாயிருக்கும். இது கஷ்டசாத்தியம். மூன்றாம்வளையமாகிய மேல்வளையத்தில் ஒரு ஒரு தோஷத்தால் பிறந்த முளைகள் அதிசீக்கிரத்தில் சுகசாத்தியமாம்.

## அசாத்தியமூலரோகநிதானம்.

எந்த மூலரோகிக்கேனும் கை கால் நாபி ஆசனம் பீசம் முகம் என்னும் இவ்விடங்களில் வீக்கங்காணில் மரணமே.

மேற்சொல்லிய மூலரோகங்களை சூரணலேகியம் கச்சபலேகியம் கெந்தகவடகம் முதலிய அவுஷதங்களைக்கொண்டும் க்ஷத்திரக்ஷாராக்கினி சிகிச்சைகளைக்கொண்டும் வசப்படுத்தவேண்டும்.

மூலரோகம் முற்றிற்று.

---

## உதாவர்த்தரோகலக்ஷணம்.

வாததேகிகட்குப் பயறு வரகு சோளம் மூங்கில்முளை கடலை காரவஸ்து மலபந்தவஸ்து ஆகிய இவைகள் விசேஷமாகச் சேருங்காலத்தில் தனதுஸ்தானத்தில் நின்ற வாயுவானது பராக்கிரமத்துடன் அதிகரித்து அதோகாயமான அடிவயிறுமுதல் பாதம்வரைக்குமிருக்கின்றநரம்புகளைத்தடுத்து முற்கூறிய அதோகாயத்தைச் சூம்பலாக்கி குதத்தில் நோயையும் மலபந்தத்தையும் மூத்திரச் சிக்கலோடு வெகு உபத்திரவத்தையும் உண்டாக்கும். இது குதகீலம் முதலிய பரியாய நாமங்களையுடைய மூலரோகங்களுக்குள் மிகுதியும் உபத்திரவங்களைச் செய்வதினாலும் கொடிதாயிருப்பதினாலும் உதாவர்த்தம் எனப் பேர்பெற்றது.

## உதாவர்த்தரோக அசாத்தியம்.

ரோகத்தினால் தேகம் மிகவும்மெலிந்தும் அதி உபத்திரவத்துடன் வயிறுபெருத்தும் கண்கள்குழிவிழுந்தும் இருந்தால் அசாத்தியம். இவை இல்லாதிருந்தால் சாத்தியம். இதற்கு மூலரோகச் சிகிச்சைகளும் உதவும்.

உதாவர்த்தரோகம் முற்றிற்று.

---

## சருமகீலரோகபேதம்.

வியானவாயுவானது சிலேஷ்மத்தை உள்ளிழுத்துக்கொண்டு குதஸ்தானத்தைச் சுற்றிலும் இருக்கின்றசருமத்தின்மேல் வசியைப்போல் உறுதியாகவும் சுறசுறப்பாகவும் சிறுசிறு ஆணிகளைப்போல் முளைகளைப் பிறப்பிக்கும். இது வாதசருமகீலம் பித்தசருமகீலம்

சிலேஷ்மசருமகீலம் என மூன்றுவிதப்படும். இது குதஸ்தானசரு மத்தின் மேலாணிகளைப்போல் இருப்பதால் சருமகீலரோகம் எனப் பேர்பெற்றது. கீலம் என்பது ஆணி.

## 1-வது வாதசருமகீலரோகம்.

முளைகள்பருத்துக் கெட்டியாயும் நோவையுடையனவாயுமிருக்கும்.

## 2-வது பித்தசருமகீலரோகம்.

முளைகள் கறுத்தும் சிவந்து முபத்திரவத்தைத் தருவனவாயுமிருக்கும்.

## 3-வது சிலேஷ்மசருமகீலரோகம்.

முளைகள் வழுவழுத்து வெளுத்து ஊசியால் குத்துவதுபோல் குத்தலைத்தருவனவாயிருக்கும். இவைகட்கு அதிவிரைவில் ரசத் தயிலம் கெந்தகசூரணம் ரஸபஸ்மம் முதலிய சிகிச்சைகளைச் செய்ய வேண்டும். செய்யாவிடில் அம்முளைகள் அபானவழியை யடைத்து மலபந்தத்தையும் வயிறுபருத்தலையுஞ் செய்யும். இதனால் பலவித உபத்திரவம் உண்டாம்.

சருமகீலரோகம் முற்றிற்று.

---

## அதிசாரரோகபேதம்.

நோயால் இளைத்த மிருகமாமிசம் கெட்டுலர்ந்தமாமிசம் வெந் தும் வேகாதபதார்த்தம் பிண்ணாக்கு கிழங்குமுதலிய மந்தவஸ்து மத்யபானம் காரவஸ்து அதிதிண்டி மூலரோகம் எண்ணெய் மிகு நடை வயிற்றில் கிருமிநிறைவு *பதினாலுவேகத்தை யடக்குதல் பேதியாகின்ற வஸ்து ஆகிய இவைகளால் வாயு அதிகரித்துச் சப்த தாதுக்களையும் உதராக்கினியையும் கெடுத்து மலப்பையிற் சேர்ந்து கொண்டு கெட்டியாயிருக்கின்ற மலத்தைச்சலமாகக்கரைத்து அபா

---

*பதினாலுவேகத்தை தோஷாதிபேத படலத்தில் காண்க.

னவழியால் ஒழுகப்பண்ணும். இதுவே அதிசாரரோகமாம். இது வாதாதிசாரம் பித்தாதிசாரம் சிலேஷ்மாதிசாரம் திரிதோஷாதிசாரம் பயாதிசாரம் துக்காதிசாரம் என ஆறுவிதப்படும். இந்த ஆறு அதிசாரரோகங்களுக்கும் வாயுவேகர்த்தாவாம். இது மலத்தை விரைவில் சலரூபப்படுத்தி அதிகமாகப்பேதியாக்கலால் அதிசாரரோகமெனப் பேர்பெற்றது.

## அதிசாரரோகபூர்வரூபம்.

அதிசாரரோகமானது மார்பு குதம் வயிறு ஆகிய இவ்விடங்களில் நோதல் உடம்புஇளைத்தல் மலபந்தம் வயிற்றுப்பிசம் அசீரணம் என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## 1-வது வாத அதிசாரரோகலக்ஷணம்.

மலமானது வாயுவினால்கரைந்து சலரூபமாகி அபானத்தில் பரபரவென்னும் இரைச்சலையும் நோவையும்உண்டாக்கிப் பேதியாகிறதுமன்றி கட்டுப்பட்டதுபோல் விருவாகவும் கொதிப்பாகவும் நுரையோடு சுபாவமாகவுந் துண்டுதுண்டாகவும் மலம்நழுகும். இதனாலாசனமானது பசையற்றுக்காய்ந்ததுபோல் தோற்றுவதாயும் கத்தியால் அறுப்பதுபோல் நோவைத்தருவதாயும் கொஞ்சம் சீதஞ் சுற்றிக்கொண்டதாயும் வெளிப்படும். அப்போது வாயுலரல் உரோமஞ் சிலிர்த்தல் அறிவுகெடுதல்என்னும் இக்குணங்களுண்டாகும். அன்றியும் வயிற்றிற் பொருமலுடன்நோவு சூலை அடிவயிற்றில் பிடுங்கல் சரீரமுழுதும் நோவுடன் மலமிறங்கல் சிலவேளை செரித்துஞ் செரியாமலுமாகிறபேதி சிலவேளை இறுகலாயும் மஞ்சளாயும் கறுப்பாயும் துர்க்கந்தத்துடன் வெளுப்பாயும் பேதியாகுதல் புளியேப்பம் வாந்தி மயக்கம் மலபந்தம் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 2-வது பித்த அதிசாரரோகலக்ஷணம்.

மலமானது மஞ்சள் கறுப்பு பச்சிலைரசம் பசும்புற்றரை ரத்தம் ஆகிய இவ்வன்னங்களைப்பெற்று துர்க்கந்தத்துடன் வயிற்றிலும் ஆசனத்திலும் நோவையுண்டாக்கி அசீரணத்துடன் இளகிப் பேதியாகும். அப்போது தாகம் மூர்ச்சை வியர்வை எரிச்சல் என்னும்

இக்குணங்கள் உண்டாகும். அன்றியும் மலம் அதிகமாக வறண்டு நுரை நுரையாய்ப் பேதியாகுதல் வாதாதிக்கம் தேகவாட்டத்திலும் கைகால்வீக்கம் அதிககாங்கை தேகம்வெளிறல் தலைவலி வாந்தி வயிற்றுவலி உழலை கழுத்தில் நோவுடன் விரணங்காணல் என்னும் இக்குணங்க ளுண்டென்பாருமுளர்.

## 3-வது சிலேஷ்மஅதிசாரரோகலக்ஷணம்.

மலமானது தடித்ததாகவும் எண்ணெய்கலந்ததாகவும் நூல் போல் கொடிகொடியாகவும் அதிக வெண்மையாகவும் மினுமினுப் பாகவும் அசீரணப்பட்டதாகவும் சிதைந்ததாகவும் பொறுத்துப் பொறுத்து வருவதாகவும் விடாதநோவுடன் துர்க்கந்தமாகவும் ஆச னத்தில் மிகுந்த பளுவையுண்டாக்கிப் பேதியாகும். அப்போது அதிகநித்திரை சோம்பல் அன்னத்திவேஷம் ரோமச்சிலிர்ப்பு மனோ துக்கம் ஆசனத்திலும் கீழ்வயிற்றிலும் மேல்வயிற்றிலும் கனத்தல் மருந்து சாப்பிட்டாலும் சாப்பிடாது போலவே ஞாபகம் என்னு மிக்குணங்களுண்டாகும். அன்றியும் நுரை நுரையாக வயிற்றுவலி யுடன் பேதியாகுதல் அடிவயிறுவலித்தல் அருசி இருமல் சுவாசம் அஸ்திகளெல்லாம் கூசுதல் ஆசனங்கடுத்தல் சரீரமுழுதும் நமைச் சல் கபாதிக்கம் தும்மல் தேகம் வெளிறல் நீரடைத்தல் என்னும் இக்குணங்களுண்டாகுமென்பாருமுளர்.

## 4-வது திரிதோஷ அதிசாரரோகலக்ஷணம்.

முற்கூறிய வாதாதிசாரரோகம் முதலிய மூன்று அதிசாரகுண ங்களெல்லாம் இதில் உண்டாயிருக்கும். அன்றியும் சலம்சாப்பிட் டால் அது செல்லவேண்டிய மார்க்கந்தப்பி நரம்புத்துவாரங்களில் விழுந்து அந்த நரம்புகளையழுகப்பண்ணி அபானவாயுவோடுகூடி மலப்பைக்குள் புகுந்து மூலாக்கினிக்குக் கீழேபொருந்திய அசனத் தைச் செரிக்கவொட்டாது. அப்போது உள்ளில் எரிச்சல் வெளி யிற்குளிர்ச்சி கைகால் சில்லிடல் கண்டபேருடன் புலம்பல் எழுந்தி ருந்து ஓடல் ஆடல் கோபம் விக்கல் வயிற்றைச்சுருக்கியிழுத்துப் பிடிக்குதல் ரத்தமுஞ் சீதமுங்கலந்த கழிச்சல் தேகநடுக்கல் அநித் திரை அறிவின்மை நாவறளல் சரீரத்தில் திமிர்என்னும் இக்குணங் கள் உண்டென்பாருமுளர்.

## 5-வது பயாதிசாரரோகலக்ஷணம்.

பயத்தினால் மனதுகலங்கித் தபிக்கின்றகாலத்தில் பித்தம்பிறக்கும். அந்தப்பித்தத்தில் வாயுவுங்கூடிப் பலத்துக்கொண்டு மலப்பையைக் கலக்கிவிட்டு முன்சொன்ன பித்தவாத அதிசாரரோகங்களுக்குள்ள குணங்களை யெல்லாம் உண்டாக்கும். அப்போது சலஞ் சலமாகவும் கொதிப்பாகவும் அடிக்கடி விசேஷமாகப் பேதியாகும்.

## 6-வது துக்காதிசாரரோகலக்ஷணம்.

துக்கத்தினால் மனதுதபிக்கின்றகாலத்தில் வாயுவானது அதிகரிக்கும்; அத்துடன் பித்தமுங்கூடிக்கொண்டு முன்புசொன்னபயாதிசாரரோக குணங்களையெல்லாம் உண்டாக்கும்.

## சாமநிராமாதிசாரரோகலக்ஷணம்.

அதிசாரரோகமானது முன்புகூறியபடி ஆறுவிதப்பிறப்பைப் பெற்றிருந்தாலும் முடிவில் சாமாதிசாரமென்றும் நிராமாதிசாரமென்றும் இருவிதப்பிறப்பினுள் அடங்கும். இவைகளை இதனடியிற் காண்க.

## 1-வது சாமாதிசாரரோகலக்ஷணம்.

செரியாமல் பேதியாகுவது சாமாதிசாரமாம். இந்தரோகத்தில் மலமானது மந்தத்துடன் துர்க்கந்தமாகப் பேதியாகுவதுமன்றி வயிற்றில் இரைச்சல் கொஞ்சமலபந்தம் இதனால் வயிற்றில்நோவு வாய்நீரூறல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இதனை அசிரணபேதியென்றுஞ் சொல்வர். இது ரத்தத்துடன் கூடிப்பேதியானால் ரத்த அதிசாரரோகம் எனப்பேர்பெறும்.

சாமம் என்பது அசீரணம்.

## ரத்தாதிசாரரோகலக்ஷணம்.

முன்பு அதிசாரபூர்வரூபத்திற் சொன்ன வஸ்துக்களை அல்லாமலும் பித்தாதிக்கவஸ்துக்கள்கூடிய அன்னபானாதிகளின் சேர்க்கையால் பித்தமானது அதிகரித்து ரத்தத்தைக்கெடுத்து அபானவழியினால் ஒழுகச்செய்து ரத்தாதிசாரரோகத்தை யுண்டுபண்ணும். அப்

போது தாகம் வயிறுநோவு சரீரஎரிச்சல் ஆசனம் வெளிப்படுதல் என்னும் இக்குணங்களுண்டாகும். இது கனத்தரோகம் ஆகையால் ரோகியைக் கபத்தில் அழுத்துவதற்குமுன்னமே அவுஷதங் கொடுக்கவேண்டும்.

## 2-வது நிராமாதிசாரரோகலக்ஷணம்.

செரித்துப் பேதியாகுவது நிராமாதிசாரமாம். இந்தரோகிக்கு மலமானது செரித்து உஷ்ணத்துடன் பேதியாகும். இதனை உஷ்ண பேதி என்றுஞ் சொல்வர். இது அதிகரித்தால் கபத்தில் அழுத்திக் கொல்லும். நிராமம் என்பது அபக்குவம் அல்லாதது.

## குதப்பிரம்ஸரோகலக்ஷணம்.

மலபந்தத்தினால் மெத்தவும் முக்குகிறவர்களுக்கும் அதிசார ரோகங்கண்டவர்களுக்குஞ் சரீரஞ் சுட்கித்து மிகவுந் துர்ப்பலமாய் இருக்கிறவர்களுக்கும் ஆசனம்வெளிப்படும். இதுவே குதப்பிரம்ஸ ரோகமாம். இதனை குதநெகிழ்ச்சிரோகம் ஆசனரோகம் ஆசனமூடி அடி எனவுஞ் சொல்வர். குதம் என்பது மலத்துவாரம். பிரம்ஸம் என்பது வெளிப்படல்.

## சித்தர்மதாந்தரம்.

சிந்தாமணி என்னுஞ் சாஸ்திரம் அதிசாரத்தை வாதாதிசாரம் பித்தாதிசாரம் சிலேஷ்மாதிசாரம்சந்நிபாதாதிசாரம்தோஷாதிசாரம் திரிதோஷாதிசாரம் சுராதிசாரம் என ஏழுவிதமாகச் சொல்லுகின்றது. இவற்றுள் வாதமுதல் நான்கு அதிசாரங்களும் முற்கூறியவைகளேயாம். அந்நான்கில் ஒன்றாகத் திரிதோஷாதிசாரம் இருப்பதினாலும் சந்நிபாதமென்றும் தோஷமென்றும் அந்தத்திரிதோஷத்திற்கே அர்த்தமாகையினாலும் இவ்விரண்டையும் நீக்கி சுராதிசார மாத்திர மிதனடியிற் கூறப்படும்.

## சுராதிசாரரோகம்.

சுரம் மூர்ச்சை பிரலாபம் அடித்தொடையுங்கீல்களுங் கடுத்தல் தாகம் கடுப்பு சரீரங்காந்தல் நீரடைப்பு உஷ்ணம் இருமல் பேதியிலும் நானாவிதமான பேதி என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

மதாந்தர முற்றிற்று.

## சாத்தியாதிசாரரோகலக்ஷணம்.

பேதியில் பலநிறம் இல்லாமல் ஒருநிறமாகவிருத்தல் பஞ்சேந்திரியத்தன்மை கெடாதிருத்தல் முகத்தில் தேசசு குயிலோசைபோன்ற கண்டத்தொனி போசனத்தில் அபேக்ஷை தும்மல் தினவு பற்கள் முல்லையரும்பை ஒத்திருத்தல் வாய்சிவந்து மேல் நாக்கில் சலமூறல் சாப்பிட்டவுடன் வியர்வையுண்டாகி உலரல் உள்ளங்கை உள்ளங்கால் சிவத்தல் நகக்கண்களில் ரத்தம் இருக்குதல் நித்திரை தூரப்பார்வை தோற்றல் சரீரஞ் சுபாவமாகச்சிவந்து சவுக்கியமாக இருத்தல் நாடி சமநடையுடன் உறுதியாக நடக்குதல் என்னும் இக்குணங்களுண்டாகில் சாத்தியம்.

## அசாத்தியாதிசாரரோகலக்ஷணம்.

அதிசாரரோகிகட்கு மாமிசம் *யகிருதிகண்டம் கரி மை எண்ணெய் நெய் பால் தயிர் () வசாசலம் கள் என்னும் இவைகளைப் போல் பேதியானாலும் தயிர்ச்சலம் தலைமூளை சீழ் திராக்ஷிப்பழக் கிஷாயம் தேன் இவைகளைப்போல் பேதியானாலும் அதிக சிவப்பு மிருகறுப்பு எண்ணெய்ப்பசை சுபாவமலம் இவைகளைப்போல் துர்க்கந்தத்துடன் அதிக வேதனையைத்தந்து பேதியானாலும் சப்ததாதுக்களும் குறைந்து பலவன்னமாகவும் கட்டுப்பட்டதாகவும் ஒருவேளை மிருதியாகவும் பேரிச்சங்காய் வன்னமாகவும் அதிக விருத்தத்துடன் பேதியானாலும் பேதியானமலத்தில் குழிகுழியா யனந்தந்துவாரம் விழுந்தும் இழுத்தாலறுபடாமல் பிசின்போல் நீண்டும் ஈக்கள்மொய்த்தும் மயிலிறகின் நிறத்தைப்போல் பலபலநிறம் தோற்றப்பட்டாலும் அஸ்திகளிலும் கீல்களிலும் மிக நோவு உண்டாகி பேதியும் நில்லாமலாசனம்வெளிகண்டு அவ்வாசனத்தின்மேல் சுரித்தலான மடிப்புகளும் உண்டாயிருந்தாலும் குதமானது வெளியில் நீண்டு புசித்த அன்னம் அப்படியே நித்தியமும் பேதியில்விழுந்து வெகுதுர்ப்பலம் உண்டானாலும் தாகம் மேற்சுவாசம் சுரம் கோழை வாந்தி விக்கல் வியர்வை சரீரஎரிச்சல் வயிற்றுப்பொருமல் கனபேதி என்னுமிந்

---

* யகிருதிகண்டம் என்பது இருதயத்திற்கு வலப்புறத்தில் இருக்கும் கறுத்த மாமிசகண்டம். () வசாசலம் என்பது மாமிசத்துடன் கலந்து பசையோடுங் கூடியிருக்குஞ்சலமாம்.

குணங்களுண்டாயிருந்தாலும் அசாத்தியக் குறிகளென்றே நிதானிக்கவேண்டும். அதிக மந்தவஸ்துக்களை மிகவும் புசித்து அக்கினிமந்தப்படுவதால் மலமானது சீரணித்தும் சீரணிக்காமலும் அன்ன சீரணகாலந்தோறும் பேதி உண்டாகும். இது சுபாவமாகவே அதிக மலத்தை விரைவில் தள்ளுங்காரணத்தால் அதிசாரரோகம் எனப் பேர்பெற்றது. இதற்கு தயிர்ச்சுண்டிச் சூரணம் சப்தகபாட மாத்திரை லோகநாதரசம் நாகராதிபூஷணம் முதலியதகுந்தவைத்தியஞ் செய்யவேண்டும். செய்யாவிடில் இதில்நின்றும் கிரகணிரோகம் உண்டாம்.

அதிசாரரோகம் முற்றிற்று.

---

## கிரகணிரோகலக்ஷணம்.

மேற்கூறிய அதிசாரரோகத்தில் வாதாதித்திரிதோஷ விகற்பத்தால் சீரணகாலத்தும் அசீரணகாலத்தும் சுபாவமலமாகவும் சீதங்கலந்ததாகவும் செரித்ததாகவும் ஒருவேளை செரியாததாகவும் காரணமில்லாமல் கட்டுப்பட்டதாகவும் நிரேதுவாகவே அதிகரித்ததாகவும் நானாவிதநிறமாகவும் அடிக்கடி விசேஷ மலமாகவும் பேதியாகும். இதுவே கிரகணிரோகமாம். இது அதிசாரரோகத்தைத் துணையாகப்பிடித்துவருதலால் கிரகணிரோகம்எனப் பேர்பெற்றது. இதனைக் கிராணிஎன்று சொல்வதுமல்லாமல் மலமாகப் பேதியாகில் கழிச்சலென்றும் சீதமாகப்பேதியாகில் சீதக்கழிச்சலென்றும் ரத்தமாகப் பேதியாகில் ரத்தக்கழிச்சலென்றும் சலமாகப்பேதியாகில் சலக்கழிச்சலென்றும் பலவாறாகச் சொல்லுகிறார்கள்.

கிரகணி என்பது பிடித்தலையுடையது.

## கிரகணிரோகபேதம்.

கிரகணிரோகமானது வாதக்கிரகணிரோகம் பித்தக்கிரகணிரோகம் சிலேஷ்மக்கிரகணிரோகம் திரிதோஷக்கிரகணிரோகம் என (4) விதப்படும்.

## கிரகணிரோகபூர்வரூபம்.

அருந்தும் அன்னபானாதிகள் வெகுநேரம் பொறுத்துச்சீரணித்தல் புளியேப்பம் வாய்நீரூறல் முகவிகாரம் அரோசகம் உதடு உலரல் பிரமை ஆயாசம் வயிறுவிருத்தலுடன் பொருமிக்கொள்ளல் வாந்தி காதிரைச்சல் குடலிரைச்சல் என்னும் இக்குணங்களைக்கிரகணிரோகமானது தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## சாமானியக்கிரகணிரோகபூர்வரூபம்.

கிரகணிரோகத்தில் உடம்பு இளைத்தல் கண்டத்திற்குள் புகைசம்மியதுபோலிருத்தல் மயக்கம்சுரம் மூர்ச்சை தலைநோவு மலபந்தம் கைகால்வீக்கம் என்னும் இக்குணங்களுண்டானாலும் உண்டாகும்.

## 1-வது வாதக்கிரகணிரோகலக்ஷணம்.

தாடைவற்றல் கண்களில் இருட்கம்மல் காதில்கும்மென்ற சத்தம் விலாப்பக்கம் தொடைக்கவுட்டி கழுத்துப்பிடரி ஆகிய இவ்விடங்களில் நோவு சகலவஸ்துக்களிலுமபேக்ஷை தாகம் அசனசீரணகாலத்தில்வயிற்றில் உப்பிசம் உண்டாகிச்சீரணித்தல் புசித்தபின்பு ஆயாசம் அடிக்கடிபேதி வாயுவினால் மார்பிலும் வயிற்றிலும்நோவு ஆசனப்பிடுங்கல் நாபிக்குங்கீழ் அதிகநோவு வயிற்றில் வெகுநேரம் அதிகசங்கடப்படுத்தி சலமாகவும் உலர்ந்ததாகவும் சீதங்கலந்ததாகவும் இரைச்சலோடு நுரைத்ததாகவும் இடைவிடாமல் மலமானது வெளிப்படுதல் இதனால் ஆசனம் விரிந்து போவதுபோல் கடுத்தல் மேல்சுவாசம் இருமல் தேகவெளுப்பு என்னும் இக்குணங்களுண்டாகும். அன்றியும் அற்பதீபனம் வயிற்றில் கட்டிகாணல் மலஞ்சிதறலுடன்கறுத்து வெல்லப்பாகுபோலும் பனைவெல்லம்போலும் பேதியாகுதல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 2-வது பித்தக்கிரகணிரோகலக்ஷணம்.

மலமானது கறுத்தநிறமாகவும் மஞ்சளுஞ்சிவப்புங் கலந்தநிறமாகவும் சுத்தமஞ்சள்நிறமாகவும் சலஞ்சலமாகவும் வெளிப்படல் அப்போது துர்க்கந்தமாகவும் புளிப்பாகவும் ஓக்காளம்வருதல் மார்பிலும் கண்டத்திலும் எரிச்சல் ஏப்பம் வாந்தி அரோசகம் என்னும்

இக்குணங்களுண்டாகும். அன்றியும் நடுவயிறநோதல் தூக்கம் நரம்புகள்தளரல் உள்ளில் கடுத்தல் சாப்பிட்டமருந்து பேதியோடி றங்கல் உணர்ச்சியின்மை என்னும் இக்குணங்க ளுண்டென்பாரு முளார்.

## 3-வது சிலேஷ்மக்கிரகணி ரோகலக்ஷணம்

உண்ட அன்னபானாதிகள் வெகுநேரம் பொறுத்துச் செரித்தல் அரோசகம் வாந்தி முகத்திலெதுவோ தடவினதுபோல் நினைப்பு எந்நேரமும் உமிழ்நீர் உமிழ்தல் மார்பில் அதிரலுடன்வறட்டல் இருமல் பீநசம் சாப்பிட்டதுபோல் வயிறுகனத்தல் ஏப்பம் ரத்தக்கெடுதி உடம்பு கிறுகிறென்றுசுற்றல் மாதரிடத்தில் நிராசை மலமானது சுபாவமாகவும் அதிசீதங்கலந்ததாகவும் நழுகல் என்னுமிக்குணங்க ளுண்டாகும். இந்தரோகிக்குச் சரீரம் புஷ்டியாயிருந்தாலும் தூர்ப்பலமே நேரிடுமென்றறிக; அன்றியும் வயிறிரைச்சல் வாயுபரிதல் குளிர் நடுக்கல் அதிகாங்கையுடன் நாற்றமாயும் வெளுப்பாயும் மலம் இறங்கல் ஒருவேளை குடலைப்போலும் பாலைப்போலும் பேதியாகுதல் கை கால் தளர்ச்சியுடன் சூம்பல் அறிவின்மை அசதி பரிதாபம் உழலை எரிதல் புறங்கால் வீக்கம் என்னும் இக்குணங்களுண்டென் பாரு முளார்.

## 4-வது திரிதோஷக்கிரகணிரோகலக்ஷணம்.

முன்சொன்ன வாதக்கிரகணி பித்தக்கிரகணி சிலேஷ்மக்கிரகணி என்னு மூன்றுரோகங்களுக்குள்ள குணங்களெல்லாம் இதில் உண்டாகும்.

## சித்தர்மதாந்தரம்.

முற்கூறிய வாதாதி நான்கு கிரகணிகளையும் அல்லாமல் உஷ்ண வாயுக்கிரகணி அந்தரவாயுக்கிரகணி மூலவாயுக்கிரகணி குன்மக்கிரகணி கருப்பக்கிரகணி ஒட்டுக்கிரகணி சங்கரக்கிரகணி என்னும் ஏழுவிதம் அதிகமாகச் சித்துப்புருஷர்கள் நூல்களிற்சொல்லப்படுகின்றன.

## 1-வது உஷ்ணவாயுக்கிரகணிரோகம்.

வயிற்றில் கனத்தலுடன் உப்பிசம் இரைச்சல் கைகால்அசதி தேகங்கருகிமெலிதல் பேதிஎன்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 2-வது அந்தரவாயுக்கிரகணிரோகம்.

புசித்தவுடன் பேதியாகுதல் இரைச்சல் அசதி தாகம் தளர்ச்சி விலாவில் இசிவு சரீரவெளிறல் விக்கல் என்னு மிக்குணங்களை யுண்டாக்கும்.

## 3-வது மூலவாயுக்கிரகணிரோகம்.

அதி இரைச்சலாகி வயிற்றைப்புரட்டல் அடிவயிறுபொருமல் மலம்வறளல் மந்தம் அடித்தொடையிற்குத்தல் சரீரந்தளரல் குதத்திலும் கண்ணிலும் முளைபோற்காணல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 4-வது குன்மக்கிரகணிரோகம்.

வயிற்றில்குத்தல் அதிகஉறக்கம் வியர்வை தலைநடுக்கல் தேக எரிச்சல் உழலை வயிறுபொருமி இரைந்துபேதியாகுதல் சிலவேளை ஒருபக்கத்தில் இரைச்சல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 5-வது கருப்பக்கிரகணிரோகம்.

பேதி கடுப்பு கை கால் வற்றுதலுடன் ஓய்ச்சல் கண்ணில் மஞ்சள்நிறம் பலவிதக்கழிச்சல் அதிகதாகம் சாப்பிட்டால் வாந்தியாகுதல் உழலை என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இக்குணங்கள் பிரசவித்தபின்பு மட்டிடும். இந்தரோகம் ஸ்திரீகளுக்கு மாத்திரம் காணுமென்றறிக.

## 6-வது ஓட்டுக்கிரகணிரோகம்.

படுக்கையே இதவாகத்தோற்றல் இளைப்பு வயிற்றில் அதிக நோவு மார்பிலும்விலாவிலும் முதுகிலும் வலித்தல் மலமானது ஒருதரமாக இறங்காமல் துட்டிடை துட்டிடையாக விறங்கல் தொப்புள் வளையம்போற் சுருங்குதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 7-வது சங்கரக்கிரகணிரோகம்.

வயிறுபொருமல் செரியாக்கழிச்சல் அபானத்தில் சுடுகையுடன் எந்நேரமும்நனைதல் குறுவியர்வை உக்கிரமானசுரம் மனக்கெடுதி நெஞ்சிற்கபாதிக்கம் இருகண்களுஞ்சரிதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

மதாந்தரமுற்றிற்று.

## சாத்தியாசாத்தியக்கிரகணிரோகநிதானம்.

வாதக்கிரகணி பித்தக்கிரகணி உஷ்ணவாயுக்கிரகணி அந்தரவாயுக்கிரகணி மூலவாயுக்கிரகணி கருப்பக்கிரகணி ஒட்டுக்கிரகணி ஆகிய இவைகள் சாத்தியம் மற்றவைகள் அசாத்தியம். ஆயினும் இவைகள் சரபங்கிவில்வாதிலேகியம் மதகஜகண்டீரவமாத்திரை முதலிய சிகிச்சைகளால் வசப்படும்.

கிரகணிரோகம் முற்றிற்று.

---

## அஷ்டமகாரோகபேதம்.

வாதரோகம் கல்லடைப்புரோகம் குஷ்டரோகம் மேகரோகம் மகோதரரோகம் பகந்தரரோகம் மூலரோகம் கிரகணிரோகம் ஆகிய இவைகளாம். இவ்வெட்டுரோகமும் எளிதில் வசப்படாதென்றறிக.

அஷ்டமகாரோகம் முற்றிற்று.

---

## அலசரோகபேதம்.

பிரமாணத்திற்குக்குறைந்த அற்பபோசனமானது சரீர புஷ்டியையும்பலத்தையும் அழகையுங்குறைப்பதுமல்லாமல் வாதத்தையும் அதிகரிக்கச்செய்யும். பிரமாணத்திற்கு அதிகரித்தபோசனமானது சகல தோஷங்களையுஞ் சீக்கிரத்தில் அதிகரிக்கச்செய்யும். அபக்குவமாகவுங் கெடுதியாகவும் இருக்கின்ற அன்னமானது வாதபித்தசிலேஷ்மங்களை விகாரப்படுத்தும். இம்மூன்றுவிதத்தில் அபக்குவமென்ற அன்னத்தை அடிக்கடி புசிக்கின்ற அதிக துர்ப்பலனுக்கும் மந்தாக்கினியனுக்கும் பதினுனுவேகத்தை அடக்கினவனுக்கும் ஆமாசயஸ்தானத்தில் அவ்வன்னத்தால் அதிகரித்ததிரிதோஷங்கள் அவ்வன்னத்தோடு கலந்துகொள்ளும். அப்போது அந்த அசனகாதகனுக்கு அந்தஅன்னம் பித்தத்தை ஒடுக்கிய சிலேஷ்மத்தால் மறிபட்டு வாயுவினலலைக்கப்பட்டு அவ்விடத்தில் பிரடைபோட்டது போலும் ஆப்படித்ததுபோலும் இருந்து வாந்தியும் இல்லாமல் பேதி

யும் இல்லாமல் சீரணமும் இல்லாமல் ஸ்தம்பித்து அநந்தஞ்சங்கடத்தோடு சூலைமுதலிய உபத்திரவங்களை உண்டாக்கும்; இதுவே அலசரோகமாம். இது ஆமாலசகம் தண்டாலசகம் விஷாலசகம் என மூன்றுவிதப்படும். இவைநிற்க அப்படி ஸ்தம்பித்த அன்னத்தை அவ்வாதபித்தங்கள் சீக்கிரத்தில் வாயினாலேனும் அபானத்தினாலேனும் வெளிப்படுத்துமாகில் இதற்கு விஷூசிரோகம் எனப்பேருண்டாகும் இது மிகவுங் கொடிது இவைகளை இதனடியிற்காண்க.

அலசம் என்பது மந்தம்.

## 1-வது ஆமாலசகரோகலக்ஷணம்.

பிரமாணந்தப்பி மேன்மேலும் புசிக்கும் அசனகாதகனுக்கு அந்த அன்னமானது வாந்தியாகாமலும் பேதியாகாமலும் சீரணிக்காமலும் ஆமமாகியசிலேஷ்மத்தில்பிசறிக்கொண்டு மிகுவேதனையையுண்டாக்கும். இது ஆமத்தால் பிறந்தமையால் ஆமாலசகரோகம் எனப் பேர்பெற்றது.

## 2-வது தண்டாலசகரோகலக்ஷணம்.

திரிதோஷமானது மிகவும் அதிகரித்துச் சீரணியாதிருக்கும் அன்னத்தைக்கொண்டு நரம்புகளுக்கு விகுவேற்றி அந்தநரம்புகளையே குறுக்காகப்பாச்சித் தந்திகளைச்சுற்றி இறுக்குவதுபோல் இறுக்கிச் சரீரத்தைத்தண்டத்தைப்போலவே நீட்டிவிடும் இந்தக் காரணத்தால் இது தண்டாலசகரோகம் எனப் பேர்பெற்றது இது அதிசீக்கிரத்திற்கொல்லும்.

## 3-வது விஷாலசகரோகலக்ஷணம்.

அபக்குவமான அன்னத்தை போசனத்தின்மேல் போசனம் பண்ணினால் அசீரணம் உண்டாகும் இதில் விஷக்குணங்களைப்போல் மகாகோரங்களுண்டாயிருக்கும். இது விஷத்தைப்போலவே கொல்லுவதால் விஷாலசகமெனப் பேர்பெற்றது. இதற்கு ஆமதோஷமென்றும்பேர்.

இவைகளுக்கு தாளிசவடகம் வச்சிரவல்லிவடகம் கண்டாதிச்சூரணம் பஞ்சதீபாக்கினிலேகியம் முதலிய சிகிச்சைகளும் உதவும்.

அலசரோகம் முற்றிற்று.

## விஷூசிரோகபேதம்.

அலசரோகத்தையுண்டாக்கி அடங்கியிருந்த ஆமதோஷமானது அதிகரித்து வெளிப்படுவதினாலும் அதற்கு உபபலமாகச்சூரியவெப்பம் அதிகரிப்பதாலும் விஷூசிரோகம்பிறக்கும். இது பேதி வாந்தி முதலான பலபல உபத்திரவங்களைக்கொண்டும் திரிதோஷமிகுதியைக்கொண்டும் சரீரம் முற்றிலும் ஊசியாற்குத்துவதுபோல் குத்துவதால் விஷூசிரோகம் எனப் பேர்பெற்றது. இதனை இக்காலத்தில் வாந்திபேதி ரோகம் எனச் சொல்லுகிறார்கள். இது வாதவிஷூசிரோகம் பித்தவிஷூசிரோகம் சிலேஷ்மவிஷூசிரோகம் என மூன்று விதப்படும். இது சிதாங்கசந்நிபாதத்தை யொத்ததால் உடனே வைத்தியஞ்செய்யவேண்டும்.

## விஷூசிரோகபூர்வரூபம்.

வயிற்றில் இரைச்சல் மடைதிறந்ததுபோல் அடிக்கடி சுத்தசலமானபேதி அப்படியே வாந்தி திரிதோஷங்களும் சப்ததாதுக்களை விகாரப்படுத்துவதால் ரத்தக்கெடுதி மாமிசங்கரைதல் சலத்தைத் தாங்கிக்கொண்டிருக்கும் நரம்புகளைப் பித்தமும் வாதமும் உலர்த்துவதால் தொண்டைவறளல் அதிகதாகம் பிசுபிசுப்பானவியர்வை எரிச்சல் சிலேஷ்மாதிக்கத்தால் சர்வாங்கத்திலும் வாழைத்தண்டையொத்தசீதளம் நடுக்கல் கண்குழிவிழுதல் நெறிதளரல் சரீரநிறமாறல் ஈனத்தொனி கீல்களில் இருக்கின்ற சிலேஷ்மப்பசைகள் கரைவதினால் தேகமுழுதும் கட்டுவிட்டுப்போவதுபோலுமூசியால் குத்தினது போலும் கடுக்குதல் புரளல் மூர்ச்சை மயக்கம் சீதக்கட்டுஸ்தானங் கெடுவதினால் வயிற்றுநோவு என்னும் இக்குணங்களை விஷூசிரோகமானது தனக்குப்பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது. இக்குணங்கள் சகலவிஷூசிரோகங்களுக்கும் உண்டென்றறிக.

## 1-வது வாதவிஷூசிரோகம்.

வயிற்றுப்பொருமல் பேதி பிரமை நடுக்கல் தேகமரத்தல் ஊசிகளினாற் குத்துவதுபோல் குத்தல் முதலிய துர்க்குணங்களை யுண்டாக்கும். அன்றியும் வாதநாடி அதிகரித்தலினால் வயிறிரைச்சல் தேகங்கறுத்தல் விழிதிறந்தபடியே யிருத்தல் மனக்கலக்கம் சுரம்

குடல் குமிறலுடன் புரட்டல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர். இது அசாத்தியம்.

## 2-வது பித்தவிஷூசிரோகம்.

சுரம் பேதி உள்ளில் எரிச்சல் தாகம் கால் கை மரத்தல் ஊசியால்குத்துவதுபோல்குத்தல்முதலிய குணங்களையுண்டாக்கும். அன்றியும் பித்தநாடி பகல்முழுதும் ஆக்கிரமிப்பதினால் தேகஞ்சூம்பல் மூர்ச்சை விக்கல் பிதற்றல் வாந்தி மயக்கத்துடன் படுக்கைபொருந்தாமை பிரலாபம் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர். இது கஷ்டசாத்தியம்.

## 3-வது சிலேஷ்மவிஷூசிரோகம்.

வாந்தி சலம்சலமாகப்பேதி தேகங்கனத்தல் தாள்பிடிப்பு உமிநீர் உமிழ்தல் ஊசிகளினாற் குத்தல்போற்குத்துதல் முதலிய குணங்களையுண்டாக்கும். அன்றியும் கையில் நாடிகள் விரைவில் அடங்குதல் குரக்குவலிவலித்தல் நடைகெடல் புரளல் மேல்நோக்கிய பார்வை சரீரம் வெளிறல் என்னும் இக்குணங்கள் உண்டென்பாருமுளர்.

இவைகளைப் பிரளயகாலாக்கினி உருத்திரமாத்திரை பிரசண்டமாருதக்கருக்கு முதலிய அவுஷதங்களினால் நிவிர்த்திசெய்யவேண்டும்.

விஷூசிரோகம்முற்றிற்று.

---

## அசீரணரோகபேதம்.

அசீரணரோகமானது வாதபித்தகபங்களினால் முறையே ஆமாசீரணம் விதக்த்தாசீரணம் விஷ்டம்பாசீரணம்என மூன்றுவிதப்படும். அன்றியும் விளம்பிகாசீரணம் ரசசேஷாசீரணம் உற்சுகாசீரணம் என மூன்று அசீரணங்களுண்டு. அவைகளையும் இதனடியிற் காண்க.

## 1-வது ஆமாசீரணரோகம்.

கண்களிலும் தாடைகளிலும் அதைப்பு சாப்பிடாதகாலத்தும் சாப்பிட்டதுபோல் ஏப்பம் வாய்நீரூறல் வயிற்றில்சங்கட்டம் சரீரத்

தில் வேதனையோடுகனத்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இதற்குச் சிலேஷ்மாசிரண ரோகமென்றும் ஒருபேருண்டு.

## 2-வது விதக்த்தாசீரணரோகம்.

சரீரத்திற்சுடுகை தாகம் சோருதல் பிரமை புளியேப்பம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும் இதற்குப் பித்தாசீரணரோகம் எனவும் ஒருபேருண்டு. விதக்த்தம்என்பதுகாங்கை.

## 3-வது விஷ்டம்பாசீரணரோகம்.

சூலை மலபந்தம் வயிறுப்பிசம் மந்தாக்கினி சரீரம்இளைத்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இதற்கு வாதாசீரணரோகம் எனவும் ஒருபேருண்டு. விஷ்டம்பம் என்பது ஸ்தம்பித்தல்.

## 1-வது விளம்பிகாசீரணரோகலக்ஷணம்.

கிணற்றில் போட்ட கற்போல வயிற்றில் அடங்கிக் கனத்து நாட்பட இருக்கும். இதுகபவாதத்தால் பிறப்பதால் இதற்குப் பூர்வ அசீரணரோக சிகிச்சைகளைச் செய்யவேண்டும்.

விளம்பிகம் என்பது காலதாமதம்.

## 2-வது ரசசேஷாசீரணரோகலக்ஷணம்.

சுபாவ ஏப்பம் மார்பிலும் தலையிலும் பொறுக்கக்கூடாதநோவு என்னும் இக்குணங்களுண்டாகும். இது ரசசேஷத்தால் பிறப்பதால் ரசசேஷாசீரணரோகம் எனப் பேர்பெற்றது.

## 3-வது உற்சுகாசீரணரோகலக்ஷணம்.

அறுசுவையுடன் ஒருவன்புசிக்க அதில் இச்சைப்பட்டு ஏக்கமுற்றவர்கட்கு முன்புவழக்கமானபோசனம் அசீரணப்பட்டு வெகுநேரம் பொறுத்தும் சீரணிக்காமல் எலும்பைப்போலவே கிடக்கும். அப்போது புளியேப்பம் வயிற்றிலிரைச்சல் விருத்தல் நோவுடன் அநேக உபத்திரவங்களான விகாரம் என்னும் இக்குணங்களுண்டாகும். இது கஷ்டசாத்தியம். உற்சுகம் என்பது இச்சித்தல்

## சாமானியாசீரணரோகலக்ஷணம்.

மலபந்தம் அல்லதுபேதி ஆயாசம் அபானவாயு இன்மை வயிறு பொருமல் தேககனதி பிரமை என்னும் இக்குணங்களெல்லாம் சகல அசீரணரோகங்களுக்கும் பொதுவாக இருக்கும்.

## சித்தர்மதாந்தரம்.

அசீரணம் தூமாசீரணம் விதூமாசீரணம் விஸ்பஷ்டம்பாசீரணம் ரசசேஷாசீரணம் என நான்காகச் சிலநூலில் சொல்லப்படுகின்றது.

## 1-வது தூமாசீரணரோகம்.

அசீரணத்தோடு சுபாவமான ஏப்பம் உண்டவஸ்துக்கள் தக்காமல் அடிக்கடிவாந்தியாகுதல் புளிஏப்பம் உதடும் நாவும்வறளல் சரீரமுழுதும் எரிச்சல் அல்லித்தண்டையொத்த குளிர்ச்சி ஒருவேளை கண்டத்தில் வியர்வை சரீரம்வாடல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 2-வது விதூமாசீரணரோகம்.

அசீரணத்தோடு புளியேப்பம் புசித்த அன்னம் வாந்தியாகுதல் வயிறுப்பலோடு பேதி ஒருவேளை இரைச்சலுடன் புளிப்பானபேதி முகங்கறுத்தல் தேகம்வாடல் மயக்கம் முன்பின் தோன்றாமை மிகுவேதனை கிடைபொருந்தாமை அதிதாகம் என்னும் இக்குணங்களையுண்டாகும்.

## 3-வது விஸ்பஷ்டம்பாசீரணரோகம்.

அசீரணத்தோடு சரீரமெல்லாம் மிகுநோவு அதிசயித்தியம் கோழை சரீரமும் கண்ணும் வெளிறல் வெளுத்தவாந்தி பொய்ப்பசி அடிக்கடி நுரைநுரையாகப்பேதி இருமல் சுவாசம் துயரம் தலைப்புரட்டல் வைத்தியனுக்கு வசப்படாமை என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 4-வது ரசசேஷாசீரணரோகம்.

இது (123) வது பக்கத்திற் கூறியதுதான்.

இந்தரோகங்களுக்குப் போசனகுடாரிசூரணம் கண்டாத்திரி

சூரணம் அசுவகந்திலேகியம் காந்தச்செந்தூரம்முதலிய சிகிச்சைகள் ஆகும்.

அசீரணரோகம், மதாந்தரம் முற்றிற்று.

நான்காவது தாகரோகபடலம் முற்றிற்று.

---

# 5-வது அஸ்மரிரோகபடலம்.

## மூத்திராகாதரோகபேதம்.

பூர்வாசாரிகளால் ஏற்படுத்திய மூத்திராகாதரோகமானது கிரிச்சரரோகம் அஸ்மரிரோகம் மூத்திரதோஷரோகம் என மூன்று பிரிவாகி அதன் பேதத்தால் இருபதுவிதப்படும்.

## கிரிச்சரோற்பத்திலக்ஷணம்.

இது அகாலபோஜனம் அகாலநித்திரை அமிதபோஜனம் அமிதஸ்திரீசங்கமம் பகலில்ஸ்திரீசங்கமம் வெய்யிலில்திரிதல் அக்கினிவெப்பத்திருத்தல் லாகிரிவஸ்துக்களைப் புசித்தல்முதலியகாரணங்களால் வாதமும் பித்தமும் மூத்திராசயத்தில் ப்ரகோபித்து நீரைத்தடுத்து பிரயாசையுடன் கொஞ்சங் கொஞ்சமாக விழப்பண்ணுவதால் கிரிச்சரரோகமெனப் பேர்பெற்றது. கிரிச்சரம் என்பது அற்பம்.

## கிரிச்சரரோகபேதம்

மேற்சொன்ன மூன்றுபிரிவில் கிரிச்சரரோகமானது வாதகிரிச்சரரோகம் பித்தகிரிச்சரரோகம் சிலேஷ்மகிரிச்சரரோகம் திரிதோஷகிரிச்சரரோகம் என நான்குவிதப்படும்.

## 1-வது வாதகிரிச்சரரோகம்.

கீழ்வயிற்றிலும் தொடைக்கவுட்டியிலும் ஆண்குறியிலும் நோவையுண்டாக்கி அடிக்கடிக்கொஞ்சங்கொஞ்சமாக நீரிறங்கச்செய்யும்.

## 2-வது பித்தகிரிச்சரரோகம்.

நீர்த்துவாரத்தில் நோவையும் எரிச்சலையும் உண்டாக்கிப் பின்பு மஞ்சள் சிவப்பு வன்னங்களாக நீரை இறங்கச்செய்யும்.

## 3-வது சிலேஷ்மகிரிச்சரரோகம்.

அடிவயிற்றிலும் ஆண்குறியிலும் வீக்கத்தையுண்டாக்கிப் பிசினைப்போல் வழுவழுத்துக் கட்டுப்பட்டதான நீரை இறங்கச்செய்யும்.

## 4-வது திரிதோஷகிரிச்சரரோகம்.

வாத பித்த கபம் என்னும் மூன்றுகிரிச்சரரோகங்களுக்குள்ள குணங்களையெல்லாம் ஒரேகாலத்தில் உண்டாக்கும்.

இவைகளுக்கு நவாக்ஷாரக்குழம்பு வெடியுப்புத்திராவகம் நீர்ப்பேதிமருந்து மகாவசந்தகுசுமாகரமாத்திரை முதலிய சிகிச்சைகளும் ஆகும்.

மூத்திரகிரிச்சரரோகம் முற்றிற்று.

---

## அஸ்மரிரோகபேதம்.

கல்லுகளை உண்டுபண்ணுவது அஸ்மரிரோகமாம். இது வாதாஸ்மரி பித்தாஸ்மரி சிலேஷ்மாஸ்மரி சுக்கிலாஸ்மரி என நான்குவிதப்படும். அன்றியும் சர்க்கராஸ்மரி என்பது ஒன்றுண்டு.

## அஸ்மரிரோகபூர்வரூபம்.

கீழ்வயிறுப்பிசம் நாபியின் நாலுபக்கங்களிலும் நோவு நீரானது ஆட்டுமூத்திர வாசனையுடன் வருத்தத்தையுண்டாக்கி இறங்கல் சுரம் அரோசகம் என்னும் இச்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## அஸ்மரிரோகசாமானியபூர்வரூபம்.

நாபிஸ்தானநரம்புகள் அடிவயிறு சிரசுஎன்னும் இவ்விடங்களில் நோவு மூத்திரம் சிதறிச் சிதறி விழுதல் சிலவேளைமறிபட்டதாகவும்

தாராளமாகவும் சவுக்கியமாகவும் கலங்கலில்லாமலும் இறங்கல் அதில் கோமேதகரத்தினவன்னமாகத்தோற்றல் சிலவேளை கலங்கி வருவதால் ரத்தம் கலந்ததுபோல் காணுதல் அவ்வேளையில் ஆயாசத்துடன் அநந்த உபத்திரவங்கள் உண்டாகுதல் என்னும் இக்குணங்களெல்லாம் சகல அஸ்மரிரோகங்களுக்கும் உரியவைகளாக இருந்தாலும் இருக்கும்.

## 1-வது வாதாஸ்மரிரோகலக்ஷணம்.

வாயுவானது கீழ்வயிற்றுமுகத்தைச் சுற்றிக்கொண்டு மூத்திரத்தை எப்போது உலர்த்துமோ அப்போது பயங்கரமான அஸ்மரிரோகம் உண்டாகும். அதன்விவரம்: அவ்வாயு அடிவயிற்றிற்குடியிருந்தமையால் வெளிப்படும்நீரானது வாதத்தையும் பித்தத்தையும் சிலேஷ்மத்தையும் சுக்கிலத்தையும் கூடினதாயிருக்கும்; அன்றியும் அதிக வருத்தத்தால் பற்கடித்தல் நடுக்கல் ஆண்குறியைக் கையால் தேய்த்தல் தொப்புளைப் பிசைதல் சதாஅழுதல் சத்திப்புடன் மலம் நழுகல் மூத்திரம் துளித்துளியாகக் கறுத்தநிறத்துடன் விழுதல் வீணு தண்டுக்குள் முள்ளைச்சொருகினதுபோல் நோதல் தேகம் கருகிய நிறத்துடன் காங்கையாக இருத்தல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 2-வது பித்தாஸ்மரிரோகலக்ஷணம்.

மூத்திரமானது வச்சிரத்திற்றோன்றும் சாயலைப்பெற்றிருக்கும் அன்றியும்அடிவயிற்றில் இரைச்சலும் கொதித்தலும் காங்கையுமாக இருத்தலினால் ஆண்குறியின் முனையானது சேராங்கொட்டைத்தோலைப்போலிருத்தல் நீரானது சிவப்பு மஞ்சள் வெண்மைநிறங்களாக இறங்கல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 3-வது சிலேஷ்மாஸ்மரிரோகலக்ஷணம்.

மூத்திரமானது வாதபித்தாஸ்மரி ரோகங்களுக்குள்ள குணங்களையும் பெற்றிறங்கும். அன்றியும் கீழ்வயிற்றில் அதிகநோவு கனத்தல் குளிர்ச்சி மிகுதியாகவும் வழுவழுப்பாகவும் தேன்வன்னமாகவும் வெண்மையாகவும் நீர் இறங்குதல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர். இது பாலராதி சகலருக்குங் காணும். இந்தரோகம்

காணுகின்ற மார்க்கம் சிறிது ஆகையால் சலாகை முதலியவைகளால் வைத்தியஞ்செய்தால் வசப்படும்.

## 4-வது சுக்கிலாஸ்மரிரோகலக்ஷணம்.

சையோககாலத்தில் வேகத்துடன் விழுகின்ற விந்துவை அடக்குதலாலும் இன்னும் விந்துஸ்தம்பனத்திற்காகச் சாப்பிடுகின்ற உஷ்ணவீரிய அவுஷதங்களினாலும் உண்டாகிய கனலில் நின்றும் வியாபித்தெழுந்த சூடானது தன்ஸ்தானத்திலிருந்த சுக்கிலத்தை நழுகப்பண்ணி நழுகினதை நாளத்தின்வழியாகக் கீழே ஒழுகவொட்டாமல் அண்டத்தினுடைய மத்யஸ்தானத்திலேயே மறிக்கும் அங்கு மறிபட்ட சுக்கிலத்தை அதற்குரிய வாயுவானது சுண்டவைத்து உலர்த்தும்; அப்போது இந்தரோகம்பிறக்கும். இதனால் இந்தரோகிக்கு பீசத்தில் வீக்கம் கீழ்வயிற்றில்நோவு நீரானது வருத்தத்தின்மேல் வெகுநேரம்பொறுத்து இறங்கல்என்னும் இக்குணங்களுண்டாகும். இது சுக்கிலம் உலரப்படுங்காலத்தில் உண்டானதாகையால் சுக்கிலாஸ்மரிரோகம்எனப் பேர்பெற்றது.

## சர்க்கராஸ்மரிரோகலக்ஷணம்.

முன்சொன்ன சுக்கிலாஸ்மரிரோகம் பிறக்கும்போதுலரப்பட்டிருந்த விந்துவை வாயுவானது அணுவணுவாகப்பொடித்து மணல் சிறுபயறு கடுகு கடலை சுண்டைக்காய் இலந்தைக்காய் பேரீச்சங்காய் இவைகளின் பிரமாணங்களையொத்த கல்லுகளாகத்திரட்டி நீரோடு சேர்த்து நாளத்தின் வழியாக வெளியில்தள்ளும். இதுவே சர்க்கராஸ்மரிரோசமாம். இந்த ரோகிக்கு வாயுவு சுபாவவழியில்நடந்தால் மூத்திரத்தோடு முன்சொன்ன கல்லுகள்விழுந்துகொண்டேயிருக்கும்; அப்படிநடவாமல் தப்பிநடந்தால் பக்கநோவுண்டாகி ஒருதுளிமூத்திரங்கூட இறங்காமல் கட்டுப்பட்டு அதிக உபத்திரவங்களுண்டாம். இதற்குக் கல்லடைப்புரோகமென்றும்பேர். இவைகட்குப் பாஷாண பேதிக் கஷாயம் மாலினிவசந்தமாத்திரை சலமஞ்சரி வெடியுப்புச் சுன்னம் முதலிய மருந்துகளும் ஆயுதச்சிகிச்சைகளும் நன்மையைச் செய்யும். இவைநிற்க சிலநூலில் இந்தரோகம் 4 - விதமென்றும் சதையடைப்புரோகம் 4-விதமென்றும் சொல்லப்படுகின்றது. அவைகளுக்கு விவரம் சொல்லாமையால் நிறுத்தலாயிற்று.

சர்க்கரா என்பது சுக்கான்கல்

## அஸ்மரிரோகஅசாத்தியநிதானம்.

எந்த அஸ்மரிரோகிக்கேனும் பீசங்களில் வீக்கமும் நோவும் நீர்க்கட்டும் உண்டாகில் அசாத்தியம்.

அஸ்மரிரோகம் முற்றிற்று.

---

## மூத்திரதோஷபேதம்.

மூத்திரதோஷமானது வாதவஸ்தி வாதகுண்டலி வாதாஷ்டீலம் மூத்திராதீதம் மூத்திரச்சடரம் மூத்திரோச்சங்கம் மூத்திரக்கிரந்தி மூத்திரசுக்லம் மூத்திரவிட்விகாதம் மூத்திரஉஷ்ணவாதம் மூத்திரக்ஷயம் மூத்திரசாதம் எனப் பன்னிரண்டு விதப்படும். இவற்றுள் வாதவஸ்தி வாதகுண்டலி வாதாஷ்டீலம் என்னுமிம்மூன்றிற்கும் வாயுவே அரசனும்; மூத்திராதீதம் மூத்திரசடரம் என்னும் இவ்விரண்டிற்கும் வாதபித்தங்களே அரசர்களாம்; மற்றைய ஏழுக்கும் பித்தகபங்களே அரசர்களாம்.

## 1-வது வாதவஸ்திமூத்திரரோகபேதம்.

வாதவஸ்திமூத்திரரோகமானது மூத்திர சங்கவாதவஸ்திரோகமென்றும் மூத்திரபிந்து வாதவஸ்திரோகமென்றும் இருவிதப்படும்.

## மூத்திரசங்கவாதவஸ்திரோகலக்ஷணம்.

வாயுவானது கீழ்வயிற்றுமுகத்தை நன்றாக அடைத்து அவ்விடத்தில் நின்றுகொள்ளுவதால் மூத்திரமானது விசேஷமாக உள்ளில் சேர்ந்து கட்டுப்படுவதும் அன்றி அந்தஸ்தானத்தில் நோவு நமைச்சல் என்னும் இக்குணங்களுமுண்டாகும். சங்கம் என்பது கூட்டம்.

## மூத்திரபிந்துவாதவஸ்திரோகலக்ஷணம்.

வாயுவானது ஒருவேளை தன்ஸ்தானத்தை விட்டிறங்கிக்கீழ் வயிற்றை வட்டமாகவும் கருப்பத்தைப்போல் பருமனாகவும் உயர்வாகவும் செய்யும்; அப்போது சரீரநோவு துக்கம் கொஞ்சம்புரளல் மூத்திரம் தாரையாக விழாமல் துளித்துளியாக விழுதல் என்னும்

இக்குணங்களுண்டாகும். இது வயிற்றில்நிறைந்த மூத்திரத்தைப் பிந்துபிந்தாகவிழுப்பண்ணுவதால் மூத்திரபிந்துவாத வஸ்திரோகம் எனப்பேர்பெற்றது. இதனைச் சொட்டு மூத்திரம் என்றும் சொல்வார்கள். இது அசாத்தியம்.

## 2-வது வாதகுண்டலிமூத்திரரோகலக்ஷணம்.

வாயுவானது தொப்புளின் கீழ்வயிற்றில் துர்க்குணத்தோடு அதிக வேதனையைச்செய்து பாம்பைப்போலச் சுற்றிக்கொண்டு மூத்திரத்தை மறிக்க சரீரத்தில் மரத்தலுண்டாகி மூத்திரம் துளித்துளியாக வெளிப்படும்; அல்லது மலம் இறங்கியபின்பு மூத்திரம் இறங்கும். இது பாம்பைப்போலவே கீழ்வயிற்றில் இருந்துகொண்டு, வேதனையைச் செய்யுங்காரணத்தால் வாதகுண்டலி மூத்திரரோகம் எனப் பேர்பெற்றது.

## 3-வது வாதாஷ்டீலமூத்திரரோகலக்ஷணம்.

வாயுவானது மலமார்க்கத்திற்கும் மூத்திரமார்க்கத்திற்கும் நடுவில் நிலைத்திருந்து கொண்டு கீழ்வயிற்றை ஆமையோட்டைப்போலவே கெட்டியாய் அசையவொட்டாமல் உயர்வாக வீங்கும்படி செய்யும். அக்காலத்தில் வயிற்றில் உப்பிசமும் மலமூத்திரச்சிக்கலும் அபானவாயு இன்மையும் உண்டாகும்.

அஷ்டீலம் என்பது வீக்கம்.

## 4-வது மூத்திராதீதரோகலக்ஷணம்.

வாயுவானது வெகுநேரம் கட்டுப்பட்டிருக்கின்ற மூத்திரத்தை வெளிப்படுத்தாமலே யிருக்கும். ஒருவேளை கொஞ்சம் உபத்திரவத்தைக்கொடுத்து வெளிப்படுத்தும். அதீதம் என்பது காலங்கடத்தல்.

## 5-வது மூத்திரசடரரோகலக்ஷணம்.

மறிபட்டிருக்கு மூத்திரத்தால் அலைப்புண்டவாயுவானது எப்போதுசுழித்தெழுந்திருக்குமோ அப்போது கீழ்வயிற்றில் மூத்திரம் மிகுதியும் நிறையும்; இதனால் அதிகநோவு வயிறுப்பிசம் அசீரணம் மலபந்தம் என்னும் இக்குணங்களுண்டாம். சடரம் என்பது வயிறு

## 6-வது மூத்திரோச்சங்கரோகலக்ஷணம்.

சலத்துவாரத்தின் துர்க்குணங்களினுலும் வாயுவினுலும் மூத்திரம் மறிபட்டு அற்பமாக இறங்கும்; இறங்கினுலும் அது கீழ்வயிற்றிலேனும் கோசத்தின் துவாரத்திலேனும் அதன்முனையிலேனும் சுரந்துதங்கி நின்றுகொண்டு மெள்ளமெள்ளக்கசியும். இதனுல் ஆண்குறியானது நோவுள்ளதாகவும் நோயின்மையாகவும் கனப்பதாகவும் ஒருவேளை யந்தமூத்திரம் சிதறிச்சிதறி விழுவதாகவும் இருக்கும். இது மேற்சொன்ன இடங்களில்தங்கித்தங்கிக் கசிதலால் மூத்திரோச்சங்கரோகம் எனப்பேர் பெற்றது. உச்சங்கம் என்பது இடம்.

## 7-வது மூத்திரக்கிரந்திரோகலக்ஷணம்.

நிலைபெற்று வட்டமாக இராநின்ற மூத்திரப்பையினது முகமானது பித்தசிலேஷ்மங்களினுல் சுருங்கி முடிபோட்டதுபோல் ஆகிவிடும். அப்போது பலதுர்க்குணங்களும் உண்டாம்.

கிரந்தி என்பது முடிச்சு.

## 8-வது மூத்திரச்சுக்கிலரோகலக்ஷணம்

நீர்க்கட்டுரோகிக்கும் அதிகசையோகிக்கும் வாயுவினுல் அடிபட்ட சுக்கிலமானது தன்ஸ்தானத்தைவிட்டுநழுகி விபூதியைக்கரைத்ததுபோல் மூத்திரத்திற்கு முந்தியேனும் பிந்தியேனும் விழும்.

## 9-வது விட்விகாதமூத்திரரோகலக்ஷணம்.

சுரத்தில் மெலிந்தவனுக்கும் பலவீனனுக்கும் வாயுவினுல் மலபந்தம் எப்போது உண்டாகுமோ அப்போது மூத்திரத்துவாரமானது மலத்தோடு சம்பந்தப்படும். இதனுல் மலத்தினது துர்க்கந்தமாகவே மூத்திரம் இறங்கும். இந்தக்காரணத்தால் விட்விகாத மூத்திரரோகம் எனப்பேர்பெற்றது.

விட்விகாதம் என்பது மலபந்தம்.

## 10-வது உஷ்ணவாதமூத்திரரோகலக்ஷணம்.

கார தீக்ஷண போசனத்தினுலும் வாதத்தையுண்டாக்கும் வஸ்துக்களினுலும் அதிகநடையினுலும் பித்தம்பிறந்து அதிகரிக்கும் அந்தப் பித்தமானது வாயுவினு லடிபட்டு கீழ்வயிற்றின் சமீபத்தில்

வேதனையையும் காங்கையையும் உண்டாக்கும். அப்போது ரத்தங் கலந்த நிறமாகவும் சுத்தரத்தநிறமாகவும் மஞ்சள்நிறமாகவும் உஷ்ண மாகவும் அடிக்கடி வெகு வருத்தத்துடன் மூத்திரம் இறங்கும்.

## 11-வது மூத்திரக்ஷயரோகலக்ஷணம்.

சுரத்தினால் மெலிந்தவனுக்கும் பலவீனனுக்கும் பித்தமும்வாத மும் அதிகரித்துக் கீழ்வயிற்றிற் சேர்ந்துகொண்டு அதிகவேதனை யைப் பிறப்பித்து மூத்திரத்தை நாசப்படுத்தி அவ்விடத்தில்நோவை யும் எரிச்சலையும் உண்டாக்கும். க்ஷயம் என்பது நாசம்.

## 12-வது மூத்திரசாதரோகலக்ஷணம்.

வாயுவினால் பித்தமும் சிலேஷ்மமும் அடிபட்டுக்கலங்குவத னால் மூத்திரமானது சங்கட்டத்தோடு மஞ்சள் ரத்தம் வெண்மை என்னும் இவ்வன்னமாகவும் சிலவேளை அதிககாங்கையுடன் கோரோ சனவன்னமாகவும் சங்கபஸ்ம வன்னமாகவும் இன்னும் பலவித வன்னமாகவும் இறங்கும். அதனால் சுக்லதாதுவானது நீர்த்து நான வித நிறமாக வெளிப்படும். சாதம் என்பது உபத்திரவம்.

இவைகளுக்குக் கரும்புரசம் திரிகண்டதிக்கஷாயம் செம்மணத் தக்காளிக்காய்வற்றலின்தீநீர் மகாவசந்தகுசுமாகரமாத்திரைமுதலிய அவுஷதங்களும் ஆயுதச்சிகிச்சைகளும் உபயோகிக்கலாம்.

மூத்திரரோகம் முற்றிற்று.

---

## மேகரோகபேதம்.

மேகரோகமானது வாதத்தினாலும் பித்தத்தினாலும் சிலேஷ்ம த்தினாலும் இருபது விதப்படும். அவையாவன: வசாமேகம் மச்சா மேகம் அஸ்திமேகம் மதுமேகம் என்னும் இந்நான்கும் வாதத்தினால் பிறக்கும்; சாரமேகம் நீலமேகம் காளமேகம் அரித்திராமேகம் மஞ் சிஷ்டிமேகம் ரத்தமேகம் என்னும் இவ்வாறும் பித்தத்தினால் பிறக் கும்; சலமேகம் இட்சுமேகம் சாந்திரமேகம் சுராமேகம் பிஷ்டமேகம் சுக்கிலமேகம் சிகதாமேகம் சீதமேகம் சனைர்மேகம் லாலாமேகம்

என்னும் இப்பத்தும் சிலேஷ்மத்திஞல்பிறக்கும். இவற்றள் தே ஊப்போல் நிறத்தைப் பெற்று எறும்புகள் மொய்க்கின்ற மேகமூத் திரரோகங்களுக்கு உடனேயே நானுவிதமான வைத்தியம் செய்ய வேண்டும். மேற்சொன்ன வாதமேகமாவது சிலேஷ்மமேகமாவது வாதபித்தகபங்கள் குறையுங்காலத்தில் பிறக்கின்றமையால் அவை களைக் குறையவொட்டாமல் சந்தர்ப்பண விதியால் உபசரிக்கவேண் டும். பூர்வரூபங்களுடன் கூடியிராநின்ற இருபது மேகங்களுக்குள் வாதமேகங்கள் அசாத்தியம்; பித்தமேகங்கள் கஷ்டசாத்தியம்; சிலேஷ்மமேகங்களும் மேதோதாதுவைக் கெடுக்காதிருந்தால் சாத் தியம்.

## மேகரோகபூர்வரூபம்.

மேகரோகமானது சரீரத்தில் வியர்வை துர்க்கந்தம் தளர்ச்சி கனத்தல் படுக்கையிலும் உட்காரலிலும் சுகத்திலும் நித்திரையிலும் இச்சை மார்பு கண் நா காது இவ்விடங்களில் எரிச்சல் தலைமயிரும் நகமும் விரைவில்வளரல் சீதளவஸ்துக்களில் இச்சை கன்னமும் நெஞ்சும் உலரல் தாகம் வாயினிப்பு கை கால் எரிச்சல் ஆண்குறி சுருங்கல் சுக்கிலநாசம் என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழைய ரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## சாமானியமேகரோகநிதானம்.

சகலமேகநீரும் கலங்கலாக இருந்தாலு மிருக்கும். இம்மேகங் களில் தோஷங்களும் உபத்திரவங்களும் பிறந்தகாலத்தில் அந்தந்த மூத்திரநிறங்களிஞல் இன்னின்ன மேகங்களென்றறியவேண்டும்.

இனி வாதத்தாற்பிறந்த வசாமேகரோகம் முதலிய நான்கு வகை மேகரோகலக்ஷணங்களைச் சொல்லுவாம்.

## 1-வது வசாமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது கொழுப்பைக்கலந்ததுபோலும் சுத்தக்கொழுப் பைப்போலும் அடிக்கடி இறங்கும்; அன்றியும் நிணவாசனையுடன் வேளைக்குக் குறுணி அளவு இறங்கும். காய்ச்சிஞலும் அவ்வாச னையே வீசும் என்பாருமுளர். இது 114-வது பக்கத்தில் அசாத்தி யாதிசாரரோகலக்ஷணத்தில் சொல்லிய வசாசலத்தைப்போல் இறங் கலால் வசாமேகரோகம் எனப் பேர்பெற்றது. நிறத்திலும் நாற்றத்

திலும் வசம்பை ஒத்திருப்பதால் இதனை வசாமேகம் எனச் சொல்வது சில ஆயுர்வேதியர் சம்மதம். வசா என்பது வசம்பு

## 2-வது மச்சாமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது மச்சாஎன்னும் மாமிசநிறமாகவும் அதுகலந்தது போலவும் மோர்கலந்ததுபோலவும் அடிக்கடி இறங்கும். அது உறைந்த இடத்தில் பழம் பிழிந்ததுபோலும் மோரை ஊற்றினது போலும் நிறம் தோற்றப்படும்; அன்றியும் காய்ச்சினால் நிணவாசனையே உண்டாகும் என்பாருமுளர்.

மச்சை என்பது எலும்புக்குள் இருக்கும் மூளை.

## 3-வது அஸ்திமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது யானைமூத்திரத்தை யொத்துத் தடைப்படாமலும் ஒருவேளை தடைப்பட்டுக் கலங்கியதுமாக இறங்கும். இது யானையின் மூத்திரம்போல் இறங்கலால் அஸ்திமேகம் எனப் பேர் பெற்றது. அஸ்தி என்பது யானை.

## 4-வது மதுமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது தடித்து ஈ எறும்பு மொய்ப்பதாய் தேனுக்குள்ள நிறம் வாசனை ருசி கனம்என்னும் இவைகளைப்பெற்றுக்காய்ச்சினால் பாகாகுவதாய் நாபியிலும் தேகத்திலும் குடிலத்தையுண்டாக்கி இறங்கும். அன்றியும் பசுமையாயும் மஞ்சள்நிறமாயும் பீசத்திலும் கோசத்திலும் கடுத்தலுடன் அடிக்கடி இறங்குதல் அதைப் பிடித்துப்பார்த்தால் அடியில் வெண்மைபற்றுதல் தேகம் வெளிறலுடன் கன்றுதல் என்னுமிக்குணங்கள் உண்டென்பாருமுளர். இது தேகத்தின் மதுரத்தை யுருக்கிக்கொண்டு வருதலால் மதுமேகம் எனப் பேர்பெற்றது. இதுவே சீரணமதுமேகம் பூரணமதுமேகம்என இருவகைப்படும். இவற்றுள் சீரண மதுமேகம் என்பது ஏழுதாதுக்களுங்குறையப்படுங் காலத்திலாவது வாதாதிதோஷங்களினால் வாயு சஞ்சாரமார்க்கம் அடைபடுங்காலத்திலாவது வாயு அதிகரித்தலினால்பிறந்து வாதபித்தங்களின்குணங்களைப்பெற்று முற்கூறிய பூர்வரூபத்தை அடைந்து ரோகியைச் சீக்கிரத்திற்கெடுக்கும். இது

அசாத்தியம். ஒருவேளை இதுவே திரிதோஷகால விபரியாசத்தினுல் ரோகியை நெடுநாளைக்கு வைத்திருப்பதும் உண்டு; அப்படிக்கு வைத்திருப்பதால் இது பூரண மதுமேகம் எனப் பேர்பெற்றது. இது கஷ்ட சாத்தியம். இவைநிற்க; மற்றைப்பத்தொன்பது மேக ரோகங்களுக்கு மவுஷதப்பிரயோக சாந்திஇல்லாமல் நெடுநாள்உடம்பில் ஊறிப்பலக்குமாயின் இம்மேகங்களைப்போலவே நீரையும்பெற்றுச்சரீரத்திற்குத் தேன்நிறத்தையுங்கொடுத்து மதுமேகம் என்கிற பெயரையும்பெறும்.

இனி பித்தத்தாற்பிறந்த சாரமேகரோகமுதலிய ஆறுவகை மேகரோகலக்ஷணங்களைச்சொல்லுவாம்.

## 1-வது சாரமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது அதிக உப்பாகவே இறங்கும் கையால் தொட்டுச் சோதித்துப்பார்க்கில் உப்புக்குள்ள கசிவுமுதலிய குணங்கள் உண்டாயிருப்பதுமன்றி இது உறைந்த ஸ்தானங்களில் உவர்மண் சுண்ணும்பு இவைகளின் நிறமாகவும் தோற்றப்படும்.

சாரம் என்பது உப்பு.

## 2-வது நீலமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது இந்திரநீலத்தை அரைத்துக்கரைத்தசலம்போலவே இறங்கும். இந்தக்காரணத்தினுல் நீலமேகம் எனப்பேர்பெற்றது.

## 3-வது காளமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது கொள்ளிக்கட்டைக்கரியை அரைத்துக்கரைத்து இறுத்த சலம்போலவே இறங்கும். காளம் என்பது கறுப்பு.

## 4-வது அரித்திராமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது மஞ்சளைக் கரைத்த சலம்போலவும் காரமாகவும் இறங்கும். இதில் நீர்ச்சுருக்கும் உண்டாம்.

அரித்திரம் என்பது மஞ்சள்.

## 5-வது மஞ்சிஷ்டிமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது மஞ்சிஷ்டிவேரைக் காய்ச்சிவடிகட்டிய கஷாயத்தினது நிறத்தையும் ஒருவித துர்க்கந்தத்தையும்பெற்று எப்போதும் ஒழுக்காகவே இறங்கும். மஞ்சிஷ்டி என்பது சாயவேர்.

## 6-வது ரத்தமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது ரத்தநிறத்தையும் லவணத்தையும் துர்க்கந்தத்தையும்பெற்று உஷ்ணரம்பமாய் அனலை வீசிக்கொண்டேயிறங்கும். அன்றியும் முசல்ரத்தத்தை யொத்து இரண்டுபடியளவு இறங்குதல் அதைக் காய்ச்சிச்சோதித்தால் புலால் நாற்றம்வீசுதல் இதனால் கோசமும் பீசமும்கடுக்குதல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

இனி சிலேஷ்மத்தால் பிறந்த சலமேகரோகமுதலிய பத்துவகை மேகரோக லக்ஷணங்களைச்சொல்லுவாம்.

## 1-வது சலமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது சுத்தசலம்போலத்தெளிந்தும் வெளுத்தும் மிகுந்தும் குளிர்ச்சியுடன் யாதொரு துர்க்கந்தமும் இல்லாமல் மினுமினுத்து கொஞ்சங்கலங்கலாகவே இறங்கும்; அன்றியும் கழுநீரைப்போல மிகு சிக்கலுடன் இறங்கல் காய்ச்சினால் சுண்ணும்பு சங்கு இவைகளைப்போல் வண்டல்படிதல் தேகத்தில் ஒருவிதநாற்றம் வீசுதல் என்னும் இக்குணங்க ளுண்டென்பாருமுளர். வெண்மையால் இதனைச்சங்கமேகம் என்பர்.

## 2-வது இக்ஷுமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது கரும்பை நருக்கிப்பிழிந்து உடனே வடிகட்டிய சாறுபோலும் தென்னங்கள்ளைப்போலும் மிகுந்த மதுரமாக விசேஷித்து நுரைகளோடுங்கூட இறங்கும். இக்ஷு என்பது கரும்பு.

## 3-வது சாந்திரமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது ஒவ்வொருநாள் வயிற்றில் கட்டுப்பட்டது போல் இருந்து கலங்கலோடும் வழுவழுத்துக்குழம்பாக இறங்கும். இது ஒருநாள் வயிற்றில்தங்கி மறுநாள் இறங்கலால் சாந்திரமேகம் எனப் பேர்பெற்றது.

அன்றியும் பளிங்குநிறம் போலாவது தாழைவிழுதுச் சாறு போலாவது வேளைக்கு ஒருபடி அளவாக இறங்கும். இதனால் கோசமும் பீசமும் கடுக்கும். காய்ச்சினால் சீழைப்போல் நாற்றம் வீசும்.

## 4-வது சுராமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது ஒவ்வொருநாள் தென்னங்கள்ளைப்போலவே இறங்கும். அப்படி இறங்குவதிலும் முதல் தெளிவாகவும் பின்பு குழம்பாகவும் இறங்கும். அன்றியும் நுரைத்தும் வெளுத்தும் வேளைக்கு நாழியளவு இறங்கல் காய்ச்சினால் கள்ளைப்போல மணக்குதல் மாப்போல் வண்டல் படிதல் மயக்கம் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர். சுரா என்பது கள்.

## 5-வது பிஷ்டமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது பச்சரிசிமாவைக்கரைத்த தண்ணீரைப்போலவே வெளுத்தநிறத்துடன் அதிகமாக இறங்கும். அப்போது ரோமச்சிலிர்ப்பும் உண்டாம். பிஷ்டம் என்பது அரிசியின் மாவு.

## 6-வது சுக்கிலமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது சுக்கிலத்தைப்போலவே வெண்மையாகவும் அதில் பஞ்சைப் பன்னிப்போட்டதுபோல் சுக்கிலம் மிதப்பதாகவும் இறங்கும். அன்றியும் இது தாழஞ்சாற்றைப்போல் இறங்கிப் பின்பு ஈரலைப்போல் தோய்வதுந்தவிரக்காய்ச்சினால் கட்டியாகும் என்பாருமுளர்.

## 7-வது சிகதாமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது வெள்ளை மணல் கலந்த சலம்போல் ஒவ்வொரு முகூர்த்தத்திற்கு ஒருதரம் இறங்கும். சிகதா என்பது மணல்.

## 8-வது சீதமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது மிகுந்த குளிர்ச்சியுடன் மதுரம் உள்ளதாகவும் விசேஷமாகவும் இறங்கும். சீதம் என்பது குளிர்ச்சி.

## 9-வது சனைர்மேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது பொறுத்துப் பொறுத்துக் கொஞ்சங்கொஞ்சமாக மிருதுவைப்பெற்றே இறங்கும். சனைர் என்பது காலதாமதம்.

## 10-வது லாலாமேகரோகலக்ஷணம்.

மூத்திரமானது கோட்டுவாய்ச் சலத்தைப்போலவே இறங்கும். அப்படி இறங்குவதிலும் மினுமினுத்து மெல்லியநூலிழை இறங்குவது போலத் தாரையாக இறங்கும்.

லாலா என்பது கோட்டுவாய்ச்சலம்.

ஆக மேகரோகலக்ஷணம் இருபதும் முற்றிற்று.

---

இனி மேகரோகங்களின் உபத்திரவத்தைச் சொல்வாம்.

## வாதமேகரோகஉபத்திரவநிதானம்.

நூற்றெட்டாவது பக்கத்திற்சொல்லிய உதாவர்த்தரோககுணங்களெல்லாம் இதில் உண்டாவதன்றியும் நடுக்கல் மார்புநோவு மனச்சஞ்சலம் குத்தல் அரைநித்திரை வாயுலரல் இருமல் இரைப்பு முதலிய குணங்கள் உண்டாகும். அன்றியும் பல் நா தொண்டை உதடு இவை கறுத்தல் படுக்கை பொருந்தாமை புரளல் நாடி குடிலமாயும் குணபேதமாயும் நடக்குதல் ஒருவித மணம்வீசல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## பித்தமேகரோகஉபத்திரவநிதானம்.

கீழ்வயிறு ஆண்குறி இவைகளில் வியர்வை பீசம் சுருங்குதல் சரீரத்தில் காங்கையுடன் எரிச்சல் அதிகதாகம் புளியேப்பம் மூர்ச்சை பேதி முதலிய குணங்கள் உண்டாகும். அன்றியும் தேகவாட்டம் சரீரத்திலும் கோசத்திலும் கவிச்சுநாற்றம்வீசுதல் சீழ் கற்றாழைச்சலம் தேன் இவைகளைப்போலவேநீரிறங்குவதுந் தவிரப் பீசத்திலும் கோசத்திலும் குத்தல் ஈரலிலும் நாபியிலும் ஒருவிதமான நோவு ரணத்துடன் நாற்றம் சுரம் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## சிலேஷ்மமேகரோகஉபத்திரவநிதானம்.

மந்தாக்கினி அரோசகம் வாந்தி மயக்கத்துடன் சோம்பலான நித்திரை இருமல் மூக்கடைப்பு முதலிய குணங்கள் உண்டாகும். அன்றியும் கோழையும் உழலேயும் உண்டென்பாருமுளர்.

## இனி மேகரோகதசாவஸ்தைநிதானம்.

1-வது கீழ்வயிற்றில் சங்கட்டந்தோற்றுதல்; 2-வது நீரிறங்கிறால் ஆயாசங்காணுதல் 3-வது வாயுபிரபலப்படுதல் 4-வது திரிதோஷங்கோபிக்குதல் 5-வது சுக்கிலம்நசிக்குதல் 6-வது அதிகதாகமும் நீரில் மேகமும்உண்டாகுதல் 7-வது அரோசகமும்தேகசாட்டியமும் பிறக்குதல் 8-வது கட்டிகள் எழும்புதல் 9-வது பேதி அதிகரிக்குதல் 10-வது ஞாபகமாறி உயிர்நீங்குதல் என்றறிக. இப்பத்து அவஸ்தைகளும் மேகநீருக்கு உபபலமாக இருப்பதால் இவைகள் உண்டாவதற்கு முன்னமே ஆவாரைப்பஞ்சாங்கத்தீநீர் சீந்தில்சருக்கரை மேககுலாந்தகமாத்திரை மேககஜகண்டீரவமாத்திரை மேகபஞ்சாமிர்தம் பஞ்சானனரசம் வேதவித்தியாரசம் முதலிய சிகிச்சைகளைச் செய்யவேண்டும்.

## இனி மேகரோகஅசாத்தியநிதானம்

எந்த மேகரோகிகட்கானாலும் மிகுந்தகாற்றினாலும் அதிக சீதளவஸ்துக்களினாலும் இடைவிடாது உபசரித்தபோதிலும் சகிக்கக்கூடாத சரீரஎரிச்சல் அளவுக்கடங்காத மூத்திரம் எவ்வளவு சலபானம் பண்ணினாலும் தணியாததாகம் மேன்மேலும் நாக்குவறளல் அரோசகம் சுரம் நுட்பமாகிய ஸ்தானங்களில் கட்டிகளெழும்புதல் ஒருவேளை மிகுந்தபேதி என்னும் இக்குணங்களுண்டாகில் அசாத்தியமே.

## மேகக்கட்டிகளின்பேதம்.

முன்புசொன்ன மேகரோகங்களை அவுஷதங்களால் நிவிர்த்தி செய்யாவிடில் அந்தநீரினால் மெலிந்த ரோகிகட்கு, சராவிகை கச்சபிகை ஜாலினி வினதை அலசை மசூரிகை சரஷபிகை புத்திரிணி பிதாரிகை வித்திரதி எனப் பத்துவிதப்பிடகங்கள் உண்டாகும். இவைகட்குமுறையே தமிழ்ப்பெயர்வருமாறு: மடக்குக்கட்டி ஆமை

யோட்டுக்கட்டி வலைக்கண்கட்டி அதோமுகக்கட்டி பேய்ச்சுரைக் காய்க்கட்டி கடலைக்கட்டி கடுகுக்கட்டி புத்திராதிக்கக்கட்டி நிலப்பூசிணிக்கிழங்குக்கட்டி வித்திரதிக்கட்டி என்பவைகளாம்.

பிடகம் என்பது கட்டி.

## 1-வது மடக்குக்கட்டிலக்ஷணம்.

கீல்களிலும் மாமிசஸ்தானங்களிலும் இருந்து உண்டாகி கறுத்து அடியகன்று முனையுயர்ந்து நடுவில் பள்ளம் விழுந்து வியர்வையுடன் நோவுள்ளதாய் மடக்குக் கவிழ்த்ததுபோலவே இருக்கும்.

## 2-வது ஆமையோட்டுக்கட்டிலக்ஷணம்.

குழிகள்விழுந்தும் மினுமினுத்தும் நோவைத்தருவதும் ஒரு வேளை தராததுமாய் அனேகவிதசிகிச்சைகளுக்கு வசப்படாமல் ஆமையோட்டைக்கவிழ்த்து மூடினதுபோலவே இருக்கும்.

## 3-வது வலைக்கண்கட்டிலக்ஷணம்.

மொத்தாகாரமாக எழும்பி மரத்தின் வேருகளைப்போல் வெகு நரம்புகள் சூழப்படுவதும் குழம்பான சலத்தைச்சொரிவதும் நாளுக்குநாள் பரவுவதும் வலையைப்போல் கண்கள்விடுவதும் சிலவேளை உபத்திரவத்தைச் செய்வதும் சிலவேளை செய்யாததுமாக இருக்கும்.

## 4-வது அதோமுகக்கட்டிலக்ஷணம்.

வயிற்றிலேனும் இடுப்பிலேனும் கரியநிறத்துடன் பருமனாக எழும்பி அதிகவுபத்திரவத்தையும் வியர்வையையும் தருவதாயிருக்கும். இது ரோகியைக்கொஞ்சமேனும் நிமிரவொட்டாமற் குனியப் பண்ணுகின்ற காரணத்தால் அதோமுகக்கட்டி எனப்பேர்பெற்றது.

## 5-வது பேய்ச்சுரைக்காய்க்கட்டிலக்ஷணம்.

முதல்முதல் எவ்விடத்தில் இது பிறக்கின்றதோ அவ்விடத்துச் சருமத்தின்மேல் நெருப்பால்சுட்டதுபோல் எரிச்சலை உண்டாக்கி எழும்பிப்பின்பு கறுப்புசிவப்புநிறங்களையடைந்தகொப்புளங்களாகச் சரீரமெங்கும் வியாபித்துப் பார்வைக்குப் பேய்ச்சுரைப் பிஞ்சைப் போலவே இருக்கும். இதனால் அதிகபேதி தாகம் சோருதல் சுரம் மிகுந்த நோவுடன் வேதனை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 6-வது கடலைக்கட்டிலக்ஷணம்.

சிறுகடலைப் பிரமாணத்தையும் அதன் ரூபத்தையும்பெற்று சரீரமுழுதும் கொப்புளம் கொப்புளமாகஎழும்பி உபத்திரவத்தைச் செய்யும்.

## 7-வது கடுகுக்கட்டிலக்ஷணம்.

சரீரமுழுதும் நெருக்கமாகக் கடுகுப்பிரமாணத்தையொத்துச் சீக்கிரத்திலுண்டாகி உடனேயுடைந்து அதிக உபத்திரவத்தைத் தரும்.

## 8-வது புத்திராதிக்கக்கட்டிலக்ஷணம்.

விஸ்தரித்து வரிசைவரிசையாக ஏற்பட்டுப்பருத்தும் சிறுத்தும் ஒன்றையொன்றைச்சுற்றி அனேக கொப்புளங்கள் சூழ்வதாகப் பிறந்து அதிக எரிச்சலேயும் மிகுசங்கட்டத்தையுந்தரும். இது ஒன்றின்பின் ஒன்று பிறந்து கூட்டமாக இருப்பதால் புத்திராதிக்கக் கட்டிஎனப் பேர்பெற்றது.

## 9-வது நிலப்பூசினிக்கிழங்குக்கட்டிலக்ஷணம்.

நிலப்பூசினிக்கிழங்கைப்போல் வட்டமாகத் தடித்து அனந்த விதமான உபத்திரவங்களை விசேஷமாகத்தரும்.

## 10-வது வித்திரதிககட்டிலக்ஷணம்.

இதை இப்படலத்தில் 145-வது பக்கத்தில் மேகரோககாலநிதானத்திற்குப்பின்பு சொல்லப்படும்.

## சாத்தியாசாத்தியமேகக்கட்டிகளின் நிதானம்.

மேற்கூறிய கட்டிகளுக்குள் மடக்குக்கட்டி ஆமையோட்டுக் கட்டி வலைக்கண்கட்டி இம்மூன்றும் ரசதாதுமுதல் மாமிச தாது வரைக்கும் ஒட்டிப்பிறப்பதால் சாத்தியம். புத்திராதிக்கக்கட்டி நிலப்பூசினிக்கிழங்குக்கட்டி இவ்விரண்டும்மேதோதாதுவைப்பற்றிப் பிறப்பதால் கஷ்டசாத்யம். மற்றையகட்டிகள் பித்தத்தால்பிறந்து மேதோதாதுவை ஒட்டியும் ஒட்டாமலும் இருப்பதால் கஷ்டத்திலுங் கஷ்டசாத்தியம். ஆயினும் மேகநீரால் மெலிந்தரோகிக்கு

மார்பு அடிமுதுகு முலை தோள் குதம் சிரசு மையம் கில் கால் விரல் கைவிரல்கள் தற்சனிவிரல் அக்குள் புருவமையம் கழுத்து இருதயம் நடுந்தொப்புள் உதடு அண்டம் முழங்கால் கண்டச்சதை தொடைச் சதை கடிஸ்தானம் என்னும் இவ்விடங்களில் எவ்விதக்கட்டிகள் பிறந்தாலும் அசாத்தியமென்றே நிதானிக்கவும். ஒருவேளை மேற் சொல்லிய இடங்களைத்தப்பிப்பிறக்கில் சாத்தியம் ஆகும்.

இவைகளை க்ஷத்திர க்ஷார ரணச்சிகிச்சைகளைக்கொண்டும் பாத ரச உபரச லோகவருக்க அவுஷதங்களைக்கொண்டும் வசப்படுத்த வேண்டும்.

## சோமரோகலக்ஷணம்.

துக்கம் ஆயாசம் மிகுந்தசையோகம் இடுமருந்து முதலியவைக ளால் மூத்திரம் அதிகரிப்பதும் உண்டு. அந்த மூத்திரமானது கலங் கலுள்ளதாய்க்கீழ்வயிற்று முகத்திற் சேர்ந்துகொண்டு தனது சுபாவ நிறத்தையும் நாற்றத்தையும் ஒழித்து அதிசாரரோகத்தைப்போல் அடிக்கடி யிறங்கும். இதனால் பூரணச்சந்திரனைப்போல் சரீரம் வெ ளுத்தல் நாளுக்குநாள் பலவீனப்படுதல் முகம் கன்னம் உதடு இம் மூன்றுஞ் சுட்கித்தல் தலைநோதல் வாயும் நாவும் வறளல் அதிகதா கம் தேகம் இளைத்தலினால் அசதி சோம்பல் பலவித போசனபலகா ரங்களை மிகுதியாகப் புசித்தாலும் திருப்தி அடையாமை என்னும் இக்குணங்களுண்டாகும். இது பூரணச்சந்திரனைப்போலவே தேகம் வெளுக்கவும் நாளுக்குநாள் இளைக்கவும் செய்கின்றமையால் சோம ரோகம் எனப்பேர்பெற்றது. ஒருவேளை இந்தரோகிக்குச் சரீரம் வெளுக்காமல் சுபாவநிறம் அல்லது கருமைநிறம் உண்டாகி முன் சொன்ன துர்க்குணங்களெல்லாம் பிறந்து அடிக்கடி மூத்திரமும் இறங்குமாயின் இது மூத்திராதிசாரரோகம் வெகுமூத்திரரோகம் எனவும் பேர்பெறும். சோமன் என்பது சந்திரன்.

இதற்குநிலப்பனங்கிழங்குகுருவேர் பனங்கிழங்கு நெல்லிமுள்ளி இவைகளாற்செய்த ரசாயனம் வாழைப்பழஜெயநீர்சிந்தில்சருக்கரை தேற்றுங்கொட்டைலேகியம் முதலிய சிகிச்சைகளும் ஆகும்.

## சித்தர்மதாந்தரம்.

சிந்தாமணிஎன்னுஞ் சாஸ்திரத்திலும் மேகரோகம் இருபது

வகையாகச் சொல்லப்படுகின்றது. அவையாவன: 1-ஆச்சியகந்திமேகம், 2-சுத்தமேகம், 3-வாதப்பிரமியமேகம், 4-மாமிசசிராவிமேகம், 5-அப்பியமேகம், 6-பித்தப்பிரமியமேகம், 7-சவிரணமேகம், 8-மதுமேகம், 9-சாந்திரமேகம், 10-ஆர்க்கமேகம், 11-வசாமேகம், 12-உத்தமமேகம், 13-மச்சைமேகம், 14-ஆதிக்கமேகம், 15-சுராமேகம், 16-சுக்கிலமேகம், 17-உதகமேகம், 18-பிரசமேகம், 19-சாரமேகம், 20-தைத்தியமேகம் என்பவைகளாம். இவற்றுள், 8-9-11-13 15-16-17-18.19 என்னும் இலக்கங்களையுள்ள ஒன்பது மேகரோகங்களும் முற்கூறியவைகளேயாம். இவையொழிந்த பதினொருமேகங்களும் முறையே இதனடியிற் கூறப்படும்.

## 1-வது ஆச்சியகந்திமேகரோகம்.

மூத்திரமானது நெய்யையொத்துச்சிலையிற்றேய்த்துக்கொளுத்தில் எரிவதும் நாளொன்றுக்குக் குறுணி என்னும் நாலுபடி அளவாக இறங்குவதுமாக இருக்கும். இதனால் சரீரம் சுட்கிக்கும்.

## 2-வது சுத்தமேகரோகம்.

மூத்திரமானது கோசலத்தைப்போல் வாசனையுள்ளதும் ஒருநாளைக்கு நாலுபடி அளவாக இறங்குவதும் காய்ச்சிக்கொளுத்தினால் மிகுந்தபிரகாசத்துடன் எரிவதுமாக இருக்கும். இதனால் இளைப்புடன் மிகுந்த களையும் சரீரத்தில் மாறுநிறமும் உண்டாகும்.

## 3-வது வாதப்பிரமியமேகரோகம்.

மூத்திரமானது கொழுப்பையொத்துக்கனத்து மாமிசநாற்றத்துடன் வேளைக்கு ஒருநாழிஎன்னும் அரைப்படி அளவாக அடிக்கடி இறங்கும். இதைக்காய்ச்சினால் தேன்மணமே வீசும்.

## 4-வது மாமிசசிராவிமேகரோகம்.

மூத்திரமானது வெள்ளாட்டுக் கொழுப்பையொத்தும் காய்ச்சினால் அந்த ஆட்டினது நெய்நிறமும் கருப்பஞ்சாற்றுக்குள்ளமணமும் உண்டாய் வேளைக்குக் குறுணி அளவாக இறங்கும்.

## 5-வது அப்பியமேகரோகம்.

மூத்திரமானது யானையின் மதசலத்தைப்போல் அதிக விரைவாய் ஒவ்வொரு வேளைக்கு ஒருபடி அளவாக இறங்கும். காய்ச்சினால் உவர்மண்ணைப்போல் அடியில் வண்டல்படியும்.

## 6-வது பித்தப்பிரமியமேகரோகம்.

மூத்திரமானது கற்றாழஞ்சாற்றை யொத்தநிறமும் நாற்றமும் உள்ளதாய் ஒவ்வொரு நாழிகைக்கு இரண்டுபடி அளவாக இறங்கும். காய்ச்சினால் அதிக நாற்றம் உண்டாகும்.

## 7-வது சவிரணமேகரோகம்.

மூத்திரமானது சுண்ணாம்பையொத்த காரமும் துர்க்கந்தமும் உள்ளதாய் வேளைக்கு ஒருபடி அளவாக இறங்கும். இதைக்காய்ச்சினாலும் சும்மாவைத்திருந்தாலும் அடியில் சுண்ணாம்பு நீறுபோல் வண்டல் படிவதும் எறும்பு மொய்ப்பதுமாக இருக்கும்.

## 8-வது ஆர்க்கமேகரோகம்.

இது முயல்ரத்தம்போன்ற சிவந்தநிறத்துடன் வேளைக்கு இரண்டுபடி அளவாய் இறங்கும். பீஜகோசங்கள் கடுப்பதுடன் அந்நீரைக்காய்ச்சினால் புலால்நாற்றத்தை வீசுவதாயுமிருக்கும்.

## 9-வது உத்தமமேகரோகம்.

மூத்திரமானது காய்ச்சினாலும் நல்லசலத்தைப்போல் இருப்பதும் அன்றி ஒவ்வொருவேளைக்குக் குறுணி அளவாக இறங்கும்.

## 10-வது ஆதிக்கமேகரோகம்.

மூத்திரமானது காய்ச்சினாலும் சும்மாவைத்திருந்தாலும் இளநீர்ச்சலம் போலவே நிறமும் அந்தவாசனையும் உள்ளதாயிருக்கும். இதனால் அதிகதாகமும் தேகவாட்டமும் உண்டாகும்.

## 11-வது தைத்தியமேகரோகம்.

மூத்திரமானது இறைச்சியைக்கழுவினசலம்போலவே நீர்த்தாரையில் நின்றும் முறுக்குண்டு வெண்மையாய் வேளைக்கு முந்நாழி

அாவாக இறங்கும். அதைக்காய்ச்சினால் அக்கவுச்சுவாசனையே வீசும்.

### மேகரோகதசாவஸ்தைநிதானம்.

1-வது சரீரங்கனத்தல் 2-வது தேசசுகுறைந்து மழுங்குதல் 3-வது நாக்குஈரம் அற்றுவறளல் 4-வது தேகஎரிச்சல் 5-வது மூத்திரம்அதிகமாகுதல் 6-வது படுக்கைபொருந்தாமையுடன் மூர்ச்சையுமுண்டாகுதல் 7-வது சுவாசம் அதிகரிக்குதல் 8-வது ரணம்பிறக்குதல் 9-வது கிருமிசேருதல் 10-வது க்ஷயங்கண்டு உயிர்நீங்குதல்.

### மேகரோக காலநிதானம்.

இவ்விருபதுமேகங்களில் 1-ஆச்சியகந்திமேகம், 2-சுத்தமேகம், 3-வாதப்பிரமியமேகம், 4-மாமிசசிராவிமேகம் ஆகிய நான்கும் வாதத்தாற்பிறந்தவைகளெனவும்; 5-அப்பியமேகம், 6-பித்தப்பிரமியமேகம், 7-சவிரணமேகம், 8-மதுமேகம், 9-சாந்திரமேகம், 10-ஆர்க்கமேகம் ஆகிய ஆறும் பித்தத்தாற் பிறந்தவைகளெனவும்; 11-வசாமேகம், 12-சுத்தமேகம், 13-மச்சமேகம், 14-ஆதிக்கமேகம், 15-சுராமேகம், 16-சுக்கிலமேகம், 17-உதகமேகம், 18-பிரசமேகம், 19-சாரமேகம், 20-தைத்தியமேகம் ஆகிய பத்தும் சிலேஷ்மத்தாற் பிறந்தவைகளெனவும்; இவற்றில் (1) வது 7-நாட்களுக்குள்ளும், (2) வது 15-நாளிலும், (3) வது 6-மாதங்களிலும், (4) வது 3-நாட்களில் அல்லது 8-நாட்களில் அல்லது 5-வது மாதத்திலும் (5) வது நோய் கண்ட 8-வது மாதத்திலும், (6) வது 3-வது ஆண்டிலும், (7) வது 2-வது ஆண்டிலும், (8) வது 5-ஆண்டிலும், (9) வது 5-ஆண்டிலும் (10) வது 9-வது மாதத்திலும், (11) வது 7-வது ஆண்டிலும், (12) வது 10-ஆண்டிலும், (13) வது 5-ஆண்டிலும், (14) வது 7-ஆண்டிலும்; (15) வது 7-ஆண்டிலும், (16) வது 3-வது ஆண்டிலும், (17) வது 1-ஆண்டிலும் (18) வது 5-மாதத்திலும் (19) வது 15-ஆண்டிலும் (20) வது 3-ஆண்டிலும் கொல்லும் என்றுரைப்பாருமுளர்.

ஆயினும் சிகிச்சாசாரத்திற்கூறிய முறைப்படி சிகிச்சை செய்யின் சாத்தியமாதலும் உண்டு.

மேகரோகம், மதாந்தரமுற்றிற்று.

---

### வித்திரதிக்கட்டியின்பூர்வரூபம்.

வித்திரதிக்கட்டியானது முதல்முதல் தோல் ரத்தம் மாமிசம் மேதை எலும்பு சன்னநரம்பு கபநரம்பு என்னும் இவைகளில் பஞ்சு

சேருவதுபோல் கொஞ்சங்கொஞ்சமாகச்சேர்ந்து தடித்து நிலைபெற்று எழும்புகின்ற வீக்கத்தையே தனக்குப்பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது. இது குத்தலைத்தருவதால் வித்திரதிக்கட்டி எனப் பேர்பெற்றது. இதனை விப்புருதிக்கட்டிஎன வழங்குகிறார்கள்.
வித்திரம் என்பது குத்தல்.

## வித்திரதிக்கட்டிலக்ஷணம்.

பூர்வரூபத்தில் தடித்த வீக்கமானது சரீரத்தில் வெளிப்புறத்திலேனும் உட்புறத்திலேனும் வேரூன்றி அதிகஉக்கிரமான நோவோடு வட்டவடிவாகவும் நீண்டவடிவாகவும் புடைத்துக் கட்டியாய் ஏற்பட்டுக் காணும். இது நிலைபெற்றுக்கண்டவிடத்திலேயே இருந்தால் வித்திரதியென்றும்; நரம்பின்வழியாக ஓடிஓடித்தடித்தால் ஓடுவித்திரதியென்றும் பேர்பெறும். இது உள்வித்திரதி வெளிவித்திரதி என இருவிதப்படும்.

## வித்திரதிக்கட்டிபேதம்.

வித்திரதிக்கட்டி என்பது வாதவித்திரதி பித்தவித்திரதி சிலேஷ்மவித்திரதி திரிதோஷவித்திரதி ரத்தவித்திரதி க்ஷதவித்திரதி என ஆறுவிதப்படும். அன்றியும்; ஸ்தனவித்திரதி என்பது ஒன்றுண்டு. இது அசாத்திய வித்திரதியைச் சொன்னவுடன் சொல்லப்படும். இவைநிற்க, முன்புலக்ஷணவாக்கியத்தில் உட்புறத்திலேனும் வெளிப்புறத்திலேனும் பிறக்கும் என்றுசொல்லிய வித்திரதிக்கட்டி ஒன்றுதானே நாபி வஸ்தி யகிருதி பிலீகம் குலோமம் இருதயம் குக்ஷி வம்க்ஷணம் முஷ்கம் அபானம்என்னும் இப்பத்து இடங்களைப்பற்றியே முக்கியமாகப்பிறக்கும். அப்போது அவ்வவ் விடப்பெயர்கொண்ட வித்திரதிக்கட்டிகளெனப்பெயர்பெறும். அவைகளையும் முறையே இதனடியிற்காண்க.

## 1-வது வாதவித்திரதிக்கட்டி.

கறுத்தும் சிவந்தும் அதிகநோவுடன் தாமதத்தின்மேல்விருத்தியடைவதும் அப்படியே பழுத்து உடைவதுமாயிருக்கும்; அப்

போது இரைப்பு இருமல் வியர்வை பிரமை வயிற்றுப்பொருமல் புரளல் சரீரத்தில் கொஞ்சம்வீக்கம் அழுதல் என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 2-வது பித்தவித்திரதிக்கட்டி.

சிவந்தும் வெளுத்தும் தாம்பிரநிறத்தைப்பெற்றும் எரிவுந்தத்துடன் எழும்பிச்சீக்கிரத்தில் விருத்தியடைவதும்அப்படியேபழுத்து உடைவதுமாக இருக்கும்; அப்போது தாகம் சோருதல் அதிசுரம் உடலெரிச்சல் என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 3-வது சிலேஷ்மவித்திரதிக்கட்டி.

வெளுத்து அசைவற்று இருப்பதன்றியும் தினவு வியர்வை குளிர்ச்சிகளைப்பெற்றுத் தாமதத்தின்மேல் விருத்தியடைவதும் அப்படியே பழுத்து உடைவதுமாக இருக்கும்; அப்போது அசையக்கூடாமை கொட்டாவி அருசி தேகம்பாரித்தல் என்னுமிக்குணங்கள் உண்டாகும்.

## 4-வது திரிதோஷவித்திரதிக்கட்டி.

முற்கூறிய வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் மூன்று வித்திரதிக்கட்டிகளுக்குள்ள குணங்களேயும் மிகுஉபத்திரவத்தையும் பெற்றிருக்கும்,

## 5-வது ரத்தவித்திரதிக்கட்டி.

கறுத்தும் ஒருவேளைவெளுத்தும் சிறுசிறு கொப்புளங்களுடன் பிறக்கும்; அப்போது அதிகதாகமும் நோவும் பித்தவித்திரதிக்கட்டியில் காணுகின்ற குணங்களுமுண்டாகும். இது புருஷர்கட்குவெளிப்புறத்திலும் மாதர்கட்கு உட்புறத்திலுங் காணும்.

## 6-வது க்ஷதவித்திரதிக்கட்டிலக்ஷணம்.

சத்தி முதலிய ஆயுதங்களால் வெட்டுக்காயம் உள்ளவனுக்கு அபத்தியபத்தாலும் அக்காயத்தால்பிறந்த உஷ்ணத்தினலும் அதிகரித்தவாயுவானது நரம்புகளில் அடிபட்டுக்கலங்கிக் கெட்டிருக்கின்ற

ரத்தத்துடன் சேர்ந்து அந்தரத்தத்தைத்தடித்து வீக்கங்களாகச் செய்து பித்தத்தைபுண்டாக்கி எழுபத்தொன்றுவது பக்கத்தில் சொல்லிய ரத்தபித்தரோகத்திற்குள்ள குணங்களேயும் பிறப்பிக்கும். அப்போது பல உபத்திரவங்களுண்டாகும். இதுமாதர்கட்கு ஸ்தான பேதமாகக் கண்டால் உபத்திரவங்களுங் கொஞ்சம் பேதப்படும்.

க்ஷதம் என்பது வெட்டுக்காயம்.

## நாபிஸ்தானவித்திரதிக்கட்டி.

குனிய நிமிரக்கூடாத உபத்திரவத்தையும் விக்கலேயு முண்டாக்கும்.

## வஸ்திஸ்தானவித்திரதிக்கட்டி.

மூத்திரக்கிரிச்சரரோகத்திற்குள்ள துர்க்குணங்களே யெல்லாம் உண்டாக்கும். வஸ்தி என்பது மூத்திரஸ்தானம்.

## யகிருதிஸ்தானவித்திரதிக்கட்டி

இரைப்பையும் மார்பையசையவொட்டாதபிடிப்பையுமுண்டாக்கும்.

## பிலீகஸ்தானவித்திரதிக்கட்டி.

பெருமூச்சு தாகம் தேககனதி என்னுமிக்குணங்களே உண்டாக்கும்.

## குலோமஸ்தானவித்திரதிக்கட்டி.

தொண்டையைப்பேசவொட்டாமல் நெருக்கிப்பிடித்ததுபோல் இருத்தலே உண்டாக்கும். குலோமம் என்பது பக்கவிலாவின்சவ்வு.

## இருதயஸ்தானவித்திரதிக்கட்டி.

அதிசோர்வு தாகம் இரைப்பு மார்பு பிளந்து போவதுபோல் இருத்தல் நோவு என்னும் இக்குணங்களே உண்டாக்கும்.

## குக்ஷிஸ்தானவித்திரதிக்கட்டி.

வயிற்றிலும் விலாப்பக்கத்திலும் தோளிலும்நோவு வயிற்றிரைச்சல் என்னும் இக்குணங்களே உண்டாக்கும். குக்ஷி என்பது வயிறு.

## வங்க்ஷணஸ்தானவித்திரதிக்கட்டி.

தொடைகளை மெத்தவும் பிருவாக்கி அசைக்கக்கூடாமையாகச் செய்யும். வங்க்ஷணம் என்பது தொடைக்கவுட்டி.

## முஷ்கஸ்தானவித்திரதிக்கட்டி.

இடுப்பு முதுகு விலாப்பக்கம் ஆகிய இவ்விடங்களில் அதிக உபத்திரவத்தை உண்டாக்கும். முஷ்கம் என்பது பீசம்.

## அபானஸ்தானவித்திரதிக்கட்டி.

ஆசனத்தில் பலவித உபத்திரவங்களையுண்டாக்கி அபானவாயுவையுங் கெடுக்கும். அபானம் என்பது மலத்துவாரம்.

## வித்திரதிக்கட்டியின்பக்குவநிதானம்.

நாபிக்குமேல் உட்புறத்தில் பிறக்கின்ற வித்திரதிக்கட்டிகள் பழுத்து உடைந்தால் அந்தச் சீழ் ரத்தம் சீனைத்தண்ணீர் முதலியவைகள் வாயால்விழும்; நாபியிலும் நாபிக்குக்கீழிடத்திலும் உட்புறத்தில் பிறக்கின்ற வித்திரதிக்கட்டிகள் பழுத்துடைந்தால் அந்தச் சீழ் ரத்தம் முதலியவைகள் ஆசனத்தால்விழும்; திரிதோஷவித்திரதிக்கட்டி சுபாவமாக உடைந்தால் மகாரணத்தைப்போல் விருத்தி அடைந்து அசாத்தியமாம்.

## சாத்தியவித்திரதிக்கட்டிநிதானம்.

மார்பு நாபி கீழ்வயிறு என்னும் இடங்களில் உட்புறத்தில் பிறந்தபோதிலும் வெளியில்முகங்கண்டு சீழ் ரத்தம் முதலியவைகளை வெளிப்புறமாக விழப்பண்ணுகின்ற கட்டிகள் மேல்சிகிச்சையால் சாத்தியம்.

## அசாத்தியவித்திரதிக்கட்டிநிதானம்.

உட்புறத்திலேயே பிறந்து, அப்படியே முகங்கண்டு உடைந்து அநேகவுபத்திரவத்தைக்கொடுத்து வாயால் சீழ் ரத்தம் முதலியவைகளை விழப்பண்ணுகின்ற கட்டிகள் அசாத்தியம்.

---

* வ்ருக்காஸ்தான வித்திரதி என்றும்பெயர், வ்ருக்க என்பது பீசம்,

ஆயினும் இவைகளைப் புன்கம்பால்தயிலம் சாறடைலேகியம் குக்குலாதிச்சூரணம் சாதிலிங்கபஸ்மம் முதலிய அவுஷதங்களினு லும் *க்ஷத்திர க்ஷாராக்கினி சிகிச்சைகளினுலும் பரிகரிக்கவேண்டும்.

## ஸ்தனவித்திரதிக்கட்டி.

கருப்ப ஸ்திரீகளுக்கும் பிரசவித்த ஸ்திரீகளுக்கும் மற்ற ஸ்திரீகளுக்கும் ஸ்தனத்தின் பால் இருக்கினும் இல்லாவிடினும் அந்தஸ்தனத்தின் சூக்ஷ்ம நரம்புகளைப்பற்றி முன்பு பூர்வரூபத்திற் கூறிய விதமாகவே தடித்துக் கெட்டிப்பட்டுக் கனத்து உண்டாகும். இது நரம்பைப்பற்றி யுண்டாகி வெளியில் ரணத்தைச்செய்வதால் வெளிவித்திரதியென்றும் சொல்லப்படும். இது ஸ்தனநரம்புகளின் துவாரம் அற்பமாக இருக்கின்ற ருதுவாகாக் கன்னியர்க்குக் காணுதென்றறிக. இதனை மார்புச்சிலந்தி எனவும் சொல்வர். இதற்கு எள்ளு மறுதோன்றி மஞ்சள் இவைகளின் இலைமருந்து குமரிச்சீலை காணும் வாழைக்கற்கம் வவ்வால்சிறகுப்புகை சிலைத்தயிலம் முதலிய சிகிச்சைகளை உடனேயே செய்யவேண்டும். இச்சிகிச்சை கருப்பவித்திரதிக்கட்டிகளுக்கும் ஆகும்.

வித்திரதிக்கட்டி முற்றிற்று.

## குடல்விருத்திரோகலக்ஷணம்.

தனது சுபாவமார்க்கம் அடைபடும்படியாக அதிகரித்தெழுந்த ஒருவாயுவானது அதோமுகமார்க்கமாக அண்டங்களுக்குள் சஞ்சரித்து அவ்விடங்களில் வீக்கத்தையும் சூலையையும்பிறப்பித்து பின்பு நாபியின் நரம்புகளின்வழியாகச்சென்று ஆண்குறியில் அநுசரித்து அதில்இருக்கும் நரம்புகளுக்கும் அண்டத்தில் இருக்கும் நரம்புகளுக்கும் உபத்திரவத்தைச்செய்து குடல்விருத்தி ரோகத்தை உண்டாக்கும்.

## குடல்விருத்திரோகபேதம்.

குடல்விருத்திரோகமானது வாதக்குடல்விருத்தி பித்தக்குடல்விருத்தி சிலேஷ்மக்குடல்விருத்தி ரத்தக்குடல்விருத்தி மேதோகுடல்விருத்தி மூத்திரக்குடல்விருத்தி குடல்அண்டவிருத்தி என ஏழு விதப்படும்.

---

* உள்வித்திரதிக்கட்டிக்கு க்ஷத்திரக்ஷாராக்கினிச்சிகிச்சைகள் மரணத்தைத்தரும்.

## 1-வது வாதக்குடல்விருத்திரோகலக்ஷணம்.

வாயுவானது குடலில் நிறைந்துகொண்டு அதைப்பருக்கப்பண்ணுவதால் அந்தக்குடலானது வயிற்றைப்பருக்கப்பண்ணி உபத்திரவத்தையுண்டாக்கும். அப்போது அந்தக்குடலிருக்கும் ஸ்தானத்தைப்பிடித்துப் பார்க்கில் அது கடினத்துடன் தடித்துச் சுடுகையைப்பெற்று நிரேதுவாகப்பச்சைப் புண்போல் நோவைத்தருவதாக இருக்கும்.

## 2-வது பித்தக்குடல்விருத்திரோகலக்ஷணம்.

பித்தமானது குடலில்பூரித்துக்கொண்டு அதைப்பருகப்பண்ணும் அப்போது அந்தக்குடலிருக்கும் ஸ்தானத்தைப்பிடித்துப்பார்க்கில் அதுஅளிந்த அத்திப்பழத்தை யொத்திருப்பதும் அன்றி எரிச்சலுடன்கூட கதகதப்பையுந் தருவதாக இருக்கும்.

## 3-வது சிலேஷ்மக்குடல்விருத்திரோகலக்ஷணம்.

சிலேஷ்மமானது குடலில் நிறைந்துகொண்டு அதைப் பருக்கப்பண்ணும் அப்போது அந்தக்குடல் இருக்கும் ஸ்தானத்தைப்பிடித்துப்பார்க்கில் கனத்தும் கெட்டிப்பட்டும் குளிர்ந்தும் மினுமினுத்தும் இருப்பதன்றியும் நமைச்சலையும் மிகுசூலையையும் தருவதாக இருக்கும்.

## 4-வது ரத்தக்குடல்விருத்திரோகலக்ஷணம்.

ரத்தமானது குடலில் நிறைந்துகொண்டு அதைப்பருக்கப்பண்ணும் அப்போது அந்தக்குடல் இருக்கும் ஸ்தானத்தை நிதானித்துப்பார்க்கில் சிறுசிறு கொப்புளங்கள் இருப்பதாக யூகிகளுக்குத் தோற்றுவதும் பித்தக்குடல் விருத்திக்குள்ள குணம் உண்டாவதுமாக இருக்கும்.

## 5-வது மேதோகுடல்விருத்திரோகலக்ஷணம்.

மேதோதாதுவினால் குடலானதுபருக்கும் அப்போது அந்தக்குடல் இருக்கும் ஸ்தானத்தைப் பிடித்துப்பார்க்கில் சிலேஷ்மக்குடல்விருத்திக்குணங்களுடையதாய் அளிந்தபனம்பழத்தை யொத்திருக்கும்.

## 6-வது மூத்திரக்குடல்விருத்திரோகலக்ஷணம்.

வழக்கமாகக் காலங்களில் பெய்கின்ற மூத்திரத்தை அடக்கி அடக்கி அகாலத்தில் பெய்வதினால் அந்த மூத்திரமானது சிலநாளைக்குள் சரியாகவிழாமல் உள்ளேயேமறிபட்டுப் பையிற்கட்டுண்ட நீரைப்போல் துளித்துளியாய்க் கலங்கிக் கொஞ்சம் சுறுக்குடன் வெளிப்படும்.

முன்பு வயிற்றில் தினந்தினமும் தேங்கிய மூத்திர ஓதமானது குடலைப்பருகப்பண்ணும் அப்போது அந்தக்குடல் இருக்கும் ஸ்தானத்தைப்பிடித்துப்பார்க்கில் மிருதுவாயும் நோவுள்ளதாயுமிருக்கும். அன்றியும் மூத்திரத்துவாரத்திற்குங் கீழ் குதஸ்தானத்திற்கும் பீசஸ்தானத்திற்கும் நடுவில் ஒருநரம்பு வளையம்போல் சுருட்டிக்கொண்டிருக்கும்.

## 7-வது குடல்அண்டவிருத்திரோகலக்ஷணம்.

வாதாதிக்க வுணவுகளை அருந்துதல் அதிசீதள தடாகத்தில் தினமும் ஸ்நானஞ்செய்வதுமன்றிக் குதித்தல் பதினாலுவேகத்தை அடக்குதல் யுத்தஞ்செய்தல் மிகுசுமைஎடுத்தல் வெகுநடை நடக்குதல் மேடுபள்ள ஸ்தானத்தில் படுத்துப்புரளல் எழும்பி எழும்பிக் குதித்தல் யானைமுதலிய வாகனங்களின்மேல் ஏறி அதிகவேகமாகச் செல்லல் ஆகிய இச்செய்கைகளினால் குடலானது அசைந்து கலைந்து நலங்கும் அப்போது அதில் நிற்கின்றவாயுவும் அப்படியே கலங்கி முன்பு இருந்ததைப் பார்க்கிலும் இரட்டிப்பாகப் பூரித்துப் பலத்துக் கொண்டு மேற்படிகுடலை அவ்விடத்தைவிட்டு அதோமுகமாக நழுகச்செய்து பின்புதொடைக்கவுட்டிகளில் இறங்கி அவ்விடங்களில் வீக்கத்தைப் பிறப்பிப்பதும் அன்றிப் பீசக்குழிக்குள் பந்துவந்து மோதுவதுபோல் மோதி விருவிருப்பானநோவை உண்டாக்கும். அதற்குச் சிற்றண்டமெழுக்கு பேரண்டச்சுன்னம் அப்பிரகபஸ்மம் முதலிய அவுஷதங்களால் உடனேயே சிகிச்சை செய்யவேண்டும். செய்யாவிடில் அது அண்டத்தில் இறங்கி நிலைபெற்று உபத்திரவத்தைச் செய்துகொண்டே இருக்கும். இதனால் அண்டம் நோவுடன் கூடிப் பருத்து மாத்திருப்பதுமன்றிச் சிலவேளை துருத்திவாய்க்காற்றைப்போல்சத்தித்து ஏறுவதுமிறங்குவதுமாக இருக்கும். இவ்வா

யுவு முன்னிருந்தஸ்தானத்திற்போய்ச்சேர்ந்து முன்பு நழுகச்செய்த குடலை நிலையில் நிறுத்தாமையால் இது அசாத்தியம். ஆனால் கச்சுப் பட்டை முதலியவைகளை இடுப்பில் இழுத்துக்கட்டில் கொஞ்சம் சௌக்கியம். அதுகட்டாதகாலத்தில் இவ்வாயுவு அண்டங்களை உள் ளில் இழுத்துக்கொள்ளில் அபாயம்.

## குடல்விருத்திரோகசாத்தியாசாத்தியநிதானம்.

வாதக்குடல்விருத்திரோகலக்ஷணம் உண்டாய்ச் சுறசுறப்பாய்க் கருமை செம்மை வெண்மை என்னும் இவ்வன்னங்களுடன் வலைக் கண்களைப்போல் கண்களும்உண்டாயிருக்கிற குடல் விருத்திரோகங் கள் அசாத்தியம். இப்படிக்கு இல்லாத குடல்விருத்திகள்சாத்தியம்.

சித்தர்மதாந்தரம்.

## அண்டரோகபேதம்.

தேரையர்காப்பியம் அண்டரோகத்தை குடல்அண்டம் குழுறல் அண்டம் நீர்அண்டம் தசைஅண்டம் என நான்குவிதமாகச்சொல்லு கின்றது. இவற்றுள் நீர்அண்டத்தில் ரத்தஅண்டம் ஒருபிரிவும் தசைஅண்டத்தில் வாதாதிகளால் மூன்றுபிரிவும் உண்டாயிருக்கின் றன. இதனை விரைவாதம் பீசவாதம் அண்டவாதம் வளி எனவுஞ் சொல்வர்.

### 1-வது குடல்அண்டரோகம்.

முன்புசொன்ன குடல்அண்டரோகத்திற்குள்ள குணங்களை எல் லாம் பெற்றிருந்தாலும் வீக்கமில்லாமல் பருத்து ஒவ்வொருவேளை மிகுந்த உபத்திரவத்தைத் தருவதாயிருக்கும்.

### 2-வது குழுறல்அண்டரோகம்.

கைத்துருத்தியைப்போல் பருப்பதும் அன்றி மேலேறினும் கீழிறங்கினும் சும்மாவிருக்கினும் சமுத்திரகோஷம்போலும் தவளை யைப்போலும் இடைவிடாது இரைவதும் சிலவேளை இல்லாமையு மாக இருக்கும். இதனால் நடக்கும்போது அவ்விடத்தில் விகுத்த லும் கொஞ்சம் உஷ்ணத்தினால் வாயுவு அதிகரிக்குங்காலத்தில் வேத னையும் உண்டாகும். இது குழுறலைத்தருவதால் குழுறல் அண்டம் எனப்பேர்பெற்றது. இதனை ஏறண்டம் இறங்கண்டம் எனவுஞ் சொல்வர்.

## 3-வது நீர்அண்டரோகம்.

நரம்பின்வழியாகச்சுரக்கின்ற துர்நீரினால் பருத்துக் கெட்டிப்பட்டுச் சிலவேளைசுரத்தைபுண்டாக்குவதும் வேதனையைச்செய்வதுமாயிருக்கும். இது ஆயுதங்களினாலும் காரங்களினாலும் சாத்தியமானாலும் முன்போல் நரம்பின்வழியில் சலத்தை இறங்கவொட்டாத சிகிச்சையைச் செய்யவேண்டும். இவைநிற்க, ரத்தஅண்டம் என்பது இவ்வண்டத்தைப்போலவே இருக்கும்; ஆனால் பருத்தும் கறுத்தும் தடித்தும் இருக்கும். இதனால் சிலவேளை மயக்கமும் வாந்தியும் பேதியும் நோவும் உண்டாகும். இதற்கு ஆயுதசிகிச்சைகள் சாத்தியாசாத்தியத்தைத் தரும்.

## 4-வது தசைஅண்டரோகம்.

ஒருஅண்டத்திலாவது இரண்டிலுமாவது வாயுவினால் முதல் முதல் பலாக்கொட்டையில் வரம்புகட்டுவதுபோல் வரம்பு உண்டாகும்; அவ்வரம்பில்தசையானதுகொஞ்சங்கொஞ்சமாகப் பஞ்சுசேருவதுபோல் சேர்ந்து மிகுந்த உபத்திரவத்தைச் செய்யாமல்தடித்துக் கனக்கும். இதற்கு உடனேயே நானாவிதச் சிகிச்சைகள் செய்யாவிடில் அவ்வண்டம் நாளுக்குநாள் துர்மாமிசத்தால் நிறையப்பட்டுக்கொடியெலுமிச்சங்காய் கடாரநார்த்தங்காய் இளநீர் பருங்கருணைக்கிழங்கு ஆள்வள்ளிக்கிழங்கு பரும்பூசினிக்காய் நீண்டபருத்த சுரைக்காய் முதலிய பிரமாணங்களையொத்துப்பருத்துப்பூமியில் புரளும்படியாய்த்தொங்கும். இது கறுத்துக்கடினமாக இருந்தால் வாதத்தசை அண்டம்; மஞ்சள் நிறத்துடன் மிருதுவாக இருந்தால் பித்தத்தசை அண்டம்; வெளுத்துக் கல்லுப்போலிருந்தால் சிலேஷ்மத்தசை அண்டம் எனச்சொல்லப்படும். இதனால் சுரமுதலிய பலபல துர்க்குணங்களும் உண்டாம். இந்தரோகிக்கு மூத்திரம் இறங்கலால் ஆண்குறியும் இருக்குமென்று நினைக்கவேண்டும். அன்றியும் இந்தரோகம் மாதர்களுக்குங் காணுவதுண்டு. அதன்விவரம்: முன்பு குடல் அண்டவிருத்திரோகத்தைப் பிறப்பித்த வண்ணமாகவே வாயுவானது குடலில் நின்றும் கீழிறங்கி அல்குலுக்குள் பூரித்துக் கொள்ளும். அவ்வல்குலின் இரண்டுபக்கத்துச்சதைபுமிதழும் புணர்ச்சிகாலத்தில் விந்துபோய்ப்பாய்வதற்கும் காமச்சலம் சோணி

தம் கருப்பம்முதலியவைகள் வெளிப்பட்டு வருவதற்கும் கருப்பா சயஸ்தானத்திருந்துசிகம்பத்துள் அடங்கி நீண்டுவந்திருக்கிற வங்கு வாசல் என்னும் பூவும்தளர்ந்து ஆண்குறியைப்போல் நீண்டு வெளி யில் தொங்குவதுமன்றி அத்துவாரத்தில் தசை விழுதுவிட்டதுபோ லும் தேங்காய்க்குள்ளிருக்கும் முளையைப்போலும் தாமரைமொக் குபோலும் குமிளங்காயைப்போலும் துர்மாமிசமானது பருத்து அண்டங்களைப்போலவே தொங்குமென்றறிக. இக்கொடிய ரோகங் கள் ஆரம்பத்திலேயே கஷ்டசாத்தியமாகமுடியும். இதுதப்பித்தேக த்திலும் ஊறி முதிர்ச்சியும் அடையுமாகில் சாத்தியப்படுவதுஅரிது. ஆயினும் திடசித்தமும்தேகவன்மையும் உள்ளவர்கட்குக்காணுமா கில் இவைகள் க்ஷத்திர க்ஷாராக்கினி என்னும் ரணச்சிகிச்சைகளினு லும் கார சார அவுஷதங்களினாலும் சாத்தியம் ஆவதும் உண்டு.

அண்டரோகம், மதாந்தரம்முற்றிற்று.

---

## குன்மரோகபூர்வரூபம்.

குன்மரோகமானது அதிக ஏப்பம் மலபந்தம் வயிறுநிறைந்தது போலிருத்தல் துர்ப்பலம் குடலிரைச்சல் வயிற்றில் அற்பக்கூச்ச லோடு உப்பிசம் கோதல் அசீரணம் அசதி என்னு மிக்குணங்களைத் தனக்குப்பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது. குன்மம் என்பது புரளச்செய்தல்.

## குன்மரோகபேதம்.

குன்மரோகமானது வாதகுன்மம் பித்தகுன்மம் சிலேஷ்மகுன் மம் வாதபித்தகுன்மம் வாதசிலேஷ்மகுன்மம் பித்தசிலேஷ்மகுன் மம் திரிதோஷகுன்மம் ரத்தகுன்மமென எட்டுவிதப்படும். இவற் றுள் ரத்தகுன்மரோகமாத்திரம் மாதர்கட்கே உண்டாகுமென்றறிக. அன்றியும் சாமானியகுன்மங்களென மூன்றுவித குன்மரோகங்க ளுண்டு.

## 1-வது வாதகுன்மரோகம்.

கழுத்துநரம்புகளிலும் சிரசுநரம்புகளிலும் கோதல் சுரம் பிலீக ஸ்தானத்திலும் குடலிலும் இரைச்சல் வயிற்றில் ஊசியாற்குத்து

தல்போல்குத்தல் மலபந்தம் திணறலானமூச்சு தேகமரத்தலுடன் இளைத்தல் முகச்சுருக்கம் விஷமாக்கினி வாதசஞ்சாரத்தால் சருமமும் சத்ததாதுக்களும் உலர்ந்து கறுத்தல் இவ்வித உபத்திரவமென்று சொல்லக்கூடாததயக்கம் வயிற்றில் அதிகநோவு சிலவேளையில்லாமை பலவிதசங்கட்டம் அக்குன்மஸ்தானத்தில் எறும்பு ஊறுதல்போல் தோற்றல் என்னும் இக்குணங்களையுண்டாக்கி உபத்திரவத்தையே செய்யும். அன்றியும் நடைகுறைதல் சரீரங்கடுத்தல் கனத்தல் தூக்கம் உழலை அற்பவுண்டி நாக்குவறளல் என்னும் இக்குணங்களை யுண்டாக்குமென்பாருமுளர்.

இக்குன்மக்கட்டி வன்மையாகையால் இதனை நாயுருவி உப்பாதிக்குழம்பு வமனமருந்து பிரண்டையுப்பு பூநீற்றுச்செயநீர் பஞ்சலவணச்சுன்னம் சுயமக்கினிக்குமாரம் செயரசபஸ்மம்தாம்பிரச்செந்தூர முதலிய அவுஷதங்களினாலும் கருமநிவர்த்திகளினாலும் வசப்படுத்த வேண்டும்.

## 2-வது பித்தகுன்மரோகம்.

தாகம்புளியேப்பம் மூர்ச்சை பலநிறமானபேதி வியர்வை சரீர எரிச்சல் சுரம் சருமமெல்லாம் மஞ்சள்நிறம் வயிற்றைக்கையாற் பிடிக்கில் பச்சைப்புண்போல் நோதல் அந்தக்குன்மஸ்தானத்தில் காங்கையுடன் கொளுத்துவதுபோல் எரிச்சல் இக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும் முகத்தில் மஞ்சள்நிறம் வாந்தி மனக்கெடுதி மயக்கம் நெஞ்சில் கோழை சரீரகாங்கை கை கால் ஓய்ச்சல் வெய்யிலைக்காணில் தலைசுழலல் சிவந்தமூத்திரம் மந்தம் முக்கலுடன் மலஞ்சாரல் சுவாசம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கு மென்பாருமுளர்.

இதற்கு நாரத்தம்பழலேகியம் மகாவில்வாதிலேகியம் புளியாரைக்கிருதம் தேவதாரக்கட்டைச்சாம்பல் நன்னாரிவேர்சத்துகந்தகபஸ்மம் குன்மகுடாரம் முதலிய அவுஷதங்களும் ஆகும்.

## 3-வது சிலேஷ்மகுன்மரோகம்.

வயிறு அசைக்கக்கூடாமையுடன் நிறைந்ததுபோலிருத்தல் அரோசகம் சிலவேளைசுரம் சிலவேளைகுளிர் நாசியிற்சலம்வடிதல் சோம்பல் மார்புதுடித்தல் இருமல் தேகம்வெளுப்பு என்னுமிக்குண

ங்களை உண்டாக்கும். இது பிடித்துப்பார்க்கில் மற்றகுன்மகட்டிக ளைப்போல் கைக்குத்தட்டுப்படாமல் உள்ளுக்குள்ளே கட்டியாகக் கனத்து அசைவற்றுக்கொஞ்சம் உபத்திரவத்தைத் தருவதாயிருக் கும். அன்றியும் வாயில்சலம் ஊறல் இளைப்பு தேகம்வற்றுதல் காந்தி யீனம் துர்ப்பலம் அன்னத்திவேஷம் தலைசுழலல் நெஞ்சிற்புகைகம் மியதுபோல் தோற்றல் பயம் நடிக்கல் சிரோபாரம் என்னும் இக் குணங்களையுண்டாக்கு மென்பாருமுளர்.

இது இளநீர்க்குழம்பு சாறடைலேகியம் முள்ளங்கியுப்பு பனம் பூச்சுட்டசாம்பல் தாம்பிரபஸ்மம் முதலிய சிகிச்சைகளால் விலகும்.

## 4-வது வாதபித்தகுன்மரோகம்.

வாதகுன்மரோகம் பித்தகுன்மரோகம் என்னுமிவ்விரண்டினு லும் உண்டாகிற துர்க்குணங்களையெல்லாம் உண்டாக்கும்.

இதற்கு முன்புசொல்லிய அவ்விரண்டுவகைக் குன்மரோகச் சிகிச்சைகளையும் கலந்து உபயோகிக்கலாம். இவ்வண்ணமாகவே மற்றைய இருவகைத் தொந்தகுன்மரோகங்கட்கும் திரிதோஷகுன்ம ரோகத்திற்கும் சிகிச்சை அறியவேண்டியது.

## 5-வது வாதசிலேஷ்மகுன்மரோகம்.

வாதகுன்மரோகம் சிலேஷ்மகுன்மரோகமாகிய இவ்விரண்டி னாலும் உண்டாகின்ற உபத்திரவங்களையெல்லாம் உண்டாக்கும்.

## 6-வது பித்தசிலேஷ்மகுன்மரோகம்.

பித்தகுன்மரோகம் சிலேஷ்மகுன்மரோகம் என்னுமிரண்டினு லும் உண்டாகின்ற வருத்தங்களையெல்லாம் உண்டாக்கும்.

## 7-வது திரிதோஷகுன்மரோகம்.

வாதகுன்மரோகம் பித்தகுன்மரோகம் சிலேஷ்மகுன்மரோகம் என்னுமிம்மூன்றினாலும் உண்டாகின்ற உபாதிகளையெல்லாம் பிறப் பித்து அதிகநோவையும் மிகுதாகத்தையும் உண்டாக்கும். இக்கட்டி கனத்தும் உயர்ந்தும் ஆமைஓட்டைப்போல் கெட்டிப்பட்டும் இருக்

கும். அன்றியும் வயிறப்பல் பேதி வாய்துவர்த்தல் மூச்சுச்சிதைதல் என்னுமிக்குணங்களை உண்டாக்குமென்பாருமுளர். இது அசாத்தியம்,

## 8-வது ரத்தகுன்மரோகபேதம்.

இது ரத்தவாதகுன்மரோகம், ரத்தவாதபித்தகுன்மரோகம் என இருவகைப்படும்.

### ரத்தவாதகுன்மரோகம்.

இவற்றுள் ரத்தவாத குன்மரோகமென்பது மாதர்களுக்கு ருதுகாலத்திலும் முதற்பிரசவகாலத்திலும் அல்குல்ஸ்தானத்தில் மேக முதலிய ரோகங்கள் காணுங்காலத்திலும் பிறக்கும். அதன்விவரம் மாப்பண்டம் மாங்காய் முதலிய வாதவஸ்துக்களை மேற்குறித்த காலங்களில் மிகவும் புசித்தலினாலும் உபவாசத்தினாலும் தகாதகாரியங்களினாலும் வாயுவானது அதிகரித்து மாசாந்தரரத்தத்தை ஒரு துளியேனும் யோனிவழியில் வரவொட்டாமல் உள்ளேயே மறித்து வயிற்றைப்பருக்கப்பண்ணிக் கருப்பமாதருக்குள்ள குறிகளை உண்டாக்கும்; அப்போது மார்பு அதிரல் மசக்கை தனத்தில் கொஞ்சம் பால் ஆயாசம் முதலிய குணங்களுண்டாகும். முன்புமறிபட்டுத் தோய்ந்து மாமிசமொத்தையைப்போல் கெட்டியாகத்திரண்டு கட்டின கெட்ட ரத்தக்கட்டி ஆகையால் இது வயிற்றில் கருப்பத்தைப்போலவே இருக்கும். இருந்தாலும் கரசரணாதி அவயவங்களையுள்ள சிசுவைப்போலிராது. ஆயினும் அச்சிசுவைப்போலவே வயிற்றில் சூலைமுதலிய உபத்திரவங்களையுண்டாக்கிப் பக்கங்களில் பாய்வதும் மிகுந்து அசைவதும் சிலவேளை கொஞ்சமசைவதும் நாளுக்குநாள் சிசுவைப்போல் விருத்தியடையாததும் கருப்பத்தைப்போல் வயிற்றைப்பருக்கச் செய்யாததும் குன்மத்தையே விருத்தியடையச்செய்வதும் முன்புசொன்ன ஏழுவகைக் குன்மரோகங்களுக்கு உள்ள உபாதிகளை ஒரேகாலத்தில் தருவதும் நெடுநாட்சென்று அவுஷதங்களால் விழுவதும் ஒருவேளை விழாததுமாக இருக்கும். இதற்கு ஆயில்பட்டைக்குடிநீர் நவாக்ஷாரக்குழம்பு கலிங்காதிலேகியம் முதலிய சிகிச்சைகள் பொருந்தும்.

### ரத்தவாதபித்தகுன்மரோகம்.

மாதர்களுக்கு முன்பு சொன்ன ரத்தகுன்மரோகத்தில் நின்றும்

பிறந்த வாயுவின் கூட்டுறவினால் அதிகரித்தபித்தமானது ரத்தவாத பித்தகுன்மரோகத்தை யுண்டாக்கும். அதன்விவரம்: இந்தரோகத்தில் பித்தமும் சேர்ந்தமையால் முன்புவாதத்தால் தங்கிய மாதாந்த ருதுகாலரத்தமானது வெளிப்படும்; அப்போது அதிக உக்கிரமான நோவு சரீரம் மரத்தல் எரிச்சல் பேதி தாகம் சுரம் அக்கெட்ட ரத்தமிருக்கும் ஸ்தானத்தில் மிகவுஞ் சித்திரவதையான குத்தல் அல்குலில் மேகக்கசிவு அதில் துர்க்கந்தம் அதிகநோவு அதிர்தல் எப்போதும் வேதனை என்னும் இக்குணங்களுண்டாகும். இதனைச் சூதக வாயுவு மதாந்தரகுன்மம் தூரச்சூலை எனவுஞ்சொல்லுவார்கள். இவைநிற்க முன்பு வித்திரதிக்கட்டிகளைச் சொன்னவிடத்தில் மாதர்களுக்கு உட்புறத்திலேயே பிறக்குமென்ற ரத்தவித்திரதிக்கட்டியும் இதுவும்சீக்கிரத்தில் உடைந்தும் கரைந்தும் விழுகின்ற தன்மை ஒன்றாயிருப்பதால் இதையும் வித்திரதிக்கட்டியென்றே சிலமதாந்தரத்தில் சொல்லியிருக்கின்றது அப்படியாகுல் வித்திரதிக்கட்டியானது உடையாமல் உள்ளேயே அடங்கியிருக்கமாட்டாது: இந்தக்குன்மக்கட்டியோவென்றால் வாதாதிக்கத்தால் ஒருவேளை கரைந்து வெளிப்படாமல் உள்ளேயே அடங்கியிருப்பதும் உண்டு; அப்படி அடங்குங்காலத்தில் வயிறு கீழ்வயிறு மார்பு பிலீகஸ்தானம் ஆகிய இவ்விடங்களில் உட்புறத்தில் அதிகநோவு வெளிப்புறத்தில் அற்பநோவு முற்கூறிய ரத்தவாத குன்மத்தையுடைய வயிற்றைப்பார்க்கிலும் அதிகமாக வயிறுபருத்தல் சிலநாள்சென்று சரீரநிறமாறுதல் அக்கினிமந்தம் பலவீனம் அடிக்கடி வாய்நீரூறல் என்னும் இக்குணங்களுண்டாகும். இது அசாத்தியம்.

ஆயினும் சிகிச்சாதீபிகையில் சொல்லிய முள் முருக்கம்பூக்கிருதம் வெள்ளைச்சாறடை ரசாயனம் நிம்பகலிங்காதி யெண்ணெய்முதலிய சிகிச்சைகளை முறை பிசகாதுசெய்தால் சாத்தியமும் ஆகும்.

## சாமானியவாதகுன்மரோகம்.

இது நித்தியமும் தனது அதிகாரமாகிய சூரிய உதய முதல் பத்துநாழிகை வரைக்கும் உபத்திரவத்தை யுண்டாக்கிக் கொண்டேயிருக்கும்.

## சாமானியபித்தகுன்மரோகம்.

இது தனக்குரிய காலமாகிய பத்துநாழிகை முதல் இருபது நாழிகைவரைக்கும் உபாதியைச் செய்துகொண்டேயிருக்கும்.

## சாமானியசிலேஷ்மகுன்மரோகம்.

இது தனது தனியரசு காலமாகிய இருபதுநாழிகைமுதல் முப்பதுநாழிகைவரைக்கும் உக்கிரமான நோவை விளைத்துக்கொண்டேயிருக்கும். இவ்வண்ணமாகவே ராத்திரி காலங்களுக்கும் அறியவேண்டியது. இதுநிற்க மேற்சொல்லிய இரண்டுகுன்மங்களும் இதுவும் நீடித்துத்தேகத்தில் ஊறி நிலைக்குமாயின் முற்கூறிய காலப்பிரமாணங்களைத் தப்பிச் சதாகாலமும் உபத்திரவத்தை உண்டாக்குவதும்உண்டு. ஆகையால் இவைகளுக்கும் குன்மரோகச்சிகிச்சைகளைச் செய்யவேண்டும்.

## அசாத்தியகுன்மரோகநிதானம்.

எவ்விதக் குன்மரோகக் கட்டிகளானாலும் நாளுக்குநாள் உப்பிக்கனத்து உயர்ந்து ஆமையோட்டைப்போல் கெட்டிப்பட்டு நரம்புகளினால் கட்டுண்டிருந்து இத்துடன் சுரம் வாந்தி விக்கல் வயிறுப்பிசம் அதிகநோவு இருமல் இரைப்பு பீநசம் மார்பு இடித்தல் பேதி சரீரவீக்கம் என்னும் இக்குணங்களும் உண்டாயிருக்கில் அசாத்தியம்.

சித்தர்மதாந்தரம்.

## குன்மரோகபேதம்.

குன்மரோகத்தை எட்டுவிதமாகச் சில நூலில் சொல்லியிருந்தாலும் அவற்றுள் வாதகுன்மமுதல் சந்நிகுன்மம் ஈறாக நான்கும் முன்புசொன்னவைகளேயாம். மற்ற நான்கும் இதனடியிற் கூறப்படும்.

## 1-வது பாயுருகுன்மரோகம்.

உண்டபதார்த்தங்கள் செரியாமை அன்னஞ்செல்லாமை துருத்தியைப்போல் வயிறுப்பல் அவயவங்கள் கடுக்குதல் சரீரம் உலரல் நடைகுறைதல் ஓய்ச்சல் வியர்வை வயிற்றில் பந்து உருளல்போல் கட்டியுருளல் அவ்வயிறு வில்லைப்போல் விருத்துக்கொள்ளல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது குதத்தையும் அடிவயிற்றையும் பற்றியதால் பாயுருகுன்மம் எனப்பேர்பெற்றது.

பாயுரு என்பது குதம்.

## 2-வது எரிகுன்மரோகம்.

அடிவயிற்றில் எரிச்சல் குடல் குமட்டல் வாய்நீரூறல் தலைசுழலல் நோவு வயிறுப்பல் இரைச்சல் புளியேப்பம் ரோமத்துவாரங்களில் வியர்வைபெருகல் பேதி சரீரம்இளைத்தல் எரிச்சல்அன்னஞ்செல்லாமை இருமல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 3-வது சர்த்திகுன்மரோகம்.

வாந்தி அரோசகம் ஈரலுக்குள் எரிதல் ஏக்கம் தயக்கம் மயக்கம் வயிறுப்பல் அற்பவலி பலவீனம் மலபந்தம் மந்தாக்கினி நடைகுறைதல் சிறுநரம்புகள் உப்பல் தேகத்தில் திமிர்என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 4-வது வலிகுன்மரோகம்.

வயிற்றில் முள்ளைச்சொருகுதல்போலிருத்தல் உப்பிசம் குடைச்சல் நோவு சரீரந்திரைதலுடன் உலர்ந்து கறுத்தல் தூக்கம் அற்பவுண்டி விலாச்சொருகல் முதுகுத்தண்டில்வலி இடுப்புநோவு சரீரமெங்கும் கடுக்குதல் அதிகசுரம் பொய்ப்பசி என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

இவைகளுக்கும் மேற்சொல்லிய சிகிச்சைகளேயாம்.

குன்மரோகம் மதாந்தரமுற்றிற்று.

ஐந்தாவது அஸ்மரிரோகபடலம் முற்றிற்று.

---

# 6-வது ஆநாகரோகபடலம்.

## ஆநாகரோகலக்ஷணம்

குதஸ்தானத்தையுடைய அபானவாயுவும் இருதயஸ்தானத்தையுடைய உதானவாயுவும் தங்களுக்குரிய தொழிலைவிட்டு இரண்டும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு வயிற்றை விருத்தலுடன் இழுத்

துக்கொள்ளும் அப்போது வயிற்றில் இரைச்சல் மலச்சிக்கல் சுரம் சுவாசம் முதலிய உபத்திரவங்களுண்டாகும். இது வயிற்றை இழுத்துப்பிடிப்பதால் ஆநாகரோகமெனப் பேர்பெற்றது.

ஆநாகம் என்பது இழுத்துப்பிடித்தல்.

## ஆநாகரோகபேதம்.

முன்சொன்ன ஆநாகரோகம் ஒன்றாயிருந்தாலும் அதன் விகற்பத்தால் அஷ்டிலாரோகமும் அதிலிருந்து பிரத்தியஷ்டிலாரோகமும் அதினின்று துனிரோகமும் அதில் பிரதிதுனிரோகமும் பிறக்கும். அன்றியும் சலகூர்மரோகம் என்பது ஒன்றுண்டு.

## அஷ்டிலாரோகலக்ஷணம்.

முற்கூறிய ஆநாகரோகத்தை மலக்குடாரமெழு வெண்காரமாத்திரை சோம்புத்தீநீர் நீர்ப்பேதி முதலிய அவுஷதப் பிரயோகங்களைக்கொண்டு நிவர்த்தி செய்யவேண்டும், செய்யாவிடில் அவ்வாயுக்களினால் வயிற்றிற்குள் திரட்சியுள்ளதாகவும் கெட்டிப்பட்டதாகவும் ஒருவீக்கம் உண்டாகும். அது பந்துபோல் எழும்புவதும் கட்டியாகத் தோற்றப்படுவதுமாயிருக்கும். அப்போது பூர்வரோக குணங்களும் அதிகரிக்கும்.

இது பப்பிலிப்பிஞ்சு ஆற்றுக்கலிங்கம் இவைகளின் ஊறுகாய் லவணவாழைக்குழிநீர் கடல்நீரால் சமைத்தபொங்கல்அன்னம் பூநீற்றுச்செயநீர்ப்படங்கு கம்பியுப்புப்பஸ்மம் முதலிய அவுஷதங்களால் சாத்தியமாம். இச்சிகிச்சைபிரத்தியஷ்டிலாரோகத்திற்கும் சலகூர்மரோகத்திற்குமாகும்.

## பிரத்தியஷ்டிலாரோகலக்ஷணம்.

மேற்சொன்ன ஆநாகரோகுணத்துடன் ஊர்த்துவமுகமாகவே எழும்புகின்ற கட்டியானது குறுக்காகவளர்ந்து இருபக்க விலாக்களிலும் குறுக்கே ஓடிஓடிப் பாய்ந்துகொண்டேயிருக்கும்.

## துனிரோகலக்ஷணம்.

இந்தரோகத்தில் வயிறுவிருத்தல் வீக்கம் முதலிய குணங்கள் உண்டாயிருப்பதுமன்றி இதில் அடங்கியவாயுவு பக்குவாசயஸ்தா

னத்தில் இருந்து ஆசனம் அல்குல் என்னும் இவ்விடங்களின் சமீப வரைக்கும் சீக்கிரத்தில் அதிகவுபத்திரவத்தை உண்டாக்கி யுண்டாக்கி அதோமுகமாகக் கீழிறங்கிக்கொண்டேயிருக்கும்.

துனி என்பது உபத்திரவம்.

## பிரதிதுனிரோகலக்ஷணம்.

மேற்சொன்ன துனிரோகத்திற்கு வேறுபாடாக வாயுவானது குதஸ்தானத்தில் குடியாக நிலைத்திருந்துகொண்டு பக்குவாசயஸ்தான பரியந்தம் அலையடிப்பதுபோல் சீக்கிரத்தில் உபத்திரவத்தை யுண்டாக்கி யுண்டாக்கி ஊர்த்துவமுகமாக மேலேறிக்கொண்டே இருக்கும். இதுவும் மேற்சொல்லிய துனிரோகமும் கனத்தமருந்துகளினால் வசப்படும்.

## சலகூர்மரோகலக்ஷணம்.

சிலேஷ்மாதிக்கமான சீதளவஸ்துக்களினாலும் நீங்காத நிழலையுடைத்தாய் விளக்கெண்ணெய்போல் தடித்திருக்கின்ற சுனைத்தண்ணீரினாலும் சிலேஷ்மமானது வயிற்றில் சேர்ந்துகொண்டேவரும். அதுவாயுவின் உபபலத்தைக்கொண்டு மீளவும் நன்றாக விருத்தியடைந்து தடித்துக் கெட்டிப்பட்டு நீண்டு ஆமையின் உருவத்தை யொத்த கட்டியாகி நோவில்லாமலும் சிகிச்சைக்கு இடங்கொடாமலும் வலப்பக்கத்திலேனும் இடப்பக்கத்திலேனும் ஒருவேளை அசைந்தும் அசையாமலுமாக இருக்கும். இதனால் தொடைகளுக்குத் தூர்ப்பலமும் சரீரத்திற்கு வெளுப்பும் உண்டாகும். இது நீரோடுங் கூடியிருப்பதால் நீராமையென்றும் ஊருவதால் ஊர்ஆமை யென்றும் பெயர்பெறும், கெண்டைக்கட்டியென்றும் வல்லைக்கட்டியென்றும் சிலமதாந்தரத்தில் சொல்லப்படுகின்றது.

ஆநாகரோகம் முற்றிற்று.

---

## சூலைரோகபேதம்.

சூலைரோகமென்பது வாதசூலைரோகம் பித்தசூலைரோகம் சிலேஷ்மசூலைரோகம் திரிதோஷசூலைரோகம் ஆமசூலைரோகம் சர்க்கரா

சூலைரோகம் குன்மசூலைரோகம் என வழுவிதப்படும். இது சூலத்தால் குத்துவதுபோல் குத்தலான நோவைத்தருவதால் சூலைரோகம் எனப்பேர்பெற்றது.

## 1-வது வாதசூலைரோகலக்ஷணம்.

அதிசலபானம் தினமும் காற்றில் அலைந்து திரிதல் வருத்தமான கனவுழைப்பு மிகுந்தசையோகம் ஆகிய இவைகளினால் வாயு அதிகரித்துச் சூலைரோகத்தைப் பிறப்பிக்கும். இதனால் இடுப்பு தொடை முதுகு ஆசனம் ஆண்குறி அல்குல் கீழ்வயிறு என்னும் இவ்விடங்களில் குத்தலுடன் வேதனையுண்டாகும். அன்றியும் கை கால் உளைதல் தடித்தல் திமிர் தாகம் அதிரல் கண் முழங்கால் விலா இவைகளில் கனத்தல் சிறுநீர் கடுத்துச்சிவந்து வீழல் சரீரம்முழுதும் வெப்பம் பளபளப்பு குடைச்சல் நோவு என்னும் இக்குணங்களுண்டாகுமென்பாரு முளர்.

## 2-வது பித்தசூலைரோகலக்ஷணம்.

காரம் புளிப்பு தீக்ஷணவஸ்து முதலியவைகளினால் பித்தமதிகரித்துச் சூலைரோகத்தைப் பிறப்பிக்கும். இதனால் தேககாங்கை சுரம் வியர்வை குத்தல் மூர்ச்சை என்னும் இக்குணங்களுண்டாகும். அன்றியும் சரீரவாட்டத்துடன் வேதனை கைகால் உளைப்பு நோவு தடித்தல் பார்வைமந்தம் தாதுமெலிந்து நடக்குதல் சுபாவநிறமாறல் மயக்கம் துர்ப்பலம் என்னும் இக்குணங்களுண்டாகு மென்பாரு முளர். இந்தரோகம் பித்தசாந்திசிகிச்சை சீதோஷ்ணஔஷதம் இவைகளால் வசப்படும்.

## 3-வது சிலேஷ்மசூலைரோகலக்ஷணம்.

கடலடுத்தநாட்டு மாமிசம் கிழங்குகள் சீழ்ப்பால்கட்டி களி முதலிய மந்தவஸ்துக்களை மிகப்புசித்தலினாலும் சேற்றுச்சலபானத்தினாலும் சிலேஷ்மமதிகரித்துச் சூலைரோகத்தைப் பிறப்பிக்கும். இதனால் சரீரமரத்தல் மூர்ச்சை எந்தவஸ்துவினும் அசங்கிதம் குத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். அன்றியும் தொண்டையிலே வேதனையுடன் கபாதிக்கம் அடிவயிற்றில்நோவு வியர்வை

நகக்கண்களில் ரத்தம் இல்லாமை தேகம் பஞ்சைப்போல் மெலித லுடன் வெளுத்துப் புண்போல் எரிதல் அடிவாயில் சீறுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகுமென்பாருமுளர்.

## 4-வது திரிதோஷசூலைரோகலக்ஷணம்.

வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் இம்மூன்று சூலைரோகங்களினாலும் உண்டாகின்ற துர்க்குணங்களையெல்லாம் ஏககாலத்தில் உண்டாக்கும்.

## 5-வது ஆமசூலைரோகலக்ஷணம்.

அதிசலபானம் அகாலபோசனம் மலசலபந்தம்அசீரணவஸ்துக்களைப்புசித்தல் ஆகிய இவைகளினால் ஆமமாகிய அசீரணம் விர்த்தி அடைந்து சூலைரோகத்தைப் பிறப்பிக்கும். இதனால் மார்பு விலாப் பக்கம் வயிறு முதலிய இடங்களில் ஈட்டியால் குத்துதல்போல் குத்தல் உண்டாகும். சீதக்கட்டு விருத்தியினால் உண்டானதாதலால் இதனை ஆமசூலை எனினும் அமையும். அன்றியும் புளிப்பு தித்திப்பு கசப்பு இவையுள்ள வஸ்துக்களை மிகவும் புசித்தலினாலும் உபவாசத்தினாலும் ஆமாசயத்தில் சீதஞ்சேர்ந்து வயிற்றிலும் விலாப்பக்கங்களிலும் வேதனையுடன் கடித்தலையும் குத்தலையும் உண்டாக்குமென்பாருமுளர். ஆமம் என்பது அசீரணம்.

## 6-வது சர்க்கராசூலைரோகலக்ஷணம்.

இடுப்பு முதுகு விலாப்பக்கம் அடித்தொப்புள் குதஸ்தானம் கீழ்வயிறு என்னுமிவ்விடங்களில் குத்தலுண்டாகும். அப்போது மூத்திரம் ரத்தத்துடன் கூடிக் கிரிச்சரரோக குணத்தைப்பெற்று நீர்த்துவாரத்தில் சுறுக்குச்சுறுக்கென்று ஊசியால் குத்துதல்போல் வேதனையைப் பிறப்பித்து மணல்களைத்தள்ளிக்கொண்டே துளித் துளியாக இறங்கும். அன்றியும் முதுகு விலாப்பக்கம் நெஞ்சு அஸ்தி நாபி குதஸ்தானம் என்னும் இவ்விடங்களில் மாமிசம்வளர்தல் சலத் துவாரத்தில் பருக்கான் கல்லுகளைப்போல் மணல்கள் அடைத்துக் கொள்ளல் சரீரத்தில்வேதனை மனக்கலக்கம் மயக்கம் என்னும் இக் குணங்களை யுண்டாக்குமென்பாருமுளர்.

## 7-வது குன்மசூலைரோகலக்ஷணம்.

முன்பு 155-வது பக்கத்தில் சொன்ன குன்மங்களில் ஒன்றாகிய வாதகுன்மமானது தேகத்தில் நெடுநாள் நிலைப்பதினால் சூலைரோகம் பிறக்கும். இதனால் மலசலபந்தம் வாந்தி வியர்வை தாகம் ஏப்பம் மூர்ச்சைஎன்னும் இக்குணங்களுண்டாகும் அன்றியும் வயிறுபொருமல் இரைச்சல் குத்தல் வாய்நீரூறல் மாமிசதாதுவெதும்பல் சரீரமுலரல் அரோசகம் என்னும் இக்குணங்க ளுண்டாகு மென்பாருமுளர்.

இச் சூலைரோகங்களை வெந்நீர்ஒற்றடம் சிறுமூலக்குடிநீர் சாறடைவேர்க்கற்கம் பஞ்சலவணபஸ்மம் சூலைக்குடாரஎண்ணெய் சூலைபூபதி நாராயணமண்டூரம் முதலிய அவுஷதங்களால் சாத்தியஞ் செய்யவேண்டும்.

### சித்தர்மதாந்தரம்.

## சூலைரோகபேதம்.

மனக்கவலை அதிகஓட்டம் மிகுசையோகம் சண்டை புகை பசி ஆகிய இவைகளினாலும் துவர்ப்புவஸ்து நெடுநாட்சென்றகாடி சருகூறிய சலம் ரசமருந்தின்வேகம் இவைகளினாலும் சூலைரோகம் பிறக்குமென்றும் இது (15) விதப்படுமென்றும் சிலமதாந்தரங்களில் சொல்லப்படுகின்றது. இவற்றுள் வாதசூலைரோகம் முதல் குன்மசூலைரோகம் ஈறாகத்திரிதோஷ சூலைரோகம் ஒழிந்த ஆறுவகையும் முற்கூறியவைகளேயாம். மற்றைய ஒன்பதுவகைச் சூலைரோகங்களும் எடுத்துக்கூறப்படும்.

## 1-வது மேகசூலைரோகம்.

கைகால் கடுப்புடன் குடைச்சல் வியர்வை மலபந்தம் சிவந்த மூத்திரம் சரீரமெங்குஞ்சுட்கித்தல் சீதளம் எரிச்சல் சுரம் மந்தம் பிரமை மயக்கம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 2-வது முறிச்சூலைரோகம்.

ஆண்குறியிலும் கீழ்வயிற்றினும் குதத்திற்கு மேலினும் அடிக்குடலினும் ஓடிஓடிக்குத்தல் தேகமெங்கும் பரவிவலித்தல் தொப்பு

ளைச்சுழித்துச்சுழித்து இழுத்தல் தலைவலி சுரம் கண்களில் சிவப்பு டன் நீர்பெருகுதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 3-வது உலர்த்துசூலைரோகம்.

பித்த உஷ்ணத்தினாலும் அக்கினியினாலும் வறட்சியினாலும் குடல்வாதத்தினாலும் குன்மத்தினாலும் பிறந்து சரீரத்திற்கு உட்பு றத்தில் உலர்த்தலுடன் குத்தல் வெளிப்புறத்தில் வீங்கியிருத்தல் சர்வாங்கமும் நோதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 4-வது நிதம்பச்சூலைரோகம்.

பிரசவித்தகாலத்தில் அழுக்கை வெளிப்படுத்தாமையால் உள் ளேயே அடங்கிய ரத்தமும் சலமும் தேங்காய்க்குள் இருக்கும் மூளை யைப்போல் அல்குலின்வாயை அடைத்துக்கொள்ளும்போது பிற ந்து அவ்விடத்தில் குத்தல் அதை அசைத்தால் நீர்றங்கல் உள்ளில் கனத்தல் சரீரம்தளர்ந்து ஊதலுடன் வெளுத்தல் என்னும் இக்குண ங்களையுண்டாக்கும்.

## 5-வது கறைச்சூலைரோகம்.

உதிரம்பொங்கித் தோலைப்பற்றுவதினாலும் பற்றியது நரம்பின் துவாரத்தில் தடைபட்டுத் தங்குவதினாலும் உண்டாகிக் கீழ்முதுகை அநுசரித்து நின்று அவ்விடத்தில் மிகவும் வலிக்குதல் கை கால் உளைப்பு அறிவும் தேஜசும் மழுங்குதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 6-வது சுரசூலைரோகம்.

சுரம் வாயில்மாறுது சலம் ஊறல் வாந்தி ஒருவேளை அந்தவாந் தியில் ரத்தம்வீழல் இருபக்கவிலாக்களிலும் குத்தல் சரீரமுழுதும் வேதனை உளைச்சல் வயிற்றை இழுத்துப்பிடித்தலுடன்நோதல் நெஞ் செரிவு அசீரணம் தயக்கம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 7-வது பக்கச்சூலைரோகம்.

பக்கத்திற்குத்தல் திருகலுடன் அண்டத்தில் நோதல் சுரம் உடம்பு பச்சைப்புண்போலிருத்தல் கனத்தல் திமிர் கை கால் ஓய்ச்

சல் கண்ணிற்புகைகம்மியதுபோலிருத்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 8-வது கருப்பச்சூலைரோகம்.

இடுமருந்து வஞ்சனை சூனியம் பெருங்காயச்சூடு பிரசவித்த காலத்தில் தங்கிய அழுக்கு ஆகிய இவைகளினால் கீழ்வயிற்றில் ரத்தமானது உறைந்து கருப்பத்தைப்போல் திரண்டு புரண்டுகொண்டு அடிவயிற்றில் அதிகசூலையையுண்டாக்கும். இதனால் அனந்தஞ் சங்கட்டம் பிறக்கும்.

## 9-வது தூரச்சூலைரோகம்.

கெடுதியான போசனத்தினால் உண்டாகி மாதாந்தர ருதுகாலத்தில் வாய்நீரூறல் நெஞ்செரிவு ஈரலைப்பற்றிப் பக்கத்திற்குத்தல் சிரசும் வயிறும் வீங்குதல் அடிக்கடி ஏப்பம் கீழ்வயிற்றில் உதிரந்தங்கல் மலசலச்சிக்கல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## சாத்தியாசாத்தியசூலைரோகநிதானம்.

சூலைரோகம் 15-ல் முறிச்சூலை சர்க்கராசூலை சிலேஷ்மசூலை குன்மசூலை ஆமசூலை நிதம்பசூலை இவ்வாறும்அசாத்தியம். மற்றவை சாத்தியம்.

சூலைரோகம், மதாந்தரமுற்றிற்று.

---

## உதரரோகபேதம்.

உதரரோகமென்பது வாதோதரரோகம் பித்தோதரரோகம் சிலேஷ்மோதரரோகம் திரிதோஷோதரரோகம் பிலீகோதரரோகம் பந்தோதரரோகம் க்ஷதோதரரோகம் சலோதரரோகம்என எண்வகைப்படும். இவற்றுள் பிலீகோதரரோகத்தில் யகுர்தோதரரோகம் ஒரு பிரிவும் சலோதரரோகத்தில் சலஸ்தம்போதரரோகம் ஒருபிரிவும் உண்டு. இது முதலில் வயிற்றைவிகாரப்படுத்திப் பின்பு சகலதுர்க்குணங்களையும் பிறப்பிப்பதால் உதரரோகம் எனப்பேர்பெற்றது. இதற்கு மகோதரம் பெருவயிறு துந்திரோகம் என மூன்றுநாமங்களுண்டு. உதரம் என்பது வயிறு.

## சாமானியஉதரரோகலக்ஷணம்.

கீழ்வாய்த்தாளின் அடியும் உதடும் வற்றிச்சுருங்குதல் கைகால் வயிறு இவ்விடங்களில் வீக்கம் நடை பலம் அசனம் ஆகிய இவைகள் குறைதல் சரீரம்உலரல் வயிறுமாத்திரம்பருக்குதல் என்னும் இக்குணங்கள் சகல உதரரோகிகளுக்கும் உரித்தாக இருந்தாலும் இருக்கும்.

## உதரரோகபூர்வரூபம்.

வாததோஷத்தைப் பிறப்பிக்கின்ற வஸ்துக்களினால் முதல் முதல் வாயு அதிகரித்துச் சமாக்கினியைக்கெடுத்துப்புசித்த அன்னபானாதிகளை வெகுநேரம் பொறுத்துத்தாகத்தைக்கொடுத்துச் சீரணிக்கப்பண்ணும். இதனால் வயிற்றில் சீரணமாயிற்றென்றும் ஆகஇல்லையென்றும் அறியாமை தேகத்தில் இன்னவித சங்கட்டமிருக்கின்றதென்றும் தெரியாமை நாளுக்குநாள் துர்ப்பலம் நெட்டுயிர்ப்பு அற்பவேதனை என்னினும் புரளல் பெருமலச்சேர்க்கையால் சிலவேளை பேதி கால்களில் கொஞ்சம் வீக்கம் மிருதுபதார்த்தத்துடன் அற்பபோசனஞ்செய்பினும் கீழ்வயிற்றுச்சந்திகளில் நோவு அதிகரித்தது போலிருத்தல் அக்கீழ்வயிற்றிலும்மேல்வயிற்றிலும்மயிலிறகின் கண்களைப்போல் புடைகள் எழும்புதல் வயிற்று மடிப்புகள்கெடுதல் சதா சோம்பல் இருந்தவிடத்திலேயே யிருக்குதல் மலபந்தம் அக்கினி மந்தம் தாகம் விக்கல் வயிறுஉப்பிசம் என்னும் இக்குணங்கள் கண்டு வயிற்றுப்புரையில் சலமிறங்க ஆரம்பமாகும்; அத்தருணத்தில் மேலெல்லாஞ்சிவந்து வீக்கம்இல்லாமல் கொஞ்சங்கனத்து மோதிர வளையங்களைப்போல் நரம்புகளால் சுற்றப்பட்டு அதில் எப்போதும் கடகடவென்னும் ஒரு தொனியுண்டாகிச் சலம் இறங்கிப் பூரித்துக் கொண்டபின்பு அவ்வாயுவானது நாபிஸ்தானத்தையும் குடலையும் இழுத்துப்பிடித்துக்கொண்டு மார்பு இடுப்பு நாபி குதம் தொடைக் கவுட்டி என்னும் இவ்விடங்களில் வேதனையைப் பிறப்பித்து உடனே தானும் அடங்கி இருந்துகொண்டு பின்பு வெகுநேரம் பொறுத்துச் சத்திப்புடன் அபானத்தால் வெளிப்பட்டுக்கொண்டேஇருக்கும். இதனால் மலபந்தம் அற்பமூத்திரம் சொற்பாக்கினி அசையக் கூடாமை முகக்களைகுறைதல் முதலிய குணங்கள்பிறக்கும். இவைகளே உதரரோகபூர்வரூபமாம்.

## 1-வது வாதோதரரோகலக்ஷணம்.

வயிறானது காரணமில்லாமல் பருத்தும் சிலவேளைவாடியும் சில வேளைநொந்தும் நோவாமலும் மேலில்கறுத்த சன்னநரம்புகளால் சுற்றப்பட்டும் உள்ளில் ஒரு ஆச்சரியமான சத்தம் எழும்புதலுமாக இருக்கும்; அப்போது கை கால் வயிறு குதம் ஆகிய இவ்விடங்களில்வீக்கம், வயிறு விலா இடுப்பு முதுகு கீல்களிவைகளில் நோதல் ஒருவேளை சர்வாங்கத்திலும் நோதல் வறட்டிருமல் கீழ்வயிறு கனத்தல் மலபந்தம் சருமமெல்லாம் கறுத்தாவது சிவந்தாவது தோற்றல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதில் வாயுவானது சத்திப்புடன் அதிகரித்து உபத்திரவத்தைஉண்டாக்கி எங்குஞ்சஞ்சரிக்கும். அன்றியும் வயிறுதவிர மற்றிடம்வெளுத்து உலர்தல் துர்ப்பலம் அன்னத்திவேஷம் அடிவயிற்றில் இரைச்சல் உப்பிசம் அசீரணத் தோடுபசி என்னும் இக்குணங்கள் உண்டென்பாருமுளர்.

## 2-வது பித்தோதரரோகலக்ஷணம்.

வயிறானது பருத்து புகைநிறத்தையும் பச்சிலைரசநிறத்தையும் பெற்று மேலில் சுடுகையும் வியர்வையும் கடினத்துவமும் அழுத்தினால் உபத்திரவமும் உண்டாகி நரம்புகள்சிவந்தாவது மஞ்சள்நிறத்துடனாவது சுற்றப்படுவதாக இருக்கும்; அப்போது வயிறு தவிர மற்றைய இடமெல்லாம் மஞ்சள்நிறம் சிவப்புநிறம் உண்டாகுதல் அருந்தும் போசனம் விரைவில் தகிக்கப்படுதல் சுரம் மூர்ச்சை தாகம் பிரமை பேதி வாயில்காரம் உதடுசுருங்குதல் என்னும் இக்குணங்களுண்டாகும். இதில் பித்தமே அதிகரித்து அற்ப உபத்திரவத்தையுண்டாக்கும். அன்றியும் கண்களில் காசாம்பூநிறம் உண்டாகுதல் மோகம் தேகத்தில்காங்கை சருமத்தில் சுறசுறப்பு நரம்புகள் பலநிறத்துடன் இழுத்துக்கொள்ளுதல் அன்னம்செரியாமை என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 3வது சிலேஷ்மோதரரோகலக்ஷணம்.

வயிறானது நாளுக்குநாள் கனத்துப் பருத்துக் கடினத்துடன் அழுத்தமாய் அசைவற்று வெளுத்த புடைகளைப்பெற்று மினுமினுத்துக் குளிர்ச்சியையடைந்திருக்கும்; அப்போது தேகத்தில் கனத்தல்

நோவு நித்திரை அல்லது உறங்கிவிழுதல் கிடந்த இடத்திலேயே கிடப்பதற்குநினைப்பு வீக்கம் சருமமும் பஞ்சேந்திரியங்களும் வெளி றல் அரோசகம் இருமல் இரைப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகும். அன்றியும் நடுக்கல் நித்திரை இல்லாமை நாக்கு உப்புறைத்தல் குளிர்சுரம் கோபம் வயிறு உப்பிசம் நீரும் மலமும் கடுத்தலுடன் வெளிப்படுதல் கோழை என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 4-வது திரிதோஷோதரரோகலக்ஷணம்.

ஸ்திரீகள் புருஷனை வசியப்படுத்தும்பொருட்டு வாதாதிதோஷ காரிகளானசூரணகஷாயகற்கங்கள் இடுமருந்துமூத்திரங்களால் செய்கின்ற அவுஷதங்கள் விஷங்கள் ஆகிய இவைகளைக் கொடுக்கப்படுவதினால் வாதபித்த சிலேஷ்மமாகிய இம்மூன்றுதோஷங்களும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டு அதிகரித்து வயிற்றில் அடையும். இதனால் வயிறானது முன்புசொன்ன வாதம்முதலிய மூன்றுமகோதர ரோகங்களுக்குள்ள குணங்களைப்பெற்றும்பார்ப்பதற்குப்பயங்கரரூபமாகஇருக்கும்; அப்போது வீக்கம் மூர்ச்சை சுரம் முதலிய துர்க்குணங்களும் விரைவில் சீரணமும் உண்டாகும். இது குளிர்காற்றினாலும் மழைமேகக் குளிர்ச்சியினாலும் அதிகரித்து உபத்திரவத்தைச் செய்யும். அன்றியும் வெளுத்ததண்ணீர்பெருகுதல் கால் கை இளைத்தல் வயிற்றில்மாத்திரம் வீக்கம் தலைசுழலல் தயக்கம் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 5-வது பிலீகோதரரோகலக்ஷணம்.

பிரமாணம் இன்றிப் புசித்துப்புரளல் யானைகுதிரை ஒட்டை எருது சகடம் சிவிகை முதலிய வாகனாதிகளில் ஏறி வேகத்துடன் நடத்தி அலைவுறல் தகாதகட்டநைகளை யநுசரித்தல் குடல்குலுங்கும்படி அதிக சையோகஞ்செய்தல் ஓயாநடைநடக்குதல் நெடுந்தூரம் ஓடுதல் என்னும் இச்செய்கைகளினாலும் நோய்கள் அதிகரித்தலினாலும்: தேகம் இளைத்தலினாலும் இருதயத்திற்கு இடப்பக்கத்தில் இருக்கும் மாமிசகண்டமாகிய பிலீகம் தனது ஸ்தானத்தைவிட்டு நழுக, அதில் இருந்துவருகின்ற ரத்தமும் அப்பிலீகத்தை அநுசரித்து அன்னரசாதிகளால் விர்த்தியடைந்து அஷ்டிலாரோகத்தைப் போலும் ஆமைமுதுகைப்போலும் கடினத்தையும் உயர்வையும்

நாளுக்குநாளதிகரித்து வயிற்றிற்குளப்பக்கத்திலேயே நிறைந்து பருகும். இதனால் வயிறானது பருத்துச் சுபாவநிறத்தை யொழித்துச் சிவந்தநிறத்தைப்பூண்டு மஞ்சள்புடைகள் கறுப்புப்புடைகள் உள்ளதாய்க் கெட்டிப்பட்டிருக்கும்; அப்போது தேகம் வெளிறல் இருமல் இரைப்பு தாகம் வாயும் உதடும் உலரல் வயிறுப்பல் சுரம் மூர்ச்சை வாந்தி உள்ளெரிச்சல் மேலெரிச்சல் சோருதல் முதலிய குணங்கள் உண்டாகும். இது அசாத்தியம். அன்றியும் இருபக்கத்திலும் கூர்மையாய்த் தோற்றல் மல சலங் கட்டுப்படாமை வாயுபறிதல் தேகத்தில் அற்பவீக்கம் அசனத்தில்விருப்பம் கண்களில் ரத்தம் உண்டாயிருத்தல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 6-வது யகுர்தோதரரோகலக்ஷணம்.

முன்பு பிலீகோதரத்தைப் பிறப்பித்த அப்பிரமாணபோசனம் முதலிய துர்ச்செய்கைகளினால் இருதயத்திற்கு வலப்பக்கத்திலிருக்கின்ற கறுத்தமாமிசகண்டமான யகுர்த் தனதுஸ்தானத்தைவிட்டு நழுகி மேற்சொல்லிய பிலீகோதரரோகத்தைப்போலவே வயிற்றிற்குள் அப்பக்கத்தில் விருத்தியடைவதினால் வயிறுபருக்கும்; அப்போது இரைப்பு இருமல் முதலிய குணங்கள் உண்டாகும்.

## 7-வது பந்தோதரரோகலக்ஷணம்.

கண் இமைமயிர் உதிர்ந்து கலந்திருக்கிற அன்னபானாதிகளை அருந்துவதால் மலபந்தம் உண்டாகும்; அக்காலத்தில் மூலரோகம் உதாவர்த்தரோகம் ஆநாகரோகம் குடலிலொட்டிக்கொள்ளும் அன்னம் இவைகளினால்அதிகரித்து வயிற்றைவிகாரப்படுத்துகின்ற வாயுவைப்போல் ஒருவாயுஅதிகரித்து பித்தத்தையும் சிலேஷ்மத்தையும் மலத்தையும் வெளிப்படுத்தாமல் வயிற்றிற்குள்பந்தித்துக் கீழ்வயிற்றிற்கும் குதஸ்தானத்திற்குமாக வீக்கத்தையுண்டாக்கும். இதனால் கீழ்வயிறானது பருத்து வாயுவை வெளிவிடாமல் நிறைத்துக்கொண்டசைவற்றிருப்பதும் மேலில் நரம்புகளும் புடைகளும் கறுத்தாவது சிவந்தாவது மோதிரவளையம்போல் சுற்றிக்கொண்டிருப்பதுமாகப் பருத்திருக்கும்; அல்லது நரம்புகள் மாத்திரம் இருந்து புடைகள் இல்லாதிருந்தாலுமிருக்கும். இவைகள் மேல்வயிற்றில்கண்டால் பசுவின்வாலைப்போல் மேலில் வார்வாராய்த்தோற்றும்; அப்போது

அபானம் தொடை நாபி மார்பு சிரசு ஆகிய இவ்விடங்களில்நோதல் தாசம் தும்மல் எரிச்சல் சுரம் இருமல் இரைப்பு மலபந்தம் அரோசகம் வாந்தி என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 8-வது க்ஷதோதரரோகலக்ஷணம்.

கூர்மையுள்ள சன்னஎலும்பு பாணத்தின் முனை ஊசி உவா முள்ளு முள்ளு வால்நெல்லு முதலியவைகள் கிடந்தபோஜனத்தினாலும் அதிதிண்டியினாலும் குடலுக்குள் துவாரம் உண்டாகும். அல்லது அவ்விடங்கள் வைந்திருக்கும்; அப்போது அம்மார்க்கங்களில் நின்றும் நித்தியமும் உண்ணுகின்ற போசனஞ் செரித்துஞ்செரியாமலும் பிதுங்க அத்துடன் அவ்வசிரணமும் குடலுக்கு வெளிப்புறத்தில்கசியும்; இவ்வசீரணமே குடலுக்கு உள்ளிலும் இருக்கின்றமையால் அது கொஞ்சங்கொஞ்சமாய் மலத்துடன் கூடப் பிரேத நாற்றத்தைவீசுவதாய்ப் பிசுபிசுத்து சிவந்தநிறத்தையாவது மஞ்சள் நிறத்தையாவது பெற்று ஆசனவழியால் வெளிப்பட்டுக்கொண்டே இருக்கும்; மற்றமிகுதிரசமேோவென்றால் முன்பு கசியும் என்றுகூறிய வண்ணமே கோடைக்காலச்செயநீரைப்போல் மிருதுவாகக்கசிந்து வடிந்து உள்ளேயேதங்கி வயிற்றை மெத்தவும் பருக்கப்பண்ணும்; இதனால் கீழ்வயிறானது பருத்துத் தண்ணீர்ப்பானையையொத்திருக்கும்; அப்போது மேற்சுவாசம் தாகம் பிரமை என்னுமிக்குணங்களுமுண்டாகும். இதுநிற்க அசீரணம் உஷ்ணம் வாயுஎன்னும் மூன்று தோஷங்களும் அதிகரித்துச்சுபாவமாயிருக்கின்ற குடலில் துவாரம் விழச்செய்து மேற்சொல்லிய ரோகத்தைப் பிறப்பிப்பதும் உண்டென்று தேரையர் சாஸ்திரம் சொல்லுகின்றது. இந்தக்ஷதோதரத்தைச் சிலர் சித்திரோதர மென்றும் பரிசிராவியென்றும் சொல்லுகிறார்கள். க்ஷதம் என்பது காயம். சித்திரம் என்பது துவாரம். பரிசிராவி என்பது பெருகுதல்.

## 9-வது சலோதரரோகலக்ஷணம்.

நெய்யையாவது எண்ணெயையாவது மிதமில்லாமல் குடித்து உடனே சீதசலத்தை அடிக்கடிகுடிப்பதினால் தாகம் உண்டாகும். இதனால் மேன்மேலும் சலபானம்பண்ணும்போது சமாக்கினிமந்தப் பட்டுத்தேகமிகவுமிளைக்கும். அப்படியிளைத்தகாலத்தி லதிகரித்த

வாயுவுஞ்சலவிர்த்தியினால் அதிகரித்தசிலேஷ்மமும் வயிற்றில் இருக்கின்ற சல நரம்புகளின் துவாரங்களையடைத்து அவ்வயிற்றிற்றங்கிக்கொண்டு முன்பு குடித்த சலத்தையே விருத்தியாக்குவதால் வயிறானது நாளுக்குநாள் உயர்ந்து மினுமினுத்துத் தண்ணீர்ப்பானையை யொத்து அசைவற்றுத் தட்டினால் சத்திப்பதாய் மேலில் பலநரம்புகளால் சுற்றப்பட்டுப் பிதுங்கிய நாபியைச் சுற்றிலும் சுழியைப் பெற்றுப்பருத்திருக்கும். அப்போது சரீரம் நருக்கித்துவைத்தது போலிருத்தல் ஆசனத்தில் வியர்வைபோல் கலங்கிக் கசிதல் நோதல் நடுக்கல் தாகம் அரோசகம் இருமல் இரைப்பு என்னுமிக்குணங்களுண்டாகும். இது வாதமும் சிலேஷ்மமும் வயிற்றில் சேருங்காலத்தில் பிறக்கும். அன்றியும் சர்வாங்கத்திலும் நீர்கோத்துக்கொள்ளுதலுடன் மஞ்சள்நிறம் உழலை ஆண்குறிதளர்ச்சி முதுகிலும் வயிற்றிலும் வீக்கம் காதுமந்தம் ஐம்புலன் கலங்குதலாகிய இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## சலஸ்தம்போதரரோகலக்ஷணம்.

சகல உதரரோகங்களுக்கும் ஆரம்பத்திலேயேவனமுருக்குச் சாம்பல் கள்ளிக்கரி சித்திரமூலமாச்சாதத்தேட்டை தீபாக்கினிச்சூரணலேகியம் அப்பிரகபஸ்மம் திரிலோகச்செந்தூரமுதலிய அவுஷதங்களைக்கொண்டு தகுந்தசிகிச்சைகளைச் செய்யவேண்டும். செய்யாவிடில் வாதபித்தங்கள் அதனிடத்தைவிட்டுப் பிலீகஸ்தானத்திற் சேர்ந்துகொண்டு கீல்களுக்கும் நரம்பின் வெப்பத்தைக் கொடுத்து அவ்விடங்களில் இருக்கின்ற சிலேஷ்மப் பசையையெல்லாம் இளக்கி வியர்வைச் சலம்போல் பெருக்கிக்கொண்டேயிருக்க அவ்வியர்வைச் சலம் வெளிநரம்புகளில் குறுக்காகப்பாய்ந்து வயிற்றுப்புரைக்குள் நிறைந்து அவ்விடத்து ரசங்களையும் பிசினைப்போல் குழம்பாக்குவதுமன்றி வயிற்றைப்பருக்கச்செய்யும். அப்போது வயிறானது கனத்து அசைவற்று வட்டவடிவைப்பெற்றுத்தட்டினால் சத்தம்இல்லாமலும் ஒருவேளைமிருதுவாகியும் மேலிற்புடைகளும் நரம்புகளும் இல்லாமல் நாபிமுதல் முதுகுபரியந்தம் ஏற்றமும் இறக்கமும் உண்டாயிருக்கும். அன்றியும் முன்சொன்ன வியர்வைச்சலம் அடிக்கடி இறங்கலால் மிகவும் உயர்ந்து பருத்துச் சலம் நிறைந்த பானையை யொத்து கிருஷ்ணபக்ஷத்தைப்போல் குறைவும்; சுக்லபக்ஷத்தைப்

போல் விர்த்திபுமடைந்து சலோதரரோககுணங்களையும் பெற்றிருக்கும். இதில் மரணகால உபத்திரவம்போல் சகல உபத்திரவங்களுமுண்டாகும். ஆனால் வாதாதி மூன்றுதோஷங்களும் பிலீகஸ்தானத்தில் சேருங்காலத்தில் இந்த ரோகம் பிறக்கும்.

## சாத்தியஉதரரோகநிதானம்

சகல மகோதரரோகங்களும் பிறக்கும்பொழுதே கஷ்டசாத்தியம். ஒருவேளை பலமுள்ளவனுக்கு ஆரம்பத்திலாவது வயிற்றுப்புரைக்குள் சலம் நிறைபுமுன்னமாவது வைத்தியம்பண்ணில் சாத்தியம்.

## அசாத்தியஉதரரோகநிதானம்.

உதரரோகிகட்கு மலமூத்திரச்சிக்கல் இரைப்பு இருமல் வீக்கம் புசிக்கும்அன்னம் மார்பில்அடைத்தல் சுரம் பிரமை மூர்ச்சை வாந்தி சிலவேளை பேதிமுதலிய குணங்களினால் அதிகதுர்ப்பலம் கண்கள் உப்பல் வியர்வை எவ்விதப்பேதிக்கு வாங்கினும் வயிறுபொருமல் அடிக்கடி வயிறு பருத்து விரிந்து போவதுபோலிருத்தல், அல்குலிலும் குதஸ்தானத்திலும் அதிகநோவு என்னுமிக்குணங்களுண்டாகில் அசாத்தியம்.

## சித்தர்மதாந்தரம்.

வாதோதரரோககுணமும் சிலேஷ்மோதரரோககுணமும் ஓரேகாலத்தில் காணில் அது வாதசிலேஷ்மோதரரோகமென்றும்; பித்தோதரரோககுணமும் சிலேஷ்மோதரரோககுணமும் ஒரேகாலத்தில் காணில் அது பித்த சிலேஷ்மோதரரோகமென்றும் சித்துப்புருஷர்கள்சாஸ்திரல் சொல்லுகின்றது. இவைநிற்க முற்கூறிய எண்வகை உதரரோகத்துடன் அவைகளால் உண்டாகின்ற சின்னங்களையும் சுரம் பாண்டு சோபை குன்மம் காமாலை விஷமிவைகளால் வயிற்றில் வீங்குகின்ற வீக்கங்களையும் வயிற்றிற்குள் உண்டாகின்ற கட்டி பேதங்களையுஞ்சேர்த்து மகோதரரோகம் 32 விதமென்று யூகிமுனிசாஸ்திரம் சொல்லுகின்றது. அன்றியும் கருப்பமாதர்களுக்குக் கண்டால் சூல்மகோதரரோகம்; கல்லுப்போல் இருந்தால் கல்மகோதரரோகம்; வில்லேறிட்டதுபோலிருந்தால் வில்மகோதரரோகம் மேல்வயிறுபருத்தால் மேற்கவிகைமகோதரரோகம் கீழ்வயிறு பருத்தால்

கீழ்க்கவிகைமகோதரரோகம் பங்கத்தில் பருத்தால் பக்கமகோதர ரோகம் எனவும் முன்புசொல்லிய எண்வகை உதரரோகங்களையே பலவாறுகச்சொல்லுகிறார்கள்.

உதரரோகம், மதாந்தரமுற்றிற்று.

---

## பிலீகரோகலக்ஷணம்.

மேடுபள்ளம் வாய்க்கால் முதலிய பூப்பிரதேசங்களை வேகமாகத்தாண்டல் அவுஷதத்தால் மிகுபேதியானகாலத்தில் அதிக நடைநடக்குதல் பூர்த்தியாகப்புசித்து அவ்வாறே தாகபானமுஞ் செய்து வெகு வேகமாக வோடுதல் ஆகிய இச்செய்கைகளால் உபத்திரவம் ஒன்றும் இல்லாமல் இருதயத்திற்கு இடப்பக்கத்தில் சுபாவமாக விருக்கின்ற பிலீகமானது குலுங்கும். அத்தருணத்தில் பேதிவஸ்து மாப்பண்டம் ஈரமில்லாத அன்னமுதலியவைகளைத்தனியே புசித்து உடனேநெய்யை அல்லது எண்ணெயை அதிகமாகக் குடித்தல் இன்னும் புசிக்கத்தகாதவஸ்துக்களைப்புசித்து உடனே மிகவுந்திரிதல் பெருந்திண்டி போசனத்தின்மேல் போசனம் பகல் நித்திரை அசீரணம் பதினுலுவேகங்களை அடக்குதல் ஆசனத்தின் வழியால் செலுத்திய விரேசன அவுஷதம்வாராமை என்னும் இச் செய்கைசேர்ந்தாலும் சந்ததாதிசுரமுதலிய ரோகங்களினால் மெலிந் தாலும் முன்பு குலுங்கிய பிலீகமானது தனது ஸ்தானத்தைவிட்டுச் சரிந்து வயிற்றில் பலவிதவுபத்திரவத்தைச்செய்து கட்டிபோல் தோற்றப்படும்.

## பிலீகரோகபேதம்.

பிலீகரோகமானது வாதபிலீகரோகம் பித்தபிலீகரோகம் சிலேஷ்மபிலீகரோகம் திரிதோஷபிலீகரோகம் என நான்குவிதப்படும்.

## 1-வது வாதபிலீகரோகம்.

வாயுவானது எப்போதும் வயிற்றில் பூரித்துக்கொண்டேயிருப்பதால் தினந்தோறும் வயிறுப்புதல் அவ்விடத்தில் நிலைத்தகட்டி போல் தோற்றல் அதிகவேதனை என்னும் இக்குணங்களையும் முன்பு 108-வது பக்கத்தில் சொன்ன உதாவர்த்தரோககுணங்களையும் உண்டாக்கும்.

## 2-வது பித்தபிலீகரோகம்.

அந்த ஒருபக்கத்து வயிறானது மொத்தாகாரமாகத் தோற்றல் உப்பிசம் பித்தாதிக்கம் வெப்பம் மலபந்தம் என்னும் இக்குணங்களுடன் முற்கூறிய துர்க்குணங்களையும் உண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மபிலீகரோகம்.

மேற்சொன்ன குணங்களுடன் இருமல் இரைப்பு கபாதிக்கம் இரண்டுகாலுஞ்சூம்பல் வயிறுபொருமல் அப்பக்கத்தில் கனத்துக் காணல் மலமூத்திரச்சிக்கல் முதலிய குணங்களையுண்டாக்கும்.

## 4-வது திரிதோஷபிலீகரோகம்.

வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் மூன்று பிலீகரோகங்களுக்குள்ள குணங்களையெல்லாம் ஒரேகாலத்தில் உண்டாக்கும்.

## அசாத்தியபிலீகரோகநிதானம்.

பிலீகரோகம் நாலுக்குள் வாதபிலீகம் அசாத்தியம்; மற்ற பிலீகங்கள் பிடிக்குள் அடங்குகின்ற கட்டியாயிருக்கில் சாத்தியம்.

மேற்சொல்லிய பிலீகரோகங்களை காய்ச்சு லவணச்சூரணம் யவாக்ஷாரக்குழம்பு ஸ்ரீவங்கேசுரமாத்திரை சூலைக்குடாரக் குளிகை முதலிய அவுஷதங்களினால் வசப்படுத்தவேண்டும்.

பிலீகரோகம் முற்றிற்று.

---

## பாண்டுரோகபூர்வரூபம்.

பாண்டுரோகமானது மார்புஅதிரல் சரீரஞ்சுறசுறத்தல் அரோசகம் மஞ்சள்நிறமான மூத்திரம் வியர்வை மந்தாக்கினி தேகம்இளைத்தல் ஆயாசம் என்னும் இக்குணங்களைத் தனக்குப் பழையரூபமாகப்பெற்றிருக்கின்றது. பாண்டு என்பது வெண்மை.

## பாண்டுரோகபேதம்.

பாண்டுரோகமானது வாதபாண்டு பித்தபாண்டு சிலேஷ்ம

பாண்டு திரிதோஷபாண்டு மிர்த்திகாபுக்தபாண்டு என ஐவகை படும்.

## 1-வது வாதபாண்டுரோகம்.

உடம்பு நருக்கித்துவைத்தததுபோல் இருப்பதுடன்நோதல் நடு கல் நரம்பு நகம் மலம் மூத்திரம் கண் இவைகள் கறுத்தும் சிவந்து தோற்றுதல் தேகவீக்கம் வயிறுப்பல் முகக்களைநீங்கல் மலந்தீத பக்கவிலாக்களிலும் சிரசிலும்நோவு என்னும் இக்குணங்களையுண்ட க்கும். அன்றியும் குடல் புரட்டலுடன் அடிவயிற்றை வலித்த பசியும் தாகமும் நீங்குதல் என்னும் இக்குணங்களை யுண்டாக் மென்பாருமுளர்.

## 2-வது பித்தபாண்டுரோகம்.

நரம்பு மலம் மூத்திரம் முதலியவைகள் மஞ்சள்நிறமாயும் ப சிலைரசநிறமாயு மிருத்தல் சுரம் கண்களில் இருட்கம்மல் தாக வியர்வை மூர்ச்சை சீதளவஸ்துக்களில் இச்சை துர்க்கந்தத்துட வாயில் காரமாயிருத்தல் மலபந்தம் புளியேப்பம் சரீரகாங்கை என னும் இக்குணங்களையுண்டாக்கும். அன்றியும் சரீரமஞ்சளித்த அல்லது வெளுத்தல் வாயில்முள்ளுப்போலிருத்தல் நெஞ்சுவ சுவாசபந்தம் கிறுகிறுப்பு வாய்கசத்தலென்னும் இக்குணங்களையுண் டாக்குமென்பாருமுளர்.

## 3-வது சிலேஷ்மபாண்டுரோகம்.

நரம்பு முதலியவைகளும் வெளுத்தல் சோம்பல் வாயில் உ புறைத்தல் ரோமச்சிலிர்ப்பு பேசும்போது கண்டத்தில்கமறல் இரு மல் வாந்தி என்னும் இக்குணங்களையுண்டாக்கும். அன்றியும் அதி தும்மல் கோழை மயக்கம் இடுப்புஅசதி இந்திரியநஷ்டம் சோருதல் எரிச்சல் என்னும் இக்குணங்களை யுண்டாக்குமென்பாருமுளர்.

## 3-வது திரிதோஷபாண்டுரோகம்.

மூன்சொன்ன வாதபாண்டு பித்தபாண்டு சிலேஷ்மபாண்டு என் னுமிம்மூன்றிலும் உண்டாகிற துர்க்குணங்களையெல்லாம் ஏககால

த்தில் உண்டாக்கும் அன்றியும் இரைப்பு மார்புநோவு தயக்கம் தேகம்ஊறல் அசதிஎன்னும் இக்குணங்களை உண்டாக்குமென்பாரு முளர்.

## 5-வது மிர்த்திகாபுக்தபாண்டுரோகலக்ஷணம்.

துவர்மண் சவுட்டுமண் தித்திப்புமண் ஆகிய இம்மூவகை மண்களை நாள்தோறும் வழக்கமாக மிகவும் தின்னுவதால்முறையே வாத பித்தகபங்கள் அதிகரித்து பற்பலரோகங்களைவிளைக்கும். இதுநிற்க இம்மூன்றில், தித்திப்புமண்ணானது சிலேஷ்மதோஷத்தை விருத்தி அடையச்செய்வதும் அன்றி அறுசுவைவருக்க உண்டியினால் உதிக்கும் அன்னரசத்தையும் அந்தரசத்தைத்தாங்கிப்பாதாதிகேசம்வரைக்கும் வியாபிக்கும்படியாய்ச்செலுத்திச் சரீரத்திற்கு ஆதாரத்தைச் செய்கின்ற ரசநரம்புகளையும் தனது உஷ்ணகுணத்தினால் உலர்த்திவிடும். இதுபோலவே தினந்தினமும் புசிக்கின்ற உணவையும் அக்கினிமுகத்தில் விழவொட்டாமல் மறித்து, அதிலிருக்கும் அன்னரசத்தையும் கவரப்பண்ணும். இந்தக்காரணத்தினால் ரசதாதுநசிக்கும். இதுநசிக்கவே மழையில்லாப்பயிர்போல ரத்ததாதுவும் நசிக்கும். அப்போதுஒருவிதப்பாண்டுரோகம் பிறக்கும். இதனால் நாபி பாதம் முகம் அல்குல் ஆண்குறிஎன்னும் இவ்விடங்களில் வீக்கமும் துண்டு துண்டாகக் கிருமிசேர்ந்தமலமும் ரத்தங்கலந்தகோழைவாந்தியும் உண்டாகும். இதற்கு லகுவிரேசனமும் பாவனஜீவலோகமும் உதவும். மிர்த்திகை என்பது மண், புக்தம் என்பது புசித்தல்.

## அசாத்தியபாண்டுரோகநிதானம்.

பாண்டுரோகிகட்கு வீக்கம் சோம்பல் தாகம் அரோசகம் வாந்தி விக்கல் இருமல் பேதி என்னும் இக்குணங்களுண்டாகி எந்தவஸ்துவைப்பார்த்தாலும் பார்வைக்கு மஞ்சள்நிறமாகத் தோற்றுவதும் அன்றி கண்களிலும் நகங்களிலும் மஞ்சள்நிறமும் உண்டாகில் அசாத்தியம். இக்குறிகள் ஒன்றும் இல்லாதிருந்தால் சுகசாத்தியம்.

மேற்சொல்லிய பாண்டுரோகங்களை எருமைச்சாணம் கரிசாலை லேகியம் தீநீரயப்பாவனச்சத்து அயபிருங்கராஜகல்கம் சலசமாதி

சம்பிரகற்பம் மஹாராஜ மிருகாங்கக்குளிகை மஹாவசந்தகுசுமாகர மாத்திரைமுதலிய அவுஷதங்களால் நிவிர்த்திசெய்யவேண்டும்.

## சித்தர்மதாந்தரம்.

## பாண்டுரோகபேதம்.

சிந்தாமணி என்னும் வைத்தியநூலும் வாதம் பித்தம் சிலேஷ்மம் திரிதோஷம் விஷம் என்னும் ஐவகைப்பாண்டுரோகம் உண்டென்றும் அவைகள் இளகிய அதிசாரமலம் நழுவுகையில் புளியும்உப்பும் அதிகமாகச் சேருவதினாலும் மிகு மதுபானத்தினாலும் பகல் நித்திரையினாலும் உண்டாகும் என்றும் சொல்லுகின்றது. இவற்றுள் வாதபாண்டுமுதல் திரிதோஷபாண்டு ஈறாகிய நான்கும் முற்கூறியவைகளாதலால் அவை ஒழிந்தவிஷபாண்டுரோகம்மாத்திரம் எடுத்துக்கூறப்படும்.

## விஷபாண்டுரோகம்.

தேகமும் நகமும் வெளுக்குதல் நரம்புகளில் நோவு காங்கை தாகம் அரோசகம் விக்கல் வாந்தி இருமல் அதிகசுவாசம் வயிறிரைச்சல் அதிசாரதோஷம் மிகுசுரம் மார்புகனத்தல் தேகவீக்கம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது அசாத்தியம். ஆயினும் சிகிச்சாசாரத்திற்கூறிய வசந்தகுசுமாகரம் முதலிய அவுஷதங்களால் சாத்தியமும் ஆகும்.

பாண்டுரோகம், மதாந்தரமுற்றிற்று.

---

## காமாலைரோகபேதம்.

வயிறு வயிற்றில் ஒட்டியநரம்பு சர்வநரம்புஎன்னும் இம்மூன்று இடங்களை அநுசரித்துக் காமாலைரோகம் பிறக்கும். இது வீக்கத்தையுண்டாக்குமாயின் கும்பகாமாலைரோகம் எனப்பேர்பெறும்.

## காமாலைரோகலக்ஷணம்.

பாண்டுரோகம் பிறந்திருக்கையில்பித்தாதிக்கவஸ்துக்களை மிகவும் புசிக்கில் காமாலைரோகம் உண்டாகும். அதன்விவரம்: வயிற்

றிற்குள் ஒட்டிக்கொண்டிருக்கும் நரம்புகளை அநுசரித்த பித்தமா னது ரத்தமாமிசங்களைத் தகித்து காமாலைரோகத்தைப் பிறப்பிக் கும். இதனால் மூத்திரம் கண் சருமம் வாய் இவைகளில் மஞ்சள் நிறத்துடன் மலநாற்றம் தவளையின் சருமம்போன்ற தேகம் இதில் காங்கை அசீரணம் தாகம் பஞ்சேந்திரியத்தன்மைகுன்றல் பித்தா திக்கம் என்னுமிக்குணங்கள் உண்டாகும். இக்குணங்கள் பாண்டு ரோகங்களுக்கும் உரித்தாகும்.

## கும்பகாமாலைரோகலக்ஷணம்.

முற்கூறிய காமாலைரோகத்திற்கு உடனே பசும்பால் ஆட்டு மோர் எருமைமோர் நுரைசிரகக்கண்டு நீலிகற்கோதனம் கீழ்வாய் நெல்லித்தயிலம் மஹாவசந்தகுசுமாகரம் மேகநாதரசம் நாராயண மண்டூர முதலிய அவுஷதங்கொண்டு தருந்த வைத்தியஞ்செய்யவே ண்டும்; செய்யாவிடில் அது வீக்கத்தையுண்டாக்கிக் கும்பகாமாலை ரோகம் எனப்பேர்பெறும் இதனை ஊதுகாமாலைரோகம் எனச்சொல் வர். இது கஷ்டசாத்தியம். காமாலை என்பதுமாதர் இச்சையை ஒழிப்பதாம்.

சித்தர்மகாத்தரம்.

## காமாலைரோகபேதம்.

பாண்டுரோக முதிர்ச்சியில் பித்தவஸ்துக்களைப் புசிப்பதாலும் புணர்ச்சியாலும் காமாலைரோகம்பிறக்கும். இது ஊதுகாமாலை வரட் காமாலை வாதகாமாலை பித்தகாமாலை சிலேஷ்மகாமாலை வாதசிலே ஷ்மகாமாலை பித்தசிலேஷ்மகாமாலை திரிதோஷகாமாலை மஞ்சட்கா மாலை அழுகுகாமாலை, செங்கமலக்காமாலை கும்பகாமாலை குன்மகா மாலை என 13-விதமாம்.

## 1-வது ஊதுகாமாலைரோகம்.

சரீரம் வீக்கத்துடன் கனத்தல் திமிர் எரிச்சல் உலரல் உள்ளங் கை உள்ளங்கால் கண் சரீரம் இவைகளில் வெளுப்பு கால் கை ஓய்ச் சல் நடுக்கல் இளைப்பு மலபந்தம் முகத்தில் மஞ்சள்நிறம் காதுமந்தம் சிரோபாரம் கண்ணிலும் வாயிலும் சலம்வடிதல் உளைப்பு அதிக

சீதளத்தால் வெப்பம் தலைசுழலல் தயக்கம் மஞ்சள்மூத்திரம் என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 2-வது வறட் காமாலைரோகம்.

கால் கை வற்றல் அசதி மூத்திரமானது கறுத்தாவது சுடுகையுடன் சிவந்தாவது இறங்கல் சரீரத்தில் சூலைபோற்குத்தல் அருசி பார்வைமந்தம் தேகங்கறுத்தல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 3-வது வாதகாமாலைரோகம்.

வயிறுபொருமல் வீக்கம் மலபந்தம் சிலவேளை தேகம் வீங்குதலுடன் திரைதல் புறங்காலும் முகமும் அதைத்தல் எந்தவேளையுஞ்சோம்பல் கண்பருத்தல் தூக்கம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 4-வது பித்தகாமாலைரோகம்.

மயக்கம் தயக்கம் நித்திரைப்பங்கம் சரீரசுட்கம்படுக்கையாகக் கிடக்குதல் அசீரணம் வாதாதிக்கம் அதிகசுவாசம் சோறுசோறுகப் பேதி வயிறிரைச்சல் அசதிஎன்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 5-வது சிலேஷ்மகாமாலைரோகம்.

தலையிலும் முகத்திலும் வியர்வை சுவாசம் இருமல் தேகநடுக்கல் மார்புகனத்தல் தாம்பூலம் தரிக்குங்காலத்தில் செருக்கல் நடைதளரல் கண்சிவக்குதல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 6-வது வாதசிலேஷ்மகாமாலைரோகம்.

அசீரணம் செருமல் முகம் நாசி கண் இவைகளில் வியர்வை வயிறிரைச்சலுடன் பொருமல் நாவும் கண்ணும் வெளிறல் நடந்தால் மேல்மூச்சு தேகவீக்கம் இருமல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்

## 7-வது சிலேஷ்மபித்தகாமாலைரோகம்.

வாந்தி செருமல் தலைவலி மனக்கெடுதி வயிறுப்பிசம் அசீரணம

பேதி தாகம் நெஞ்சுபுண்ணாக சோதல் மயக்கம் முகம் கால்கைகளில் வெளுப்பு தேகம் உலரல் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 8-வது தொந்தகாமாலைரோகம்.

தேகத்தில் எரிச்சல் கடுத்தல் அசதி குளிர் அடிக்கடி இருமல் தாகம் புளியேப்பம் நாவெல்லாம் அதிபுளிப்பாக இருக்குதல் பசி அடிவயிற்றில் வீக்கம் வியர்வை என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 9-வது மஞ்சட்காமாலைரோகம்.

முகம் கால் கை உண்ணாக்கு மூத்திரமாகியஇவைகளில் மஞ்சள் நிறம் முகத்தில் மினுமினுப்பு சரீரமுழுதும் ஊதல் தளர்ச்சி அன்னத்திவேஷம் அழுகை சுவாசத்தில் மஞ்சள்நாற்றம் வீசுதல் தாதுநஷ்டம் மலபந்தம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 10-வது அழகுகாமாலைரோகம்.

சரீரவாட்டம் இல்லாமல் வெப்பத்துடன் மினுமினுத்தல் கை கால் அசதி புருவம் கண் மூத்திரம் இவைகளில் மஞ்சள்நிறம் ஆண் குறியில் எரிவு அசீரணம் உப்பிசம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 11-வது செங்கமலக்காமாலைரோகம்.

தாமதகுணம் தேகந்தளர்தல் சோம்பல் மூத்திரம் சிவந்தாவது மஞ்சள்நிறத்தைப்பெற்றுவது அருகிஅருகி யிறங்கல் உடலும் நகமும் வெளிறலுடன் சுட்கித்தல் சுரம் உண்ணாக்கு நாவு உமிழ்நீர் இவைகளில் மஞ்சள்நிறம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 12-வது கும்பகாமாலைரோகம்.

தேகம் கண்டுகண்டாக வீங்குதல் அடிக்கடி களை தேகமும் சிறுநீரும் மஞ்சள்நிறமாயிருத்தல் மாலைக்காலத்தில் வியர்வைகாணல் வாதம் அதிகரித்தல் கண்சிவத்தல் சரீரஞ்சோருதல் மயிலுறக்கம் போலுறக்கம் இளகியமலம் என்னும் இக்குணங்களையுண்டாக்கும்.

## 13-வது குன்மகாமாலைரோகம்.

அன்னசீரணகாலத்தி லடிவயிறுவலித்தல் வாந்தி கண்களில் மஞ்சள்நிறம் மஞ்சள்நிறத்துடன் குழம்பியமூத்திரம் வாய்வெளிறல் மனதிற்கு ஒன்றுந்தோன்றுமை இருமல் இரைப்பு மயிலுறக்கம்போ லுறக்கம் படுக்கையாகக் கிடக்கையிலும் புரளல் என்னுமிக்குணங்க ளையுண்டாக்கும்.

## சாத்தியாசாத்தியகாமாலைரோகநிதானம்.

பித்தகாமாலை மஞ்சட்காமாலை சிலேஷ்மகாமாலை ஊதுகாமாலை வறட்காமாலை வாதசிலேஷ்மகாமாலை பித்தசிலேஷ்மகாமாலை என்னும் இவ்வேழும் சாத்தியம். மற்ற ஆறும் அசாத்தியம்.

காமாலைரோகம், மதாந்தரம்முற்றிற்று.

---

## அலிமுகபாண்டுரோகலக்ஷணம்.

பாண்டுரோகத்தில் முதற்பிரதானமாகச் சோபையே உண்டாகிப் பின்பு வாதமும் பித்தமும் அதிகரிக்குமாகில் சரீரம் நீலநிறம் அல்லது மஞ்சள்நிறமாகும் அப்போது பிரமை தாகம் மாதர்மேல் வெறுப்பு அற்பசுரம் சோம்பல் துர்ப்பலம் அக்கினிமந்தம் வயிற்றளைவு என்னும் இக்குணங்களுண்டாகும். இது நீலநிறத்தைத்தருதலால் அலிமுகப்பாண்டுரோகம் எனப்பேர்பெற்றது. இதனைச்சிலர் அலசமென்றுஞ்சொல்வர். இதற்குப்பூர்வரூபம் வீக்கமேயாம். இது கஷ்டசாத்தியம். இதற்குச் சோபைரோகச்சிகிச்சையுடன் வாதாரி பித்தாரி அவுஷதங்களும் உதவும்.

## சோபைரோகபூர்வரூபம்.

நரம்புகளில் வீக்கம் ஏறுகிறததியில் வாந்தியும் தேககனதியும் உண்டாகும். இதுவே சோபைரோகத்திற்குப் பூர்வரூபமாம். இதற்கு ஊதல் அதைப்பு சுரப்பு என மூன்று பரியாயநாமங்களுண்டு. இதனைச் சோகை சோலவை எனவும் வழங்குகின்றார்கள். சோபை என்பது வீக்கம்.

## சோபைரோகபேதம்.

சந்நிபாதசுரம் சித்தப்பிரமை அற்பவிஷம் முதலிய சிலவிஷங்கள் தேகத்தில் ஊறுதல் சிறையிலிருக்குதல் அடிபடுதல் நெடுந்தூரம் நடக்குதல் மலைவாசம் நீர்க்கரைவாசம் சாம்பல் மண் இவைகளைத் தின்னுதல் ரத்தம்முறிதல் என்னும் இச்செய்கைகளினால் சோபைரோகம் பிறக்கும். இது வாதசோபை பித்தசோபை சிலேஷ்மசோபை வாதபித்தசோபை வாதசிலேஷ்மசோபை சிலேஷ்மபித்தசோபை திரிதோஷசோபை அபிகாதசோபை விஷசோபை என ஒன்பது விதப்படும். இவ்வீக்கம் நீளநீளமாகவும் முடிச்சு முடிச்சாகவும் பருமனாகவும் சர்வாங்கத்திலும் ஒரேகாலத்தில் வியாபித்தால் நிசசோபைரோகம் எனப்பேர்பெறும். இதுவே முதல்முதல் ஒரு அவயவத்தில்பிறந்து பின்பு மற்ற அவயவங்களில் பரவுமாகில் ஆகந்துகசோபைரோகம் எனப்பேர்பெறும்.

## 1-வது வாதசோபைரோகம்.

கறுத்தும் சிவந்தும் சுருங்கியும் லேபனாதி சிகிச்சைகளுக்கு அதிகரித்தும் தீக்ஷண ஒத்திடத்திற்கடங்கியும் இருப்பதன்றி பிடித்தால் மிகுந்து அசைவதும் சிலவேளை கொஞ்சம் அசைவதும் இரவில் அற்பநோவுள்ளதும் பகலில் அதிகநோவுள்ளதும் ரோமங்களுக்கு முறைப்பைத்தருவதுமாயிருக்கும். இதனால் சரீரங்குலுங்குதல் சிலவேளை நருக்கித்துவைத்ததுபோலிருக்குதல் சருமத்தின்மேல் கடுகரைத்துப் பூசினாற்போலும் எறும்பூருவதுபோலும் தோற்றுதல் உறங்குதல்போலிருத்தல் மனோதுக்கம் சிலவேளை சந்தோஷம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இவ்வீக்கம் சீக்கிரத்தில் பிறந்து சீக்கிரத்தில் நீங்கும். அன்றியும் சரீரஞ்சுட்கித்து ரத்தநரம்புகளும் வெளுக்குதல் அசீரணம் துர்ப்பலம் நடுக்கல் சுரத்துடன் தேகம் வெளிறல் உளைச்சல் மயிர்முனைகளெல்லாம் சிவத்தல் மந்தம்என்னும் இக்குணங்களுண்டாகுமென்பாருமுளர்.

## 2-வது பித்தசோபைரோகம்.

மஞ்சள் சிவப்பு நீலம் என்னும் நிறங்களைப்பெற்றுத் தொடில் அசங்கியத்தையும் குளகுளப்பையும் ரோமங்களுக்குச்சிவந்தநிறத்

தையும் கொடுக்கும். இதனால் சீதாவஸ்துவிலிச்சை சிலவேளை வியர்வைகசிதல் உன்மத்தம் பிரமை துர்க்கந்தபேதி என்னும் இக்குணங்கள் உண்டாகும். இவ்வீக்கம் ஆரம்பத்தில் நடுமுதுகில் பிறக்கும். பிறந்ததுபோலவே சீக்கிரத்தில் சாந்தமாம். அன்றியும் இருமல் எரிச்சல் இளைப்பு தலைவலி துர்ப்பலம் மயக்கம் கண் புருவம் மூக்குத்தண்டு ஆகிய இவ்விடங்களில் வேறு நிறம் என்னும் இக்குணங்களுண்டாகுமென்பாருமுளர்.

## 3-வது சிலேஷ்மசோபைரோகம்.

வெளுத்துக் கெட்டியாய்க் குளிர்ச்சியுடன் மினுமினுத்து வழுவழுத்து அசைவற்றிருப்பதுமன்றி ஆயாசத்தையும் இரவிலதி உபத்திரவத்தையுங் கொடுப்பதாய் காய்ப்புடத்தால் கொஞ்சம் வசப்படுவதும் தருப்பைப்புல்லா லறுபடுவதும் ரத்தநரம்புகளைப்பிசின்போல் செய்வதும் தினவைத்தருவதுமாகஇருக்கும். இதனால் சருமமும் ரோமமும் வெளிறல் அருசி வாந்தி நித்திரை அக்கினிமந்தம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இவ்வீக்கம் தேகமுற்றிலும் எளிதில் அதிகரிக்கும் எளிதில் வசப்படாது. அன்றியும் சரீரமுழுதும் சுறசுறப்பு நித்திரைப்பங்கம் விழியில் அனல்வீசுதல் குரல்நோதல் அதிகபேதி தலைகிறுகிறுப்பு ரத்தஞ் சுரத்தலுடன் வீக்கம் என்னும் இக்குணங்களுண்டாகு மென்பாருமுளர்.

## 4-வது வாதபித்தசோபைரோகம்.

வாதசோபை பித்தசோபை இவ்விரண்டினாலும் உண்டாகிற துர்க்குணங்களையெல்லாம் ஒரேகாலத்தில் உண்டாக்கும்.

## 5-வது வாதசிலேஷ்மசோபைரோகம்.

வாதசோபை சிலேஷ்மசோபை இவ்விரண்டினாலும் உண்டாகிறகுணங்கள் எவ்வளவோ அவ்வளவையும் ஒரேகாலத்தில் உண்டாக்கும்.

## 6-வது சிலேஷ்மபித்தசோபைரோகம்.

சிலேஷ்மசோபை பித்தசோபை இவ்விரண்டினாலும் பிறக்கிற உபத்திரவங்களையெல்லாம் ஒரேகாலத்தில் உண்டாக்கும்.

## 7-வது திரிதோஷசோபைரோகம்.

வாதம்முதலிய மூன்றுசோபைகளுக்குள்ள குணங்களையெல்லாம் ஒரேகாலத்தில் உண்டாக்கும். அன்றியும் ஸ்திரீகளின்மேற்கோபம் சரீரத்தில் வீக்கத்துடனுபாதி சுரம் அதிசாரம் வயிற்றிலும் ஆசனத்திலுங் கடுப்பு அன்னத்திவேஷம் கை கால் துவளல் நடக்கையில் பெருமூச்சு வாய்நீரூறல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கு மென் பாருமுளர்.

## 8-வது அபிகாதசோபைரோகம்.

ஆயுதகாயம் அடிபடல் பனிக்காற்று எதிர்காற்று சேராங்கொட்டை பூனைக்காஞ்சொறி ரசகந்தக பாஷாணவருக்கம் முள்ளுதைத்தல் முதலியவைகளாலுண்டாகி சரீரமுற்றிலும் வியாபித்து தாம்பிரநிறமும் தொட்டால் காங்கையும் உடையதாய் முன்புசொன்ன பித்தசோபைரோகத்திற்குள்ள குணங்களையும் பெற்றிருக்கும்.

## 9-வது விஷசோபைரோகம்.

விஷசெந்துக்கள் மேலேறுதல் அவைகளின்மூத்திரம் தெறித்தல் விஷமில்லாச்செந்துக்களின் கோரதந்த நகங்கள்படிதல் மலமூத்திரசுக்கிலத்தால் நனைந்த ஆடையுடுத்தல் சேராங்கொட்டை மரமுதலிய விஷமரங்களின்காற்றுப்படுதல் மருந்திடுதல் முதலியவைகளால் உண்டாகி குளுகுளப்பதும் அசைவதும் விரைவில் எரிச்சலைத்தருவதுமாகவிருக்கும்.

## சாத்தியசோபைரோகநிதானம்.

உபத்திரவம் இல்லாமல் வீக்கமாத்திரம் கண்டால் சுகசாத்தியம்.

## அசாத்தியசோபைரோகநிதானம்.

சரீரமுழுதும் பூசினாற்போல் வியாபித்த வீக்கமானது நெடுநாளாகியும் தொலையாமல் அதிகநோவைத்தருவதா யிருந்தாலும் புருஷர்கட்கு முதல்முதல் பாதத்திற்கண்டு கனவுபத்திரவத்துடன் மேலேறினும்; மாதர்கட்கு ஆரம்பத்தில் முகத்திற்கண்டதோமுகமாகக்கீழிறங்கினும் புருஷர்க்காவது மாதர்க்காவது வயிறு

குசம் அல்குல் ஆண்குறி என்னும் இவ்விடங்களிற் கண்டாலும் இவ்வீக்கத்துடன்வாந்தி சுரம் மேற்சுவாசம் பேதி அக்காலத்தில் குதம்வெளிப்பட்டு அதில் புழுவூருதல்போலிருத்தல் என்னும் இக்குணங்கள் உண்டானாலும் வீக்கம்கண்டு வடிந்தவுடன்பேதியும் சுரமுங்கண்டு இவை நீங்கிய பின்பு வீக்கம் ஏறினாலும்; துர்ப்பலகாலத்தில் பாதத்தை காத்திருந்த வீக்கமானது அப்பாதமுதல் பெருந்தொடை பரியந்தம் அறுந்துவிழுவதுபோல் கடுத்தலான உபத்திரவத்தை உண்டாக்கி முன்காலில் சுரந்து கொண்டாலும் அசாத்தியம். அன்றியும் முகம் கை கால் என்னும் இவ்விடங்கள் சுட்கித்து வீக்கம் ஏறினாலும்; அல்லது தேகம் சுட்கித்து முன்சொன்ன அவயவங்களில் வீக்கம் ஏறினாலும்; ஒருமாதத்திற்குள் மரணத்தைக்கொடுக்கும்.

மேற்கூறிய சோபைரோகங்களை நீர்ப்பேதி அடைகஷாயம் சங்கபாயாசம் சயபாபாவனமேஷமூத்திரம் பிருங்கவிகுசபாவனலோகம் குடமண்டூரம் முதலிய அவுஷதங்களைக்கொண்டு நிவர்த்திசெய்ய வேண்டும்.

சோபைரோகம் முற்றிற்று.

---

## விசர்ப்பிரோகலக்ஷணம்.

முன்சொன்ன விஷசோபைரோக குணந்தவிர மற்றஎட்டுவிதச் சோபைரோகசுணங்களுடன் பலநிறக்கொப்புளங்களையும் சுரரோக குணங்களையும் அடைந்து தேகத்திற்கு உட்புறம் வெளிப்புறங்களில் ஒவ்வொருகாலத்திலாவது இவ்விருபுறத்திலும் ஓரேகாலத்திலாவது பிறக்கும். இது மர்மஸ்தானங்களைப்பற்றிச் சீக்கிரத்தில் பரவுதலால் விசர்ப்பிரோகம் எனப்பேர்பெற்றது. மர்மஸ்தானம் என்பதற்கு விவரம் 57-வது பக்கத்தில் காண்க. அது ஆர்த்திரேயமுனிவரது சாஸ்திரத்துணிபு.

## விசர்ப்பிரோகபேதம்.

விசர்ப்பியானது வாதவிசர்ப்பி பித்தவிசர்ப்பி சிலேஷ்மவிசர்ப்பி வாதபித்தவிசர்ப்பி வாதசிலேஷ்மவிசர்ப்பி சிலேஷ்மபித்தவிசர்ப்பி திரிதோஷவிசர்ப்பி என ஏழுவிதப்படும். அன்றியும் க்ஷதவிசர்ப்பி என்பதொன்றுண்டு இவைகள் வயிற்றில் ஈரமில்லாதகாலத்தில் மட்டுப்படும்.

## 1-வது வாதவிசர்ப்பிரோகலக்ஷணம்.

உடம்பெங்கும் ஏககாலத்தில் தளதளப்பானவீக்கம் அவ்வீக்கத்தின்மேல் கறுத்த கொப்பிளங்கள் எழும்புதல் மிகுநோவு சரீரம் அடித்துத்துவைத்ததுபோலிருத்தல் ஆயாசம் இரைப்பு தாகம் வாதசுரத்திற்குள்ள குறி என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது வாதத்தால் பிறக்கும்.

## 2-வது பித்தவிசர்ப்பிரோகலக்ஷணம்.

சரீரமுழுதும் விரைவில் வீங்குதல் அவ்வீக்கத்தின்மேல் மஞ்சள்நிறம் அல்லது சிவந்தநிறமுள்ள கொப்பிளங்களெழும்புதல் மிகுதுயரம் பித்தசுரக்குறி என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது பித்தத்தால் பிறக்கும்.

## 3-வது சிலேஷ்மவிசர்ப்பிரோகலக்ஷணம்.

தேகமுழுதும் மினுமினுப்பானவீக்கம் அவ்வீக்கத்தின்மேல் வெளுத்தகொப்பிளங்கள் எழும்புதல் தினவு சிலேஷ்மசுரத்திற்குள்ள குறி என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது சிலேஷ்மத்தால் பிறக்கும்.

## 4-வது வாதபித்தவிசர்ப்பிரோகலக்ஷணம்.

சோபை சுரம் வாந்தி மூர்ச்சை பேதி தாகம் பிரமை எலும்பு நொறுங்கினதுபோல் நோதல் அக்கினிமந்தம் அரோசகம் அபத்திய வஸ்துக்களிலிச்சை சரீரத்தில் செந்தணலைக்கொட்டினதுபோலெரிச்சல் இவ்வெரிச்சல்பிறந்த இடங்கறுக்குதல் அவ்வெரிச்சல் இல்லாத இடத்தில் நீலநிறம் அல்லது ரத்தநிறமாயிருத்தல் நெருப்புக்கொப்பிளம்போல் சர்வாங்கத்திலும் கொப்பிளம் எழும்புதல் வாதாதிக்கத்தால் சரீரவேதனை அறிவும் நித்திரையும் கெடுதல் சிலவேளை மேல் சுவாசம் விக்கல் பரிசமாகிய விஷயம் இன்மையால் பாயலென்றும் தரையென்றும் தெரியாமல் புரளல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். நெருப்புக்கொப்பிளங்கள்போல் கொப்பிளமும் எரிச்சலும் தருதலால் இது அக்கினிவிசர்ப்பிஎன்றுஞ் சொல்லப்படும். ஆனால் இதுமனதையும் சரீரத்தையும்பற்றியதால் •ரோகிக்குக்கிலேசமும் அறிவுகுறைதலும் அநித்திரையும் அதிகரிக்கும்.

## 5-வது வாதசிலேஷ்மவிசர்ப்பிரோகலக்ஷணம்.

சிலேஷ்மத்தால் மறிபட்டவாயுவு அச்சிலேஷ்மத்தையே நாலு விதமாகப்பேதித்து பலவுபத்திரவத்துடன் கொப்பிளங்களை யுண்டாக்கும். அல்லது ரத்ததாது விருத்தியடைந்தவனது சருமம் சன்னநரம்பு மாமிசமென்னும் இவைகளில்தங்கிய ரத்தத்தையாவது பேதித்துத்தடிக்கப்பண்ணி அதை நீண்டவடிவும் பருத்தவடிவும் சிறுத்த கொப்பிளவடிவும் புடைபோல் தடித்தவடிவுமாகத்திரட்டிவிடும். பின்பு அவைகள் ரத்தநிறத்துடன் மேலெங்கும் மாலையைப்போல் வரிசை வரிசையாக அதிக உபத்திரவங்களைத்தரும்படியான அனேக கிரந்திகளாக எழும்பும்; அப்போது சருமஞ்சிவத்தல் சுரம் இரைப்பு இருமல் பேதி சரீரநோவு வாயுலரல் விக்கல் வாந்தி உள்ளெரிச்சல் சோருதல் மாறுநிறம் மூர்ச்சை அக்கினிமந்தம் முதலிய குணங்களுண்டாகும். கிரந்திகளையுண்டாக்கலால் இது கிரந்திவிசர்ப்பியென்றும் சொல்லப்படும்.

## 6-வது சிலேஷ்மபித்தவிசர்ப்பிரோகலக்ஷணம்.

இது சுரம் மரத்தல் நித்திரை சோம்பல் தலைநோவு உடம்பினைத்தல் திமிர்முறுக்கல் பிதற்றல் அரோசகம் பிரமை மூர்ச்சை அக்கினிமந்தம் அஸ்திகளில்நோவு தாகம் பஞ்சேந்திரியங்களுக்குக் கனத்தல் சீதபேதி தேகம் கொஞ்சம் ஊதல் என்னும் இக்குணங்களைப் பிறப்பித்து நரம்புகளினும் வியாபித்து பின்பு ஆமாசயஸ்தானத்தில் இருக்குஞ் சீதத்தை ஏகதேசத்தில் அநுசரித்து அவ்விடத்திற்கொஞ் சம்வேதனையை எழுப்பித் தங்கிக்கொண்டு முதல் சரீரத்தில் காங்கையைக் கொடுத்துத் தடிப்புகளை யுண்டாக்கும்; அப்போது வீக்கத்தால் பாரித்தசரீரத்தின்மேல் கறுத்தும் வெளுத்தும் மினுமினுத்தும் அழுக்கு நிறத்தைப்பெற்றும் அனந்தம் கட்டிகளுண்டாகும் அவைகள்; அதிகபிரயாசையின்மேல் பழுத்துடைவதுமன்றி மிருதுர்ப்பலத்தையும் உபத்திரவத்தையுஞ் செய்யும். மாமிசத்தைச் சேறுபோலழுகச்செய்து சன்னநரம்பையும் ரத்தநரம்பையும் கலக்கும்படி யைப்பண்ணி மேலில் பிரேதநாற்றத்துடன் சேற்றைப் பூசினது போல் நிறத்தைக் கொடுப்பதால் இது பங்கவிசர்ப்பி என்றும் சொல்லப்படும். இதுவே நணுக்காய்க்கிரந்தியாம்.

பங்கம் என்பதுசேறு.

## 7-வது திரிதோஷவிசர்ப்பிரோகலக்ஷணம்.

இது வாதமுதலிய மூன்றுவிசர்ப்பிகளுக்குள்ள குணங்களைப் பெற்று விரைவில்சப்ததாதுக்களிலும்பரவும். இதனைச்சர்வவிசர்ப்பி என்பர்.

### க்ஷதவிசர்ப்பிரோகலக்ஷணம்.

ஆயுதமுதலியவற்றால் காயம்பட்டவர்கட்கு அவ்வுதிரங்கெட்டுத் தடிக்கும்போதுவாத திரவியச்சேர்க்கையால் விஷமித்தவாயுவானது ரத்தத்தில் தங்கிப் பித்தத்தையும் கோபிக்கச்செய்து கொள்ளுப்பிரமாணங்களாய்க் கருநிறம் செந்நிறம் உள்ள கொப்பிளங்களை எழுப்பும். இதனால் சரீரவீக்கம் சுரம் நோவு தாகம் முதலிய குணங்களுண்டாகும்.

### சாத்தியவிசர்ப்பிரோகநிதானம்

விசர்ப்பிவியாதி ஏழுக்குள் வாதவிசர்ப்பி முதலிய மூன்றுஞ் சாத்தியம். தொந்த விசர்ப்பிகள் மூன்றும் மாமிசத்தை அழுகப்பண்ணுமலும் உபத்திரவத்தைக் கொடாமலும் இருக்கில் கஷ்டசாத்தியம்.

### அசாத்தியவிசர்ப்பிரோகநிதானம்.

திரிதோஷவிசர்ப்பியும் க்ஷதவிசர்ப்பியும் அசாத்தியம். அன்றியும் எந்தவிசர்ப்பியாவது மர்மஸ்தானங்களிலுள்ள நரம்பு ரத்தநரம்பு மாமிசம் இவைகளைச் சேற்றைப்போல் குழையப்பண்ணிக் கிரந்திகளை எழுப்பி அவைகளில் நின்றும் துர்க்கந்தசலத்தைப் பெருக்கினாலும்; சரீரநோவு அதிகஎரிச்சல் நிறமாறல் சுரம் மூர்ச்சை பிரமை வாயுலரல் மார்புஅதிரல் பேதி இருமல் என்னும் இக்குணங்களைச் செய்தாலும் அசாத்தியம்.

மேற்சொல்லிய விசர்ப்பிரோகங்கள் கடுக்காய் மஞ்சள் ஓமப்பொட்டும் சேர்ந்த கோமூத்திரத்தேட்டை முதலிய அவுஷதங்களால் வசப்படும்.

விசர்ப்பிரோகம் முற்றிற்று.

---

## மசூரிகைரோகலக்ஷணம்.

முதல்முதல் சுரத்தோடுங்கூடச் சிறுகடலைப் பிரமாணங்களை ஒத்துச்சர்வாங்கத்திலும் முத்துகளைப்போல் கொப்பிளங்கள் எழும்பும். இதனால் வாயுலரல் சரீரநோவு கீல்கள் தளர்வதுபோலிருத்தல் அரோசகம் ரோமச்சிலிர்ப்பு தலைநோவு கண்ணோவு மூக்கடைப்பு என்னுமிக்குணங்கள் உண்டாகும். அன்றியும் சிற்சில குறிகளினால் விசர்ப்பி லக்ஷணமும் அக்கொப்பிளங்கள் ஒன்பதுநாள்பரியந்தம் காணுகின்ற கிரமமும் அவைகளில் எட்டிப்பூவாசனையும் உண்டாகும். இது இது கடலைப்பிரமாணத்தையும் அவ்வுருவத்தையும் பெற்றிருப்பதால் மசூரிகைரோகமெனப்பேர்பெற்றது. இதனை வசூரிரோகமென வழங்குவதும் அன்றி கொப்பிள பேதங்களால் பெரியம்மை சின்னம்மை பனையேறி தட்டை பயறி ராமக்கம் எனவும் வழங்குகிறார்கள். இது பாலராதிவிருத்தர்பரியந்தங்காணும். இந்தரோகம் எலும்பைப்பற்றிப்பிறக்கும். மசூரிகா என்பது கடலை.

## மசூரிகைரோகபேதம்.

மசூரிகையானது வாதமசூரிகை பித்தமசூரிகை சிலேஷ்மமசூரிகை வாதபித்தமசூரிகை வாதசிலேஷ்மமசூரிகை பித்தசிலேஷ்மமசூரிகை திரிதோஷமசூரிகை ஆகந்துகமசூரிகை ரத்தமசூரிகை என 9-விதப்படும்.

அவற்றுள் தொந்தம் 3-ம் தள்ளி 6-விதம் எனவுஞ்சொல்வர்.

## 1-வது வாதமசூரிகைரோகலக்ஷணம்.

உடம்பெங்கும் கருநிறமான கொப்பிளங்களுண்டாகும் அவைகளில் அடிக்கடி உபத்திரவமும் நெய்கூடுவதுமாயிருக்கும்.

## 2-வது பித்தமசூரிகைரோகலக்ஷணம்.

தேகத்தில் எரிச்சலோடுங்கூடக் கடுகுப்பிரமாணங்களான கொப்பிளங்களுண்டாகும். அவைகளில் உடனே நெய் கூடுவதாயிருக்கும்.

## 3-வது சிலேஷ்மமசூரிகைரோகலக்ஷணம்.

சர்வாங்கத்திலும் கருணைக்கிழங்கு முளைகளைப்போல் தடித்த கொப்பிளங்களுண்டாகும். அவைகளில் நாட்சென்று நெய்கூடுவதாயிருக்கும். இதனைச் சிலர் அசகரோகம் எனச்சொல்லுகிறார்கள்.

## 4-வது வாதபித்தமசூரிகைரோகலக்ஷணம்.

வாதம் பித்தம் என்னும் இருவிதமசூரிகை முத்துக்களும் கலந்திருக்கும்.

## 5-வது வாதசிலேஷ்மமசூரிகைரோகலக்ஷணம்.

வாதம் சிலேஷ்மம் என்னும் இருவித மசூரிகைக்குறிகளும் இதிலுண்டாகும்.

## 6-வது சிலேஷ்மபித்தமசூரிகைரோகலக்ஷணம்.

சிலேஷ்மம் பித்தம் என்னும் இருவித மசூரிகைக் கொப்பிளங்களும் காணும்.

## 7-வது திரிதோஷமசூரிகைரோகலக்ஷணம்.

வாதம் முதலிய மூன்று மசூரிகைக்கொப்பிளங்களும் இதில் உண்டாகி அவைகளில் அந்தந்தக்குணங்களும் பிறக்கும். இது கஷ்டசாத்தியம்.

## 8-வது ஆகந்துகமசூரிகைரோகலக்ஷணம்.

இது திரிதோஷமசூரிகைக்கொப்பிளங்களைப்போலவேயிருந்தாலும் அதைப்போல் ஒரேகாலத்தில் பிறக்காமல் முதல் முதல் ஒரு அவயவத்தில் பிறந்து உடனே சரீரமுற்றிலும் வியாபிப்பதாயிருக்கும்.

## 9-வது ரத்தமசூரிகைரோகலக்ஷணம்.

மேலெங்கும் ரத்தநிறமான கொப்பிளங்களும் எரிச்சலும் உண்டாகும்.

இவைகளைச் சவுமியவிரேசனங்களினாலும் வல்லாரை செருப்படை கருப்பூரவல்லி நிலவேம்பு இவைகளின் சுரசகஷாயகல்கசூரணங்களினாலும் தயிர் வெங்காயம் இளநீர்வழுக்கை நெற்பொரி பேயன்பழம் பனங்கற்கண்டு முதலியதின்பண்டங்களினாலு முபசரித்து வசப்படுத்தவேண்டும்.

## மதாக்தரம்.

ஆயுள்வேதபாஷியம் பாரத்துவாசம் காசிபம் என்கிற கிரந்தங்கள் மசூரிரோகம் எட்டுவிதமென்றுசொல்லுகின்றன. அவையாவன: மசூரிகை சரஷபிகை அசகை கோத்திரவம் கங்கு விஸ்போடம் அபாகி விசர்ப்பை என்பவைகளாம்; இவைகளைப் பலவித பரீக்ஷையினாலும் அநுபவத்தினாலும் லக்ஷணத்தினாலும்நிதானிக்கவேண்டும்.

## 1-வது மசூரிகைரோகலக்ஷணம்.

உடம்பில் கடலையைப்போல் சிறுத்தும் சிவந்தும் அடுக்கடுக்காகக் கொப்பிளங்கள் எழும்பும். இதனால் சுரமும் வீக்கமும் தினவும் உண்டாகும்.

## 2-வது சரஷபிகாமசூரிகைரோகலக்ஷணம்.

கடுகைப்போல்நிறமும் உருவமும் உள்ள கொப்பிளங்கள் எழும்பும். இதனால் உடம்பில் எரிச்சலுடன் நோவும் ரத்தமூத்திரமும் உண்டாகும். இது கஷ்டசாத்தியம். சரஷபிகா என்பது கடுகு.

## 3-வது அசகாமசூரிகைரோகலக்ஷணம்.

பருத்தும்தடித்தும் ரணத்தைத்தருவதாய் அனேககொப்பிளங்களெழும்பும். இதனால் கீல்களிலும் முகத்திலும் வீக்கமும் தாகமும் பிசிபிசிப்பான சலக்கசிவும் உண்டாகும். இது சிலேஷ்மபித்தத்தால் பிறக்கும்.

## 4-வது கோத்திரவமசூரிகைரோகலக்ஷணம்.

சர்வாங்கத்திலும் வரகுபோலக் கொப்பிளங்கள் எழும்பும். இதனால் ரத்தபித்த குணங்களுண்டாகும். கோத்திரவம் என்பது வரகு.

## 5-வது கந்துமசூரிகைரோகலக்ஷணம்.

சரீரமுழுதும் சாமைஎன்னும் ஒருவகைத் தானியத்தைப்போலவே கொப்பிளங்கள் எழும்பும். கந்கு என்பது சாமை.

## 6-வது விஸ்போடமசூரிகைரோகலக்ஷணம்.

பாதமுதல் சிரசுபரியந்தம் நெருப்புக்கொப்பிளத்தைப்போலவே பெரிதுபெரிதாகக் கொப்பிளங்கள் எழும்பும். இதனால் சிலேஷ்மகுணங்களும் பித்தகுணங்களும் உண்டாகும். இது எளிதில் வசப்படாது.

## 7-வது அபாகிமசூரிகைரோகலக்ஷணம்.

சரீரத்தில் தூரந்தூரமாக உலர்ந்ததுபோலும் கருகினதுபோலும் கொப்பிளங்களெழும்பும். இவைகள் நெடுநாளாகியும் இறக்கங்கொள்ளாமலே உபத்திரவத்தைச்செய்யும். இது அசாத்தியம்.

## 8-வது விசர்ப்பாமசூரிகைரோகலக்ஷணம்.

மயிலிறகின் கண்ணைப்போல் பலநிறமான கொப்பிளங்கள் எழும்பும். இதனால் சரீரம் உலரல் ஊரல் வீக்கம் சுரம் தாகம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதில் சிலேஷ்மகுணங்களும் ரத்தகுணங்களும் பிறக்கும்.

## அசாத்தியமசூரிகைரோகநிதானம்.

சகலமசூரிகைரோகங்களிலும் முத்துக்களென்கின்ற கொப்பிளங்கள் சீக்கிரத்திற்பிறந்து சீக்கிரத்தில் மறைந்தாலும் முதல்முதல் சிறுகடலைப்பருப்பைப்போல் கண்டு கண்டமட்டில் இராமல் பவழக்குண்டுகளைப்போல் பருத்து அந்தந்தமுகங்களில் குழிகள் விழுந்தாலும் மச்சங்களைப்போல் கருகிக்கறுத்தாலும் அசாத்தியமாம்.

மசூரிகைரோகம் மதாந்தரமுற்றிற்று.

---

## ஒட்டுரோகபேதம்.

முன்பு சொல்லிவந்த மசூரிகை ரோகங்களாவது நமைச்சல் முதலிய சிரங்குகளாவது அபஸ்மாரரோகமாவது கண்ணோயாவது

ஒருவருக்குக் கண்டிருக்கையில் அவர்களை மற்றொருவர் தொடுதலா லும் பார்த்தலாலும் நினைத்தலாலும் அந்தரோகங்கள் இவர்களையும் ஒட்டுமென்றறிக; விஷூசிரோகங்களையும் ஒட்டுரோகமெனச் சொல் லுகிறார்கள்.

ஆறுவது ஆநாகரோகபடலம் முற்றிற்று.

---

# 7-வது விஸ்போடரோகபடலம்.

## விஸ்போடரோகலக்ஷணம்.

பித்தவஸ்துக்களினால் அதிகரித்த பித்தமானது தனது உஷ்ண குணத்தினால் ரத்ததாதுவை மிகவும் கொதிப்பிக்கும். அப்போது சுரம் எரிச்சல் உதடுலரல் சரீரநோவுஎன்னும் இக்குணங்கள் உண்டா வதும் அன்றிச் சர்வாங்கமும் மறையும்படி சிறிதும் பெரிதுமாக அனேக கொப்பிளங்கள் எழும்பும். இது பசுமூத்திரவிரேசனம் சீந்தில்நெய் முதலிய அவுஷதங்களால் விலகும்.

விஸ்போடம் என்பது அதிககொப்பிளம்.

## விஸ்போடரோகபேதம்.

விஸ்போடரோகம் ஒன்றாயிருந்தாலும் இதில் வாதாதிகளின் விஷமத்தால் சீதபித்தம் என ஒருவிதரோகம்பிறக்கும். இதில்தங்கிய பித்தம் ஆமத்திற்கு வேறுபாட்டைச்செய்தலால் ஆமபித்தம் ஆம்ல பித்தம் என இரண்டு ரோகம்பிறக்கும். அன்றியும் க்ஷுத்திரமசூரி என்பது ஒன்றுண்டு.

## சீதபித்தரோகலக்ஷணம்.

வாயுவானது பித்தத்தையும் சிலேஷ்மத்தையும் அதன் அதன் மார்க்கங்களிற் செல்லவொட்டாமல் மறிக்குங்காலத்தில் உடம்பின் மேல் அகன்று பரவுவதாயும் வளையாகாரமாயும் ரத்தநிறத்தோடுங் கூடிய புடைகள் விஸ்தாரமாயெழும்பும். அவைகளில் இடைவிடாத நமைச்சல் உண்டாகும். இதனைத்தேன்கலந்த சிற்றாமணக்குநெய்

ஜயரச பஸ்மம் முதலிய அவுஷதங்களைக்கொண்டு நிவர்த்திசெய்ய வேண்டும்.

## ஆமபித்தரோகலக்ஷணம்.

பித்தமாத்திரம் அதிகரித்து ஆமத்திற்சேர்ந்து அதையுமதிகரிக்கச்செய்து பலபல உபத்திரவங்களைப் பிறப்பிக்கும்; அப்போது தேகம் கறுப்பதுமன்றிப் பலநிறமானபுடைகள் எழும்புதல் வியர்வை மூர்ச்சை தாகம் கோழை வாந்தி தலைநோவு மேலில்சுரவேகம்போல் இருத்தல் வயிறு மார்பு கண்டம் ஆகிய இவ்விடங்களில் எரிச்சல் ரசதாதுவற்றுதல் என்னும் இக்குணங்களுண்டாகும். இது மூலைப்பால்நெய் சந்தனுதிக்கிருதம் முதலிய அவுஷதங்களால் நீங்கும்.

## ஆம்லபித்தரோகலக்ஷணம்.

முற்கூறியரோகத்தில் ஆமத்தை விருத்தியாக்கிய பித்தமானது ஒருவேளை அதை மிகவுங் குறைத்து அவ்வாறே தானும் குறைந்து அனந்தம் உபத்திரவங்களைப்பிறப்பிக்கும்; இதனுல் சரீரத்தில் வளையாகாரமான புடைகளும் பலவிதரூபநிறங்களைப்பெற்ற கொப்பளங்களும்எழும்பும்; அப்போது அவைகளில்மாமுத்தினவு புளிப்புங்காரமுமான வாந்தி அவ்வாறே ஏப்பம் வருவதுமன்றி வாயுமப்படியே இருத்தல் கண்டத்திலும் மார்பிலும் எரிச்சல் மார்புஅதிரல் தேகம் பாரிப்புடன் சுடுகை அரோசகம் மூர்ச்சை சோருதல் பிதற்றல் பிரமை இரைப்பு இளைப்பு துக்கம் வாய்நோவு கண்ணில் இருட்கம்மல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதற்கு ஜயரசபஸ்மம் முதல் ஊணுங்கொடிக் கிருதமும் ஆகும்

## க்ஷுத்திரமசூரிகைரோகலக்ஷணம்.

பித்தசிலேஷ்மங்களினுல் சர்வாங்கத்திலும் எரிச்சலோடுங்கூட வேர்க்குருபோலவே சிறிதுசிறிதாக அநேக கொப்பளங்கள் எழும்பும். இந்தரோகத்தில் ஆதியில் சுரமும் அந்தத்தில் பேதியும் உண்டாகும். இதற்கு மசூரிகாரோகச்சிகிச்சைகளைச் செய்யவும்.

விஸ்போடரோகம் முற்றிற்று.

## குஷ்டரோகபூர்வரூபம்.

குஷ்டரோகமானது சரீரம்பளபளப்பு மாறுநிறம் மிகுகடினத்

துடன்தடித்தசருமம் அச்சருமத்தின்மேல் தொட்டவிடத்தில்தினவு வியர்வை சிலவேளையில்லாமை நோவு எரிச்சல் ரோமச்சிலிர்ப்பு கொஞ்சங்காயம்படினும் பெரியரணமாகுதல் . அதில் கறுத்த உதிரம் வடிதல் பேசும்போது கண்டம்வறளல் அதிநித்திரை மிகுந்த ரணம் என்னும் இக்குணங்களையும் சீக்கிரத்தில்பிறந்து நெடுநாட்கழித்தும் ஆறுமல் குழிகள் விழுந்து கெட்டிப்பட்டுக் குத்தலைத்தருகின்ற பல பல உபத்திரவமுள்ள ரணங்களையும் தனக்குப் பழையரூபமாகப் பெற்றிருக்கின்றது. இதற்குக் குறைநோய் என்றும் பெருவியாதி யென்றும் பேர்.

## குஷ்டரோகபேதம்.

வாதம் பித்தம் சிலேஷ்மம் முத்தொந்தம் திரிதோஷம்என்னும் எழுவகைச்சம்பந்தத்தால் 18-குஷ்டம்பிறக்கும். அதன்விவரம் வாதத்தால்கபாலகுஷ்டமும் பித்தத்தால்அவுதும்பரகுஷ்டமும் சிலேஷ்மத்தால்மண்டலகுஷ்டமும் விசர்ச்சிகாகுஷ்டமும் வாதபித்தத்தால் ருசியஜிம்மிககுஷ்டமும் சிலேஷ்மபித்தத்தால் சருமகுஷ்டமும் ஏககுஷ்டமும் கிடிபகுஷ்டமும் சித்மகுஷ்டமும் அலசகுஷ்டமும் சிலேஷ்மவாதத்தால் விபாதிகாகுஷ்டமும் திரிதோஷத்தால் தத்துருகுஷ்டமும் சதாருகுஷ்டமும் புண்டரீககுஷ்டமும் விஸ்போடகுஷ்டமும் பாமாகுஷ்டமும் சர்மதலகுஷ்டமும் காகசகுஷ்டமும் பிறக்கும். இவற்றில் அவுதும்பரம் மண்டலம் ருசியஜிம்மகம் புண்டரீகம் கபாலம் காகசம் என்னும் ஆறுகுஷ்டங்களையும் மஹாகுஷ்டங்கள் என ஆயுள்வேதம் கூறுகின்றது.

## 1-வது கபாலகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் ரணக்கொப்பிளங்கள் சிறிது சிறிதாகக் கபாலத்தினது காந்தியைப்பெற்றும் தடித்தும் கறுத்தும் சிவந்தும் சுறசுறத்தும் முகங்கள் வாடியும் ஒன்றையொன்றைச்சுற்றி அநேககொப்பிளங்களை யும்பி ரணங்கள்ஆகும். அவைகளில் விஸ்தாரம் குழிகள்விழுவதும் சிணைத்தண்ணீர் ஒழுகுவதும் அதில் ரோமங்கள்முளைப்பதும் நோவும் தினவும் பிரபலப்படுவதுமாக இருக்கும். இது கபாலம்போல் வெளுத்த நிறத்தைப் பெற்றிருப்பதால் கபாலகுஷ்டம் எனப்பேர் பெற்றது. இது விரைவில் விருத்தியாகும்.

## 2-வது அவுதும்பரகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் கொப்பிளங்கள் அத்திப்பழத்தையொத்து விஸ்தரித்துச் சீக்கிரத்திற்பிறந்து நசுங்கிக் குழிவிழுந்த ரணங்களாகும். அவைக ளில் வெளுத்தநரம்புகள் நிறையப்படுவதும் சிவந்தரோமங்கள் முளை ப்பதும் சீனத்தண்ணீரும் உதிரமும் ஒழுகுவதும் புழுக்கள் ஊருவ தும் இதனால் தினவும் நோவும் எரிச்சலும் பிரபலப்படுவதுமாக இருக்கும். அன்றியும் சரீரம் உலர்ந்து கறுத்தல் உளைச்சல் சரு மந்திரைந்துதொங்குதல் அதிகமயக்கம் என்னுமிக்குணங்களுண்டென் பாருமுளர். இது அத்திப்பழத்தை ஒத்ததால் அவுதும்பரகுஷ்டம் எனப்பேர்பெற்றது.

## 3-வது மண்டலகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் கொப்பிளங்கள் நிலைபெற்றும் கனத்தும்வெளுத்தும் சிவ ந்தும் மினுமினுத்தும் வட்டவட்டமாகத் தாமதத்தின்மேல் நாளுக்கு நாள் விருத்தியடைந்தும் துரிதமாக எழும்பி உடைந்து ஒன்றோ டொன்று சேர்ந்துகொண்டு மண்டலாகாரமான ரணங்களாகும். அவைகளில் புழுக்கள் நெளிவதும் நமைச்சலும்நோவும் அதிகரிப்ப தும் தொடில்வழுவழுப்பாகத் தோற்றுவதும் சீழ் ஒழுகுவதுமாக இருக்கும். அந்த ரணத்தைச்சுற்றிலும் மஞ்சள்நிறமான சருமம் உண்டாகும். அன்றியும் சிரசிலும் சர்வாங்கத்திலும் பச்சைவன் னமாயும் ரத்தவன்னமாயுந் தோற்றல் ஒருவேளை சிரசில்மாத்திரம் வெளுப்பு ரணங்கள்தடித்துக்கறுத்தல் அதில் ரத்தம்வடிதல்என்னும் இக்குணங்கள் உண்டென்பாருமுளர். இது வளையாகாரமாக இருப்ப தால் மண்டலகுஷ்டம் எனப்பேர்பெற்றது.

## 4-வது விசர்ச்சிகாகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் கொப்பிளங்கள் கறுப்புநிறமாக எழும்பிப் பின்பு உடை ந்து ரணங்களாகும். அவைகளில் சீனத்தண்ணீ ரொழுகுவதும் அதிகவூரல் உண்டாவதுமாக இருக்கும். அன்றியும் எண்ணெய்யைத் தடவினதுபோல் இருத்தல் வெளிறல் எரிச்சல் வேதனை சிவந்ததடி ப்பு சருமமெல்லாம் உரத்தலுடன்சிவத்தல் சுறசுறப்பு வயிற்றிசிவு சஞ்சலம் கோபம் என்னும் இக்குணங்கள் உண்டென்பாருமுளர். இது சொறிவதற்கே நினைப்பைபுண்டாக்கலால் விசர்ச்சிகாகுஷ்டம் எனப்பேர்பெற்றது.

## 5-வது ருசியஜிம்மிகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் கொப்பளங்கள் முள்ளுகளைப்போல் மெல்லியதாய் நீண்டும் பிசுபிசுத்தும் சுறசுறத்தும் உள்ளில்கறுத்தும் முனையிற்சிவந்தும் நெருக்கமாகஎழும்பி ரணங்களாகும். அவைகளில் புழுக்கள்நெளிதலும் சோதலும் எரிச்சலுமுண்டாகும். சிலவேளை நோவுமாத்திரம் இருந்தாலும் இருக்கும். இது கடமை என்னும் ஒரு மிருகத்தின் நாக்குப்போல் நிறம் உள்ளதால் ருசியஜிம்மிகுஷ்டம் எனப்பேர் பெற்றது. ருசியம் என்பது கடமை.

## 6-வது சர்மகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் தோலானது மஞ்சள்நிறமாயும் சிவந்தநிறமாயும் மீன்களின் செதிளையொத்துச் சுறசுறத்துத் தடித்துக் கிள்ளினால் உபத்திரவமில்லாமலும் காயம்பட்டால் தெரியாமலும் இருக்கும். இதனாலடிக்கடி சர்வாங்கத்திலும் வியர்வை உண்டாகும். அன்றியும் சருமம் பசுமை வெண்மை கருமைஎன்னும் இவ்வன்னங்களாகித் தினவுடன் தடித்தல் அதில் சீழ்வடிதல் வயிற்றிலும் சடிகஸ்தானத்திலும் சொறி உண்டாகுதல் எரிச்சலுடன் காங்கைவயிற்றிற்கண்டிப்பு என்கிற துண்டுதுண்டாகிய தடிப்பு என்னும் இக்குணங்கள் உண்டென் பாருமுளர். இதனை மேகப்புடையென்றும் திமிர்வாயுவென்றும் வழங்குகிறார்கள்.

சருமம் என்பது தோல்.

## 7-வதுஏகசர்மகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் சரீரத்தின்சர்மமெல்லாம் யானையின்துதிக்கைச் சருமம் போல் தடித்துக்கெட்டிப்பட்டு பிருவுடன் சுறசுறத்துப்பார்ப்பதற்கு விகாரமாயிருக்கும். இதனால் வியர்வும் கைவிரல் கால்விரல் குறுகிக் குறைதலும் உண்டாகும். அன்றியும் தேகமுழுதும் தோலுரிந்து சிவத்தல் வறவறப்பு சொறி தினவு திமிர் கால்விரல்கள் கனத்தல் சர்வாங்கத்திலும் வீக்கம் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர். இது எல்லாச்சருமத்தையும் தடிக்கச்செய்தலால் ஏகசர்ம குஷ்டம் எனப்பேர்பெற்றது. இதனைச்சடைக்குஷ்டம் யானைக்குஷ்டம் பெருவியாதி எனவுஞ் சொல்வர்.

## 8-வது கிடிபகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் கொப்பிளங்கள் சுடுகையுடன் எழும்பி ரணங்களாகும். அவைகளில் அதிகநமைச்சலிருப்பதினால் சொறிந்தஇடத்தில் காய்ப் பேறினதுபோலச் சுரசுரத்துத் தடிப்புகள் உண்டாகும். அன்றியும் சர்வாங்கமும் பச்சைநிறம் கனத்தல் யானைத்தோலைப்போலிருத்தல் அடிக்கடி நீரிறங்கல் தேகத்தில் சிணைத்தண்ணீர்வடிதல் நாற்றம் வாதாதிக்கம் என்னுமிக்குணங்க ளுண்டென்பாருமுளர். இது பன்றி மாமிசத்தோலைப்போல் இருப்பதால் கிடிபகுஷ்டம் எனப்பேர்பெற் றது. அன்றியும் மரங்களில் காயம் உண்டாகும்படி கொத்துகின்ற கிடிபப்பட்சியைப்போல் ரணத்தைப் பிறப்பிப்பதால் கிடிபகுஷ்டம் என்றுஞ் சொல்லப்படும்.

## 9-வது சித்மாகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் மிகவும் புடைகள் பெரும்பான்மையும் ஊர்த்துவகாய மான நாபிக்குமேல் கொஞ்சம் வெளுத்தசிவப்புடன் பாலைப்பூவைப் போல்பிறக்கும். அவைகளின்மேல் மினுமினுப்பும் சொறிந்தால் சருமத்தூள்விழுவதும் அவ்விடங்களில் வழுவழுப்பதும் காங்கை யுண்டாவதுமாயிருக்கும். அன்றியும் சுரைப்பூநிறமாகச்சரீரமுழு தும் திமிருடன் தடித்தல் மஞ்சள்நிறம் அதில் ரத்தங்கசிதல் சகிக்க வொண்ணாததிமிர் மறதிஎன்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

சித்மா என்பது புடைகள்.

## 10-வது அலசகுஷ்டரோகலக்ஷணம்.

இதில்ரத்தநிறமாக ஆற்றிற்கிடக்கும் சிறுசிறுகூழாங்கல்லுகளை யொத்தகொப்பிளங்கள் விஸ்தாரமாய்ப்பிறந்து உடைந்து ரணங்க ளாகும். அவைகளில் அதிகநமைச்சல் உண்டாயிருக்கும்.

## 11-வது விபாதிகாகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் சிவந்தநிறமாயும் கடினமாயும் கால்களிலும் கைகளிலும் அதிக கொப்பிளங்களுண்டாகி ரணங்களாகும். அவைகளில் மிக்க உபத்திரவமும் அற்பநமைச்சலுமுண்டாயிருக்கும். அன்றியும் தேகத்தில் வெடித்தலுடன் சகிக்கக்கூடாதஅருவருப்பு மிகுகாங்கை

கைகால் கண் காது கண்டம் இவைகளில் வெடிப்புடன் வீக்கம் சர்ப்பத்தையொத்த தேககாந்தி என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர். இது பாதத்தை வெடிக்கச்செய்தலால் விபாதிகாகுஷ்டம் எனப்பேர்பெற்றது.

## 12-வது தத்துருகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் முதல்முதல் மண்டலாகாரமான கொப்பிளங்களெழும்பிப் பின்பு நசுங்கிக் கறுப்பகத்திப்பூ நிறத்தைப்பெற்ற ரணங்களாகும். அவைகள் சரீரமுற்றிலும் அறுகம்புற்களுக்களைப்போல் தூரந்தூரமாகப்பிறந்து அதிக நமைச்சலையுண்டாக்கிக்கொண்டேயிருக்கும். அன்றியும் தேகத்தில் சிவந்ததடிப்பு வெளிறல் அதிகரோமம்முளைக்கினும் அவைகள்சுருளுதல் பித்தசிலேஷ்மாதிக்கம் ஊதலுடன் திமிர் என்னுமிக்குணங்கள் உண்டென்பாருமுளர்.

தத்துரு என்பது தடிப்பு.

## 13-வது சதாருகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் சிவந்தும்கறுத்தும் அடியகன்றும் அநேககொப்பிளங்கள் எழும்பிச்சர்வாங்கத்திலும் பரவப்பட்டரணங்களாகும், அவைகளில் எரிச்சலும் நோவும் கிருமியும் அதிகரிக்கும். இதனால் மிகுந்ததுக்கமும் உண்டாகும். அன்றியும் ரத்தம் பீதம் வெண்மை என்னும் நிறங்களுடன் தடிப்பானரணங்கள்பிறக்கும். அவைகளில் எரிச்சலுடன் தினவு கரடுகட்டல் சருமம் பாம்புத்தோலைப்போல் திரைந்து தொங்குதல் நாசி கண் காது கன்னம் ஆகிய இவைகளில் மிகுதடிப்பு வாதசிலேஷ்மாதிக்கம் என்னும் இக்குணங்கள் உண்டென்பாருமுளர். இது விருக்ஷங்களில் உண்டாகின்ற கணுக்களையும் போறையையும் நிகர்த்த ரணத்தைப்பிறப்பிப்பதால் சதாருகுஷ்டம் எனப்பேர் பெற்றது.

## 14-வது புண்டரீககுஷ்டரோகலக்ஷணம்.

இதில் கொப்பிளங்கள் மிகவுமுயர்ந்து முனையில்ரத்தநிறம் நடுவில் வெண்மைநிறம் உள்ளதாய் அரிப்பையுண்டாக்கிக்கொண்டே எழும்பித் தாமரைப்புஷ்பநிறத்தையொத்த ரணங்களாகும். அவைகளில் நோவு எரிச்சல் நமைச்சல் அதிகரிப்பதும் தாமரையிலைச்சலம்

போல ரத்தமானது ஓட்டாமல்நிற்பதும் குழம்பான சீனேத்தண்ணீர் ஒழுகுவதும் பின்பு குபீரென்று ரத்தம்சொரிவதுமாயிருக்கும். அன்றியும் சரீரம் முகம் கால் இவைகளில் பலவன்னமான ரணம் தினவு பன்னீர்போலச் சலம் வடிதல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர். இதனைப் படர்தாமரை என்றுஞ்சொல்வர். புண்டரீகம் என்றதினால் புலித்தோல் நிறத்தைஒத்தபுடைகள் உண்டாகும். என்பது சிலர் சம்மதம். இது அசாத்தியம்.

## 15-வது விஸ்போடகுஷ்டரோகலக்ஷணம்.

இதில்கொப்பிளங்கள் சிவந்தும் வெளுத்தும் விஸ்தரித்து எழும்பி ரணங்களாகும். அவைகளில் தினவும் எரிச்சலும் உண்டாகும். இதில் சருமம் மிகவும் மிருதுவாக இருக்கும். அன்றியும் விஷ எரிச்சலையொத்த எரிச்சல் சருமந்தடித்தலுடன் வெளிறல் ஒருவேளை சிவத்தல் துக்கம் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 16-வது பாமாகுஷ்டரோகலக்ஷணம்.

இதில்கொப்பிளங்கள் கறுத்தும் சிவந்தும் சிறுத்தும் பருத்தும் அடர்த்திஅடர்த்தியாக இரண்டுமுன்கைகளிலும் முழங்கால்களிலும் தொடைகளிலும் எழும்பி ரணங்களாகும். அவைகளில் நோவும் வறவறப்பும் மிகுதினவும் சீனேத்தண்ணீர்க்கசிவும் உண்டாகும். அன்றியும் வெண்மையாய்த் தாமரைமுகிழையொத்த கொப்பிளங்கள் எழும்புதல், அவைகளில்எரிச்சல் சருமம் விரிதலுடன் வீக்கம் கால் கை குறைதல் என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர்.

பாமா என்பது சிரங்கு.

## 17-வது சர்மதலகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் கொப்பிளங்கள்பிறக்கும் ஸ்தானங்களில் சிவந்தநிறமும் அதிகதினவும் தொடக்கூடாதநோவும் உண்டாகிப்பின்பு கொப்பிளங்கள் எழும்பி ரணங்களாகும். அவைகளில் குத்தலும் எரிச்சலும் உண்டாகும். அன்றியும் தேகத்தில் கீற்றுக்கீற்றாக வெடித்தல் வேதனை தொடக்கூடாமை அதில் ரத்தம்வடிதல் வயிற்றுவலி என்னும் இக்குணங்களுண்டென்பாருமுளர். சர்மம் என்பது தோல், தலம் என்பது இடம்.

## 18-வது காகசகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் கொப்பிளங்கள் பிறக்கும்போது சிவந்தநிறத்துடன் பிறந்து பின்பு கறுப்பாகிக் கிராம்பு மொக்கின் உருவத்தைப்பெற்று உடைந்து ரணங்களாகும். அவைகளில் அதிக எரிச்சலும் நோவும் உண்டாயிருப்பதன்றியும் சமஸ்தகுஷ்டகுணங்களும் பலநிறங்களும் உண்டாயிருக்கும். இது காக்கையின் பிறப்பைப்போல் முதலில் சிவந்து பின்பு கறுப்பதால் காகசகுஷ்டம் எனப்பேர்பெற்றது.

மேற்சொல்லிவந்த குஷ்டங்களைத் தோஷாதிபேத படலத்தில் விருத்தி ரத்ததாதுவிற் சொன்ன குணங்களினாலும் பூர்வரூபத்திற் சொல்லிய லக்ஷணங்களினாலும் கூர்ந்தறியவேண்டும்.

## அசாத்தியகுஷ்டரோகநிதானம்.

ஒவ்வொரு தோஷங்களால் பிறந்த குஷ்டரோகங்களில் இன்னொரு தோஷஞ்சேர்ந்து தொந்தமானாலும் மூன்றுதோஷஞ்சேர்ந்து திரிதோஷமானாலும் அசாத்தியம். அன்றியும் எவ்விதக்குஷ்டரோகிகட்கேனும் சரீரமெல்லாம் அழுகும்படியான ரணங்கள் பிறந்து அவைகளில் கிருமிகள்நிறைந்து இரண்டு கண்களுங் கோவைப்பழம் போலச்சிவந்து வேற்றுக்குரலும் அக்கினிமந்தமும் அதிசாரமும் தாகமும் உண்டாகில் அசாத்தியமே. இக்குணங்கள் இல்லாதிருக்கில் சாத்தியம்.

மேற்கூறிய குஷ்டங்களைச் சிவனார்வேம்புச்சூரணம் சிவனார் வேம்புத்தயிலம் துத்திரசவுண்டை கந்தகத்தயிலம் திரிரசபஸ்மம் தாம்பிரபஸ்மம் குஷ்டகஜகேஸரிமாத்திரைமுதலிய அவுஷதங்களைக் கொண்டு விலக்கவும்.

## சித்தர்மதாந்தரம்.

மேற்சொல்லிய குஷ்டம் 18-ல், கபாலம் ருசியஜிம்மிகம் காகசம் அலசம் என்னும் இந்நான்கு குஷ்டங்களுக்கும் வேறாக கர்ன குஷ்டம் கிருஷ்ணகுஷ்டம் அபரிசகுஷ்டம் என்னும் மூன்றுடன் வெண்குஷ்டத்தையுஞ்சேர்த்து 18-ஆகச் சிலமதாந்தரத்தில் கூறப்படுகின்றன. அந்தநான்கையும் முறையே இதனடியிற்கூறப்படும்.

## கர்னகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் சருமத்தில் பச்சை வன்னத்துடன் பொரிப்பொரியாக வெடிக்குதல் திரிதோஷாதிக்கம் தேகம்பாரித்துத்திமிருடன் காக்கட்டான் பூநிறமாகத் தோற்றுதல் தண்டிப்பு வீக்கம் சிலேஷ்மாதிக்கம் என்னும் இக்குணங்களுண்டாயிருக்கும்.

## கிருஷ்ணகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் சர்வாங்கமும் கறுக்குதல் சருமத்தில் திமிருடன் நாற்றம் வீசுதல் நோதல் சப்ததாதுக்களும் உஷ்ணமாயிருத்தல் அரையிலும் புறங்காலிலும் கொஞ்சமாகவும் சிரசில் அதிகமாகவும் ரணங்காணுதல் புத்தி சஞ்சலமுறுதல் என்னும் இக்குணங்களுண்டாயிருக்கும்.

## அபரிசகுஷ்டரோகலக்ஷணம்.

இதில் சர்வாங்கத்திலும் கறுத்தரத்தம்வடிதல் நோவு தொடக்கூடாமை வாதாதிக்கத்தால் அதிரல் உபத்திரவம் வீக்கம் வெடிப்பு என்னும் இக்குணங்களுண்டாயிருக்கும்.

## வெண்குஷ்டரோகபேதம்.

தேகத்தில் விகாரமான வெளுப்பை உண்டாக்குகின்ற வெண்குஷ்டரோகமானது வாதவெண்குஷ்டரோகம் பித்தவெண்குஷ்டரோகம் சிலேஷ்மவெண்குஷ்டரோகம் என மூன்றுவிதப்படும்.

## வாதவெண்குஷ்டரோகலக்ஷணம்.

இது சுறசுறத்துச் சிவந்து கொஞ்சம் கருமைச் சாயலுடன் வெளுத்திருக்கும். வெளுக்காத இடங்களில் அழுக்குநிறம் உண்டாகும்.

## பித்தவெண்குஷ்டரோகலக்ஷணம்.

இது செந்தாமரைப்பூ விதழ்போல் சிவந்தவெளுப்பாகப் பரவும் அவ்விடங்களில் எரிவதும் ரோமங்கள் உதிருவதுமாயிருக்கும்.

## சிலேஷ்மவெண்குஷ்டரோகலக்ஷணம்.

இது தும்பைமலரைப்போல் வெண்மையாக வெளுத்துக்கொஞ் சந்தடித்துப்பரவும். இது பரவுமிடங்களில் நமைச்சலுண்டாகும். இக்குஷ்டங்கள் ரத்ததாதுவையும் மாமிசதாதுவையும் மேதோதாதுவையும் பற்றும்போது கண்ணுக்கு அசங்கியமான நிறங்களையுண்டாக்கும். அன்றியும் இவைகளினால் தேகத்தில் வெடிப்பும் வீக்கமும் உண்டென்பாருமுளர்.

## சாத்தியவெண்குஷ்டரோகநிதானம்.

ரோமங்களை வெளுக்கப்பண்ணாமலும் கையால் தடவில்மேடுபள்ளம் இல்லாமலும் சடைப்பின்னல்போலும் அக்கினியால்சுட்டாறியவடுப்போலும் வெளுக்காமல் இருக்கிற வெண்குஷ்டம் சாத்தியம். அன்றியும் மூவிதவெண்குஷ்டங்களும் ஒன்றுக்கொன்று கஷ்டசாத்தியமாம்.

## அசாத்தியவெண்குஷ்டரோகநிதானம்.

எந்தவெண்குஷ்டமானாலும் முற்கூறிய சாத்தியக்குறிக்கு மாறாகவிருந்தாலும் முதல்முதல் குதம் குய்யம் உள்ளங்கை உதடு என்னும் இவ்விடங்களில் பிறந்து கோரமாகச் சீக்கிரத்தில் பரவினாலும் அசாத்தியம்.

இவைகளுக்குக் கஜசார்த்தூலவறமாஞ்சனம் மகிஷபல்லாதகிக்கிருதம் முதலிய மருந்துகளும் குஷ்டரோகச் சிகிச்சைகளும் ஆகும்.

குஷ்டரோகம் சித்தர்மதாந்தாமுற்றிற்று.

---

## கிருமிரோகபேதம்.

நான்கு ஸ்தானங்களைப்பற்றி இருபதுவிதப்பூச்சிகள் உண்டாகும். அந்நான்கு ஸ்தானங்களாவன: சரீரத்தின்மேல் அழுக்குகள் சேர்ந்தஸ்தானம் சரீரத்திற்கு உள்ளில் சிலேஷ்மஸ்தானம் ரத்தஸ்தானம் மலஸ்தானம்ஆகிய இவைகளாம். இவ்விடங்களில்பிறக்கின்ற பூச்சிகளையும் இவைகளால் உண்டாகும் ரோகங்களையும் இதனடியிற் காண்க.

## பாகியமலக்கிருமிலக்ஷணம்.

முன்சொன்ன நான்குஸ்தானங்களில் ஒருஸ்தானமாகிய சரீரத்தின்மேல் சேருகின்ற அழுக்கினுல், யூகா வீட்சா என இருவிதப் பூச்சிகள்பிறக்கும். இவற்றுள் யூகா என்னும் பூச்சி ரோமஸ்தானத்தில் எள்ளுப்போல் உருவமும் அந்நிறமும் மிகுந்தகால்களுமுடையதாய்ப்பிறந்து சஞ்சரிக்கும். இது கடிப்பதினுல் சிறுசிறு மச்சங்களும் வேர்க்குருப்போல் அணுக்கொப்பிளங்களும் உண்டாகும். யூகா என்பது பேன். இதுநிற்க வீட்சா என்னும்பூச்சி அழுக்குவஸ்திரங்களில் வெளுத்த எள்ளினது ரூபவன்னங்களை உடையதாய்ப் பிறந்து சஞ்சரிக்கும். இதுகடிப்பதினுல் சிறுதடிப்புகளும் தினவும் உண்டாகும். வீக்ஷா என்பது சீலைப்பேன். பாகியம் என்பது மேல். மலம் என்பது அழுக்கு.

## அந்தர்மலக்கிருமிரோகலக்ஷணம்.

கபத்திலும் உதிரத்திலும் பிறக்கின்ற கிருமிகளுக்கும் மதுரான்னம் வெல்லம் பால் தயிர் மாவு மழைத்தண்ணீர் என்னும் இவ்வஸ்துக்களைத் தின்னுவதால் பிறக்கின்ற கிருமிகளுக்கும் அந்தர்மலக்கிருமிகள் என்றுபேர். இவைகளால் குஷ்டரோகம்பிறக்கும்.

அந்தர் என்பது உள்.

## சிலேஷ்மமலக்கிருமிரோகலக்ஷணம்.

பின்சொல்லப்படுகிற மலக்கிருமிப்பிறப்பைப்போல் சிலேஷ்மத்தால் ஆமாசயஸ்தானத்திற்பிறந்து விருத்தியாகி உள்ளில் சஞ்சரிக்கின்ற கிருமிகள் ஏழுவிதப்படும். அவையாவன: பெரும்பூநாகக்கிருமி நீர்ப்பாம்புக்கிருமி நெல்முளைக்கிருமி சன்னநூலக்கிருமி அணுக்கிருமி வெண்கிருமி செங்கிருமி என்பவைகளாம். இவைகள் தனித்தனியே பெருங்கூட்டமாய் காலில்லாமலும் வட்டமாகச்சுற்றிய நூலைப்போலும் பார்வைக்குத் தோற்றுமல் அணுப்போலும் தருப்பைப்பூவாசனையைப்பெற்று குடலில் சுற்றிக்கொண்டு மார்புமட்டும் ஏறி அதிக வுபத்திரவங்களை யுண்டாக்கும் அப்போது மார்பு அதிரல் வாய் நீரூறல் அசீரணம் அரோசகம் மூர்ச்சை வாந்தி சுரம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது கபத்தால் பிறக்கும்.

## ரத்தக்கிருமிரோகலக்ஷணம்.

முற்கூறிய மதுரான்னம் முதலிய வஸ்துக்களினால் ஜனித்த உதிரம் ஓடுகின்ற நரம்புஸ்தானங்களில் அவ்வுதிரத்தால்பிறந்து விருத்தியாகிச் சஞ்சரிக்கின்ற கிருமிகள் ஆறுவிதப்படும். அவையாவன: அணுக்கிருமி வட்டக்கிருமி மிருதுரோமக்கிருமி காலில்லாக்கிருமி செங்கிருமி தோற்றுக்கிருமி என்பவைகளாம். இவைகள் தனித்தனியே பெருங்கூட்டங்களாகிச் சப்ததாதுக்களிலும் பரவி ஏறி ரோமங்களை உதிரப்பண்ணுவதும்அன்றி ரோமக்கால்களில் அத்திப்பழக்கிருமிகளைப்போல் திரிந்துகொண்டு சவுரசம் என்னும் கிருமிபேதங்களுக்குத் தாயாயுமிருக்கும். இவைகளால் ஆறுவித குஷ்டங்களைப் போலவே தேகத்தில்மாறுநிறம் உண்டாகும்.

## மலக்கிருமிரோகலக்ஷணம்.

அதிகமலஞ்சேரலினாலும் பச்சைத்தானியவஸ்து இலைக்கறி கருணை சேமை முதலிய கிழங்குகள் என்னுமிவைகளைப் புசிப்பதினாலும் பக்குவாசயஸ்தானத்தில் பிறந்துவளர்ந்து மலாசயத்தில் சஞ்சரிக்கின்ற கிருமிகள் ஐந்துவிதப்படும். அவையாவன ககேருகம்: மகேருகம் சவுரசம் சுலூனம் லேலிகம் என்பவைகளாம். இவைகள் தனித்தனியே பெருங்கூட்டங்களாகி மெத்தப்பருத்தும் சக்கரவடிவாயும் ரோமத்தைப்போல் மெல்லியதுகளாயும் கறுப்புநிறத்தையும் மஞ்சள் நிறத்தையும் கறுப்பும் வெள்ளையுங் கலந்த நிறத்தையும் பெற்று மலப்பையில் சஞ்சரிக்கும். இதனால் பேதி சூலை மலச்சிக்கல் உடம்பு இளைத்தல் தேகத்தில் சுறசுறப்புடன் வெண்மைநிறம் ரோமச்சிலிர்ப்பு அக்கினிமந்தம் குத்தல் நமைச்சல் எரிவு என்னும் இக்குணங்களுண்டாகும். ஒருவேளை அக்கிருமிகள் ஆமாசயஸ்தானத்தைப்பற்றி எதிர்த்து ஏறும்போது வாயில்நீர்ச்சுரப்பு துர்க்கந்த மலம் இரைப்பு இவைகள் உண்டாகும். இதற்குச்சகுர்ச்சாலென்றும் பேர். சன்னக்கிருமிகளைக் கீரிக்கிருமி எரிகிருமி எனவும் வழங்குகிறார்கள்.

## சாமானியகிருமிரோகலக்ஷணம்.

தேகநிறமாறுதல் சுரம் வயிற்றுநோவு மார்புஎலுப்பாகத்தோற்றுவதும்அன்றி நோதல் அக்கினிமந்தம் அன்னத்திவேஷம் பேதி

பிரமை ஆகிய இக்குணங்கள் நிரேதுவாகச் சகல கிருமிரோகங்களி லும் உண்டாம்.

இவைகளுக்கு முருக்கம்விதைக்கற்கம் காரவல்லிவாய்விளங்கக் குடிநீர் வேப்பம்நெய் பூனைக்காலிச்சூர்ண முதலிய சிகிச்சைகளும் உத வும்

கிருமிரோகம் முற்றிற்று.

ஏழாவது விஸ்போடரோகபடலம் முற்றிற்று.

---

# 8-வது வாதரோகபடலம்.



## வாதரோகபேதம்.

பிரிதிவிமுதலாகிய பஞ்சபூதங்களில் ஒன்றாகியும், அப்பூதங்க ளைச் சிருஷ்டித்துக் காத்துச் சங்கரிப்பதால் பிரதானபூதமாகியும், பித்தகபங்கள் அதிகரித்திருப்பதற்கும் சகலதோஷங்கள் பிறப்பதற் கும் மூலகாரணமாகியும் இருக்கின்றவாயுவு ஒன்றே தேகத்தைக்காக் கும்பொருட்டு பிராணவாயுமுதலிய பஞ்சவாயுக்களாய்ப் பிரிவுற்று நின்றது. அப்பிரிவைத்தோஷாதிபேதபடலத்தில் 2-வது பக்கத் திற்காண்க. உண்ணுகின்ற ரசாதி வஸ்து பேதங்களினாலும் தகாத நடக்கைகளினாலும் அந்த ஐந்துவாயுக்களும் ரோகமுகமாகத்திரும்பி பாதாக்ஷேபகவாதரோகம் முதல் பரிஸ்போடவாதரோகம் ஈறாக 80-விதப்படுகின்றன. அவைகளின் பிறப்பையும் பெயரையும் செய் கைகளையும் இதனடியில் முறையே காண்க.

### 1-வது பாதாக்ஷேபகவாதரோகம்.

இது, அதிக சீதளவஸ்துக்களைமாத்திரம் நாள்தோறும் அதிக மாகப்புசித்து அதற்குச்சரியாக உஷ்ணவஸ்துக்களைப் புசியாமையி னால் பிறந்து இருபாதங்களிலுமிருக்கின்ற சப்ததாதுக்களையும் அநுசரித்து அப்பாதங்களை ஒன்றோடொன்று அடித்துக்கொள்ளச்

செய்யும்; அப்போது எழுந்தால் தொடையில் நோவுடன் அதிக வேதனையும், நின்றாலும் நடந்தாலும் சுற்றி விழுதல்போலிருத்தலும் உண்டாகும். இதுவே உதறுவாதமாம்.

பாதம் என்பது கால். ஆக்ஷேபகம் என்பது தடை.

## 2-வது பாதலகவாதரோகம்.

இது, அதிக சீதளஸ்தானவாசத்தினாலும் மிகுசீதளக்காற்றினாலும் பிறந்து உள்ளங்காலிற் சேர்ந்துகொண்டு பாதத்தைத் தூக்கும்போதும் வைக்கும்போதும் அவைகளில் களிமண்ணை அரைத்துப்பூசினதுபோலும் செத்தைமுதலானவைகள் ஒட்டிக்கொண்டதுபோலும் தோற்றச்செய்யும்; அப்போது கால்களில் மரத்தலும் கனத்தலும் நோதலும் ஒன்றோடொன்று அடித்துக்கொள்ளுதலும் அதிகவுறக்கமும் உண்டாகும். இது, நெடுநாளாகியும் நீங்காமலேயிருக்கும். இவ்வாயுவில் பித்தமாவது சிலேஷ்மமாவது சேர்ந்தால் சாத்தியம். இவ்விரண்டும் ஏகமாகச்சேர்ந்தால் அசாத்தியம்.

லகம் என்பது பற்றுதல்.

## 3-வது பாதஹரிஷவாதரோகம்.

இது, பாதத்தில் மிகவும் அநுசரித்த சீதளத்திற்குச் சூடான ஒற்றடம்போடுவதனாலும் அக்கினியில் காய்ச்சுவதனாலும் அவ்வுள்ளங்காலில்நின்ற சீதளத்தினால்பிறந்து அதிகரிக்கும்; அப்போது கால்களின் ரோமமெல்லாம் சிலிர்த்தல் மரத்தல் கனத்தல் நடுக்கல் குத்தல் அசைத்தலில் நீட்டலில் முடக்கலில் நோவுதெரியாமை என்னும் இக்குணங்கள் உண்டாவதுமன்றி நடையும் மந்தப்படும். இவ்வாயுவில் தொந்ததோஷகுணங்களும் திரிதோஷகுணங்களும் உண்டாயிருக்கும்.

## 4-வது அபிகாதவாதரோகம்.

இது, அதிகவழிநடக்குதல் வாகனங்களின்மேல் ஏறிக்கொண்டு வேகமாகச்செல்லல் மல்லயுத்தஞ்செய்தல் சீதளவஸ்துக்களைப் புசித்தல் என்னும் இச்செய்கைகளினால் பிறந்து சர்வாங்கத்திலும் வியாபிக்கும்; அப்போது உடம்பில் அசதி நோவு பக்கஇசிவு திமிர் முறுக்குதல் சுழலல், சர்வாங்கமும் அடித்துத்துவைத்ததுபோலும் உள்ளில்

வெட்டுவதுபோலுமிருத்தல் ஆயாசம் நீட்டலில் முடக்கடலில் மிகுந்தநோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

அபிகாதம் என்பது அடிபடல்.

## 5-வது புச்சாவர்த்தவாதரோகம்.

இது, பாதத்தில் சீதளம்அநுசரித்திருக்கும்போது மீளவும் சீதள வஸ்துக்களைப்புசித்து உடனே நித்திரைசெய்வதனால் பிறந்து கை கால்களின் விரல்களை அநுசரிக்கும்; அப்போது விரல்களில் சிவந்த நிறமும் நோவும் மரத்தலும் உண்டாகும். இது விர்த்தியடையில் விரல்கள் நீட்டமுடக்கக்கூடாமையாகும். புச்சம் என்பது விரல்கள். ஆவர்த்தம் என்பது குழல்.

## 6-வது சீதகண்டுவாதரோகம்.

இது, பாதநரம்பில் மிகுசீதளஞ் சேருங்காலத்தில்பிறந்து உள்ளங்காலில் அடிக்கடி சீதளத்துடன் நமைச்சலைப்பிறப்பிக்கும். அப்போது பாதங்களில் கனப்பும் நோவும் குத்தலும் மிகுந்ததினவும் உண்டாகும்; இது அதிகரிக்கில் தேகத்தில் வீக்கமும் கனத்தலும் நித்திரையுமதிகரிக்கும். இது சாத்தியம் சீதம் என்பது குளிர்ச்சி. கண்டு என்பது தினவு.

## 7-வது சுப்திவாதரோகம்.

இது, சீதளகாலத்தில் சீதளவஸ்துக்களைவிரும்பி மிகவும் புசித்தல் பகல்நித்திரை ஆழ்ந்தபள்ளத்தில் உட்காரல்ஆகிய செய்கைகளினால் பிறந்து குதிக்கால் பாதம் விரல்கள் முழங்காலுக்குக்கீழ் மேல் சிறுதொடை கவுட்டி என்னும் இடங்களுக்குள் எந்த இடத்திலாவது நிலைத்துவிடும்; அப்போது அதிவுறக்கமும் தேகத்தில் மரத்தலும் கனத்தலும் வீக்கமும் நோவும் குத்தலும் உண்டாகும். இது அதிகரிக்கில் சர்வாங்கமும் நீட்டல் முடக்கலில் நடுக்கலதிகரிக்கும். இதற்கு உடனே சிகிச்சைசெய்யில் கஷ்டசாத்தியம்; செய்யாவிடில் அசாத்தியம். சுப்தி என்பது உறக்கம்.

## 8-வது பாதகண்டகவாதரோகம்.

இது, உள்ளங்காலில் சீதளம் அநுசரித்தகாலத்தில் உஷ்ண

ஒற்றடம்போடுவதனாலும் காய்ச்சுவதனாலும் பிறந்து கணுக்கால்களில்தங்கிக் கால்விரல்களின் சந்துக்களிற்பரவும். இதனால் காலைத் தூக்கும்போதும் வைக்கும்போதும் முள்ளு சிராய் ஊசிமுனை கல்லு நகம் இவைகளால் குத்துவதுபோல் ஒருவேதனை பிறப்பதன்றியும் நோவும் வருத்தமும் உண்டாகும். இது அசாத்தியம். கண்டகம் என்பதுமுள்ளு.

## 9-வது களாயகஞ்சவாதரோகம்.

இது, சீதளகாலத்தில் சீதளமாகியபூமியில் மிகச்சஞ்சரிப்பதாலும் சதாஉட்கார்ந்திருத்தலாலும் மிகுநித்திரையாலும்பிறந்து சகலகீல்களிலும் தங்கியிருக்கும்; அப்போது தேகத்தில் நோவு வீக்கம் எழுந்திருந்தால் நடுக்கல் நொண்டியைப்போல் நொண்டுதல் கீல்கள் பலமற்றுத்தளரல் மரத்தல் கனத்தல் என்னும் இத்துர்க்குணங்கள் உண்டாகும். இதுசாத்தியம். களாயம் என்பது கீல்; கஞ்சம் என்பது ஊனம்.

## 10-வது சம்பூகசீரிஷவாதரோகம்.

இது, வெகுசீதளகாலத்தில் சிலேஷ்மவஸ்துக்கள் பிண்ணாக்கு வாயுவுள்ளவற்றல் முதலியவைகளைத் தனித்தனியேயாவது கலந்தாவது புசித்தலாலும் அதிகநடை பகல்நித்திரை மிகுசையோகம் இவைகளாலும் பிறந்து முழங்காலின் கீல்களில் தங்கிவிடும். அப்போது முழங்காலில்வீக்கம் தடித்தல் மரத்தல் நோவு குத்தல்,மலபந்தம் நித்திரை என்னும் இக்குணங்களுண்டாகும். இதுவே நரித்தலைவாதமாம். இது சாத்தியம். சம்பூகம் என்பது நரி; சீரிஷம் என்பது தலை.

## 11-வது பாதோபகாதவாதரோகம்.

இது, அதிக சீதள மந்தவஸ்துக்கள் சிலேஷ்மவஸ்துக்கள் உட்காந்து உறங்கல் மிகுசஞ்சாரம் புல் கல் கட்டை முதலானவைகள் காலிற்பட்ட வேதனை ஆகிய இவைகளினால்பிறந்து தொடைகளிற்பரவித்தங்கியிருக்கும்; அப்போது நீட்டினகாலை முடக்கில் திமிர் மரத்தல் கனத்தல் விரல்களில்நோவு காலில் எதுவோ பூசினதுபோலிருத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதற்கு உடனேயே பண்டிதர்கள் பற்பல சிகிச்சைகளைச்செய்தால் சாத்தியமாம். உபகாதம் என்பது அறையுண்டல்.

## 12-வது கிருத்திரசிவாதரோகம்.

இது, சதாகாலமும் நடையின்றி இருத்தல் பகல்நித்திரை பதினுலுவேகத்தை மறித்தல் ஆகிய செய்கைகளாலும் கடற்கரை மாமிசம் மாப்பண்டம் தயிர் பால் வெல்லம் கள் பிண்ணுக்கு மதுரவஸ்து மந்தவஸ்து லவணவஸ்து அதிகசீதளவஸ்து எண்ணெய்வஸ்து கந்தமூலபலாதி ஆகிய இவைகளை மிதமின்றிப்புசித்தலினுலும் பிறந்து தொடைகளின் நரம்பை அநுசரித்துப் பாதவிரல்முதல் அடிமுதுகுவரைக்குமிருக்கின்ற நரம்புகளின் துவாரத்தில் சேர்ந்துகொள்ளும்; அப்போது தேகத்தில் குத்தல் கனத்தல் நோவு வேதனை என்னும் இக்குணங்களுண்டாகும். இது கண்டவுடன் சிகிச்சைசெய்தால் சாத்தியம்; செய்யாவிடில் முற்கூறிய பாதோபகாத வாதத்தைப் போல் தொடைகளுக்கு அதிகவேதனையும் கால்களுக்கு ஸ்மரணை நீங்குதலும் உண்டாகும். கிருத்திரசி என்பது தொடைநரம்பு.

## 13-வது சோணிதவாதரோகம்.

இது, உஷ்ணவஸ்துக்கள் காந்தியஅன்னம் உலர்ந்தபதார்த்தம் இவைகளைப்புசித்தலினுலும் பகல்நித்திரை மிகுசையோகம்பதினுலுவேகத்தைமறித்தல்ஆகிய செய்கைகளினுலும் சாதாரணமாக நரம்பின் துவாரங்களில் ஒடப்பட்ட உதிரமானது மறிபடுவதனுலும் பிறந்து கைகால்களின் கீல்களிலேனும் சகலகீல்களிலேனும் தங்கிவிடும்; அப்போது அவைகளில் வீக்கம் குத்தல் நோவு தினவு சரீரத்தில் கருமைநிறம் சீதளம் சிரசில் உபத்திரவத்துடன் பாரிப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகும். அன்றியும் அதுபோலவே பித்தசோணிதவாதரோகம் சிலேஷ்மசோணிதவாதரோகம் என இரண்டுரோகம் பிறக்கும். இவற்றுள் பித்தத்தால் பிறந்த வீக்கமானது மிருதுவாக இருக்கும்; இதனுல் தேகம் இளைத்து ரத்தம்வறளும். சிலேஷ்மத்தால் பிறந்த வீக்கமானது கீல்கள் தோறும் கண்டுகண்டாகக்கட்டிக்கொண்டு வெகுஉபத்திரவத்தைச்செய்யும். சோணிதம் என்பது ரத்தம். இதுவே உதிரவாதரோகம்.

## 14-வது ஊருஸ்தம்பவாதரோகம்.

இது, சீதவீரியவஸ்து உஷ்ணவீரியவஸ்து சலவஸ்து வதங்கின

பதார்த்தம் இவைகளைப் புசித்தலினாலும் சீரணசீரணகாலத்தில் யானைமுதலிய வாகனாதி வேகம், பகல்நித்திரை இரவில் அநித்திரை ஆகிய இவைகளினாலும் முற்கூறிய கிருத்திரசிவாதத்தைப் பிறப் பித்தவஸ்துக்களினாலும்பிறந்து ஆமத்தைக்கிரகித்துத்தொடைகளில் வியாபித்து அவைகளை ஸ்தம்பத்தைப்போலவேசெய்யும். அன்றியும் ஆழ்ந்ததாமரைக்குளத்து நீரைப்போல் அசைவற்றுத் தொடைகளி லிருக்கும் சிலேஷ்மநீரிலும் மேதோதாதுவிலும் மற்ற இதரதோஷத் திலும் அவ்வாயுவு வியாபித்து வெவ்வேறுபெயரைப்பெற்று உபத்தி ரவங்களை யுண்டாக்கும். அதன்விவரம்: சிலேஷ்மநீரிலதுகூடுங்காலத் தில் சிலேஷ்மவாதவூருஸ்தம்பம் எனப்பேர்பெறும்; அப்போது தொ டைமரத்தல் கனத்தல் நடையில்லாமை என்னும் இக்குணங்களுண் டாகும். அது பித்தகபத்தோடும் மேதோதாதுவோடும் கூடுங்காலத் தில் அவைகளின் பேர்கொண்ட ஊருஸ்தம்பவாதம் எனப்பேர் பெறும் அப்போது தொடையில்லாதுபோல் தோற்றல் நியாணிகள் போலிருத்தல் மரத்தல் கனத்தல் நடுக்கல் அசைதல் குத்தல் சீதளம் பொறுத்துப் பொறுத்துக்குலுங்குதல் விருத்தல் நமைச்சல் எரிச்சல் இழுத்தல் நடத்தல் உட்கார்தலில் கோபம் நடைகெடல் தேகம் சுட் கித்தல் என்னும் இக்குணங்களுண்டாகும். இவைகளுக்கு எவ்வளவு வைத்தியஞ்செய்பினும் அசாத்தியமாகவே முடியும். ஊரு என்பது தொடை. இதனை ஆட்டியவாதம் என்றுஞ் சொல்வர்.

## 15-வது சகனுவர்த்தவாதரோகம்.

இது, சிலேஷ்ம பிரதானமானதயிர் அதிசீதளம் மாப்பண்டம் கிழங்கு கீரைக்கட்டை கனிவருக்கம் மந்தமாமிச மச்சங்கள்முதலிய வைகளை மிதமின்றிப் புசித்தலினாலும் சீரணகால சையோகத்தினா லும் கனநடையினாலும்பிறந்து இடுப்பில் வாசமாய்த்தங்கி இரண்டு சகனத்திலும் தொடைக்குக்கீழிலும் மேலிலும் சஞ்சரித்துக்கொண் டே இருக்கும்; அப்போது தொடைகளில் குடைச்சலும் நோவும் மரத்தலும் குனியக்கூடாமல் ஸ்தம்பத்தைப்போலவே நிமிரலும் ஊருஸ்தம்பவாதகுணங்களு முண்டாகும். இது, இடுப்பில் தங்கிச் சுழன்றுவருவதால் சகனுவர்த்தவாதம் எனப் பேர்பெற்றது. சகனம் என்பது இடுப்பு.

## 16-வது துனிவாதரோகம்.

இது, சிலேஷ்ம மந்தவஸ்துக்களினாலும் பதினாலு வேகத்தை மறித்தலாலும்பிறந்து கீழ்வயிறு குதம் அல்குல் பிட்டம் இவ்விடங்களில் வியாபித்து வேதனையைச் செய்யும்; அப்போது வயிற்றில் மிகுந்தவுபத்திரவம் அறுத்தல்போலும் இழுத்துப்பிடித்தல்போலும் இருத்தல் மரத்தல் கனத்தல் மலமூத்திரச் சிக்கல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 17-வது பிரதிதுனிவாதரோகம்.

இது, முற்கூறிய துனிவாதத்தைப்பிறப்பித்த வஸ்துக்களினாலும் பதினாலுவேகத்தை மறித்தலினாலும்பிறந்து முன்சொன்ன இடத்தைத் தாண்டி மேல்நோக்கி வியாபித்து வேதனையைச்செய்யும்; அப்போது மேற்கூறிய வாதஉபத்திரவத்தைப் பார்க்கிலும் அதி உபத்திரவமுண்டாகும்.

## 18-வது மூடவாதரோகம்.

இது, சீதளவஸ்துக்களினாலும் பிரமாணந்தப்பிய போஜனத்தின் மேல் போஜனஞ்செய்வதனாலும் அக்கினிமந்தத்தினாலும் பிறந்து நாபிஸ்தானத்தில் மொத்தையாகக்கட்டியைப்போல் கட்டிக்கொண்டு வேதனையைச்செய்யும்; அப்போதுமலசலபந்தம் வயிறுப்பல் நோதல் குத்தல் தேகமரத்தல் குடலையிழுத்துப்பிடித்தல் போலிருத்தல் என்னும் இக்குணங்களுண்டாகும். இது உள்ளேயே உபத்திரவத்தைச் செய்தலால் மூடவாதம் எனப் பேர்பெற்றது. இது கஷ்டசாத்தியம்.

## 19-வது ஆத்மானவாதரோகம்.

இது, சீதளமலபந்தவஸ்து சிலேஷ்மவஸ்து புளிப்புவஸ்து மாப்பண்டம் பனிக்காற்று இவைகளினால் பிறந்து அடிவயிற்றில் தங்கி வேதனையைச் செய்யும்; அப்போது குடலின் துவாரத்தில் நோவு கொஞ்சம் மலமும் மூத்திரமும் கட்டுப்படல் வயிற்றில் கடகடவென்னும் ஒருசத்தம் வயிறுப்பல் வாதசுரக்குறிஆகிய குணங்கள் உண்டாகும். இது வயிற்றில் சத்தத்தையும் உப்பலையும் தருதலால் ஆத்மானவாதம் எனப் பேர்பெற்றது,

## 20-வது பிரத்தியாத்மானவாதரோகம்

இது, மலபந்தவஸ்து மந்தவஸ்து நடையில்லாதிருத்தல் எந்நேரமும் ஈரத்தில் உட்காரல்ஆகிய இவைகளினால்பிறந்து முன்சொன்ன ஆத்மானவாதத்தைப்போலவே குடலின்துவாரத்தில்தங்கி அதிகரித்து வயிற்றில் மேல்நோக்கிக்கொண்டே பயங்கரமான இரைச்சலையுமுபத்திரவத்தையும் இடைவிடாது சதாகாலத்திலும் செய்யும். அல்லது ஒவ்வொரு காலத்திலாவது செய்யும்; அப்போது வயிற்றிலடிக்கடி நோவு எக்காலமும் மரத்தல் மூத்திரப்பையில் மிகுந்தநோவுடன் குத்தல் மலமூத்திரபந்தம் வாயுவு ஆமாசயஸ்தானத்துச் சிலேஷ்மத்தைக் கலைப்பதினால் வயிற்றைக் கையால் அரக்குவதுபோலிருத்தல் மேல்மூச்சு பக்கநோவு என்னும் இக்குணங்களுண்டாகும். இது மேல்நோக்கி வயிற்றில் இரைச்சலையுண்டாக்கலால் பிரத்தியாத்மான வாதரோகம் எனப் பேர்பெற்றது.

## 21-வது அபதந்திரகவாதரோகம்.

இது, மந்தவஸ்து இலைக்கறி மாமிசம் ஆதியான பதார்த்தம் பால் எள்ளு பிண்ணாக்கு பயறு இவைகளை அதிகமாகப்புசித்தலினாலும் பயம்துக்கம் பகல் நித்திரை உபவாசம் ஆகிய இச்செய்கைகளினாலும் பிறந்து சிலேஷ்மநரம்பு வாதநரம்பு பித்தநரம்பு ரத்தநரம்பு என்னும் இவ்விதநரம்புகளின் துவாரங்களிலும் குடலிலும் தேகத்திலும் வியாபித்துஅவைகளில் நின்றும் அதோகாயத்தை அநுசரித்துப்பின்பு மேல்நோக்கி மார்புநரம்புகளில்பரவி அம்மார்பிலும் சிரசிலும் நெற்றியிலும் நோவைப்பிறப்பித்து பிறகு சர்வாங்கத்திற்கும் வேதனையைக்கொடுத்து அவ்வங்கத்தை வில்லைப்போலவே வளைத்து வருத்தமுற நெட்டுயிர்ப்பை எழுப்புவதுமன்றி, ஊர்த்துவகாயத்திலிருந்து அதோகாயத்தைமரத்தல் அடையச்செய்தும் அதோகாயத்திலிருந்து ஊர்த்துவகாயத்தை மரத்தல் அடையச்செய்தும் மிகுந்த உபத்திரவத்தைவிளைக்கும்; அப்போது கண்விழி கீழேசரிந்தது போலிருத்தல் அல்லது மூடிக்கொள்ளுதல் புறுச்சத்தத்தைப்போல் நெஞ்சில் ஒருசத்தம் எழும்புதல் ஞாபகமறதி விசையாக நடக்கும் போது தடுக்கிவிழுதல் நடுக்கல் இளைத்தல் பிரமைமுதலிய குணங்களுண்டாகும். இதுமார்பைவிட்டுக் கீழிறங்குமாயின் சஷ்டத்தின்

மேல் சாத்தியம்ஆகும். இறங்காவிடில் அசாத்தியம். இது மாதருக்குக் கருப்பங்கரைந்த காலத்திலும் மாதாந்தர ருதுகாலத்திலும் சரீரம்நலங்கிய காலத்திலும் உற்பத்தியாகில் மிகவுங்கஷ்டசாத்தியம். இது தேகத்தைப்பராதீனம் ஆக்கலால் அபதந்திரகவாதம்எனப் பேர்பெற்றது. இதற்கு அபதானகவாதம் என்றும் ஒருபேருண்டு.

## 22-வது மனோவிருத்திவாதரோகம்.

இது, அனலாதிவெய்யல் கோபம் மனதுதபித்தல் அதிநடை பயம் துக்கம் குத்துப்படல் ஆகிய இவைகளினால் பிறந்து மனோ வியாபாரத்தைக்கெடுத்துக் கீழ்வயிற்றிலும்பக்கத்திலும் மூத்திரநரம்புகளிலும் சிலேஷ்மநரம்புகளிலும் வாதநரம்புகளிலும் அநுசரித்துக் கொள்ளும்; அப்போது நினைத்தாலும் நினையாதிருந்தாலும் மலமூத்திரம்வருதல் தேகங்கட்டுவிட்டதுபோலிருத்தல் மனக்கெடுதி என்னும் இக்குணங்களுண்டாகும். இது மனோவியாபாரத்தைக் கெடுப்பதால் மனோவிருத்திவாதம்எனப் பேர்பெற்றது. இது ஒருவருஷத்திற்குமேல் அசாத்தியம்.

## 23-வது ஆந்திரபித்வாதரோகம்.

இது, வாதவஸ்து சீதளவஸ்து மிகுசீதளமான வழுவழுத்த வஸ்து மச்சம் மாமிசம் வெல்லம் அதிரசம் முதலிய பண்டம் பிண்ணுக்கு தயிர் காந்தியஅன்னம் இவைகளை அதிகமாகப்புசித்தலினால் பிறந்து வயிற்றில் பெருங்குடலின்துவாரத்தில் வியாபிக்கும்; அப்போது வயிற்றில் கலக்குதல்போலும் அறுக்குதல்போலும் இருத்தல் பொறுத்துப்பொறுத்து உப்பல் நோதல் வருத்தத்தின்மேல் மலமூத்திரங்கட்டுப்படல் மிகுவார்த்தை வாந்தி ஏப்பம் மூர்ச்சை பிரமை என்னும் இக்குணங்கள் உண்டாகும். ஆந்திரம் என்பது குடல்; பித் என்பது பேதித்தல். இதனைக் குடல் வாதம் என்றும் சொல்வர். இது கஷ்டசாத்தியம்.

## 24-வது அபதானகவாதரோகம்.

இது, சீதளவஸ்து வாசனைவஸ்து மதுரவஸ்து மந்தவஸ்து முதலியவஸ்துக்களை மேன்மேலும் புசித்தலாலும் பயம் உபவாசம் பகல் நித்திரை இவைகளினாலும் பிறந்து சரீரத்தில் சப்ததாதுக்களிலும்

நரம்புகளிலும் வியாபிக்கும்; அப்போது அடிக்கடி திடீலென்று எழுந்திருக்குதலும் பேச்சுக்குப்பேச்சு நகைக்குதலும் முற்கூறிய அபதந்திரகவாதரோகவுபத்திரவமுமுண்டாகும். இது சகலநரம்புகளிலும் பரவுதலால் அபதானகவாதரோகம் எனப்பேர்பெற்றது. இதில் இன்னுஞ் சில துர்க்குணங்கள் உண்டானாலும் அல்லது நெடுநாட்சென்றாலும் கஷ்டசாத்தியம்.

## 25-வது நாளாவர்த்தவாதரோகம்.

இது, அதிக சீதள சலபானம் மிகுந்தநடை பதினாலுவேகத்தை மறித்தல் வெகுசையோகம் ஆகிய இவைகளினால்பிறந்து ஆண்குறியின் துவாரத்தினடியிலும் நடுவிலும் முனையிலுந்தங்கி நிலைத்துவிடும்; அப்போது மூத்திரமானது மாமிசம் மேதை எலும்பு மா இவைகளின் நிறங்களைப்பெற்றுக்கலங்கிய சுக்கிலம்போலும் நாளத்தின்வழியில் பொறுத்துப்பொறுத்து ஒழுகிக்கொண்டேயிருக்கும். அன்றியும் இவ்வாயுவு அதிகரிக்க அதிகரிக்க அடிநாளம்முதல் முனைநாளம் வரைக்கும் நோவும் குத்தலும் உண்டாகும். நாளம் என்பது ஆண்யின் துவாரம்.

## 26-வது மூத்திரசரவாதரோகம்.

இது; உலர்ந்தபதார்த்தம் காந்தியஅன்னம் உஷ்ணவஸ்து லவணவஸ்து காங்கைவஸ்து முதலியவைகளைப் பிரமாணந்தப்பித்தினந்தினமும் புசித்தல் அதிகசையோகம் மலமூத்திரவிருத்தி மிகுந்தநடை ஆகிய இவைகளினால்பிறந்து ஆண்குறியின் துவாரத்தில் வியாபித்து மூத்திரத்தைக் கொஞ்சங்கொஞ்சமாகவும் அதிகம் அதிகமாகவும் இடைவிடாமல் ஒழுகச்செய்வதும் அன்றி மூத்திரப்பைக்குள் தங்கிக்கொள்ளும்; அப்போது அவ்விடத்தில் ஒவ்வொருவேளை கனத்தல் எரிச்சல் நோவு திமிர்என்னும் இக்குணங்கள் உண்டாகி மூத்திரம் இறங்கும். இது மூத்திரத்தைச் சரம்போல் இறக்கலால் மூத்திரசரவாதம் எனப்பேர்பெற்றது.

## 27-வது மேட்ரக்ஷீயவாதரோகம்.

இது, வாதவஸ்து சீதளவஸ்து களி இவைகளை மிகவும்புசித்தல் மிகுபோகம் பதினாலுவேகத்தைமறித்தல் பகல்நித்திரை வேகநடை

ஆகிய இவைகளினால் பிறந்து ஆண்குறியின் வன்மையைக்குறைத்து அத்துவாரத்தை அநுசரித்து அவ்விடத்தில் எரிச்சலாவது நோவாவது கனத்தலாவது உண்டாகும்படிச்செய்யும். இதனால் சையோக வெறுப்பும் பீசக்கெடுதியும் பிறக்கும். இதுஅதிகரிக்கில் பீசகோசங்களில் வீக்கமும் அவ்வீக்கத்தினால் நீர்க்கட்டும் உண்டாகும். மேட்ரம் என்பது ஆண்குறி; க்ஷீயம் என்பது பலநாசம். இது உடனே அசாத்தியம்.

## 28-வது இருதாவிருதவாதரோகம்.

இது, லவணம் உஷ்ணம் சிலேஷ்மம் மந்தமானகிழங்கு ஆகிய இவ்வஸ்துக்கள் வரகரிசிச்சோறு முதலியவைகளை மிகவும் புசிப்பதினால்பிறந்து இருதயத்தில்தங்கிச் சுற்றிக்கொண்டு உபத்திரவத்தைச் செய்யும் அப்போது மார்பில் வாளால் அறுப்பது போலிருத்தல் தேகங்கனத்தல் நோவு சீதளம் அரோசகம் வாந்தி பிரமை வியர்வை புரளல் எரிச்சல் இளைப்பு கீல்களில் நோவு என்னும் இக்குணங்களுண்டாகும். இது மார்பு விலா முதுகு என்னும் இவ்விடங்களில் வியாபித்துப் பின்பு வெளிப்புறத்தில் வியாபிக்கும். இருத் என்பது மார்பு; ஆவிருதம் என்பது சூழல்.

## 29-வது சுரோணிசூலைவாதரோகம்.

இது, வாதப்பிரதானபோஜனம் மந்தவஸ்து மலபந்தவஸ்து பதினாலுவேகத்தைமறித்தல் ஆகிய இவைகளினால் பிறந்து இடுப்பின் பக்கங்களில் தங்கிவிடும். அப்போது அவ்விடத்தில் அதிக குத்தல் வயிற்றில் சங்கட்டத்துடன் அறுப்பது போலிருத்தல் பிரமை மலமூத்திரக்கட்டு வயிற்றிலும் பக்கத்திலும் நாபிக்குள்ளிலும் கனத்தல் வயிறுப்பல் வாந்தி ஏப்பம் எரிச்சல் உதடுலரல் இளைப்பு நடுக்கல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். சுரோணி என்பது பிட்டம்; சூலை என்பது குத்தல்.

## 30-வது நாபிசாருவாதரோகம்.

இது, அதிக வாதவஸ்து வயிறுப்பிசவஸ்து மலபந்தவஸ்து இவை சேர்ந்தபோஜனம் மிகுந்த சையோகம் பதினாலுவேகத்தை

மறித்தல் அதிகநடை ஆகிய இவைகளினால்பிறந்து நாபியை அநுசரித்து அவ்விடத்தைப்பற்றிய வாதநரம்புகளிலும் சிலேஷ்மநரம்புகளிலும் வியாபிக்கும். இதனால் நாபிஸ்தானத்தில் குத்தல் சர்வாங்கநோவு சைத்தியம் நடுக்கல் கனத்தல் வாந்தி கொட்டாவி கீழ்வயிற்றில் சூலை வயிற்றிலும் குதச்சந்துகளிலும் ஆண்குறியிலும் நோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது தொப்புளைப்பற்றியதால் நாபிசாருவாதம் எனப் பேர்பெற்றது.

## 31-வது அஷ்டிலாவாதரோகம்.

இது, நாபிசாருவாதத்தைப்பிறப்பிக்கும் வஸ்துக்களினால் பிறந்து அதைப்போல் நாபிஸ்தானத்தின்கீழ்நின்று அதிகரித்து மூத்திரப்பையின் துவாரத்திலும் அம்மூத்திரப்பைக்குள்ளிலும் வெளியிலும் பக்கங்களிலும் கட்டிபோல் வீக்கத்தைப்பிறப்பிக்கும்; அப்போது வயிற்றில் கனத்தல் உப்பல் மலமூத்திரக்கட்டு நோவு அரோசகம் நானாவிதவேதனை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

அஷ்டிலம் என்பது வீக்கம்.

## 32-வது பிரத்திபஷ்டிலாவாதரோகம்.

இது, சிலேஷ்மவஸ்து சீதவீரியவஸ்து தயிர் கடலோரமாமிசோதகம் நூலிழைந்து சலம்உண்டாகியஅன்னம் அசீரணதோஷம் அதிககாற்று பதினாலுவேகத்தை மறித்தல் சஞ்சாரம்இன்மைஆகிய இவைகளினால் முன்சொன்னஅஷ்டிலாவாதத்தைப்போலவேபிறந்து நாபிஸ்தானத்திற்கு மேலேனும் கீழேனும் கட்டிபோல் வீக்கத்தைப் பிறப்பிக்கும்; அப்போது அவ்விடத்தில் குத்தல்முதலிய உபத்திரவங்கள் உண்டாகும். இவ்வீக்கமும் முற்கூறிய வீக்கமும் நிலைபெறும் என்பது சிலர்பக்ஷம்.

## 33-வது ஸ்தனருக்குவாதரோகம்.

இது, முறுக்குப்பலகாரம் மந்தமாமிசம் சிலேஷ்மவஸ்து சேற்றுநீர் இவைகளின்சேர்க்கையால் பிறந்து ஸ்தனத்தின் அடியில் வியாபிக்கும்; அப்போது முலைக்கு உள்ளிலும் வெளியிலும் முலைக்கு நேர்முதுகிலும் வேதனை உண்டாவதன்றியும் முலைக்காம்பைவாளால்

அறுப்பதுபோல் இருக்கும்; அல்லது அடிக்கடி வாந்தியாவது உண்டாகும். ஸ்தனம் என்பது முலை; ருக்கு என்பது அதிகநோவு.

## 34-வது பக்ஷகாதவாதரோகம்.

இது, மந்தவஸ்து மலபந்தவஸ்து மயக்கவஸ்து குளிர்ச்சியிடத்தில்நித்திரை குளிர்ச்சிஆசனம் தேகத்தில் சீதளச்சேர்க்கை ஆகிய இவைகளால்பிறந்து உதிர ஓட்டங்குறைந்த பாதிச்சரீரத்தில் தங்கி அப்படியே சப்ததாதுக்களிலும் வாதசிலேஷ்மநரம்புகளிலுமநுசரிக்கும்; அப்போது பாதிஉடம்பில் கனத்தல் நோவு மரத்தல் வேதனை அப்பக்கத்துக்காலும்கையும் உதவாதிருத்தல் அவைகளுக்கு அசைவில்லாமை இளைத்தலோடு சூம்பல் பிரமை சுபாவ அறிவின்மை நாலுவிதநோவு பயங்கரம் என்னும் இக்குணங்கள்உண்டாகும். பக்ஷம் என்பது பக்கம்; காதம் என்பது அடித்தல். இது ரத்தநரம்பையும் சன்னநரம்பையும் உலர்த்திக் கீல்களைத்தளரப்பண்ணி பிரபலப்படுவதால் இதற்கு ரத்தம் முன்போல் நரம்புகளில் ஓடும்படிக்குச்சிகிச்சை செய்யவேண்டும். இதனை பக்ஷவாதம் ஏகாங்கவாதம் அர்த்தாங்கவாதம் பாரிசவாதம் பக்கவாதம் இளம்பிள்ளை வாதம் எனவும் பலவாறுகச் சொல்வர்.

## 35-வது உதாவர்த்தவாதரோகம்.

இது, வேகத்துடன் வருகிற மலமூத்திராதிகளையடக்கல் மந்தவஸ்து மலபந்தவஸ்துக்களைப் புசித்தலாகிய செய்கைகளினல் பிறந்து கீழ்வயிற்றில்நிலைத்துவிடும்; அப்போது அடிவயிற்றில் கனத்தல் நோவு உப்பல் மலசலக்கட்டு என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது அதோங்கத்தில் இருக்கின்ற நரம்புகளையும் மலமூத்திரங்களையும்மேலாக இழுத்துப்பிடித்துச் சுழலுவதால் உதாவர்த்தவாதம் எனப் பேர்பெற்றது. இதில் கண்களுங் குழிவிழுந்து முற்கூறிய குணங்களு மேலிடில் அசாத்தியம்.

## 36-வது தண்டகவாதரோகம்.

இது, எண்ணெய்வஸ்து மந்தவஸ்து சீதவீரியவஸ்து தயிர் அதிக லவணம் பகல்நித்திரை பதினுலுவேகத்தை மறித்தல் ஆகிய இவை

களினுல்பிறந்து சப்ததாதுக்களிலும் வியாபித்து அவைகளைக் கலைத்துவிட்டு ஆமாசயஸ்தானத்தை அநுசரித்துச் சிலேஷ்மபித்தங்களைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டு அவயவங்களின் செயலைமாற்றிவிடும். இதனல் ரசாதிதாதுக்களில்மரத்தல் சீதளம் உள்ளெரிச்சல் சரீரங்கனத்தல் ஞாபகமறதி பிரமை சுழலல்போலிருத்தல் இளைப்பு அதிகவேதனை நீர்க்கட்டு என்னும் இக்குணங்களோடு தேகமானது தண்டத்தைப்போல் விழுந்து அசைதலும் நீட்டல் முடக்கலும் எழுதலும் இல்லாதிருக்கும். இது தேகத்தை தண்டத்தைப்போல் நீட்டிவிடுதலால் தண்டகவாதம் எனப் பேர்பெற்றது.

## 37-வது தனுஸ்தம்பவாதரோகம்.

இது, சிலேஷ்ம மதுரவஸ்து மந்தவஸ்து சஞ்சாரம் இன்மை சீதளச்சேர்க்கை இவைகளினுல் பிறந்து சப்ததாதுக்களிலும் வியாபித்து உள்ளிலேனும் வெளியிலேனும் முன்புவியாபித்ததுபோலவே அதிகரித்து சரீரத்தை முன்புறமாவது பின்புறமாவது வில்லைப் போல் வளைக்கும்; அப்போது தேகத்தில் கனத்தலும் மரத்தலும் நோவும் கண்டு பின்பு ஒருசாமம்பொறுத்து அதிகவேதனையும் இளைப்பும் உண்டாகும். இது சரீரத்தை வில்லைப்போல் வளைப்பதால் தனுஸ்தம்பவாதம் எனப்பேர்பெற்றது. இதனை முன்னிசுவு பின்னிசுவு எனவுஞ் சொல்வர்.

## 38-வது ஆக்ஷேபகவாதரோகம்.

இது, சீதளஞ்சேர்ந்தகாலத்தில் மந்தசீதவீரியவஸ்துவைப்புசித்தல் கடினமான வில்லைவளைத்தல் யானையேற்றம் இவைகளினுல் பிறந்து இரண்டு பிட்டம் அக்குள் தோள் உள்ளங்கை முன்கைஆகிய இவ்விடங்களிலிருக்கின்ற வாதகபரத்த நரம்புகளில் வியாபித்து தேகத்தை முன்னும் பின்னும் உதைத்துக்கொள்ளச்செய்யும்; அப்போது கையை அசைத்தாலும் ஒன்றையெடுத்தாலும் நீட்டினுலும் முடக்கினுலும் அதிகநோவு சர்வாங்கத்திலும் வாளால் அறுத்தல் போலிருத்தல் நடுக்கல் பிரமை என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதுதேகத்தின்தொழிலைத்தடுத்தலால் ஆக்ஷேபகவாதரோகம் எனப் பேர்பெற்றது.

## 39-வது பாகியாயாமவாதரோகம்.

இது, அதிகசீதளவஸ்து மந்தவஸ்து சலபதார்த்தம் அசீரண போஜனம் விரோதரசம் சஞ்சாரம் இன்மை ஆகிய இவைகளினால் பிறந்து சரீரத்திற்கு வெளிப்புறத்தில் இருக்கின்ற ரத்தநரம்பு சன்ன நரம்பு வாதநரம்பு சிலேஷ்மநரம்பு இவைகளின் மத்தியஸ்தானத் திலும் ஆமாசயஸ்தானத்திலும் வியாபித்துக்கொண்டு சரீரம் முற் றும் இருக்கின்ற சகல அவயவங்களுக்கும் நீட்டி முடக்கும்போது மரத்தல் குத்தல் சீதளம் கனத்தல் உள்ளில்வாளால் அறுத்தல் போலும் திருகுவதுபோலும் இருத்தல் இடைவிடாத குடைச்சல் முதலிய துர்க்குணங்களைச்செய்யும். இதனால் தேகமும் சிரசும் பின்புறமாகவளைதல் மார்புஉயர்தல் கழுத்துத்திருகல் முகத்திலும் பல்லிலும் நிறமாறுதல் மலமூத்திரக்கட்டு மரத்தல் தாழ்வாய்ப்பிடித் தல் நோவு கம்பியவார்த்தை நகைத்தல் வியர்வை எரிச்சல் என்னு மிக்குணங்களுண்டாகும். இவ்வாயுவு மாதர்களுக்குப் பிரசவகாலத் திலும் பிரசவித்த தற்காலத்திலுங்காணும்; கண்டால் அசாத்தியம், இது சரீரத்தின் வெளிநரம்புகளில் சஞ்சரிப்பதால் பாகியாயாமவாத ரோகம் எனப்பேர்பெற்றது. இது அடிக்கடி வேகத்துடன் காணு மாகில் தநுர்வாதம் என்றும் சொல்லப்படும்.

ஆயாமம் என்பது சஞ்சரித்தல்.

## 40-வது அந்தராயாமவாதரோகம்.

இது, முற்கூறிய பாகியாயாமவாதத்தைப் பிறப்பித்தவஸ்துக் களை நாள்தோறுமதிகமாக அநுசரித்தலினால்பிறந்து முன்போலவே சரீரத்தின் உட்புறத்து நரம்புகளில் சேர்ந்துகொள்ளும்; அப்போது உட்புறத்தில் ஒருசத்தம் எழும்புவதும்அன்றிக் குத்தல் சீதளம் மல மூத்திரபந்தம் பிரமை வியர்வை நிலைக்கண்படல் கொட்டாவி பற்க டித்தல் விலாஎலும்புகளில்நோவு பேச்சையும் முதுகையும் சிரசை யும் இழுத்துப்பிடித்தது போலிருத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது தேகத்தின் உட்புற நரம்புகளைப்பற்றியதால் அந்தராயாமவாதம் எனப் பேர்பெற்றது. அந்தரம் என்பது உள்; இதுவே ஒருவேளை சரீரத்தை வில்லைப்போல் இழுத்து இழுத்து வளைப்பதும் அப்படியே சற்றுநேரம் நிமிரவொட்டாமல் ஸ்தம்பிக்கச் செய்துபின்பு விடுவிப்பதுமாயிருக்கும். இதனால் இமையாட்டா

திருத்தல் தாழ்வாய்க்கட்டைபிடிப்பு விலாஎலும்புச்சந்துக்களில் தளர்ச்சி வாயில் கோழையுடன் நீர்சுரத்தல் வாந்தி பகலில் சுரம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இந்தக்காரணத்தால் இது ஆகருஷணத்தம்பனவாதரோகம் எனப்பேர்பெறும்.

ஆகருஷணம் என்பது இழுத்தல்.

## 41-வது சந்நியாசவாதரோகம்.

இது, தேகத்தில் மகாசீதளச்சேர்க்கையினாலும் சீதளவஸ்துக்களைத் தினம்புசித்தலினாலும் சதாசீதளஸ்தானத்தில்நடப்பதினாலும் பிறந்து சப்ததாதுக்களிலும் சகலகீல்களிலும் அநுசரித்துச்சரீர வியாபாரத்தை நீக்கிச் சர்வாங்கத்திலும் பரவும்; அப்போது அவைகளுக்கு அசையக்கூடாமை தேகம்மரத்துக் கட்டுப்பட்டதுபோல் அசைவற்றுக் கிடக்குதல் சர்வாங்கநோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும். ஒருவேளை நோவில்லாதிருக்கில் நடுக்கலாவது உண்டாகும். இது தேகவியாபாரத்திற்குப் பலவீனத்தைச்செய்தலால் சந்நியாசவாதரோகம் எனப்பேர்பெற்றது.

## 42-வது அபிநியாசவாதரோகம்.

இது சிலேஷ்மபித்தவஸ்து புராதனம் அகாலபோஜனம் பதினாலுவேகத்தைமறித்தல் அதிசுரவேகமாகிய இவைகளினால் பிறந்து அதிகரித்து பித்தசிலேஷ்மங்களையும் தன்னைப்போலவே சமமாக அதிகரிக்கச்செய்து உபத்திரவத்தைப்பிறப்பிக்கும்; அப்போது பிராணவாயுவும் அபானவாயுவும் அதிதோஷங்களோடுகூடி இருதயத்தில்நிற்கும். இதனால் மனம்வாக்குக்காயங்களின் தொழில்கள் ஒழிவதும்அன்றிச் சுரத்தின் ஆரம்பத்திலாவது அந்தத்திலாவது காதடியில்வீக்கமும் உண்டாகும்.

## 43-வது ஆட்டியவாதரோகம்.

இது, அதிக இனிப்புவஸ்து எண்ணெய்வஸ்து மச்சம் மாமிசம் மந்தரசம் தயிர் பால் இவைகளை மிகவும்புசித்து எக்காலத்திலும் நடையும்இன்றிப் பகல்நித்திரையும் செய்வதினால் பிறந்து சப்தாதுக்களில் இருக்கின்ற வாதமார்க்கங்களையும் சிலேஷ்மமார்க்கங்களையும் அடைத்து சிலேஷ்மத்தோடு கூடிக்கொண்டு உபத்திரவத்தைச்

செய்யும்; அப்போது தேகத்தில் மரத்தல் கனத்தல் நோவு உறக்கம் இளைத்தல் விரல் அழுந்தும்படியான வீக்கம் சரீரத்தைக் கட்டிப் போட்டதுபோல் இருத்தல் புரளல் மலமூத்திரச்சிக்கல் பிரமை தாழ்வாய்நோவு என்னு மிக்குணங்களுண்டாகும். இது சிலேஷ்மத்துடன் கூடியதால் ஆட்டியவாதம் எனப்பேர்பெற்றது. ஆட்டியம் என்பது கூடல். இது சிலேஷ்மத்துடன் கூடும்போது தேகத்தில் வியர்வை பிறக்காதிருக்கில் சாத்தியம்; பிறந்தால் அசாத்தியம்.

## 44-வது விஸ்வபித்வாதரோகம்.

இது, தண்டாயுதத்தைச் சுழற்றல் கல்முதலியவைகளை விசையாக விட்டெறிதல் வில்வளைத்தல்முதலிய செய்கைகளினால் பிறந்து, உள்ளங்கையிலும் விரல்களிலுமிருக்கின்ற வாதசிலேஷ்ம ரத்தநரம்புகளை அநுசரிக்கும்; அப்போது கைகள் அசைக்கவும் முடக்கவும் நீட்டவும் கூடாமையாகக் கட்டுப்பட்டதுபோல் இருத்தலும் தேகத்தில் மரத்தலும் உண்டாகும்.

விஸ்வம் என்பது சமஸ்தம்; பித் என்பது பேதித்தல்.

## 45-வது சுவாலிதவாதரோகம்.

இது, வாதவஸ்து அதிசீதளசலபானம் சேற்றுநீர் உபவாசம் காந்தியஅன்னம் மிகுந்தசையோகம் கடும்வெய்யில் தபசாயாசம் சதாவேலை இவைகளினால் பிறந்து, சடாராக்கினிச்சுவாலையால் அதிகரித்து, வயிறுமுற்றிலும் எரிச்சலைப்பிறப்பிக்கும். இதனால் சரீர எரிச்சல் மேனில் அறியக்கூடாத காங்கை வாயுலரல் சுழலல் பொறுத்துப் பொறுத்துக் குத்தல் பித்தாதிக்கம் என்னும் இக்குணங்களுண்டாகும். இது, உடனே அசாத்தியம்.

சுவாலிதம் என்பது மிகுந்த எரிச்சலை யுண்டாக்குவது.

## 46-வது அவபாகுகவாதரோகம்.

இது, சிலேஷ்மவஸ்து மதுரவஸ்து மந்தசீதளவஸ்து இவைகளைப் புசித்தலாலும் சற்றேனும் சஞ்சாரம் இன்மையாலும் பனிக்காற்றுள்ள இடத்தில் சதா ஸ்திரீபோகஞ் செய்தலாலும் பிறந்து, தோள்களிலிருக்கும் ரத்தநரம்பை அநுசரித்து அவைகளை மெலியச் செய்யும்; அப்போது கைகளில் சூம்பலும் மரத்தலும் குத்தலும்

உண்டாகும். இதனைச் சிலர் பாகுதோஷம் எனச்சொல்வர். இது கைகளைச் சூம்பச்செய்தலால் அவபாகுகவாதரோகம் எனப் பேர் பெற்றது. பாகு என்பது கை.

## 47-வது அநாயாசகவாதரோகம்.

இது, வேகமானவோட்டம் மலசலமுதலிய பதினாலுவேகத்தை அடக்கிவிடுதல் சீதளவஸ்து க்ஷயபோசனம் இவைகளினால் பிறந்து சகலதாதுக்களிலும் வியாபிக்கும்; அப்போது, தேகத்தில் அதிக வேதனை மரத்தல் குத்தல் கனத்தல் நானாவிதவருத்தம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

அநா என்பது பிராணன்; ஆயாசம் என்பது வருத்தம்.

## 48-வது அவுஷ்மாபகவாதரோகம்.

இது, சீதவீரியவஸ்து உஷ்ணவீரியவஸ்து லவணவீரியவஸ்து மலபந்தவஸ்து கிழங்குவஸ்து அகாலபோஜனம் விரோதபோஜனம் அசீரணபோஜனம் கோபம் துக்கம் ஆகிய இவைகளினாலும் சடராக்கினி மிகுதியினாலும் பிறந்து சரீரத்தின் மத்தியில்தங்கிப் பித்தத்துடன் கூடி அந்தச் சடராக்கினியின் உஷ்ணத்தைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டு உபத்திரவத்தைச்செய்து சிரசிலும் கபாலத்திலுஞ்சஞ்சரிக்கும்; அப்போது நடுநெற்றியிலும் மார்பிலும் எரிச்சல் தலையிலும் முதுகிலும் நோவு நடுக்கல் வாந்தி வியர்வை பிரமை ஒருவேளைகண்டத்திலும் நெற்றியிலும் நெறியிலும் புருவத்திலும்விடாத வேதனை; இதனால், பொறுத்துப்பொறுத்துக் கூவுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது உஷ்ணத்தை வரவழைத்துக்கொண்டமையால் அவுஷ்மாபகவாதம் எனப் பேர்பெற்றது. இது ஒருவருஷத்திற்குள் அசாத்தியம், இதற்குமேல் சாத்தியம்.

## 49-வது *ஊர்த்துவாம்மிசசரவாதரோகம்.

இது, முற்கூறிய அவபாகுகவாதத்தைப் பிறப்பித்த வஸ்துக்களினால் பிறந்து தோளிலிருக்கின்ற சப்ததாதுக்களையு மநுசரித்துப் பாம்பைப்போல் திரியும்; அப்போது தோளில் மரத்தல் நோவு கனத்தல் வரவரத்துர்ப்பலம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

*ஊர்த்துவம் என்பது மேல், அம்மிசம் என்பது தோள், சரம் என்பது ஓடல்.

## 50-வது ஆயாசாவர்த்தவாதரோகம்.

இது, பிரமாணந்தப்பி உண்ணுகின்ற பித்தகபவஸ்துக்களினாலும் பலவித அன்னத்தினாலும் பிறந்து பித்தத்தோடுகூடிச் சப்த தாதுவிலும் அநுசரித்து ஆயாசத்தைப் பிறப்பித்து வேதனையைச் செய்யும்; அப்போது சர்வாங்கநோவும் குத்தலும் பிரமையும் உண்டாகும். இது ஆயாசத்தை உண்டாக்கிச் சுழலுவதால் ஆயாசாவர்த்தவாதம் எனப் பேர்பெற்றது.

## 51-வது அர்த்திதவாதரோகம்.

இது, சைத்தியவஸ்துக்களைப் புசித்தல் வெகுநேரம் உரத்துப் பேசுதல் தலைமூட்டைஎடுத்தல் மிகவும் நகைத்தல் பயப்படல் கழுத்தைச் சாய்த்துத்தும்மல் வளையாவில்லைவளைத்தல் திண்டுதிவாஷியிற் படுத்துறங்கல் பாக்குமுதலிய கடினவஸ்துவைக் கடித்தல் ஆகிய இவைகளினால் பிறந்து பாதிமுகத்தில் சஞ்சரிக்கும்; அப்போது அவ்விடத்தில் நோவும் குத்தலும் அதிரலும் மரத்தலும் கனத்தலும் உண்டாவதன்றியும் கண்டம் நெறி நெற்றி நாசி செவி புருவம் சிரசு ஆகிய இவ்விடங்களில் நோவு தலையில் நடுக்கலுடன் வேதனை கம்மலுடன் குளறியவார்த்தை பேச்சுத்தவறுண்டு வருதல் நாவுமரத்தலுடன் உள்ளில் சுருங்கல் ஒருகண் மூடல் ஒருகண் விழித்தல் அக்கண்களில் நீர்வடிதல் முகமும் நகைப்பும் பார்வையும் கோணுதல் தந்தங்கள் அடித்துக்கொள்ளுதல் அற்பநகைப்பு சிறியதும்மல் காது கேளாமை வாசனுபங்கம் அறிவுநீங்குதல் நித்திரை அதிகரித்தல் முதுகந்தண்டெலும்பிலும் பாதிஉடம்பிலும்நோவு உமிழ்நீரானது விசையுடன் தூரத்தில் ஒழுங்காகவிழாமல் சமீபத்தில் ஒருக்களித்து விழுகுதல் பயம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது பாதி முகத்தை விகாரப்படுத்தலால் அர்த்திதவாதரோகம் எனப்பேர்பெற்றது. இது மூன்றுமாதத்திற்கு மேல் செய்கின்ற சிகிச்சைகளினால் சாத்தியமாகும். ஒருவருஷத்திற்கு மேற்பட்டால் அசாத்தியமாகும்.

## 52 வது அனுஸ்தம்பவாதரோகம்.

இது, சிலேஷ்மமந்தபதார்த்தம் கிழங்குகள் கீரைக்கட்டை முதலிய வேர்கள் சீதளசலம் அவ்விதக்காற்று பகல்நித்திரை ஆகிய

இவைகளினால் பிறந்து வாயினுடைய இரண்டுதோளின் மூலங்களிலும் காதின் அடிகளிலும் அநுசரிக்கும்; அப்போது தாள்கள் மரத்து இறுகின துபோலிருத்தல் நாவு உள்ளில் சுருங்கிக்கொள்ளுதல் முகத்தின்தொழில் அடங்குதல் சீதளம் இவ்வாயுவு அதிகரிக்கில் சிலேஷ்ம குணம் மேலிடுதல் என்னுமிக்குணங்கள் உண்டாகும்.

அனு என்பது தாடை.

## 53-வது உக்கிராக்கிரகவாதரோகம்.

இது, தயிர் பால் இலைக்கறி துவரை கருணைக்கிழங்கு மச்ச மாமிசம் அகாலபோஜனம் பகல்நித்திரை சீதள இடத்தில் சீதளப் பாயலில் படுக்குதல் பதினாலுவேகத்தை மறித்தல் மிகுசையோகம் இவைகளினால் பிறந்து சிரசு கண்டம் மார்பு கீழ்வயிறு திரிகஸ்தானம் மர்மஸ்தானம் ஆகிய இவ்விடங்களில் சஞ்சரிக்கும்; அப்போது தேகத்தில் நோவு இளைத்தல் மரத்தல் கனத்தல் எரிச்சல் தலையிலும் மர்மஸ்தானங்களிலும் குத்தல் குடைச்சல் இவ்விடந் தவிர்ந்த மற்றைய இடங்களில் நோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது அந்தத்தில்உக்கிரத்தைச்செய்தலால் உக்கிராக்கிரகவாதரோகம் எனப்பேர்பெற்றது. இது,முன்சொன்ன துர்க்குணங்களுடன் பித்த சிலேஷ்மங்களில் தொந்தப்பட்டு அதனதன் குணங்களைப் பிறப்பித்துச் சகிக்கக்கூடாத எரிச்சலை உண்டாக்கிக்கொண்டு நெடுநாள் நீங்காதிருக்குமாயின் அசாத்தியம்; இதனைச் சிலநூலில் ஐந்து வருஷத்திற்குமேல் அசாத்தியம் எனச் சொல்லப்படுகின்றன.

## 54-வது விஸ்மாரியகவாதரோகம்.

இது, விரோதரசம் சீதவீரியவஸ்து மிகுஉஷ்ணவஸ்து பித்த வஸ்து லவணவஸ்து பலவிதவஸ்து உலர்ந்தபதார்த்தம் ஆகிய இவைகளினால்பிறந்து சரீரத்தின்மத்தியகண்டத்தை அநுசரித்து அவ்விடத்துச் சமானவாயுவைப் பித்தத்துடன் சேர்த்துவிட்டுத் தான் மாத்திரம் நாபிக்குமேல் நின்றுகொண்டு உபத்திரவத்தைச்செய்யும்; அப்போததிகமறதி மார்பிலும் சிரசிலும் எரிச்சலுடன்நோவு நெற்றி நெறி காது சிரசு முதுகு விலா இவ்விடங்களில் மரத்தல் கனத்தல் வியர்வை தேகம் இளைத்தல் தாகம் தலைசுழலல் இளைப்பு புத்தி தெளிவின்மை எத்தொழிலிலும் மனது செல்லாமை என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதுபசியென்றும் தாகமென்றும் இன்னவித

உபத்திரவமென்றும் தெரியவொட்டாத மறதியை உண்டாக்க லால் விஸ்மாரியகவாதரோகம் எனப் பேர்பெற்றது.

## 55-வது களாவர்த்தவாதரோகம்.

இது, அன்னபானுதிகளை அருந்துங்காலத்தில் தாள்விரியும்படி யாக வாயை மிகவும் திறத்தலினுலும் சீதளவஸ்துவினுலும் அசீரண போஜனத்தினுலும் பிறந்து களத்தின்நரம்புகளை அநுசரிக்கும்; அப் போது கழுத்தில்நோவு கனத்தல் மரத்தல் அவ்விடத்து நரம்புகள் விருத்துக்கொள்ளல் சகிக்கக்கூடாத வேதனை என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது கழுத்தின் நரம்புகளில் சுழலலால் களாவர்த்த வாதம் எனப் பேர்பெற்றது.

## 56-வது பிரமோன்மந்தவாதரோகம்.

இது, குதிரைமுதலிய வாகனங்களில் ஏறுவதால் வந்த காங்கை யினுலும் பித்தவஸ்துக்களினுலும் சரீரத்தைஉலர்த்துகின்ற பதார்த் தங்களினுலும் பிறந்து பித்தத்துடன் கூடிக்கொண்டு உபத்திரவத் தைச்செய்யும்; அப்போது கிழவர்களுக்குண்டாகுங்குறிகளைப்போல் கண்களில் இருட்கம்மல் மயக்கத்துடன் தடுமாறி விழுதல் உடனே தெளிந்தெழுந்திருக்குதல் சரீரஎரிச்சலென்னு மிக்குணங்கள் உண் டாகும். இது பித்தத்துடன்கூடி நேத்திரத்திற்கு மயக்கத்தையும் நடைக்கு மந்தத்துவத்தையும் உண்டாக்கலால் பிரமோன்மந்தவாத ரோகம் எனப் பேர்பெற்றது.

## 57-வது அதிதாபகவாதரோகம்.

இது, சீதவீரியமந்தபதார்த்தம் கிழங்குவகை தயிர்பால் மாமிச ரசம் வாதவஸ்து பித்தவஸ்து சிலேஷ்மவஸ்து அசீரணபோஜனம் விரோதபோஜனம் போஜனத்தின்மேல் போஜனம் ஆகிய இவை களினுலும் சதா சீதளஸ்தானத்தில் நடப்பதினுலும் சுராந்தவிஷம காலத்தில் நின்றும் அல்லது பித்தரோக முதிர்ச்சிகாலத்தில் நின்றும் உதிரத்தைச்சொரிகின்ற ரத்தபித்தரோகத்தில்நின்றும் பிறந்து சர் வாங்கத்தையும் அநுசரித்துத்தபிக்கப்பண்ணும்; அப்போது தேகத் தில் பதறல் மரத்தல் விழித்தபடியேயிருத்தல் தலைசுழலல் கடைக் கண் துடித்தல் கொட்டாவி மிகுநித்திரை இன்னவிதவேதனை என்று

சொல்லக்கூடாமை ஆயாசம் தலைமரத்தல் கையுதறல் விரல்முடங்கு தல் இரைச்சலில்லாத பேதி ஒருவேளை அதிகபேதி மூத்திரம்பெருகுதல் வாந்தி வயிறுப்பல் ஞாபகமறதி என்னுமிக்குணங்கள் உண்டாகும். இது தேகத்தைப் பலவிதத்தினாலும் தபிக்கப்பண்ணலால் அதிதாபக வாதரோகம் எனப்பேர்பெற்றது. இதில் சொல்லிய துர்க்குணங்களெல்லாங் கண்டாலும் அல்லது சிலதுர்க்குணங்கள் மாத்திரங் கண்டாலும் கண்டமூன்றுநாளில் மரணம். அந்நாள்தப்பில் சாத்தியமாகும்.

## 58-வது ஆசியாக்ஷேபவாதரோகம்.

இது, சிலேஷ்மமந்த பதார்த்தம் கிழங்குவகைகள் இலைக்கறி கீரைவேர் கனிவகைபித்தவஸ்துவிலும் எண்ணெய்வஸ்து தயிர் மச்சமாமிசம் இவைகளினால் பிறந்து காதிலும் நாசியிலும் தாடையிலும் அநுசரித்து வாயின் நடுவிலும் அதற்குக் கீழிலும் மேலிலும் சஞ்சரித்துக்கொண்டே இருக்கும்; அப்போது நாக்குஸ்தம்பித்தல் தழுதழுத்தவார்த்தை பல்லைக்கடித்தல் சிரசிலும்முகத்திலும்பாதத்திலும் துடித்தல் பிரமை கழுத்தில் நோவுடன் நரம்புகள் விருத்துக் கொள்ளுதல் ரத்தங்கக்கல் பார்வைசிதறல் மறதி தேகம்மரத்தல் நாசியில் நோவு பீநசம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது அதிகரித்துச் சர்வாங்கத்திலும் நடுக்கலை உண்டாக்கில் அசாத்தியம். ஆசியம் என்பது வாய்.

## 59-வது தொனிவிச்சின்னவாதரோகம்.

இது, சிலேஷ்மவஸ்து வாதவஸ்து சீதவீரியவஸ்து மந்தபதார்த்தம் அசீரணபோஜனம் பிண்ணாக்கு பயம் அதிகலங்கனம் இவைகளினால் பிறந்து அடிநாவை அநுசரித்துக் கண்டத்தில் இருக்கும் சிலேஷ்மத்தில் கூடிக்கொண்டு கண்டத்தொனியைத்துண்டிக்கும்படி செய்யும். இது அதிகரித்தால் நாவை அசைக்கக்கூடாத குணமும் உண்டாகும். தொனி என்பது சத்தம்; விச்சின்னம் என்பது துண்டித்தல்.

## 60-வது திர்க்குபிராந்திவாதரோகம்.

இது, உலர்ந்தபதார்த்தம் லவணகாரவஸ்து மந்த மச்சங்கள் சிலேஷ்மபித்தவஸ்து பிண்ணாக்கு ஆகிய இவைகளினால் பிறந்து

விழிகளின் மூலத்தில் அநுசரித்து அவ்விடத்தில் இருக்கின்ற சிலேஷ்மத்திற்கூடிக்கொண்டு உபத்திரவத்தைச்செய்யும்; அப்போது கண்களில் நீர்க்கம்மல் கலங்கல் நோவு பிரமை எரிச்சல் விழிக்கும்போது மயக்கம் என்னும் இக்குணங்களுண்டாகும். திர்க்கு என்பது கண்; பிராந்தி என்பது மயக்கம். இதனை நேத்திரஉபத்திரவவாதம் கண்மயக்குவாதம் எனவுங் கூறுவர்.

## 61-வது தொநோபகாதவாதரோகம்.

இது, விரோதரசம் மலபந்தவஸ்து மந்தவஸ்து சீதவீரியவஸ்து எண்ணெய்வஸ்து அதிகலங்கனம் வேகநடை மிகுந்த வார்த்தை துக்கம் ஆகிய இவைகளினால்பிறந்து பாதிவாயிலும் நாசியின் மூலத்திலும் அநுசரித்து அவ்விடத்துச் சிலேஷ்மத்தில் கூடிக்கொண்டு தொனியைக்கெடுக்கும்; அப்போது கம்மியவார்த்தையும் மூச்சுத்திணறலும் உண்டாகும். இதுகீச்சுக்குரல் உள்ளவர்பேசும் வார்த்தையைப்போல் பேச்சைக் கம்மும்படிக்குச்செய்வதால் தொநோபகாத வாதம் எனப் பேர்பெற்றது.

## 62-வது திர்க்குஸ்தம்பவாதரோகம்.

இது, அதிக் போஜனம் அகாலபோஜனம் பகல்நித்திரை மந்த சீதளவஸ்து மாப்பண்டம் கிழங்குவகை மச்சமாமிசம் வெகுநடை ஆகிய இவைகளினால் பிறந்து விழிகளின் மூலத்தில் பித்தத்துடன் சேர்ந்துகொண்டு அதிகரிக்கும். அப்போது நெற்றியிலும் நெறியிலும் முகத்திலும் மரத்தலுண்டாகிப் பின்பு கண்ணிலும் புருவத்திலும் இமையிலும் கனத்தல் மரத்தல் அக்கண்விழியைக் கையால் தடவிப் பார்க்கில் ஒட்டாங்கிளிஞ்சில்போல் தோற்றுதல் நீர்க்கம்முதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது கண்களை ஸ்தம்பிக்கச்செய்வதால், திர்க்குஸ்தம்பவாதம் எனப்பேர்பெற்றது. இதுவே நேத்திரஸ்தம்பவாதமாம்.

## 63-வது விவுர்தாசியவாதரோகம்.

இது, சிலேஷ்மவஸ்து சீதவீரியவஸ்து போஜனத்தின்மேல் போஜனம் பகல்நித்திரை மிகுந்தநடை இவைகளினால் பிறந்து

வாயின் நரம்புகளை அநுசரித்து நிற்கும். அப்போது வாயானது மூடாமல் திறந்தபடியே இருக்கும். விவ்ர்தம் என்பது திறத்தல்.

## 64-வது சம்விருதாசியவாதரோகம்.

இது, மச்சமாமிசம் மந்தரசம் அகாலபோஜனம் தயிர் அதிக லவணம் சதாநித்திரை வெகுநடை ஆகிய இவைகளினால் பிறந்து விவ்ர்தாசியவாதம்போல் நரம்புகளில் அநுசரித்துக் கபத்தில் கூடித் துன்பை விளைவிக்கும். இதனால் மூடினவாயைத் திறக்கக்கூடாமலும் அவ்வாயில் மரத்தலும் தடித்தலும் நோவும் உண்டாகும். இது வாயை மிகவும் மூடும்படி செய்தலால் சம்விருதாசியவாதம் எனப் பேர்பெற்றது.

சம் மிருதி: விருதம் மூடல்.

## 65-வது புருவாடோபகவாதரோகம்.

இது, மந்தவஸ்து மலபந்தவஸ்து சிலேஷ்மவஸ்து கிழங்குவகை அகாலபோஜனம் ஈரவஸ்திரத்தைத் தலையிற் கட்டிக்கொள்ளுதல் மிகவும் சீதள இடத்தில் சஞ்சரிக்குதல் பகல்நித்திரை ஆகிய இவைகளினால் பிறந்து நெற்றியிலும் புருவங்களிலும் கண் இமைகளிலும் அநுசரித்து நிற்கும். அப்போது புருவங்களில் ஓயாது துடித்தல் உண்டாகும். இது, புருவத்தை அடிக்கடித் துடிக்கும்படிச் செய்தலால் புருவாடோபகவாதம் எனப் பேர்பெற்றது.

அடோபகம் என்பது துடித்தல்.

## 66-வது பாதிரியவாதரோகம்.

இது, மச்சமாமிசத்தையும் மந்தவஸ்துவையும் பிரமாணந்தப்பி மிகவும் புசித்தலினால் பிறந்து காதின் உள்ளிலும் அடியிலும் இருக்கின்ற சிலேஷ்மத்தோடு கூடி நாதநரம்புகளை அநுசரித்துச் சத்த மார்க்கத்தை அடைத்துச் செவிடாக்கும். அப்போது பெருங்கூச்ச லிட்டாலும் காதில் சத்தங் கேளாமை சமுத்திரகோஷம்போல் இரைச்சல் சலம்வடிதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். பாதிரியம் என்பது கடினத்திற்கும் செவிட்டிற்கும் பேர்.

இதனைச் செவிடுவாதம் எனச்சொல்வர்.

## 67-வது கர்ன்னசூலைவாதரோகம்.

இது, அதிக சீதள தடாகத்தில் மூழ்கி மயிரை யுலர்த்தாமல் முடிந்துகொள்ளல் குளிர்காற்றில் அடிபடல் உடனே சிலேஷ்ம வஸ்துக்களைப்புசித்தல் ஆகிய இவைகளினால் பிறந்து காதுகளில் சேர்ந்துகொள்ளும். அப்போது செவிகளின் மூலத்தில் குத்தலுடன் நோவு சிரசு பிடரி நெற்றி நெறி கண் புருவம் நாசி தந்தங்களின்வேர் தாடை கண்டம் ஆகிய இவ்விடங்களில் வாளால் அறுப்பதுபோ லிருத்தல் தேககனதி குடைச்சல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

கர்ன்னம் என்பது காது.

## 68-வது அவபேதகவாதரோகம்.

இது, மதுரான்னம் போஜனத்தின்மேல் போஜனம் உலர்ந்த பதார்த்தம் பகல்நித்திரை ஆகிய இவைகளினால் பிறந்து சிலேஷ்மத் தினால் மறிபட்டுக் கண்ணிலும் புருவத்திலும் நெற்றியிலும் வியா பிக்கும். அப்போது ஒருமத்தியானமாவது அல்லது ஒருநாள் முழு வதுமாவது மூன்றுநாள் இராவும் பகலுமாவது நெற்றி பிளந்து போவது போல் சகிக்கக்கூடாத வேதனை உண்டாகும்.

அவபேதகம் என்பது பிளக்குதல்.

## 69-வது ஊர்த்துவமுகவாதரோகம்.

இது, மலபந்தவஸ்து சீதளவிரோத உண்டி பகல்நித்திரை சதா படுக்கை அல்லது உட்கார்ந்திருக்குதல் மலசலம் அடக்கல் இவை களினால்பிறந்து மேல்வயிற்றையும் மார்பையும்பற்றி அபான சமான வாயுக்களுடன் கூடி விஷமரூபமாக அதிகரித்து மிகுவேகத்துடன் மேல் எழும்பிக்கொண்டே இருக்கும். அப்போது எலும்புகளெல் லாம் நொறுங்கியதுபோல் வேதனை குடல் விலா கண் முகம் இவை களில் அதிக நோவு வயிற்றில் உப்பிசம் கனத்தல் மரத்தல் தாள்வாய்ப் பிடிப்பு நடுக்கல் அறிவின்மை பிரலாபம் வாயில் நுரை நுரையாகவிழுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 70-வது அதோமுகவாதரோகம்.

இது, அசீரணபோஜனம் மலபந்தசீதளவஸ்து துஷ்டவாகன வேகத்தால் குலுங்கி மெலிதல் பதினுலுவேகத்தை யடக்கி மிதந் தப்பிவிடுதல் இவைகளினுல் பிறந்து, நாபியிலிருக்கும் சமானவாயு வோடும் குதத்திலிருக்கும் அபான வாயுவோடுங் கூடிப் பின்பு பித்தத்தை அநுசரித்து எரிச்சலைப் பிரதான குணமாக வைத்துக் கொண்டு மார்பிலும் வயிற்றிலும் கீழ்வயிற்றிலும் சுவுட்டியிலும் கீழாக இறங்கி இறங்கி வேதனையைச் செய்யும். அப்போது ஒரு பக்கத்துப் பீசத்திலாவது இரண்டிலுமாவது கனத்தலும் நோவும் வீக்கமும் நமைச்சலும் உண்டாகும். அன்றியும் ஆண்குறியின் துவாரம் அடைபட்டுச் சுக்கிலம் மறிபடும் மூத்திரம் பிரயாசை யுடன் துளித்துளியாயிறங்கும்; இவ்வாயுவு குதஸ்தானத்திலும் இறங்கலால் ஆசனத்தில் சுருக்கமும் மலபந்தமு முண்டாகும். இந்த ரோகம் மாதர்கட்குக் காணுங்காலத்தில் முற்கூறிய கிரமமாகவே அல்குலில் சேர்ந்துகொண்டு அத்துவாரங்களைச்சுருக்கி மலசலத் தைப் பந்தித்து மிகுவேதனையைச்செய்யும். இது கீழ் இறங்கலால் அதோமுகவாதம் எனப் பேர்பெற்றது. இதில் சொன்ன துர்க்குணங்கள் வரவர அதிகரிக்கில் அசாத்தியமாம்.

## 71-வது ஆசியக்குவாதவாதரோகம்.

இது, முற்கூறிய ஆசியவாதங்களைப் பிறப்பித்த வஸ்துக்களி னுல் பிறந்து வாயிற் சேர்ந்துகொண்டு உபத்திரவத்தைச் செய்யும். அப்போது வாயில் ஒருவஸ்துவையும் போடக்கூடாமல் ரணம்போல் இருப்பதும் அன்றி நாவில் மேடும் பள்ளமுமாகவிருத்தல் மார்பு நோவு கண்டத்தில் குருகுரு என்னும் ஒருசத்தம் என்னும் இக் குணங்கள் உண்டாகும். இது வாயைக் கொதிக்கும்படிச் செய்தலால் ஆசியக்குவாதவாதம் எனப் பேர்பெற்றது. இதனை ஆசியபாக வாதம் என்றுஞ் சொல்வர்.

## 72-வது சிதிலாவர்த்தவாதரோகம்.

இது, சீதளவஸ்து மந்தவஸ்து வழுவழுத்தவஸ்து மலபந்த வஸ்து உலர்ந்தபதார்த்தம் வெகுநடை கனவுழைப்பு ஆகிய இவை

களினால் பிறந்து கீல்களிலும் வாதநரம்புகளிலும் மற்றநரம்புகளிலும் சேர்ந்துகொண்டு வேதனையைச்செய்யும்; அப்போது அர்த்திதவாத குணங்களும் ஆயாசமும் கொஞ்சம் இரைப்பும் நிலைக்கண்படுதலு முண்டாகும். இது சகலகீல்களையும் கலகலக்கப்பண்ணிச் சுற்றிக் கொண்டிருப்பதால் சிதிலாவர்த்தவாதம்எனப்பேர்பெற்றது. சிதிலம் என்பது தளரல். இவை நிற்க முற்கூறிய மூடவாதரோகாந்தத்தில் துர்ப்பலம் ஞாபகமறதி மூர்ச்சை அம்மூர்ச்சையால் அடிக்கடிமயங்கி விழுதல் விழுந்தாலும் உடனே தெளிதல் கீல்களெல்லாந் தளரல் என்னும் இக்குணங்க ளுண்டாகுமென்றும் அதற்குக் கோரவாத மெனப் பெயரென்றும் அதுவே இந்தச் சிதிலாவர்த்தவாதமென்றும் சக்கரபாணிமுதலிய ஆயுள்வேத பண்டிதர்கள் சொல்லுகிறார்கள்.

## 73-வது சர்வாங்கவாதரோகம்.

இது, அதிசீதளவீரியவஸ்து மலபந்தவஸ்து மந்தவுஷ்ணவஸ்து விரோதஉண்டி அகாலஉண்டி துரிதமாக வருகின்ற மலசலத்தை அடக்கிவிடுதல் அதிகநடை இரவில் அநித்திரை பகல்நித்திரை லங்கனம் பாரமான சுமைசுமந்து வழிநடக்குதல் நித்தியசையோகம் செய்தல் ஆகிய இவைகளினால் பிறந்து சர்வாங்கத்திலும் பரவி மேவில் வேதனையைச்செய்து உள்ளில் கீல்களைத் தளரப்பண்ணி எலும்புகளிலலையடிப்பதுபோல் அடித்துக்கொண்டே இருக்கும். இதனால் ஏப்பம் மிகுவாந்தி வயிற்றுநோவு பேதி பிரமை வாயில் அனல்வீசுதல்போலிருத்தல் விஷமாக்கினி மூர்ச்சை இரைப்பு ஆயாசம் சரீரநோவு அசதியாகக்கிடக்குதல் என்னுமிக்குணங்க ளுண்டாகும். இது சரீரம் முற்றிலும் பரவியதால் சர்வாங்கவாதம் எனப்பேர்பெற்றது. இது ஒருவருஷத்தின்மேல் அசாத்தியம்.

## 74-வது சிரச்சால்லியவாதரோகம்.

இது, நூலிழைந்துநொந்து சலம்பிறந்தஅன்னம் மதுரவஸ்து வழுவழுத்தவஸ்து மந்தவஸ்து சிலேஷ்மவஸ்து சீதளவஸ்து ஆகிய இவைகளினால்பிறந்து சிரசை அநுசரிக்கும்; அப்போது தலைநடுக் கலும் நெறி செவியின்மூலம் கண் இவைகளில் நோவும் உண்டாகும். சிரசு என்பது தலை; சால்லியம் என்பது அசைதல். இதனைச்

சிரக்கம்பவாதம் தலைநடுக்குவாதம் எனவும் சில நூலில் சொல்லப் படுகின்றன.

## 75-வது கராக்ஷேபகவாதரோகம்.

இது, அதிகவாதவஸ்துக்களை மிகவும் புசித்தலினால் பிறந்து சர்வாங்கத்திலும் வியாபித்துப் பின்பு கைகளை அநுசரிக்கும்; அப்போது நிரேதுவாகவே கைகளுக்குச்சுழற்றல் உண்டாவ தன்றியும் அசைதலும் நீட்டமுடக்கக் கூடாமலுமாக இருக்கும். கரம் என்பது கை. இதனை அஸ்தகம்பவாதம் எனச் சிலநூலிற் சொல்லப்படுகின்றன.

## 76-வது அங்கசலனவாதரோகம்.

இது, வாதத்தைப் பிறப்பிக்கின்ற வஸ்துவையும் பதினாறுவது பக்கத்திற்கூறிய வாதகோபவஸ்துவையும் மிகவும் புசித்தலினால் சர்வாங்கத்திலும்பிறந்து வாதநரம்புத்துவாரங்களிலும் கபநரம்புத் துவாரங்களிலும் வியாபித்து உடம்பெங்கும் பரவி வேதனையைச் செய்யும்; அப்போது ஊர்த்துவாங்கத்திலாவது அதோங்கத்தி லாவது நடுக்கல் உண்டாகும். அங்கம் என்பது தேகம்; சலனம் என்பது அசைதல். இவ்வாயுவு, ஒரு அங்கத்தில் இருக்கில் சாத்தியமாம், இரண்டிலும் இருக்கில் அசாத்தியமாம்.

## 77-வது அந்நியேத்துகவாதரோகம்.

இது, கனஉப்புவஸ்து காங்கைவஸ்து உஷ்ண பதார்த்தம் சிலேஷ்ம சீதளபதார்த்தம் இலைக்கறிஆகிய இவைகளினால் பிறந்து, தோள் முதுகு கழுத்து சிரசு விலா இவ்விடங்களில் வேகமாக வியாபித்துப் பித்தத்துடன்கூடி ஒருநாள்விட்டு மறுநாளில் மிகு வேதனையைச் செய்வதா யிருக்கும். இதனா லவ்விடங்களில் மரத்தலும் கனத்தலும் நோவும் உண்டாவதன்றியும் தாகம் வாயில் அனல் வீசுதல்போலிருத்தல் பிரமை சுரம் மூர்ச்சை என்னு மிக்குணங்களும் உண்டாகும். இது, நாளுக்குநாள் அசாத் தியமாம்.

## 78-வது தொனிகத்கதவாதரோகம்.

இது, அதிகசீதளபதார்த்தம் மந்தமதுரபதார்த்தம் சிலேஷ்ம வஸ்து எண்ணெய்வஸ்து விரோதரசம் கந்தமூலவருக்கம் எள்ளு பிண்ணுக்கு ஆகிய இவைகளை விசேஷமாகப் புசிப்பதினால் பிறந்து, தொனோபகாதவாதத்தைப்போல் நாசியிலும் காதுமூலத்திலும் வியாபித்துச் சிலேஷ்மத்துடன் கூடி அதிகரிக்கும். அப்போது நாசியால் பேசுவதுபோலப் பேச்சுண்டாகும். இது தொனியை அடக்கலால்தொனிகத்கதவாதம் எனப்பேர்பெற்றது.

கத்கதம் என்பது அடக்குதல்.

## 79-வது கம்பீரவாதரோகம்.

இது, வாயுவைப்பிறப்பிக்கும் வஸ்துக்களினால்பிறந்து முதல் முதல் ஊர்த்துவாங்கத்திலாவது அதோங்கத்திலாவது சர்வாங்கத்திலுமாவது இருக்கின்ற ரசதாதுவைப்பற்றி ஒவ்வொரு தாதுக்களாகத் தாண்டிக்கொண்டே உள்ளில் ஆழ்ந்து அஸ்திதாதுவிற்கு உள்ளிருக்கும் மச்சைதாதுவை அநுசரித்துத் துன்பைவிளைக்கும்; அப்போது சர்வாங்கவேதனை மரத்தல் கை கால் முடங்குதல் வாந்தி மூர்ச்சை என்னுமிக்குணங்களுண்டாகும். இது மச்சைதாது வரைக்கும் ஆழ்ந்திருப்பதால் கம்பீரவாதம் எனப்பேர்பெற்றது. கம்பீரம் என்பது ஆழம்; ஒருவேளை தோலைமாத்திரம் பற்றிநின்றால் உத்தானவாதம்எனக்கூறப்படும். உத்தானம் என்பது ஆழமல்லாமை. இது சகலவாதரோகங்களைப்பார்க்கிலுங் கொடிது.

## 80-வது பரிஷ்போடவாதரோகம்.

இது, வாதவீரியம் பித்தவீரியம் என்னும் பதார்த்தங்களை மிதமின்றி நாள்தோறும் புசிப்பதினால்பிறந்து பித்தத்துடன்கூடிச் சரீரமுற்றிலும் பாவி பரவியமறுநாளில் கொப்பிளங்களை உண்டாக்கும். இதனால் பாதாதிகேசம்வரைக்கும் சிறிதாகவும் நெருக்கமாகவும் மிகு கொப்பிளங்கள் உண்டாகும்.

பரிஸ்போடம் என்பது மிகுந்த கொப்பிளம்.

ஆக வாதரோகம் 80-ம் முற்றுப்பெற்றன.

---

இவற்றுள், துனி பிரதிதுனி அபிநியாசம் அந்நியேத்துகம்ஆகிய நான்குவாதரோகப் பெயர்க்குப்பொருள் 215, 224, 236 என்னும் பக்கங்களிற் கண்டுகொள்க. இப்பேதங்களையெல்லாம் ஆயுள்வேத பண்டிதர் நிதானிக்கவேண்டும். அன்றியும், பாரத்துவாசர் போஜர் கிருஷ்ணர் ஆத்திரேயர் என்னும் மகாமுனிவர்கள் அருளிய சாஸ்திரங்களும் வாதரோகத்தை 80-விதமாகவே சொல்லப்படுகின்றன.

## சித்தர்மதாந்தரம்.

சிந்தாமணி என்கின்ற நூல் வாதரோகம் 84-விதமெனக்கூறுகின்றது. இவற்றுள் சிரோரோகம் கர்ன்னரோகம் குன்மம் மேகம் சூலை இவைகளைச் சார்ந்ததாக விருக்கின்றவாதம் 21. இவைகளை அவ்வவ்விடங்களிற் சொல்லியிருப்பதினாலும் மற்ற 63-ல், 59. முன் சொன்ன வாதரோகங்களே யாகையாலும் அவையொழிந்த நான்கும் கூறப்படும்.

## 1-வது மூத்திரஉதிரவாதரோகம்.

மூத்திரவாந்தி நெஞ்சுலர்தலுடன் நோவு வீக்கம் நித்திரைப் பங்கம் தேகளிச்சல் வயிற்றுநோவு அதிகவிக்கல் இருமல் அடிவயிற்றில் கனத்தலுடன் நோவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது வச்சிரரூபகவாதரோகம்.

கழுத்துப் பிடரியில் அதிகநோவு விழிகள் அசைவின்மை கொறுக்கை என்கிற ஒருவித ஆண்குறிப்புண் தலைநோவு நடுக்கல் குதிகால் நரம்புகளில் நோவுடன் திமிர் கொட்டாவி சோம்பல் பிரலாபம் மலசலக்குறைவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 3-வது அசுவவாதரோகம்.

குதிரைக்குட்டியின் பாய்ச்சலைப்போல் தேகம் முழுதுங்குலுங் கும்படியாகப்பாய்ந்து மேல்நோக்கிஏறி அவ்வாறே கீழிறங்கி அண்டத்தை வீங்கச்செய்து அவைகளில் தங்கிக் கோசத்தைச்

சுருங்கப்பண்ணி அக்கோசத்திலும் அடிவயிற்றிலும் அளவிடக் கூடாத நோவை உண்டாகும்.

## 4-வது பேய்வாதரோகம்.

கால் கை விரல்கள் வயிறு நெஞ்சுக்குழி கண்டம் மூக்கு ஆகிய இடங்களில் எரிச்சல் நோவு வீக்கம் நிமிரவும் ஒன்றை எடுக்கவும் கூடாமையாக இருத்தல் வாய்கசப்பு மயக்கம் என்னுமிக்குணங்களே உண்டாகும்.

மதாந்தர முற்றிற்று.

---

மேற்சொல்லி வந்தவாதரோகங்களே, தழுதாழைக்குளிநீர் வெந்நீர் முதலிய ஒத்திடம் வாதாரியடைக் கஷாயம் யவ்வகைச்சுரசம் விரேசனகற்கம் உஷ்ணவீரியலேபனம் அஸ்வகெந்திச்சூரணம் மதுஸ்மிகிவெந்தை நறுக்கு மூலரசாயனம் மகோஷதிக்கிருதம் வாதகுடாரி விரோசனம் சாறடைமூலலேகியம் வாதகேசரித்தயிலம் அற்கக்ஷீராதித்தயிலம் வாதாந்தத்தயிலம் வாதநாசத்தயிலம் மெருகுள்ளியெண்ணெய் வச்சிரபீஜத்தயிலம் மயனத்தயிலம் மகாவிஷமுஷ்டித்தயிலம் வாதராக்ஷசமாத்திரை வடவானலரசம் ரசபஸ்மம் தாம்பிரச்செந்தூரம் முதலிய அவுஷதங்களேயும் க்ஷத்திரக்ஷாராக்கினிச் சிகிச்சைகளேயுங் கொண்டு வசப்படுத்தவேண்டும்.

எட்டாவது வாதரோகபடலம் முற்றிற்று.

---

# 9-வது மகாவாதரோகபடலம்.



## மகாவாதரோகபேதம்.

மகாவாதம், 24-விதப்படும். அவையாவன, (பாதஹரிஷவாதம் பாதகண்டகவாதம் களாயகஞ்சவாதம் சம்பூகசிரிஷவாதம் கிருத்திரசிவாதம் ஊருஸ்தம்பவாதம் அபதந்திரகவாதம் பக்ஷகாதவாதம் தண்டகவாதம் ஆக்ஷேபகவாதம் பாகியாயாமவாதம் அந்தராயாமவாதம் விஸ்வபித்வாதம் அவபாருகவாதம் அர்த்திதவாதம் சர்வாங்கவாதம்) அநுசிரம்சவாதம் ஜிக்குவாஸ்தம்பவாதம் விரணுயாமவாதம் சிராக்கிரகவாதம் கஞ்சவாதம் கல்லிவாதம் பங்குவாதம் பாததாகவாதம் என்பனவாம்.

இவைகளுள், பாதஹரிஷவாதம் முதல் சர்வாங்கவாதம் ஈருகிய 16-ம், முற்கூறியபடலத்தில் வாதரோகம் 80, என்னும் தொகையுள் சேர்ந்து 210, 211, 212, 213, 216, 221, 222, 223, 225, 227, 235 என்னும் பக்கங்களில் லக்ஷணபூர்வமாகச் சொல்லப்பட்டு இந்த மகாவாதரோகங்களைப்போலவே மகா அவுஷதங்களை நஷ்டப்படுத்தலாலும், சிகிச்சகருக்கு எளிதில் சாத்தியப்படாமையாலும், ஒருவேளை சாத்தியமானபோதிலும் அந்தரோகியின் உறுப்புகளில் ஏதேனும் ஒரு உறுப்பினைப் பங்கப்படுத்தலாலும், மகாவாதரோகங்கள் எனப்பேர்பெற்றன. இந்தப்பதினுறும் ஒழிந்த, மற்ற எண்வகை மகாவாதரோகங்களையும் இப்படலத்தில், முறையே எடுத்துக்கூறப்படும்.

## 1-வது அநுசிரம்சவாதரோகம்.

இது, வெகுநேரமாக நாக்கைநீட்டிவழித்தல் உலர்ந்தபதார்த்தத்தைப் புசித்தல் கடினவஸ்துக்களைக்கடித்தல் என்னும் இச்செய்கைகளினுல் பிறந்து, தாடையின் பூட்டை அநுசரித்து எந்நேரமும் வாயைத்திறந்துகொண்டு இருக்கும்படிச்செய்யும். அல்லது மூடிக்கொண்டு இருக்கும்படிச்செய்யும்; அப்போது எந்தவஸ்துவையாவது மெல்லுதற்கும் ஒருவார்த்தை பேசுதற்கும் அதிக பிரயாசையாக இருக்கும். சிரம்சம் என்பது தளரல்.

## 2-வது ஜிக்குவாஸ்தம்பவாதரோகம்.

இது, தொனியை எழுப்புகிற நரம்பிற்சேர்ந்துகொண்டு, நாவை ஸ்தம்பிக்கும்படிசெய்யும். இதனால், புசிப்பதற்கும் சலபானஞ்செய்தற்கும் பேசுவதற்கும் கூடாமையாக இருக்கும்.

ஜிக்குவா என்பது நா.

## 3-வது விரணயாமவாதரோகம்.

இது, மர்மஸ்தானங்களில் உண்டாகும். விரணங்களினால்பிறந்து, பாதாதிகேசம் வரைக்கும் அநேக துர்க்குணங்களோடு வியாபிக்கும். இதனால், தாகமும் தேகவெளுப்பும் உண்டாகும். இவ்வாயுவினால் அவயவங்களில் யாதொரு துர்க்குணங்களும் இல்லாதிருக்கில், சாத்தியமாம். இருந்தால், அசாத்தியமாம். விரணம் என்பது ரணம்.

## 4-வது சிராக்கிரகவாதரோகம்.

இது, ரத்தத்தை அநுசரித்து சிரசின் நரம்புகளிற் சேர்ந்துகொண்டு, அவைகளுக்குச் சூட்டையும் அவ்விடத்தில் நோவையும் நீலநிறத்தையும் உண்டாக்கும். இது, அசாத்தியமாம்.

சிரா என்பது நரம்பு.

## 5-வது கஞ்சவாதரோகம்.

இது, வாதப்பிரதான மந்தவீரிய வஸ்துக்களைத் தினந் தினமும் விஸ்தாரம் புசிப்பதினால் பிறந்து, கடிஸ்தானத்தில் நின்றெழும்பி விரைவில் தொடைகளின் நரம்புகளை அநுசரித்து நொண்டியைப் போலவே நடக்கச்செய்யும். கஞ்சம் என்பது நொண்டுதல்.

## 6-வது கல்லிவாதரோகம்.

இது, கிருத்திரசிவாதத்தினாலாவது, விஸ்வபித்வாதத்தினாலாவது சகிக்கக்கூடாத உபத்திரவம் உண்டாகும். இதுவே கல்லிவாதரோகமாம்.

## 7-வது பங்குவாதரோகம்.

இது, இரண்டு தொடைகளின் நரம்புகளை இழுத்துக்கொண்டு முடமாக்கி உபத்திரவத்தைச் செய்யும். பங்கு என்பது முடம்.

## 8-வது பாததாகவாதரோகம்.

இது, பித்த ரத்தத்திற் கூடிக்கொண்டு, பாதத்தில் வியாபித்து எரிச்சலை யுண்டாக்கும். தாகம் என்பது எரிச்சல்.

மகாவாதரோகம் 24-ம் முற்றுப்பெற்றன.

---

## அசாத்தியவாதரோகம்.

எந்தவாதரோகத்திலாவது, அதிகநடுக்கல் வீக்கம் சகிக்கக்கூடாத நோவு சருமம்முற்றிலுந்திமிர் சரீரஞ்சுட்கித்துக்குன்றுதல் என்னும் இக்குணங்கள் இருந்தால், அசாத்தியம். அன்றியும்; வாதரோகம் அபஸ்மாரரோகம் ரத்தவாந்திரோகம் க்ஷயரோகம் குன்மரோகம் மேகரோகம் என்னும் இவ்வாறுவகை ரோகங்கள் அற்பமாகக் கண்டிருந்தாலும், வரவரப்பிரபலப்பட்டு அசாத்தியத்தைத் தருமென்றறிக.

## பித்தரோகபூர்வரூபம்.

இது, தோஷாதிபேதபடலம் 16-வது பக்கத்திற்கூறிய பித்தப் பிரகோபத்தினால், அரோசகம் அன்னத்திவேஷங் கசப்பு புளிப்பான வாந்தி வெள்ளோக்காளம் வாய்நாற்றம் தேகத்தில் நிறக் குறைவு குளிர் சுரம் தபித்தல் பதறல் எரிச்சல் சித்தப்பிரமை நாவுலரல் மயக்கம் மூர்ச்சை தலைசுழலலுடன் கனத்தல் நோவு கண் சிவக்குதல் சுழலல் விழித்தபடி இருக்குதல் அதில்சலம்வடிதல் நடுக்கல் கொட்டாவி விக்கல் பல்லைக்கடித்தல், கூவுதல் சோம்பல் தேகம் கண் நகம் மலம் மூத்திரம் ஆகிய இவைகளில் மஞ்சள் நிற முண்டாயிருத்தல் துர்க்கந்தம், அதிக உஷ்ணத்தினால், சீதளமும் கோழையும் வியர்வையும் சிலேஷ்மமும் மேலிடுதல் அச்சிலேஷ்மத் தால், இனித்தவாந்தி வாயும்நாவும்உமிழ்நீரும்கசப்புபுளிப்புதித்திப் பாக இருத்தல், தீக்ஷ்ணாக்கினி அவ்வக்கினியில் நின்றும் சலம்பிறப்ப தால்,மந்தாக்கினி அசீரணம் மலபந்தம் வயிறுபொருமல் பேதிஇருமல் இரைப்பு கோபம் துக்கம் பயம் ஆசியம்பேசுதல் வெறித்தபார்வை வாயும் சுவாசமும் நாறுதல் திடுக்கிடல் கிலேசம் சருமந்திரைதல் என்னும், இக்குணங்களைப் பித்தரோகமானது தனக்குப் பழைய ரூபமாகப் பெற்றிருக்கின்றது. இக்குணங்கள் சகலபித்த ரோகங் களுக்கும் பொதுவாயிருக்குமென்றறிக.

## பித்தரோகபேதம்.

பித்தரோகமானது, ரத்தபித்தரோகம் ஆதியாக மருந்திடுபித்த ரோகம் ஈறாக 40-விதப்படுகின்றது. அவைகளின் பெயரையும் செய்கைகளையும் முறையே இதனடியிற் சொல்லப்படும்.

## 1-வது ரத்தபித்தரோகம்.

இது, ரத்தவாந்தி வயிறுப்பல் வியர்வை துர்ப்பலம் குளிர் சுரம் சதாசீதளம் கால்கை நேத்திரமிவ்விடங்களில் எரிச்சல், இரைப்பு கோழை கொட்டாவி விக்கல் தலைதிருப்பல் கூவுதல் மந்தாக்கினி அரோசகம் நிறக்குறைவு தேகம் நருக்கித்துவைத்தது போலிருத்தல் வயிறுநோவு நாவுலரல் அருசி அசீரணம் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும். இது உபயாங்கத்திலும் ரத்தத்தை விழச் செய்தால் உடனே அசாத்தியமாம்.

## 2-வது ஆம்லபித்தரோகம்.

இது, மஞ்சளைக் கரைத்ததுபோல் புளித்தவாந்தி சூலை அக்கினிமந்தம் நடுக்கல் மாறுரூபம் இருமல் சோம்பல் தாகம் துர்ப் பலம்வியர்வை நித்திரைப்பங்கம் கீல்களில்நோவு துக்கம் தேகத்தில் வளையம்போல் புடைகள் எழும்புதல் என்னும், இக்குணங்களை உண்டாக்கும்.

## 3-வது ஆவரணபித்தரோகம்.

இது, தலைதிருப்பலுடன்நோவு ஏப்பம் வாந்தி கோழை சோருதல் தாகம் மலபந்தம் தேகம் வாட்டத்திலும் ஸ்தம்பித்தல் எரிச்சல் வியர்வை தளர்ச்சி நெஞ்சுவறால் அசீரணம் கசப்பும் புளிப்புமான வாந்தி மூர்ச்சை விக்கல் என்னும், இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது உன்மாதபித்தரோகம்.

இது, அறிவீனம் மந்தபுத்தி வெட்கமும் சாதிபேதமும் விடுதல் ஒருவேளை அதிகவார்த்தை ஏப்பம் வாந்தி வயிறுப்பல் அக்கினி மந்தம் கூச்சல் அழுதல் துர்ப்பலம் நித்திரைப்பங்கம் அதிகதாகம் மூர்ச்சை சோஷை எரிச்சல் என்னும், இக்குணங்களை உண்டாக்கும்

## 5-வது விஸ்மிருதிபித்தரோகம்.

இது, ஞாபகமறதி மந்தவசனம் பிரமை ஓக்காளம் சூலை மலபந்தம் பொருமல் துர்ப்பலம் வியர்வை சீதளம் கீல்களில் அசதி தொடையிலும் முழங்காலிலும் நோவு சோருதல் தாகம் தலையில் நோவுடன் பாரிப்பு மார்புளரிச்சல் நாவிலும்வாயிலும் கசப்பு புளிப்பு தித்திப்பாயிருத்தல் நித்திரைப்பங்கம் வீரியநஷ்டம் தொடையிற் குத்தல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும்.

விஸ்மிருதி என்பது மறதி.

## 6-வது திக்தபித்தரோகம்.

இது, வேப்பங்காய்போல் வாய்கசத்தல் நாவுலரல் தாகம் மோகம் சுரம் சிரசுகனத்தல் சுழலல் கபாலத்திலும் காதிலும் இரைச்சல் துர்ப்பலம் அவயவங்கள் சுட்கித்தல் இருமல் நெஞ்சிற்கபம் ரூபபேதம் தேகம் ஸ்தம்பித்தல் கோபம் ஆலசியம் கம்பீரமான வசனம். கண்சுழலல் என்னும், இக்குணங்களை உண்டாக்கும்.

திக்தம் என்பது கசப்பு.

## 7-வது ஆசியபாகபித்தரோகம்.

இது, வாயில்கொப்புளங்கள் எழும்பிப்பழுத்துடைதல் துர்க்கந்தம் மார்பில் நெருப்புப்பட்டதுபோல் எரிதல் சகலவஸ்துவிலும் அரோசகம், வியர்வை வயிறப்பல் மலபந்தம் பலவீனம் ஏப்பம் சுரம் சீதளம் மந்தாக்கினி தொடைநோவு கோபம் கொட்டாவி விக்கல் சூலை அற்பபோஜனம் என்னும், இக்குணங்களை உண்டாக்கும்.

## 8-வது ஜிம்மிகபித்தரோகம்.

இது, நாவில் எள்ளுப்போல் கொப்புளங்கள்எழும்புதல் இனிப்புடன் குழம்பாகவாய்நீரூறல் அசீரணம் அன்னத்திவேஷம்பலவீனம் தலையிலும் கண்ணிலும் உபத்திரவம் நடுக்கல் கபாலத்திலும் செவியிலும்இரைச்சல், தொடையிலும் முழங்காலிலும் நோவு வியர்வையுடன் சர்வாங்க சீதளம் என்னும், இக்குணங்களை உண்டாக்கும். இதுவே மதுரபித்தமாம்.

## 9-வது துர்க்கந்தபித்தரோகம்.

இது, ஒருவிதநாற்றமுள்ள லேகியத்தையொத்த வாந்தி சர்வாங்கத்திலும் கொப்புளம் எழும்புதல் நாவில் துர்க்கந்தத்துடன் வேலின் முள்ளைப்போலிருத்தல், வியர்வை கண்ணீர்வடிதல்மண்டையிலும் காதிலுமிரைச்சல் கண்டத்தில் நமைச்சல் திமிர் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 10-வது தத்துருபித்தரோகம்.

இது, சர்வாங்கத்திலும் தடித்தலுடன் நமைச்சல் நாவும் வாயும் உலரல் ரோமச்சிலிர்ப்பு சுரம் வியர்வை நிறமாறல் இருமல் சோருதல் ஆலசியம் பிரமை கோபம்என்னும், இக்குணங்களை உண்டாக்கும்.

## 11-வது சோகபித்தரோகம்.

இது, துக்கம் தலைதிருப்பல் சோஷை உள்ளங்கால் உள்ளங்கை எரிச்சல் சிரசிலும் காதிலும் இரைச்சல், நாவும் வாயும் சிலவேளை கசந்தும் புளித்தும் தித்தித்தும் இருப்பதுமன்றி யுலரல், தேகத்தில் தடிப்பு சைத்தியம் வாந்தி அசீரணம் அதிகசூலை வயிறுப்பல் தொடைகளில் நோவுஎன்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

சோகம் என்பது துக்கம்.

## 12-வது மூர்ச்சைப்பித்தரோகம்.

இது, மூர்ச்சை மார்பின்பள்ளத்திலும் நாபியிலும் நெருப்புப் பட்டது போலெரிதல், துக்கம் ஸ்தம்பித்தல் அதிகதாகம் வியர்வை இரைப்பு கபாலத்திலும் காதிலும் ஒருவிதநாதம் நிறக்குறைவு மேலில் தினைஅரிசி வரகரிசிகளைப் போல் கொப்புளம் எழும்புதல் நாவில் படலம் திமிர் நமைச்சல் உலரலுடன் கசப்பு புளிப்பு தித்திப்பாக இருத்தல் தேகத்திலும் அவ்வகை வாசனையே வீசுதல் நடுக்கல் சிரசிலும் வயிற்றிலும் குத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 13-வது கண்டுபித்தரோகம்.

இது, சர்வாங்கத்திலும் திமிருடன் தினவு தடிப்பு சாமை அரிசிப்பிரமாணத்தையொத்த கொப்புளங்கள் எழும்புதல் சோருதல்

நடுக்கல் பலவீனம், வாந்தி அசீரணம் தலைநோவு மார்புளரிச்சல் சீதாதிக்கம் வியர்வை சூலை நித்திரைப்பங்கம் விக்கல் ஸ்தம்பித்தல் தொடையிலும் முழந்தாளிலும் நோவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 14-வது பிடகபித்தரோகம்.

இது, தேக முழுதுந் தடித்துச் சிறுசிறுகட்டிகள் எழும்புதல் அவைகளில் சுடுகையான ஜலம் வடிதல் மேலில்தொடில் சுறசுறப்பு பலவீனம் அதிக உஷ்ணம் ஒருவேளை குளிர்ச்சி உள்ளங்கால் உள்ளங்கை எரிச்சல் காதடைப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 15-வது அனலபித்தரோகம்.

இது, சர்வாங்கத்திலும் காங்கையுடன் தடிப்பு நித்திரைப்பங்கம் தலைவலி ஸ்தம்பித்தல் வயிற்றிற்சூலை நாவில், திமிருடன் படலம் எழும்புவதும்அன்றிக், கசப்பும் புளிப்புமாக இருத்தல் விக்கல் அவயவங்கள் இளைத்தல் எரிச்சல் சோஷை மூர்ச்சை தாகம் தொடையிலும் முழந்தாளிலும் நோவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 16-வது சுவேதபித்தரோகம்.

இது, சர்வாங்கத்திலும் வியர்வை அதில் கசந்தவாசனை நாவும் வாயும் கசத்தல் பலவீனம் ஸ்தம்பித்தல் விக்கல் சுரம் சைத்தியம் சிரோபாரம் தாகம் அக்னிமந்தம் அரோசகம் தொடையிலும் முழங்காலிலும் நோவு நடுக்கல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும். சுவேதம் என்பது வியர்வை. இதுவே வியர்வைப்பித்தமாம்.

## 17-வது இத்மாபித்தரோகம்.

இது, மாருதவிக்கல் சோஷை ஏப்பம் மூர்ச்சை வியர்வை உள்ளங்கையிலும் உள்ளங்காலிலும் கொப்புளம்எழும்புதல் சுறசுறப்பு இருமல் சுவாசம் தலைநோவு சுரம் தேகம்சில்லிடலுடன் ஸ்தம்பித்தல் மதிப்பிரமை என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இத்மா என்பது விக்கல், இதனை விக்கல் பித்தம் என்றுஞ்சொல்வர்.

## 18-வது இக்காபித்தரோகம்.

இது, ஓயாதகொட்டாவி சர்வாங்கத்திலும் வியர்வை துருக்கல்போல் சுறசுறப்பு கொப்புளம் எழும்புதல் சீதளம் ரோமச்சிலிர்ப்பு சுரம் சோஷை நடுக்கல் அதிகசூலை நடுமார்பில் எரிச்சல் சிரோபாரம் நித்திரைப்பங்கம் கண்ணீர்வடிதல் என்னும் இக்குணங்களைஉண்டாக்கும். இக்கா என்பது கொட்டாவி. இதுவே கொட்டாவிப்பித்தமாம்.

## 19-வது சூலைப்பித்தரோகம்.

இது, நாபியில்குத்தல் ஏப்பம் அதிகதாகம் துர்க்கந்தத்துடன் கசப்பான வாந்தி ரோமச்சிலிர்ப்பு வியர்வை தடிப்பு திமிர் தினவு தலை சுழலல் நடுக்கல் குத்தல் இரைச்சல் அவயவங்கள் சுட்கித்தல் உள்ளங்கைஉள்ளங்கால்எரிச்சல்என்னும்இக்குணங்களைஉண்டாக்கும்.

## 20-வது விஷ்டம்பபித்தரோகம்.

இது, தேகங் கட்டுப்பட்டது போலிருத்தல் மார்பைச் சுற்றிலும் எரிச்சல் தலைதிருப்பல் சுரம் குளிர் பலவீனம் ஈனத்தொனி ஞாபகமறதி பிரமை அதிகமயக்கம் மூர்ச்சை சோஷை மிகுதாகம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

விஷ்டம்பம் என்பது ஸ்தம்பித்தல்.

## 21-வது விரணபித்தரோகம்.

இது, தேகத்தில் சிறிதும் பெரிதுமாக அதிக ரணம்பிறக்குதல் திமிர் கனத்தல் நமைச்சல் நாவுகசத்தல் கறுத்தல் கோசஞ்சிவக்குதல் நித்திரையில் திடுக்கிட்டெழுந்திருக்குதல் வாய்நீரூறல் கையில்நாடியானது படபடத்துத் துடிக்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 22-வது ஊர்த்துவபித்தரோகம்.

இது, அதிககோபம் சதாசண்டைசெய்தல் இரைந்துகூவுதல் ஆகாசம் பூமியிற் குழிவிழும்படியானபேதி பிரமை கண்சிவத்தல் அநித்திரை சரீரந்தூலித்தல் என்னும் இக்குணங்களைஉண்டாக்கும்.

## 23-வது சுவாசபித்தரோகம்.

இது, அதிகசுவாசம் வயிறுகனத்தலோடுபொருமல் தேகமிளைத்தல் அதிகமாக வாய்நீரூறல் கண்கலங்கலுடன் பார்வைமந்தம் மார்பு வலித்தல் இருமல் பசிஇன்மைஎன்னும்இக்குணங்களை உண்டாக்கும்.

## 24-வது செம்பித்தரோகம்.

இது, தேகம்சிவத்தல் செம்பின்களிம்புநிறமாயும் சிவந்த நிறமாயும் வாந்தியாகுதல் மலம் இறுகலோடு சிவந்துநழுகல் மயக்கம் முத்துமுத்தாகச்சிவந்தவியர்வைகசிதல் மிகுந்ததாகம் தலைதிருப்பல் தயக்கம் திடுக்கிடல் பயந்தெழுந்திருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 25-வது கரும்பித்தரோகம்.

இது, கறுத்தநிறமானவாந்தி தயக்கம் சிரசிலும்சரீரத்திலும் நடுக்கல் தலைவலி நித்திரை கடைக்கண்சிவந்து மினுமினுத்தல் தேகங் கனத்து வற்றுதல் அருசி பசியின்மை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 26-வது கரப்பான்பித்தரோகம்.

இது, சர்வாங்கத்திலுஞ்சொறி உபத்திரவத்துடன் கட்டிகள் எழும்புதல் குழம்பானபேதி வயிற்றில் இரைச்சலுடன் பொருமல் இசிவு கால்களில் விலவிலப்பு இடுப்புநோவு திமிருடன் சரீரத்தில் இடைவிடாத காந்தல் நிறக்குறைவு என்னும், இக்குணங்களை உண்டாக்கும்.

## 27-வது எரிபித்தரோகம்.

இது, அடித்தொடை பாதம் கண் உள்ளங்கால் உள்ளங்கை இவ்விடங்களில் எரிச்சல், காது முதுகு இவ்விடங்களில் வறவறப்பு, முழங்கை முழங்கால் இவ்விரண்டிலும் விருவிருப்பு. சீதளஸ்தானத்திலும் குளிர்ந்த காற்றிலும் விருப்பம் என்னும், இக்குணங்களை உண்டாக்கும்.

---

Forms 1—31 Printed at the T. V. C. Press, Madras.

## 28-வது துடிப்பித்தரோகம்.

இது, தேகத்தில் துடித்தலுடன் வெளிறல், பசுமையான நிறம், அரோசகம், சற்றுநேரமாவது நிலையில்லாத அலைச்சல், அரிசிமீதிலும் மாதர்மீதிலும் விருப்பம், யாருடனுவதடிக்கடி சண்டைசெய்தல், சுறு சுறுப்பு, எந்த வஸ்துவிலும் இச்சை என்னும் இக்குணங்களை உண் டாக்கும்.

## 29-வது விஷமபித்தரோகம்.

இது, சோர்ந்துவிழுதல், கடிந்துபேசுதல், தேகம்முற்றிலும் விஷம்போல்பரவி விஷமிக்குதல், சரீரநோவு, வீக்கம், அன்னத்திவே ஷம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது அசாத்தியம்.

## 30-வது மூலபித்தரோகம்.

இது, வயிற்றில் இரைச்சலுடன்பேதி, மனச்சலிப்பு, தாறு மாறான கோபம், மூலவளையத்தில் நின்றும் முளைதொங்குதல், அடித் தொடையிலும் மேல்தொடையிலும் நோவு, தேகத்தில் வெளிறலு டன் வீக்கம், அதிகநித்திரை, சோம்பல், கண் எரிச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 31-வது களப்பித்தரோகம்.

இது, குரல்வளைகனத்தல், கசந்தவாந்தி, கழுத்துக்குள் புண் போலிருத்தல், நாவில் வழுவழுப்புடன் வறட்டல், பாதத்தில் வீக் கம், காதிரைச்சல், சிவந்தமயிர் முளைத்தல், புறஇசிவு என்னும் இக் குணங்களை உண்டாக்கும்.

## 32-வது ஓடுபித்தரோகம்.

இது, எழுந்தெழுந்து ஓடுதல், பிதற்றல், யாரையுந் தூஷித்தல், பல்லைக் கடித்தல், கண்சிவத்தலுடன் மூடி மூடி விழித்தல், கூச்சல், கொக்கரித்தல், கூத்தாடுதல், குதித்தல், அகங்காரம் என்னும் இக் குணங்களை உண்டாக்கும்.

## 33-வது மூடபித்தரோகம்.

இது, ஆபரணம் பொன்முதலிய வஸ்துக்களை ஒருவருக்குந்தெரியாமல் கண்டவிடத்தில் மறைக்குதல், யாரையுந் தூஷணித்துப் பேசுதல், மொணமொணப்பு, கையினாலும் காலினாலும் வீண்செய்கைகளைச் செய்தல், அன்னத்திவேஷம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 34-வது நடுக்குப்பித்தரோகம்.

இது, சிரசு நெற்றி பிடரி முதுகந்தண்டு கண்டம் தாடை ஆகிய இவ்விடங்களில் நடுக்கல், கனத்தல், எரிச்சல், கசப்பாகியவாந்தி, பொடியிருமல், நித்திரைப்பங்கம், வாய்நீரானது மார்பில் விழும்படி வடிதல், எந்நேரமும் நாவுதுடித்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 35-வது கபாலபித்தரோகம்.

இது, கபாலமும் சிரசும் அதிரலுடன் அம்புபட்ட புண்போலக் கடுக்குதல், நோவு, சர்வாங்கத்திலும் சீதளத்துடன் மஞ்சள் நிறம், முதுகந்தண்டில்நோவு, முகத்தில் வீக்கம், மூர்ச்சை, அடிக்கடி எழுந்திருக்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 36-வது தாகபித்தரோகம்.

இது, அதிகசலபானம், அடிவயிறுதுடித்தல், சர்வாங்கத்திலும் அனல்வீசுதல்போல் இருத்தல், சீதளவஸ்துவிலும் புளிப்புவஸ்துவிலும் இச்சை, கண்டத்தில் மிகுவியர்வை, பிடரியையும் அடிநாவையும் இழுத்துக் கொள்ளுதல் போலிருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 37-வது திமிர்ப்பித்தரோகம்.

இது, சர்வாங்கத்திலும் திமிர், கனத்தல், கிறுகிறென்று சுழலல், வயிறுபொருமலுடன் முள்ளைச்சொருகினது போலிருத்தல், உதயகாலந்தோறும் வாந்தி, மறதி, அசந்த நித்திரை, மேலில் தூசுநிறம், நடையின்மை, பிடித்த பிடி விடாமை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 38-வது வலிப்பித்தரோகம்.

இது, அடிவயிற்றில் இசிவுடன் நோவு, இரைச்சல், நாவுவறளல், சிரோபாரம், கீல்களில் நோவு, ஈரலும் குடலும் வலிக்குதல், பசுமஞ்சள்நிறம்போன்றமலம், சர்வாங்கமும் துடிப்புடன் முடங்குதல், மார்பை அடைக்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 39-வது கிருமிப்பித்தரோகம்.

இது, மலத்தில் கிருமிவீழ்தல், வயிற்றைப் புரட்டிப்புரட்டி வலித்தல், சர்வாங்கத்திலும் தினவு, நோவு, மலமும் சலமும் வறளல், கை கால் வாழைத்தண்டைப்போல் சில்லிட்டுக் கனத்துக் கடுக்குதல், தேகத்தில் ஒருவித நாற்றம் வீசுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 40-வது மருந்திடுபித்தரோகம்.

இது, அடிக்குடலில் வியாபித்துத்தங்கிக்கொண்டு, ரோகிக்கு மவுனம், மனக்கலக்கம், தேகம் ஊதல், நெஞ்சுவறளல், அசதி, வயிறு வெளுக்குதல், நித்திரை பிடியாமை, போஜனத்தில் வெறுப்பு, உழலல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

ஆ பித்தரோகம், 40-ம் முற்றியது.

## அசாத்திய பித்தரோக நிதானம்.

சகலபித்தரோகங்களிலும் வாதமாவது சிலேஷ்மமாவது சேர்ந்தால், கஷ்ட சாத்தியமாம். இவ்விரண்டுஞ்சேர்ந்தால், அசாத்தியமாம்.

இப்பித்தரோகங்களை அகத்திஇலைரசச் சுத்தோதகஸ்நானம், அவ்விலைக்குடிநீர், பேய்ப்புடல்கஷாயம், கார்ப்பாசச்சூரணம், நவரசரசாயனம், சம்பீரக்குழம்பு, தாமரைப்பூமணப்பாகு, பன்னீர்ச் சந்தனலேபனம், சகதேவித்தைலம், பெருங்குமரித்தைலம், பிருங்காமலத்தைலம், பத்தூரத்தைலம், சீரகத்தைலம், சந்தனாதித்தைலம், மகாவில்வாதி லேகியம், ரசிதபஸ்மம், மகாவசந்தகுசுமாகரமாத்திரை முதலிய அவுஷதங்களினாலும், இன்னும் சீதோஷ்ண சாந்திகளினாலும் நிவர்த்திசெய்யவேண்டும்.

## சித்தர்மதாந்தரம்.

சிந்தாமணி என்னுஞ் சாஸ்திரத்தில் பித்தரோகத்தை 42, விதமாகச் சொல்லப்படுகின்றது, இவற்றுள் நாற்பது பித்தரோகங் களும் முற்கூறியவைகளேயாம். மற்ற இரண்டு பித்தரோகங்களையும் இதனடியிற் காண்க.

### 1-வது அழல் பித்தரோகம்.

இது, இளமையில் தலை நரைத்தல், தேகவெளுப்பு கடைக்கண் சிவப்பு, பலவகை ஞானங்களை அதிகமாகப் பேசுதல், அவதூறாகிய வார்த்தைகளைக்கூறல், மாதர்களின் இன்பங்களை வெளிப்படுத்திச் சொல்லல், அனேக சாஸ்திரங்களை மொழிதல் பாடல் என்னும் இக் குணங்களை உண்டாக்கும்.

### 2-வது மார்க்க பித்தரோகம்.

இது, சகல நூல்களின் வகைகளைப் பேசுதல், விரைவில் உட் கார்ந்து விரைவில் ஓடுதல், சீலையைக்கிழித்தல், புலம்புதல், வாயில் வந்ததைப்பாடுதல், சிரசிலும் பிடரியிலும் நரம்பைப்பற்றி இழுத் தல், பிறரைப் பழித்தல், பல தொழிலைச் செய்தல், தேகம் வாடுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

சித்தர்மதாந்தரம் முற்றிற்று.

---

## சிலேஷ்மரோக பூர்வரூபம்.

தேகங்கனத்து நருக்கித்துவைத்ததுபோல் இருத்தல், அத் தேகத்திலும் முகத்திலும் மினுமினுப்புடன் குடைச்சல், இருமல், இரைப்பு, ஆலசியம், நடுக்கல், சிரோபாரம், நெஞ்சிற்கபாதிக் கத்துடன் சத்திப்பு, குளிர்ச்சி, வியர்வை, கீல்களெல்லாங் கட்டுவிட் டுப்போவதுபோலிருத்தல், விக்கல், சுரம், குளிர், மந்தாக்கினி, வாயில் வழுவழுப்புடன் கோழை உண்டாதல், கண்ணில் சலக்கோவை, நாசியில்சலம் பெருகல், அடைப்பு, தும்மல், மந்தம், நாற்றம், வாந்தி என்னும் இக்குணங்களைச் சிலேஷ்ம ரோகமானது தனக்குப் பழைய ரூபமாகப் பெற்றிருக்கின்றது. இக்குணங்கள் சகல சிலேஷ்மங்களுக் கும் பொதுவாக இருக்குமென்றறிக.

## சிலேஷ்மரோகபேதம்.

சிலேஷ்ம ரோகமானது, வாதசிலேஷ்மரோகம் ஆதியாக இக்கா சிலேஷ்மரோகம் ஈருக இருபது விதப்படுகின்றது. அவைகளின் பெயரையும் செய்கைகளையும் முறையே இதனடியிற்காண்க.

### 1-வது வாதசிலேஷ்மரோகம்.

இது, சர்வாங்கத்திலும் நருக்கித்துவைத்தது போலிருப்பது மன்றி, வியர்வை, குளிர்ச்சி, நடுக்கல், மார்பில்குத்தல், தலைநோவு, நெஞ்சிற் கபாதிக்கத்துடன் வறளல், வயிறுப்பல், வாந்தி, கொட்டாவி, விக்கல், வாதாதிக்கத்தால் சந்திகளில்பிடிப்பு, சுரம், தாகம், துற்பலம் அவயவாதிகள் சுருங்குதல், தொடையிலும் முழங்காளிலும் நோவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும். அன்றியும் கடுத்துக்கடுத்து மலசலம் இறங்குதல், சர்வாங்கத்திலும் பள்ளம் வீழ்தல், நோவு, உதடும் பல்லும் கறுக்குதல், மேகநீரையொத்த நீரிறங்கல், வெள்ளை காணுதல், தந்தங்களில் பொறுக்கக் கூடாதகுத்தல் என்னும் இக் குணங்களை உண்டாக்கு மென்பாருமுளர்.

### 2-வது பித்தசிலேஷ்மரோகம்.

இது, தலைசுழலல், விக்கல், ஒருவேளை ரத்தங்கக்குதல், நாவும் வாயும் முள்ளைப்போல் உறுத்தல், மஞ்சள் கோழைவீழ்தல், கண்டத்தில் கபங்கட்டுதல், சீதளம், பலவீனம், மேல் மூச்சுவிடுவதிலும், வேதனை, சுரம் வியர்வை சோம்பல் தாகம் நித்திரையின்மை ஒருவேளை உறக்கம் கண்ணீர்பெருகுதல், மார்புநோவு வயிறுப்பல் வாந்தி இருமல் இரைப்பு என்னு மிக்குணங்களை உண்டாக்கும். அன்றியும், மயக்கம், பித்தாதிக்கம் அன்னத்திவேஷம் வாய் நீருறல் தேகத்தில் மஞ்சள் நிறம் என்னும் இக்குணங்களை உண்டாக்குமென்பாருமுளர்.

### 3-வது ரத்தசிலேஷ்மரோகம்.

இது, தினந்தினமும் ரத்தவாந்தி அதில் துர்க்கந்தமான கோழை வீழ்தல் பலமுங் காந்தியும்கெடல் அவயவங்கள் சுருங்கல் சுரம் எரிச்சல் அதிகசுவாசத்தோடு வேதனை, உள்ளங்கால் உள்ளங்கை காந்தல் மார்பிலுந் தலையிலுங் குத்தல், வயிறுப்பல் வாந்தி தேகம் மரத்தல் சிரோபாரம் காதிரைச்சல், சோஷை மூர்ச்சை கண்சுழலலுடன்

மயக்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். அன்றியும் முழங் கால் முதுகு விலா முழங்கை கணுக்கை கீல் இவ்விடங்களில், கடின மான வீக்கத்துடன் குடைச்சல், சளி இருமல் நாக்குவறட்டலினுந் தித்திப்பாக இருக்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்குமென் பாருமுளர்.

## 4-வது க்ஷயசிலேஷ்மரோகம்.

இது, நாளுக்குநாள் அவயவங்கள் சூம்பல், சுரம் எரிச்சல் கண் டத்தில் கபாதிக்கம், வயிறுப்பல் மேல்சுவாசம் ஈனத்தொனி கொட் டாவி விக்கல் ஸ்தம்பித்தல், சிரசிலும் செவியிலும் ஒருவித இரைச்சல் தொடையிலும் முழந்தாளிலும் நோவு, அரோசகம் அசீரணம் மலபந் தம் நிறக்குறைவு சரீரவேதனை பிரலாபம் சோஷை மூர்ச்சை, சோம் பல் தாகம் நித்திரைபிடியாமை என்னும், இக்குணங்களை உண்டாக் கும். அன்றியும், நெய்யை ஒத்த சளி விழுதல், முகத்தில் பளபளப்பு குளிர் நாசியிற் சலம்வடிதல், தேகத்தில் பாண்டு நிறம் அதில் அற்ப உஷ்ணம் சீதங்கலந்தமலம் மஞ்சள் நிறத்துடன் மெதுவாகமூத்திரம் இறங்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கு மென்பாருமுளர்.

## 5-வது மூர்ச்சைச்சிலேஷ்மரோகம்.

இது, மூர்ச்சை அதிககோழை சரீர எரிச்சல் சோஷை சுரம் சைத்தியம் தலைநோவுடன் கனத்தல், சுழலல் நடுக்கல் சுவாசவேதனை கண்களில் உபத்திரவம், சோருதல் ஆலசியம் பிரமை அன்னத்தி வேஷம் அசீரணம், தொடையிலும் முழந்தாள் முட்டிலும் நோவு, வயிறுப்பல் இரைச்சல் மலபந்தம் என்னும் இக்குணங்களை உண்டாக் கும்.

## 6-வது சுட்கசிலேஷ்மரோகம்.

இது, சர்வாங்கமும் சூம்பல், கபாதிக்கத்துடன் இருமல், மேல் மூச்சுசுரம் பலவீனம் வேறுநிறம் அன்னத்திவேஷம் அசீரணம் வியர் வைதாகம் மார்புநோவு நித்திரைப்பங்கம் அதிக எரிச்சல் கழுத்து நேர் ந்து மெலிதல், கண்டத்தில் ஒருசத்தம், ஈனத்தொனி தலை சுற்றலுடன் நோவு மலபந்தம் வயிறுபொருமல் அக்கினிமந்தம் கண்களில் நோவுடன் குத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 7-வது சுரசிலேஷ்மரோகம்.

இது, சுரம் எரிச்சல் தாகம் கபாதிக்கத்துடன் சீதளம், வியர்வை கீல்களில் துர்ப்பலம் ஏப்பம் கொட்டாவி அசனக்கெடுதி அசீரணம் இருமல் தேகவன்மைகுன்றல் குத்தல் கண்டத்தில் கோழை நிறை தல் மார்பில் சூலே, சோர்வு ஆலசியம் பிரமை என்னும் இக்குணங் களை உண்டாக்கும். அன்றியும், தேகங்கனத்தல் வலித்தல் வயிறுளைச் சல் நாவறளல் தாகம் என்னும் இக்குணங்களை உண்டாக்குமென் பாருமுளர்.

## 8-வது மூகைச்சிலேஷ்மரோகம்.

இது, கழுத்திற்குள் ஊமையைப்போல் சத்திப்பு, தினம் ஒன்று க்கு ஒவ்வொருபடி கோழை வீழ்தல், மார்புநோவு சுரம் வாதாதிக் கம் சீதளம் துர்ப்பலம் காந்தியீனம் நாவும் வாயும் உலர்ந்து கசப்பு புளிப்பு தித்திப்பாக இருத்தல், கொட்டாவி ஸ்தம்பித்தல் மலபந்தம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். மூகை என்பது ஊமை.

## 9-வது துக்கச்சிலேஷ்மரோகம்.

இது, துக்கம் கண்டத்தில் கோழை கட்டிக்கொண்டு சத்தித்தல், எரிச்சல் சூலே துர்ப்பலம் சர்வாங்கமும் மெலிதல் முழங்கால் நோவு வயிறுபொருமல், மலபந்தம் தீபனக்கெடுதி இரண்டு தொடைகளுஞ் சூம்பலுடன் நோதல், நித்திரைப்பங்கம் சிரோபாரம் இருமல், சுவா சம் எப்போதும் கபமேபெருகுதல், வாயில் கசப்பு புளிப்பு தித்திப் பாக இருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 10-வது தொனிச்சிலேஷ்மரோகம்.

இது, ஈனத்தொனி கபாதிக்கம் எரிச்சல் சுரம் குளிர் தலைவலி மண்டைக்குள்ளும் காதுக்குள்ளும் இரைச்சல், சர்வாங்கத்திலும் வாட்டம் மார்புகனத்தல், வியர்வை தொடைக்குள்ளும் முழந்தாளுக் குள்ளுங்குடைச்சல், நித்திரை இன்மை என்னும் இக்குணங்களை உண் டாக்கும்.

## 11-வது கோஷசிலேஷ்மரோகம்.

இது, கண்டத்தில் கோழை நிறைவினால் ஓட்டை வெண்கலத் தொனிபோல் சத்தமும் தினவும் பிறக்குதல், சிரோபாரம் தேகம்சூம்பல் துர்ப்பலம் அக்கினிமந்தம் கொட்டாவி விக்கல் இருமல் தேகம் சில்லிட்டு ஸ்தம்பித்தல், குளிர் வியர்வை சகலகீல்களிலும் நோவு தாகம் வரவரக்கண்டத்தில் அதிகசத்தம் உண்டாதல், சிரசுசுழலலுடன் நடுக்கல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

கோஷம் என்பது சத்தம்,

## 12-வது சுவேதசிலேஷ்மரோகம்.

இது, தேகம்முற்றிலும் வியர்வை, சூம்பல் கண்டத்தில் கபம் அடைதல், மார்பு உலர்தல், நித்திரையும் சமாக்கினியும் கெடல், மலக்கட்டு விக்கல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

சுவேதம் என்பது வியர்வை.

## 13-வது மகாசிலேஷ்மரோகம்.

இது, சர்வாங்கத்திலும் வாயுவுவியாபித்தல், சூம்பல் அதிக கோழைவிழுதல், நெஞ்சுக்குழியில் களகளப்பு, சுரம் குளிர்சிரோபாரம் வியர்வை சகலகீல்களிலும் நோவு வயிறுப்பல் அக்கினிமந்தம், பித்தாதிக்கம் காசசுவாசம் தலைத்திருப்பல் அன்னத்திவேஷம் அசீரணம் துர்ப்பலம், என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது அசாத்தியமாம்.

## 14-வது பேனசிலேஷ்மரோகம்.

இது, தினந்தினமும் நுரை நுரையாக ஒருபடி இரண்டுபடி கோழை வாந்தியாகுதல், மார்பில் எரிச்சல் குத்தல் ஊர்த்தசுவாசம் வேதனை சுரம் குளிர் வியர்வை சீதளம் தேகம் சூம்பல் துர்ப்பலம் காந்தியீனம் இருமல் தலைவலி ஓக்காளம் அரோசகம் அசீரணம் மலபந்தம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

பேனம் என்பது நுரை

## 15-வது லாலாசிலேஷ்மரோகம்.

இது, நாளொன்றுக்குச் சொன்னவடிதல்போலக் கோழைச்சலம் ஒருபடி அளவுவிழுதல் கண்டத்திலும் மார்பிலும் கோழைக்கட்டு மார்பில் குத்தல் சுவாசம்நீடல் இருமல் வேதனை அக்கினி நஷ்டம் மலபந்தம் சுரம் குளிர் அசீரணம் வியர்வை சர்வாங்கசீதளம் கொட்டாவி பலவீனம் வீக்கம், விவர்ன்னதேகம் ஏதேனும் ஒரு அவயவ வூனம் தலைத்திருப்பலுடன் நடுக்கல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 16-வது வமனசிலேஷ்மரோகம்.

இது, மாருதவாந்தியுடன் கோழைவடிதல் கண்டத்தில் கபம் அடைத்துக்கொள்ளல், மார்பிற்குத்தல் தேகஞ்சும்பலிலும் எரிச்சல், ஏப்பம் விக்கல் கொட்டாவி வாதாதிக்கம் அக்கினிமந்தம் மலபந்தம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். வமனம் என்பது வாந்தி.

## 17-வது க்ஷீணசிலேஷ்மரோகம்.

இது, பலக்குறைவு சுரம் குளிர் சிரோபாரம் தேகம் இளைத்தல் அதிகதாகம் விக்கல் தொண்டைநோவு இருமல் இரைப்பு தலைத்திருப்பல் நடுக்கல் நித்திரைப்பங்கம் நாவும் வாயும் கசக்குதல் மலபந்தம் மார்பில் குத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 18-வது சோஷசிலேஷ்மரோகம்.

இது, பித்தமும் வாயுவும் அதிகரித்தலினால் பிறந்து, சோர்ந்து விழுதல் சுரம் குளிர் வியர்வை வீக்கம் அதிகசீதளம் சர்வமாமிசஸ் தானங்களிலும் நோவு கொட்டாவி தொடைகளிலும் முழந்தாள்களிலும் வேதனை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

சோஷம் என்பது சோர்வு.

## 19-வது உத்காரசிலேஷ்மரோகம்.

இது, மாருத ஏப்பம் அதிகவாந்தி தலைவலி தினந்தினமும் ஒரு படி கோழைவீழ்தல் மலபந்தம் அக்கினிமந்தம் வயிறுகல்லைப்போல்

இருத்தல் சூலை பொருமல் அதிக எரிச்சல் ஈனத்தொனி தலைத்திருப்பல் கண்ணீர்பெருகல் அசீரணம் தேகவேதனை ஆலசியம் தாகம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். உத்காரம் என்பது ஏப்பம்.

## 20-வது இக்காசிலேஷ்மரோகம்.

இது, விக்கல் கொட்டாவி சிரோபாரம் சர்வாங்கவேதனை மார்பிற்குத்தல் சீதளம் ஒருவேளை இன்மை துற்பலம் இரைப்பு தொண்டைக்கம்மல் வயிறுகறப்போல இருத்தலுடன் நோதல் கண்ணீர் வடிதல் வாயும் நாவும் புளித்தல் நெஞ்சு உலர்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இக்கா என்பது விக்கல்.

ஆ சிலேஷ்மரோகம் 20-ம் முற்றியது.

---

## அசாத்தியசிலேஷ்மரோக நிதானம்.

சகல சிலேஷ்மங்களும் சுபாவத்திலேயே நீடித்து உபத்திரவஞ் செய்யத்தக்கவைகள். இவைகளுடன் பித்தமாவது வாதமாவதுகூடில் கஷ்டசாத்தியமும் அசாத்தியமும்ஆம் இச்சலரூபமாகிய சிலேஷ்மரோகங்களை, காகமாசிச்சுரசம் கிராம்பாதி ஐங்கூட்டுக் கஷாயம் ஏலாதித் துவிதச்சூரணம், சிறியநிர்க்குண்டித்தயிலம் முதலிய அவுஷதங்களைக் கொண்டும், 79,81,88-ம் பக்கங்களில், காச சுவாச க்ஷயரோகங்களுக்குச் சொல்லிய சிகிச்சைகளைக்கொண்டும் பரிகரிக்கவேண்டும்.

---

## சித்தர்மதாந்தரம்.

சிந்தாமணி என்னுஞ் சாஸ்திரத்தில், சிலேஷ்மரோகத்தை 21 விதமாகச் சொல்லப்படுகின்றது. இவற்றுள், வாதம் பித்தம் ரத்தம் க்ஷயம் சுரம் என்னுமிவ்வைந்து சிலேஷ்மங்களும் முற்கூறியவைகளேயாம். மற்றைய 16 சிலேஷ்ம ரோகங்களையும் முறையே இதனடியிற் காண்க.

## 1-வது காசசிலேஷ்மரோகம்.

இருமல், சீதளம் தேகம்பாரிப்புடன் கனத்தல், நாடி அற்பவேகத்திலுஞ் சிலேஷ்மகதியாக நடக்குதல், வாய்வறளல் அதிக உஷ்ணம், மூக்குத்தண்டின் அடியிற்கனத்தல் தினவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்,

## 2-வது சுவாசசிலேஷ்மரோகம்.

அதிகசுவாசம் நெஞ்சிற் கபாதிக்கம் இருமல் மூக்கடைப்பு குறட்டைவிடுதல் குளிர் சுரம் மயக்கம் நெஞ்சிற்கபநிறைதல் வாயும் நாசியும்வறளல் அதிகதாகம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 3-வது தீபனசிலேஷ்மரோகம்.

அதிகதீபனம் சர்வாங்கத்திலும் எரிச்சல் நோவு அழலை அழுகை நெஞ்சடைப்பு கைகால்களிற் சீதளம் தேகங்கனத்தல் உண்ணாக்கில் பசபசப்பாகிய தினவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது மந்தச்சிலேஷ்மரோகம்.

மந்தம் அடிவயிறு கல்லைப்போல் இருத்தலுடன் மலசலங் கட்டுப்படுதல் வாந்தி வியர்வை ஓக்காளம் மேல்சுவாசம் தொண்டைக்குள்காறல் இருமல் வாய்கசத்தல் துவர்த்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 5-வது தொந்தச்சிலேஷ்மரோகம்.

சர்வாங்கத்திலும் அழலை, விக்கல் இருமல் சுவாசம் அதிக சுரம் அசதி எரிச்சல் தாகம் தலைவலி மனச்சஞ்சலம் மார்புநோவு குளிர் ரோமச்சிலிர்ப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது சந்நிபாதசிலேஷ்மரோகம்.

நாக்குக்கறுத்தலுடன் வறளல் சுரம் எரிச்சல் சர்வாங்கத்திலும் வலி அசதி மறதி கன்னம் காது புருவம் நாசி சிரசு உச்சி இவைகளிற் படபடப்பாகிய துடிப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 7-வது அதிசாரசிலேஷ்மரோகம்.

சிவந்தபேதி வயிற்றில் இரைச்சல் குத்தல் இரண்டுவிலாவிலும் சூலை பொருமல் மார்பிலும் நெஞ்சிலும்நோவு, வாய்வறளல் இருமல் சுவாசம் தாகம் எரிச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 8-வது சலசிலேஷ்மரோகம்.

அதிகதாகம் சிக்கலாய்த் தடிப்பாய் அடிக்கடி நீரிறங்கல் அழலல் குறற்கம்மல் கோழையாகிய சிலேஷ்மம்விழுதல் பல்லுகளெல்லாமசை தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 9-வது அக்கினிசிலேஷ்மரோகம்

சர்வாங்கத்திலும் எரிச்சல், அல்லது கால் கை கண் மூக்கு இவ் விடங்களிலாவது எரிச்சல் இருமல் கோழை மிகுந்ததாகம் கைகால் களில் சீதளம் அதிகதீபனம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 10-வது முசல்சிலேஷ்மரோகம்.

சர்வாங்கத்திலும் நோவு அசதி துர்ப்பலம் கண்ணில் சிவப்புடன் சலம்வடிதல் சருமமுழுதும் கண்ணுதலுடன் கருகல் உணர்வின்றிமல சலம்நழுகல் சுவாசம் இருமல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 11-வது வெறிச்சிலேஷ்மரோகம்.

மீசையை முறுக்குதல் கோபித்தல் எழுந்திருந்து ஓடுதல் பல்லை இளித்துக்காட்டுதல் பாடல் ஆடல் கண்சிவத்தல் தேகத்தில் கறுத்த நிறம் உதடுவறளல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 12-வது விகாரசிலேஷ்மரோகம்.

விகாரப்பார்வை, ஸ்திரீகளிடத்தில் மிகுந்த இச்சை தேகஞ் சுட்கித்தல் சங்கீதம்பாடுதல் அதிகமோகம் துக்கம் அன்னத்திவே ஷம் மயக்கம் மாறுபாடானவார்த்தை என்னும் இக்குணங்களை உண் டாக்கும்.

## 13-வது விரணசிலேஷ்மரோகம்.

நெஞ்சில்விரணம் சீழ்கலந்த சளிவிழுதல், கழுத்து பிடரி கன்னம் இவ்விடங்களில் வீக்கம் சுரம் குளிர் எரிச்சல் இருமல் கூச்சல் கண்டத்தில்புண்போலிருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 14-வது துர்க்கந்தசிலேஷ்மரோகம்.

இருமினுல்சீழும் ரத்தமும்விழுதல், அதில் கவிச்சுமணம் வீசுதல் அன்னமும் அவுஷதமும் செல்லாமை அடிவயிறு கால் கை இவைகளில் வீக்கம் தாகம் தேகசுட்கம் சுடுகை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 15-வது நித்தியசிலேஷ்மரோகம்.

வெள்ளோக்காளம், சுரம் இருமல் தேகம்சுட்கித்தல் எரிச்சல் கிறுகிறுத்துக் கிழேவிழுதல் குரற்கம்மல் வார்த்தை இன்மை என்னும் இக்குணங்களை உண்டாக்கும். நித்தியம் என்பது கெடாமை.

## 16-வது பூதசிலேஷ்மரோகம்.

கண்களால் உருட்டிபுருட்டிப் பார்க்குதல், மவுனமாகஉள்ளேயே பேசுதல் நெடுமூச்சு குறட்டைவிடுதல் கொடிகொடியாகச் சளி விழுதல் இருமல் தேகத்தில்வெளிறலுடன் வியர்வை நறநறெனப்பல்லைக் கடித்தல் சந்தோஷம் கோபம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

இவைகளும் முற்கூறிய சிலேஷ்மரோக சிகிச்சைகளால் வசப்படும்.

சித்தர்மதாந்தர முற்றியது.

---

## வாதசோணிதரோகபேதம்.

இது, வாதத்தினுலும் பித்தத்தினுலும் சிலேஷ்மத்தினுலும் தொந்தங்களினுலும் திரிதோஷத்தினுலும் ஏழுவிதப்படும். ஆனுல் இவைகள் உத்தானவாதசோணிதரோகம், கம்பீரவாதசோணிதரோகம் என இருவிதப்பெயர்பெறும்.

உத்தானம் என்பது மேல் கம்பீரம் என்பது ஆழம்.

## வாதசோணிதரோக பூர்வரூபம்.

தேக மிளைத்துத்தளருதல், தொடை இடுப்பு முழங்கால்கணுக் கால் பாதம் தோள் கை கீல் ஆகிய இவ்விடங்களில்தினவு, மினுமினுப்பு குத்தல் அதிர்தல் கனத்தல் திமிர் என்னும் இக்குணங்கள் அடங்கி அடங்கி, சண்டைஎலிகள் கடித்ததினால் பிறக்கும் விஷரோகம் போலவே தேகமுற்றிலும் கோரமாக வியாபிக்கும், இதுவே வாத சோணிதபூர்வரூபமாம்.

## உத்தான வாதசோணிதரோகலக்ஷணம்.

வாதசோணித ரோகத்தினால் பிறக்கின்ற நமைச்சல் குத்தல் முதலிய துர்க்குணங்கள், முதல்முதல் மாமிசதாதுவில் நின்றும் உண்டாகி, அம்மாமிச தாதுவைக்கடந்து கீழ்முகமாக ஆழாமல், வெளிமுகமாகச் சருமமுற்றிலும் வியாபித்துக்கொண்டே இருக்கும்; அப்போது அச்சருமமானது கறுத்தும் சிவந்தும் தாம்பரநிறத்தைப் பெற்றும் அக்கினிச் சுவாலையின் ஆவியைப்போல் அதிகவெப்பத்தைத் தருவதுமாக இருக்கும்.

## கம்பீர வாதசோணிதரோகலக்ஷணம்.

முன்பு மாமிசத்தையும் சருமத்தையும்பற்றிய நமைச்சல் முதலிய துர்க்குணங்கள் சில நாள் பொறுத்து உள்ளில் ஆழப்பாய்ந்து சப்த தாதுக்களிலும் வியாபிக்கும் அப்போது உத்தானவாத சோணிதரோகத்தைப்பார்க்கிலும் அதிக உபத்திரவம்பிறக்கும். இது, முதிருங் காலத்தில் உடம்பில் பூசினதுபோல் வீக்கம் உண்டாகும். அன்றியும் வாயுவானது தொடை எலும்பு மச்சை இவைகளில் சஞ்சரித்துக் கொண்டு பிளந்து போவதுபோல் நோவை எழுப்பி, எதுவோ ஊருவது போல் தோற்றுவித்துத் தேகத்தை வளைத்துச் சப்பாணியைப்போல் அல்லது நொண்டியைப்போல் செய்யும்.

## 1-வது வாதாதிக்க வாதசோணிதரோகலக்ஷணம்.

இது, அதிகசூலை அதிரல் குத்தல் வீக்கம் சரீரத்தில் சுறசுறப்பு மரத்தல் நடுக்கல் வாதீநரம்புகளும் விரல்களும் கீல்களும் முடங்குதல் சர்வாங்கத்திலும் சகிக்கக்கூடாத வேதனை சீதளவஸ்துவில் விரோதம்

போஜனம் அவுஷதம் நடை இவைகளில் வெறுப்பு உறக்கம் சருமத்தின்மேல் கறுத்தநிறம், ஒருவேளை கறுப்புஞ் சிவப்பும் கலந்தநிறம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். சிலவேளை இக்குணங்களில்லாததுபோலும் அதிகரித்ததுபோலும் இருக்கும்.

## 2-வது பித்தாதிக்க வாதசோணிதரோகலக்ஷணம்.

இது, சோருதல் மூர்ச்சை தாகம் மதம் சருமத்தின்மேல் எரிச்சல் வியர்வை தொட்டாற் சகிக்கக்கூடாதநோவு சிவந்தவீக்கம் அதிக காங்கை என்னும் இக்குணங்களை மிகவும் அதிகரிக்கச்செய்யும்.

## 3-வது சிலேஷ்மாதிக்க வாதசோணிதரோகலக்ஷணம்.

இது, சரீரம்மரத்தல் கனத்தல் கொஞ்சம்நோவு நமைச்சல் குளிர்ச்சி உறக்கம் சருமத்தின்மேல் மினுமினுப்பு என்னுமிக்குணங்களை விசேஷமாக அதிகவிரைவில் உண்டாக்கும்.

## 4-வது தொந்தவாதிக்க வாதசோணிதரோகலக்ஷணம்.

இது, வாதபித்தாதிக்க வாதசோணிதரோகங்களுக்குள்ள குணங்களையெல்லாம் ஒரேகாலத்தில் பிறப்பிக்கும். இவ்வாறேமற்றை இரண்டு இரண்டாகத் தொந்திக்குந் தொந்தங்களையும் அறியவேண்டும்.

## 7-வது திரிதோஷாதிக்க வாதசோணிதரோகலக்ஷணம்.

இது, வாதாதிமூன்று சோணிதகுணங்களுடன் மோககுணம் மதாத்தியகுணம் மதரோககுணம் சொற்பனகுணமாகிய இக்குணங்களைப் பிறப்பிப்பதன்றியும் தலைநோவு அரோசகம் இரைப்பு தேகம் முடங்குதல் வீக்கம் கொப்பிளம்எழும்புதல் பேதி அல்லது மலக்கட்டு என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதனுல், அற்புதரோகங்களும் பிறக்கும். இது, வயிற்றுநரம்பின் சந்திகளில் வாயுவு நிறைந்து ரத்தமார்க்கத்தை அடைத்துப் பித்த சிலேஷ்மங்களில் கலந்துகொண்டு அதிகவேதனையைப் பிறப்பித்து மரணத்தைக்கொடுக்கும்.

## வாதசோணிதரோக அசாத்தியநிதானம்.

ஒவ்வொருதோஷத்தால்பிறந்த வாதசோணிதரோகங்கள், ஆரம்பமாகவிருக்கில் சிகிச்சையினுல் சாத்தியம். தொந்தவாத சோணிதரோகங்கள் கஷ்டசாத்தியம். திரிதோஷவாத சோணிதரோகம் அசாத்தியம்.

மேற்சொல்லிய வாதசோணிதரோகங்களை, சிறுமுத்துத்தயில விரேசனம் விழிதியிலைக்குடிநீர் தசமூலரசாயனம் சீந்தில்சருக்கரை சிற்றாமுட்டித்தயிலம் கருப்பூரச் சிலாசத்துப் பஸ்மம் கடைந்துநுரையெடுத்த கோமூத்திரம் முதலிய அவுஷதங்களினால் விலக்கவும்.

வாதசோணிதரோகலக்ஷணம் முற்றியது.

---

பஞ்சவாயுக்களின் விகுணநிதானம்.

## 1-வது பிராணவாயுவின் விகுணலக்ஷணம்.

காங்கைவஸ்து, அதிகநடை, மிகுந்தசையோகம், லங்கனம், வெகுதிண்டி, அதிகவேலை, சதுர்த்தசவேகத்தையடக்கி விடுக்கும்போது கிரமந்தப்பி விடுக்குதல், அல்லது மறிக்குதல் ஆகிய இவைகளால்பிராணவாயுவு அதிகரிக்கும். இதனால்கண்முதலிய பஞ்சேந்திரியங்களுக்கும் உபத்திரவம் பீநசம் தாகம் இருமல் இரைப்பு அர்த்திதவாதகுணம் முதலியரோககுணங்களும் உண்டாகும். விகுணம் என்பது கெடுதி.

## 2-வது உதானவாயுவின் விகுணலக்ஷணம்.

தும்மல் ஏப்பம் வாந்தி நித்திரைப்பங்கம் அதிகசுமை எடுத்தல் மிகுந்த அழுகை நகைப்பு முதலியவைகளால் உதானவாயுவு அதிகரிக்கும். இதனால் கழுத்தைவிகுவாக யிழுத்துப்பிடித்ததுபோலிருத்தல் தாழ்வாய்க்கட்டையில் ரோகம் பிரமை வாந்தி அரோசகம் பீநசம் களரோகம் முதலிய ரோகங்களும் உண்டாகும் அதுவே ஊர்த்துவமுகமான நரம்புகளில் வியாபிக்கில் செவிடுமுதலியரோகங்களும் உண்டாகும்.

## 3-வது வியானவாயுவின் விகுணலக்ஷணம்.

அதிகநடை, சதாவுட்காந்திருத்தல் விரோதபோஜனம் காங்கைவஸ்து பயம் அதிசந்தோஷம் சையோகம் விஷமசேட்டை விஷம் முதலியவைகளால் வியானவாயுவு அதிகரிக்கும், இதனால், புருஷத்துவம் உற்சாகம் பலம் இவைகள் நஷ்டப்படுவதுமன்றி, பித்தசுரம் சர்வாங்கநோவுடன் வீக்கம் குத்தல் ரோமச்சிலிர்ப்பு மந்தாக்கினி குஷ்டம் விசர்ப்பி சந்நியாசரோகம் சரீரந் தபிக்கின்றரோகம் முதலியவைகள் உண்டாகும்.

## 4-வது சமானவாயுவின் விகுணலக்ஷணம்.

அபக்குவபோஜனம் அசீரணசீதளபோஜனம் சங்கரபோஜனம் அகாலநித்திரை அகாலவிழிப்பு முதலியவைகளால் சமானவாயுவு அதிகரிக்கும். இதனால், சூலை குன்மம் கிரகணிமுதலிய ரோகங்களும் பக்குவாசய ஸ்தானரோகங்களும் விரைவில் உண்டாகும்.

## 5-வது அபானவாயுவின் விகுணலக்ஷணம்.

உஷ்ணஅன்னம் மந்தஅன்னம் வாகனுதியால் வருகின்ற மெலிவு நடையிலும் அதிகநடை அசைவற்றிருத்தல் வேகமாகத்திரிதல் ஆகிய இவைகளினால் அபானவாயுவு அதிகரிக்கும். இதனால் பக்குவாசய ஸ்தானத்திற் பிறக்கின்ற ரோகங்களுடன் மூத்திரரோகம், சுக்கிலமேகம் மூலரோகம் குதப்பிரம்சரோகம் முதலிய ரோகங்களும் உண்டாகும்.

## வாதசாமலக்ஷணம்.

முன்சொன்ன ஐந்துவாயுக்களும் ஆமத்தோடு கூடும்போது, சோர்வு சரீரம்மரத்தல் கனத்தல் மினுமினுத்தல் அரோசகம் மந்தம் சீதளம் வீக்கம் அக்கினிமந்தம் காரவஸ்துக்களிலும் காங்கைவஸ்துக்களிலும் அபேக்ஷை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## வாதநிராமலக்ஷணம்.

பஞ்சவாயுக்களும் ஆமத்தோடு கூடாதகாலத்தில், மேற்சொன்ன துர்க்குணங்களில் ஒன்றேனும் இராதென்றறிக.

## ஆவிருதவாதபேதம்.

பிராணவாயுமுதலிய வாயுவுக்கள் 5, பித்தம் 1, சிலேஷ்மம் 1, ரத்ததாதுமுதலியதாதுக்கள் 6, அன்னம் 1, மூத்திரம் 1, மலம் 1, ஆகிய 16-ம் தனித்தனியே ஒன்றை ஒன்று மாறிமாறி ஆவரணமாகச் சூழும்போது, அவைகளாலுண்டாகின்ற ஆவிருத பேதங்களைச் சொல்லப் புகுந்தால், அளவைக்கடங்காத தொகையில் நின்றும் பெருகும். அதுபற்றி, அப்பேதங்களில், பித்தாவிருதம்முதல் சிலேஷ்மஅபான ஆவிருதம் வரைக்கும் 22-ம், பிராண உதானுவிருதம்முதல் அபானசமானுவிருதம் வரைக்கும் 20-ம் எடுத்துக்காட்டப்படும். இதுபோலவேமற்ற ஆவரணபேதங்களை ஆயுள்வேத பண்டிதர்கள் கூர்ந்தறியவேண்டும்.

## 1-வது பித்தஆவிருதவாதலக்ஷணம்.

பித்தமானது, வாயுவை ஆவரணமாகச் சூழும்போது, பாதி உளளங்கால் உள்ளங்கைகளில் எரிச்சல், தாகம் சூலை பிரமை கண்ணில் இருட்கம்மல் கார உஷ்ண புளி லவணவஸ்துக்களால் நாவுலரல், சீதளவஸ்துக்களில் இச்சை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 2-வது சிலேஷ்ம ஆவிருதவாதலக்ஷணம்.

சிலேஷ்மமானது, வாயுவை ஆவரணமாகச் சூழும்போது தேகத்தில் சீதளம் கனத்தல் சூலை காரவஸ்துவில் விருப்பம் சந்தோஷம் மேலில் எறும்பு ஊருதல்போல் இருத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 3-வது ரத்தஆவிருதவாதலக்ஷணம்.

ரத்ததாதுவை வாயுவு ஆவரணமாகச் சூழும்போது, தாகம் ஆயாசம் சருமத்திலும் மாமிசத்திலும் நோவு வீக்கம் மேலில் ரத்த நிறம், அவ்விதப்புடைகள் எழும்புதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 4-வது மாமிசஆவிருதவாதலக்ஷணம்.

மாமிசதாதுவை வாயுவு சூழும்போது, மயக்கம் தேகந்தடித்து நிறமாறுதல் கட்டிகள் எழும்புதல் தாண்டல்போலிருத்தல் களை கார உஷ்ணவஸ்துக்களில் இச்சை இருமல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 5-வது மேதோஆவிருதவாதலக்ஷணம்.

மேதோதாதுவை வாயுவு ஆவரணமாகச் சூழும்போது, சரீரங்குலுங்கல் இளைத்தல் ஸ்திரம் மிருது சீதளம் அருசி என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது கஷ்டசாத்தியம். இதனை ஆட்டியவாதம் என்பர்.

## 6-வது அஸ்தி ஆவிருதவாதலக்ஷணம்.

அஸ்திதாதுவை வாயுவு ஆவரணமாகச் சூழும்போது, தேகத்தைக் கையால்தொடில் அதிஉஷ்ணம் நோவு சந்தோஷம் நீங்குதல் ஊசியால் குத்துதல்போல் குத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 7-வது மச்சா ஆவிருதவாதலக்ஷணம்.

மச்சைதாதுவை வாயுவு ஆவரணமாகச் சூழும்போது, சரீரங் குங்குதல் கொட்டாவி புரளல் வயிற்றில்சூலை அச்சூலைநோவைக் கையாலழுத்திப் பிசைந்தால் அடங்குதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 8-வது சுக்கில ஆவிருதவாதலக்ஷணம்.

சுக்கிலதாதுவை வாயுவு ஆவரணமாகச் சூழும்போது, சுக்கிலம் வேகமாக ஒழுகுதல், அல்லது இல்லாதிருக்குதல், இதனால் புருஷத்துவம் நீங்குதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 9-வது அன்ன ஆவிருதவாதலக்ஷணம்.

அசீரணப்பட்டு நோவைத்தருகின்ற அன்னத்தை வாயுவு ஆவரணமாகச்சூழும்போது, அவ்வசீரணசூலை கொஞ்சம் சமனமாக இருக்கும்.

## 10-வது மூத்திர ஆவிருதவாதலக்ஷணம்.

மூத்திரத்தை வாயுவு ஆவரணமாகச்சூழும்போது, சாதாரணமானமூத்திரங் கட்டுப்படுவதுமன்றிக் கீழ்வயிற்றில் உப்பிசமும் உண்டாகும்.

## 11-வது மல ஆவிருதவாதலக்ஷணம்.

மலத்தை வாயுவு ஆவரணமாகச் சூழும்போது, மலங்கட்டுப்பட்டு இரண்டுமூன்று தினத்துக்கொருதரம் வருத்தத்துடன் ஆட்டுப்புழுக்கையைப்போல் விழுதல்; குதத்தில் வாளால் அறுப்பதுபோலிருத்தல், புசித்த தற்காலத்தில் தேகமெல்லாம் மினுமினுப்பு, திரைந்த மேனியுடன் கிழவனைப்போல் கிடந்தஇடத்திலேயே கிடக்குதல் என்னுமிக்குணங்கள் உண்டாகும்.

## 12-வது சகலதாதுக்களின் ஆவிருதவாதலக்ஷணம்.

சகலதாதுக்களையும் வாயுவு ஏககாலத்தி லாவரணமாகச் சூழும்போது, பிட்டபாகம் கவுட்டி முதுகு இவ்விடங்களில் நோவும், இவ்வாயுவு அதிகரிக்கில் மார்பில் ஓயாதவேதனையும் உண்டாகும்.

## 13-வது பித்தபிராண ஆவிருதவாதலக்ஷணம்.

பித்தத்தைப் பிராணவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, பிரமை மூர்ச்சை நோவு எரிச்சல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 14-வது பித்தஉதான ஆவிருதவாதலக்ஷணம்.

பித்தத்தை உதானவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, புசித்த அன்னம் வாந்தியாகுதல் பிரமை மூர்ச்சை நோவு மேலினும் உள்ளினும் எரிச்சல் மினுமினுப்புஇன்மை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 15-வது பித்தவியான ஆவிருதவாதலக்ஷணம்.

பித்தத்தை வியானவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, சர்வாங்க எரிச்சல் இளைப்பு தேகவியாபாரங்கெடல் வியர்வை எவ்வஸ்துவிலும் அசங்கிதம் தாகம் உள்ளங்கால் உள்ளங்கைகளில் எரிச்சல் என்னுமிக்குணங்களுண்டாகும்.

## 16-வது பித்தசமான ஆவிருதவாதலக்ஷணம்.

பித்தத்தைச் சமானவாயுவு ஆவரணமாகச் சூழும்போது தேகசுபாவ உஷ்ணம்நீங்குதல், மிகுவியர்வை, சகலவஸ்துவிலும் வெறுப்பு தாகம் கை கால்களில் எரிச்சல் என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 17-வது பித்தஅபான ஆவிருதவாதலக்ஷணம்.

பித்தத்தை அபானவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, மலத்தில் மஞ்சள் நிறமும் யோனி காமியம் குதம்ஆகிய இவ்விடத்தில் நோவும் எரிச்சலும் உண்டாகும். காமியம் என்பது ஆண்குறி.

## 18-வது சிலேஷ்மபிராண ஆவிருதவாதலக்ஷணம்.

சிலேஷ்மத்தைப் பிராணவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, கண்டத்தில் ஒருசத்தம் சோம்பல் அரோசகம் வாந்தி சதாஉமிழ்நீர் உமிழ்தல் தும்மல் ஏப்பம் மூச்சுத்திணறல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 19-வது சிலேஷ்மஉதான ஆவிருதவாதலக்ஷணம்.

சிலேஷ்மத்தை உதானவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, தேகங்கனத்தல் அரோசகம் ஈனத்தொனியோடு வார்த்தைகுறைதல் துர்ப்பலம் நிறமாறுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 20-வது சிலேஷ்மவியான ஆவிருதவாதலக்ஷணம்.

சிலேஷ்மத்தை வியானவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, கீல்களும் எலும்பும் வாக்கும் ஸ்தம்பித்தல், சகல அவயவங்களுங்கனத்தல், நடக்கும்போது கால்சறுக்குதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 21-வது சிலேஷ்மசமான ஆவிருதவாதலக்ஷணம்.

சிலேஷ்மத்தைச் சமானவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, வியர்வை நீங்குதல், சீதளம் மந்தாக்கினி என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 22-வது சிலேஷ்மஅபான ஆவிருதவாதலக்ஷணம்.

சிலேஷ்மத்தை அபானவாயுவு ஆவரணமாகச் சூழும்போது, கோழையைப்போல் மூத்திரமும் மலமும் இறங்கும்.

ஆ. ஆவிருதவாதம் 22-ம் முற்றியது.

---

இனிப்பிராணன்முதலிய பஞ்சவாயுக்களும் ஆவரணமாகச் சூழுகின்றபேதம் 20-ம் இதனடியிற் சொல்லப்படும்.

---

## 1-வது பிராணஉதான ஆவிருதவாதலக்ஷணம்.

பிராணவாயுவு உதானவாயுவை ஆவரணமாகச் சூழும்போது உச்வாசம் நிசுவாசம் மறிபடல், இதனால்வருத்தம் பீநசம் தலையும் மார்பும் நோதல் வாய்வறளல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 2-வது உதானபிராண ஆவிருதவாதலக்ஷணம்.

உதானவாயுவு பிராணவாயுவை ஆவரணமாகச் சூழும்போது, தேகநிறமும் ஒளிவும்பலமுங்குறையும். இப்படியே மற்றைநான்கு வாயுக்களின் ஆவரணபேதங்களை யறிந்துகொள்க.

ஆகஆவரணபேதம் 42-ம் முற்றியது.

(இப்பேதம் 420-எனச்சொல்லுகிறார்கள்.)

---

## ஆவிருதவாத உபத்திரவ நிதானம்.

சகல ஆவிருதவாதங்களையும், துவிதபஞ்சமூலகஷாயம், சிந்திலாதிச்சூரணம், திப்பலிக்கஷாயம், அயிலேயலேகியம் முதலிய அவுஷதங்களைக்கொண்டு வசப்படுத்தவேண்டும். அப்படிச் செய்யாவிடில், அவைகளில் நின்றும் வித்திரிதி, பிலீகம், குன்மம், மார்புரோகம், மந்தாக்கினி என்னும் ரோகங்கள்பிறந்து பலவித உபத்திரவங்களைச்செய்வனவாம்.

## சருவ ஆவிருதவாத அசாத்திய நிதானம்.

எந்த ஆவிருதவாயுவினாலாவது, நீங்காதசிரோபாரம், அரோசகம், அதிக இளைப்பு, ஞாபகமறதி, மலபந்தம், மிருதாகம், பிரமை முதலிய பற்பலரோகங்கள் பிறந்தாலும், அல்லது சப்ததாதுக்களும் தீபாக்கினியும் பலமும் நாளுக்குநாள் குறைந்தாலும், அசாத்தியமாம்.

சித்தர்மதாந்தரம்.

## விஷபாகரோகபேதம்.

செம்பின்களிம்பு மீன்முள்ளு நெல்வாலின்முள் முதலியவைகள் சேர்ந்தபோஜனம் அருந்தல், காந்தியஅன்னம், மழைச்சலம், காடித்தண்ணீர், நித்தியசையோகத்திலும் நோய்மாதர் சையோகம், முதல்நாளில் சமைத்தபதார்த்தம், அழுகியமாமிசம், உஷ்ணமாமிசம் என்னும் இவைகளால், வாத விஷபாகரோகம் முதல் கந்தவிஷபாகரோகம் ஈறாக எண்வகை விஷபாகரோகம் உண்டாகும். அவைகளை இதனடியிற் காண்க.

## 1-வது வாத விஷபாகரோகம்.

ஒருபக்கத்தில்வீக்கம், சரீரம் வாட்டத்திலும் வெளிறல், கனதி, உறக்கம், பசியின்மை, மலசலச்சிக்கல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது பித்த விஷபாகரோகம்.

சர்வாங்கத்தினவு, வெடிப்பு, கிரந்தி, பாரிப்பு, எரிவு, சுரம், ஊரல், அசதி, அநித்திரை, மேல்மூச்சு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்

## 3-வது சிலேஷ்ம விஷபாகரோகம்.

தேகமுற்றிலும் மிருதுமைச்சல், வெளிறல், வீக்கத்துடன் வெடித்தல், வறவறப்பு, அழலல் தாபச்சுரம், குளிர், அற்பஇருமல், கோழை சுடுகையுடன் சிறுநீரிறங்கல், மேல்மூச்சு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது தொந்த விஷபாகரோகம்.

மூர்ச்சை, மிகுந்ததாகம், அடிக்கடிநீரிறங்கல், விக்கல், மயக்கம் தேகம்வெளுத்துக் கண்ணுதலுடன் வீக்கம், அருசி, பேதி பிரமை, வாய் நீரூறல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

தொந்தம் என்பது இரண்டு.

## 5-வது சந்நிபாத விஷபாகரோகம்.

சேறுபோல்பேதி, குதத்தில்விரணத்துடன் ரத்தங்கசிதல், சுவாசம் சுரம், மயக்கம், காந்திய கொள்ளின்மணம்போல் சரீரவாசனை, முகவீக்கம், வியர்வை, அசதி, பிதற்றல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது அக்கினி விஷபாகரோகம்.

வாதபித்தாதிக்கம், தேகம் இளைத்தல், வீக்கம், கிடைபொருந்தாமை, புரளல், கோழை, இருமல், சர்த்தி, மூர்ச்சை, வாய்நீரூறல், வயிறளைதல், மலசலச்சிக்கல், பக்கநோவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 7-வது எரிச்சல் விஷபாகரோகம்.

வாயினால் ரத்தம்வீழ்தல், எரிச்சல், கோழை, சுவாசம், மார்பில் அடைப்பு விரணம், அதில்மாமிசம்வளரல், குத்தல், கட்டிபோல்நெஞ் சிற்புரளல், பேதி, வீக்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 8-வது கந்தவிஷபாகரோகம்.

உடம்பில் பிணநாற்றம்வீசுதல், சுரம், மயக்கம், சோம்பல், சர் வாங்கமுங் கனதி, மூர்ச்சை, தலைவலி, சிலேஷ்மாதிக்கம், தாகம், அதிக வார்த்தை, குளிர், வயிற்றில்குத்தல், கிரகணி என்னும் இக்குணங் களை உண்டாக்கும்.

## சாத்தியாசாத்திய விஷபாகரோக நிதானம்.

விஷபாகரோகம் எட்டிக்குள் வாதம், பித்தம், சிலேஷ்மம் தொந் தம் என்னும் நான்குவிஷபாகரோகங்கள் சாத்தியமாம். மற்ற நான்கு விஷபாகரோகங்களும் அசாத்தியமாம்.

சித்தர்மதாந்தரம் முற்றியது.

---

மேற்கூறிய விஷபாகரோகங்களைக் கடுக்காய் ஊறிய கோமூத்தி ரத்தேட்டை, மகாமண்டூரச்சிந்தூரம் முதலிய அவுஷதங்களினாலும், 179, 188, என்னும் பக்கங்களில், பாண்டுரோகங்களுக்கும், சோபா ரோகங்களுக்கும் சொல்லியஅவுஷதங்களினாலும், பரிகரிக்கவேண்டும்.

ஒன்பதாவது மகாவாதரோகபடலம் முற்றியது.

---

உ

# 10-வது அதிதூலரோகபடலம்.

## அதிதூலரோகலக்ஷணம்.

தேகத்தில் சுபாவமாக இருக்கின்ற மாமிசபேதங்கள் அதிகரித்து வளருங்காரணத்தால் சரீரம்பருப்பதுமன்றி, ஸ்தனமும் வயிறும் தொடையும் பிரமாணமின்றிப் பருத்து அசைவற்றுக் கடினமாயிருக்கும். இதனால் சந்தோஷமுதலிய சவுக்கியங்களும் அறிவும்குறைதல், நடந்தால் அவ்அவ் இடத்துச் சதைகளெல்லாங் குலுங்குதல், ஆயாசம், இரைப்பு, கபாதிக்கம், பொடியிருமல், மேல்சுவாசம் முதலிய துர்க்குணங்கள் உண்டாகும். தூலம் என்பது பருத்தல்.

இது சுக்கில சோணிதங்களில் தோஷத்தை உண்டாக்கிக் கருப்பநாசத்தைச்செய்யும்.

இதனை கோமூத்திரம், நல்லெண்ணெய், தேனிற்கலந்த அசுவகந்திச் சூரணம் முதலிய அவுஷதங்களால், வசப்படுத்த வேண்டும்.

## அதிசுஷ்கரோகலக்ஷணம்.

சமாக்கினியின்சுகுணத்தால் செழித்துவளர்ந்த மாமிசங்களானவை அவ் அக்கினிக்குறைவால் சீரணிக்குங் காரணத்தால், சரீரம் சுஷ்குவதுமன்றி, நரம்புகளும், சீல்களும், கழுத்தும், வயிறும், தொடைகளும், தாடைகளும், புயங்களும் உலர்ந்துசூம்பலாகும்; அப்போது ஆயாசமும், துர்ப்பலமும், தேவாங்கு என்னும் ஒருவிதமிருகத்தையொத்த உருவமும் உண்டாகும். சுஷ்கம் என்பது இளைத்தல்.

இதற்கு, எருமைத்தயிர், சுத்தோதகத்தூறியவெந்தயம், நிலக்குமிள் சூரணம், கூஷ்மாண்டகிருதம் முதலிய அவுஷதங்களும் நன்மையாம்.

## மலட்டுரோகபேதம்.

சுக்கிலசோணிதங்களில், வாதாதிகளால் உண்டாகின்ற தோஷங்களினாலும், சன்மாந்தரபாவத்தினாலும், மலட்டுரோகம் உண்டாகும்.

அது, ஆண்மலடு, பெண்மலடு என இருவகைப்படும். இவற்றுள், பெண்மலட்டில், ஆதிமலடு, காகமலடு, கதலிமலடு, கருப்பமலடு என ௪ பிரிவுண்டு.

## ஆண்மலட்டுரோகலக்ஷணம்.

புருஷர்களின் விந்துவானது, தித்திப்பு இல்லாததும், சலத்தில் விட்டால்கரைந்து மிதப்பதும், உயிர்ப்பற்றதும், மூத்திரத்தில்நுரை கட்டுவதுமாயிருக்குமாயின் அதனுல் ஒருக்காலுங் கருப்பந்தரிக்க மாட்டாதென்றறிக.

இதனைப் பால் நெய் முதலிய மதுரவஸ்து, மதனகேசரிச்சூரணம், மன்மத சிந்தாமணிவடகம், சுவர்னபூரணதிலேகியம், பூரண சந்திரோதயம் ஆதியான வீரியவிருத்தி அவுஷதங்களைக்கொண்டு போஷிக்கவும்.

## பெண்மலட்டுரோகலக்ஷணம்.

ஸ்திரீகளுக்கு மாதாந்தர ருதுகாலத்தில் சிரவிக்கின்ற ரத்தமானது, சிவந்தும் கறுத்தும் விழுந்து, தேகத்தில் வாதகுணத்தையுண்டாக்கும்; இது வாததோஷமாம். மஞ்சள் நிறமாயும் நீல நிறமாயும் விழுந்து, தேகத்தில் பித்தகுணத்தை யுண்டாக்கும்; இது பித்த தோஷமாம். சீழைப்போல் வெளுப்பாக விழுந்து, தேகத்தில் மந்தாக்கினி முதலிய சிலேஷ்ம குணத்தை யுண்டாக்கும்; இது சிலேஷ்ம தோஷமாம். பிரேத ரத்தம்போலும் உருண்டையுருண்டையாயும் விழும்; இது வாதசிலேஷ்மதோஷமாம். சுத்தசீழ்போல்விழும்; இது ரத்தபித்தரோகதோஷமாம். கண்டுமறையும்; இது வாதபித்ததோஷமாம். மலமூத்திரநிறமாகவிழும்; இது சந்நிபாததோஷமாம். இவற்றுள், தனித்தனியான மூன்றுதோஷங்களும் தொந்ததோஷங்களும் முறையே சாத்தியமும் கஷ்டசாத்தியமுமாக இருப்பதால், சிகிச்சையினுல் மலடு நீங்கிக் கருப்பம் உண்டாகும். திரிதோஷம் அசாத்தியமாகையால், எவ்விதச் சிகிச்சைகள் செய்யினும் கருப்பந் தரியாதென்றறிக. சுக்கிலத்தையும் இவ்விதமாகவே நிதானிக்கவேண்டும்.

முற்கூறிய வாதாதிமூன்று தோஷங்களுக்கும், வாதபித்தசிலேஷ்மங்களுக்குரிய அவுஷதமும்; பிரேதரத்தநிறச் சோணிதத்திற்கு, ஆரைப்பூ, கருங்காலிப்பூ, மாதுளம்பூ, மருதம்பூ, செம்பரத்தம்பூ இவை

களின் ரசங்கூட்டிக்காய்ச்சிய கிருதமும்; உருண்டையான சோணிதத்திற்கும், சீழ்போன்ற சோணிதத்திற்கும், முருக்கஞ்செடியைச் சமூலமும் பஸ்மஞ்செய்து அந்தப்பஸ்மத்தையும், பீளைப்பூவையும் இடித்துச் சேர்த்துக்காய்ச்சிய கிருதமும்; க்ஷீணசோணிதத்திற்கு, ஈச்சம்பாளை ஆல் முதலிய பஞ்ச பல்லவ ரசங்கள்கூட்டிய கிருதமும் இன்னும் வீரிய விர்த்தியைச் செய்கின்ற பற்பல அவுஷதங்களும், மலமூத்திரத்திற்கு ஒப்பாகிய சோணிதத்திற்கு, பெருங்காயம், வெட்டிவேர் முதலியவைகளினாற் செய்த கிருதமும் நன்மையைச் செய்யும்.

## சித்தர்மதாந்தரம்.

அகஸ்தியமகாமுனிவர் அருளிச்செய்த 1500-ல் சொல்லியிருக்கிற, மலட்டுரோகம் ஏழுவிதப்படுகின்றன. அவைகளின் விவரம்:— 1-வது, புருஷன் புணரும்போது அந்தஸ்திரீக்குத்தலைநோவுகாணுமாகில், கருக்குழியில் பாரம் அல்லது பாசிபற்றி விளக்கமற்றிருக்கும்; 2-வது அந்தஸ்திரீக்கு அக்காலத்தில் சர்வாங்கத்திலும் நோவு காணுமாகில், கருக்குழியில் வாயுவு வியாபித்திருக்கும்; 3-வது, நெஞ்சுவலிகாணுமாகில், யோனியைச் சுருக்கித் தசைவளர்ந்திருக்கும்; 4-வது, முதுகுநோவுண்டாகில் யோனியில் கிருமிநிறைந்திருக்கும்; 5-வது, கண்டச்சதை வலிக்குமாகில், யோனியில் ரத்தங்கட்டியிருக்கும்; 6-வது, ஏப்பங்காணுமாகில், யோனிமதத்துக் கொழுப்படைந்திருக்கும்; 7-வது, விந்துசேராமல் நஷ்டப்படுமாகில், பேயினாலும், பயத்தினாலும், யோனிக்குள் விரோத வியாதியுண்டாயிருக்கும். இவைகளே மலட்டுரோகங்களாம். இவைகளுக்கு, ஷிமுனிவர் கூறிய சிகிச்சைகளைச் செய்யில், கருப்பம் உண்டாகும்.

சித்தர்மதாந்தரமுற்றியது.

---

## 1-வது ஆதி மலட்டுரோகலக்ஷணம்.

வயிற்றில் மூன்று மடிப்பும் விழுந்து இடுப்பும்பருத்துச் சரீரமும் ஸ்தூலித்தால், இவர்கள் தேவஸ்திரீகளாயிருந்தாலும், கருப்பந்தரிக்கமாட்டாது. இதனைச் சன்மமலடென்றுஞ் சொல்வர்.

## 2-வது காகமலட்டு ரோகலக்ஷணம்.

முதல் முதல் இரண்டு பிள்ளையைப்பெற்று, பின்பு கருப்பம் இல்லாதிருப்பது காகமலடாம்.

## 3-வது கதலிமலட்டு ரோகலக்ஷணம்.

வாழைமரத்தில் உண்டாகும் தாறுபோல் ஒரு பிள்ளையைப் பெற்று, பின்பு கருப்பம் இல்லாதிருப்பது கதலிமலடாம்.

## 4-வது கருப்ப மலட்டு ரோகலக்ஷணம்.

வயிற்றிலேயே செத்துச் செத்து விழுகின்ற பிள்ளையைச் சாதாரணமாக வருஷந்தோறும் பெறுவது கருப்பமலடாம். இவைகளுக்குக் கருமசாந்தியுடன் நாகப்பிரதிட்டையும் செய்து, சாரீரம் என்னும் சாஸ்திரத்தில் கூறிய பிரகாரம் சிகிச்சைகளையும் செய்தால், நல்ல கருப்பம் உண்டாகும்.

## அழிகருப்பலக்ஷணம்.

வயிற்றில் உருவம்ஏற்படாத இளங்கருவாயிருக்கும்போது, விலா, கீழ்வயிறு, மேல்வயிறு, பிட்டம் ஆகிய இவ்விடங்களில், அதிக உக்கிரமான வேதனையும், மார்புநோவும், முகவெளுப்பும், நாபியின்கீழ் உபத்திரவமும், ஆயாசமும், வயிற்றில் வாளால் அறுப்பதுபோல் இருத்தலும் உண்டானால், கருப்பங்கரைந்து விழுமெனநிதானித்துச் சிகிச்சைசெய்யவும்.

## கருப்பபேதம்.

அறிவதற்கு அருமையாகிய கருப்பமானது உபவிஷ்டக கருப்பம், நாகோதரகருப்பம், லீநாக்கியகருப்பம் என மூன்றுவிதப்படும்.

## 1-வது உபவிஷ்டக கருப்பலக்ஷணம்.

சில ஸ்திரீகளுக்கு, அக்கருப்பந்தரித்து நாளுக்குநாள் விருத்தியடையும்போது, மாதம்மாதம் ருதுகாலத்தில் வெளிப்படுவதுபோல் சோணிதம் வெளிப்பட்டுக்கொண்டே யிருக்கும்; அப்படி இருந்தாலும் அச்சிசுவுக்குக் கெடுதி இராது: ஆனால் அது காத்திரமாயிராமல் மிகவும் இளைத்து மரப்பாவையையொத்துத் தாய்க்குந்தெரியாமல்

வயிற்றுக்குள் ஒவ்வொருவேளை கொஞ்சம் அசைவதாயிருக்கும் இதனால், வயிறுபருக்க மாட்டாதென்றறிக. இதனை உபவிஷ்டகம், தங்குபிண்டம், சுப்திபிண்டம் எனவும் சொல்வர். இது, அல்குல்வழியாக ரத்தம் விழுகிற காலத்தும் பிரவிருத்தியாகிற காலத்தும் கருப்பஸ்தானத்தில் கொஞ்சம் அதிரலை உண்டாக்கும்.

உபவிஷ்டகம் என்பது பிண்டப்பிரவேசமாத்திரம் உடையதாம்.

## 2-வது நாகோதர கருப்பலக்ஷணம்.

துக்கம், உபவாசம், உஷ்ணதிரவிய போஜனம், அல்குலில்மாறாமல் ரத்தம்வடிதல், வாதாதிக்கம் ஆகிய இவைகளினால், கருப்பமானது விருத்தியடையாமல் இருப்பதுமன்றி, வயிற்றில் ஒவ்வொரு வேளை கொஞ்சம் அதிரலை உண்டாக்கும். அந்த மாதருக்குச் சிலநாள் வயிறு பருத்ததுபோலிருந்தாலும் பின்பு வாடும். நாகம் என்பது பாம்பு, உதரம் என்பது வயிறு.

மேற்கூறிய உபவிஷ்டி, நாகோதரம் என்னும் கருப்பங்களுக்கு, வாதஹரங்களான திரவியங்கள், நெய், பால், தயிர், மாமிசரசம் இவைகளினால் திருப்திசெய்வதும் அன்றி, சினையாயிருக்கின்ற மிருகமாமிசரசத்தினாலும் திருப்திசெய்து, சரீரத்தைப்புஷ்டியாக்கி, அந்த ஸ்திரீயைப் பல்லக்கு முதலிய வாகனங்களிலேற்றி உடம்பு குலுங்கும்படிச் செய்யவும்.

## 3-வது லீநாக்கிய கருப்பலக்ஷணம்.

இது, முற்கூறிய கருப்பத்தைப்போலவே இருந்தாலும், அசைவு மாத்திரம் இல்லாமல் மூன்று வருஷத்திற்குமேல் பிரயாசத்தோடு சிசுவு பிறக்கும், அல்லது மறைந்தாலும் மறையும். இது, வயிற்றுக்குள் அந்தர்ப்பூதமாக இருக்குங் காரணத்தால், லீநாக்கியகருப்பம் எனப்பேர் பெற்றது. இதனை மும்மாங்காய் எனவும் வழங்கிவருகிறார்கள்.

இக்கருப்பத்தை ராஜாளிப்பட்சி, கோவு, மச்சம், கத்திக்கொண்டே திரிகிற மிருகம் முதலியமாமிசங்களில் அதிக நெய்கூட்டிப் பாகஞ்செய்துக் கொடுத்துக், கருப்பத்தைச் சவுக்கியஞ்செய்யவும்.

கருப்பகாலத்தில் ஆகாத வஸ்துக்களைப புசித்தலினாலும், சிற்சில ரோகங்களினாலுங் காரணம் இல்லாமல், ருதுவாவது சூலையாவது உதா

வர்த்தவாயுவாவது காணுவதுண்டு. அதற்கு உடனேயே சிதோஷ்ண மான சிகிச்சைகளைச் செய்யவேண்டும். அப்படிக்குச் செய்யாவிடில், கருப்பம் சிதைவதும் அன்றித் தாய்க்கும் அபாயம் நேரிடுமென்றறிக.

## கருப்பம் மரிக்கும்லக்ஷணம்.

கருப்பஸ்திரீகளுக்கு மலமூத்திரபந்தம், வளையல் ஓட்டைப் போல் தேகங்கறுக்குதல், வாயில் அதிக துர்க்கந்தம் வீசுதல், கையும் காலும் மிகவும் கறுக்குதல், தலையிலும் முகத்திலும் வீக்கம், அடிக் கடி நெட்டுயிர்ப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகில், சிசுமரிக்கு மென்றறிக. இதனைக் கருப்பவியாப்தி என்றுஞ்சொல்வர்.

## அகமரித்த கருப்பலக்ஷணம்.

தெய்வச்செயல், திரிதோஷவிஷமம், அபத்தியம் ஆகிய இவைகளி னால் வயிற்றுக்குள் சிசுவு இறக்கும். இதனால், தொப்புளைச் சுற்றிலு மாவது வயிறுமுற்றிலுமாவது தேகமுற்றிலுமாவது சீதளம், வயிறு கெட்டியாக வுப்புதல், அதிசங்கட்டம், பிண்டம் அசையாதிருத்தல், மிகுந்ததாகம், ஸ்தனம்தளரல், பிரயாசத்தின்மேல் சுவாசம்வருதல், இளைப்பு, எந்த வஸ்துவிலும் அருவருப்பு, துர்க்கந்தத்துடன் குழம் பாக மூத்திரம் இறங்குதல், மயங்கிய நித்திரையில் இறந்தவர்களைக் காணுகின்ற கனவு, கண்வட்டமிட்டுச் சுழலல், பிரசவநோவு நீங்கு தல், மிகுந்தவேதனை எந்தப்பக்கந் திரும்பினாலும் அந்தப்பக்கத்தில் பிண்டமானது கனமாகத்தோற்றல், பிரமை, துக்கம், மரத்தல், வெந் நீர் ஆவிபிடித்த கையை வயிற்றின்மேல் வைக்கில் அதிரல் இல்லா திருத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்; அப்போது சிசுவு மரித்ததென்றறிந்து தாய்க்குச்சேதம் இல்லாமல் அந்தச்சிசுவைக் கைப்பழக்கத்தினாலாவது ஆயுதங்களினால் சேதித்தாவது மருந்தினா லாவது நஞ்சுக்கொடியுடன் சீக்கிரத்தில் வெளிப்படுத்தவேண்டும்.

அகம் என்பது உள்; மரித்தல் என்பது சாதல்.

## தருணப் பிரசவலக்ஷணம்.

வயிற்றில் கருப்பநிறைந்து இன்றைக்கோ நாளைக்கோ பிரசவம் என்றிருக்குங்காலத்தில், ஆயாசம், வயிறுதளரல், கண்கள் குழி விழு தல், பலவித இளைப்பு, சோகை கீழ்வயிறுகனத்தல், அரோசகம், வாய் நீரூறல், அடிக்கடி நீரிறங்கல், தொடை வயிறு இடுப்பு முதுகு மார்பு

கீழ்வயிறு இருகவுட்டி அபானம் என்னும் இவ்விடங்களில் நோவு, அல்குல்விரிதல், அவ் அல்குலில் அதிரல், வேதனை, ஒருவேளை ஊசியால் குத்துவதுபோல் குத்தல், சலம்பெருகுதல் என்னும் இக்குணங்களும், வயிற்றிற்பெரிய நோவென்னும் மிகுநோவும், சலோதயமும் உண்டாகும். இதுவே தருணப்பிரசவமாம். இதனை ஆசன்னப் பிரசவமென்றுஞ் சொல்லப்படும்.

## மல்கலாக்கிய சூலைலக்ஷணம்.

பிரசவித்தவுடனே அந்தஸ்திரீகளுக்கு, அழுக்கினால் மார்பிலாவது சிரசிலாவது கீழ்வயிற்றிலாவது, சகிக்கக்கூடாத குத்தலும் நோவும் உண்டாகும். இதனை மண்குத்துநோவென்று சொல்லுகிறார்கள். மல்கலம் என்பது அழுக்கின் சேர்க்கையால் பிறக்கும் வேதனையாம். இது, திரிகடுகு, லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, ஏலம் இவைகளைச் சுத்திசெய்து வெய்யிலில் உலர்த்தித் தனித் தனியே பொடித்து வஸ்திரகாயஞ்செய்து, வகைக்கு ஒருவராகனிடை நிறுத்துக் கழுநீரிலாவது வெல்லத்திலாவது கலந்து, இரண்டுவேளையுங் கொடுக்க நிவர்த்தியாகும்.

## அசாத்திய கருப்பலக்ஷணம்.

சிசுவு வெளிப்படாதிருக்குதல், அல்குல் தடித்து மூடிக்கொண்டு கொஞ்சம் வெளியில் சரிந்ததுபோலிருக்குதல், மல்கலசூலைகாணுதல், ஊர்த்தசுவாசம், துர்க்கந்தஏப்பம், தேகஞ்சில்லிடல் என்னு மிக்குணங்களுண்டாயிருந்தால், அந்த ஸ்திரீகளுக்கு வைத்தியத்தாற் பயன் இல்லை யென்றறிக: இதுநிற்க வஸ்திஸ்தானத்தில் சிக்கிக்கொண்ட கருப்பத்தினால் தாயிறந்தும், வயிறுமாத்திரம் வெந்நீர் ஆவிக்கு அதிருமாகில், அவ்வயிற்றைக்கீறி உபாயமாக அச்சிசுவைமாத்திரம் எடுத்துக்கொண்டு வளர்ப்பிக்கவும்.

## மூடவிஷ்டம்ப கருப்பங்களின் லக்ஷணம்.

மேடு பள்ள ஸ்தானப்படுக்கைமுதலிய துர்ச்செய்கைகளினாலும், அபானவாயுவின் விகுணத்தினாலும், பிரசவகாலத்தில் தாறுமாறாகப் புரண்ட விகற்பத்தினாலும், வயிற்றிலிருக்கும் சிசுவினது சிரசும், கையும், பாதமும் ஸ்தானந்தப்பி ஸ்தானத்தில் சிக்கிக்கொள்ளும். இதனால் அப்பிண்டம் வெளிப்படாமல் இருக்கும். இதுவே மூடகருப்பமாம். யோனிஸ்தானத்தில் ஒருகாலும், குதஸ்தானத்தில் ஒருகாலும்

மாட்டிக்கொண்டு ஸ்தம்பித்துப் பிரசவமுகங்காணதிருக்கும். இதுவே விஷ்டம்ப கருப்பமாம். இவற்றுள், எந்தக்கருப்பமாவது பிரசூதவாயு வினல் முருக்குண்டு அடிபடும்போது தாய்க்கு அதிக கருப்பவேதனை உண்டாகி, அச்சிசுவானது அவ் ஆயாசத்தினல் ஸ்தம்பித்து மயங்கிக் கிடக்கும்போது அவ்வேதனை திடீலென்று நின்றுவிடும். இதனல் அந்த ஸ்திரீக்குஇரண்டுநாள் மூன்றுநாள் வரைக்கும் பிரசூதவேதனை காண் பதும், சிசுவு வெளிப்படாமல் இருக்க அவ்வேதனை நின்றுபோவதும் உண்டு; அத்தருணத்தில் உயிர்த்திருக்கின்ற சிசுவைக் கைச்சாதகத்தி னலும் ஆயுதத்தினலு முபாயமாக வெளிப்படுத்தவேண்டும். அதை விட்டு மரித்ததென நினைத்து அச்சிசுவைச் சேதிப்பார்களாகில், அத் துடன்கூடத் தாய்க்கும் சேதம் வருமென்றறிக. இக்கருப்பங்கள் உள் ளில் உபத்திரவஞ் செய்வதும் ஸ்தம்பிப்பதுமாக இருக்குங்காரணத் தால், மூடவிஷ்டம்ப கருப்பங்கள் எனப்பேர் பெற்றன.

பிரசவித்து மூன்றுமாதமான ஸ்திரீகளுக்கு ஆமாசய ஸ்தானத் தில் ரூட்சைகாணுவதும் உண்டு அதற்கு, வெட்டிவேர், சீந்தில்தண்டு கொத்துமல்லிவிதை, பூனைப்புழுக்கம்வேர், பற்பாடகம், சந்தனக் கட்டை அதிவிடையம், சிற்றுமுட்டிவேர் இவைகளை வகை 1-க்குப் பலம் $\frac{1}{4}$-ஆக நிறுத்து நய்ய நருக்கி, ஒருபடி நல்லசலத்தில் சேர்த்து, அத்தொகையில் 4-ல் ஒருபங்காகக்காய்ச்சிய கஷாயத்தை அவ்வெப் பம் தணியும்பரியந்தம் காலையிலும், மாலையிலும் கொடுக்கவும். இதற்கு இச்சாபத்தியம்.

எந்த ஸ்திரீகளுக்கும் கருப்பமடைந்த மாதம் முதல் ஏழுமாதம் வரைக்கும் இளநீர்வழுக்கையின் தன்மையை யொத்து வளருகின்ற இளங் கருவாகையால், அது வாதாதிகளினலும் தகாத நடத்தைகளி னலும் ஒருவேளை கரைந்தும் கரையாமலும் விழும். அப்படிக்கு விழ ஒட்டாமல் அந்தந்த மாதங்களுக்கும் தனித்தனியே சாரீரசூத்திரம் என்னும் சாஸ்த்திரத்திற் சொல்லியபிரகாரம் அவுஷதங் கொடுக்க வேண்டும். அந்த ஏழுமாதத்திற்குமேல் வயிற்றில் பிண்டஞ்சிக்கிக் கொள்ளாமல் சுகப்பிரசவம் ஆகும்பொருட்டுப் பத்துமாதம்வரைக் கும் ஆமணக்கின் நெய் கூட்டிய சுகுமாரவிரேசன அவுஷதமுதலிய சிகிச்சைகளைச் செய்ய வேண்டும்.

சில ஸ்திரீகளுக்குக் கருப்பஸ்தானத்தில் வாதாதிக்கத்தால் கட்டுப்பட்டிருக்கின்ற ரத்தமானது, கார சார உஷ்ணமுள்ள வஸ்துக்களினால் கரைந்து விழுவதுண்டு. அதைச்சிலர் பிண்டமெனநினைத்துப் பைசாசு அறைந்ததினால் கரைந்து விழுந்ததென வீண் தூறுசொல்வர்.

## வஷ்டி ரோகலக்ஷணம்.

பிரசவித்துச் சரீரமுழுதும் பச்சைப்புண்போல் இருக்கின்ற ஸ்திரீகளுக்கு, எந்நேரமும் உடம்பு அதிரும்படியான அதிக சையோகத்தினாலும், சதுர்த்தசவேகத்தை மறித்தலினாலும், கருப்பகால அபத்தியத்தினாலும், கருப்பஸ்தானத்தில் இருக்கும் வாயுவானது அதிகரித்து, இடுப்பு, பிட்டம், திரிகஸ்தானம், கவுட்டி, யோனி, கீழ்வயிறு, தொப்புள், முலைக்காம்புக்குங் கீழ்ப்பக்கம் ஆகிய இவ்விடங்களில் சகிக்கக்கூடாத பிரசவ நோவைப்பார்க்கிலும் அதிக நோவை யுண்டாக்கும். இதை, ரத்தக்குன்மக்கட்டி, அஷ்டிலிகாவாதக்கட்டி எனவுஞ் சிலர் சொல்வர். இவ்விரண்டும் அல்லவேயல்ல. இது, சையோகம் ஆதியாக வரும் உபத்திரவத்தால் பிறந்த சுத்தவாதக்கட்டி எனவே ஐயமறச் சொல்ல வேண்டும். ஏனெனில், இது பக்கங்களில் குத்தலையும் நோவையும் தபித்தலையும் உண்டாகச்செய்வது மன்றி, தான் அநுசரித்த பக்கத்தில் மிகுந்த வேதனையைக் கொடுத்துச் சமுத்திரத் தவளையைப்போல் கருப்பமுகத்தை அடைத்துக்கொள்ளுவதால் என்றறிக. முற்கூறிய கட்டிகளோ ஆயின், அதுகளுக்குச் சுதாவில் கரைந்து விழுகின்ற தன்மை இராது. இதுவோ வென்றால், மாதாந்தருதுகாலத்தில் அதிகரித்த வாயுவின் வேகத்தால் அடிபட்டு அல்குல் வழியாகப் பட்டைக் கஷாயத்தைப்போலும் மாமிசங் கலந்த சலத்தைப் போலும் கரைந்து ஒழுகுவதும் அன்றி, தெளிந்தும் குழம்பியும் கறுத்தும் குறைந்தும் அதிகரித்தும் உதிரமாகப் பெருகும். இச்சையால் உண்டாவதற்கு, வஷ்டிரோகம் என்று பேராம். இதில் வாயுவு அதிகரிக்கில், துவஷ்டி ரோகமாம்.

இதனை மந்த்ரசானியின் லேபனுங்குலிச் சாதகத்தினாலும், காரசாரத்தினாலும், வாதாரி எண்ணெய்களினாலும், தேகபுஷ்டிக்காகப் பிறந்த அவுஷதமுதலிய சிகிச்சைகளினாலும் பரிகரிக்கவேண்டும்.

கருப்ப பேத ரோகலக்ஷணம் முற்றிற்று.

## இனி, பாலரோக நிதானம்.

### பாலரோகபேதம்.

பால்குடிக்கும் சிசுக்கள், பாலும் அன்னமும் அருந்தும் சிசுக்கள், அன்னமாத்திரம் புசிக்கும் சிசுக்கள் ஆகிய மூன்றுவிதச்சிசுக்களுக்கும் அசிரணம் என்கின்ற அலஜரோகம் உண்டாகும். இதனை, மந்தம், மாந்தம், பால்கட்டு, புளிப்பு எனவுஞ்சொல்வர். இவை நிற்க, வாதம், பித்தம், சிலேஷ்மம் என்னும் மூவகைத் தோஷங்களால் கெடுதியை யடைந்த முலைப்பாலின்வழியாகப் பால்குடிக்கும் சிசுக்களுக்குப் பால் மாந்தம் என்கின்ற க்ஷீராலஜகரோகம் பிறக்கும். அது பாலூட்டிய தாய்க்கு ஒத்தபடியே வாதாதிகளால் மூவிதப்படும். இதனால், ஆமாசய ஸ்தானத்தைப்பற்றி வாதகுண்டாலம், பித்தகுண்டாலம், சிலேஷ்ம குண்டாலம், தாலுகண்டகம், நிசூளிகாவிரணம், பாலசோஷம், துந்தம், குதக்கூடம், விஷமசிரா, முகதூஷிகம் எனப் பத்துவிதரோகம் உண்டாகும்.

### க்ஷீரபேதம்.

வாத பதார்த்தஞ் சேர்ந்த அன்னம், விரோதபலகாரம் முதலியவை களைப்புசிக்குதல், பசியால் வருந்தல், சித்தப்பிரமை, பற்பல ரோகம், கருப்பம் ஆகிய இவைகளையுடைய ஸ்திரீகளின் முலைப்பாலால், பரிசுத்தமாக இராநின்ற பாலர்களுக்கு அநேகரோகம் உண்டாகும். இவற்றுள், கருப்பஸ்திரீகளின் முலைப்பாலானது எவ்வளவுங்கூடாது. அது சேர்ந்தால், அக்கருப்ப வயிற்றைப்போலவே சிசுக்களுக்கும் வயிறு பருக்கும் என்றறிக. இதுநிற்க, சிசுக்கள்தங்களுக்கிருக்கும் சங்கடத்தை இவ்விதமெனச் சொல்ல ஞானமில்லாமையால், அச்சங்கடத்தையும், உள்காய்ச்சலையும், சீதளத்தையும் இன்னும் பலவிதநோவையும், அவ் அழுகையினால், மருத்துவர் அதிநுட்பத்துடன் யூகித்து நிதானிக்கவும். க்ஷீரம் என்பது பால்.

### க்ஷீராலஜகரோகலக்ஷணம்.

திரிதோஷத்தால் கெடுதியை அடைந்த முலைப்பாலைக் குடிக்கும் பாலர்கட்கு, மலமானது துர்க்கந்தத்துடன் அசீரணப்பட்டு, சுத்தசலம் போலும் கலங்கல் சலம்போலும் கட்டுப்பட்டதுபோலும் சிதறிச் சிதறி நானாவித நிறமாகவும் பேதியாகும். அன்றியும் மூத்திரமானது

மஞ்சள் வெண்மை நிறத்துடன் குழம்பாக இறங்கும், இதனால், சுரம், அரோசகம், தாகம், வாந்தி, சுபாவஜப்பம், கொட்டாவி சர்வாங்க நோவு, குத்தல், நடுக்கல் வயிற்றில் இரைச்சல், பிரமை கண் நாசி வாய் என்னும் இவ்விடங்களில் துர்க்கந்தம் முதலிய குணங்கள் உண்டாகும். இது, வாதாதி மூன்று தோஷங்கள்சேர்ந்த மூலப்பாலால் பிறப்பதால், அந்தந்தப் பேதங்களை அறிந்து உசிதமான சிகிச்சைகளைத் தகுந்த படிக்குச் செய்யவும்.

## குண்டாலரோகபூர்வரூபம்.

இது, 145-வது பக்கத்தில்கூறிய வித்திரதிக் கட்டிகளைப்போல வே ஆரம்பித்து, மாமிசதாதுவை ஒட்டிக் கட்டிகள்பிறக்கும். பழுக் குங் காலத்தில் அதுகளில் சிறுகலசத்தைப்போல் பள்ளம்விழும் இதுவே குண்டாலக்கட்டியின் பூர்வரூபமாம்.

குண்டாலம் என்பது செவ்வாப்புக்கட்டி.

## 1-வது வாதகுண்டாலக்கட்டி.

இது, கறுத்த நிறத்துடன் எழும்பும்; அப்போது அதில் குத்த லும் தேகத்தில் சுரமும் உண்டாகும். இதுவே, வாதசெவ்வாப்புக் கட்டியாம். இதற்கு வச்சிரபீச எண்ணெய்யும் பிரயோகஞ்செய்யலாம்.

## 2-வது பித்தகுண்டாலக்கட்டி.

இது மஞ்சள் சிவப்பு நிறங்களை உடைத்தாய், நீங்காத எரிச்சலைக் கொடுத்துச் சீக்கிரத்தில் பழுத்து உடையும். அப்படி உடைந்தால், அக் கட்டிகளில் நின்றும் வெறும் ரத்தமாத்திரம் வடியும். இதுவே பித்த செவ்வாப்புக் கட்டியாம். இது பஞ்சாங்குலப் பாவனத்தயிலத்தாலும் வசப்படும்.

## 3-வது சிலேஷ்மகுண்டாலக்கட்டி.

இது, கனத்தும் வெளுத்தும் நமைச்சலுடன் அசைவற்றும் புடைகள் உள்ளதாய் வெகுகோரமாக எழும்பும். இதுவே, சிலேஷ்ம செவ்வாப்புக்கட்டியாம். இக்கட்டி கஷ்டசாத்தியமாம்; ஆயினும் ஆகாயத்தாமரை எண்ணெய்யினால் சாத்தியம் ஆனாலும் ஆகும்.

## 4-வது தாலுகண்டகரோகம்.

இது, சிலேஷ்மதோஷம் அதிகரித்துத் தாடைகளில் இருக்கும் மாமிசத்தை அநுசரித்து அவ்விடத்திலும் தலையிலும் குழிவிழும்படிக் குச் செய்யும்போது பிறக்கும். இதனால், சிசுக்களுக்கு முலைப்பாலில் அசங்கியம், பிரயாசத்தின்மேல் கொஞ்சம்பாலுண்ணல், தாகம், வாயில் நமைச்சல், கண்ணோவு, கழுத்துவிருத்தல், வாந்தி, பச்சைநிறத்துடன் சஞ்சலமானபேதி என்னு மிக்குணங்கள் உண்டாகும். இது, தாடையில் முள்ளூறுத்தல்போல் உபத்திரவத்தை யுண்டாக்கலால், தாலுகண்டகமெனப் பேர்பெற்றது. இதனைத் தாலுபாகரோகமெனவுஞ் சிலமதாந்தரத்தில் சொல்லப்படும்.

இதனை, கருந்துளசிவேர்க்கஷாயம், அமுதாதிக்குளிகை, சுண்ணநீராலரைத்த அபகாந்தச் செந்தூரம் முதலியவற்றால், நிவர்த்தி செய்யவும்.

## 5-வது நிசூளிகாவிரணரோகம்.

இது பித்தத்தினால் நமைச்சலுடன் கூடப்பிறக்கும்; அப்போது உடம்பெங்குஞ் சிறுசிறு கொப்பிளங்கள் எழும்பி அடங்கும். அடங்கினது இரவிலாவது பகலிலாவது முன்பு உண்டானதுபோல் மிகு நெருக்கமாகப்பரவும். இது சரீரமுற்றிலும் வேர்க்குருக் கொப்பிளங்களினால் சட்டைப் போட்டதுபோல் மறைப்பதால் நிசூளிகா விரணமெனப் பேர்பெற்றது. நிசூளிகை என்பது சட்டை.

இது ஜெய ரசபஸ்மஞ்சேர்ந்த ஆமணக்கு நெய் முதலியவற்றால் விலகும்.

## 6-வது பாலசோஷரோகம்.

இது, குளிர்ந்தசலம், சிலேஷ்மப் பிரதானமானபால் இவைகளைக் குடித்துப் பகலில் நித்திரையுஞ்செய்து அதின்மேல் முலைப்பாலையுங் குடிக்கின்ற சிசுக்களுக்கு, ரசதாது ஓடுகின்ற சிலேஷ்ம நரம்புகளின் மார்க்கத்தை அச்சிலேஷ்மமேநிறைந்து அடைத்துக்கொள்ளும்போது பிறக்கும். இதனால், சரீரசுஷ்கம், முகத்திலும் கண்ணிலும் காந்தி நீங்குதல், பீநசம், அரோசகம், சுரம், இருமல் என்னும் இக்குணங்கள் உண்டாகும், இதனை உள்ளுருக்கி, உடலுருக்கி எனவும் சொல்லுகிறார்கள். இதற்குச் சிலேஷ்மாரிக் குடிநீரும், தேக புஷ்டிக் கிருதமும் ஆகும்.

## 7-வது துந்தரோகம்.

இது, வாயுவினுல் பிறக்கும்; அப்போது சிசுக்களுக்கு வயிறுப்பு தலும் நாபியில் நோவும் உண்டாகும். துந்தம் என்பது அசீரணவயிறு.

இதனை வாதாரிக்கருக்கு முதலியவற்றுல் நிவர்த்திசெய்பவும்.

## 8-வது குத்க்கூடரோகம்.

இது, பாலர்கட்குவயிற்றிற் புளித்தமலஞ்சேருவதினுலும் அதிசாரரோகத்தினுலும் பிறக்கும்; அப்போது, குதஸ்தானத்திற் சிவந்த சிலேஷ்மமொத்தையைப்போல் சிவந்த நிறத்தையுடைய விரணமும், உள்ளில் அதிக நமைச்சலும், இதனுல் மிகுந்த உபத்திரவமும் உண்டாகும். இதனைச்சிலர் மாதுருதோஷம், ஏதுகம், பிரஷ்ட்டருக்கு, சதனம் எனவுஞ் சொல்வர். குதம் என்பது ஆசனம்; கூடம் என்பது புற்று.

இதற்குச் சிதோஷ்ணகாரசாரம் முதலிய சிகிச்சைகளும் உதவும்.

## 9-வது விஷமசிராரோகம்.

இது, அசீரணத்தினுல் சிசுக்களுக்கு ரத்தநரம்புகளில் எங்நோமும் காங்கையும் அதிக நமைச்சலும் உண்டாகும்போது பிறந்து, மிகுந்த உபத்திரவத்தைச் செய்யும். சிரா என்பது நரம்பு.

இதற்குக் கபாரிவிரேசனமும், சுரைவித்தாதிக் கல்கப்பூச்சுக் குளியலும் ஆகும்.

## 10-வது முகதூஷிகரோகம்

இது, சிலேஷ்மவாதம் அதிகரித்ததினுல் பிறந்து, சிசுக்களுக்கு வாயில் இலவமுள்ளுகளைப்போலவே முள்ளுகளையுண்டாக்கும். முகம் என்பது வாய்; தூஷிகம் என்பது விகாரம். இதனை நாய் முள்ளு என்பர்.

இது செக்கான் கைதுவட்டும் எண்ணெய்ச் சீலையாலும் விலகும்.

## தந்தோற்பவரோகம்.

இது, பஞ்சினது நூல் சரடு கயிறு முதலியவைகளைச் சிசுக்கள் விழுங்குங்காரணத்தால் பிறக்கும். இதனுல், அதிகசுரம், ஓயாதபேதி,

இருமல், வாந்தி, தலைநோவு, ஒருவேளை மலபந்தம் முதலிய ரோகங்களும் உண்டாகும் தந்து என்பது நூல்; உற்பவம் என்பது உண்டாகுதல்.

இதற்குச் சுகவிரேசனம் நன்மையைச் செய்யும்.

## உல்பகரோகலக்ஷணம்.

பிரசவித்தமறுமாத ருதுகாலாந்தத்திலேயே புருஷனைச் சேர்ந்து மறுகருப்பத்தைக்கொண்ட வாலிந்தி என்கிற ஸ்திரீகளுக்குக் கருப்பாசயத்தில் பிண்டோற்பத்திக்குக் காரணமான கருப்பச்சலத்தினால், கண்டகமென்கிற சிலேஷ்மம் இருக்கின்ற பையானது விருத்தியடையும்போது, அன்னரசமானது சிசுபோஷகங்களான நாடிமார்க்கங்களில் விருத்தியடையும். இதனால், முன்பு பிறந்திருக்கின்ற சிசுவானது மயக்கத்துடன் கைகளை முஷ்டிபந்தமாக மூடிக்கொள்ளும். அன்றியும் மார்புநோவு, கால்கைகளைச் சொறிதல், இருமல், இரைப்பு, வாந்தி சுரம் முதலிய ரோகங்களினால் இளைக்கும். இது, தாயினது கருப்பத்தால் பிறந்தமையால், சகசரோகமெனவும், அம்புபூரணரோகமெனவும் சொல்லப்படும்; இது, முலைமார்க்கச் சலத்தால் பிரவேசித்துச் சிசுவை மூடுதலால், உல்பகரோகம் எனப்பேர்பெற்றது.

உல்பகம் என்பது மறைப்பதாம்.

இதற்கு வேறுமுலைப்பால் ஊட்டுவதுந் தவிர, அப்பிரசவம் ஆகும் பரியந்தம் இச் சிசுவைப் பாதுகாக்கவேண்டும்.

## பாலவிசர்ப்பிரோகலக்ஷணம்.

பாலர்கட்கு விசர்ப்பிக்கொப்பிளமானது கீழ்வயிற்றிலும் தலையிலும் வியாபிக்கில் மரணத்தைக்கொடுக்கும். அன்றியும், திரிதோஷத்தாற் பிறந்த விசர்ப்பிக்கொப்பிளமானது செந்தாமரை இதழையொத்திருப்பதால், இதனைமகாபதும விசர்ப்பி எனவுஞ்சொல்வர். இது; முதல் முதல், நரம்பின் வழியாக நெற்றியில் கனத்து மார்பிலிறங்கும். பின்புமார்பில் இருந்து குதஸ்தானத்திலிறங்கும்; இப்படிக்கு அதோமுகமாக இந்தரோகம் இறங்கி இறங்கிச் சுற்றுவதால், அசாத்தியமாம். ஆயினும், 191-வது பக்கத்தில் இவ்வித ரோகத்திற்குச் சொல்லிய சிகிச்சைகளில், சுகுமார அவுஷதங்களை எடுத்துப் பிரயோகிக்கில், சாத்தியம் ஆனாலும் ஆகும்.

## மிருத்திகாபக்ஷணரோகலக்ஷணம்.

தினந்தினமும் மண்ணைத் தின்னுகின்ற சிசுக்களுக்கு, தேகம் வெளிறலுடன் வீக்கம், இருமல், இரைப்பு, பேதி, வயிற்றிற்கிருமி சேருதல், வாந்தி, மூர்ச்சை, மந்தாக்கினி, மூலைப்பாலில் அசங்கியம், சரீரநோவு பிரமை முதலிய ரோகங்கள் உண்டாகும். இதற்கு, ரத்த விருத்தி அவுஷதமே முதவும்.

## பாரிகர்க்கிகரோகலக்ஷணம்.

கருப்பஸ்திரீகளின் பாலைக்குடிக்குஞ் சிசுக்களுக்கு, இருமல், மந்தாக்கினி, அரோசகம், வாந்தி, சோம்பல், இளைத்தல், பிரமை என்னும் இக்குணங்கள் பிறப்பதும் அன்றி, வயிறும்பருக்கும். பாரிகர்க்கிகம் என்பது சர்வாங்கத்திலும் சகிக்கக்கூடாத உபத்திரவத்தைச் செய்வதாம். இது, கபாரிச்சிகிச்சைகளால் நீங்கும்.

## பாலரோகஞாபகம்.

மலபந்தம், வாந்தி, மூலைப்பாலில் அசங்கியம், குடல் இரைச்சல், வயிறு பொருமலுடன் பருத்தல், சரீரங்கூன் வீழ்தல் என்னும் இக்குணங்கள் இருந்தால், அச்சிசுவுக்கு வயிற்றைப்பற்றிய ரோகமென்றறியவும்.

## வஸ்திகுப்பரோக ஞாபகம்.

மல சல பந்தம், திடுக்கெனப்பயப்படல், வெருட்சியாக விழித்தல் என்னும் இக்குணங்கள் இருந்தால், அச்சிசுவுக்குக் கீழ்வயிற்றையும், குய்யஸ்தானத்தையும் பற்றியரோகமென நிதானிக்கவும்.

## சகலரோகஞாபகம்.

சிறிச்சிறி அழுகின்ற விகாரக்கூச்சலினாலும், தேக மெலிவினாலும், ரோக சுபாவகுணங்களினாலும், இன்னும் பலவித அநுபவக்குறிகளினாலும், இன்னவிதரோகமென யூகையுடன் நிதானித்துச் சிசுக்களுக்குத் தகுந்தபடி சிகிச்சைசெய்பவரே பண்டிதர்களாம்.

---

## சித்தர்மதாந்தரம்.

ஊழ்வினை, தாய்தந்தைகளின் சோணித சுக்கிலங்களைப் பற்றிய ரோகம், கெடுதியை அடைந்த முலைப்பால், அதிகதிண்டி ஆகிய இவைகளால், சிசுக்களுக்குக் கணரோகம் முதலிய பலவிதரோகம் உண்டாகும்.

## கணரோக பேதம்.

கணரோகம் எண்விதம் ஆவன:—சூலிகணம், முக்குகணம், ஆமகணம், தேரைக்கணம், மகாகணம், கழிகணம், சுழிகணம், வறள்கணம் என்பதாம். மாதா பிதாக்களின், நாதவிந்துக்குள் அடங்கிய வாதாதி தோஷங்களில் நின்றும் உற்பத்தியாகிக் கருப்பாசயத்துச் சிசுவைப் பற்றி அச்சிசுவினது சப்ததாதுக்களும் வன்மையை யடையுங் காலத்தில் விருத்தியை அடைவதால், இதுகணரோகம் எனப்பெயர்பெற்றது.

கணம் என்பது கூட்டம்.

## சாமானியகணரோக லக்ஷணம்.

மார்பிலும் முலையிலும் குண்டுபோல்வீக்கம் எழும்புதல், தேகவாட்டம், வாய்நாற்றம், தலைச்சுற்றல், உள்சுரம், ஒருவேளை வெளிச்சுரம், சிலவேளை வயிற்றின்மேல் சுடுகை, மயக்கம், வறண்டமலம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இக்குணங்கள் சகல கணரோகங்களுக்கும் பொதுவாயிருக்குமென்றறிக. இது 12 வயதுவரைக்கும் தொடரும்.

## 1-வது சூலிகணரோகம்.

மேல்மூச்சு, இருமல், நெஞ்சும் நாவும் நாபியும் புண்போலிருத்தல், பாலுண்ணாமை, முகநாற்றம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது முக்குகணரோகம்.

வயிற்றுக்கடுப்பு, நாவில்வெடிப்புடன் வெந்ததுபோலிருத்தல், வறஎல், சுரம், தலைவலி, எரிச்சல், ஆசனம் வெளிப்பட்டு முக்கலுடன் ரத்தமும் சீதமும் ஒழுகுதல், தேகவாட்டத்திலும் கறுத்தநிறம், முடி சோறுதல், தாகம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதுவே மூலகணமாம்.

## 3-வது ஆமக்கணரோகம்.

நெஞ்சில் துடித்தல், சிறுநீர்மஞ்சளாக இறங்குதல், தேகத்தில் புகை கப்பினதுபோல் மாறுநிறம், ஒருவேளை சர்வாங்கத்திலும் வெதும்பல், இருமல், வயிறிரைச்சல், புகைந்துபுகைந்து மேல்மூச்சு உண்டாகுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது தேரைக்கணரோகம்.

வாதநாடி மற்றநாடிகளில் பின்னிக்கொண்டு நடக்குதல், புளிப்பு துவர்ப்புள்ள வஸ்துக்களில் வெறுப்பு, அன்னத்திவேஷம் திரிதோஷாதிக்கம், நாபியில் புண்போலிருத்தல், உட்காய்ச்சல் தேகவாட்டம், எரிகுன் மக்குணம், பித்தவெட்டை, தாதுநஷ்டம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது, 6-வயதுக்குள் நீங்காவிடில் 32-வயதுவரைக்கும் இருக்கும்.

## 5-வது மகாகணரோகம்.

முகம் புறங்கால் புறங்கை இவ் இடங்களில் மினுமினுப்பு, நகமும் விழியும்வெளிறல், மயக்கம், மிகுந்தவெதும்பல், உதடுபுண்போல் சிவந்திருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது கழிகணரோகம்.

சீதஞ்சீதமாயும் மலமாயும் பாலைப்போலவும் சலம் சலமாகவும் பேதியாகுதல், உள்ளங்கை உள்ளங்கால்களில் சீதளம், ஒருவேளைக் காங்கை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 7-வது சுழிகணரோகம்.

கண்சொருகுதல், மார்புநோவு, வயிறு ஈரல் நெஞ்சு நரம்பு இவைகள் வெந்ததுபோலிருத்தல், பால்உண்ணுமை, அலறுதல், இருமல், செருமுதல், மேல்மூச்சு, கைகால்களில் சீதளம், வயிற்றுப்பொருமல், நோவு, சுரம், நாக்குவறளல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 8-வது வறள்கணரோகம்.

மேனிவறளல், நெஞ்சுதுடித்தல், புகைந்திருமல், மாறுநிறம், விட்டு விட்டு வயிற்றில் இரைச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

இவைகளைப் பஞ்சாங்குல பாவனத்தயிலம், வலப்பக்கல்சேர்ந்த கணத்தெண்ணெய், தாரோஷ்ணம் முதலிய உபாயச் சிகிச்சைகளைக் கொண்டு நிராகரிக்கவேண்டும்.

ஆ கணரோகம் 8-ம் முற்றியது.

## சித்தர்மாந்தரோகபேதம்.

வெல்லம், தேங்காய், மாங்காய், சுண்டற்கறி, வழுக்கைக்கீரை, வாளைமீன், வரால்மீன், கெட்டுலர்ந்தபள்ளை ஆட்டின் இறைச்சி, புளிப்பு மோர், பாகற்காய், முதிர்ந்தவாழைக்காய், கிழங்குவகை மந்தவஸ்து, எருமைப்பால், தினசையோகம், சரகுஊரியசலம், சலதோஷம், பசி, துயரம் என்னுமிவைகளை அநுசரிக்கும் ஸ்திரீகளின் முலைப்பாலைக் குடிக்கும் சிசுக்களுக்கு மாந்தரோகம் உண்டாகும். அது, செரியா மாந்தம், பீர்மாந்தம், சுரமாந்தம், விஷமாந்தம், கழிமாந்தம், ஊதுமாந்தம், நீர்மாந்தம், தலைமாந்தம் என 8-விதப்படும். அன்றியும், சிங்கி மாந்தரோகம் என்பது ஒன்றுண்டு.

## மாந்தரோகக்குறி.

பசியில்லாமை, சீதங்கலந்த நானாவித நிறத்துடன் பால்போலவும் தெளிந்த சலம்போலவும் துர்க்கந்தமாகவும் பேதியாகுதல், சுரம், மயக்கம், கையும் காலும்சில்லிடல், கண்களில் வெதுப்பம், ஒருவேளை குளிர்ச்சி, சோருதல், முகத்தில்பல நிறத்துடன் பளபளப்பு இவை முதலிய குணங்கள் உண்டாகும். இக்குணங்கள் சகலமாந்தத்திற்கும் பொதுவாயிருக்கும் என்றறிக.

## 1-வது செரியாமாந்தரோகம்.

வயிறு உப்பலோடு மாவைக்கரைத்ததுபோல் கண்டலும் கரைசலுமானபேதி, விக்கல், சுரம், தலைவலி, அரைக்கண்மூடியபார்வை, துர்ப்பலம், துயரம், சோருதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது பீர்மாந்தரோகம்.

வயிறு பொருமலுடன் பால்நிறமானபேதி, புகைந்திருமல், பால் உண்ணாமை, வாந்தி, கண்களில் குழிவிழுதல், தாகம், அதிகவெப்பம்,

மார்புநோவு, தலைநடுக்கல், வயிற்றுவலி, சீறிச்சீறி அழுதல், பெருமூச்சு, சுரம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். பீர் என்பது பால்.

## 3-வது சுரமாந்தரோகம்.

சுரம், முலையை வாயில்வைத்து ஊட்டுகினும் கொஞ்சம் கொஞ்சம் உண்ணுதல், அடிக்கடி அழுகை, பொடி இருமல், மலசலக்கட்டு, பசியில்லாமை, மயக்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது விஷமாந்தரோகம்.

அரைக்குங் கீழ்ச்சீதளம், வயிறிரைச்சல், பயந்தபார்வை. தாய் கையிலுந்தங்காமை, சோருதல், மயக்கம் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 5-வது கழிமாந்தரோகம்.

நானாவிதமான கழிச்சல், வாந்தி, மயக்கம், சுவாசம், வாயும் குரலும் சில்லிட்டதுபோல் தோற்றுவதுமன்றி, வயிறு கைகால் இவ் இடங்களில் சீதளத்துடன் வியர்வை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது ஊதுமாந்தரோகம்.

கால் கை வீக்கம், சோர்வு, சுரம், அன்னபானாதிகள் இறங்காமை, நாவில் புண்போலிருத்தல், மிகுந்தசுவாசம் எழும்புதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது, 12-வயது வரைக்கும் போராடும்.

## 7-வது நீர்மாந்தரோகம்.

சர்வாங்கவியர்வை, சீதளம், குளிர், முகத்தில் பளபளப்பு, தேகத்திலாவது கை கால்களிலாவது தினவுடன் வீக்கம், தலைநோவு, மூக்கலுடன் நீரிறங்குதல், இரைந்திரைந்து வயிறுகழிதல், வாய்நீரூறல், ஒக்காளம், மெலிந்தவார்த்தை, உறக்கம், நகைப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 8-வது தலைமாந்தரோகம்.

தலையிலும் கழுத்திலும் ஊதல், கை கால்களில் குளிர்ச்சி, சர்வாங்க நோவு, ஒருவேளை குலைநோவு, இதனால் துள்ளித்துள்ளிவிழுகுதல், குளிர்சுரம், முகத்தில் வியர்வை, புருவவேதனை, பலவித நிறமானபேதி,

வயிறு பொருமல், வலி, விழித்தபார்வை, ஏப்பம், நாசியிற் புண்போல் நோவுடன் நீர்வடிதல், மார்புவலி, பற்கிட்டலுடன் நெறநெறென்று கடித்தல், இசிவு, கைகால்களில் இசிவு, எழுந்திருக்கக் கூடாமை, அன்னபானாதிகளில் வெறுப்பு, அசதி, கொட்டாவி இளைப்பு என்னு மிக்குணங்களை யுண்டாக்கும்.

## சிங்கிமாந்தரோகம்.

நாபியில் தீயெழும்புதல்போலும் ஈரலில் புண்போலும் இருக்குதல், திணறலானமேல்மூச்சு, சுரம், திமிர்என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதனை மாந்தசுரமென்பர். அன்றியும் உள்ளில்வெப்பம் இருந்தால், கணமாந்தம்; கண்சொருகினால், சொருகுமாந்தம்; உச்சியில்குழி விழுந்தால், குழிமாந்தம்; கைகாலை இழுத்தால், இழுப்புமாந்தம்; வயிறு உப்பினால், உப்புமாந்தம்; இரைத்தால், இரைப்புமாந்தம்; பேதியில்லா விட்டால், கட்டுமாந்தம்; விலாவைத்தூக்கினால், அள்ளுமாந்தம்; விக்க லிருந்தால், விக்கல்மாந்தம்; வாதபித்த சிலேஷ்மங்களின் சேஷ்டைகள் அதிகரித்தால். அவைகளின் பேர்கொண்டமாந்தம்; சந்நிபாதக்குறிகள் இருந்தால் சந்நிமாந்தம் எனவும் பலவாறாகச் சொல்லுகிறார்கள்.

ஆக மாந்தரோகம் 8-ம் சிங்கிமாந்தம் 1-ம் முற்றியது.

---

இவைகளை உத்தாமணிச் சமூலக்கருக்கு, மிளகுக்கவச நுணா யிலைப் பஸ்மக்கஷாயம், காடிச்சாதப்பஸ்மக்குடிநீர், மூலவிஷம் சேர்ந்த மாத்திரை, மாந்தத்தயிலம் முதலிய உபாயச் சிகிச்சைகளைக்கொண்டு நிவர்த்தி செய்யவேண்டும்.

இனிச் செங்கிரந்திரோகம் முதல் கக்கிருமல்ரோகம் ஈறாகிய ஆறுவகைரோகங்களைச் சொல்லப்படும்.

## 1-வது செங்கிரந்திரோகம்.

முழங்கால் முழங்கை வரைக்குமாவது தேகம் முழுதுமாவது சிவந்த நிறமானவீக்கம், அவ்வீக்கம் ஓடியோடிக்கட்டுதல், வாய்தடித்தல், மலமூத்திரபந்தம், பூனைக்குரலோசையையொத்து விம்மிவிம்மி அழுதல், பிரேதம்போல் கிடக்குதல் என்னும், இக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது கருங்கிரந்திரோகம்.

தேகம் முழுதுமாவது முழங்கால் முழங்கை வரைக்குமாவது நீலம்போல்கறுக்குதல், வெளிச்சுரம், முலையுண்ணுமை அல்லது வலது முலையுண்ணுமை, நாவுவறால், உடலிலாவது தோளிலாவது சுபிகை மலரவிழித்து விழித்துப்பார்க்குதல், மேல்மூச்சு, மாறுகுணம், அலறல், இருமல், குரல்கம்மல், வயிற்றில்வேதனை என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இக்கிரந்தியும் செங்கிரந்தியும், பச்சைச் சிசுவுகளுக்கே முக்கியமாக உண்டாகும். இதுகள் கண்டவுடனேயே மூலயோககிரந்தி எண்ணெய் முதலிய அவுஷதங்களைக்கொண்டு தகுந்த சிகிச்சைகளைச் செய்யில் சாத்தியமாம். செய்யாவிடில் ஐந்துநாளில் அசாத்தியமாம்.

## 3-வது பால்கரப்பான்ரோகம்.

சர்வாங்கத்திலும் பரபரப்பான ஊரல், பலநிறத்துடன் சாரைப் பாம்பின் தோலையொத்த சொறி, அதில்சிவந்த சலங்கசிதல், கண்டத்தில் விஷக்கடிரோகம்போல் வெடித்துச்சலம்வடிதல், விகாரரூபம், தாது நஷ்டம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். அன்றியும், கறுத்தால், கருங்கரப்பான், சிவந்தால் செங்கரப்பான், வரிவரியாக இருந்தால் வரிக்கரப்பான், சொறிஎழும்பினால் சொறிகரப்பான், தினவுண்டானல் ஆனந்தக்கரப்பான், தலையில்கண்டால் மண்டைக்கரப்பான் எனவும் பலவாருகச்சொல்வர். இது இடுப்பில் படர்ந்தால், கடுவனென்கிற ரோகமாம். இதற்கு உள்ளுக்குக் கரப்பான் எண்ணெயும் மேலுக்குப் பூச்சுமருந்தும் பிரயோகிப்பதுந் தவிர பாலூட்டுவர்க்கு மிச்சிகிச்சைகளைச் செய்யவேண்டும்.

## 4-வது மலவாதரோகம்.

மலபந்தம், வயிறு முற்றிலும்நோவு, கையும் காலும் நாவும் தடித்தல், புருவத்தில் கரப்பான்படரல், பாலுண்ணுமை என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது மலத்தில் வாயுவுசேர்ந்தால் பிறக்கும்.

இதற்கு, விரேசனமருந்தும், தீபாக்கினி அவுஷதமும் ஆகும்.

## 5-வது தசனோற்பவரோகம்.

இது, சிசுக்களுக்குப் பல்முளைக்கும்போது பிறக்கும், இதனல், மிகுந்தபேதியும், சரீர இளைப்பும், அற்பசுரமும், மயக்கமும், தாகமும், உண்டாகும். இது சாத்தியமாம். தசனம் என்பது பல்.

இதற்குத் தடங்கற்பட்டிருக்கிற பல்லின் சிரசுகள் சீக்கிரத்தில் வெளிப்படும்படிக்கு நெல்லின்முளையைக் கொண்டாவது, ஈறினதுதலை யில் ரோமம் அழுந்தும் கீற்றுப்போல் கொஞ்சம் கீறிவிட்டாலும் விடலாம்.

## 6-வது கக்குவான் என்கிற கக்கிருமல் ரோகநிதானம்.

இது, பாலின்தோஷத்தினாலும் சலதோஷத்தினாலும் வாயுவு அதிகரித்து மார்பில் இருக்கின்ற சிலேஷ்மத்தை ஒவ்வொருவேளை இளக்குந் தருணத்தில் பிறக்கும்; அப்போது மிகுசத்தப்புடன் பிரபலமானதுரித இருமல், அதில்ரத்தம் வீழல், திணறலானமூச்சு, விழிபிதுங்குவது போலிருத்தல், ஆயாசம், வியர்வை, குடித்தபாலும்புசித்த அன்னமும் கக்குதல், மலமும் மூத்திரமும் நழுகுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது 90-நாள் வரைக்கும் பேய்பிடித்து ஆட்டுவதுபோல் சிசுக்களை ஆட்டுவிக்கும்.

இது, வியாக்கிரியாதிரசாயனம், சிங்கமுகிபாணிதம் முதலியஅவுஷதங்களால்விலகும் இவற்றுள், வியாக்கிரியாதி ரசாயனத்தின் முறையை மாத்திரம் இங்கு கூறப்படும். கண்டங்கத்திரிரசம் பலம்-$1\frac{1}{4}$, கருந்துளசிரசம் பலம்-$2\frac{1}{2}$, ஆடாதோடைரசம் பலம் $3\frac{3}{4}$, இம்மூன்றிற்கும் சமபாகம் தேன்கூட்டி ஒருசிறிய புதுசட்டியில்விட்டு, இதில் சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், லவுங்கம், லவுங்கப்பட்டை, ஏலம், சிற்றரத்தை, பேரரத்தை, அதிமதுரம், தாளிசம், ஜாதிக்காய், ஜாபத்திரி என்னும் 15-வகைச் சரக்குகளையும், தனித்தனியே சுத்தித்து ரவியிலுலர்த்தி, வஸ்திரகாயப்பொடிசெய்து, வகை 1-க்கு $\frac{1}{2}$-விராகனிடை நிறுத்துச்சேர்த்து, அப்பாத்திரத்தை அடுப்பின் மேல்வைத்து மிருதுவாகத்துழாவியெரித்து, விரலழுந்தும் பக்குவமான பாகுபதத்தில் இறக்கிப்பதனம்பண்ணிக்கொண்டு, இதைக் காலை மாலை மத்தியானம் என்னும் மூன்றுவேளையும், இவ்வாறே இரவில் மூன்று வேளையும் ஒவ்வொரு விரலில் தோய்த்துக்கொடுத்துக் கொண்டுவரில், கேவல்முதலிய சகலவுபத்திரவங்களும் நாளுக்குநாள் குறையப்படுவதுமன்றி 90-நாளுஞ் சென்றபின்பு பரிஷ்காரப்படும். வியாக்கிரி என்பது கண்டங்கத்திரி, சிங்கமுகி என்பது ஆடாதோடை, பாணிதம் என்பது பாகு ? இச்சாபத்தியம்.

இனி நாய்முள் தோஷம்முதல் தேரைத்தோஷம் ஈறுகிய ஒன்பது விதத் தோஷங்களைச்சொல்லப்படும்.

## 1-வது நாய்முள் தோஷம்.

இது, தாயின்பசியினாலும், துயரத்தினாலும், சிசுவின் சநநதோஷத்தினாலும் பிறக்கும். இதனால், வாயிலும் தொண்டையிலும்முள்ளைப்போல் துர்மாமிசம் எழும்புதல், முலையுண்ணாமை, சுரம், மேல்மூச்சு, கண்ணில் சலம்வடிதல், கால்வலி, அள்ளெடுக்குதல், கபத்தால் அழக்கூடாமை, தலை நடுக்கல், கனவு- பொறிகலங்குதல் என்னு மிக்குணங்கள் உண்டாக்கும்.

## 2-வது எச்சில்தோஷம்.

தலையெடுக்கக்கூடாத மயக்கம், சரீரவாட்டம், அதில் பல நிறத்துடன் நாறுதல், முலையுண்ணாமை, அற்பபேதி, இமையொட்டிக்கொள்ளலால் கண்களை நிமிண்டிக்கொண்டு மண்ணிற்புரண்டு அழுதல், பூதசுரம், ஒருவேளை தாயைக்கண்டு சீறியழுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 3-வது குளிசதோஷலக்ஷணம்.

கருப்பம்வேண்டின ஸ்திரீகள் குளிசங்கட்டிக் கொள்ளும் பொழுது, அவ்விடத்தில்நேரிட்ட குழந்தைகளுக்கு, உச்சியிற்பள்ளம், கண்ணில் குழிவிழுதலுடன் சலம்வடிதல், தேகமிளைத்தல், அதிகசுரம், நோவு, குய்யத்தில் விரணம், பேதி, அடிக்கடிதாகம், நெஞ்சுலரல், வெருட்சியாக அழுகுதல், கால்களில்வீக்கம், வாந்தி என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 4-வது தூரஸ்திரீபரிசதோஷம்.

தேகம் இளைத்துப் பலநிறமாகத்தோற்றல், துர்க்கந்தம், பால்குடித்தாலும் அடிக்கடி கக்குதல், தாய்மீதில் இச்சையில்லாமை, கொஞ்சம் கொஞ்சம்பேதி, சுரம், உச்சந்தலையில் சீதளம், கண்மூடல், பீளைசாரல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதுவே முட்டுத்தோஷமாம். ஆகையால் தூரஸ்திரீகள் பிறர்குழந்தைகளைத் தொடலாகாது.

## 5-வது சையோகபுருஷபரிசதோஷம்.

கண்ணிலும் உச்சியிலும் குழிவிழுதல், தேகத்தில் பச்சைநிறம், அல்லது வயிரநிறம் தோற்றல், சிறிச்சிறியழுதல், அவ் அழுகையின்சத் தம் பக்ஷிகளின் குரல் ஓசைபோல் இருக்குதல், குடித்தபாலை எடுக்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதனை விஷதோஷமென்பர்.

## 6-வது சையோகஸ்திரீபரிசதோஷம்.

நெஞ்சுவறளல், கண்குழிவிழுதல், வெளிறல், பெருமூச்சு, பால் குடியாமை, இரவிலும் பகலிலும் அநித்திரை, வியர்வை, மபக்கம் என் னும் இக்குணங்களை உண்டாக்கும்: ஆதலால், சையோகஞ் செய்தவர் கள் அந்த அசுசியுடன் எந்தக்குழந்தைகளையும் தொடலாகாதென்றறிக.

## 7-வது அளிதோஷம்.

குடித்தபால் தங்காமை, தலையில்ரோமக்காலெல்லாம் நோவுதல், நெஞ்சில் புகையெழும்பி அடைக்குதல்போலிருத்தல், தேகத்தில் ஒரு விதநாற்றம், கை கால்களில் நோவு என்னும் இக்குணங்களை உண் டாக்கும்.

## 8-வது குளித்தவள் எடுத்ததோஷம்.

சரீரவாட்டம், பால்தங்காமை, உச்சியில் குழிவிழுதல், வாந்தி, கண்ணில் நீர்க்கம்மலுடன் குழிவிழுதல், வாயுலரல் என்னு மிக்குணங் களை உண்டாக்கும். தூரஸ்திரீ ஸ்நானஞ்செய்தவுடன், ஏதேனும் ஒன்றை அருந்தாமல் சிசுக்களை எடுப்பதால், இந்தத்தோஷம் பிறக் கும். மேற்சொல்லி வந்ததோஷபேதம் எட்டும், மாந்திரிகசிகிச்சை களால், விலகும்.

## 9-வது தேரைத்தோஷம்.

காலுங்கையும் சூம்பலுடன் கட்டிப்போட்டதுபோல் கிடக்கு தல், சரீரவாட்டம், வெளிறல், மாறுநிறம், குரல்நெரிதல், பால்குடி யாமை என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது தேரைகள் குழந்தையின் மேல்விழுந்து பீச்சுவதினாலுண்டாகும். இதற்குக் கூஷ் மாண்ட கிருதமும் ஆகும்.

சித்தர்மதாந்தர முற்றியது.

## பாலகிரகஉற்பத்திநிதானம்.

முற்காலத்தில், கயிலாசபதியால் படைக்கப்பட்ட கந்த, விசாக மேஷ, சுவான, பிதுர் என்னும் இவ் ஐந்து புருஷகிரகங்களும்; சகுனி பூதனு, சீதபூதனு, அதிர்ஷ்டிபூதனு, முகமண்டலிகா, ரேவதி, சுஷ்க ரேவதி என்னும் இவ் ஏழு பெண்கிரகங்களும், குழந்தையாகிய சுப்பிர மணியருக்கு ஏவல்செய்து கொண்டிருந்து, பின்பு ஆக்கினைப்படியே அன்னுதிபலி, ரத்த, கந்த, அட்சதை இவைகளை விரும்பிப் பூலோகத் திற் பிரவேசித்து, அதிதிபிக்ஷை, பிதுர்தேவதாவிரதம், தேவபூசனை, ஓமாதி கருமங்கள்முதலியவைகளைத்தவிர்ந்து, அனுசாரமாக ஒட்டைக் கலத்தில் புசிக்கப்பட்டவர்களுடைய அசுசிமாதரின்பாலைக்குடிக்கின்ற சிசுக்கள், அசுசியான அமங்கலமாதரின் பாலைக்குடிக்கின்ற சிசுக்கள் ஆகிய இச்சிசுக்களின் ஆரோக்கியம், சுகம், வயசு இவைகளில் பாதி பாதியை அபகரிக்கும்பொருட்டு சிசுக்கள் அழுங்காலத்தும், மலசலத் தால் அசங்கியமாகக் கிடக்குங்காலத்தும், நித்திரைகாலத்தும், அநித் திரை காலத்தும் பருவகாலத்தும், வருஷசந்தி மாதசந்திகாலத்தும், கரடி, ஆந்தை, பூனை, பக்ஷி முதலியவைகளைப்போலும், முன்பு சேனுதி பத்தியத்தைப்பெற்ற கந்தகிரகம் ஆதியான 12-கிரகங்களும் அப்பாலர் களைப் பிடித்துக்கொண்டு பலவிதரோகங்களினுலும் வருத்தும்; ஆகையால் தாயானவள் சாந்தருவமாதரைப்போல் பரிசுத்தமாக இருக்க வேண்டும். அவைகளின் செய்கைகளை இதன் அடியில்காண்க.

## கிரகதோஷபூர்வரூபம்.

சிசுக்களுக்குக் கிரகதோஷ ஆரம்பத்தில் ஓயாத அழுகை, ஒரு வேளை ஈனசுரமான அழுகை, சுரம், விகாரரூபம், சரீரங்குலுங்கல், கொட்டாவி, புருவம்நெறித்தல், வாயில் நுரைவிழுதல், மேல்பார்வை, உதட்டையும் பல்லையும் கடித்தல், அநித்திரை, சீறிச்சீறி அழுதல், விகாரக்கூச்சல்,நெஞ்சிற் குறுகுறுவென்னும் ஒருசத்தம்,முலைப்பாலில் அசங்கியம், உடம்பைக் கீறிக்கொள்ளுதல், முலைகொடுக்கிறவளை நகத்தால் புரண்டல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதுவே பூர்வ ரூபமாம்.

## 1-வது கந்தகிரகதோஷம்.

இது, ஒருகண்ணில் நீர்க்கம்மல், அடிக்கடி தலையாட்டல், அடிபட்டதுபோல் ஒருபக்கமாகவேகிடக்குதல், கழுத்தில்வியர்வை, தலையைத்தூக்கித்தூக்கிப்பார்க்குதல், பற்கடித்தல், பாலுண்ணாமை, பயந்து பயந்து ஈனசுரமாக அழுதல், ஒருபக்கம் கோட்டிவாய்ச்சலம் வடிதல், மேல்பார்வை, ரத்தக்கவிச்சாக வாய்நீருரல், உளறல், இரண்டுகையும் முஷ்டி பந்தமாகப்பிடித்தல், மலபந்தம், ஒருபக்கத்துப் புருவமும் கண்ணும் தாழ்வாய்க்கட்டையும் துடித்தல், இரண்டுகண்களுஞ் சிவத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதுமெலியச்செய்யும், அல்லது மரிக்கச்செய்யும்.

## 2-வது விசாககிரகதோஷம்.

இது, தேகமறதி, தலைமயிரைக் கையால் பிக்குதல், தலை தொங்கவிடல், அக்காலக்கொட்டாவியால் மலமும் மூத்திரமும் நழுகல், நுரைத்தவாந்தி, ஊர்த்துவதிஷ்டி, காலும் கையும் ஆடுதல், பால் குடிப்பதுபோல் முலையைச்சப்புதல், சுரம், நித்திரைப்பங்கம், சீழ்ரத்தம்போல் வாயில் துர்க்கந்தம் வீசுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 3-வது மேஷகிரகதோஷம்.

இது மேலில் ஆட்டுமொப்பு அடித்தல், வயிறுப்பல், கையும் காலும் அசைவறக்கிடக்குதல், நுரைத்தவாந்தி, தாகம், மூர்ச்சை, முஷ்டிபந்தனம், பேதி, ஈனத்தொனி, மாறுருபம், நெஞ்சில் ஒருசத்தம், வாந்தி, இருமல், விக்கல், நித்திரைப்பங்கம், உதட்டைக்கடித்தல், திமிர் முறுக்குதல், நடுமேட்டைப் பார்த்துநகைத்தல், இடுப்புவளைதல், சுரம், ஒருகண் வீக்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். மேஷம் என்பது ஆடு.

## 4-வது சுவானகிரகதோஷம்.

இது, நாயைப்போல் குலைத்தல், நடுக்கல், ரோமச்சிலிர்ப்பு, வியர்வை, கண்மூடல், அடிக்கடி எழுந்திருக்குதல், நாக்கைக்கடித்தல், நெஞ்சில் குறுகுறுவென்னும் ஒருசத்தம், தேகத்தில்மலவாசனையுடன் எரிச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். சுவானம் என்பது நாய்.

## 5-வது பிதுர்கிரகதோஷம்.

இது, தேகத்தில் பிணநாற்றம் வீசுதல், மயிர்க்கூச் செறிதல், அடிக்கடி பயப்படல், விடாத அழுகை, சுரம், இருமல், பேதி, வாந்தி, கொட்டாவி, தாகம், கையும் காலும் உதைத்துக்கொள்ளுதல், தேகம் மெலிதல், மரத்தல், நிறமாறல், கண்குழிவிழுதல், இரண்டுகையும் முஷ்டிபந்தமாக மூடிக்கொள்ளுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது சகுனிகிரகதோஷம்.

இது, மேலில் பக்ஷிநாற்றம் வீசுதல், கீல்கள் தளரலுடன் நோதல், பேதி, நாவு கழுத்து தாடை இவ்இடங்களில் விரணங்களுடன் கொப்பிளம் எழும்புதல், அக்கொப்பிளமும் எரிச்சலும் பகலில் அதிகரிக்குதல், இரவில் அடங்குதல், முகத்திலும் ஆசனத்திலும் எரிச்சல், பயப்படல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். சகுனிம் என்பது பக்ஷி.

## 7-வது பூதனாகிரகதோஷம்.

இது, வாந்தி, நடுக்கல், சோர்வு, இரவில் அநித்திரை, விக்கல், வயிறுப்பல், மலபந்தம், தாகம், நீர்க்கட்டு, கீல்கள்தளரல், ரோமச்சிலிர்ப்பு, கழுத்தில் பக்ஷிநாற்றம் வீசுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 8-வது சீதபூதனா கிரகதோஷம்.

இது, நடுக்கல், அதிகமாக அழுகுதல், ஒருக்களித்த பார்வை, தாகம், குடலிரைச்சல், பேதி, ஒருபக்கத்தில் குளிர்ச்சி, ஒருபக்கத்தில் சுடுகை, சரீரத்தின்மேல் கொழுப்பு, மலம், இவைகளின் நாற்றத்தைப் போல் தேகத்தில் நாற்றம்வீசுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 9-வது அதிர்ஷ்டிபூதனா கிரகதோஷம்.

இது, அற்பபார்வை, வாந்தி, சுரம், இருமல், மலத்துக்கு பலம் பேதமாகத்தோற்றல், தேகநிறமாறல், அத்தேகத்தில் துர்க்கந்தக் கவிச்சுவீசுதல், அல்லது அசங்கியநாற்றம், இளைத்தல், சொற்பநித்திரை, உதடுநோவு, தினவு, விக்கல், பயம், முலைப்பாலில் அசங்கியம், ஈனத்தொனி நடுக்கல், நகைத்துப் பேசுவதுபோலிருந்து திடீலென்று பேச்சு நிற்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

இது குருட்டுக்கிரகம்ம்.

## 10-வது முகமண்டலிகா கிரகதோஷம்.

இது, முகமும் கையும் காலும் முன்பு இருந்ததைப்பார்க்கிலும் அதிக தேசசுஉண்டாகி இளைக்காதிருத்தல், உடம்பின்மேல் கறுத்த நரம்புகள்தோற்றல், பயம், சுரம், அரோசகம், எரிச்சல், சரீரத்தில் கோமூத்திரநாற்றம் வீசுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 11-வது ரேவதிகிரகதோஷம்.

இது, தேகத்தில், கருமையுடன் கழுகுகளின் நாற்றம் வீசுதல், கண்டத்திலும் நாசியிலும் கண்களிலும் நோவு, பலநிறமலத்திலும் மஞ்சள் நிறமே அதிகரிக்குதல், மிகுந்த அழுகை என்னும் இக்குணங் களை உண்டாக்கும்.

## 12-வது சுட்கரேவதி கிரகதோஷம்.

இது, தேகமுழுதும் சூம்பி இளைத்தல், ஈனத்தொனி, நிறமாறல், ரோமமெல்லாம் முறைத்தல் பேதி, சரீரத்தின்மேல் தேன்வாசம் வீசுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## கிரகதோஷ அசாத்திய நிதானம்.

எந்தக் கிரகதோஷத்தினாலாவது, சிசுக்களுக்கு, வட்டம் வட்டமான கொப்பிளம் எழும்புதலும், பேதியில் பலநிறமானமலங்களும் நாக்கு நடுவில் வெடிப்பான பள்ளங்களும், தாடையில் கறுப்பும் உண்டாகில், அசாத்தியமாம். அன்றியும், நானுவித போஜனம் பண்ணப்பட்ட பிள்ளைகளாயிருந்தாலும், அதுகளுக்குக் கண்சிவந்து, அதிகதாகமும் உண்டாகித் தேகமும் இளைக்குமாகில், சுட்கரேவதிகிரகத்தால் மரணமே. ஆயினும் இதுகளுக்கு, நல்லபாம்புத்தோல், பசுமாட்டின்கொம்பு, அதன்குளம்பு, கோஷ்டம், கறிமஞ்சள், கருஞ்சிவதைவேர், பருத்தி விதை, புஜபத்திரம், தேவதாரி விதை, சிறுகடுகு, வேப்பிலை, நறுநெய் என்னும் பன்னிரண்டுவகைச் சரக்கையும், சமபாகமாக நிறுத்து, நெய் தவிர மற்றவைகளை நன்றாக இடித்துப் பின்பு ஷை நெய்யை விட்டுப் பிசறிவைத்துக் கொண்டு தூளில், கொஞ்சம் எடுத்து, அந்தி சந்தி ஆகிய இரண்டுவேளையும் புகைபோடுவதுந்தவிர விளா, நாவல், பாலை, புரசு, சிற்றாமுட்டி என்னும் ஐவகைப் பட்டைகளையும், வகை-1-க்கு பலம்-

4ஆ நிறுத்து இடித்துப் பத்துப்படி நல்லசலத்திற்போட்டு, 4-ல் ஒன்றாகக்காய்ச்சிய வெந்நீரால் ஸ்நானம் செய்வித்து, பிரயோகசாரம் என்னும் வைத்திய சாஸ்திரத்தில், அந்தந்த மாதத்திற்காகச்சொல்லிய பலி முதலிய சிகிச்சைகளை முறைமைப்படிக்குச் செய்யில், அச்சிசுக்கள் பூரணுயுளைப்பெற்றிருக்கும்.

## கிரகக்கிரகணகாரணம்.

உலகத்தில் கொலை, போகம், பலி என்னும் மூவிதத்தொழிலினுல் கிரகமானது மூன்றுவிதப்படும். அதன் விவரம்: கொலையை இச்சிப்பதால், கொலை இச்சைக்கிரகமென்றும்; போகத்தை இச்சிப்பதால், போக இச்சைக்கிரகமென்றும்; பலியை இச்சிப்பதால், பலி இச்சைக்கிரகமென்றும்பெயராம். இவைகள் பாலராதி விருத்தர் பரியந்தந்தொடர்வனவாம்.

## 1-வது கொலை இச்சைக்கிரகம்.

இது, நாசி உயரல், நாக்கைக்கடித்துக்கொள்ளல், வெறிக்கவெறிக்கப்பார்க்குதல், ஒருவேளை தலையைத் தூக்கிப்பார்க்குதல், கண்களில் சலம்வடிதல், மாறுரூபம், முகவிகாரம், தேகத்தில் மெலிவுடன் துர்க்கந்தம், மலமூத்திரத்தைப் பிசைதல், மார்பில் அடித்துக்கொள்ளுதல், எதிரில் வருவாரையும் அடித்தல், கத்திகள் தடிகள் முதலியவைகளால் எறிதல் அக்கினியில் குளத்தில் கிணத்தில் விழுதற்கே ஓடுதல் முதலிய துர்ச்செய்கைகளை உண்டாக்குவதன்றியும், தாகம், வயிற்றில் எரிச்சல், ஞாபகபங்கம், சலதாரைக்கும்பி நாற்றம்போல்வாந்தி, நவத்துவாரங்களிலும் ரத்தம்வீழ்தல் என்னும் இக்குணங்களையும் உண்டாக்கும். இது அசாத்தியமாம்.

## 2-வது போக இச்சைக்கிரகம்.

இது, தங்கள் புருஷருடனே ஸ்திரீகள் ஏகாந்தமாக இருந்தாலும் தனித்திருந்தாலும் கூட்டமாக இருந்தாலும் அவர்களை இழுத்துப் புணர்ச்சிசெய்தல், எந்த ஸ்திரீகளுடனேயும் நயமாகப்பேசுதல், சுகந்தாதிமாலைகளிலும் ஆபரணங்களிலும் அதிவிருப்பம், சந்தோஷம், ஒருவேளை கனகோபம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது கஷ்டசாத்தியம்.

## 3-வது பலி இச்சைக்கிரகம்.

இது, அதைரியம் எந்நேரமும் முகத்தைக் கையால் துடைத்தல், உதடு உலரல், கன்னத்தில் பள்ளம்விழுதல், திகிலானபார்வை, தியான மாக இருக்குதல், இருந்த இடத்தில் இராமல் திரிதல், அன்னம்புசிக்க வேண்டுமெனக் கேழ்க்குதல், கொடுக்கும் அன்னத்தை வாங்கி எறிதல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். பலி என்பது பிக்ஷை. இது சாத்தியமாம்.

## பாலகிரகதோஷ மதாந்தரம்.

உலகத்தில் கிரமாலங்காரமாகப் பாலர்களைத் தொடருகின்ற பெண்கிரகங்கள் பனிரண்டையும் இதனடியிற்காண்க.

## 1-வது நந்தனுகிரகம்.

இது, குழந்தை பிறந்த முதல் நாளிலாவது, முதல் மாதத்திலாவது, முதல்வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும்; அப்போது ஆரம்பத்தில் சுரம், தேகம்இளைத்தல், வீக்கம், நானுவித நிறமானபேதிஎன்னும் இக்குணங்கள் உண்டாகும். இது அசாத்தியமாம்.

## 2-வது சுநந்தனுகிரகம்.

இது, குழந்தை பிறந்த இரண்டாம் நாளிலாவது, இரண்டாம் மாதத்திலாவது, இரண்டாம்வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும்; அப்போது சுரம், பல்லைக்கடித்தல் வயிறு உப்பல், அன்னத்திவேஷம், கண்மூடல், எப்போதுமழுகை, என்னுமிக்குணங்கள் உண்டாகும் இது சிசுக்களின் உடம்பைக்குலுக்கும்.

## 3-வது பூதனுகிரகம்.

இது, குழந்தைபிறந்த மூன்றும் நாளிலாவது, மூன்றும்மாதத்திலாவது, மூன்றும்வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும்; அப்போது சுரம், ரோமச்சிலிர்ப்பு, உடம்புநோவு, அன்னத்திவேஷம், கண்களை மூடிக்கொள்ளுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 4-வது முகமண்டலிகாகிரகம்.

இது, குழந்தைபிறந்த நாலாம்நாளிலாவது, நாலாம்மாதத்திலாவது, நாலாம்வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும் அப்போது சுரம், சரீரநோவு, தலைசுழற்றலோடு தலையிறங்கக்கூடாமை, கண்களை மூடிக்கொள்ளுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 5-வது பிடாலிகாகிரகம்.

இது, குழந்தைபிறந்த ஐந்தாம்நாளிலாவது, ஐந்தாம்மாதத்திலாவது, ஐந்தாம்வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும்; அப்போது பூனைப்போல்கத்தல், சுரம், இளைத்தல், சுவாசம், இருமல் சூலை, விக்கல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

பிடாலிகா என்பது பூனை.

## 6-வது சகுனிகிரகம்.

இது, குழந்தைபிறந்த ஆறும்நாளிலாவது ஆறும்மாதத்திலாவது, ஆறும்வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும், அப்போது சுரமும், சரீரமெலிவும், நோவும் உண்டாகும்.

## 7-வது சுஷ்கரேவதிகிரகம்.

இது, குழந்தைபிறந்த ஏழாம்நாளிலாவது ஏழாம்மாதத்திலாவது, ஏழாம்வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும்; அப்போது அன்னத்திவேஷமும், கொட்டாவியும், சரீரநோவும் உண்டாகும்.

## 8-வது அந்நியவோடாலிகாகிரகம்.

இது, குழைந்தபிறந்த எட்டாம்நாளிலாவது, எட்டாம்மாதத்திலாவது, எட்டாம்வருஷத்திலாவது, சிசுவைஅல்லது தாயைப்பிடிக்கும்; அப்போது அன்னத்திவேஷம், அடிக்கடி நாவைநீட்டுதல், இளைத்தல், நோவு, சதா அழுகை, கண்மூடல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 9-வது மதபேதனுகிரகம்.

இது, குழந்தைபிறந்த ஒன்பதாம்நாளிலாவது ஒன்பதாம்மாதத்திலாவது, ஒன்பதாம்வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும், அப்போது சுரம், வாந்தி, சரீரநோவு, பேதி, வயிறுப்பல், இருமல், அன்னத்திவேஷம், காதுகுத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 10-வது ரேவதிகிரகம்.

இது, குழந்தைபிறந்த பத்தாம்நாளிலாவது, பத்தாம்மாதத்திலாவது, பத்தாம்வருஷத்திலாவது சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும் அப்போது சுரம், வாந்தி, அன்னத்திவேஷம், இருமல், இரைப்பு, வயிறுப்பலோடு, சகிக்கக்கூடாத சூலை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 11-வது அர்ச்சகாகிரகம்.

இது, குழந்தைபிறந்த பதினொன்றும் நாளிலாவது, பதினொன்றும் மாதத்திலாவது, பதினொன்றும் வருஷத்திலாவது, சிசுவை அல்லது தாயைப்பிடிக்கும்; அப்போது தேகம் இளைத்தல், சுரம், சர்வாங்கத்திலும் மிகுநோவு, அன்னத்திவேஷம், விழித்தவிழி விழித்தபடியிருத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

அர்ச்சகா என்பது நாட்பட அநுசரித்தல்.

## 12-வது அற்புதாகிரகம்.

இது, குழந்தைபிறந்த பனிரண்டாம்நாளிலாவது, பனிரண்டாம் மாதத்திலாவது பனிரண்டாம் வருஷத்திலாவது சிசுவை, அல்லது தாயைப்பிடிக்கும்; அப்போதுஅறிவின்மை, பல்லைக்கடித்தல், அழுகை, கண்ணோவு, ரோமம் முறைத்தல், ஏதாவது தரச்சொல்லி அழுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இம்மதாந்தரம், ராவணேசுவரன் கோகர்ன ஸ்தலத்தில், தவஞ்செய்து பிரமதேவர் வரத்தினால் உண்டாக்கிய குமாரதந்திரம் என்கிற வைத்தியகிரந்தத்தில் இருக்கிற கிரகதோஷபேத நிதானங்களைச் சுருக்கிப் பராசமகாரிஷி அருளியதென்றறிக.

மதாந்தரமுற்றியது.

---

சித்தர்மதாந்தரம்.

## பக்ஷிதோஷபேதம்.

அந்திசந்தி, நடுப்பகல் பாதிராத்திரி ஆகியகாலங்களில் தெருக்கடக்கத்தெருக்களில் எடுத்துக்கொண்டு போவதினால் சிசுக்களுக்கு, நான்குவிதப் பக்ஷிதோஷம் உண்டாகும். அவையாவன : ஆண்பக்ஷி

தோஷம், பெண்பக்ஷிதோஷம், மலட்டுப்பக்ஷிதோஷம், அலிப்பக்ஷி தோஷம் என்பவைகளாம்.

## பக்ஷிதோஷசமுதாயகுணம்.

சிசுவுக்கு வாந்தி, பேதி, தாகம், சுரம், அவயவங்கள் இளைத்தல், பலவீனம், பால்குடியாமை, நடுக்கல், அநித்திரை, தோள் இடுப்பு நடுநெற்றி ஆகிய இடங்களில் குழிவிழுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். அன்றியும், குடித்த பால் நெஞ்சில் எதிர்த்தல், மயக்கம், சிறிச்சிறி அழுதல், தலைநோவு, வயிற்றில் கடுப்புடன் காந்தல், கபாதிக்கம், உச்சியினும் முலைமார்பினும் சுடுகை, நாக்குவறளல், தலை எடுத்துப் பார்க்கக்கூடாமை, கண் வெளிறல், அதில் பீளைசாரல், முகத்தில் பச்சையும் மஞ்சளுங் கலந்த நிறம்போல் தோற்றல் என்னுமிக்குணங்கள் உண்டாகும் என் பாருமுளர்.

## 1-வது ஆண்பக்ஷிதோஷம்.

இது, தாகம், பேதி, சரீரம் உலரல், கண்கள் குழிவிழுதல், நாக்கைநாக்கை நீட்டுதல் என்னும் இக்குணங்களை யுண்டாக்கும்.

## 2-வது பெண்பக்ஷிதோஷம்.

இது, சர்வாங்கநடுக்கல், காங்கை, தாகம், பேதி, பால்குடியாமை என்னு மிக்குணங்களை யுண்டாக்கும். அன்றியும், கண் சொருகுதல், சீதபேதி, கடுப்பு, ஆசனம்பிதுங்கல், சிறியழுதல், தேகங்கறுத்தல், கண்ணோவு, விக்கல், வாய்நீரூறல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும் என்பாருமுளர்.

## 3-வது மலட்டுப்பக்ஷிதோஷம்.

இது, ஆயாசத்துடன் இளைப்பு, உச்சியில் குழிவிழுதல், வாந்தி பேதி, தாகம், தேககாங்கை என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது அலிப்பக்ஷிதோஷம்.

இது, தோள், முதுகு, கண்டம், முழங்கை ஆகிய இடங்களில், குழிவிழ்தல், வாந்தி, பேதி, தாகம் என்னுமிக்குணங்களை உண் டாக்கும்.

## பக்ஷிதோஷ சித்தர் மதாந்தரம்.

சிலநூலில், பக்ஷி தோஷத்தை, வரப்புள்தோஷம், நீர்ப்புள் தோஷம், தூங்குபுள்தோஷம், அனுமத்துப்புள்தோஷம், காணுப் புள்தோஷம் என ஐந்துவிதமாகச் சொல்லப்படுகின்றன. அவை களை எடுத்துக்காட்டப்படும்.

### 1-வது வரப்புள்தோஷம்.

இது, பாலைப்போல் தேகம்வெளிறல், கண்கலங்கல், அக்கண் களில் துளித்துளியாகச் சலம்வடிதல், தொண்டையும் நாவும் வறளல், வேப்பம்பழச்சாற்றையொத்த பேதி, தலைநடுக்கல், தேகத் தில் சுடுகை, யானை வீரிடல்போல் குரலோசை, கைகால்களில் குத் தல், விக்கிவிக்கி அழுதல், அன்னத்வேஷம், களைத்தல் என்னுமிக் குணங்களை உண்டாக்கும்.

### 2-வது நீர்ப்புள்தோஷம்.

இது, நெஞ்சுவறளல், சுவாசம், கண் குளிர்ந்துவெளிறல், மூலையுண்ணுமை, சரீரம்வெளுத்து இளைத்தல் என்னுமிக்குணங் களை உண்டாக்கும்.

### 3-வது தூங்குபுள்தோஷம்.

இது, உறக்கம், மயக்கம், வாந்தி, பேதி, உச்சியிற்பள்ளம், மேல் மூச்சு, தேகவாட்டம், மாறுமுகம் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்,

### 4-வது அனுமத்துப்புள்தோஷம்.

இது, நெஞ்சிலும் உண்ணுக்கிலும் தடித்தலானவீக்கம், பால் தங்காமல் கக்குதல், அதில் கசப்பான நாற்றம் வீசுதல், தேகத் தில்நோவு, கால் கை நாசி இவைகளில் எரிச்சல் என்னு மிக்குணங் களை உண்டாக்கும்.

### 5-வது காணுப்புள்தோஷம்.

இது, உச்சியிலும் கண்ணிலும் குழிவிழுதல், மூலையுண்ணுமை, பச்சப் பச்சென்று பேதியாதல், பறவைக்குரல் ஓசையைப்போல்

சிறிச்சிறி அழுகுதல், தாகம் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். இதுகளை, மிருத்தியஞ்சயமந்திரம் ஓதிச் சலம் இறைத்தல், வலம் புரிக்காய்க் குளிசம் கட்டல், பூதப்புகைபோடல் முதலிய சிகிச்சைகளால் வசப்படுத்தவும்.

மதாந்தரம் முற்றியது.

---

## தூரஸ்திரி பார்வைத்தோஷ லக்ஷணம்.

எந்தஸ்திரீகளாவது, மாதாந்தரமுழுக்கு முழுகியவுடன், கருப்பத்தைவிரும்பி, மற்றொரு குழந்தையின் முகத்தில் விழித்து, அன்றிரவில் புருஷனைச்சேர்ந்து கருப்பமானால், முன்பு இவர்கள் பார்வைக்குள் அகப்பட்ட குழந்தை அன்னம் சாப்பிடுவதாயிருந்தாலும், அதற்குத்தேகம் நாளுக்கு நாள் சேர்ந்து இளைத்தல், வயிறுப்பல், தலைதொங்கவிடல், ஞாபகபங்கம், வாயுலரல், தலைமயிர் உதிரல், அரைக்கண் பார்வை, காலும் கையும் சூம்பல், எழுந்திருக்கக்கூடாத துர்ப்பலம், பேதி என்னு மிக்குணங்கள் உண்டாகும். அந்த ஸ்திரீகளுக்கு ஆண்குழந்தையைப் பார்ப்பதனால் ஆண்கருப்பமும், பெண்குழந்தையைப் பார்ப்பதினால் பெண்கருப்பமும் தரிக்கும். அக்கருப்பம் விருத்தியடைய விருத்தியடைய முன்பு தோஷந்தாங்கிய குழந்தைக்கு அளவிடக்கூடாத வேதனைகளும் விருத்தியடையும். இச்சிசுவு வெளிப்பட்டவுடன், அக்குழந்தையானது பிழைத்தாலும் பிழைக்கும் அல்லது இறந்தாலு மிறக்கும். இதனைச் சவலைரோகம் எனவும் சொல்வர். அன்றியும், பேதி, வாந்தி தேகத்தில் ஒரு விதநாற்றம் வீசுதல், மயக்கம் என்னும் இக்குணங்கள் உண்டாகும் என்பாருமுளர்.

பாலகிரகதோஷமும் பக்ஷிதோஷமும் முற்றியது.

---

## இனிப் பூதகண பேதம்.

மாந்திரீக சாஸ்திரத்தில் அடங்கிய பூதகணபேதம் 18-வகைப்படும். அவையாவன:—தேவ, அசுர, காந்தருவ, யக்ஷ, சர்ப்ப,

ராக்ஷச, கூஷ்மாண்ட, காம, கிரண, வேதாள, பிரமராக்ஷச, யதா காரிஷ, அர்த்தபிதா, பைசாச, ருரு, விருத்த, சித்த, முனி என்ப வைகளாம். இவைகளின் பரிவாரங்களையும் குணதிசயங்களையும் கூறில், கோடி கோடி சங்கத்திற்கும் அதிகமாகப்பெருகும். இவையிற்க, இப்பூதகணங்கள் அந்தந்தத் தலைவர்களின் நாமத்தை யும், அச்செய்கைகளையும் பெற்றுப் பயங்கரமான உருவத்தோடு மாமிசம், கொழுப்பு, ரத்தம் முதலிய ஆகாரங்களை விரும்பி, பூலோ கத்தில் பாதிராத்திரிவேளையிற் சஞ்சரித்து மனிதரை வருத்து மென்றறிக.

## பூதப்பிரவேச பூர்வரூபம்.

பூதம்பிடிக்குந்தறியில், புத்தியும் அறிவும் கெடுதல், மிகுசை யோக விருப்பம், லோபம், மோகம் என்னும் இக்குணங்கள் உண் டாகும். அதுபிடித்தபின்பு, தருமக்கெடுதி, ஆசாரவிரதாதிகளைக் கைவிடல், அசுசி, துன்மார்க்கம், பெரியோரை வணங்காமை, மன தின்படி நடக்குதல், புத்தியைக் கெடுத்துக் கொள்ளுதல் என்னு மிக்குணங்கள் உண்டாகும்.

## பூதவேஷாந்தரலக்ஷணம்.

தேவாதி பூதங்கள், ரோகவடிவங்கொண்டு உன்மாதிரோகங் களினால் வேதனையை யுண்டாக்கிச் சுராதிரோகங்களால் திடச்சித் தம் இல்லாத மானிடர்களைப் பயப்படுத்தும் அல்லது கொல்லும். இதுகள், உயிருள்ளபிணமாகிய மனிதரைப்போலவே தருமவிரோத காரியங்களைச் செய்வித்து, தேகத்தில் சீழுவாசனையான துர்க்கந் தத்தை யுண்டாக்கி வாசஞ்செய்யும்.

## பூதாதிகாரியநிதானம்.

தேவபூதங்களும், அசுரபூதங்களும், அவைகளின் பரிசனங் களும் தொடருமாகில், மனதில் எந்நேரமும் பயங்கரமுண்டாகும். காந்தருவ பூதம் தேகத்தைத்தொட்டு அசைக்கும். சர்ப்பபூதம் தே கத்தில் வாசமாகவே இருக்கும். யக்ஷபூதம், தேகவாசனையைப் பற் றிப் பின் தொடரும். ராக்ஷசபூதம் மனிதரை வாகனமாக ஏறிக் கொண்டேதிரியும். கூஷ்மாண்டம், காமம், கிரணம், வேதாளம், பிர

மராக்ஷசம், யதாகாரிஷம், அர்த்தபிதாம், பைசாசம், ஆகிய 8-பூதங்களும் எடுத்து விழுங்கவருவதுபோல் எதிரில் தோற்றப்படும். குரு, விருத்த, சித்த, முனி என்னும் 4-பூதங்களும் சபிக்கும்.

## காணுவேசநிதானம்.

குணப்பிரதானத்தையுள்ள தேவாதிபூதங்கள், மனிதரிடத்தில், படிகத்தில் பிரதிபலிக்கின்ற சூரியகிரணத்தைப்போலும், வீட்டுக்குள் நிழலிடத்தில் ரந்திரவழியாக இறங்கும் வெய்யிலைப்போலும் பிரவேசிக்குமென்றறிக.

## பூதகிரகணகாலநிதானம்.

ஒருவருக்குக் கேடுசெய்ய நினைக்குங்காலம், ஊழ்வினை யநுபவகாலம், சூரியசந்திர கிரகணகாலம், மாலைமயங்குங்காலம், அசுசிகாலம், சுக்கிலபக்ஷ கிருஷ்ணபக்ஷசந்திகளில் சையோககாலம், தூரஸ்திரீபுணர்ச்சி காலம், துன்மார்க்க க்ஷுத்திரபிரயோககாலம், வேள்வி, வேதம், சுபகாரியம், பிரமசரியவிரதம், மகாவிரத முதலியவைகளை அநுஷ்டித்துத் தவறியகாலம், மகாயுத்தகாலம், விடியச் சாமநேரத்திற்கு முன் துஷ்டகிரக மாலிகா யோகத்தில் ஸ்திரீகளோடு ஊர்ப்பயணம் போகுங்காலம், அசுசி இடத்தில் சஞ்சாரகாலம், வாந்தியிலும் ரத்தவாந்தி காலம், விந்து கலிதகாலம், மாதாந்தர முழுக்குத் தப்பியகாலம், பாழுங்கோயில் பாழுஞ்சாவடிகளிற் சயனகாலம், ஒருவர் எச்சிலான மது, மாமிசம், வெல்லம், எள்ளு முதலியவைகளைப் புசித்து எச்சிற் கையோடு இருக்குங்காலம், நிருவாணகாலம், நாலு சந்தி கூடிய ஊர் அடுத்த வனத்திலும் மசானத்திலும் பாதிராத்திரியில் செல்லுங்காலம், தேவர்கள், குருக்கள், பிராமணசிரேஷ்டர்கள், இருடிகள், பெரியோர்கள் என்னும் இவர்களை இழிவாகப் பேசுங்காலம் ஆகிய இக்காலங்களில், முன் சொன்ன 18-வகை பூதகணங்களும் பிடிக்கும். அதன் விவரம்:—தேவபூதங்களும் அசுரபூதங்களும் அமாவாசைக்குப் பின்பு வருகின்ற திரையோதசி, சதுர்த்தசி, பூரணை என்னும் இத்தினங்களில், எருதேற்றம், சூலங் கைப்பிடித்தல், சலவைச்சல்லா தரித்தல், சிவதவ வேதாத்தியயனத்தைத் தவறுதல் ஆகிய இச்செய்கையுள்ளவர்களைப் பிடிக்கும். காந்தர்வபூதம்

சதுர்த்தி, அஷ்டமி, துவாதசி, சதுர்த்தசி என்னும் இத்தினங்களில் இதவஞ்சகம், சுகந்தாதிபுட்பத்துடன் திவ்விய வஸ்திராதிகளைத் தரித்தல், விளையாடல், ஸ்திரீகள் கூட்டத்தோடு கேளிவிலாசம், எருதேற்றம் ஆகிய இச்செய்கை யுள்ளவர்களைப் பிடிக்கும். யக்ஷபூதம், சதா நகைப்பும் அதிக அழகும் பலமும் உள்ள வர்களைப் பிடிக்கும். சர்ப்பபூதம், பஞ்சமியிலும், திரிசந்தி காலத்தி லும், நீங்காதநித்திரை, அதிககோபம், சபலசித்தம் ஆகிய இச் செய்கை யுள்ளவர்களையும், சங்கராசாதியரையும், மிகுந்த திரவிய ஸ்தரையும் பிடிக்கும். ராக்ஷசபூதம், கிருஷ்ணபக்ஷ நவமியிலும் துவாதசியிலும் பொறுமைக்குணத்தர், குரூரவார்த்தையர், பூனைக் கண்ணர், பிரியமில்லாத வஸ்துக்களைப் புசிப்பவர் ஆகிய இவர் களைப்பிடிக்கும். கூஷ்மாண்டபூதம், சுக்கிலபக்ஷ அஷ்டமி பஞ்சமி சந்திரோதயகாலம், சந்தியாகாலம் என்னுமிக்காலங்களில் பலாட்டிய மும் மிகுந்த அபிமானமு முள்ளவர்களைப் பிடிக்கும். காமபூதம், பாக்கியம் சவுரியம் மிகுந்தபலம் புஷ்பசுகந்தாதி சிங்காரம் அழுக்கு வஸ்திரம் புனைதல் ஆகிய இச்செய்கை யுள்ளவர்களையும், அதிக பாக் கியவந்தரையும் பிடிக்கும். கிரகணபூதம், சப்தமியிலும், ஏகாதசியி லும் அதிக பாபகருமிகளைப் பிடிக்கும். வேதாள பூதம் கிருஷ்ண பக்ஷ துவாதசியிலும், சந்தியாகாலத்திலும், தற்புகழ்தல், கோள்சொல் லல், குலத்தினாலும் உருவத்தினாலும் தானே சிரேஷ்டனாகத் தன்னை மதித்தல் ஆகிய இச்செய்கை யுள்ளவர்களைப் பிடிக்கும். பிரமராக்ஷ சம், யதாகாரிஷம், அர்த்தபிதரம் என்னும் இம்மூன்று பூதங்களும், அர்த்தராத்திரியிலும் தருணம் நேரிட்ட காலத்திலும், வேதம், தபசு, ஆசாரம், நல்ல திடச்சித்தம், குருபூசை, பெரியோர்கள் பூசை, கிரகாதி தேவதாபூசை ஆகிய இவைகளில் நின்றும்தவறிய அசுத்த முள்ள பிராமணர்களையும், மற்றைச் சாதியாரையும், நெறி வழுவாத வேதியர்வீடு, தேவாலயம், தண்ணீர்த்துறை முதலிய இடங் களில் சையோகஞ்செய்பவரையும் பிடிக்கும். பைசாசம், குரு, விரு த்த, சித்த, முனி, என்னும் இவ் ஐந்துபூதங்களும், அஷ்டமி, துதியை, திரிதியை என்னும் இத்தினங்களில், பொன்னை அபகரிப் பவர், துர்ப்பலர், கோளர் முதலியவர்களைப் பிடிக்கும். மற்றைச் சாமானிய கிரக பூதங்கள், ராக்காலங்களில் சமயம் நேரிடும்போதெல் லாம் பிடிக்கும், ஆதலால் துர்ச்செய்கை கூடாது.

## சர்வபூத கிரகணரூபம்.

சகல பூதங்களும், தேகம் இளைத்து நிறமாறுதல், தேசசு குறைதல், துர்ப்பலம், ஆயாசம், கொலை செய்வதற்கே இச்சை, எவ் வஸ்துக்களிலும் அசங்கியம், மனக்கெடுதி, நித்திரா காலத்திலும் அநித்திரா காலத்திலும் பயந்தவர்போல் திடுக்கிட்டெழுந்து ஓடி யாவரையும் அடித்துத் திட்டி அளவிடக்கூடாத ஆர்ப்பாடம் பண்ணு தல் என்னும் இக்குணங்களைத் தங்களுக்குப் பழையரூபமாகப் பெற் றிருக்கின்றன.

## 1-வது தேவபூதம்.

இது, குளிர்ச்சியான சமபார்வை, பரிசுத்தம், கோபம் இல் லாமை, நாசியால் பேசுவர்போல்பேசுகின்றவார்த்தையிலுங்கொஞ்ச வார்த்தை, சயனவைபோகம், அற்பமலமூத்திரம்சாருதல், லோப குணம், வெகுகாலச் சமாச்சாரத்தை யெல்லாஞ்சொல்லுதல், பிரா மணர்க ளிடத்தும் தேவர்க ளிடத்தும் பக்தி, வெள்ளைவஸ்திரம், சுகந்தபுஷ்பம், நதி, மணற்குன்று, மலை, மெத்தைவீடு, பால், தயிர் ஆகியஇவைகளில் இச்சை, மிகுந்ததேசசு, அலர்ந்த செந்தாமரைப் பூவையொத்த முகவிலாசம், ஒருவேளை கண்களை மூடிக்கொள்ளுதல் எப்போதும் சுகந்தாதிகளைத் தரித்தல், யாவருக்கும் வரங்கொடுக் கின்ற தன்மை என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது அசுரபூதம்.

இது, பிராமணர்களிடத்தில் அபகாரநோக்கம், பிரமாதிதேவர் களும் நான்தானென்றுகூறுதல், விகாரவார்த்தை, அதிக பராக்கிர மம், யாவருக்கும் பயப்படாமை, சரீரத்தில் மிகுவியர்வை, கோபம், சஞ்சலப் புத்தி, அபிமானம்விடுதல், மத்தியபானத்திலும் மாமிசத் திலும் விருப்பம், தேவர்கள் பிராமணர் ஆசிரியர் ஆகிய இவர்களிடத் தில் மகாவிரோதம், பெரியோரைக்கண்டு நகைத்தல், வாயினாலும் பல்லினாலும் நகத்தினாலும் யாவரையும் சேஷ்டை செய்தல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 3-வது காந்தர்வபூதம்.

இது, மிகுந்த ஆசாரவொழுக்கம், நீங்காதசந்தோஷம், மேலில் சுகந்தபரிமளம்வீசுதல், அற்பவார்த்தை, பூஞ்சோலையிலும் ஆற்று

மணற்குவையலிலும் சிவந்தபுஷ்பத்திலும் இச்சை, அடிக்கடி நகைப்பு, கேளிவிலாசம், சங்கீதம்பாடல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது யக்ஷபூதம்.

இது, குந்திக்கொண்டுறங்குதல், நகைத்தல், ஆடல், பாடல், அழுதல், யார்வந்தாலும் அவர்களுடைய துணியைப் பிடித்துப் பிடித்து இழுத்தல், துர்ப்பாஷையாகத் திட்டுதல், பரிகாசஞ்செய்தல், கைகளையாட்டுதல், ஸ்நானம் போஜனம் பானம் ரத்தம் சந்தனம் தூபம் வஸ்திரம் மது மாமிசம் வேட்டையாடுதல் ஆகிய இவைகளில் இச்சை, கண்சிவந்து கலங்குதல், அதில் சலம்வடிதல், மதத்த நடை, சந்தோஷம், அதிவார்த்தை, ஸ்திரிகளிடத்தில் கோலாகலம், விகாரமுகம், அற்பகோபம் அல்லது அதிககோபம், மிகுபலம், அறிவின்மையாக எந்தவஸ்துக்களையும் ஈதல், தானேபேசிக்கொள்ளுதல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 5-வது ராக்ஷசபூதம்.

இது, புருவநெறித்தல், சிவந்த நேத்திரம், குரூரபார்வை, பேய்க்கூச்சல், பிரமித்து ஓடுதல், அநித்திரை, அசனவெறுப்பு அல்லது புசிக்கையில் நகைத்தல், சலமுள்ள ஏரி மடுக்களில் திரிதல், இளைத்தல், துர்ப்பலம், ஆடல், கண்டவர்களை அடித்தல், அசங்கித உருவம், நாணமின்மை, அதயிரியம், அழுதல், மது மாமிசம் ரத்தம் சையோகம், புஷ்பகந்தவருக்கம், பலி இவைகளில் விருப்பம், சூரன் போல் உதட்டைஉதட்டைக்கடித்தல், சற்றுநேரம் பேசாதிருத்தல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது கூஷ்மாண்டபூதம்.

இது, முகத்தைப் பார்ப்பதற்கே பயங்கரம்தோற்றல், அதிககோபம், தாமதவார்த்தை அல்லது மிகுவார்த்தை, நடந்தால் இரண்டு பீசங்களும் கனத்து தளர்ந்து தொங்குதல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 7-வது காமபூதம்.

இது, தானேஅடித்துக்கொள்ளுதல், பலவிததொனியாகப்பேசுதல், கம்மியவார்த்தை, அடிக்கடி நாவைநீட்டுதல் செபம்பண்ணுதல்

அசைவறத் திக்குகளைப்பார்த்தல், சுசி என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 8 - வது கிரணபூதம்.

இது, ரத்தநேத்திரம், உக்ரபார்வை, பயங்காவார்த்தை, அதிகதிண்டி, துன்மார்க்கச் சாவகாசம் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 9 - வது வேதாளபூதம்.

இது, பொய்யில்லாதவார்த்தை, தேகநடுக்கல், தாடையுலரல் சுகந்தாதி வஸ்துக்களைத் தரித்தல், பூமாலைபுனைதல், அகில் முதலிய தூப வருக்கத்தில் இச்சை, நித்திரை என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 10 - வது பிரமராக்ஷசபூதம்.

இது, கெடுதிச்சேஷ்டை, அதிகதிண்டி, வேதசாஸ்திரியர், தேவர், வைத்தியர், மந்திரவாதியர், தபோதனர் ஆகிய இவர்களிடத்தில் மகாவிரோதம், கத்தி தடிமுதலிய ஆயுதங்களினல் தானேஅடித்துக்கொள்ளல் எவர்களையும் அவமரியாதையாக அழைத்தல், சமயம்பார்த்து அடித்தலென்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 11 - வது அர்த்தபிதரபூதம்.

இது, கண்ணிமைகள் சரிந்துதொங்குதல், தலைமயிர் முறைத்தல், தாடையுலரல், முகக்களைநீங்குதல், துக்கித்தமுகம், உருட்டி உருட்டிப்பார்க்குதல், அகாலநித்திரை, மந்தாக்கினி, சுபாவவார்த்தை, சொப்பனத்தில் இறந்தவர்களைக்கண்டு பேசுதல், கறுப்பாகிய வஸ்து, வெல்லம், பால், மாமிசம் இவைகளில் விருப்பம் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 12 - வது பைசாசபூதம்.

இது, மனது துன்மார்க்கத்தில் செல்லுதல், நகைத்தல், அறிவு நீங்குதல், நகத்தால் கீறிக்கொள்ளுதல் அல்லது அடித்துக் கொள்ளுதல், யாரையும் மதிப்பில்லாமல் பேசுதல், தேசசுநீங்கிச் சங்கையுள்ளவர்போல் இருக்குதல், தெரிந்துந் தெரியாதவார்த்தை, தனது

துக்கத்தை ஒருவரோடுசொல்லுதல், சரீரத்தில் விருவுடன் துர்க்கந்தம் வீசுதல், தலையிறக்கம், குரல்கம்மல், நிதமும் பயங்கரத்தோடு கூவுதல், அசுசியான நடைநடக்குதல், எச்சில், கள், மாமிசம், கீதம், நாட்டியம், பாழ்வீடு ஆகிய இவைகளில் இச்சை, கல், முள், பாம்பு இவைகள் இருக்கும் வழிகளில் ஓடுதல், உட்கார்ந்து தலைசுற்றியாடுதல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 13-வது சித்தர் முதலிய நான்கு பூதங்களின் லக்ஷணம்.

சித்தர், முனிவர், குரவர், விருத்தர் ஆகிய இவர்களால் சபிக்கப் பட்டவர்களுக்கு அந்நால்வர்களின் தியானங்களும் உருவங்களும் வரும். இதனால், அவர்கள் புசிப்பதுபோல் புசித்தல், ஞானம், விசேஷ அறிவு, மிருவார்த்தை, சேஷ்டை, பலம், வீரம், வீரிய விருத்தி முதலியகுணங்கள் அதிகரிப்பதும் அன்றி, அவர்களின் செய்கைகள் எல்லாம் உண்டாகும். இந்த வாக்கியத்தில் நான்கு பூதங்களின் குணங்களடங்கி இருக்கின்றன. என்றறிக. இவைநிற்க. 307-வது பக்கத்தில், தொகுத்துக் காட்டிய 18-வகைப் பூதகணங்களின் குணங்களை எடுத்துக்கிரமமாகவிரித்துச் சொல்லிவந்த இடத்தில், சர்ப்பம், யதாகாரிஷம் என்கிற இரண்டு பூதகணங்களுக்கும் குணங்களை முதனூலிற் சொல்லாமையால், இதிலும் சொல்ல வில்லை.

## பூதகணமதாந்தரம்.

சிலநூலில், பூதகணத்தை, ஈசுரபூதகணம் ஆதியாக கசுமலபூதகணம் ஈறாக 16-விதம் எனக் கூறப்படுகின்றன. அவைகளையும் இதனடியில் முறையே எடுத்துக்காட்டப்படும்.

### 1-வது ஈசுரபூதம்.

இது, விகாரமில்லாத நேத்திரம், பித்த முகத்தேசசு, சதா சிவ சரித்திரங்களையே சொல்லிக்கொண்டிருத்தல், கம்பீரமான கண்டத்தொனி என்னு மிக்குணங்களை உண்டாக்கும். இது தோத்திரத்தால் விலகும்.

### 2-வது இந்திரபூதம்.

இது, கோடைஇடி இடித்தல்போல் மிகுந்த வார்த்தையை

உண்டாக்குவதன்றியும் நல்லபோகங்களையும் விரும்பும்படிக்குச் செய்யும்.

## 3 - வது குபேரபூதம்.

இது, யார்கேட்கினும் உடனே வேண்டியபொருளைக் கொடுப்பிக்கும்.

## 4 - வது வருணபூதம்.

இது, சுகந்தம், கள், சாராயம் ஆகிய இவைகளில் விருப்பம், ஏதேனும் ஒருகொம்பை வில்லாகவும் அதற்குப் புற்களை நாணாகவும் எண்ணிக் கையில்பிடித்துத்திரிதல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 5 - வது யாகசேனபூதம்.

இது, பிரமக்கியானத்தோடு பிரமநிலையைக் கூறுதல், பெரியவர்களுக்கு நல்ல வெகுமானங்கொடுத்தல், தொனிபேதமாகச் சமஸ்கிருத வார்த்தைகளைப் பேசுதல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும்

## 6 - வது விரூபாக்ஷபூதம்.

இது, பச்சைமாம்சம் கனிவருக்கம் அதிரசம் மாப்பண்டம் பாயசம் ஆகிய இவைகளில் இச்சை, ரோமச்சிலிர்ப்பு, தேகம்புஷ்டியாகக் கெட்டிப்பட்டிருத்தல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 7 - வது வித்தியுன்மாலிபூதம்.

இது, மேகம் குமுறும்போதும், மின்னல் மின்னும்போதும்; இடி இடிக்கும்போதும், மிகுந்த பயங்கரத்தை உண்டாக்கும்.

## 8 - வது சுகபூதம்.

இது, கால் கை முதலிய அவயவங்களையெல்லாம் நடுக்குதல், அடிக்கடி ஓடல், பயப்படக்காட்டுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 9 - வது நிஸ்த்தேச பூதம்.

இது, கோபம்வந்தால் தனக்குவேண்டியவஸ்துக்களைப்புசித்தல், வழிமறித்து ஸ்திரீகளை வெருட்டல், சாம்பலிலும் குப்பையிலும் கஷ்டத்திலும் படுக்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 10 - வது சாகோர்த்தபூதம்.

இது, கொம்புகளையும் கற்களையுமெடுத்துக்கொண்டு தெருவிலும் மசானத்திலும் சுற்றிச்சுற்றித்திரிதல், புல், செத்தை, இலை முதலியவைகளை வஸ்திரமாகத் தரித்தல், ஒருவேளை நிர்வாணமாக இருத்தல், யாவரிடத்திலும் மதிப்பில்லாமை, பட்டமரங்களின்மேல் ஏறிக்கொள்ளுதல், எள் கலந்த அன்னத்திலும், மதுபானத்திலும், மாமிசத்திலும் மிகுவிருப்பமென்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 11 - வது நருபூதம்.

இது, நகைத்தவார்த்தைபாடல், நன்மைதீமைஎண்ணுதுணைத்த படியே நடக்குதல், மத்தியபானஞ்செய்து எந்நேரமும் பிறரைச் சண்டை மூட்டல், ஆறுரசத்திலும் இச்சை, முகவாத்தியம் பண்ணுதல், மலைக்குகை மலைச்சாரல் தடாகம் சாவடி இவ்விடங்களில் சஞ்சரித்தல், துந்துமி பேரிகை மேகம் ஆகிய இவைகளின் சத்தத்தைக்கேட்டுச் சந்தோஷப்படுதல், குப்புறப்படுத்தல், உட்காரவில், தலைகுனிதல், பால் தயிர் மத்தியபானம் ரத்தம் இவைகளில் அபேக்ஷை, தேகங் குலுங்குதல், எந்த வஸ்துக்களையாவது பல்லினுற்கடித்தல், தானே தனித்துப் பேசுதல், அதில் எதிராளிக்கு உத்தரவு கொடுப்பதுபோல் கொடுத்தல், எப்போதும் சலத்திற்கிடத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 12 - வது மணிவரபூதம்.

இது, அதிககோபம், மேல்பார்வை, தேகத்தின்ரோமமெல்லாஞ் சிலிர்க்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 13 - வது நிகடபூதம்.

இது, ரகசியத்தில் சங்கீதம்பாடல், ஆடல், மவுனமாயிருத்தல், நகைத்தல், ஆட்டிலும் பாட்டிலும் இச்சை கொள்ளல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 14 - வது விசாகபூதம்.

இது, அடிக்கடி நகைத்தல், பூமியைக்கையால் அறைதல், கம்பியவார்த்தை, நிரேதுவாக அழுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 15-வது பித்தபூதம்.

இது, மல சலங்களைக் கையால் பிசைதல், நகத்தால் துரும்பைக் கிள்ளிக்கொண்டேயிருத்தல், அசனவெறுப்பு, பயம், பித்தன் போல் சேஷ்டை செய்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 16-வது கசுமலபூதம்.

இது, போஜனத்தைக்கண்டு நகைத்தல், கீச்சுக்குரலால் கூப்பிடுதல், திடுக்கெனப்பயப்படுதல் என்னும் இக்குணங்களைஉண்டாக்கும்.

ஆக பூதகணம் பதினாறுடன் மதாந்தரமும் முற்றியது.

---

## அசாத்திய பூதநிதானம்.

எந்தப்பூதம் பிடித்திருந்தாலும், அம்மனிதர்கட்கு மனம் நானாவிதமாகக் கலங்குதல், தலைமயிரை விரித்துக்கொண்டு திரிதல், நிர்வாணமாக அலைதல் என்னு மிக்குணங்கள் இருந்தாலும், நெடுநாள்ஆகியும் இக்கிரகசங்கை நீங்காவிட்டாலும், அவர்கள் பின்னால் சிறுவர்கள் கும்பலாகக் கூடிக்கொண்டு கூச்சலிட்டுத் தொடர்ந்தாலும், அசாத்தியமே.

மேற்சொல்லிய பூதகணங்களை ஓட்டிவிடுதற்கு எண்ணங்கொண்ட அவுஷதவினோதன் என்கின்ற மகாசிகிச்சகன், வீரபத்திரநசியம், நந்தீசர் ஆக்கிராணம், பூதகலிக்கம், ருத்திர கபாலவுருண்டை, அஷ்டகாளித்தூமம், பூதநாசத்திரி, காலபயிரவத்தீபம், அகத்தீசர் குழம்பு, விஷமுஷ்டித்தயிலம் முதலிய அவுஷதப்பிரயோகங்களையும், வேப்பிலை, வசம்பு, மைசாட்சி, மான்கொம்பு, யானைக்கொம்பு, வெண்கடுகு, மஞ்சள், மயிலிறகு என்னும் எட்டுச் சரக்குகளையும் சமமாகச் சேர்த்திடித்துத் தூபம்போடுகின்ற புகைச் சிகிச்சைகளையும்; நிலக்கடம்பு, கோஷ்டம், செருப்படை, நெட்டைப்பேய்மிரட்டி, இலவுங்கப்பட்டை ஆகிய இவ் ஐவகைச் சரக்குகளையும் வகை 1-க்கு, பலம் ½-விழுக்காடு ஒருபடி நல்லசலத்தில் சேர்த்து, எட்டில் 1-ஆகக்காய்ச்சிய குடிநீரை, அந்திசந்தி கொடுப்பிக்கின்ற வஸ்தி சிகிச்சைகளையும்,

இன்னும் சிகிச்சாசாரத்தில் கூறியபற்பல சிகிச்சைகளுடன் மாந்திரிகச் சிகிச்சைகளையும் செய்யவேண்டும்.

பத்தாவது, அதிசூல ரோகபடலம் முற்றியது.

---

## 11-வது உன்மாதரோகபடலம்.

---

### உன்மாதரோகபேதம்.

வாதம், பித்தம், சிலேஷ்மம் ஆகிய இம்மூன்றும் அதனதன் மார்க்கந்தப்பி நடக்கும்போது மனதில் ஒருவிதமதம் பிறக்கும். அதுவே உன்மாதரோகமாம். இது, வாதோன்மாதம், பித்தோன்மாதம், சிலேஷ்மோன்மாதம், திரிதோஷோன்மாதம், வியாத்தியோன்மாதம், விஷோன்மாதம் என ஆறுவிதப்படும். உன்மாதம் என்பது மதம்.

### 1-வது வாதோன்மாதரோகம்.

இது, கைகளைச் சேர்த்துத் தட்டுதல், நகைத்தல், ஆடல், ஒருவனைப்பிடிக்க எழுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 2-வது பித்தோன்மாதரோகம்.

இது, யாவரையும் பயப்படுத்துதல், எழுந்தெழுந்து ஓடுதல், சீதளபதார்த்தத்திலிச்சை என்னுமிக்குணங்களை உண்டாக்கும்.

### 3-வது சிலேஷ்மோன்மாதரோகம்.

இது, அநித்திரை, யாவரையும் பயமுறுத்தல், ஸ்திரீகளிடத்தில் மிகுந்த விருப்பம், சகலபதார்த்தங்களையும் வேண்டுமெனக் கேட்டல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 4-வது திரிதோஷோன்மாதரோகம்.

இது, வாதம் முதலிய மூன்று உன்மாத ரோகங்களுக்குள்ள குணங்கள் யாவையும் ஒரேகாலத்தில் உண்டாக்கும்.

## 5-வது வியாத்தியோன்மாதரோகம்.

இது, மிகுந்ததிரவியத்தைப் போக்கடித்த விசனத்தினாலும், மனைவியை இழந்த துக்கத்தினாலும், இன்னும் பற்பல மனோவியாதிகளினாலும் பிறந்து, அதயிரியம், அடிக்கடி வியாகுலப்படல், தேகம் வெளிறல், தெய்வமே தெய்வமே எனப்பிரலாபித்தல், காரணம் இல்லாமலே கண்ணீர்விட்டு அழுதல், தானே ஆச்சரியப்படுதல், பெண் சாதியின் குணத்தை நினைத்து விசாரப்படுதல், மனது சிறுத்தல், ஒருவேளை தியானிகள்போலிருத்தல், நித்திரைப்பங்கம், புரளல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது விஷோன்மாதரோகம்.

இது, இடுமருந்து முதலியவைகளால் உண்டாகி, முகங்கறுத்தல், தேசசும் பலமும் பஞ்சேந்திரியங்களும் நசிக்குதல்; திகைத்துத்திகைத்துத்திரிதல், முன்புசாப்பிட்டமருந்தினதுவிஷம் தேகத்தில் ஊறலூறக் கண்கள்சிவக்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது அசாத்தியமாம்,

மேற்சொல்லிய உன்மாதரோகங்களை, மூலைப்பாலினாலும் செங்கரும்பு ரசத்தினாலும், மூந்திரிப்பழம், கோரைக்கிழங்கு, அதிமதுரம், தண்ணீர்முட்டான்கிழங்கு, சந்தனம் இவைகளின் கஷாயத்தினாலும், கூஷ்மாண்ட கிருதத்தினாலும், முசறுமுட்டைப்பாலால் செய்கின்ற நசியம் முதலிய சிகிச்சைகளினாலும் பரிகரிக்கவேண்டும்.

## அபஸ்மாரரோகபேதம்.

சிந்தித்தலினாலும், துக்கத்தினாலும், பயத்தினாலும் மனதுமிகவும் பதைத்துத் தபிக்குங்காலத்தில், வாத பித்தங்கள், அதிகரித்து மனதிற்குத் தெளிவைத்தருகின்ற நரம்புகளை யுலர்த்தி, அம்மார்க்கங்களை மேகம் கம்மிபதுபோல் இருள் அடையச்செய்து, புத்தியின் தெளிவைக்கெடுத்துச் சத்துவகுணத்தை நீக்கித் தகாதநடத்தையை நடப்பித்து, உன்மாதரோகத்தைப்போலவே இந்த அபஸ்மாரரோகத்தைப்பிறப்பிக்கும், இது, வாத அபஸ்மாரம், பித்த அபஸ்மாரம், சிலேஷ்ம அபஸ்மாரம், திரிதோஷ அபஸ்மாரம் என நான்கு விதப்படும். அபஸ்மாரம் என்பது புத்திதெளிவு நீங்குத

## அபஸ்மாரரோகபூர்வரூபம்.

அபஸ்மாரரோகமானது, மார்புதுடித்தல், புத்திக்குத்தெளி வின்மையால் ஒன்றும் தோன்றாதிருத்தல், பிரமை, கண்களில் இருட் கம்மல், கிடந்த இடத்திலேயே கிடக்குதல், கண்ணிமை நோதல், விகாரப்பார்வை, காதுகேளாமை, ஊமைபோலிருத்தல், சர்வாங்க வியர்வை, சொள்ளுவடியுஞ் சலத்தைச் சப்புதல், நாசியிற்சலம்வடி தல், அசீரணம், அரோசகம், மூர்ச்சை, வயிற்றில் இரைச்சல், துர்ப்பலம், சரீரநோவு, தாகம், அநித்திரை, ஒருவேளை அற்பநித் திரை, அந்த நித்திரையில் தான் ஆடினதுபோலும் பாடினது போலும் சாராயம் கள் எண்ணெய் இவைகளைக் குடித்தது போலும் தோற்றல், பின்பு அவைகளில் இச்சைப்படல் என்னும் இக்குணங் களைத் தனக்குப் பூர்வரூபமாகப் பெற்றிருக்கின்றது.

## அபஸ்மாரரோக சாமானியலக்ஷணம்.

பல்லைக்கடித்தல், நுரைநுரையாகக் கக்குதல், கைகால் உதறு தல் பார்க்கு முருவமெல்லாம் கண்ணுக்குத்தோற்றாமை, நடக்கும் போது கால்கள் பின்னிக்கொள்ளுதல், நாக்கு கண் புருவம் ஆகிய இவைகள் விகாரப்படல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இக் குணங்கள் சகல அபஸ்மாரரோகத்திற்கும் பொதுவாம். இந்தரோகத் தில் வாதசஞ்சாரம் மட்டிட்டிருக்கில், அறிவு கொஞ்சம் தெளி வடையும். அது அதிகரிக்கில், சிலநாள்பொறுத்து முன்பு சொன்ன குணங்களெல்லாம் அதிகரிக்கும்.

## 1-வது வாதஅபஸ்மாரரோகம்.

இது, இரண்டுதொடைகளும் ஒடிந்து விழுந்துபோவதுபோ லிருத்தலுடன் அதிரல், அறிவுநீங்குதல், ஞாபகமறதி, அழுகை, கண்ணைவிழித்தபடியே நித்திரைசெய்தல், நுரைநுரையாகக் கக்கு தல், நடுக்கல், தலையில் அடித்துக்கொள்ளுதல், பற்களை நெறநெ றென்றுகடித்தல், தலைதொங்கவிடல், திமிர்முறுக்குதல், குரக்குவலி போல் விரல்களெல்லாம் வளைதல், கண் முகம் நகம் சருமம் ஆகிய இவைகள் தேசசு நீங்கிக்கறுத்தல், ஒருவேளை சிவத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இந்தரோகத்தில், சரீரமெல்லாந் துடிப் பும் தேசசு மங்குதலும் விகாரமு முண்டாகும்.

## 2 - வது பித்தஅபஸ்மாரரோகம்.

இது, தேகமறதி, உடனேதெளிதல், கண் சருமம் முகம் ஆகிய இவைகள் மஞ்சள்நிறமாகுதல், ஒருவேளை கண்கள்வெளுத்தல், அல்லது சினங்கொண்டவன் கண்போல்சிவத்தல், வெறித்தபார்வை, பூமியைக் கையால் அறைதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 3 - வது சிலேஷ்மஅபஸ்மாரரோகம்.

இது, சகலகாரியங்களிலும் மறதி, வெகு நேரம் பொறுத்துத் தெளிதல், வெறிச்சேஷ்டை அதிகரித்தல், ஒருவேளைகுறைதல், சதா சொள்ளுச் சலம் வடிதல், கண் முகம் நகம் ஆகிய இவைகள் வெளிறல், தேகம் பழுத்ததுபோல் ஒருவிதவெளுப்பு என்னுமிக்குணங்களை உண்டாக்கும்.

## 4 - வது திரிதோஷ அபஸ்மாரரோகம்.

இது, வாதம் முதலிய மூன்று அபஸ்மாரரோகங்கட்குள்ள குணங்களையெல்லாம் ஒரேகாலத்தில் உண்டாக்கும். இது அசாத்தியமாம்.

முற்கூறிய அபஸ்மாரரோகங்களைத், திரிகடுகு, திரிபலை, பூண்டு, புங்கம்பருப்பு, எட்டிப்பழத்தசை இவைகள் ஊறிய பச்சிலை ரசநசியம்: சிங்கம், யானை, குதிரை, ஒட்டை, கீரி, பூனை என்னும் இச்செந்துக்களின் ஆண்பிச்சுக்கருவினால் கூட்டிய ஆக்கிராணநசியம் மகாபூதகலிக்கம்; மலகுடாரி, வமனவிரேசனம், கருங்காக்கட்டான்பூ, பிரமியவழுக்கை, நன்னாரிவேர், சதாவரி, அகத்திஇலை இவைகளின் கஷாயம், கூவிளைலேகியம், ஆலகாலவிஷத்தயிலம், கோட்டான், வலியான் ஆகியான பக்ஷிகளின் இறகுப்புகை முதலிய அவுஷதங்களினாலும் க்ஷத்திர க்ஷாராக்கினிச் சிகிச்சைகளினாலும் ஆயுள்வேதியர் நிவர்த்திசெய்யவேண்டும்.

---

சித்தர்மதாந்தரம்.

## வலியின்பேதம்.

வலியானது, அமாகண்டவலி, குமாகண்ட வலி, பிரமகண்டவலி, காக்கைவலி, முயல்வலி, என ஐந்து விதப்படும்.

## 1-வது அமரகண்டவலி.

இது, வரும்போது தேகத்தில் நோவுண்டாகி மூர்ச்சைகாணல் கையுங்காலும் அடித்துத் துவைத்ததுபோல் அசைவறக்கிடத்தல், குடைச்சல், பல்லை இளித்துமூடல், கழுத்திலும் சிரசிலும் மிகு வியர்வை, நெஞ்சிலும் தோளிலும் முதுகிலும் உதிரத்தைப்பற்றிய உபத்திரவம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதுவே குதிரைவலியாம்.

## 2-வது குமரகண்டவலி.

இது, வாதசிலேஷ்மத்தால் பிறந்து, முன்கழுத்தையும் முகத்தையும் முறுக்கித் தோள்பக்கத்தில் வைக்குதல், தாடை உதடு செவி கண் இவைகள் கோணுதல், அப்பக்கத்தில் அதிகஉபத்திரவம், சந்நிபாதகுறிகள் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். இது, மாதர்களுக்குக்கண்டால், கருப்பவாயுவைப்போல் வயிற்றில் உதிரத்தைப் பிதுங்கவொட்டாமல் கட்டிக்கொண்டு கருப்பாசயத்தில் அடங்கி இருந்து, சிலநாள் பொறுத்துச் சந்நிபாதம் போலவே காணும். இது திரிதோஷத்தால் பிறக்கும்.

## 3-வது பிரமகண்டவலி.

இது, கை கால் நீட்டினபடியே இருந்து துடிக்குதல், ஆகாயத்தைச் சிமிட்டாமல் பார்க்குதல், தேகத்தில் அதிக உபத்திரவம் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். இது சுத்தசிலேஷ்மத்தினால் பிறக்கும். இதனைக் குரங்குவலி எனச் சிலர் கூறுவர்.

## 4-வது காக்கைவலி.

இது, கண்களை மலரமலர விழித்தல், அவ்வேளையில் மலசலம் நழுகல், இரண்டு கால்களும் முறைத்துக்கொள்ளுதல், தொண்டையும் நாவும் உலரல், சிலேஷ்மத்தினால் வாயிலிருந்து கோழைவிழுதல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். இது வாதசிலேஷ்மத்தால் பிறக்கும்.

## 5-வது முயல்வலி.

இது, உடலில் வாயுவுநிறைந்த காலத்தில் எழும்புதல், வயிற்றில் நோவு, வாயால் நுரைதள்ளுதல், கை கால் கண் இவைகள் முறைக்கு

தல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். இந்தரோகம் தண்ணீரைக் கண்டாலும், தண்ணீரைச் சிரசில் தெளித்தாலும், அல்லது அக்கினியைக் கண்டாலும், அக்கினிச் சுடுகைபட்டாலும் சனப்பெருக்கத்தைக் கண்டாலும் அடிக்கடி உண்டாகும்; இது வாயுவினால் பிறக்கும்.

முற்கூறிய வலி 5-ல், பிரமகண்டவலி அசாத்தியம்; மற்ற 4-ம் அர்க்கக்ஷீராதித்தயிலம், நசியம், ஆக்கிராணம், கலிக்கம், விரேசன அவுஷதம், மந்திரம் முதலியவைகளினால் சாத்தியமாம். இவ்வலிகளில் இன்னும் சிலகுணங்களுண்டு. அவைகளை 101-வது பக்கத்தில் மூர்ச்சாரோகத்தில் காண்க. இவைகளையும் அப்பேதங்களென்றே கூறப்படும்.

மதாந்தரம் முற்றியது.

இனி ஊர்த்துவாங்கரோகங்களைச் சொல்லப்படும்.

## நேத்திரரோகபேதம்.

வயிற்றில் பிண்டம்வளரும்போது தாயானவள் கிருமியையாவது, கிருமி சநிக்கும் வஸ்துக்களையாவது புசித்தல், அல்லதுகருப்பம் அடைந்த ஏழாம்மாதத்தில் அக்கினி கிட்ட செந்துக்களின் மாமிசம், கண்ணுக்கு ஆகாததிரவியம் ஆகிய இவைகளை அருந்துதல், பாஷாணம் முதலிய புகைபடுதல் சிரசிலும் கண்ணிலும் அடிபடல், மிகுசுமையெடுத்தல், பாதஞ்சுடும்படியாகக் கிரேவெய்யிலில் அலைதல் அப்பியங்கஸ்நானம் தவறுதல், அல்லது, அந்தஸ்நானத்தில் எண்ணெய்ச்சிக்கு விடாமை, உள்ளங்காலில் உஷ்ணஔஷதிட்டம் அவ்விதலேபனம் முதலியவைகளைச்செய்தல் என்னும் இச்செய்கைகளினாலதிகரித்த வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் மூன்றும் தனித்தனியேயாவது, இரண்டிரண்டாகத் தொந்தித்தாவது, மூன்றுங்கூடிய திரிதோஷமாக ஆவது, மூவிதநரம்புகளின் துவாரவழியால் சிரசில் வியாபித்துக் கண்களில் சேரும்போது, அக்கண்களில் ஆறுஸ்தானங்களைப்பற்றி 94-விதரோகம் பிறக்கும். அவையாவன:— இமைகளில் 24-ம், வெள்விழிச் சந்திகளில் 9-ம், வெள்விழியில் 13-ம் கருவிழியில் 5-ம், பாவையில் 27-ம், கண்கள் முற்றிலும் 16-ம், ஆம்.

## வர்த்தமம் என்கிற இமையைப்பற்றிய ரோகபேதம்.

இமைகளில் கிருச்சிரோன்மீலனம் ஆதியாக அரிசோவர்த்தமம் ஈறாக 27 விதரோகம் பிறக்கின்றது. அவைகளின் பெயரையும் செய்கைகளையும் இதனடியிற்காண்க. வர்த்தமம் என்பது கண்ணிமை.

### 1-வது கிருச்சிரோன் மீலனவர்த்தமரோகம்.

இது, அபத்தியவஸ்துக்களைப் புசிப்பதினால் வாயுவு அதிகரித்துக் கண்களின் இமைகளில் ஒட்டியிருக்கின்ற நரம்புகளை அநுசரிக்கும்போது, பிறக்கும். இதனால், நித்திரை தெளிந்த உடன் கண்வேதனையுடன் விழிக்கக்கூடாமை, தூசிவிழுந்ததுபோல் உறுத்தல், மூடிக்கொள்ளுதல், பிரயாசத்தின்மேல் விழித்தல், நீர்க்கம்மல், இமைகனத்தல் என்னுமிக்குணங்கள் உண்டாகும். ஆனால் கண்ணை நிமிண்டில் கொஞ்சம் சாந்தப்படும்.

கிருச்சிரம் என்பது பிரயாசை; உன்மீலனம் என்பது விழித்தல்.

### 2-வது அருங்நிமேஷவர்த்தமரோகம்.

இது, வாயு இமைச்சந்திகளில் நிற்கும்போது பிறந்து, இமைகளை ஓயாது ஆட்டுவித்து ஒருவேளை ஆடவும் மூடவும் திறக்கவும் செய்யும். அருங் என்பது நோவின்மை; நிமேஷம் என்பது இமைக்கொட்டல்.

### 3-வது சிக்தாவர்த்தமரோகம்.

இது, வாயுவானது இமைச்சந்திகளிலிருக்கும் நரம்புகளைத் தடிக்கப்பண்ணும்போது பிறக்கும். இதனால், அவைகளில் காங்கையுடன் அணுவிலும் அணுத்துவமான சிறுசிறுகொப்பிளங்கள்எழும்புதலும், அந்த நிமைகளுக்குள் மணல்விழுந்து உறுத்துவதுபோல் இருத்தலும் நீர்முட்டலும் உண்டாகும். சிக்தா என்பது மணல்.

### 4-வது வாதாஹதவர்த்தமரோகம்.

இது, வாயுவானது கண்களை மூடும் போது பிறக்கும். இதனால் இமைகள் சந்தில்லாமல் ஒட்டிக்கொள்ளலுடன் அசைக்கக்கூடாமையாக இறக்குதல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். ஹதம் என்பது அடித்தல்.

## 5-வது கும்பிகாவர்த்தமரோகம்.

இது, பித்தமானது இமைகளின் உள்நரம்புகளையும் வெளிநரம்புகளையும் அநுசரிக்கும்போது பிறக்கும். இதனால், அவைகள் பிரமாணத்திற்கு உயராமல் கெட்டியாகத்தடிக்கும், அந்த தடிப்பானது நீலோற்பலத்தின் வித்துக்களைப்போலவே சிறுகட்டிகளாக ஏர்ப்பட்டு உட்புறத்திலேயே அடங்கியிருக்கும். கும்பிகம் என்பது நீலோற்பலவிதை.

## 6-வது போதகிவர்த்தமரோகம்.

இது, சிலேஷ்மமானது இமைநரம்புகளில் சேரும்போது பிறக்கும். இதனால், அந்தநரம்புகளில் சீரகத்தைப்போலும் கடுகைப்போலும் சிறுசிறு கட்டிகள் எழும்பும். அவைகள் கெட்டிப்பட்டும், உயர்ந்தும் வெளுத்தும் இருக்கும். போதகி என்பது சீரகம்.

## 7-வது அஞ்சனைநாமிகாவர்த்தமரோகம்.

இது, இமைகளின் நடுமையத்திலாவது,மூனைகளிலாவது, பயறுகளின் பிரபாணமாகத் தாம்பர நிறத்துடன் உதிரத்தைக் கக்குவதான கட்டிகளை எழுப்பும். அக்கட்டிகள் தினவுடன் நோவைத் தருவதுகளும் ஸ்திரம் உள்ளதுகளுமாக இருக்கும். அஞ்சனை என்பது தீபச்சிகை.

## 8-வது அற்புதவர்த்தமரோகம்.

இது, கண் இமையின் ஓரங்களில் மாமிச மொத்தையைப்போல் தடித்தலை உண்டாக்கும். அது உருண்டையாகத்திரண்டு நோவில்லாமல் நீர்க்கம்மலைத்தருகின்ற கட்டிகளாகும். அவைகள் சில தோஷங்களினால் விஷமித்துப் பருத்துக் கண்ணுக்கு வெளிப்புறத்தில் பிதுங்கித் தொங்கி அசையப்படுவதாக இருக்கும். அற்புதம் என்பது அதிகரித்தல்.

## 9 - வது பிசவர்த்தமரோகம்.

இது, வாதாதிகளால் பிறந்து, இமைகளின் வெளிப்புறத்தில் கட்டிகளை எழுப்பும். அவைகள் உப்பலுடன் கனத்து உட்புறத்தில்

சிற்பதுவாரத்தை வைத்துக்கொண்டு நீர்க்கம்மலைத்தரும். இதனால், கண்ணில் சொருசம் வச்சிரம் உண்டாகிச் சலம்வடியும்; அது தாமரை நூலைப்போல் உறைந்தும் பிசுபிசுத்தும் இருக்கும். பிசம் என்பது தாமரை வளையம்.

## 10 - வது கிலிஷ்டவர்த்தமரோகம்.

இது, கபத்தினால்பிறந்து,இமைச்சந்துகளில் சிவந்தவீக்கத்தை உண்டாக்கும். அவ்வீக்கம் கட்டிகளாகத் தோன்றித் தினவையும், உபத்திரவத்தையும் கொடுக்கும். கிலிஷ்டம் என்பது உபத்திரவம்.

## 11 - வது அலஜிவர்த்தமரோகம்.

இது, கருவிழிக்குவெளியில் சிவந்தகட்டிகளைப் பிறப்பிக்கும். அக்கட்டிகள் கெட்டிப்பட்டு உயர்ந்து அடிக்கடி உப்புவதும் ஓயாத பீளையைத்தருவதுமாக இருக்கும். அலஜி என்பது வீக்கத்தை யுடையது.

## 12 - வது கர்த்தவர்த்தமரோகம்.

இது, இமைச்சந்திகளில் உண்டாகின்ற கட்டிகள் உடையும் போது பிறக்கும். இதனால், அவ் இடம் சேற்றைப் பூசினதுபோல் இருக்கும்.

## 13 - வது பக்ஷ்மசாதரோகம்.

இது, இமைமுனைகளி லெரிச்சலைப் பிறப்பித்து அவ் இமை மயிர்களை உதிரப்பண்ணி, அவ் இடத்தில் மஞ்சள்நிறத்தை யுண்டாக்கும். பக்ஷ்ம என்பது இமை; சாதம் என்பது உபத்திரவம்.

## 14 - வது சகணவர்த்தமரோகம்.

இது, சிலேஷ்மத்தினால் பிறந்து, இமைச்சந்திகளில் கட்டிகளைப் பிறப்பிக்கும். அக்கட்டிகளிலந்தைக்கொட்டைப் பிரமாண முள்ளதுகளும், ஒருவேளை அதிகரித்தும் குறைந்தும் கெட்டிப்பட்டும் வெளுத்தும் வட்டவடிவுடன் தினவைத் தருவதுகளுமாக இருக்கும். அவைகள் பழுத்து உடையுங்காலத்தில் மிகுநோவுண்டாடாகும்.

சகணம் என்பது உபத்திரவக்கூட்டத்தை உடையவிரணமாம்.

## 15-வது பித்தோத்கிலிஷ்டரோகம்.

இது, பித்தத்தினால் பிறந்து, இமைச்சந்திகளில் எரிச்சல், நீர்க்கம்மல், குத்தல், ரத்தம்போல் சிவக்குதல், தொடக்கூடாத நோவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும். உது என்பது அதிகரித்தல்.

## 16-வது கபகிலிஷ்டரோகம்.

இது, சிலேஷ்மதோஷமானது இமைகளில் அதிகமாகச் சேருங்காலத்தில் பிறந்து, அவ் இடங்களில் நீர்க்கம்மல், ஒரு வேளை மரத்தல் எரிச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 17-வது ரத்தகிலிஷ்டரோகம்.

இது, ஒருகாரணமும் இல்லாமலே கண்களுக்கு மிகுந்த ரத்த நிறத்தையும் புட்பம் வாடுவதுபோல் வாட்டத்தையும் உண்டாக்கும்.

## 18-வது திரிதோஷகிலிஷ்டரோகம்.

இது, கண்களில் திரிதோஷம் அதிகரித்துச் சேருங்காலத்தில் பிறந்து, அக்கண்களைச் சிவப்பாக்கிக் கலங்கும்படிக்குச் செய்யும்.

## 19-வது சியாவவர்த்தமரோகம்.

இது, திரிதோஷமானது இமைகளில் இருக்கின்ற ரத்தத்துடன் கூடும்போது பிறந்து, அவைகளில் வீக்கத்தை உண்டாக்கும். இதனால் அம்மார்க்கத்தில் கறுத்தநிறமும் நோவும் நீர்க்கம்மலும் உண்டாகிக்கொண்டே இருக்கும். சியாவம் என்பது கறுப்பு.

## 20-வது உச்சங்கவர்த்தமரோகம்.

இது, பாலர்களின் கண் இமைக்குள் சிவப்பு கறுப்பு நிறங்களான கொப்பிளத்தைப் பிறப்பிக்கும். மீளவும் அவைகளைச் சுற்றி அந்நிறங்களையுள்ள அனந்தங்கொப்பிளங்கள் உண்டாகிக்கொண்டேயிருக்கும். உச்சங்கம் என்பது மிகவுஞ் சேர்க்கையையுடையதாம்.

## 21-வது குகூணவர்த்தமரோகம்.

இது, சிசுக்களுக்குக் கபத்தினாலும் பித்தத்தினாலும் ரத்தத்தினாலும்பிறந்து, கண்களில் வீக்கம், சிவப்பு, குத்தல், நீர்க்கம்மல், பார்ப்பதற்குப் பிரயாசை, காது மூக்கு கண் ஆகிய இவைகளைக் கையால்

தேய்த்துக்கொள்ளல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இந்த ரோகம் குழந்தைகளுக்குப் பல் முளைக்கும்போதுதான் காணும்.

## 22-வது பகுளவர்த்தமரோகம்.

இது, நாளுக்குநாள் புதிது புதிதாகத் துர்மாமிசத்தை வளர்ப்பித்து இமைகளைப் பருக்கப்பண்ணும். பகுளம் என்பது அதிகம்.

## 23-வது வர்த்துமோபரோதரோகம்.

இது, இமைகள் தடித்து வீங்கும்போது பிறக்கும். இதனால் கண்வழிமூடுதல், இமைமயிர் முறைத்து ஊசிமுனைபோல் விழிக்குள் குத்தல், அப்போது கண்கள்கலங்குதல், இதில் வாயுவும் சேருவதால் நோவோடு நீர்க்கம்முதல் என்னுமிக்குணங்கள் உண்டாகும். இத்துர்க்குணங்களால் நேத்திரப்பார்வைகெடும். அம் மயிர்களை வாங்கிவிடில் கொஞ்சம் அநுகூலமாக இருக்கும். உபரோதம் என்பது மூடுதல்.

## 24-வது அரிசோவர்த்தமரோகம்.

இது, இமைச்சந்திகளில் துர்மாமிசம் வளரும்போது பிறக்கும். இதனால், கண்களில் மாத்தல், மினுமினுப்பு, எரிச்சல், அதிநோவுடன் சிவப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகும். அத் துர்மாமிசஸ்தானத்தில் ரத்தம்வாங்கில், அது கரையும் கரைந்தாலும் மறுபடியும் வளர ஒட்டாத சிகிச்சை செய்யவேண்டும்.

ஆக இமைரோகம் 24-ம் முற்றியது.

---

## நேத்திரசந்திரோகபேதம்.

வெள்விழிக்கும் இமைச்சந்திக்கும் நடுவில் சலசிராவம், கபசிராவம், ரத்தசிராவம், பருவணி, பூபாலஜம், பூபசிராவம், கிருமிக்கிரந்தி, உபநாகம், அலஜி என ஒன்பதுவிதரோகம் பிறக்கும்.

## 1-வது சலசிராவரோகம்.

இது, இமைச்சந்திமார்க்கத்தில் ஒட்டிஇருக்கின்ற சன்னநரம்புகளில் வாயுவியாபித்துப் பின்பு கண்களுக்குச் சலத்தைத் தாங்கிக்

கொண்டு இருக்கும் நரம்புகளில்சேரும்போது பிறக்கும். இதனால், வெள்விழிக்குச் சந்திஸ்தானமாகிய கருவிழியிலிருந்து கொஞ்சம் சிவந்த நிறமுள்ள சலம் ஒழுகுதல், கண் நோவுடன் சிவத்தல் வீக்கம், நீர்க்கம்மல் என்னும் இக்குணங்களுண்டாகும். சலம் என்பது நீர், சிராவம் என்பது ஒழுகுதல்.

## 2-வது கபசிராவரோகம்.

இது, முன்சொன்ன வாயுவைப்போல் நரம்புகளில் சிலேஷ்மம் வியாபிக்கும்போது பிறக்கும். இதனால், கண்களிலிருந்து வெளுப்பாயும் பிசுபிசுத்த குழம்பாயும் விஸ்தாரமாயும் சலம் ஒழுகும்.

## 3-வது ரத்தசிராவரோகம்.

இது, முற்கூறிய கபத்தைப்போல் நரம்புகளில் ரத்தமானது வியாபிக்கும்போது பிறக்கும். இதனால், கண்களில் நின்றும் சுத்த உதிரம்போலவே சிவந்தும் அதிகரித்தும் குறைந்தும் உஷ்ணசலம் ஒழுகும்.

## 4-வது பருவணிரோகம்.

இது, வெள்விழிச் சந்திகளில் பயறுகளின் பிரமாணங்களை ஒத்து வெளுத்திருக்கின்ற கட்டிகளைப் பிறப்பிக்கும்; அவைகள் பழுத்துஉடைந்தால், ரத்தம் ஒழுகுதல் கண்களில் எரிச்சல், குத்தல் என்னுமிக்குணங்கள் உண்டாகும். இது, பருவகாலந்தோறும் மாறுது உதிரத்தை ஒழுகும்படிக்குச் செய்வதால், பருவணிரோகம் எனப் பேர்பெற்றது.

## 5-வது பூயாலஜரோகம்.

இது, வெள்விழிச் சந்திகளில் நோவையும் வீக்கத்தையும் தருகின்ற வெகுசூக்ஷமமான கட்டிகளை எழுப்பும். இதனால், கண்களில்மாறாத பீளைஉற்பத்தியும் மிகுந்த வேதனையும் கருவிழி உப்புதலும் உண்டாகும். பூயம் என்பது பீளை, அலஜம்என்பது மந்தம்.

## 6-வது பூயசிராவரோகம்.

இது, திரிதோஷங்களானவை கண்களுக்கு ரத்தத்தைப் பாய்ச்சுகின்ற நரம்புகளில் வியாபித்துச் சந்தி ஸ்தானக் கருவிழியைப் பற்

றப்போது பிறக்கும். இதனால், அவ்விழியின் சமீபத்திலிருக்கும் சருமமும் மாமிசமும் கைப்பட்டுவதுமன்றி, ரத்தத்தோடுகூடின பீளையும் சாரும்.

## 7-வது கிருமிக்கிரந்திரோகம்.

இது, வெள்விழிச் சந்தியிலும் கருவிழிச் சந்தியிலும் கிருமி நெளிகின்ற விரணத்தைப் பிறப்பிக்கும். அதில்பீளையும் நோவும் உண்டாகும்.

## 8-வது உபநாகரோகம்.

இது, கபத்தினால் வெள்விழிச் சந்தியில் தாமரைக்கொடியினது அடித்தண்டைப்போல் கட்டியை எழுப்பும். அதுவெளுத்து அடியில் கெட்டிப்பட்டு முனையுயர்ந்து மிருதுவுடன் நோவில்லாமல் பருத்து நீர்க்குமிழியை ஒத்து உட்புக்சரிப்பதும், நமைச்சலோடு பிசுபிசுப் பைத்தருவதும், அசைவதுமாக இருக்கும். இதனால், வீக்கமும் வேதனையும் உண்டாகும். இது அசாத்தியமாம். உபநாகம் என்பது தாமரை அடித்தண்டு.

## 9-வது அலஜிரோகம்.

இது, கருவிழிக்குள் வீக்கத்தைப் பிறப்பிக்கும். இதனால், கண்களில் வீக்கம் நோவு குத்தல் எரிச்சல் என்னுமிக்குணங்களுண்டாகும். அன்றியும், கருவிழியிலாவது கடைவிழியிலாவது நமைச்சலும் இமைகளில் வெடிப்பும் பிறக்கும்.

ஆக நேத்திரசந்திரோகம் 9-ம் முற்றியது.

---

## சுக்கிலமண்டலரோகபேதம்.

வெள்விழிகளில், சிரோத்பாதம், சிரா ஹரிஷம், சிராஜாலம், சுக்திகம், சுக்கிலார்மம், பிஷ்டகம், சிராபிடகம், சோணிதார்மம், பிரஸ்த்தாரியார்மம், அதிமாமிசார்மம், பலாஜகிரதிதம், சிநாயுவார்மம் அருச்சுனம் எனப் பதின்மூன்று வித ரோகமும் பிறக்கும்.

## 1-வது சிரோத்பாதரோகம்.

இது, வெள்விழிமேல் வளையாகாரம்போல் சிவந்த விரணத்தைப் பிறப்பிக்கும். இதனால், அவ் இடத்தில் வெந்ததுபோல் இருப்பதுமன்றி வீங்குதல், நீர்க்கம்மல், ரத்தநிறம், எரிச்சல், வேதனை என்னுமிக்குணங்கள் உண்டாகும். உத்பாதம் என்பது காரணம் இன்றிவருதலாம்.

## 2-வது சிராஹரிஷரோகம்.

இது, முற்கூறிய சிரோத்பாத ரோகத்திற்கு வைத்தியம் பண்ணுவிடில், அந்த ரத்தவளையமானது விருத்தி அடையும்போது பிறக்கும். இதனால், நீர்க்கோவையும் எரிச்சலும் உண்டாகிப் பார்வையும் கெடும். சிரா என்பது நரம்பு; ஹரிஷம் என்பது சிலிர்த்தல்.

## 3-வது சிராஜாலரோகம்.

இது, வெள்விழிகளின்மேல் இருக்கின்ற நரம்புகளைப் பருக்கவும் சிவக்கவும் கனக்கவும் உப்பவும் செய்யும். இதனால், பற்பல வேதனைகளும் உண்டாகும். சிரா என்பது நரம்பு; ஜாலம் என்பது கூட்டம்.

## 4-வது சுக்திகரோகம்.

இது, பித்தத்தைக் கொண்டு வெள்விழிகளின்மேல் புடைகளை எழுப்பும்; அப்போது அவைகள் மஞ்சள் கறுப்பு வெளிமான் இவைகளின் நிறமாக இருப்பதன்றியும், வாயினால் அவைகளின்மேல் ஊதில் புகை கம்மியதுபோல் முழுமையும் வெளுப்பாகத் தோற்றுவதுந் தவிர, நோவும் எரிச்சலும் இல்லாமலிருக்கும். இதனால், பேதி, சரீர நோவு, தாகம், சுரம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். சுக்திகம் என்பது முத்துச்சிப்பி.

## 5-வது சுக்கிலார்மரோகம்.

இது, கபத்தைக்கொண்டு வெள்விழிமேல் வெண்புடையை உண்டாக்கும். அது தாமதத்தில் விருத்தி அடைந்து மாமிச நிறத்தைப் பெற்று மிருதுவுடன் பரவி நோவின்றித் தீடித்திருக்கும்.

சுக்கிலம் என்பது சிலேஷ்மம்; அர்மம்என்பது படலம்.

## 6-வது பிஷ்டரோகம்.

இது, வெள்விழி முற்றிலும் நெருக்கமாக மாவைக் கரைத்துத் தெளித்ததுபோல் பரவுகின்ற புடையை உண்டாக்கும். பிஷ்டம் என்பது மாவு.

## 7-வது சிராபிடகரோகம்.

இது, வெள்விழிநரம்பின்மேல், கடுகுப்பிரமாணத்தை ஒத்துக் கறுத்த நிறத்தைப்பெற்ற கொப்பிளங்களைப் பிறப்பிக்கும்; அப்போது அவைகளின்மேல் கன எரிச்சலும் நிமிண்டவேண்டும் என்கிற நினைப்பும் உண்டாகும்.

## 8-வது சோணிதார்மரோகம்.

இது, வெள்விழிகளின்மேல் ரத்தநிறத்தை உடைய புடையைப் பிறப்பிக்கும். அப்போது அது வழுவழுத்தும் சதைமேல்சதை வளர்ந்ததுபோலும் பாஞகாரமாகவும் இருக்கும். சோணிதம் என்பது ரத்தம்.

## 9-வது பிரஸ்தாரியார்மரோகம்.

இது, வெள்ளைவிழிகளின்மேல் படலத்தை உண்டாக்கும்; அப்போது அது கறுப்பதும் சிவப்பதும் மிருதுவாகிய ரத்தப் பிளேயைத் தருவதும் விழிகளுக்கு ஒரு உபத்திரவமும் இல்லாமல் வெகு சீக்கிரத்தில் பரவுவதுமாக இருக்கும். பிரஸ்தாரியம் என்பது பரவுதல்.

## 10-வது அதிமாமிசார்மரோகம்.

இது, வெள்விழிமேல் அதிமாமிசத்தை வளர்ப்பிக்கும். அப்போது அது உலர்ந்த ரத்த உண்டையைப்போல் கறுத்தும் பருத்தும் இருக்கும்.

## 11-வது பலாஜகிரதிதரோகம்.

இது, வெள்விழிமேல் கபமொத்தையைப்போல் சதையை வளர்ப்பிக்கும்; அப்போது அது உயர்ந்தும் மினுமினுத்தும் நீர்த் துளியை ஒத்தும் இருக்கும்.

பலாஜம் என்பது கபம்; கிரதிதம் என்பது மொத்தை.

## 12-வது சிராயுவார்மரோகம்.

இது, வாத பித்த சிலேஷ்மங்கள் ரத்தத்தோடுகூடுங் காலத்தில் பிறந்து, வெள்விழிமேல் படலத்தை உண்டாக்கும்; அப்போது அது அங்குள்ள சன்னநரம்புகளையெல்லாம் அநுசரித்துப் படர்ந்து கண்களில் வீக்கத்தை உண்டாக்கும். சிராயு என்பது சன்ன நரம்பு.

## 13-வது அருச்சுனரோகம்.

இது, வெள்விழிமேல் கடப்பம் பூ நிறமான படலத்தைப் பிறப்பிக்கும். அப்படலமானது முசலினது ரத்தம்போல் துளித் துளியாக நோவில்லாமல் வழுவழுப்பை உடையதாயிருக்கும்.

அருச்சுனம் என்பது கடப்பம்பூ.

ஆக சுக்கிலமண்டலரோகம் 13-ம் முற்றியது.

---

## சுக்கிலமண்டலரோக சாத்தியாசாத்திய நிதானம்.

சுக்கிலமண்டலரோகம் 13-ல், பிரோத்பாதம், சிராஹர்ஷம், சிராஜாலம், பிஷ்டகம், பலாஜகிரதிதம், அருச்சுனம் இவ் 6-ம் சவ்வீராஞ்சன முதலிய அவுஷதங்களால் சாத்தியம்; மற்ற 7-ம் சலாகை முதலிய ஆயுதசிகிச்சைகளினால் சாத்தியம்; இவற்றுள், நூதனமாகப் பிறந்ததுகள் மூலிகை ரசங்களினால்சாத்தியம்; அன்றியும், அர்மம் எனச்சொல்லிய ஐந்துரோகங்களும், வெள்விழிமாமிசம், நரம்பு, சிராயு ஆகியஇவைகளில் வியாபித்துச் சருமத்தை உப்பச் செய்து துர்மாமிசத்தை வளர்ப்பிப்பதால், அவைகளை ஆயுதங்களால் அறுத்துவபித்தியம் செய்பவும். பார்வைதெரிந்தவுடனே ஷை சிகிச்சையைநிறுத்தி உபசரிக்கவேண்டும்.

## கிருஷ்ணமண்டலரோகபேதம்.

கருவிழியில், க்ஷதசுக்கிலம், சுத்தசுக்கிலம், சிராசுக்கிலம், அஜிகம், பாகாத்தியயஜசுக்கிலம், என ஐந்துவித ரோகம்பிறக்கும்.

## 1-வது க்ஷதசுக்கிலரோகம்.

இது, கருவிழியிலாவது பார்வையிலாவது காயம்படுவதனால் விரணம் பிறக்கும்போது பிறக்கும். இதனால், குத்தலும் எரிச்சலும்

உண்டாகி, அக்கருவிழியில் கொஞ்சம் குழிவிழுவதும் அன்றி, அவ்விடம் அளிந்த நாவல்பழத்தை ஒத்திருக்கும் இந்தரோகமே கஷ்டசாத்தியம். இவ்விரணம், முதல்புரையைப்பற்றினால், இன்னும் கஷ்டசாத்தியம்; இது இரண்டாம் புரையைப்பற்றி நோவுடன் ஊசியால் குத்துவதுபோல் குத்தலை எழுப்பி, அவ்விழியை மிகவும் கறுக்கச்செய்யின், கஷ்டசாத்தியத்திலும் கஷ்டசாத்தியம்: அது மூன்றும்புரையைப்பற்றினால் சுத்த அசாத்தியமே.

## 2-வது சுத்தசுக்கிலரோகம்.

இது, சிலேஷ்மத்தினால் கருவிழிமேல் நோவில்லாமல்வலம்புரிச்சங்கைப்போல் வெளுப்புமாத்திரம் உண்டாக்கும். இது சாத்தியமாம்.

## 3-வது சிராசுக்கிலரோகம்.

இது, சன்னநரம்புகளைப் பற்றிப்பிறந்து, கருவிழியில் ரத்தப்பிளைசாருதல், குத்தல், எரிச்சல் சிவப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதனால் காரணம் இல்லாமலே சுடுகையும் சீதளமும் குழம்பியரத்த ஒழுக்கும் உண்டாகும். இது அசாத்தியமாம்.

## 4-வது ஆஜிகரோகம்.

இது, ரத்தத்தைக்கொண்டு, கருவிழியில், ஆட்டினதுபுழுக்கையைப்போல் உயர்ந்தும் பளபளத்தும் இருக்கின்ற விரணக்கொப்பளத்தை உண்டாக்கும். அதைச்சுற்றிலும் சிறுசிறுகொப்பளங்கள் நிறையப்படும்; இதனால் அக்கண்ணில் அதிகநோவும் உதிரம்போல் சிவந்தசலமொழுக்கும் உண்டாகும். இது, ஆட்டின்புழுக்கையைப்போல் கரடானகொப்பளங்களை எழுப்பலால், ஆஜிகரோகம் எனப்பேர்பெற்றது.

## 5-வது பாகாத்தியயஜசுக்கிலரோகம்.

இது, வாத பித்த கபங்களானவை ரத்தத்தோடுகூடிக் கருவிழியை வெண்மையாக்கும்போது பிறக்கும். இதனால் அவ் இடம்மேகங்கம்மிப்பதுபோல் படலங் கம்முவதுந்தவிர, மொச்சை இலைபின் வெண்புரைபோல் புரைவிழுந்து பழுக்குதல், நோதல், இமையுப்புதல், கண்சிவத்தல், வீங்குதல், வேதனையதிகரித்தல் என்னு மிக்

ருணங்களுண்டாகும். இது முதிருங்காலத்தில், திஷ்டிக்குநாசத்தை உண்டாக்கலால், பாகாத்திடம ஜ சுக்கிலரோகம் எனப்பேர்பெற்றது. இதுஅசாத்தியமாம்.

ஆ கிருஷ்ணமண்டலரோகம் 5-ம் முற்றியது.

---

## கிருஷ்ணமண்டலரோகசாத்தியாசாத்தியநிதானம்.

இதரவஸ்துக்களைத் தெரிய ஒட்டாமல் திரைபோட்டதுபோல் மறைத்தல், கறுத்தல், சிவத்தல், உப்புதல், குழிவிழுதல் என்னும் இவ்ஐங்குணங்களைக் கருவிழியில் உண்டாக்குகின்ற ரோகங்கள் சாத்தியம்; இவைநிற்க, ரத்தஞ் சப்புதல், விரணம்நீடித்திருக்குதல், நடுவில்விஷமமாய் இருத்தல், வின்னப்படுதல் என்னும் இவ்ஐங்குணங்களை வெள்விழியிலாவது கருவிழியிலாவது உண்டாக்குகின்ற ரோகங்கள் அசாத்தியம்.

---

## திமிரரோகாதிபேதம்.

பார்வையில்திமிரம்,காசம்,லிங்கநாசம், கம்பீரம்என்னும்நான்கு வகைப்பிரிவினால் 27-வித ரோகம்பிறக்கும். அவையாவன:—திமிரத்தில் 6-ம் காசத்தில் 6-ம், லிங்கநாசத்தில் 6-ம், கம்பீரத்தில் 9-ம் ஆம். இவைகளின் பெயரையும், செய்கைகளையும் இதனடியிற்காண்க.

## சாமானியதிமிரரோகலக்ஷணம்.

கண்புரைகளில் வாயு அநுசரித்துத் திமிரரோகத்தை யுண்டாக்கும். அதன்விபரம்:—வாயுவானது சன்னநரம்புகளின் துவார வழியாகக் கண்களின் 1-வது புரையில் இறங்கிச் சஞ்சரிக்குமாயின், நன்றாகத்தெரியப்பட்ட உருவங்கள் ஒருகாரணமுமில்லாமலே மறையப்படும்; அது 2-வது புரையைச்சேருமாயின், இல்லாதவஸ்து எதிரில் இருப்பதுபோலவும், சமீபவஸ்து தூரத்தில் இருக்கிற மெல்லிய வஸ்துவைப்போலவும், தூரவஸ்து சமீபவஸ்துவைப்போலவும், சமீபவஸ்து தூரவஸ்துவைப்போலவும் தோற்றும். அந்த வாயுவே கருவிழியைச் சாருமாயின், சகலவஸ்துக்களும் சக்கிர

சாமமாகவே தோற்றும்; அது பார்வையை ஒட்டிநின்றால், ஒரு வஸ்து இரண்டு வஸ்துவாகத்தோற்றும்; அது விழிக்கு உட்புறத்தில் நின்றால், பார்வையானது சூக்ஷமமாகத்தோற்றும்; அது விழிக்குக் கீழ்ப்புறத்தில் நின்றால், அண்டையில் இருக்கிற வஸ்துக்கள் தோற்றாது; அது விழிக்கு மேற்புறத்தில் நின்றால்; தூரத்திலிருக்கிற வஸ்துக்கள் தோற்றாது; அது விழிக்குப் பக்கங்களில்நின்றால், பக்கங்களில் இருக்கிறவஸ்துக்கள் தோற்றாது என்றறிக. இக்குணங்கள் சகல திமிரரோகங்களுக்கும் பொதுவாக இருக்கும்; இது, பார்வைக்கு இருளைக்கொடுப்பதனால், திமிரரோகம் எனப் பேர்பெற்றது. திமிரம் என்பது இருள்.

---

இனி ஆறுவகைத்திமிரரோகங்களைச் சொல்லப்படும்.

## 1-வது வாததிமிரரோகம்.

இது, கண்கலங்கிச் சிவக்குதலுடன் பார்வைசிதறல், புகைகம்மியதுபோல் தெளிவின்மை, காரணம் ஒன்றும்இல்லாமலேகொசு, வலைக்கண், ரோமம், கயிறு ஆகிய இவைகளைப்போல் ஒவ்வொருவேளை தோற்றுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது பித்ததிமிரரோகம்.

இது, பார்வைக்குள் மின்னல்மின்னுதல், மின்மினிப் பூச்சியும் ஊர்க்குருவியும் பறக்குதல், சானற்சலம் ஓடுதல், மயிலிறகைப்போல் பலநிறந்தோற்றுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதனால் எவ்வகைப் பொருள்களும் கறுப்பாகவே தோற்றும்.

## 3-வது சிலேஷ்மதிமிரரோகம்.

இது, விழிகளை மினுமினுப்புடன் வெளுப்பாக்குவது மன்றிப் பார்வைமினுமினுத்தல், வெளுத்தல், சங்கு, சந்திரன், மல்லிகைமொக்கு, வெள்ளைப்புஷ்பம் ஆகிய இவைகள் குப்பல்குப்பலாகக் கிடக்குதல் போல்தோற்றல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது தொந்ததிமிரரோகம்.

இது, பார்வையில், வாததிமிரம், பித்ததிமிரம் ஆகிய இவ்விரண்டினால் உண்டாகும் குணங்களையெல்லாம்ஒரேகாலத்தி லுண்டாக்கும். இவ்வாறே மற்ற இரண்டு திமிரரோகங்களையும் அறியவேண்டும்.

## 5-வது திரிதோஷதிமிரரோகம்.

இது, பார்வைக்குள் வாதாதி மூன்று திமிரரோகங்களுக்குள்ள குணங்களையெல்லாம் பிரகாசமாக உண்டாக்கும்.

## 6-வது ரத்ததிமிரரோகம்.

இது, கண்களைச் சிவப்பாக்குவதுமன்றிப் பார்வையிலும் அவ் வண்ணமாகவே தோற்றுவிக்கும். ஆக திமிரரோகம் 6-ம் முற்றியது.

இத்திமிரரோகத்தினல் காசரோகமும் குருடாகிய லிங்கநாச ரோகமும் உண்டாகும்; ஆகையால் இதற்கு உடனேயே பண்டிதர் கள் நானுவித சிகிச்சைகளைச் செய்யவேண்டும். செய்யாவிடில் அசாத்தியமே.

## சாமானியகாசரோகலக்ஷணம்.

முன்பு சொன்ன திமிரரோகத்தினது ஆதிக்கத்தால், வாயு வானது கண்களின் மூன்றும்புரையை அநுசரித்துக் காசரோகத் தைப் பிறப்பிக்கும். இதனல், மேற்பார்வைதெரிதலும், கீழ்ப்பார்வை திரைபோட்டதுபோல் மறைதலும் உண்டாகும். இந்தரோகமானது, எந்தத் தோஷத்தை அநுசரிக்குமோ அந்தத் தோஷத்தையேபார்வை யும் அநுசரிக்கும். இக்குணங்களெல்லாம் சகலகாசரோகங்களுக்கும் பொதுவாக இருக்கும். இது, கருவளைபல் ஒட்டின்நிறத்தைப் பெற் றிருப்பதால், காசரோகம் எனப்பேர்பெற்றது. காசம் என்பது வளையல்.

இனி ஆறு வகையாகிய காசரோகங்களைச் சொல்லப்படும்.

## 1-வது வாதகாசரோகம்.

இது, கண்களைச் சிவப்பாக்குவதுமன்றி, எதிரிலிருப்பவர்களு க்கு மூக்கின்மைபோலவும், சந்திரனும் தீபமும் அநேகங்களாகவும், நேரில் இருக்கிற கனத்த பொருள்களை மெல்லிய உருவாகவும் தோற்றுவிக்கும்.

## 2-வது பித்தகாசரோகம்

இது, கணகளில் வெண்கலம் நீலம் இவைகளின் காந்தியைப் போல் பிரகாசத்தை உண்டாக்குவதுமன்றி, பார்வையில் சூரியன்

சந்திரன் பரிவேடம் அக்னிச்சுவாலை இந்திர தனு ஆகிய இவை களை, முன்பு வாதகாசரோகத்திற் சொன்னதுபோல், அனேகங்களா கத் தோற்றுவிக்கும்.

## 3-வது சிலேஷ்மகாசரோகம்.

இது, பார்வைக்குள் வெளுப்பை உண்டாக்குவதுமன்றிச் சூரி யனைத் தீபத்தைப் பார்க்கும் அளவில், அவைகள் ஒளிமழுங்கி அநேக உருவங்களாகத் தெரியும்படிக்குத் தோற்றுவிக்கும்.

## 4-வது தொந்தகாசரோகம்.

இது, கண்களிலும் பார்வையிலும், வாதகாச குணத்தையும் பித்தகாசகுணத்தையும் ஓரேகாலத்தில் உண்டாக்கும். இவ்வாறே மற்ற இரண்டு தொந்தகாசரோகங்களையும் அறியவேண்டும்.

## 5-வது திரிதோஷகாசரோகம்.

இது, பார்வைக்குள் வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் மூன்று காசங்களுக்குள்ள குணங்களை யெல்லாம் விரைவில் உண் டாக்கும்.

## 6-வது ரத்தகாசரோகம்.

இது, கண்களைச் சிவப்பு கறுப்பு நிறமாகச் செய்வதுமன்றிப் பார்வையிலும் அவ்வாறே தோற்றுவிக்கும்.

ஆக காசரோகம் 6-ம் முற்றியது.

---

## சாமானிய லிங்கநாசரோகலக்ஷணம்.

முற்கூறிய காசரோகத்தைச் சீக்கிரத்தில் நிவிர்த்திசெய்யா விடில், வாயுவானது கண்களின் நாலாம்புரையை அநுசரித்து, லிங்க நாசரோகத்தைப் பிறப்பிக்கும். இதனால், திஷ்டிமண்டலமாகிய பார்வை திரைபோட்டதுபோல் மறைப்படும், இது, பார்வையைப் பலவாறுகக்கெடுத்துக் கொஞ்சமேனும் ஸ்தூல ரூபவஸ்துவையும் தெரியவொட்டாமல்செய்வதால், லிங்கநாசரோகம் எனப் பேர்

பெற்றது. லிங்கம் என்பது கருவிழியின் நடுவிலிருக்கும் பாவை; நாசம் என்பது கெடுதல்.

---

இனி ஆறு வகையாகிய லிங்கநாசரோகங்களைச் சொல்லப்படும்.

## 1-வது வாதலிங்கநாசரோகம்.

இது, முன்புசொன்ன காசரோகவிருத்தியினால் வாயுவானது கண்களின் நாலாம்புரைக்குள் சஞ்சரிக்கும்போது பிறந்து, அக் கண்களில் மிகவும் தூசிபடிந்தது போலவும்,புகைகம்மியது போலவும் செய்வதுமன்றிக் குருவி ரத்தம்போல் சிவந்தநிறத்தையும் உண்டாக்கும். இதனால் விழிகளின் நரம்புகள் முடங்கிக்கொள்ளுதலும், எதிரிலிருக்கிற வஸ்துவும் உருவமும் கொஞ்சமேனும் தெரியக்கூடாமையுமாக இருக்கும்.

## 2-வது பித்தலிங்கநாசரோகம்.

இது, கண்களைக் கருவண்டைப்போல் மிகுந்த கறுப்பாக்குவது மன்றி, எவ்வளவேனும் பார்வையைத் தெரியவொட்டாமற்செய்யும்.

## 3-வது சிலேஷ்மலிங்கநாசரோகம்.

இது, விழிகளின்மேல் சங்கு, மல்லிகைமொக்கு, சந்திரன், வெள்ளை அல்லிப்பூ, படிகம், பல்லிமுட்டை ஆகிய இவைகளைப் போல் சதையை வளர்ப்பிக்கும்; அப்போது நிழலில் திரிவதற்கே இச்சை உண்டாகும்.

## 4-வது தொந்தலிங்கநாசரோகம்.

இது, வாதலிங்கநாசம் பித்தலிங்கநாசம் ஆகிய இவ்விரண்டினால் உண்டாகின்ற குணங்களையெல்லாம் ஒரேகாலத்தில் உண்டாக்கும் இவ்வாறே மற்ற இரண்டு தொந்தங்களையும் அறியவேண்டும்.

## 5-வது திரிதோஷலிங்கநாசரோகம்.

இது, வாதலிங்கநாசரோகம் முதலிய மூன்று ரோககுணங்களையெல்லாம் கண்களிலும் பார்வையிலும் நிரம்ப உண்டாக்கும்.

## 6-வது ரத்தலிங்கநாசரோகம்.

இது, பாவையை ரத்தநிறம் ஆக்குவதும் தவிர அப்பாவை யையும் கண்களின் ஒளியையும் கெடுக்கும்.

ஆக லிங்கநாசரோகம் 6-ம் முற்றியது.

---

இனி கம்பீரரோகம் முதலிய ஒன்பதுரோகங்களையுஞ் சொல்லப்படும்.

## 1-வது கம்பீரரோகம்.

இது, முன்புசொன்ன லிங்கநாசரோகங்களில் நின்றும் அதி கரித்தவாயுவின் விருத்தியினால் கண்களின் நரம்புகள் முடங்கிப்பார் வைக்குள் உருவி ஆழ்ந்துவிடும்போது பிறந்து, கொஞ்சமேனும் பார்வையைத்தெரியவொட்டாத விதத்தைச்செய்யும்.

கம்பீரம் என்பது ஆழம்.

## 2-வது இரசுவரோகம்.

இது, பித்தத்தினால்பிறந்து, கண்களின் பாவையை மறைக்கும். மறைத்தாலும் அற்பமாகத்தெரியும். இரசுவம் என்பது அற்பம்.

## 3-வது நகுலாந்தரோகம்.

இது, இரண்டுகண்களையும் கீரிப்பிள்ளைக்கண்களைப்போல் சிவப் பாக்கிப் பீளைபைநிறைப்பிக்கும் இதனால், எதைப்பார்த்தாலும் பகல் காலத்தில் விந்தைவிந்தையாகத் தோற்றுவதும், இராக்காலத்தில் எவ்வளவேனும் பார்வைதோற்றாததுமாக இருக்கும். இது, கீரிப் பிள்ளைக்கண்களைப்போல் இருத்தலால், நகுலாந்தரோகம் எனப் பேர்பெற்றது. நகுலம் என்பது கீரி, அந்தம் என்பது குருடு.

## 4-வது நத்தாந்தரோகம்.

இது, வாத பித்த கபங்களினால்பிறந்து, சூரியஅஸ்தமானகாலத் தில் திஷ்டியைமறைத்து, அச்சூரியன் உதித்தவுடன் அம்மறைப்பை விட்டுவிடும். இதனால், இரவில் பார்வைதெரியாமலும் பகலில் நன்றாகத்தெரிதலுமாக இருக்கும். நத்தம் என்பது இரவு; அந்தம்

என்பது குருடு. இதனை மாலைக்கண், இராக்குருடென்பர். இது, சுத்தி பண்ணியமிளகை வெள்ளாட்டுப் பிச்சுப்பை கொண்டமட்டுங் கொட்டி, அச்சலம் வெளிப்படாமல் வாயைத்தைத்து நிழலில் தூக்கிக் கட்டி, அம்மிளகுநன்றாக உலர்ந்தபின்பு, அதில் ஒன்றைச் சுத்த சலத்திலுரைத்து ஒரு மண்டலகாலம்வரைக்கும் இரண்டு வேளையும் கண்ணிலிட்டுக்கொள்ள விலகும்.

## 5-வது உஷ்ணவிதக்தரோகம்.

இது, கனதீக்ஷண வெய்யிலில் அடிபட்டு உடனே மிகுசீதள சலத்தில் ஸ்நானஞ்செய்தலால் பிரகோபித்த திரிதோஷத்தில் நின்றும் ஒருசுவாலை எழும்பிச் சன்னநரம்புகளின்வழியாகச் சிரசில் ஏறி விழிகளைப் பற்றும்போது பிறந்து, உபத்திரவத்தைச்செய்யும். இதனால், கண்களில் எரிச்சலுடன் மயிலைபாய்தல், இமைக்குள் வெளிறல், பகலில்கலங்கியபார்வை, இரவில் அதுவுந்தெரியாமை என்னுமிக்குணங்கள் உண்டாகும்.

## 6-வது பித்தவிதக்தரோகம்.

இது, பித்தத்தினால் பிறந்து, கண்களில் மஞ்சள்நிறத்தை உண்டாக்கும்.

## 7-வது ஆம்லவிதக்தரோகம்.

இது, மெத்தவும் புளிப்புள்ள வஸ்துக்களைப் புசித்தலினால்ரத்தத்தோடுகூடிய திரிதோஷங்களானவை கண்களின் பார்வையைச் சேரும்போது பிறந்து, உபத்திரவத்தைச்செய்யும். இதனால், விழிகளில் வீக்கமும் நமைச்சலும் கலங்கலும் உண்டாகும்.

## 8-வது தூம்பிரரோகம்.

இது, துக்கம் சுரம் தலைநோவு ஆகிய இவைகளால் வருந்துங் காலத்தில்பிறந்து, கண்களிற் புகைகம்மியதுபோல் கம்மலைச்செய்யும். இதனால் எந்தவஸ்துக்களும் புகைநிறமாகவே தோற்றும். தூம்பிரம்என்பது புகை.

## 9வது அவுபசர்க்கிகரோகம்.

இது, துர்ப்பலகாலத்தில் சூரியவிம்பம் முதலிய தீக்ஷண ஒளிகளைத்தினந்தினமு முற்றுப்பார்ப்பதனால் வாத பித்த கபங்கள் கண்

களில் வியாபிக்கும்போது பிறந்து, அவ்விழிகளின் ஒளியைக்குறைத்துப் பார்வை இல்லாததுபோல்செய்யும்; அல்லது வைடூரியத்திற் சொலிக்கும் நிறங்களைப்போல் தோற்றுவிக்கும். இதனால், அங்குநோவின்மை, தெரிந்துந் தெரியாதபார்வை, யார் பார்த்தாலும் விழிகளில் யாதொரு தோஷங்களும் இன்மையாக மயக்குதல் என்னும் இக் குணங்கள் உண்டாகும். இது, மற்றொருஒளியினால் பிறந்து, நேத்திர ஒளியைக் கெடுத்தலால், அவுபசர்க்கிகரோகம் எனப் பேர்பெற்றது.

ஆக கம்பிராதிரோகம் 9-ம் முற்றியது.

---

## பார்வைரோக சாத்தியா சாத்திய நிதானம்.

பார்வையில் பிறக்கின்றரோகம் 27-ல், வாததிமிரம், பித்ததிமிரம் சிலேஷ்மதிமிரம், தொந்ததிமிரம், திரிதோஷதிமிரம், ரத்ததிமிரம் சிலேஷ்மலிங்கநாசம், நத்தாந்தம், உஷ்ணவிதக்தம், பித்தவிதக்தம், ஆம்லவிதக்தம், தூம்பிரம், அவுபசர்க்கிகம் ஆக 13-ம் சாத்தியம்; காசம் 6, நகுலாந்தம் 1 - ஆக 7-ம் கஷ்டசாத்தியம்; வாதலிங்கநாசம், பித்தலிங்க நாசம், தொந்தலிங்கநாசம், திரிதோஷலிங்கநாசம் ரத்தலிங்கநாசம், கம்பீரம், இரசுவம் ஆக 7-ம் அசாத்தியம்.

ஆக பார்வைரோகம் 27 ம் முற்றியது.

---

## சர்வநேத்திரரோகபேதம்.

கண்கள்முற்றிலும், அபிஷந்தம், அதிமந்தம், சங்காம் என்னும் மூன்றுவகைப்பிரிவினால், 16-விதரோகம் பிறக்கும். அவைகளின்விபரம்:—அபிஷந்தத்தில் 4-ம், அதிமந்தத்தில் 5-ம், சங்காத்தில் 7-ம் ஆம்.

---

இனி அபிஷந்தரோகம் நான்கும் சொல்லப்படும்.

### 1-வது வாதாபிஷந்தரோகம்

இது, கண்களில் உப்பல், உலர்ந்தபீளைசாருதல், அற்பநோவு, பூச்சி பறப்பதுபோல்தோற்றல், சிறுஊசிகளால் குத்துதல்போல்

குத்தல், குளிர்ச்சியாகக் கொஞ்சஞ் சலம்வடிதலுடன் அவைகளை மூடுதற்கும் திறப்பதற்கும் பிரயாசை, நாசியில்உப்பலோடு சிறிய வீக்கம், நெறி, கண், புருவம் ஆகிய இடங்களில் இருக்கின்ற எலும்புகளிலும் நரம்புகளிலும் குத்தல், அவைகளில் அடித்ததுபோலிருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். அபிஷந்தம் என்பது ஒழுகுதல். இது, உஷ்ண திரவியத்தினலும், மதுர திரவியத்தினலும் உபசரிக்கில், சாந்தமாகும்.

## 2-வது பித்தாபிஷந்தரோகம்.

இது, கண்களில் எரிச்சல், அருகுதலுடன் உஷ்ணசலம்வடிதல், புகைகம்மியதுபோலிருத்தல், நீர்முட்டுதல், கடைக்கண்கறுத்தல், சிவத்தல், எதிரில் இருக்கும்வஸ்து மஞ்சள்நிறமாகத்தோற்றல், உப்புநீரைத் தெளித்ததுபோல் கரித்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மாபிஷந்தரோகம்.

இது, கண்களில் நீர்க்கோவை, வீக்கம், தினவு, தடித்துவெளுத்து மினுமினுத்து நார்நாராகப்பீளைவடிதல், தேகசாட்டியம், அசனவெறுப்பு, நித்திரைப்பங்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது ரத்தாபிஷந்தரோகம்.

இது, கண்கள் கோவைப்பழம்போல் சிவக்குதல், ரத்தநிறத்தை ஒத்தசலமும் பீளையும் ஒழுகுதல், கருவிழிவெளிறல் என்னுமிக்குணங்களை யுண்டாக்கும்.

ஆ. அபிஷந்தரோகம் 4-ம் முற்றியது.

---

இனி அதிமந்தரோகம் ஐந்தும் சொல்லப்படும்,

## 1 வது வாதாதிமந்தரோகம்.

இது, கண் புருவம் நெறி ஆகிய இடங்களில் மத்தைக்கொண்டு மத்தித்தல்போல் இருத்தல், வாயுவினல் செவிக்குள் ஓயாத இரைச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். மந்தம் என்பது மத்து.

## 2 - வது பித்தாதிமந்தரோகம்.

இது, கண்களைக் கருங்காலிக்கட்டையினது நெருப்பைப் போலும் காய்ந்து சிவந்த இரும்புக் கட்டியைப்போலும் சிவக்கச் செய்யும்,

## 3 - வது சிலேஷ்மாதிமந்தரோகம்.

இது, வெள்விழி எல்லாம் சுருங்கிக்குழிவிழுதல், கருவிழி உயர்ந்து உப்புதல், அதில் தூசிபடிந்ததுபோலிருத்தல், சலம்வடிதல் நாசியின் பக்கங்கள் புடைக்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4 - வது ரத்தாதிமந்தரோகம்.

இது, கண்கள்சிவத்தல், சிலவேளை செம்பரத்தம்பூப்போல மிகவும்சிவத்தல், திறக்கும்போதும் தொடும்போதும் நோதல், கருவிழியானது ரத்தத்தில் மூழ்கினதுபோல் தோற்றல், நெறி, தந்தம் தாடை மண்டை ஆகிய இடங்களில்வேதனை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 5 - வது அதாதிமந்தரோகம்.

இது, கண்களில் விரணத்தைப்பிறப்பித்துப் பார்வையைக் கெடுக்கும். இதற்குத் தீவிரமாக வைத்தியம் பண்ணாவிடில், அநேக வித வேதனைகளும் உண்டாகும். ஆக அதிமந்தரோகம் 5 - ம் முற்றியது.

இனிச் சங்கரரோகம் - ஏழும் - சொல்லப்படும்.

## 1 - வது அன்னியதோவாதரோகம்.

இது, கண் நெறி வாதநரம்புமற்றையநரம்பு ஆகிய இந்த இடங்களில் வாயுவுதங்கிச் சஞ்சரிக்கும்போது பிறந்து, கண்களில் சிவப்பு, வீக்கம், அதிகநோவு, நீர்க்கம்மல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். வாயுவானது தனக்கு அன்னியஸ்தானமாகிய பித்தசிலேஷ்ம நரம்புகளிலும் வியாபித்து நேத்திரத்திற்கு உபத்திரவத்தைக் கொடுப்பதால் இது அன்னியதோவாதரோகம் எனப் பேர்பெற்றது.

## 2-வது வாதபரியாயரோகம்.

இது, முன்புசொல்லிய அன்னியதோவாதரோக குணங்களுடன் வக்கிரபார்வையையும் சதாவிக்கத்தையும் உண்டாக்கும். இந்த ரோகம் மேற்கூறிய ரோகத்தைப்போல் இருந்தாலும், கொஞ்சம் பேதப்படுதலால், வாதபரியாயரோகம் எனப் பேர்பெற்றது.

## 3-வது சுட்காக்ஷிபாகரோகம்.

இது, வாத பித்தசேர்க்கையினால்பிறந்து, கண்களில் சுட்கம் இடுக்கம் பிடித்தல்போலிருத்தல் ஆகிய இக்குணங்களைப் பிறப்பிக்கும். இதனால், கிமிண்டல், நோதல், அதிர்தல், எரிதல், தேசசுருக்குதல், சிவக்குதல், மூடலில்திறத்தலில் பிரயாசை, சீதளவஸ்துவில் இச்சையென்னும் இக்குணங்களுண்டாகும். இந்தரோகம் முதிர்ந்தால் குத்தல் அதிகரிக்கும். சுட்கம் என்பது உலருதல்; அக்ஷி என்பது நேத்திரம்; பாகம் என்பது முதிருதல்.

## 4-வது சோபாக்ஷிபாகரோகம்.

இது, திரிதோஷங்களின் சேர்க்கையால்பிறந்து, கண்களில்வீக்கம், சிவப்பு, நோவு, எரிச்சல், சதாமூடல், வெள்விழி அத்திப்பழம் போலிருத்தல், அதில்நின்றும் சுடுகையாயும் சீதளமாயும் தெளிவாயும் பிசிபிசிப்பாயும் விஸ்தாரம் சலம் ஒழுகுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 5-வது அற்பசோபாக்ஷிபாகரோகம்.

இது, முன்புசொன்னரோகத்தின் குணங்களையெல்லாமுண்டாக்கும். ஆனால் கண்களில் அற்ப வீக்கம் இருக்கும்.

## 6-வது அக்ஷிபாகாத்தியயரோகம்.

இது, கண்கள்வீங்குதல், கலங்குதல், நீர்க்கசம்முதல், பீளைவடிதல், கருவிழி வெள்விழிசிவத்தல், எரிச்சல், பார்வைகெடுதல், பொறுத்துப்பொறுத்து நோதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 7 - வது ஆம்லோஷிதரோகம்.

இது, பித்தரத்தம் முதலிய வாதாதிதோஷங்களானவை அசிரணவஸ்துக்களைக் கூட்டிப்புசிக்கப்பட்ட அன்ன சாரங்களைவயிற்றுக்குள் புளிக்கவைத்து, அந்தநீரைக் கண்களுக்கு ஆதாரமாக இருக்கின்ற நரம்புகளின் துவாரவழியாக நேத்திரங்களிற்செலுத்தி நிறைப்பிக்கும்போது பிறக்கும். இதனால், கண்கள் கறக்குதல், சிவக்குதல், வீங்குதல், எரிதல், மாறாதுநீரொழுகுதல், கலங்குதல், பார்வைகெடுதல் என்னும் இக்குணங்களுண்டாகும். ஆம்லம் என்பது புளிப்பு; உஷிதம் என்பது பழையது; ஆம்ல உஷிதம் ஆம்லோஷிதம் எனலாயிற்று. ஆக சங்கரரோகம் ஏழுடன், சர்வநேத்திரரோகம் 94ம் - முற்றியது.

---

## சர்வநேத்திரரோகஅசாத்தியநிதானம்.

கண்கள் முற்றிலும் பிறக்கின்ற பதினாறு ரோகங்களுக்குள் அதாதி மந்தரோகமும், அக்ஷிபாகாத்தியயரோகமும், அசாத்தியமாம். அன்றியும் வாதத்தினாற்பிறந்த அதிமந்தரோகம் ஐந்துநாளிலும், சிலேஷ்மத்தினாற்பிறந்த அதிமந்தரோகம் ஏழுநாளிலும், ரத்தத்தினாற்பிறந்த அதிமந்தரோகம் மூன்றுநாளிலும், பித்தத்தினால் பிறந்த அதிமந்தரோகம் கண்டநாளிலும் பார்வையைக்கெடுக்கும். மேலும், இந்த அதிமந்தரோகங்களை எல்லாம் அசாத்தியமென்றே நிதானிக்கவேண்டும்.

அன்றியும், சிலேஷ்மபித்தரத்தங்களால் பிறந்த குகூணகம், பக்ஷ்மபரோதம், சட்காக்ஷிபாகம், பூயாலஜம், பிசவர்த்தமம், போதகி, ஆம்லோஷிதம், அற்பசோபாக்ஷிபாகம், அபிஷந்தம், அதிமந்தம், அதாதிமந்தம் அக்ஷிபாகாத்தியயம் ஆகிய 18 ரோகங்களுக்கும் பில்லரோகம் என்றுபெயர். இவைகள், வச்சிராத்தினகரமாத்திரை, சவ்வீராஞ்சனம், சுவேதச்சிறுமா, நேத்திரோதகம் முதலிய அவுஷதங்களைக் கொண்டு, சிகிச்சைசெய்யில், சிலநாள்பொறுத்துச் சாத்தியமாம்.

தன்வந்தரிமுதலிய பெரியோர்களால் சொல்லப்பட்ட
நேத்திரரோகம் 94-ம் முற்றியது.

## சித்தர்மதாந்தரநேத்திரரோகம்.

நயனவிதி நானூறு என்கின்ற சாஸ்திரத்திலும், இன்னும் சில கிரந்தங்களிலும், கருவிழி, வெள்விழி, இமை, கடைக்கண் என்னுமிந்நான்கு ஸ்தானங்களைப்பற்றி வருகின்றரோகம் 96-விதம் எனச் சொல்லப்படுகின்றன. அவைகளின் விவரம்:—கருவிழியில், காசம், படலம், குமுதம், விழியுந்தல், நெரிசல், வரி, குந்தம், திமிரம், சுக்கிரன், பூ என்னும் 10-வகைப்பிரிவினால் 45-விதரோகமும்: வெள்விழியில், எழுச்சி, படாத்தி, நெரிசல், புற்று, குமிளம், வரி என்னும் 6-வகைப்பிரிவினால் 20-விதரோகமும்: இமைகளில், பில்லம், தடிப்பு, கழலை, நீர்ப்பாய்ச்சல், பற்பம் என்னும் 5-வகைப்பிரிவினால், 16-விதரோகமும்: கடைக்கண்களில் கண்ணெரிப்பு, பூசாந்தாம், படாத்தி, நீர்க்குவை, விழிவாதம், விரணப்பரு, வித்திரதி, இமைக்குரு, குமிள், நக்ஷத்திரவாயு, கண்ணோவு என்னும் 11-வகைப்பிரிவினால் 15-விதரோகமும் உண்டாகும்.

## கருவிழிரோகத்தில் முதற்பிரிவாகிய காசரோகபேதம்.

காசரோகமானது, வாதகாசம், பித்தகாசம், சிலேஷ்மகாசம், வாலகாசம், நீலகாசம், மந்தாரகாசம், விரணகாசம், கருப்பகாசம் என எட்டு விதப்படும். இவற்றுள் 1-வது வாதகாசம்: இது கண்மணியில் வண்டைப்போல் கருமைநிறத்தை உண்டாக்கி, அதில் நின்றும் கறுத்த சலத்தை ஒழுகுவிக்கும். 2-வது பித்தகாசம்: இது மஞ்சள் நிறமான சலம் வடியும்படிக்குச்செய்யும் 3-வது சிலேஷ்மகாசம். இது, சுத்தவெண்மை நிறமான சலத்தைப்பெருக்கும். 4-வது வாலகாசம், இது கருவிழியில், புகைகம்மியதுபோல் செய்யும், 5-வது நீலகாசம். இது கருவிழியில் கருவிளம்பூ நிறத்தை உண்டாக்கும். 6-வது மந்தாரகாசம். இது, கருவிழியில், செம்பஞ்சு அல்லது மேகமிவைகளின் நிறத்தைப்பிறப்பிக்கும். 7-வது விரணகாசம். இது, கருவிழியில், முத்தைப்போல் தளதளப்பான நிறத்தை உண்டாக்கும். 8-வது கருப்பகாசம், இது கருவிழியில் சுத்தக்கருமை நிறத்தைக் காண்பிக்கும். ஆககாசரோகம் 8-ம் முற்றியது. இவற்றுள், பித்தகாசம், நீலகாசம், மந்தார

காசம் ஆகிய 3-ம், வில்வாதிளர்த்தயிலா், சந்தனாதித்தயிலம், சங்கு மாத்திரை, சையராந்த கரைக்குழம்பு முதலிய அவுஷதங்களினாலும், ஆயுதசிகிச்சைகளினாலும் நிவிர்த்தியாகும். மற்ற ஐந்தும் அசாத்திய மாம்; ஆயினும், இச்சிகிச்சைகளைச்செய்யில், சாத்தியம் ஆனாலும் ஆகும்.

## கருவிழி 2-வது பிரிவாகிய படலரோகபேதம்.

படலரோகமானது, சதைப்படலம், ரத்தப்படலம், நீர்ப்படலம் வரிப்படலம், கருநாகப்படலம், மாமிசபடலம், பசுவிழிப்படலம் என 7-விதப்படும். இவற்றுள், 1-வது சதைப்படலம். இது, கருவிழியில், குத்தலுடன்நோவை உண்டாக்கி மேலில் சிவந்தசதையை வளர்ப்பிக்கும். 2-வது ரத்தபடலம், இது கண்மணியில், கரித்தல், குமுறல், காந்தல், கன்றுதல், பீளைசாறல், எரிதல், ரத்தங்கட்டுதல், நெறிக்குங்கீழ்புருவம் நெற்றி பிடரி உச்சி ஆகிய இடங்களில் குத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். 3-வது நீர்ப்படலம். இது, கருவிழியின்மீது மேகம் கம்மியதுபோல் இருத்தல், கனத்தல், மிகுந்தசலம் வடிதல், கண்மயக்கம், சிரசில்குத்தலுடன் சலக்கோவை என்னு மிக்குணங்களை உண்டாக்கும். 4-வது வரிப்படலம். இது, கருவிழியின்மீது கயிறுபோல் வரிகளும், காந்தலும், குத்தலும், அகண்டநோவுடன் உறுத்தலும், புகைச்சலும் உண்டாகச்செய்யும். 5-வது கருநாகப்படலம். இது, கருவிழியில், இந்திரதனுவைப்போல் பலநிறமும், குத்தலும், நோவும், உறுத்தலும், சலப்பெருக்கு முண்டாகச்செய்யும். 6-வது மாமிசபடலம். இது, விழிமணியின் முனையில் சதையைவளர்ப்பித்து, அதில் ஊரல், கூசுதல், இடித்தல், சலம் வடிதல் என்னும் இக்குணங்களை உண்டாக்குவதன்றியும், பிடரியில் நோவையும் உண்டாக்கும். 7-வது பசுவிழிப்படலம். இது, கருவிழியில் பசுமை நிறமான சதையைவளர்ப்பித்து, அதில் இடித்தலான குத்தல், தீ இருக்குமிடம்போல் காந்துதல், பார்வை மந்தம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். ஆக படலம் 7-ம் முற்றியது. இவற்றுள்சதைப்படலம் ரத்தப்படலம்,நீர்ப்படலம் வரிப்படலம் என்னும் 4-ம் சாத்தியமாம் மற்ற 3-ம் அசாத்தியமாம். இவைகள், படிகாரமாதியானமருந்து, நந்தைச் சிப்பிநெய் முதலிய அவுஷதங்களால் வசப்படும்.

## கருவிழி 3-வது பிரிவாகிய குமுதரோகபேதம்.

குமுதரோகமானது, செங்குதமும், கருங்குதமும், வெண்குமுதம் என 3-விதப்படும். இவற்றுள், 1-வது செங்குமுதரோகம். இது கருவிழியில் செங்கழுநீர்ப பூவைப்போல் சிவந்த சதையை வளர்ப்பித்து, அதில் நெருப்பினுல்சுட்டப் புண்போல் எரிச்சலையும் குத்தலையு முண்டாக்கும்.

2-வது கருங்குமுதரோகம்: இது கருவிழியில் கருங்குவளைப் பூவைப்போல் விரணத்தை எழுப்பிப்பார்வையில் இருள்கம்மியது போல் செய்யும். 3-வது வெண்குமுதரோகம்: இது கண்களில், பஞ்சுபோல் வெளுத்த புள்ளி விழுந்துபரவுதல், குத்தல், மிகுந்த நோதல், பார்வைமழுங்கல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். ஆக குமுதரோகம் 3-ம் முற்றியது. இவற்றுள், செங்குமுதம் சாத்தியம். மற்ற 2-ம் அசாத்தியம்.

---

## கருவிழி 4-வது பிரிவாகிய விழியுந்தல்ரோகபேதம்.

விழியுந்தல்ரோகமானது, செஞ்சதைவிழியுந்தல், வெண்சதைவிழியுந்தல், சருவநேத்திரவிழியுந்தல் என 3-விதப்படும். இவற்றுள், 1-வது செஞ்சதைவிழியுந்தல்: இது, குமுதரோகத்தினாலும், மற்றும் நேத்திரரோகங்களினாலும், கருவிழியில் சிவந்தசதையைப் படரச்செய்து அதில் உறுத்தலை உண்டாக்கும். 2-வது வெண்சதைவிழியுந்தல், இது வெண்மைச்சதையைப் படரச்செய்து, அதில் நோவைமாத்திரம் உண்டாக்கும். 3-வது சருவநேத்திரவிழியுந்தல், இது கண்முழுமையும் துற்றுக் கொள்ளும்படிக்குச் சதையைப்படரச்செய்யும். ஆக விழியுந்தல்ரோகம் 3-ம் முற்றியது. இம்மூன்றும் அசாத்தியமே.

---

## கருவிழி 5-வது பிரிவாகிய நெரிசல்ரோகபேதம்.

உஷ்ணம், வெகுநடை, அவுஷதவேகம், மிகுசுமை எடுத்தல், கண்சிவத்தல், நீர் ஒதுங்கல் என்னும் இச்செய்கைகளினால், நெரிசல் ரோகம் பிறக்கும். இது, உஷ்ணநெரிசல், சோணிதநெரிசல், நீர்நெரி

சல் என 3-விதப்படும். இவற்றுள், 1-வது உஷ்ணநெரிசல். இது, கரு விழியில் விருத்தமான வெளுப்பை உண்டாக்கும். 2-வது சோணித நெரிச்சல், இது விழிமையத்தில், ரத்தநிறத்தையும், சடுகையையும் உண்டாக்கும். 3-வது நீர்நெரிசல், இது, விழிநடுவில், மாந்தளிர் நிறத்தையும் குளிர்ச்சியுடன் நீர்க்கோவையையும் உண்டாக்கும்.

ஆக நெரிசல்ரோகம் 3-ம் முற்றியது.

---

## கருவிழி 6-வது பிரிவாகிய வரிரோகபேதம்.

வரிரோகமானது, நீர்வரி, இமைவரி, சோரிவரியென 3-விதப் படும். இவற்றுள், 1-வது நீர்வரி. இது வெளுத்து, நீண்டிருக்கும் 2-வது இமைவரி. இது, பிறைபைப்போல் வளைந்திருக்கும். 3-வது சோரிவரி இது, இரண்டு கடைக்கண் வரைக்கும் ரத்தநிறத்துடன் படர்ந்திருக்கும். ஆக வரிரோகம் 3-ம் முற்றியது.

## கருவிழி 7-வது பிரிவாகிய குந்தரோகபேதம்.

குந்தரோகமானது, சதைக்குந்தம், ரத்தகுந்தம், மோர்க்குந்தம் என மூன்றுவிதப்படும். இவற்றுள், ரத்தகுந்தம் 1-ம் அசாத்திய மாம். மற்ற 2-ம் சாத்தியமாம் ஆக குந்தரோகம் 3-ம் முற்றியது.

## கருவிழி 8-வது பிரிவாகிய திமிரரோகபேதம்.

திமிரரோகமானது, வெள்ளெழுத்து, மாலைக்கண், மந்தாரதிமி ரம், வறட்சித்திமிரம், நீர்த்திமிரம், சிலேஷ்மதிமிரம், மேகதிமிரம் என 7-விதப்படும். இவற்றுள், 1-வது வெள்ளெழுத்து. இது, அகா லத்தினாலும் காலத்தினாலும், இருவிதப்படும். இவற்றுள், அகால வெள்ளெழுத்து என்பது, 11-வது பக்கத்தில்கூறிய ஆலோசக பித் தத்தினது பிரகாசம் சில பித்தவஸ்துக்களினால் அதிகரிக்கும்போது சிறுவர்களுக்கும் உண்டாகும். இதனால், எழுத்துமுதலிய சிறிய வஸ்துக்களும் கண்ணுக்குப் புலப்படுவதுபோல் இருந்து காரணமில் லாமலே மயங்கிமறையப்படும். காலவெள்ளெழுத்து என்பது 37 வயதிற்குமேல் செல்லாநின்ற பித்ததோஷ ஒளியானது விரிகின்ற போது பிறந்து, ஒவ்வொருவேளை கொஞ்சம் வயிற்றுநோவைத்

தருவதுமன்றி, கருவிழியில் அற்பப்புகை மேகம்கம்மியதுபோல் செய்து நட்பப்பொருள்களைத் தெரியவொட்டாமல் மறைக்கும்; இந்தரோகம் பாலர்முதல் விருத்தர்பரியந்த முண்டாயிருக்கும். ஆனால், நாற்பத்தைந்து வயதிற்குமேல் மேற்படி பித்தஒளி மட்டுப் படுங்காலத்தில், சுபாவமாகத் தோற்றும். அல்லது மேற்படி வயதிற்குமேலும் நீங்காவிடில், இதில்வாயுவின் கூட்டுறவினால், திமிரரோகம் ஆரம்பமாகும். 2-வது மாலைக்கண். இது, மாலைக்காலத்தில் பார்வைக்குள் இருளடையும்படிச்செய்வதும், உதயகாலத்தில் அவ்விருள் நீங்கும்படிக்குச் செய்வதுமாக இருக்கும். 3-வது மந்தாரதிமிரம். இது, கருமணியில் பஞ்சுபோல் புகையையெழுப்பி அந்திநேரத்தில் இருளை யுண்டாக்குவதும், பின்னும் ஒருசாமத்திற்குள் தெளிவைத் தருவதுமாக இருக்கும். 4-வது வறட்சிதிமிரம். இது, கருவிழியில் மந்தமும், நடுநரம்பில் குத்தலும் பீளையுடன் சலப்பெருக்கும் உண்டாகும்படிக்குச்செய்யும். இது, கபாலமூளையைப் பித்தம்வறட்டும்போது பிறக்கும். 5-வது நீர்த்திமிரம். இது, நா, நாசி செவி, கண் ஆகிய இவ்விடங்களில் விரணத்தை உண்டாக்குவதும் அன்றி, கருவிழிப்பக்கங்களில் குத்தலையும், நடுவில் புகைச்சலையும் உண்டாக்கும். 6-வது சிலேஷ்ம திமிரம் இது கருவிழியை வெளுப்பாக்கிப் பார்வைக்குள்ளும் அப்படியே தோற்றுவிக்கும். 7-வது மேகதிமிரம். இது கருவிழியில் மேகம் கம்மியதுபோல் இருள் அடையச்செய்யும். ஆக திமிரரோகம் 7-ம் முற்றியது.

இவற்றுள், வெள்ளெழுத்து, மாலைக்கண், மந்தாரதிமிரம் என்னும் 3-ம் சாத்தியமாம். மற்றவை அசாத்தியமாம்.

## கருவிழி 9-வதுபிரிவாகிய சுக்கிரரோகபேதம்.

சுக்கிரரோகமானது, விரணசுக்கிரன், கருஞ்சுக்கிரன், விழிவிழுங்கிச் சுக்கிரன், வெண்சுக்கிரன், கனற்சுக்கிரன் என ஐந்துவிதப்படும். இவற்றுள், 1-வது விரணசுக்கிரன் : இது கருமணியின்மீது மிகுந்தவிரணத்தை உண்டாக்கும். 2-வது கருஞ்சுக்கிரன் ; இது விழியைச்சுற்றிலும் உளுந்துபோல் துவாரங்களை உண்டாக்கும். 3-வது விழிவிழுங்கிச்சுக்கிரன்; இது கருவிழியின் கீழ்ச்சந்தியில் நின்

றும் வெள்ளெழுச்சிபோல் படர்ந்து விழியைமறைக்கும். இதனால் அதிகவேதனையும் எரிச்சலுமுண்டாகும். 4-வது வெண் சுக்கிரன், இது குழந்தைகளின் கருவிழியைவிட்டுச்சுற்றிலும் அக்கினிநிறத்தை உண்டாக்கும். 5-வது கனற்சுக்கிரன்; இது விழியில் கோவையும் உள்ளில் அனல்போல காந்தலையும். உண்டாக்கும். ஆக சுக்கிரன் 5-ம் முற்றியது. இவற்றுள் விரணசுக்கிரன் ஆதியான 3-ம் அசாத்தியமாம். மற்ற 2-ம் சாத்தியமாம்.

---

## கருவிழி 10-வது பிரிவாகியபூரோகபேதம்.

மசூரிகை ரோகத்தினாலும், உஷ்ணரோகத்தினாலும், மிருநீர்க்கோவையினாலும், கருவிழியில், ஆணி உந்தல் புகை என்னும் 3-விதப் பூ உண்டாகும். இவற்றுள், புகை சாத்தியம். மற்ற 2-ம் அசாத்தியம்.

ஆக பூ ரோகம் மூன்றுடன் கருவிழிரோகம் 45-ம் முற்றியது.

---

## வெள்விழிரோகபேதம்.

வெள்விழியில், எழுச்சி, படாத்தி, நெரிசல், புற்று, குமிழும், வரி என்னும் 6-வகைப்பிரிவினால் 20-விதரோகம் பிறக்கும்.

## வெள்விழி 1-வது பிரிவாகிய எழுச்சிரோகபேதம்.

எழுச்சிரோகமானது, வரி எழுச்சி, விரண எழுச்சி, குவை எழுச்சி, நீர்எழுச்சி, உந்தெழுச்சி என 5-விதப்படும். இவற்றுள், 1-வது வரி எழுச்சிரோகம்: இது, வெள்விழியில், தேமலைப்போல் வட்டமாகத்தசையைப்பரவச்செய்யும் 2-வது, விரண எழுச்சி: இது, வெள்விழியில், கருங்குன்றியைப்போல் மாமிசத்தைவளர்ப்பிக்கும், 3-வது குவைஎழுச்சி: இது உழுந்தினது பிரமாணமான சதையைப் பிறப்பிக்கும். 4-வது நீர்எழுச்சி: இது,நீர்த்துளியைப்போல் தளதளப்பான சதையை உண்டாக்கும். 5-வது உந்தெழுச்சி. இது, பருத்திக்காயைப்போல் துர்மாமிசத்தை வளரப்பண்ணும். ஆகஎழுச்சிரோகம் 5-ம் முற்றியது. இவற்றுள், வரி எழுச்சி, நீர்எழுச்சி, குவை எழுச்சி ஆகிய 3-ம் சாத்தியமாம். மற்ற 2-ம் அசாத்தியமாம்.

---

## வெள்விழி 2-வது பிரிவாகிய படாத்திரோகபேதம்.

படாத்திரோகமானது, சதைப்படாத்தி, வரிப்படாத்தி, சோரிப் படாத்தி என 3-விதப்படும். இவற்றுள், 1-வது சதைப்படாத்தி; இது, வெள்விழியில் மிருதுவானசதையைத் தடிக்கும்படிச்செய்யும். 2-வது வரிப்படாத்தி; இது, வெள்விழியில் வலைக்கண்களைப்போல் மாமிசத்தை வளர்ப்பிக்கும். 3-வது சோரிப்படாத்தி; இது, வெள் விழியில் ரத்தக் குழம்புபடியாகிய செந்நிறச்சதையை வளர்ப்பிக் கும். ஆக படாத்திரோகம் 3-ம் முற்றியது. இவற்றுள், வரிப்ப டாத்திரோகம் சாத்தியமாம். மற்ற 2-ம் அசாத்தியமாம்.

## வெள்விழி 3-வது பிரிவாகிய நெரிசல்ரோகபேதம்.

நெரிசல்ரோகமானது, துளிநெரிசல், உந்துநெரிசல், விரண நெரிசல் என 3-விதப்படும். இவற்றுள், 1-வது துளிநெரிசல்; இது வெள்விழியில் விந்துவினது துளியைப்போல் மாமிசத்தை உண்டா க்கும். 2-வது உந்துநெரிசல்; இது துர்மாமிசத்தை எழுப்பும். 3-வது விரணநெரிசல்; இது, விரணத்தை உண்டாக்கும். ஆக நெரி சல்ரோகம் 3-ம் முற்றியது. இம்மூன்றும் சாத்தியமாம்.

---

## வெள்விழி 4-வது பிரிவாகிய புற்றுரோகபேதம்.

புற்றுரோகமானது, சதைப்புற்று, நீர்ப்புற்று, அழற்புற்று என 3-விதப்படும். இவற்றுள், 1-வது சதைப்புற்று. இது, வெள்விழி யில் ரத்தத்தினால் சிவந்த சதையைவளர்ப்பிக்கும். 2-வது நீர்ப்புற்று; இது, வெள்விழியில் நீர்க்குமிழிபோல் சதையை எழுப்பும். 3-வது அழற்புற்று. இது வெள்விழியில் காந்தலுடன் விம்மலானசதையை உண்டாக்கும். ஆக புற்றுரோகம் 3-ம் முற்றியது. இவற்றுள் அழற்புற்று அசாத்தியமாம். மற்ற 2-ம் சாத்தியமாம்.

---

## வெள்விழி 5-வது பிரிவாகியகுமிளரோகபேதம்.

குமிளரோகமானது, மாமிசக்குமிளம், ரத்தக்குமிளம், நீர்க்குமி ளம் என 3-விதப்படும். இவற்றுள், 1-வது சதைக்குமிளம்; இது வெள் விழியில் கறுத்தகொப்பிளத்தை உண்டாக்கும். 2-வது ரத்தக்

45

குமிளம்; இது வெள்விழியில், செங்குன்றியைப்போல் சிவந்த கொப்பிளத்தை உண்டாக்கும். 3-வது நீர்க்குமிளம்; இது வெள்விழியில் சங்கப்பழம்போல் கொப்பிளத்தை உண்டாக்கும். ஆக குமிள ரோகம் 3-ம் முற்றியது. இவற்றில், மாமிசக்குமிளம் அசாத்தியம். மற்ற 2-ம் சாத்தியம்.

## வெள்விழி 6-வது பிரிவாகிய வரிரோகபேதம்.

வரிரோகமானது, வெள்வரி, நீலவரி, ரத்தவரி என 3-விதப்படும். இவற்றுள் 1-வது வெள்வரி; இது வெள்விழியில், மீனின் செதிம்பைப்போல் வரையை உண்டாக்கும். 2-வது நீலவரி; இது, மிகுந்த பசுமை உள்ள துரிசினது நிறத்தை ஒத்த வரையைக் காண்பிக்கும். 3-வது ரத்தவரி; இது, செந்நிறவரையைப் பிறப்பிக்கும். இவற்றுள், நீலவரி சாத்தியமாம். மற்ற 2-ம் அசாத்தியமாம்.

ஆக வரிரோகம் மூன்றுடன் வெள்விழிரோகம் 20-ம் முற்றியது.

---

## இமைரோகபேதம்.

இமைகளில், பில்லம், தடிப்பி, பதுமம், கழலை, நீர்ப்பாய்ச்சல் என்னும் 5-வகைப் பிரிவினால் 16-வித ரோகம் பிறக்கும்.

## இமை 1-வது பிரிவாகிய பில்லரோகபேதம்.

பில்லரோகமானது, நீர்ப்பில்லம், அமரபில்லம், இடர்ப்பில்லம் என 3-விதப்படும். இவற்றுள், 1-வது நீர்ப்பில்லம்; இது, இமை முறைத்தலுடன் கனத்தல், கண்ணில்மிகுந்த சலம்வடிதல், அக்கண்ணைச்சுற்றிலும் புருவத்திலும் உச்சியிலும் திமிருடன் சில்லிட்டு நோதல்என்னும் இக்குணங்களை உண்டாக்கும். 2-வது அமரபில்லம்; இது, இமையில் ரத்தம்போல்சிவந்த தசைதடித்தல், கீழ் இமை ஒட்டிக்கொள்ளுதல், கண்ணொளி மயங்குதல், அதிகசலம்வடிதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். 3-வது இடர்ப்பில்லம். இது, இமையின் அடியிலும், புருவமத்தியிலும் இருக்கின்ற நரம்புகளை மஞ்சள் நிறமாக்கித் தடிக்கப்பண்ணும். ஆக பில்லரோகம் 3-ம் முற்றியது. இவற்றுள் நீர்ப்பில்லரோகம் அசாத்தியமாம். மற்ற 2-ம் சாத்தியமாம்.

## இமை 2-வது பிரிவாகிய தடித்தலாதிரோகபேதம்.

தடித்தல் ரோகமானது, இமைத்தடித்தல், இளிச்சக்கண், முடமயிர் என 3-விதப்படும். இவற்றுள், 1-வது இமைத்தடிப்பு. இது, கண்களில் பரபரப்பான தினவு, நீர்த்ததும்பல், இமையில் விருவிருப்புடன் திமிர், விம்மல், ஓரமெல்லாங் கனத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். 2-வது இளிச்சக்கண். இது, இமைவிளிம்பில் தடித்தல், விரணம், மிகுந்த சலக்கோவை, கண்கூசுதல், இதனால் வியசனம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதனைப் புளிச்சக்கண்ணென்றும் சொல்வர். 3-வது முடமயிர். இது இரண்டு இமைகளும் சரிந்து ஒட்டிக்கொண்டு நீர்ப்பெருக்கினால் அவ்விடத்தில் விரணம் பிறக்கும்போது பிறக்கும். இதனால் இமைமயிர் உள்ளில் தைத்துக்கொள்ளல், வேதனை, கருமணி வெளிறல், அதில் திமிர் என்னும் இக்குணங்களுண்டாகும். ஆக தடித்தலாதிரோகம் 3-ம் முற்றியது. இவற்றுள், முடமயிர் அசாத்தியம். மற்ற 2-ம் சாத்தியம்.

## இமை 3 - வது பிரிவாகிய கழலைரோகபேதம்.

கழலைரோகமானது, நீர்க்கழலை, ரத்தக்கழலை, சதைக்கழலை என 3-விதப்படும். இவற்றுள் 1-வது நீர்க்கழலை. இது, இமைக்குமேல்புறத்தில் கல்மழைபாகிய ஆலங்கட்டியைப்போல் கட்டியைஉண்டாக்கும். 2-வது ரத்தக்கழலை. இது முன்புசொன்ன இடத்திலேயே ரத்தநிறக் கட்டியை எழுப்பும். 3-வது சதைக்கழலை. இது, மாமிசநிறமுள்ளக் கட்டியைப் பிறப்பிக்கும். ஆக கழலை 3-ம் முற்றியது. இவற்றுள் ரத்தக்கழலைரோகம் அசாத்தியமாம். மற்ற 2-ம் சாத்தியமாம்.

## இமை 4 - வது பிரிவாகிய நீர்ப்பாய்ச்சல்ரோகபேதம்.

நீர்ப்பாய்ச்சல் ரோகமானது, இமைநீர்ப்பாய்ச்சல், சுற்றுக்குலைவு, புழுவெட்டு, இமையிறைச்சி என 4-விதப்படும். இவற்றுள் 1-வது இமைநீர்ப்பாய்ச்சல். இது சிரசின் நீரை இமைநரம்பி லிறங்கும்படிக்குச் செய்யும். இதனால் இமைகனத்தல், மதத்தல், திமிர், வீக்கம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். 2-வது சுற்றுக்குலைவு; இது இமையினது ரோமம் உதிரவுடன் அந்த* இடத்தில் விரணம், நீர் வடிதல், வீக்கம், நோவு, குத்தல், கண்மயக்கம், மிகுந்த பீளைசாரல்

என்னும் இக்குணங்களை உண்டாக்கும். 3-வது புழுவெட்டு. இது இமைமயிர் உதிராலுடன் அந்த இமையில் விரணம், அனல்போல் காந்துதல், ரத்தம்வடிதல், வீக்கம், தடிப்பு என்னும் இக்குணங்களை உண்டாக்கும். 4-வது இமையிறைச்சி; இது இமையைச் சருமம் இல்லாத இறைச்சியைப்போல் செய்வதன்றியும், அதில் நின்றும் சலப் பெருக்கை உண்டாக்கும். இது, வாததோஷம், மசூரி, உஷ்ணவியாதி என்னும் ரோகங்களினால் உண்டாகும். ஆக நீர்ப்பாய்ச்சலாகிய ரோகம் 4-ம் முற்றியது. இந்த 4 ரோகமும் சாத்தியமாம்.

## இமை 5-வது பிரிவாகிய பதுமரோகபேதம்.

பதுமரோகமானது, நீர்ப்பதுமம், ரத்தப்பதுமம், சதைப்பதுமம் என 3-விதப்படும். இவற்றுள் 1-வது நீர்ப்பதுமரோகம். இது இமையில் தடிப்பையும், அதிக நீர்ச்சுரப்பையும் உண்டாக்கும். 2-வது ரத்தப்பதுமரோகம். இது, இமையில்சிவந்தநிறத்தையும் ரத்தநீரையும் உண்டாக்கும். 3-வது சதைப்பதுமரோகம். இது இமைக்குள் துர்மாமிசத்தை வளர்ப்பிக்கும். இவற்றுள், சதைப்பதும ரோகம் அசாத்தியம். மற்ற 2-ம் சாத்தியம்.

ஆக பதுமரோகம் மூன்றுடன் இமைகளில் பிறக்கின்ற ரோகம் 16-ம் முற்றியது.

---

## கடைக்கண்ரோகபேதம்.

கடைக்கண்களில், கண்ணெடுப்பு, பூசாந்திரம், படாத்தி, குவை, விழிவாதம், விரணப்பரு, வித்திரதி, இமைக்குரு, குமிழ், நக்ஷத்திரவாயு, கண்ணோவு என்னும் 11-வகைப் பிரிவினால் 15-வித ரோகம் பிறக்கும்.

### கடைக்கண் 1-வது பிரிவாகிய கண்ணெடுப்புரோகம்.

இது, கடைக்கண்ணில் உப்பலைஉண்டாக்கிக்கொண்டே இருக்கும்.

### கடைக்கண் 2-வது பிரிவாகிய பூசாந்திரரோகம்.

இது, கடைக்கண்ணில், பீளைசாரும்இடத்திற்கு எட்கடைஇடம் விட்டு, பருத்தி விதையைப்போல் உப்பலை உண்டாக்கும்.

## கடைக்கண் 3-வது பிரிவாகிய படாத்திரோகபேதம்.

படாத்திரோகமானது, நீர்ப்படாத்தி, சதைப்படாத்தி, ரத்தப் படாத்தி என 3-விதப்படும். இவற்றுள், 1-வது நீர்ப்படாத்தி. இது, கடைக்கண்ணில் சலத்தை ஒழுகுவிக்கும். 2-வது சதைப்படாத்தி. இது, கடைக்கண்ணில் துர்ச்சதையைவளர்ப்பிக்கும். 3-வது ரத்தப் படாத்தி. இது, கடைக்கண்ணில் வெப்பத்துடன் ரத்தத்தைவடியப் பண்ணும். ஆகபடாத்திரோகம் 3-ம் முற்றியது.இவை 3-ம் சாத்தி யமாம்.

## கடைக்கண் 4-வது பிரிவாகிய குவைரோகபேதம்.

குவைரோகமானது, நீர்க்குவை, சதைக்குவை; ரத்தக்குவை என 3-விதப்படும். இவற்றுள், 1-வது நீர்க்குவை. இது, கடைக்கண் ணில் சிலேஷ்மமொத்தையைப்போலவே துர்மாமிசத்தை வளர்ப் பிக்கும். 2-வது சதைக்குவை; இது கடைக்கண்ணில் கருங்குன்றி யைப்போல்தசையைப்புடைப்பிக்கும்3-வது ரத்தக்குவை.இது,கடைக் கண்ணில் ரத்தநிறத்துடன் கடினத்துவமான சதையைஉண்டாக்கும். ஆக குவைரோகம் 3-ம் முற்றியது. இம் மூன்றும் சாத்தியமாம்.

## கடைக்கண் 5-வது பிரிவாகிய விழிவாதம்.

இது,வாயுவைக்கொண்டு இமைகளை ஆட்டுவித்துக்கண்களைச்சுருக்கும்

## கடைக்கண் 6-வது பிரிவாகிய விரணப்பரு.

இது, கடைக்கண் விளிம்பில் கற்கண்டுருவமுள்ள விரணத்தை யுண்டாக்கும்.

## கடைக்கண் 7-வது பிரிவாகிய வித்திரதி.

இது, கடைக்கண்ணில் நரம்பின் வழியாகத் துடித்தலை உண்டாக்கும்.

## கடைக்கண் 8-வது பிரிவாகிய இமைக்குரு.

இது, கடைவிழியில் சிறிய கட்டிகளை எழுப்பும். இதனைக் கண் கட்டி என்பர்.

## கடைக்கண் 9-வது பிரிவாகிய குமிழரோகம்.

இது, கடைக்கண்ணில் குமிழ்போல் சவ்வைப் புடைப்பிக்கும்.

## கடைக்கண் 10-வது பிரிவாகிய நக்ஷத்திரவாயு.

இது, நயனத்திலும் புருவத்திலும் குத்தலுடன் விரணத்தை எழுப்பி, நாசியில் சலப்பெருக்கை உண்டாக்கிக்கொண்டே இருக்கும்.

## கடைக்கண் 11-வது பிரிவாகிய கண்ணோவு.

இது, கண்கள்முற்றிலும் சிவத்தல், உறுத்தல், நீர்முட்டல், வெளிச்சத்தைப் பார்க்கக்கூடாமை, மாதர்மேல்விருப்பு என்னுமிக் குணங்களை உண்டாக்கும்.

ஆக கடைக்கண்ரோகம் பதினாறுடன் நேத்திரரோகம்

96, எனக்கூறிய மதாந்தரமும் முற்றியது.

விழியுந்தலுக்கு, ரக்ஷையும். நெரிசலுக்கு, முருங்கைப் பூவாதி கிருதமும். வரிகளுக்கு, அஞ்சனதிப்பொடியும். சுக்கிரரோகங்கட்கு, தாரநெய்யாதி படிகாரப்பொடியும். படாத்தி, திமிரம்இவைகட்கு பசுவின்பாலும், இந்துப்பாதிநெய்யும், பச்சைத்தாம்பர உண்டையும். பூரோகங்களுக்கு, பச்சை உண்டை, யானைப்பல்லாதி மாத்திரையுடன் கடல்நுரையும். எழுச்சிகளுக்கு, தேத்தாங்கொட்டையாதிகிருதமும். படாத்திகட்கு, அமுதாஞ்சனப்பொடியும். நெரிசலுக்கு, இந்துப்பும், திரிகடுகாதிநெய்யும் ஆகும். அன்றியும், மேற்கூறிய நேத்திரரோகங்களுக்கெல்லாம் கிரமமாகச் சிகிச்சாசாரம் என்னும் சாஸ்திரத்தில் விவரித்திருக்கும் அமிர்தாமலக தயிலம், பீதரோகணித் தயிலம், கருஞ்சிறுமா, வெண்சிறுமா, விருசநவநீத பாவனலவுங்காஞ்சனம், கோகிலாக்ஷி மூலாஞ்சனம், நாரிகேளாஞ்சனம், வச்சிர ரத்தினகாமாத்திரை முதலிய அவுஷதங்களையும், க்ஷத்திர க்ஷாராக்கினி சிகிச்சைகளையும் முறைமைப் படிக்குச் செய்யில், அவைகள் நிவர்த்தியாகும்.

பதினொன்றுவது உன்மாதரோகபடலம்.

முற்றியது.

## 12-வது கர்ணரோகபடலம்.

### கர்ணரோகபேதம்.

கர்ணம் என்கிற காதுக்குள், வாதகர்ணசூலை ஆதியாக ரத்த கர்ணசூலை ஈறாக 5-விதரோகம் பிறப்பதுமன்றி, சங்காசாதியாக 20-வித ரோகம் பிறக்கும். அள், கர்ணம், கர்ணம், கேள்வி, சிரவணம், சிரவம், சுருதி, சுரோத்திரம், செவி, வள் ஆகிய 10-ம் காதின் பெயராம்.

### 1-வது வாதகர்ணசூலைரோகம்.

இது, பீநசம், நீர்விளையாடல், தினவினால் செவியைக் குடைந்து சொறிதல் ஆகிய இவைகளால் பிறந்து, அதிகரிக்கின்ற திரிதோஷங் களினால் செவிநரம்புகளில் வியாபித்து, அம்மார்க்கத்தில் வேதனை யைச்செய்யும். இதனால், காதுகளில்குத்தல், குறும்பிக்குள் நோவு, அந்த இடத்தில்மரத்தல், குளிர்ச்சியாகிய வஸ்துக்களைப் பிழிந்தால் ஸ்பரிசஞானந்தெரியாமை, நாட்சென்றுபக்குவப்படல், நோவுநிற்கில் கொஞ்சம் சலங்கசிதல், சத்தங்கேளாமை, உள்ளில் பூச்சிகள்பறப் பதுபோல் ஒரு விகாரமாகத்தோற்றுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

### 2-வது பித்தகர்ணசூலைரோகம்.

இது, காதுகளில் எரிச்சல், வீக்கம், சீதளவஸ்துவைப் பிழிந் தால் இதவு, சுடுகை, சீக்கிரத்தில் பக்குவப்படல், அதில் நின்றும் குளிர்ச்சியாகிய சலம்வடிதல், அதுவடியாமல் உள்ளில் கம்மியகாலத் தில் நோவுநிற்குதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 3-வது சிலேஷ்மகர்ணசூலைரோகம்.

இது, சிரசு, தாடை, கழுத்துப்பிடரி ஆகிய இடங்களில் கனத் தல், உஷ்ணவஸ்துவில் இச்சை, காதுகளில் அற்பநோவு, நமைச்சல், வீக்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது பக்குவப் பட்டு உடையுங்காலத்தில், குழம்பாயும் வெண்மையாயும் சலம் வடியும்.

## 4-வது திரிதோஷகர்ணசூலைரோகம்.

இது, சுரம், கொஞ்சம் உஷ்ணவஸ்துவில் இச்சை, காது வீக்கம். அதிகநோவு, சத்தங்கேளாமை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்,

## 5-வது ரத்தகர்ணசூலைரோகம்.

இது, பித்தகர்ணசூலையினுபத்திரவத்தையும், வாதகர்ணசூலைக் குரிய சில குணங்களையும் உண்டாக்கும். அன்றியும், செவியானது கல்லு முதலியவைகளால் அடியுண்டகாலத்தில், உள்ளில் சீழ்ரத்தஞ் சேர்ந்து குத்தல்பிறந்தால், அபிகாதசூலை எனப்பேர்பெறும். அதற் கும் இக்குணங்களெல்லாம் உண்டு. ஆக கர்ணசூலைரோகம் ஐந்தும் முற்றியது.

இனி கர்ணநாதரோகம் முதல், கர்ணவிகியரோகம் ஈறாக இருபது விதச் சங்காரரோகங்களைச் சொல்லப்படும்.

## 1-வது கர்ணநாதரோகம்.

இது, காதுகளில் சத்தத்தை உண்டாக்குகின்ற நரம்புகளில் வாயுவு சேருங்காலத்தில் பிறக்கும். இதனால், காரணம் இல்லாமலே காதுக்குள் நானாவித சத்தமான நாதங்கள் உண்டாகும்.

## 2-வது பாதிரியரோகம்.

இது, வாயுவு, சிலேஷ்பத்துடன்கூடி, சத்தநரம்பில் வியாபிக் கும்போது பிறக்கும். இதனால்,காதுக்குள் சகல சத்தத்தையும் தெரி விக்கின்ற நாதமானது கெடுதி அடையாதிருந்தாலும், அதற்கு வெளி ஓட்டம் இல்லாமையால் அதிகக்கூச்சலிட்டு உரக்கக்கூவினாலும் கிணற்றுக்குள் பேசுவதுபோல் பிரயாசத்தின்மேல் கொஞ்சம் சத்தங் கேட்கும்.

## 3-வது பிரதிநாகரோகம்.

இது, வாயுவினால் சிலேஷ்மம் உலர்ந்து சத்தநரம்புகளில் சுற் றிக்கொள்ளுங் காலத்தில் பிறக்கும். இதனால், காதுகளில் அதிகநோ வும், சத்தக்கெடுதியும் உண்டாகும். இது, சத்தத்தை மிகவும் வெளி விடாமல் கட்டுதலால் பிரதிநாகரோகம் எனப் பேர்பெற்றது.

நாகம் என்பது கட்டுகல்.

## 4-வது கர்ணகண்டுரோகம்.

இது, காதுக்குள் அதிக கபத்தினால் தினமச்சலை யுண்டாக்கும்.

## 5-வது கர்ணசோபைரோகம்.

இது, காதுக்குள் அதிக வீக்கத்தை மாத்திரம் உண்டாக்கும்.

## 6-வது கர்ணபூதிரோகம்.

இது, பித்தத்தினால் சுபமானது கெடுதியை அடையுங்காலத்தில் பிறக்கும். இதனால், காதுக்குள்ளிருக்குந் தம்குறாப்பியின் சருமத்தில் நோவு ஒருவேளை இன்மை, மிகுந்த துர்க்கந்தம், வியர்வைபோல் ஓயாது சலம் வடிதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். பூதி என்பது துர்க்கந்தம்,

## 7-வது கர்ணவித்திரதிரோகம்.

இது, செவிக்குளுண்டாகின்ற தினமைச்சலால் சில கருவியைக் கொண்டு குடைவதனால் புண்ணுகுங்காலத்தில் பிறக்கும். இதனால், முற் கூறிய வித்திரதிக்கட்டிகளுக்குள்ள குணங்களெல்லாம் உண்டாகும்.

## 8-வது கர்ணாரசோற்புதரோகம்.

இது, காதுகளின் மூலத்தில் மூலரோக உபத்திரவம்போல் உபத்திரவமும், துர்க்கந்தமும், செவிடும் உண்டாகும்படிக்குச் செய்யும்.

கர்ணம் என்பது காது; அரசம் என்பது மூலம்;

அற்புதம் என்பது உள்ளில் மிகுந்தநோவுடன் கூடியவீக்கம்.

## 9-வது கர்ணாற்புதரோகம்.

இது, காதுகளில் முன்புசொன்ன கர்ணாரசோற்புத ரோககுணங்களுடன், செவிப்பிரதேசமெல்லாம் ஏகவீக்கத்தையும் உண்டாக்கும்.

## 10-வது கர்ணகிருமிரோகம்.

இது, காதுகளில் திரிதோஷச்சேர்க்கையால் பிறக்கும். இதனால் கிருமிகள்ஜனித்து, அந்த இடத்துச் சீழ், ரத்தம், மாமிசம் இவைகளைப் புசித்துக்கொண்டு அதிக ஊரலையும் நோவையும் உண்டாக்கும்.

## 11-வது கர்ணகூசிகாரோகம்.

இது, காதுக்குள்வாயுவு தங்குங்காலத்தில் பிறக்கும். இதனால், செவியினது உட்கருவியாகிய குறும்பி முடங்கிக்கொண்டு, மிகுந்தஉபத் திரவத்தை உண்டாக்கும். கூசிகா என்பது முடங்குதல்.

## 12-வது கர்ணபிப்பலிரோகம்.

இது, மாமிசத்தைப்பற்றிப்பிறக்கும். அப்போது, காதுக்குள் துர் மாமிசமானது, திப்பலிக்காயைப்போல், ஒன்றாயேனும் பலவாயேனும் உண்டாகிக்கொண்டே இருக்கும். பிப்பலி என்பது திப்பலிக்காய்.

## 13-வது கர்ணபிதாரிகாரோகம்.

இது, திரிதோஷத்தினால் காதுக்குள் சிறிய நிலப்பூசினிக்கிழங் கைப்போல் மாமிசத்தை உண்டாக்கும். இதனால், அந்த இடத்தில் நோவு, மரத்தல், வீக்கம், கடுகுத்தயிலம்போல் சலம்வடிதல், பொறுத் துப் பொறுத்துக் குத்துதல், குறும்பிமுடங்குதல் என்னும் இக்குணங் கள் உண்டாகும். இதனைச்சஷ்குலிரோகம் என்பர். சஷ்குலி என்பது முறுக்கு.

## 14-வது கர்ணபாலசோஷரோகம்.

இது, காதுக்குள்ளிருக்கும் நரம்புகளில் வாயுவுதங்கிச் சஞ்சரிக் கும்போது பிறக்கும். இதனால், நெற்றியானது மிகவும் உலர்ந்து சுட் கத்தை அடையும். பாலம் என்பது நெற்றி; சோஷம் என்பது சுஷ்கம்.

## 15-வது கர்ணதந்திரிகாரோகம்.

இது, காதுக்குள் பிசினைப்போல் கெகிட்சியாயும், இழுத்தால் அறுமல் தந்தியைப்போல் நீளுவதாயும் இருக்கின்ற சீழை உண்டாக்கும்.

## 16-வது கர்ணபரிபோடகரோகம்.

இது, வாயுவினால் காதுக்குள் ஏற்பவீக்கத்தையுடைய கொப்பிளத் தைப் பிறப்பிக்கும். அது நெடுநாள் அப்படியேயிருக்கும். பின்பு விருத்தி அடைய ஆரம்பித்தால் சீக்கிரத்தில் விருத்தியடையும். இதனால் அம் மார்க்கத்தில் மிகு சிவப்புநிறமும் நோவும் உண்டாகும்.

## 17-வது கர்ணோற்பாதரோகம்.

இது, ரத்த பித்தரோகத்தினாலும், மெத்தவும் கனத்த காதணிகளினாலும், காதுகளில் வேர்க்குருபோல் சிறிய கொப்பிளத்தை உண்டாக்கும்; அது பழுத்து உடைகையில்,வீக்கம், அத்துடன்பரும் பருங்கொப்பிளங்கள் விஸ்தாரம் எழும்புதல், அவைகளில் வியர்வையும் ரத்தமும் சுடுகையும் பிறக்குதலுட னதிகநோவு, எரிச்சல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும். உற்பாதம் என்பது அதிக உபத்திரவம்.

## 18-வது கர்ணோன்மந்தரோகம்.

இது, வாதசிலேஷ்மங்களினால் பிறக்கும். இதனால், செவிமார்க்கத்தில் நிலைபெற்றவீக்கம், அதில் நோவின்மை, அதிகநமைச்சல், சீக்கிரத்தில் வசப்படாமை என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது, வீக்கத்தைக்கொண்டு மந்தத்தை உண்டாக்கலால், கர்ணோன்மந்தரோகம் எனப் பேர்பெற்றது. இதற்குக் கல்லிகம் என்றும் ஒரு பேருண்டு.

## 19-வது துக்கவர்த்தனரோகம்.

இது, காதுகுத்தும்போது கைவசமறியாமல் நரம்பின் மார்க்கங்களில் குத்துவதனால் பிறந்து, வேதனையைச்செய்யும்; அப்போது நமைச்சல், எரிவு, வீக்கம், பக்குவகாலத்தில் நோவு என்னு மிக்குணங்களுண்டாகும். வர்த்தனம் என்பது அதிகரித்தல்.

## 20-வது கர்ணலிகியரோகம்.

இது, சிலேஷ்மத்துடன்கூடிய ரத்தத்தினால் காதுக்குள் கிருமிகளைப் பிறப்பிக்கும். அக்கிருமிகள் சிறுசிறுகொப்பிளங்களை உண்டாக்கும். இதனால், காதுகளில் வெகு தினவு, வியர்வை, வேதனை, அம்மார்க்கத்தில் எந்நேரமும் ஒரு கருவியைக்கொண்டு குடைதற்கே நினைப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகும். லிகியம் என்பது துழாவிக்குடைதல்.

## கர்ணரோக அசாத்தியாசாத்திய நிதானம்.

கர்ணரோகம் 25-ல், கர்ணபிப்பலி, கர்ணபிதாரிகை, கர்ணசூசிகை இம்மூன்றும் அசாத்தியம். கர்ணதந்திரிமுதல் கர்ணலிகியம் ஈறுகிய 6-ம் கஷ்டசாத்தியம். மற்ற 16-ம் சாத்தியம். இவைகளை, வேளைரசம்,

தும்பைரசம், உள்ளிரசம், அபினி, பெருங்காயபாவனத்தீநீர், சுக்கடைப் பஞ்சு, நாகராதித்தயிலம், லாக்ஷாதித்தயிலம், மரீசித்தயிலம் முதலிய அவுஷதங்களினாலும் ஆயுதசிகிச்சைகளினாலும் வசப்படுத்தவேண்டும்.

ஆக கர்ணரோகம் 25-ம் முற்றியது.

---

## நாசிகாரோகபேதம்.

நாசிகளில் வாதபீநசரோகம் ஆதியாக நாசிகார்ப்புதரோகம் ஈறாக பதினெட்டுவிதரோகம் பிறக்கும்.

## நாசிகாரோகலக்ஷணம்.

பனி, அப்பனிக்காற்று, எதிர்காற்று, நாசியில்தூசி அடைதல், உரத்தவார்த்தை, மிகுநித்திரை, நித்திரைப்பங்கம், தினமும் சீதளசலத்தில் மூழ்குதல், கண்ணீரை அடக்குதல், மேடுபள்ள ஸ்தானத்தில் படுக்குதல், தேசபேதசலபானம், வெகுதாகபானம், அதிக ஸ்திரிசையோகம், வாந்தியை அடக்குதல் ஆகிய இச்செய்கைகளினால், வாதபித்தசிலேஷ்மங்கள் அதிகரித்து, நாசியிற்சேர்ந்து பீநசரோகத்தைப் பிறப்பிக்கும். இது, விருத்தி அடைந்தால், நாசியானது சுஷ்கத்தைஅடையும். அன்றியும், சகலபீநசரோகங்களில் நின்றும் பிரயாசத்தின்மேல் சுவாசம்வருதல், அதி தும்மல், நாசியால் பேசுவதுபோல் பேசுதல், மூக்கில் துர்க்கந்தம் வீசுதல், தலைநோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதனைச் சலதோஷம், சளி, நீரேற்றம், நீர்க்கோவை எனவும் சொல்வார்கள். மேலும் இந்த ரோகத்தினால் உண்டாகின்ற கோழையானது உமிழும்படிக்கு வெளிப்படின், முன்னீர்க்கோவை என்றும், அதுவே உண்ணாக்கு வழியாக விழுங்கும்படிக்கு விழுந்தால், பின்னீர்க்கோவை என்றும் சொல்லப்படும்.

## 1-வது வாதபீநசரோகம்.

இது, வாயுலரல், தும்மல், நாசி அடைப்புடன் அவ்விடத்திலும் பல்லிலும் காதிலும் சிரசிலும் நோவு, புருவங்களில் பூச்சி ஊருவது போல் இருத்தல், குரற்கம்மல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும். இக்குணங்கள் வெகுநாள்பொறுத்து முதிரும். அப்போது நாசித்துவாரக்கின்வழியாய்க் குளிர்ந்தும் கறுத்தும் சலம் வடிவதாக இருக்கும்.

## 2-வது பித்தபீநசரோகம்.

இது, தாகம், சுரம், பிரமை, நாசியிற்கொப்பிளம், அடைப்பு, அத்துவாரத்தில் நின்றும் சுடுகையுடன் மஞ்சள் நிறத்தையும் தாம்பர நிறத்தையும்பெற்றுச் சளிவிழுதல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மபீநசரோகம்.

இது, இருமல், அரோசகம், இரைப்பு, வாந்தி, தேககனதி, வாயி னிப்பு, நமைச்சல், நாசி அடைப்புடன் அத்துவாரவழியாகத் தூய வெண்மையான சளிவிழுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது திரிதோஷபீநசரோகம்.

இது, முற்கூறிய வாதபீநசரோகம் முதலிய மூன்று பீநசரோக குணங்களையும் ஒரேகாலத்தில் உண்டாக்கும். இக்குணங்கள் காரணம் இல்லாமலே அதிகரிப்பதும் குறைவதுமாக இருக்கும்.

## 5-வது ரத்தபீநசரோகம்.

இது, நாசிக்குள் நமைச்சலுடன் திமிர், சிவந்தசளியும் ரத்தமும் ஒழுகுதல், கண்ணிலும் காதிலும் தினவு, சருமம் கண் முதலியவைகள் சிவக்குதல், உரிசைதெரியாமை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது துஷ்டபீநசரோகம்.

இது, முற்கூறிய ஐவகைப்பீநசங்களையும் தகுந்த சிகிச்சைகளி னால் நிவர்த்திசெய்யாது வளர்த்திபகாலத்தில் பிறந்து, அவைகளுக் குள்ள வேதனைகளைப் பார்க்கினும் அதிகவேதனைகளையும், இந்திரியங்க ளுக்கு எல்லாம் மிகு அயர்ச்சியையு முண்டாக்கும். அப்போது, அக்கி னிமந்தம், சுரம், இருமல், இரைப்பு, மார்பிலும் பக்கங்களிலும் நோவு, வாய்வறளலுடன் துர்க்கந்தம், நாசியில் அபர்வை, அதன் உட்புறம்வற ளல், வீக்கம், அம்மார்க்கத்தில் நின்றும் சீழைப்போல் வெளுத்தும் சிவந் தும் உருண்டை உருண்டையாகச் சளிவிழுதல், அவ்விடத்தில் வெளுத் தும் மினுமினுத்தும் நீண்டும் இராநின்ற சிறுசிறு கிருமிகள் பிறக்குதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது முதிர்ந்தால், தேகம்சுளுபாக்

இருத்தல், இருமல், ஆயாசம், சளி மஞ்சள்நிறத்துடன் கட்டியாகவிழு தல், நாவில் உரிசையும் மூக்கில் மணமும்தெரிதல் ஆகிய இக்குணங்கள் உண்டாகும்.

## 7-வது அதிதும்மல்பீநசரோகம்.

இது, தீக்ஷண ஆக்கிராணம், சுவாசத்தைநிறுத்தல், சூரியனைச் சிமிட்டாது பார்க்குதல், வாதவஸ்துவைப்புசித்தல் ஆகிய இவைகளினு லும், நாசித்தண்டாகிய எலும்பில் கயிறு வைக்கோல் முதலியவைகளால் அடிபடுவதினாலும் வாயுவானது அதிகரித்து, நாசி, வாய், கண், செவி, ஆகிய இடத்து நரம்பின் துவாரங்களை அடைக்குங்காலத்தில் பிறந்து, எந்நேரமும் தும்மலை உண்டாக்கும். இதனைப் புரிசட்சவபீநசம் எனக் கூறுவர்.

## 8-வது நாசிகாசோஷரோகம்.

இது, வாயுவு அதிகரித்து நாசியில் சேருங்காலத்தில் பிறக்கும். இதனால், நாசித் துவாரங்கள் வறளல், அத்துவாரங்களின் பக்கத்துத் தண்டுகளில் முள்ளால் குத்துவதுபோல் குத்தல், கபாதிக்கம், பிரயாசத் தின்மேல் மூச்சுவருதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 9-வது நாசிகாநாகரோகம்.

இது, சிலேஷ்மமானது அதிகரித்து வாயுவை விசைகொண்டெ மூப்பி நாசித்துவாரங்களை அடைப்பிக்குங்காலத்தில்பிறக்கும். அப்போது மூக்கடைப்பும், உசுவாச நிசுவாசத் தடங்கலும் உண்டாகும்.

## 10-வது கிராணபாகரோகம்.

இது, பித்தத்தைக்கொண்டு நுனி மூக்குப்பக்கங்களின் உட் புறத்தை வெந்ததுபோல் செய்விக்கும். இதனால், அச்சருமத்திலும் மாமி சத்திலும், எரிச்சலுடன் கனநோவு உண்டாகும்.

## 11-வது நாசிகாசிராவரோகம்.

இது, சிலேஷ்மத்தைக்கொண்டு, நாசிவழியாகக் கலங்கலில்லாத தெளிவை உடைய சுத்தசலத்தை விஸ்தாரம் வடியப்பண்ணும்.

## 12-வது அபீநசரோகம்.

இது, சிலேஷ்மத்தைக்கொண்டு மூக்கின்நரம்புகளை அடைப்பிக்கும். இதனால், முன்புசொன்ன பீநசங்களைப்பார்க்கிலும் அதி உபத்திரவம் பிறக்குதல், சுவாசம் விடும்போது குருகுரு என்னும் ஒருசத்தம், நாசியில் எந்நேரமும் வியர்வை என்னு மிக்குணங்களுண்டாகும். இது பழுத்தால், நாசியில் பிசுபிசுத்துக் குழம்பிய மஞ்சள் நிறமான சளி விழும்.

## 13-வது நாசிகாதீபிகைரோகம்.

இது, நாசியை, அக்கினிச்சுவாலையில் பட்டவஸ்துவைப்போலவும், ரத்தங்குழம்பியதுபோலவும் செய்யும். இதனால், அந்தஇடம் சிவக்குதல், உள்ளிலும் வெளியிலும் தொடக்கூடாத வேதனை, மூச்சானது புகையைப் போல் வெப்பத்துடன்வருதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 14-வது பூதிநாசிகாரோகம்.

இது, வாதபித்த கபங்களானவைதாடையின் மூலத்தைப்பற்றுங் காலத்தில் பிறக்கும். இதனால், நாசியிலும் வாயிலும் துர்க்கந்த முண் டாகும்.

## 15-வது பூயாசிரநாசிகாரோகம்.

இது, திரிதோஷத்தினாலும் அபிகாதத்தினாலும் பிறக்கும். இத னால், நாசியில்நின்றும் சீழானது ரத்தநிறமாக விழுதலும், சிரசில்நோ வுடன் எரிச்சலும் உண்டாகும். பூயம் என்பது சீழு, ஆசிரம் என்பது ரத்தம்.

## 16-வது நாசிகாபுடகரோகம்.

இது, பித்தசிலேஷ்மங்களினால் நாசித்துவாரம் அடைபடுங்காலத் தில் பிறக்கும். இதனால், சளி என்கிற சிலேஷ்மமானது மெத்தவும் வறண்டு கட்டியாகவிழுவதுமன்றி, அவ்விடத்தில் கொப்பிளமுமுண்டா கும்.

## 17-வது நாசார்சரோகம்.

இது, நாசியின்மூலத்தில், அங்குரம்போல் தூர்ம்மாமிசத்தை வளர்ப் பிப்பதும்தவிர, வாத கப பீநசகுணங்களையும் உண்டாக்கும்.

## 18-வது நாசிகார்ப்புதரோகம்.

இது, நாசியில் வீக்கத்துடன், பித்த கப பீநசக்குறிகளையு முண் டாக்கும். ஆக் நாசிரோகம் 18-ம் முற்றியது. மேற்கூறிய நாசிகா ரோகங்களை, க்ஷீரதாடிமிபுஷ்பபாவனகிருதம், துலவத்திரி, கோமயச் சூரணம், சுவாசாச்கிராணம், சௌரிமெழுக்குப்புகை முதலிய ரந்திர சிகிச்சைகளினாலும், இஞ்சித்தயிலம், சோம்பரச்சுத் தயிலம், நாசிகா ரோகநாசத் தயிலம் முதலிய தயில சிகிச்சைகளினாலும், க்ஷத்திர க்ஷாராக்கினி சிகிச்சைகளினாலும், நிவிர்த்திசெய்யவேண்டும்.

## முகரோகபேதம்.

எட்டு ஸ்தானங்களைப்பற்றி முகத்தில் 75-விதரோகம் பிறக்கும். அவையாவன :— உதட்டில் 11-ம், தாடைக்கு நடுவில் 1-ம், பல்லுகளில் 10-ம், அப்பல்லுகளின்வேரில் 13-ம், நாவில் 6-ம், தாடைகளில் 8-ம், தொண்டையில் 18-ம், முகம்முற்றிலும் 8-ம் ஆம். முகம் என்பது வாய்.

## முகரோகநிதானம்.

மீன், எருமை மாமிசம், பன்றிமாமிசம், சைத்தியவஸ்து, முள்ளங் கிக்கிழங்கு, உளுத்தம்பருப்பு, தயிர், பால், காடி, லவணவஸ்து, கரும்பு ரசம், காந்தியஅன்னம் இவைகளை இடைவிடாது விஷேமாக அகாலத் தில் புசித்தலினாலும், ஒருக்களித்துப்படுத்தல், பல்விளக்காதிருத்தல், சலத்தைக் கொப்பிளித்துக் கொப்பிளித்து விசையாக உமிழல், புகை பிடித்தல், வாந்திசெய்தல், விடாததலைகோவு ஆகிய இவைகளினாலும், வாதபித்தங்கள் சிலேஷ்மப்பிரதானமாகி அதிகரித்து, முகத்தில் இருக் கின்ற சப்ததாதுக்களிலும் பரவி, அந்தந்த இடங்களில் ரோகங்களைப் பிறப்பிக்கும்.

## ஒஷ்டரோகபேதம்.

உதட்டில், கண்டோஷ்டம் ஆதியாக, சலார்ப்புதோஷ்டம் ஈறாக பதினொருவித ரோசம் பிறக்கும். ஓஷ்டம் என்பது உதடு.

## 1-வது கண்டோஷ்டரோகம்.

இது வாயுவு உதட்டில் சேரும்போது பிறந்து, அவ் வுதடுகளில் வெடிப்பை உண்டாக்கும். கண்டம்என்பதுவெடிப்பு. இதற்கு, அந்தோஷ் டம் என்றும் ஒருபெயர் உண்டு. அந்தம் என்பது நாசம்.

## 2-வது வாதோஷ்டரோகம்.

இது, உதடுகளில், கத்தியின் வாயைப்போல் கருக்கான வெடிப்பு களும், மரத்தலும், அதிகநோதலும் உண்டாகும் படிக்குச் செய்யும்.

## 3-வது பித்தோஷ்டரோகம்.

இது, உதடுகளில், அதிகதீக்ஷணத்துடன் கடுகுப்பிரமாணத்தை யொத்து மஞ்சள்நிறத்தைப்பெற்ற கொப்பிளங்களை நிறைப்பிக்கும், அப்போது அவைகளில் நின்றும் வியர்வைக்கசிவு உண்டாகும், அக்கொப் பிளங்கள் சீக்கிரத்தில் உடைவதாக இருக்கும்.

## 4-வது சிலேஷ்மோஷ்டரோகம்.

இது, உதடுகளில், அதிக சீதளத்தைக்கொண்டு சகிக்கக்கூடாத நோவையும், வீக்கத்தையும், வெளுப்பான சிறிய கொப்பிளங்களையும் உண்டாக்கும். அவைகளில் நின்றும் வியர்வை நீர்பெருகும்.

## 5-வது சந்நிபாதோஷ்டரோகம்.

இது, உதடுகளில் வெடிப்பு, அதிகநோவு, மரத்தல், நாலுவித கொப்பிளங்கள் எழும்புதல், அதில் மாறுதுசலம்வடிதல், துர்க்கந்தம், ஒருவேளைவாடுதல் ஒருவேளை உப்புதல், வறளல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். இதில், வாதாதிகளுக்குள்ள குணங்களும் இருக்கும்.

## 6-வது ரத்தோஷ்டரோகம்.

இது, உதடுகளில் ரத்தம்பூசினதுபோல் நிறத்தை உண்டாக்கும். இதனால், அவ்வுதடுகள் ரத்தத்தைக் கக்குவதுபோலவே இருக்கும்.

## 7-வது அற்புதோஷ்டரோகம்.

இது, உதடுகளில், சிறியபேரீச்சங்காயை ஒத்த வீக்கத்தை எழுப் புவதும்தவிர அவைகளின்மேல் சிவந்தநிறத்தையும் உண்டாக்கும்.

## 8-வது மாமிசோஷ்டரோகம்.

இது, உதடுகளில், சிவந்தமாமிசநிறத்தை ஒத்த விரணத்தை உண்டாக்கும். அப்போது, அதில்நின்றும், அந்நிறத்தைப்பெற்ற கிருமி நெளிதலும், நமைச்சலும், நோவும் உண்டாகும்.

## 9-வது மேதோஷ்டரோகம்.

இது, உதடுகளில் எண்ணெய்யைத் தடவினதுபோல் மினுமினுத்த வீக்கம், அதில் கொழுப்பைப்போல் நல்லமிருதுவு, வியர்வை, மிகுந்த தினவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 10-வது க்ஷதோஷ்டரோகம்.

இது, உதடுகளில் காயங்கள் படுங்காலத்திற்பிறந்து, அந்தஇடங்களில் கட்டிகளைப்பிறப்பித்து, அவைகளை உடையும்படிக்குச் செய்து விரணமாக்கும், அல்லது வெடிப்பை ஆவது உண்டாக்கும். அப்போது அவ்வெடிப்புகள்கெட்டியாககூடிக்கொண்டு தினவைத்தருவதாகஇருக்கும்.

## 11-வது சலார்ப்புதோஷ்டரோகம்.

இது, உதடுகளில் வாத சிலேஷ்மங்களினால் நீர்க்குமிழியைப்போல் மாமிசத்தை வளரப்பண்ணும். இதனால், சலமும் சீழும் கசிந்தாலும் கசியும். ஆக ஓஷ்டரோகம் 11-ம் முற்றியது.

மேற்கூறிய ஓஷ்டரோகங்களை எல்லாம், நவநீதக்களிம்பு, சுத்த நவநீதம், கனகமிருதாரபஸ்பம் இவைகளைப் பூசுவதினாலும், கீல் தீநீர், ஏலாதிச் சூரணம் முதலிய சிகிச்சைகளினாலும் வசப்படுத்தவேண்டும்.

## 1-வது கண்டாலஜிரோகம்.

இது, எந்தப்பக்கத்துத் தாடையிலாவது, நீங்காத வீக்கத்தைப் பிறப்பிக்கும். இதனால், சுரமும், தாகமும் உண்டாகும்.

## தந்தரோகபேதம்.

தந்தங்களில் தந்ததாளனரோகம் ஆதியாக தந்தப்பிரஹூனரோகம் ஈறாக 10-விதரோகம் பிறக்கும். தந்தம் என்பது பல்.

## 1-வது தந்ததாளனரோகம்.

இது, உண்ணுகின்ற ரசாதிவஸ்துக்களின் பேதத்தால், வாயினிடத்தில் சீதளவாயு வியாபிக்கும்போது பிறந்து, உபத்திரவத்தைச் செய்யும். இதனால், பல்லில் உஷ்ணவஸ்துக்கள்படில் இதவும், சீதளவஸ்துக்கள் படில் வேதனையும், குத்தலினால் அப்பற்கள் பிளந்துபோவதுபோல் இருத்தலும் உண்டாகும். தாளனம் என்பது பிளத்தல்.

## 2-வது தந்தஹரிஷரோகம்.

இது, பல்லுகளில், புளிப்புவஸ்துவாவது, சீதளவஸ்துவாவது, காற்றுவது படில், சகிக்ககூடாத கூசுதல், சிலவேளை அவ்வஸ்துக்களைப் புசிக்கில் மிகுந்த உபத்திரவம், அப்பல்லுகள் அசைவதுபோலிருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதுகோசலப்புகையால் நீங்கும்.

## 3-வது தந்தபேதரோகம்.

இது, பல்லுகளில், குத்தலும் நோவுமுண்டாகும்படிக்குச்செய்யும். இதனால், தந்தங்கள் விழுந்துபோவது போலவே இருக்கும்.

தந்தம் என்பது பல், பேதம் என்பது வேறுபாட்டையுடையதாம்.

## 4-வது தந்தசலனரோகம்.

இது, வாயுவைக்கொண்டு தந்தங்களை அசையும்படிக்குச் செய்வதும் அன்றி, எவ்விதமான மிருதுவஸ்துக்களை புசித்தபோதினும் அதிக நோவையுண்டாக்கும். சலனம் என்பது அசைதல்.

## 5-வது தந்தகராளரோகம்.

இது, ஈறுகளைத் தேயும்படிக்குச்செய்து, தந்தங்களை வெளிப்புறத்தில் சாய்த்துவிடும். கராளம் என்பது தீக்குணம்.

## 6-வது அதிதந்தரோகம்.

இது, பல்லுகளுக்கெல்லாம் உபத்திரவத்தை உண்டாக்கி, அப்பல்லுகளின்சந்தில் ஒரு சிறிய பல்லை முளைப்பிக்கும். அது, நன்றாக முளைத்து வெளியில்வந்தால், முன்பு இருக்கும் உபத்திரவம் நீங்குவதாயும், மற்றைப்பற்களுக்கெல்லாம் வன்மை வருவதாயும் இருக்கும்.

## 7-வது தந்தசருக்கராரோகம்.

இது, தந்தங்களைத் துலக்கமுற விளக்காமையால், அச் சந்துக்களில் துர்க்கந்தத்தோடு சிலேஷ்மமலத்தைச் சேர்ப்பிக்கும். அம் மலமானது, வாயுவால் உலரப்பட்டு, மணற்போல் உதிர்ந்து கொண்டே இருக்கும்.

## 8-வது தந்தகபாலிகாரோகம்.

இது, பற்களின் முனைகளைத் தேயப்பண்ணுவதுந்தவிர, அவைகள் வெடித்துப் பொடிபொடியாக உதிரும்படிக்கும் செய்யும். இது, பற்களின் சிரசைக்கெடுப்பதால், தந்தகபாலிகாரோகம் எனப் பேர்பெற்றது.

## 9-வது தந்தசியாவரோகம்.

இது, ரத்த பித்தரோகத்தைக் கொண்டும், வாததோஷத்தைக் கொண்டும், சிற்சிலதந்தங்களை நீலநிறத்தைப்போலவும் கரிநிறத்தைப் போலவும் செய்விக்கும். சியாவம் என்பது கருமை நிறமாம்.

## 10-வது தந்தபிரஹூனரோகம்.

இது, வாதாதிகள் அதிகரித்துத் தந்தங்களிலும் அவைகளின் வேருகளிலும் வியாபித்து, அங்குள்ள தசையைச் சுட்கித்து உலர்த்தும்போது பிறக்கும்; அப்போது அச்சந்துக்களில் அன்னரசம் அடைந்துகெடுவதால், துர்க்கந்தம் வீசுதல், சிறுசிறு கொப்பிளங்கள் எழும்புதல், காரணம்இன்றி நோவு அதிகரித்தல், கிருமிகள்நெளிதல், அக்கிருமிகள் நெளியாத காலத்தில் நோவும் தினவும்மட்டிடல், ஈறுவீங்குதல், பல்லுகள் அசைதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். பிரஹூனம் என்பது மிகவும் குறைதல். இது, பல்லுகளை விழாமல் நிருத்தி உபத்திரவத்தையும் கிருமிகளையும் பிறப்பித்து, ஈறுகளில் சீழும் ரத்தமும் வடியும்படிக்குச் செய்வதால், கிருமிதந்தரோகம் எனவும் சொல்லப்படும்.

ஆக தந்தரோகம் 10-ம் முற்றியது.

இவைகளை, ஓமத்தீநீர்,அர்க்கக்ஷாரநாளிகாசூரணம், கல்நார்பஸ்மம், தசனப்பொடி, செங்கல், உளுத்தமாவு முதலிய சிகிச்சைகளைக் கொண்டு விலக்கவேண்டும்.

## தந்தமூலரோகபேதம்.

பல்லுகளின் வேரில், முற்கூறிய காரணங்களினால், சிதாதரோகம் ஆதியாக க்ஷததந்தமூலரோகம் ஈறாக 13-விதரோகம் பிறக்கும்.

## 1-வது சிதாதரோகம்.

இது, சிலேஷ்மமும் ரத்தமும் பல்லின்வேரில் சேரும்போது பிறந்து, அவ்வேர்வழியாகத் துர்க்கந்த ரத்தத்தை ஒழுகச்செய்யும். இதனால் அங்குள்ள மாமிசம் கரைவதன்றியும், அவ்வேர்கள் வெளுத்து வெளியில் பிரகாசமாகத்தெரியும். சிதம் என்பது வெண்மை; அதம் என்பது நாசம்.

## 2-வது உபகிருசரோகம்.

இது, ரத்தபித்தங்கள் பல்லின்வேரில்சேர்ந்து அங்குள்ளமாமிசத்தைச் சுடுகைபாக்கும்போது பிறக்கும். இதனால், அவ்விடத்தில் நமை

யுடன் ரத்தம் சுரக்குதல், அந்த ரத்தம் வெளியில்வராமல் உள்ளிடங்கி நின்ருல் ஈறுவீங்குதல், பல்லுகள் அசைதல், வாயில் துர்க்கந்தம் வீசுதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். கிருசம் என்பது இளைத்தல்.

## 3-வது தந்தபுப்புடரோகம்.

இது, இரண்டு பல்லின் நடுவிலாவது, மூன்றுபல்லின் நடுவிலாவது இலந்தைக்கொட்டைப் பிரமாணமாக ஈறை வளர்ப்பித்து, அதை வெந்த மாமிசம்போற்செய்து நோவை உண்டாக்கும். புப்புடம் என்பது வீக்கம்.

## 4-வது தந்தவித்திரதிரோகம்.

இது, ரத்தத்தினாலும் திரிதோஷத்தினாலும்பிறந்து, தந்தங்களின் உட்புறச் சதையிலாவது வெளிப்புறச் சதையிலாவது வீக்கமான கட்டிகளைப் பிறப்பிக்கும்; அப்போது அவைகள் நோவதும் எரிவதும் பழுத்து உடைவதும் சீழ் ரத்தம் ஒழுகுவதுமாக இருக்கும்.

## 5-வது தந்தசுஷிரரோகம்.

இது, ரத்தபித்தத்தினால்பிறந்து, ஈறுகளை வீங்கப்பண்ணி, அவைகளில் சிறு சிறு துவாரங்களை உண்டாக்கும். அப்போது அந்த இடத்தில் நின்றும் சொள்ளுச்சலம்போல் சலம்வடிதலும், அம் மாமிசத்தில் கெடுதியும் உண்டாக்கும். சுஷிரம் என்பது துவாரம்.

## 6-வது தந்தமகாசுஷிரரோகம்.

இது, முன்புசொல்லிய குணங்களை உண்டாக்குவதுந் தவிர, உடம்பில் சுரம், பல்லின்மாமிசம் ஊறுதல், அவ்விடத்தில் நின்றும் சீழும் ரத்தமும் வடிதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 7-வது அதிமாமிசரோகம்.

இது, பல்லின் வேர்ச் சந்துக்களில், ஆணியையொத்த கட்டிகளைப் பிறப்பிக்கும். இதனால், காதிலும் தாடையிலும் நோவுண்டாகும். பின்பு சுரமும் பிறக்கும். அக்கட்டிகள் உடைந்தால் மரணமே.

## 8-வது தந்தவிதர்ப்பரோகம்.

இது, தந்தமூலச் சதையைக் கரையப்பண்ணும். இதனால், பற்கள் அசைவதும் நோவதுமாக இருக்கும். விதர்ப்பம் என்பது, வித்தியாசம்.

## 9-வது வாததந்தமூலரோகம்.

இது, பல்லின் வேர்களையும் அங்குள்ள ரத்தங்களையும்கறுக்கப் பண்ணும். இதனால் அந்த இடத்தில் காற்றுப்படில், கூசவதாக இருக்கும்.

## 10-வது பித்ததந்தமூலரோகம்.

இது, பித்தமானது தந்தங்களில் வேரில் பிரவேசிக்கும் போது பிறந்து, அவ்வேர்களையும் அதில் உள்ள ரத்தத்தையும் மஞ்சள்நிறமாக் குவதுந்தவிர, எரிச்சலையும் உண்டாக்கும்.

## 11-வது சிலேஷ்மதந்தமூலரோகம்.

இது, பல்லின்வேர்களை வெளுப்பாக்கி அவ்விடத்தில் மாறுது சீழ் வடியச்செய்யும். இதனால், சிலிசிலிப்பும் உபத்திரவமும் உண்டாகும்.

## 12-வது திரிதோஷதந்தமூலரோகம்.

இது, வாதமுதலிய மூன்றுரோகங்களுக்குள்ள குணங்களையும், அவைகளால் பிறக்கும் உபத்திரவங்களையும் உண்டாக்கும்.

## 13-வது க்ஷததந்தமூலரோகம்.

இது, பல்லுகளைப் பிடுங்குதல், அல்லது அவைகள் வேறுமுகாந்தரமாக அடியுண்டு முறிபுதல் முதலியவற்றால், அவ்வேர்களறுபட்டுக் காயம் உண்டாகும்போது பிறக்கும்; அப்போது ஈறிலும் தாடையிலும், நோவுடன்வீக்கம் குத்தல் நரம்பின்வழிகளில் சிலேபோடல், சுரம்முதலிய குணங்கள் உண்டாகும்.

ஆக, தந்தமூலரோகம் 13-ம் முற்றியது.

---

## அசாத்தியதந்தரோகநிதானம்.

எவ்விதத் தந்தரோகத்திலாவது நீண்டிருக்கின்ற வேரின்நுனிகளில் விரணம் பிறந்தாலும், சீழ்வடிந்தாலும், சிலேஷடிறைலும், சருமமும் மாமிசமும் அழுகிவிழுந்தாலும், அசாத்தியமாம். இக்குணங்கள் இல்லாத ரோகம் சாத்தியமாம். இதனைத் தந்தருடி எனவுஞ்சொல்வர்.

மேற்சொல்லிய தந்தமூலரோகங்களைக் கண்டங்கத்திரி வித்துப் புகை, லவுங்கப்பட்டைத்தயிலம், மரக்காரை ஆதியான சப்ததிரவியக் குடிநீர் முதலிய சிகிச்சைகளினால் நிவிர்த்திசெய்யவேண்டும்.

## ஜிக்வாரோகபேதம்.

நாவில், வாதஜிக்வா கண்டகரோகம் ஆதியாக உபஜிக்வாரோகம் ஈறாக 6-விதரோகம் பிறக்கும். ஜிக்வா என்பது நாக்கு.

## 1-வது வாதஜிக்வாகண்டகரோகம்.

இது, நாக்கு முழுவதும் வெடித்தல், அவ்வெடிப்புகளில் முள்ளுகள் தைத்ததுபோல் அருருதல், மரத்தல், பழுத்த இலையைப்போ லிருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது பித்தஜிக்வாகண்டகரோகம்.

இது, நாக்கு முற்றிலும் காங்கையைக்கொண்டு சிவப்பாக்கி, அதில் மாமிசநிறமான சிறுசிறுகொப்பிளங்களை உண்டாக்கும்; அப்போது நாவில் மழுங்கியமுள்ளுகள் நிறைந்ததுபோல் இருக்கும். இதனை அகத்தியர் முதலிய பதினெண்ணூட்டுச் சித்தர்கள்செய்த சாஸ்திரங்களில், கந்ததாளி ரோகமென்றும்; இது, மூலாதாரம், நாபி, இருதயம், கண்டம், நாக்கு ஆகிய இவ்வைந்துஸ்தானங்களைப்பற்றிப் பிறக்கின்றதென்றும்; அவ் அவ் இடங்களைப்பற்றி, ஐந்துவிதப் பெயர்பெறுமென்றும் சொல்லப் படுகின்றன. இது அட்சரம் என உலகத்தில் சாதாரணமாக வழங்கப் படுகின்றது. இந்தரோகம் கந்ததாளி நெய்யினால் நிவிர்த்தியாகும்.

## 3-வது சிலேஷ்மஜிக்வாகண்டகரோகம்.

இது, நாவெல்லாம் இலவ முள்ளுகளைப்போல் தடித்தும் வெளுத்தும் நெருங்கியும் நோவைத்தருகின்றதான கொப்பிளங்களைஉண்டாக்கும்.

## 4-வது ஜிக்வாலஜகரோகம்.

இது, சிலேஷ்ம பித்தங்களைக்கொண்டு, நாவின்கீழ் வீக்கத்தை உண்டாக்கும். இதனால், நாவுமரத்துத்தடித்து உயருவதுமன்றி, அவ்வீக்கம்பழுத்தால் புலால்நாற்றம் வீசுவதும் மாமிசங் கரைவதுமாகஇருக்கும்.

## 5-வது அதிஜிக்வாரோகம்.

இது, அடிநாவின்கீழ் நுனிநாவைப்போல் நடித்த வீக்கத்தை உண்டாக்கும். இதனால், மரத்தல், விருத்தல், அந்த இடத்தில் சிறுசிறு முளைகளைப்போல்கொப்பிளம் எழும்புதல், தினவும் நோவும் அதிகரித்தல்,

வாயில்காங்கையான சொள்ளுச்சலம்வடிதல், புசிக்கக்கூடாமை என்னும் இக்குணங்கள் உண்டாகும். இந்த ரோகத்தினல் வார்த்தையும் கெடும்.

## 6-வது உபஜிக்வாரோகம்.

இது, உண்ணாக்கில் வீக்கத்தை உண்டாக்கும்; அப்போது முன்பு சொல்லிய அதிஜிக்வா ரோககுணங்களும், இருமலும், அருகுதலும், உண்டாகும். இதனை உண்ணாக்கென்பர். ஆக ஜிக்வாரோகம் 6-ம் முற்றியது. இது குங்குமம், வெள்ளுள்ளித்தயிலம் முதலிய அவுஷதங்களால் தீரும்.

## தாளுரோகபேதம்.

தாடைக்கு உட்புறத்தில், தாளுபிடகம், தாளுகளசுண்டி, தாளுசம்ஹதி, தாளாற்புதம், தாளுகச்சபம், தாளுபுப்புடம், தாளுபாகம், தாளுசோஷம் என 8-வித ரோகம்பிறக்கும். தாளு என்பது தாடை.

## 1-வது தாளுபிடகரோகம்.

இது, வாதாதிக்கத்தைக்கொண்டு, தாடைக்கு உட்புறமாமிசத்தில் சுறசுறப்பான தடிப்பையும், வெளியில் கடினத்துவமான வீக்கத்தையும் உண்டாக்கும். இதனால், வாயில் சொள்ளுச்சலம் வடிதலும், அவ்விடத்தில் கொப்பிளம் எழும்புதலும், தாளின் அடியில்நோதலும் உண்டாயிருக்கும்.

## 2-வது தாளுகளசுண்டிகாரோகம்.

இது, தாடையின் உட்புறமூலத்தில் உண்ணாக்கைப்போல் தடித்தலை உண்டாக்கி, புலால்வாசக்கோழையை விழப்பண்ணும். இதனால், தாடைமீது மினுமினுப்புடன் மிருதுவானவீக்கம் எழும்பித்தொங்குதல், புசித்த அன்னபானதி நாசியால்விழுதல், கண்டத்தின்மார்க்கம் அடைபடல், தாகம், வர்ந்தி, இருமல் என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 3-வது தாளுசம்ஹதிரோகம்.

இது, தாடையினது உட்புறநடுவில் நோவில்லாமல் துர்மாமிசம் வளரும்படிக்குச் செய்யும். இது தாடையின் உட்புறத்தையெல்லாம் துர்மாமிசத்தைக்கொண்டு நிறைப்பதால், தாளுசம்ஹதிரோகம் எனப்பேர் பெற்றது.

சம்ஹதி என்பது சமூகம்.

## 4-வது தாளாற்புதரோகம்.

இது, தாடைக்கு உட்புறத்தில், விரிந்த தாமரைப் பூவைப்போல் வட்டவடிவான சிவந்தவீக்கத்தை உண்டாக்கும்.

## 5-வது தாளுகச்சபரோகம்.

இது, சிலேஷ்மத்தைக்கொண்டு, தாடையின் நடுவில் ஆமையினது உருவத்தைப்போல் தடிப்பை உண்டாக்கும். அது நாளுக்குநாள் கபத்தினுல் அதிகரிப்பதும் நோவதுமாக இருக்கும்.

## 6-வது தாளுபுப்புடரோகம்.

இது, தாடையின் உட்புறநடுவில், சிலேஷ்மத்தினுலும், மேதோதாதுவினுலும் இலந்தைப்பழப் பிரமாணரூபங்களை ஒத்ததாய்நோவின்மையான வீக்கத்தை உண்டாக்கி, அதனை நிலைக்கப்பண்ணும்.

## 7-வது தாளுபாகரோகம்.

இது, பித்தத்தைக்கொண்டு, தாடையின் உட்புறத்தை விரணமாக்கி, அதில் நின்றும் சீழும், நோவும் உண்டாகும்படிக்குச் செய்யும்.

## 8-வது தாளுசோஷரோகம்.

இது, வாதத்தினுலும். பித்தத்தினுலும் சுரத்தினுலும் தேகம் மிகவும் மெலிந்தகாலத்தில் பிறந்து, ஒரு தாடையையாவது இரண்டு தாடையையுமாவது உலர்த்தி, ஒடுக்குவிழுந்ததுபோல் செய்யும். இதற்குப் பாதரசமருந்து நன்மையைத்தரும். ஆக தாடைரோகம் 8-ம் முற்றியது.

## கண்டரோகபேதம்.

கழுத்தில், கண்டவாதரோகணிரோகம் ஆதியாக நாதக்கினரோகம் ஈறுக 18-வித ரோகம்பிறக்கும். கண்டம் என்பது கழுத்து.

## 1-வது கண்டவாதரோகணி.

இது, கழுத்திற்கு உட்புறத்தில் தூர்ம்மாமிசமுளைகளை முளைப்பித்து அம்மார்க்கத்தை அடைத்து, நாவை ஆடவொட்டாமற் செய்யும். இதனுல், நெஞ்சும் வாயும் உலரல், கண்டத்திலும் செவியிலும் நோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும். ரோகணி என்பது முளைக்குதல்.

## 2-வது கண்டபித்தரோகணி.

இது, கழுத்திற்கு உட்புறத்தில், மூங்கில்போத்தைப்போல் துர்மாமிசத்தைப் பிறப்பிக்கும். இதனால், அந்த இடத்தில் அதிகநோவுடன் புகைகம்மியதுபோலிருத்தல், மேலில் தொடக்கூடாத உபத்திரவம், சுரம், காங்கை, தாகம், சோருதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 3-வது கண்டசிலேஷ்மரோகணி.

இது, கண்டத்திற்கு உட்புறத்தில், தடித்த துர்மாமிசத்தைப் பிறப்பிக்கும். இதனால், ஆமணக்கின் நெய்யைப்போல் வாயில்மாறாது சலம்வடிதலும் தேகவெளுப்பும் உண்டாகும்.

## 4-வது கண்டரத்தரோகணி.

இது, கண்டத்திற்கு உட்புறத்தில் துர்மாமிசத்தைப் பிறப்பித்து அதில் சரிநெருப்பை ஒத்த கொப்பிளங்களை நிறைப்பிக்கும், இதனால், காதுக்குள் நோவும் பித்தரோகணி ரோககுணங்களும் உண்டாகும்.

## 5-வது கண்டதிரிதோஷரோகணி.

இது, சண்டத்திற்கு உட்புறத்தில் கண்ட வாதரோகணி, கண்ட பித்தரோகணி, கண்ட சிலேஷ்ம ரோகணி என்னும் இவைகளுக்குள்ள குணங்களையெல்லாம் உண்டாக்கும், இந்த ரோகம் நாட்சென்று பழுத்துடையும்.

## 6-வது கண்டசாலிகரோகம்.

இது, சிலேஷ்ம கதியை அடைந்த வாதபித்தத்தைக் கொண்டு கழுத்திற்கு உட்புறத்தில் சாதிக்காயைப்போல் திரட்சியான வீக்கத்தை உண்டாக்கி, அதன்மேல் நெல்வாலை ஒத்த முள்ளுகளை முளைப்பித்து, கழுத்தைத் திருப்பக் கூடாமையாகச் செய்யும். சாலிகம் என்பது நெல் முள்ளு.

## 7-வது களபிருந்தரோகம்.

இது, கழுத்தி லிரண்டு பக்கங்களிலும், சமூகமாயும் வட்டவடிவாயும் உயர்ந்ததாயும் இராநின்ற துர்ம்மாமிசத்தை வளர்ப்பிக்கும். இதனால், அக்கண்டத்துவாரம் அடைபடுதல், தாகம், சுரம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். பிருந்தம் என்பது கூட்டம்.

## 8-வது துண்டகேரிகாரோகம்.

இது, கண்டத்திற் குட்புறத்து அநுசந்திகளில் பருத்திக்காயைப் போல் கெட்டியாய் மினுமினுத்த வீக்கத்தை உண்டாக்கும். இதனால், அற்ப உபத்திரவம் உண்டாகும். துண்டகேரிகா என்பது பருத்திக்காய்.

## 9-வது களஓகரோகம்.

இது, கண்டத்திற்கு உள்ளிலும் வெளியிலும் பார்ப்பதற்குப் பயங்கரமான வீக்கத்தை உண்டாக்கும். இதனால், அம்மார்க்கத்தில் ஆப்பு அடித்ததுபோல் இருத்தல், சிரோபாரம், சோம்பல், சொள்ளுச் சலம் வடிதல், சுரம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். ஓகம் என்பது சமூகம். இதுவே, இன்னும் நீளமாக உயர்ந்து அதிக நோவில்லாமல் கழுத்தைச் சுற்றிலும் வீங்கினால், வலேபரோகம் எனப் பெயர்பெறும்.

## 10-வது அலாபுகரோகம்.

இது, கழுத்திற் குட்புறத்தில் திரிதோஷத்தால் புடைகள் பிறப்பதுபோல் அடியகன்ற சிறிய சுரைப்பிஞ்சை ஒத்த மாமிச கண்டத்தை ஒன்றாயேனும் பலவாயேனும் பிறப்பிக்கும். இதனால், அதிநோவும், பிரயாசையின்மேல் சுவாசமும் உண்டாகும். அலாபுகம் என்பது சுரைக்காய்.

## 11-வது சதக்கினிரோகம்.

இது, கண்டத்திற்கு உட்புறத்தில் விருத்தியடைந்து, துர்மாமிசத்தைக் கொண்டு, பலா முள்ளுகளை ஒத்த முள்ளுகள் நிறையப்பட்டபெரிய இருப்புத் தண்டத்தைப்போல் கழுத்தை வீங்கப்பண்ணும். இதனால் மிகுந்த உபத்திரவமும் தாகமும் சுரமும் தலைநோவும் நீங்காமலே இருக்கும். சதக்கினி என்பது முட்கள் நிறைந்த ஒருவித இருப்புத் தண்டமாம். இதனை ஆயுத சாஸ்திரத்திற் கண்டு கொள்க.

## 12-வது களவித்திரதிரோகம்.

இது, கழுத்துமுற்றிலும் விரைவில் வீக்கத்தை உண்டாக்கும். இதனால், அதிகநோவும், பழுத்தால் துர்க்கந்தச் சீழும் உண்டாகும்.

## 13-வது களார்ப்புதரோகம்.

இது, நாவின் முடிச்சிலும் அடிக்கழுத்திலும், நோவில்லாத வீக்கங்களை உண்டாக்கும். அவை திரிதோஷத்தால் பழுக்காமலே இருக்கும்.

ஒருவேளை பழுத்து உடைந்தால், அதில் நின்றும் குழம்பான ரத்தம் ஒழுகும்.

## 14-வது வாதகளகண்டரோகம்.

இது, வாதகபத்தினாலும் மேதோதாதுவினாலும், கழுத்திற்கும் தாடைக்கும் இடைவெளியில் வளியைப்போல் நோவில்லாத மாமிச மொத்தையைத் தொங்கப்பண்ணும், இது எந்தப் பக்கத்திலாவது, பிறக்கும். *கண்டம் என்பது தாடை இதனைப் புரைக்குழை என்பர்.

## 15-பித்தகளகண்டரோகம்.

இது, கண்டத்திற்கு உள்ளிலும் தாடைக்கு உள்ளிலும் விரணமான புடைகளைப் பிறப்பிக்கும். அப்புடைகள் கருமையாயும் செம்மையாயும் படரும். இதனால், நோவு அதிகரிப்பதும் உரிசை கெடுவதுமாக இருக்கும்.

## 16-வது சிலேஷ்மகளகண்டரோகம்.

இது, முற்கூறிய ஸ்தானங்களில் மிகு விரணமான புடைகளைப் பிறப்பிக்கும். ஆனால் அப்புடைகள் வெளுத்துச் சில்லிட்டு நிலைத்து நமைச்சலுடன் விருத்தி அடைவதும் வாயில் இனிப்புண்டாவதுமாக இருக்கும்.

## 17-வது மேதோகளகண்டரோகம்.

இது, மேற்சொன்ன ஸ்தானங்களில், விரணப்புடைகளைப் பிறப்பிக்கும். அப்புடைகளோ என்றால், அதிகரிப்பதும் சாந்தியை அடைவதுமாக இருக்கும். இதனால், தேகம் ஸ்தூலித்தல், வாயால் கோழை விழுதல், கண்டத்தில் ஒரு சத்தம், ஈனத்தொனி என்னும் இக் குணங்கள் உண்டாகும்.

## 18-வது சுரக்கினிரோகம்.

இது, கண்டத்திற்குள்ளிலும் தாடைக்குள்ளிலும் படருகின்ற விரணப்புடைகளைப் பிறப்பித்து, தொனியை அடக்கும். அப்புடைகளோ என்றால், அதிகரிப்பதும் சாந்தியை அடைவதுமாயிருக்கும். இதனால், நோவு நின்று நித்திரைபிடிக்கில் பெருமூச்சுவிடுதல், கபங்கக்கல், நெஞ்சுலரல், ஈனத்தொனி என்னும் இக்குணங்கள் உண்டாகும். சுரம்

---

* இதிலுள்ள ககரம், சமஸ்கிருதபாஷையில் ககரவருக்கத்தின் மூன்றாவது எழுத்தாம்.

என்பது தொனி; கினி என்பது அடித்தலையுடையது. மேற்கூறிய கண்டரோகங்களை, ரசத்தயிலம், கந்தக ரசாயனம், பாதரசமெழுக்கு, சாதிலிங்கப்புகை முதலிய அவுஷதங்களைக்கொண்டும். விரணச் சிகிச்சைகளைக்கொண்டும் வசப்படுத்தவேண்டும்.

ஆக கண்டரோகம் 18-ம் முற்றியது.

---

## சர்வமுகரோகபேதம்.

வாய்முழுதிலும் வாத முகபாகரோகம் ஆதியாக ஊர்த்துவ குத ரோகம் ஈறுக எண்வகை ரோகம் பிறக்கும்.

### 1-வது வாதமுகபாகரோகம்.

இது, வியான வாயுவைக்கொண்டு, வாய்க்குள் சிவப்பான விரணத்தைப் பிறப்பிக்கும்; அப்போது அவைகள் அடங்கி அடங்கி உண்டாவதும், அவ்விரணத்தால் உதடுகள் சொறசொறத்து உப்புவதும், நாவு கனத்து வெளுத்து வெடிப்பதும், இதனுல் காரம் படக்கூடாமல் வாயானது முள்ளுப் பொத்துக் கொண்டதுபோல் அருகுவதுமாக இருக்கும்.

### 2-வது பித்தமுகபாகரோகம்.

இது, பித்தத்தைக்கொண்டு, வாய்க்குள் நெற்பானை ஆவியைப்போல் புகையை எழுப்பும். இதனுல், வாயில் அடிபட்ட காயம்போல் சகிக்கக் கூடாத நோவும் நாவில் கசப்பும் ஒருவேளை உப்புக்கரிப்பும் உண்டாகும்.

### 3-வது சிலேஷ்மமுகபாகரோகம்.

இது, கபத்தைக்கொண்டு, நாவில் வழுவழுப்பான விரணத்தைப் பிறப்பிக்கும். அதனுல், நாவில் தினவும், புண்ணும், வாயினிப்பும் உண்டாகும்.

### 4-வது திரிதோஷமுகபாகரோகம்.

இது, வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் மூன்று முகபாகரோகங்களுக்குள்ள குணங்களையெல்லாம் வாயில் உண்டாக்கும்.

### 5-வது ரத்தமுகபாகரோகம்.

இது, பித்த முகபாகரோகத்தை ஒத்திருக்கும். ஆனுல், வாய்க்குள் ரத்தம்போல் சிவந்திருமாத்திரம் ஒன்று அதிகமாக உண்டாகும்.

## 6-வது பூத்தியாசியரோகம்.

இது, நெஞ்சில் துர்க்கந்தத்தை உண்டாக்குவதும் அல்லாமல், பற்களைக் கறுக்கச்செய்து, குச்சியினால் பல்விளக்கக்கூடாத நோவையும் அருவருப்பையும் மாறாது உண்டாக்கும்.

## 7-வது கண்டாற்புதரோகம்.

இது, கண்டத்திற் பிறந்த விரணவேகம் கபாலத்தில் அடிபடுவதால் பிறக்கும். இதனால், அங்கிருக்கும் கபமாகிய கோழைச்சலம் கறுத்தாவது வெளுத்தாவது நாசிவழியாலேனும் தொண்டைவழியாலேனும் மாறாது விழுந்துகொண்டே இருக்கும். இது ரணச்சிகிச்சையாலும் தீரும்.

## 8-வது ஊர்த்துவகுதரோகம்.

இது, தொப்புளின்கீழிருக்கும் அபானவாயுவானது, மூலரோகத்தினாலாவது, குன்மரோகத்தினாலாவது, சிலேஷ்மரோகத்தினாலாவது, மேல்நோக்கி ஏறும்போது பிறக்கும். அவ்வாயுவு மல சலாதிகளில் தோய்ந்து மேல்நோக்கலால், வாயில் துர்க்கந்தம் உண்டாகிக்கொண்டே இருக்கும். இது, வாய்க்குக் குதத்தொழிலைப் புரிவிப்பதால், ஊர்த்துவகுதரோகம் எனப்பேர்பெற்றது.

ஆக சர்வமுகரோகம் 8-ம் முற்றியது.

---

## முகரோகசாத்தியாசாத்தியநிதானம்.

முகரோகம் 75-ல், ரத்தோஷ்டம், அற்புதோஷ்டம், மாமிசோஷ்டம், சலாற்புதோஷ்டம், தந்தகராளம், தந்தசியாவம், தந்தசுகூஷிரம், தந்தமகாசுகூஷிரம், வாததந்தமூலம், பித்ததந்தமூலம், சிலேஷ்மதந்தமூலம், திரிதோஷதந்தமூலம், க்ஷததந்தமூலம், ஜிக்வாலஜகம், உபஜிக்வாரோகம், தாளுபிடகம், தாளுவற்புதம், தாளுகச்சபரோகம், கண்டரத்தரோகணி, களபிருந்தம், களௌகரோகம், வலையரோகம், சதக்கினி, களாற்புதம், களகண்டம், சுரக்கினி, ஊர்த்துவகுதம் ஆக 27-வித ரோகமும் கஷ்டத்தின்மேல் ஒருவருஷத்திற்குப்பின்பு சாத்தியமாம். மற்ற 48-விதரோகமும் ஆபுதமுதலிய வைகளினால் சரியான சிகிச்சைசெய்யில், சாத்தியமாம்.

## சிரோரோகநிதானம்.

புகை, வெய்யில், பனி, நித்தியமைதுனம், அதிநித்திரை, நித்தி ரைப்பங்கம், சதாசலத்திலாடிதல், கீழ்க்காற்று, கண்ணீரையடக்குதல், ஓயாத அழுகை, மிகுந்தசலபானம், அப்படியே மத்தியபானம், கிருமி சேருதல், பதினாலுவேகத்தை மறித்தல், சகிக்கக்கூடாத கன உஷ்ண முள்ளவாசனையை முகருதல், வெகுவார்த்தை ஆகிய இச்செய்கைகளி னால், வாதபித்தகபங்கள் அதிகரித்து, சிரோரோகத்தை உண்டாக்கும்.

## சிரோரோகபேதம்.

மேற்கூறிய காரணங்களைப்பற்றி, சிரசில், வாத சிரஸ்தாபரோகம் ஆதியாகச் சூரியாவர்த்தரோகம் ஈறாக, 10-விதரோகம் பிறக்கும்.

## 1-வது வாதசிரஸ்தாபரோகம்.

இது, வாதாதிக்கத்தினால் நெறிகளில் சடவாத்தியம் வாசிப்பது போல் அதிரல், கண்ணும் புருவமும் நெற்றியும் இற்றுவிழுவதுபோல் தெறித்தல், வெளிச்சத்தைப் பார்க்கக்கூடாமை, தலை சுழற்றலுடன் நோதல் காதிரைச்சல் கீல்கள்தளரல், நரம்புகள் புடைத்து உப்புதல், நாசியிற்சலம்வடிதல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும், இக்குணங் கள் காரணம் இல்லாமலே அதிகரிப்பதும் குறைவதுமாயிருக்கும். இது, தொக்கிடம், லேபனம், பூச்சு, பால்வேது, பொட்டணம் முதலிய சிகிச்சை களினால் சாந்தமாம். ஸ்தாபம் என்பது உபத்திரவம். இதுவே வாதத் தலைவலியாம்.

## 2-வது பித்தசிரஸ்தாபரோகம்.

இது, தலையில் புகைகம்மியதுபோலிருத்தல், சுரம், வியர்வை, கண்ணெரிச்சல், மூர்ச்சை முதலிய குணங்களைப் பாதிராத்திரியி லுண் டாக்கும். இதுவே பித்தத்தலைவலியாம். இதற்குச் சோசாதகித்தயில மாகும்.

## 3-வது சிலேஷ்மசிரஸ்தாபரோகம்.

இது, சிரோபாரம், குத்தல், சரீரம்முழுதுங்கடுத்தல், மூர்ச்சை அரோசகம், வாந்தி, கண்கள் உப்பலோடுநோதல், காதுக்குள் நமைச் சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இதுவே கபத்தலைவலியாம்.

## 4-வது திரிதோஷ சிரஸ்தாபரோகம்.

இது, வாதம் முதலிய மூன்று சிரஸ்தாபரோக குணங்களையெல்லாம் ஒரேகாலத்தில் உண்டாச்கும். இதுவே திரிதோஷத் தலைவலியாம்.

## 5-வது ரத்தசிரஸ்தாபரோகம்.

இது, பித்த சிரஸ்தாபரோக குணங்களைப்பார்க்கிலும் அதிதுர்க் குணங்களை உண்டாக்கி, வேதனையைச் செய்யும். இதுவே உதிரத்தலை வலியாம்.

## 6-வது அர்த்தபேதரோகம்.

இது, ஒருபக்கத்திலுண்டாகி, வாதசிரஸ்தாப ரோககுணங்களைப் போல் வேதனையைச் செய்வதுந்தவிர, 15-நாளுக்கொருதரம், அல்லது மாதத்திற்கு ஒருதரம் அதிகரிப்பதும், தானே சாந்தியை அடைவது மாயிருக்கும். இந்தரோகம் எப்பக்கத்தில் அதிகரிக்கின்றதோ அப் பக்கத்து நேத்திரம்கெடும். அல்லது அப்பக்கத்துக் காதாவது செவிடாகும். இதை ஒற்றைத்தலைநோவென்றுஞ் சொல்வர். இது, சிரசில் ஒரு பக்கத்தைப் பேதிப்பதால், அர்த்தபேதம் எனப் பேர்பெற்றது. இதனை நாணல்தயிலம், சந்தனத்தயிலம் முதலிய சிகிச்சைகளினால் விலக்கவும்.

## 7-வது கிருமிசிரோரோகம்.

இது, சங்கிரணபோஜனத்தினால் திரிதோஷத்தை அதிகரிக்கச் செய்து சிரசில் இருக்கும் ரத்த மாமிசத்தைக் கரைத்து, கிருமிகளைப் பிறப்பிக்கும். அக்கிருமிகள் உதிரத்தைப் பானம்பண்ணும்போது அச் சிரசில் கோரமான வேதனை உண்டாகும். இதனால், மண்டைவறளல், மரத்தல், வீக்கம் பிளந்துபோவதுபோல் இருத்தல், மிகுந்த எரிச்சல், துர்க்கந்தம், நாசியிற் சலம்வடிதல், தாடையில் சிவந்தநிறத்துடன் நமைச்சல் உண்டாகிப் பின்பு அது வெளுத்தவீக்கமாக எழும்புதல், காதிரைச்சல், சுரம், இருமல், துர்ப்பலம், மனச்சலச்சம் என்னும் இச்குணங்கள் உண்டாகும்.

## 8-வது சிரக்கம்பரோகம்.

இது, புசிக்கின்ற ரசாதிவஸ்துக்களால், திரிதோஷங்களானவை சிரசிலிருக்கும் நரம்பு முதலியவைகளை அநுசரிக்கும்போது, பிறக்கும். இதனால், தலைநடுக்கம் உண்டாகும். கம்பம் என்பது நடுக்கல். இதனை

பாஷமாகிய உழுந்துத்தயிலத்தினாலும், ஒஷதித்தீநீரினாலும் விலக்கலாம்.

## 9-வது சங்கரோகம்.

இது, பித்தத்தில்கூடிய வாத சிலேஷ்மங்களினால், இரண்டுநெறிகளிலும் சிவந்த வீக்கத்தைப் பிறப்பிக்கும். அப்போது அதில் எரிச்சல், நோவு, சுரம், தாகம், சோருதல், பிரமை, பிரலாபம், முகத்தில் மஞ்சள் நிறம், வாய்கசத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது, பழுத்து உடைந்தால், மூன்று தினத்துக்குள் மரணத்தைக்கொடுக்கும். ஆனால், தீவிரச் சிகிச்சையால் சாத்தியப்பட்டாலும்படும். சங்கம் என்பது நெறி.

## 10-வது சூரியாவர்த்தரோகம்.

இது, வாயுவானது பித்தத்தில்கூடி, இரண்டு நெறி, கண், புருவம், நெற்றி ஆகிய இடங்களில் வியாபிக்கும்போது பிறக்கும். இதனால், சூரிய உதய காலத்தில் சிரசில்மிகுந்த உபத்திரவம் உண்டாகும். அது, வெய்யிலேற ஏறப்பிரபலப்படுவதும், சூரியன்சாய்ந்தால் சாந்தம் அடைவதுமாக இருக்கும். இவ்வாறே, தினந்தினமுப்போராடும். இவ்வெண்ணம் உண்டாவது எழுநாயிறு என்றும், இதில் சஞ்சரிக்கின்ற வாயுகபத்துடன் சேர்ந்தால், மாலைக்காலத்தில் உபத்திரவ முண்டாகி, பாதிராத்திரிக்குப் பின்பு சாந்தியை அடைவது படுநாயிறு என்றும், தேரையர் சாஸ்திரம் கூறுகின்றது. இந்தப்படுநாயிறையே சந்திராவர்த்தம் எனப் பாகிடாசாரியம் என்கிற சாஸ்திரம் சொல்லுகின்றது. இது, அசுவகந்திபலா லாக்ஷாதயிலம், அரக்குச்சந்தனாதித்தயிலம், அரக்குத்தயிலம், கருஞ்செம்பைத்தயிலம், ஆதொண்டைத்தயிலம், முதலியவைகளில் ஏதேனும் ஒன்றைச் சூரிய உதயமாவதற்கு முன்னம் ஸ்நானம் செய்வித்துப் புளி இல்லாப் பத்தியம் கொடுக்கில் சந்தேகம் அற நிவிர்த்தி ஆகும்.

ஆக சிரரோகம் சிரஸ்தாபரோகம் எனவும் கூறிய,
தலைவலி ரோகம் 10-ம் முற்றியது.

---

## கபாலரோகபேதம்.

கபாலத்தில், உபசீரிஷம், மூர்த்தபிடகம், சிரோற்புதம், சிரோவித்திரதி, அருப்ஷிகை, தாருணம், இந்திரலுத்தம், சலதி, பலிதம் என

9 வித ரோகம் பிறக்கும். இவற்றுள், சலதிரோகத்தில், வாத பித்த கப திரிதோஷங்களால் 4 - பிரிவும், பலிதரோகத்தில், இவ்விதம் 4 - பிரிவும் உண்டு.

## 1-வது உபசீரிஷரோகம்.

இது, கபாலவாயுவைக் கொண்டு, கருப்பஸ்திரிகளின் சிரசில் வீக்கத்தை உண்டாக்கும். அவ்வாறே வயிற்றிலிருக்கும் சிசுவுக்கும் உண்டாகும்; அப்போது சிதோஷ்ண கிகிச்சையால் தாய்க்கு உபசரிக்கில், சிசுவுக்கும் சவுக்கியமாகும். உபம் என்பது இரண்டு; சீரிஷம் என்பது தலை.

## 2-வது மூர்த்தபிடகரோகம்.

இது, வாதத்தினால் உச்சந்தலையில் கட்டிபோல் வீக்கத்தை உண்டாக்கும்.

## 3-வது சிரோற்புதரோகம்.

இது, பித்தத்தால் கபாலத்தில் ஆச்சரியமான வீக்கத்தை உண்டாக்கும்.

## 4-வது சிரோவித்திரதிரோகம்.

இது, கபத்தால் கபாலத்தில் வித்திரதியைப்போல் வீக்கத்தை உண்டாக்கும்.

## 5-வது அருமஷிகைரோகம்.

இது, பித்தத்தினால் கபாலமூளை கரையும்போது பிறக்கும். இதனால், கபாலத்தின்மீது ரத்தத்தினாலாவது, கபத்தினாலாவது, கிருமிகளினால் ஆவது தினையைப்போலும் கடுகைப்பொலும் அநேக கொப்பிளங்கள் உண்டாகும். அருமஷிகை என்பது பரவுதலை உடைய விரணமாம்.

## 6-வது தாருணரோகம்.

இது, சிலேஷ்ம வாதங்களினால் பிறந்து, கபாலத்தில், தினவு மயிர் உதிரல், சொறசொறத்தல், சருமப்பொட்டுகள் உதிரல் மிகு நித்திரை முதலிய குணங்களை உண்டாக்கும். தாருணம் என்பது பயத்தைத் தருதல்.

## 7-வது இந்திரலுத்தரோகம்.

இது, பித்தமானது ரோமத்துவாரங்களில் வியாபித்து வாதத்துடன் கூடுங்காலத்தில் பிறக்கும். இதனால், கபாலத்திலிருக்கும் ரோமமெல்லாம் உதிரும்; அத்தருணத்தில் சிலேஷ்மமானது ரத்தத்துடன் கூடும். இவ்வண்ணமாகப் பித்தம் முதலியவைகள் ரோமத்துவாரங்களை அடைவதால், உதிர்ந்தரோமம் முளைக்கமாட்டாதென்றறிக. இந்திரலுத்தம் என்னும் ஒரு எரிப்பூச்சியானது பயிர் முதலிய பச்சிலைகளை எப்படி எரித்து ஒன்று மில்லாமல் செய்துவிடுமோ, அவ்வண்ணமே இது ரோமக்கால்களைக் கெடுப்பதால், இந்திர லுத்தரோகம் எனப் பேர்பெற்றது.

## 8-வது கலதிரோகம்.

இது, முற்கூறிய இந்திரலுத்த ரோககுணத்துடன் ரோமங்களை உதிரப் பண்ணுவதும் அன்றி, கபாலத்தைமூடிய சருமத்தின்மேல் வழுவழுப்பான ஒரு மழுங்கலை உண்டாக்கும். இது, வாதத்தால் பிறந்தால் அச் சருமம் அக்கினியால் சுட்டாறிய வடுப்போல் மச்சத்தைப் பெற்றிருக்கும்; பித்தத்தால் பிறந்தால், முற்கூறிய குணத்துடன் அவ்விடத்து நரம்புகளில் நின்றும் வியர்வைச்சலம் கசியப்படும்; சிலேஷ்மத்தால் பிறந்தால் அச் சருமமானது மிகவுங் கடினமாயிருக்கும்; திரிதோஷத்தால் பிறந்தால், அச் சருமமெல்லாம் நகத்தினது நிறம்போல தோற்றுவதும் தவிர, அதில் மாறாத எரிச்சலும் உண்டாகும். கலதி என்பது மழுங்கலாக்குவதாம்.

## 9-வது பலிதரோகலக்ஷணம்.

அதிக துக்கம், கனகோபம், மிகுபயம், கடிமுதலியவற்றாலடிபுண்டல், சதாசிந்தனை, பலவித வேலைபான உழைப்பு, மனச் சஞ்சலம், தேககாங்கை ஆகிய இவைகளினால் உண்டான வெப்பமானது, தேகம் முற்றிலும் வியாபித்து, சிரசைப்பற்றி ஏறி, அங்குள்ள கபாலரோமங்களின் வேர்களை யெல்லாம் வேகும்படிக்குச்செய்து நரையைஉண்டாக்கும், அப்போது அம்மயிர்கள் வாதத்தால் நரைத்தால் முறைத்ததுடன் முனை பிளந்து கொஞ்சங் கருமை நிறத்தையும், நகங்களின் நிறத்தையும்பெற்று, தொட்டால் வெப்பத்தைத் தருவதாயிருக்கும். பித்தத்தால் நரைத்தால், செம்மை பீதம் என்னும் நிறங்களைப் பெற்றிருப்பதன்றியும்

அந்த ரோமக்கால்கள் தோறும் எரிச்சலும் உண்டாகும். சிலேஷ்மத்தால் நரைத்தால், அம்மயிர்கள் வெள்ளிக்காசைப்போல் வெளுத்தும் மினுமினுத்தும் நரை அதிகரித்தும் இருக்கும்; ஆனால், நரைக்குமிடங்களில் நமைச்சல் உண்டாகும். திரிதோஷத்தால் நரைத்தால், வாத முதலிய மூன்று ரோகங்களுக்குள்ள குணங்களெல்லாம் இதில் உண்டாயிருக்கும். பலிதம் என்பது நரை. ஆக கபாலரோகம் 9-ம் முற்றியது.

## அசாத்திய கபாலரோகநிதானம்.

முன்சொன்ன கபாலரோகம் ஒன்பதுக்குள், கபாலசருமம் புரை புரையாக உதிர்ந்து அந்த இடத்தில் உபத்திரவங்கள் உண்டாயிருக்கின்ற ரோகமும், சரீரம் பழுத்ததினால் பிறந்த நரைரோகமும் அசாத்தியமே. ஆனால், இந்த ரோகங்கள் காய கல்பம் என்னும் அவுஷதங்களினால் ஏழு பது வயதிற்கு மேற்படாதவர்களுக்குச் சாத்தியமாம். இவ்வித ரோகிகள் ரச வருக்கங்களையே விரும்புவார்கள் என்றறிக.

பன்னிரண்டாவது கர்ணரோக படலம் முற்றியது.

---

# 13-வது விரணபேதபடலம்.

---

## விரணபேதம்.

தேகத்திலுண்டாகின்ற விரணமானது இருவகைப்படும். அவை யாவன:—வாதம், பித்தம், சிலேஷ்மம், தொந்தம், திரிதோஷம் என்னுமிவைகளினால் பிறக்கின்றவிரணங்கள் ஒருவகை: இதற்கு நிசவிரணம் என்றுபெயர்; காயங்களினால் உண்டாகின்றது ஒருவகை: அதற்கு ஆகந்துகவிரணம் என்றும், சத்தியோவிரணம் என்றும் பெயர். இவ்விருவகை விரணங்களின் குணங்களினால், அவைகளைத் துஷ்டவிரணம் என்றும், அதுஷ்ட விரணம் என்றும் கூறப்படும். அதன்விவரம்:—என்றைக்கும் ஆறாதிருப்ப தெதுவோ அதுவே துஷ்டவிரணமாம். சீழ், ரத்தம், சிலேத்தண்ணீர் முதலியவைகளைக் காட்டிக்கொண்டிருந்தாலும், சில காட்பொறுத்துச் சிகிச்சைகளினால் ஆறப்படுவது எதுவோ, அதுவே அதுஷ்டவிரணமாம். இவைகள் 65-விதப்படும். அவையாவன:-

துஷ்டவிரணம் 15; அதுஷ்டவிரணம் 49; சுத்த ரத்தத்தால் பிறக்கின்றவிரணம் ஒன்று என்பனவாம்.

## துஷ்டவிரணபேதம்.

இது, ஒவ்வொருவேளை, வாயை மூடியும் திறந்தும், கெட்டிப்பட்டும் மிருதுவாயும், உலர்ந்தும் உலராமலும், எரிச்சலைத்தருவதும், குளிர்ச்சியைத் தருவதும், சிவப்பதும், கறுப்பதும், வெளுப்பதும், துர்க்கந்தச்சீழைவடிப்பதும், சிலவேளை, ரத்தம் சீழ் நரம்பு என்னும் இவைகளில், துர்வாசனையை வீசுவதும், வியர்வையைத்தருவதும், நெடுநாள் சென்றும் ஆறுததும், ஒருவேளைநோவு, வீக்கம், நமைச்சல் முதலிய குணங்களைப் பிறப்பிப்பதுமாக இருக்கும். இது வாத பித்தசிலேஷ்மங்களினாலும் ரத்தத்தினாலும் அந்த ரத்தத்தைச் சேர்ந்த வாதாதிகளினாலும் 15-விதப்படும்.

### 1-வது வாததுஷ்டவிரணம்.

இது, கறுப்பு, சிவப்பு, எலும்பு, சாம்பல், புறு, கருமைவெண்மை கலத்தல் ஆகிய இந்நிறம் உள்ளதாக இருக்கும். இதில்வருகிற சலமானது புன்செய்த் தானியத்தையும், மாமிசத்தையும், கழுவிய சலம்போலவும், தெளிந்த மோர்ச்சலம்போலவும் கொஞ்சங் கொஞ்சமாக வடியும். இதனால், அவ்விடத்து மாமிசக்கரைதல், நோதல், குத்தல், வறளல், உள்ளில் சிடுசிடுப்பாகிய ஒரு சத்தம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

### 2-வது பித்ததுஷ்டவிரணம்.

இது, சீக்கிரத்தில் பிறந்து, மஞ்சள், கறுப்பு, கருமை செம்மை கலத்தல், வெண்மை செம்மை கலத்தல் ஆகிய இந்நிறங்கள் உள்ளதாக இருக்கும். இதில் வருஞ் சலம், கோமூத்திரம்போலவும், முருக்கம் பூச் சாம்பல் கழுவிய சலம்போலவும், எண்ணெய்யைப்போலவும், சூடுகையுடன் அதிகமாக ஒழுகும், ஆனல் அவ்விடத்தி லுப்புச்சலத்தைத் தெளித்ததுபோ லெரிச்சல், காயம்பட்டதுபோல் நோதல், அனலில்வெந்த மாமிசம்போல் சிவத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

### 3-வது சிலேஷ்மதுஷ்டவிரணம்.

இது, நமைச்சலுடன் வெளுத்தும் கெட்டியாக உயர்ந்தும் உஷ்ணத்தைப்பெற்று, நரம்புகளில் சிலைபோலவெடிப்பும் இருக்கும். இதில்

வருகிற சலமானது, வெளுத்துப் பிசினைப்போல் குழம்பாக விஸ்தாரம் வடியும், அப்போது கொஞ்சம் குத்தலோடுங்கூடிய நோவும் உண்டாகும்.

## 4-வது வாதபித்ததுஷ்டவிரணம்.

இது, வாததுஷ்ட விரணத்தினாலும், பித்ததுஷ்ட விரணத்தினாலும் பிறக்கின்ற துர்க்குணங்களை யெல்லாம் உண்டாக்கும்.

## 5-வது வாதசிலேஷ்மதுஷ்டவிரணம்.

இது, வாததுஷ்ட விரணத்தினாலும், சிலேஷ்மதுஷ்ட விரணத்தினாலும் பிறக்கின்ற குறிகளையெல்லாம் விரைவில் உண்டாக்கும்.

## 6-வது சிலேஷ்மபித்ததுஷ்டவிரணம்.

இது, சிலேஷ்மதுஷ்ட விரணத்தாலும், பித்ததுஷ்ட விரணத்தாலும் பிறக்கின்ற குணங்களை யெல்லாம் உண்டாக்கும்.

## 7-வது திரிதோஷதுஷ்டவிரணம்.

இது, வாதம் பித்தம் சிலேஷ்மம் என்னும் 3-துஷ்டவிரணங்களின் குணங்களை யெல்லாம் உண்டாக்கும்.

## 8-வது ரத்ததுஷ்டவிரணம்.

இது, பவளத்தைப்போலவும் ரத்தத்தைப்போலவும் நிறத்தைப் பெற்றுப் பித்த துஷ்ட விரணக்குறிகளையெல்லாம் பெற்றிருப்பதுமன்றி, குதிரை லாயத்தில் உண்டாகின்ற வாசனையையும் வீசும்.

## 9-வது ரத்தவாததுஷ்டவிரணம்.

இது, பவளத்தைப்போலும் கரியைப்போலும் நிறமுள்ளதாயிருக்கும். இதில் நின்றும் ரத்தம்போலும், தயிர்ச்சலம்போலும் சிலைத்தண்ணீர் ஒழுகும். இதனால், குத்தலும் வாந்தியும் உண்டாகும்.

## 10-வது ரத்தபித்ததுஷ்டவிரணம்.

இது, உதிரநிறமாயும் மஞ்சள்நிறமாயுமிருக்கும். இவ்விரணத்தில் நின்றும் கோமூத்திரம்போலும் ரத்தம்போலும் சலம்ஒழுகும். இதனால், எரிச்சலும் விறுவிறுப்பும் உண்டாகும்.

## 11-வது ரத்தசிலேஷ்மதுஷ்டவிரணம்.

இது, வெளுத்தும் சிவந்துமிருக்கும். இதில்நின்றும் சீழும் ரத்தமும் ஒழுகும். இதனால், விக்கமும் வாந்தியும் உண்டாகும்.

## 12-வது ரத்தவாதபித்ததுஷ்டவிரணம்.

இது, ரத்தவாதத்திற்கும் ரத்தபித்தத்திற்குமுள்ள குறிகளுடனிருக்கும்.

## 13-வது ரத்தவாதசிலேஷ்மதுஷ்டவிரணம்.

இது, ரத்தவாதத்திற்கும் ரத்தகபத்திற்கும் உள்ள குறிகளுடனிருக்கும்.

## 14-வது ரத்தசிலேஷ்மபித்ததுஷ்டவிரணம்.

இது, ரத்தகபத்திற்கும் ரத்தபித்தத்திற்கும் உள்ள குறிகளுடனிருக்கும்.

## 15-வது ரத்ததிரிதோஷதுஷ்டவிரணம்.

இது, ரத்தவாத துஷ்டவிரணமுதலிய மூன்றுவிரணக் குறிகளைப் பெற்றிருக்கும். இவைகளை விரணபேதநிறத்தினாலும், இன்னும் பற்பல பரீட்சையினாலும் அதிநுட்பத்துடன் நிதானித்து இவைகட்குச்சாத்திய சிகிச்சைகளைச் செய்யவேண்டும். ஆக, துஷ்டவிரணம் 15-ம் முற்றியது.

## அதுஷ்டவிரணபேதம்.

அதுஷ்டவிரணமானது, ரசதாது, ரத்ததாது, மாமிசதாது, மேதோதாது, அஸ்திதாது, மச்சதாது, சுக்கிலதாதென்னும் சப்ததாதுக்களையும் பற்றி ஒவ்வொருதாதுவுக்கு எவ்வேழுவிதமாகப் பிறந்து 49-விதப்படும். அவையாவன:—ரசவாததாதுஷ்டவிரணம், ரசபித்ததாதுஷ்டவிரணம், ரசசிலேஷ்மாதுஷ்டவிரணம், ரசவாதபித்தாதுஷ்டவிரணம், ரசவாதசிலேஷ்மாதுஷ்டவிரணம், ரசசிலேஷ்மபித்தாதுஷ்டவிரணம், ரசதிரிதோஷாதுஷ்டவிரணம் என்பனவாம். இவ்வண்ணமாகவே, வாதாதிதோஷங்களினால் மற்றைய ஆறுதாதுக்களினின்றும் பிறக்கின்ற 42-விதமான அதுஷ்ட விரணங்களையும் பண்டிதர்கள் கூர்ந்தறியவேண்டும். இவ்வகை விரணங்களெல்லாம், *பத []வாடைக்கட்டு, அரசம்பட்டை

* பதம் என்பது சோறு ; [] ஆடை என்பது சீலை.

முதலிய துவர்ப்புட்டடைச்சஷாயநீர், நாசப் வெசம் மிருதாரசிங்கு இவை களின்பல்மோதசம், துத்தியிலைவெந்நீர் ஒத்திடம், சடுகு பெருங்காயம் முதலிய பூச்சு, விரணாசப்புகை, இளங்காரத்திரி, டாதரசச்சளிம்பு, *தேவதூபக்களிம்பு, பூரப் ()படங்கு, சாதிலிங்கச்சுழுப்பு, சவுரிபெழுகு, சிலைத்தயிலம், விரணசஞ்சீவித்தயிலம், ஊமூலாற்றி எண்ணெய்முதலிய அவுஷதங்களினாலும் க்ஷத்திரக்ஷாராக்கினிச் சிகிச்சைகளினாலும் நிசேஷமாக நிவிர்த்தியாகும்.

## சுத்தரத்தவிரணம்.

இது, கொப்பிளாகாரமாய் நடுவில் உயர்ந்து, உபத்திரவம் இல்லாமல் மிருதுவுடன் வழுவழுத்து, தொட்டால்சுடுகை உள்ளதாய், நாவினது நிறத்தையும் சரிநிறத்தையும் பெற்றிருக்கும். இதற்கு ஆயுதச்சிகிச்சை சாத்தியாசாத்தியத்தைத்தரும். ஆக 65-விரணங்களும் முற்றியது.

## விரணஸ்தானபேதம்.

சருமம், மாமிசம், பெருநரம்பு, சிறுநரம்பு, கீல், எலும்பு, வயிறு, மர்மஸ்தானம் என்னும் இவ் வெட்டும் விரணஸ்தானங்களாம். இந்தஸ் தானங்களைப்பற்றி விரணம் பிறக்கில், முறையே ஒன்றுக்கொன்று கஷ்ட சாத்தியங்களாக முடியும். இவைநிற்க, வாதம் பித்தம், சிலேஷ்மம், ரத்தம் என்னும் இவைகளால் பிறக்கின்ற விரணங்களுக்கு முறையே குத்தலும், எரிச்சலும் வீக்கமும், வாந்தியும், தொந்த திரிதோஷங்க ளுக்கு முற்கூறிய நான்கு தோஷகுணங்களின்மிசிரமும் உண்டாகும்.

## சாத்தியவிரண நிதானம்.

சரீரபலமும், மாமிசபுஷ்டியும், ரத்தபுஷ்டியும், அக்கினிபுஷ்டியும், வாலிபமும் உள்ளவர்கட்கு விரணம்பிறந்தால் சுகசாத்தியமாம்.

## கஷ்டசாத்தியவிரண நிதானம்.

தொடை, யோனி, குதம், ஆண்குறி, உதடு, முதுகு, உள்வாய், தாடை, கண், கடைக்கண், பல்லு, நாசி, பெருநரம்பு, சிறுநரம்பு வயிறு, காது, விலா, அக்குள், தனம் என்னுமிந்த இடங்களில்வட்டமாக உயர்ந்து

---

* தேவதூபம் என்பது குங்கிலியம்; () படங்கு என்னும்சொல் பதங்கம் என வழங்கப்படுகின்றது.

மூன்றுமூலை நான்குமூலை உள்ளதுகளும், நுரையுடன் கலங்கினதுகளும், கொழுப்பும் எலும்பும் தெரிவதுகளும், பகந்தர விரணத்தைப்போல் உள்முகத்தை உடையதுகளுமாகப் பிறந்த விரணங்களும், குஷ்ட விரணங்களும், விஷத்தால்பிறந்த விரணங்களும், துஷ்டவிரணங்களும், மதுமேகவிரணங்களும், பிரயாசத்தின்மேல் கஷ்டசாத்தியமாம்.

## அசாத்தியவிரண நிதானம்.

விசர்ப்பி, சுரம், அதிசாரம், காசம், சுவாசம், க்ஷீணமதுமேகம், அஸ்திசிராவரோகம் என்னும் ரோகங்கள்கண்டு, அவைகளவுஷதங்களால், சாத்தியமாகாமல் நீடித்து, சரீரத்தை மிகவும் கிரிசிக்கச்செய்திருக்கையில் விரணம் பிறந்தாலும், விரணத்தின்மேல் விரணம்விறந்தாலும், விரணத்தின்மேல் கனமாக அடிபட்டுமேற்றோல் உரிந்தாலும், தயிர்த்தண்ணீர்போல் சலம்வடிந்து சிறுநரம்புகள் அழுகிப் பெருநரம்புகளில் சிலையோடினாலும், விரணத்தில் குழிகள்விழுந்து அவைகளில் கிருமிகள் சனித்துக்கொண்டே இருந்தாலும், எலும்புகள்நொறுங்கி அவைகள் கண்ணுக்குத்தோற்றித் துர்க்கந்தம்பிறந்து இன்னவிதவிரணமென அறியக்கூடாமையாயிருந்தாலும், கட்டுகட்டக்கூடாமலும் சிலையெண்ணெய்க்கு விருத்தியடைதலும் சொறசொறத்தலும் அதில் ரோமங்கள் முளைத்தலும் வீக்கம் அதிகரித்தலும் உள்ளதாயிருந்தாலும், முள்ளைப்போல் நீளம் நீளமாகவெடித்துப் புருநிறத்தையும் கடினத்தையும் சலவறளலையும் பெற்றிருந்தாலும், கொஞ்சம்பழுக்கில் மிருந்தவேதனை, வெகு ஆயாசம், அந்தவிரணத்தின்மேல் சிறுசிறுமுட்டைகள்போல் துர்ம்மாமிசம் எழும்புதல், நடுவில்நமைச்சல், சதாசீழ்வடிதல் என்னும் இக்குணங்கள் இருந்தாலும், அவ்விரணங்கள் அசாத்தியமே.

## விரணபக்குவ நிதானம்.

வாதம், பித்தம், சிலேஷ்மம், தொந்தம், திரிதோஷம் என்னும் இவைகள் ரத்தத்தோடு கூடியகாலத்தில் பிறந்த விரணங்களானவை, க்ஷத்திரக்ஷாராக்கினியாதி அவுஷதங்களால் சாத்தியமுகம் ஆகும் தருணத்தில் இருக்கும் குறிகளாவன:—விரணங்கள்சிவத்தல், அவ்விடத்து ரோமவேர்நைதல், ஓரத்தில்வரம்புகட்டி அற்பக்குழிபோல் தோற்றல், பின்பு கறுத்தநிறம்வருதல், நல்ல ரத்தம்வடிதல், வீக்கமும் நோவும் மட்டிடல், சருமத்தின்மீது முன்பு உள்ள சுபாவநிறம் பிறக்குதல், விரணத்

தைக் கையால் பிடித்துப்பார்த்தால் கெட்டியாகத்தோற்றல் என்னும் இவைகளாம். இக்குணங்கள் உண்டாகில், சீக்கிரத்தில் ஆறும் என்றறிக.

## இனி சத்தியோவிரணபேதம்.

கல்லு தடி முதலியவைகளினால் அடிபடுதல் விழுதல் என்னும் இவைகளினால் சத்தியோவிரணம்பிறக்கும். அது, கிருஷ்டவிரணம் ஆதியாக, விதளிதவிரணம் ஈறாக, 8-விதப்படும்.

சத்யோ என்பதற்குப் பொருள் உடனே என்பதாம்.

### 1-வது கிருஷ்டவிரணம்.

இது, முள்ளு, கட்டைக்குச்சு, கொம்பு, தடி முதலியவைகளினால் காயம்படுவதினாலும், உராய்ப்படுவதினாலும் உண்டாகி, கொஞ்ச ரத்தக் கசிவுடன் கூடினதாய் ஆறுதிருக்கும். கிருஷ்டம் என்பது உராய்தல்.

### 2-வது அவகர்த்தவிரணம்.

இது, கிருஷ்டவிரணவிருத்தியினால் பிறக்கும்' இதனால் விரணத்தில் குழிவிழும். அவகர்த்தம் என்பது குழி. இதுவே குழிப்புண்ணாம்.

### 3-வது விச்சின்னவிரணம்.

இது, அவகர்த்தவிரணவிளைவினால் பிறக்கும், இதனால், அவ்விரணம் துண்டுதுண்டாய் அறுபட்டதுபோல் இருக்கும்.

### 4-வது பிரவிளம்பிவிரணம்.

இது, விச்சின்னவிரண அதிகரிப்பில் நின்றும் பிறக்கும். இதனால், எலும்புகள் வெளியில்தோற்றப்படும். இது, எலும்பைநன்றாகத்தெரியப் படுத்தலால் பிரவிளம்பி விரணம் எனப் பேர்பெற்றது.

### 5-வது நிபாதிதவிரணம்.

இது, பிரவிளம்பி விரண விபரீதத்தால் பிறக்கும் ; அப்போது நடுவில் கொஞ்சம் எலும்பைத் தெரியும்படிக்குவைத்து மற்றைய இடத்தை எல்லாம் தூர்மாமிசம் விழுந்து மறைக்கும். நிபாதிதம் என்பது விழுதல்.

### 6-வது வித்தவிரணம்.

இது, முற்கூறிய முள்முதலியவைகள் தவிர, கல்முதலியவைகளால் அடிபுண்டகாலத்தில் பிறந்து,விஷமிக்கும். வித்தம்என்பது அடிபுண்டல்.

## 7-வது பின்னவிரணம்.

இது, யுத்தகாலத்தில் அல்லது சுபாவகாலத்தில் ஆயுதங்களினால் பிறந்து உபத்திரவத்தை உண்டாக்கும். பின்னம் என்பது துண்டித்தல்.

## 8-வது விதளிதவிரணம்.

இது, ரத்தம் ஒழுகிக்கொண்டிருக்கின்ற விரணத்தைப் பிடித்து அழுத்தப்படுதலினாலும், கல்லு முதலியவைகளால் அடிபடுதலினாலும் பிறந்து, உபத்திரவத்தைச் செய்யும். இதனால், எலும்புகள் நோதலும் விரணம்பருத்தலுமாக இருக்கும். விதளிதம் என்பது பிளக்கப்பட்டதாம். இவைகளுக்கும், முற்கூறிய அதுஷ்ட விரணச்சிகிச்சைகளையும், ஆயுதச்சிகிச்சைகளையும் செய்யவேண்டும்.

ஆக சத்தியோ விரணம் 8-ம் முற்றியது.

---

## பகந்தரவிரண லக்ஷணம்.

யானையேற்றம், குதிரை யேற்றம், எந்நேரமுங் குந்திக்கொண்டிருக்குதல், சதாகடின ஆசனத்திலுட்காரல், மூலவியாதிக்குக்காரணமான வஸ்துவையும், இந்த வியாதிபிறப்பதற்கேதுவான வஸ்துவையும், பிரீதி இல்லாதவஸ்துவையும் புசித்தல், அநுகூலவஸ்துவை நீக்குதல் ஆகிய இச்செய்கைகளினால் வாதாதிகள் அதிகரித்து, அடிவயிற்றுக்கும் மூத்திரப்பைக்கும் சமீபத்தில் இருக்கின்ற கெட்ட உதிரமாமிசங்களை ஒட்டி, உள்ளிலாவது வெளியிலாவது ஒரு அங்குலம் இரண்டு அங்குலம் அளவையுள்ள கட்டிகளைச்சேரச்சேர உண்டாகும்; அப்போ தவ்விடத்தில்வியர்வையும் விரணமும்பிறக்கும். இந்த நிதானத்தை அறிந்து உடனேயே வைத்தியம் பண்ணாவிடில், இது அல்குல் கீழ்வயிறு குதம் ஆகிய இடங்களில் விரைவில் துவாரங்களை உண்டாக்கி, அத்துவாரங்களின் வழியால், காற்றும் மலமும் மூத்திரமும் சுக்கிலமும் வெளிப்படும்படிக்குச் செய்யும். பகந்தரம் என்பது பிளத்தல். இதைப் பவுத்திரரோகம் என வழங்குகிறார்கள்.

## பகந்தரவிரணபேதம்.

பகந்தரவிரணமானது, வாதபகந்தரம் ஆதியாக ஆகந்துகபகந்தரம் ஈறாக 8-விதப்படும். இவற்றுள், ஆகந்துகபகந்தரத்தில் 8-பிரிவுண்டு

மேலும் இப்பகந்தரங்களினால் உண்டாகின்ற கட்டியானது உடையாமல் சொஸ்தமானால், கட்டி என்றுபெயர் பெறும்: உடைந்து வேரானது தூரத்தில் ஓடி உட்புறத்திலேயே விஸ்தரித்து வெளிப்புறத்திலும் தோன்றி நோவும் அதிகரிக்குமாகில், பகந்தரவிரணம் எனப்பெயர் பெறும்.

## 1-வது வாதபகந்தரவிரணம்.

இது, முற்கூறிய குதஸ்தானங்களில் கறுத்தும் சிவந்தும்பிறக்கும். இதனால் அந்த அடத்தில் விரிந்துபோவது போல் இருத்தல், குத்தல், அதிர்தல், நோதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 2-வது பித்தபகந்தரவிரணம்.

இது, புகைநிறத்துடன் சிவந்தும், நீண்டவுருவத்தில் மெலிந்தும், ஒட்டைக்கழுத்தைப் போல் உயர்ந்தும், தொட்டால் சுடுகையாயும் பிறக்கும். இதனால் தாபச்சுரமும்உண்டாகும்.

## 3-வது சிலேஷ்மபகந்தரவிரணம்.

இது, நிலைப்பெற்றவேருடன் வெளுத்தும் கனத்தும் வழுவழுத்தும் பிறக்கும். இதனால், அதிக நமைச்சல் உண்டாகும்.

## 4-வது வாதபித்தபகந்தரவிரணம்.

இது, கருமை செம்மை கலந்த முகத்துடன்பிறக்கும். இதனால், அந்த இடத்தில் சீழ்வடியும்போது ஒரு சத்தம் உண்டாகும்.

## 5-வது வாதசிலேஷ்மபகந்தரவிரணம்.

இது, வெளுத்தநிறமும் கொஞ்சம் கறுத்தநிறமும் உடை பிறந்து, கஷ்டத்தின்மேல் பழுத்து உடைவதாயிருக்கும்.

## 6-வது சிலேஷ்மபித்தபகந்தரவிரணம்.

இது, சிலேஷ்மபித்த பகந்தரக்குறிகளை உடையதாயிருக்கும்.

## 7-வது திரிதோஷபகந்தரவிரணம்.

இது, காலின்பெருவிரற் பிரமாணத்தையும் பற்பலநிறத்தையும் உடையதாகப்பிறந்து, அவ்விரணத்தில் எரிச்சலுடன் குத்தலையும் உண்டாக்கும்; அப்போது சுரமும்,அரோசகமும், தாகமும்,வாந்தியும்காணும்.

இனி, எண்வகை ஆகந்துக பகந்தரவிரணங்களைச் சொல்லுவாம்.

## 1-வது சதபோனகபகந்தரவிரணம்.

இது,முன்புசொன்ன பகந்தரக்கட்டிகள் பழுத்து உடைந்து ஒன்றோ டொன்றாய்க் கலக்குங் காலத்தில் பிறக்கும். இதனால் புற்றைப்போல் சிறு சிறு துவாரங்களை உள்ளவிரணங்கள் விருத்தியாகும். இதில் நின்றும், துர்க்கந்தச் சீழ்ரத்தம் வடிவதுமன்றி, சிலவேளை நுரையுடன் சுத்தசலம் வடிவதாயிருக்கும். சதம் என்பது நூறு; போனகம் என்பது புற்று.

## 2-வது உஷ்டரகிரீவபகந்தரவிரணம்.

இது, பித்தத்தால்பிறந்து, மிருகங்களுடன் ஒட்டைக்கழுத்தைப் போல் நீண்டிருக்கும்.

உஷ்டரம் என்பது ஒட்டை; கிரீவம் என்பது கழுத்து.

## 3-வது பரிசிராவிபகந்தரவிரணம்.

இது, சிலேஷ்மாதிக்கத்தால் பிறந்து, அத்துவாரங்களில் நின்றும் வெந்து நைந்து கரைந்த நொய்ய வஸ்துக்களைப்போல் சீழை ஒழுகச் செய்யும். பரிசிராவி என்பது ஒழுகுதல்.

## 4-வது பரிக்ஷேபிபகந்தரவிரணம்.

இது, வாதபித்தத்தினால்பிறந்து, அகழிபோல் ஆசனத்தைச் சுற்றிலும் துவாரங்களை உண்டாக்கி, ரத்தமுதலியவைகளை ஒழுகச்செய் யும்.

பரிக்ஷேபி என்பது நாலுபுறத்திலும் துவாரங்களை உண்டாக்குவதாம்.

## 5-வது ருசுபகந்தரவிரணம்.

இது, வாதபித்தத்தினால்பிறந்து, குதவளையங்களை ஒட்டிஒழுங் கான துவாரங்களை உண்டாக்கி, சீழை ஒழுகுவிக்கும்.

ருசு என்பது ஒழுங்கு.

## 6-வது அரிசோபகந்தரவிரணம்.

இது, முற்கூறிய ருசுபகந்தரத்தில் வியாபித்த வாதபித்தங்கள் மிக வும் அதிகரிக்குங்காலத்தில் பிறக்கும். இதனால், ஆசனவளையத்தினது அடியில் வீக்கமும் நமைச்சலும் எரிச்சலும் உண்டாகும். அவ்வீக்கம் பழுத்து உடைந்தால், அதில்நின்றும் வருகின்ற புளித்தசலமானது நடக்

கும்போதும் இருக்கும்போதும் ஒழுகிக்கொண்டேயிருக்கும். அரிசோ என்பது மூலம். இதனை மூலபகந்தரம் எனவும் சொல்வர்.

## 7-வது சம்புகாவர்த்தபகந்தரவிரணம்.

இது, திரிதோஷத்தால் பிறந்து, ஆசனஸ்தானத்தில் நத்தையோட்டுச் சுழியைபோல் துவாரங்களை உண்டாக்கும்; அப்போது நடந்தால் அந்த விரணமானது அறுபடுவதுபோல் இருக்கும். சம்புகா என்பது நத்தையோடு; ஆவர்த்தம் என்பது சூழல்.

## 8-வது க்ஷதசபகந்தரவிரணம்.

இது, மேற்கூறிய பகந்தர விரணங்களை ஆயுதத்தாலாவது கயிற்றாலாவது அறுக்கையில் சன்னநரம்புகள் அறுபட்டு வெளிப்படும்போது துர்ம்மாமிசம் வளர்ந்து, முன்பு இருந்த குதஸ்தானம்போலவே விருத்தியாகுங்காலத்தில் பிறக்கும். அதன் விவரம்:—முன்பு அறுபட்டுக் காயமான மரர்க்கத்தில் துர்ம்மாமிசம் சுருக்காக வளர்ந்து வெளிப்பட்டுச் சீழினால் மிகவுங் கொழுத்துக் குதறப்படும். அப்படி வளர்ந்த மாமிசத்தில் நின்றும் கிருமிகள் உண்டாகிக் கத்தியினால் கொய்ததுபோலவே ஆசன ஓரம் முற்றிலும் தின்றுவிடும். இதனால் தினவும் எரிச்சலும் நோவுமுண்டாகும். இக்குணங்கள் சகல பகந்தர ரோகங்களுக்கும் பொதுவாக விருக்கும். ஆதலால் இவ்விரணங்களைச் சத்திரம் செய்யும்போது உபாயத்துடன் செய்து சவுக்கியம் பண்ணவேண்டும்.

ஆக ஆகந்துகபகந்தரவிரணம் 8-ம் முற்றியது.

---

## சாத்தியாசாத்தியபகந்தரவிரணம்.

ஒரு ஒரு தோஷத்தால் பிறந்த பகந்தரவிரணம் 3-ம், இரண்டு இரண்டு தோஷத்தால் பிறந்த பகந்தரவிரணம் 3-ம், தாமதத்தின்மேல் சாத்தியமாம். திரிதோஷ பகந்தரவிரணமும், க்ஷதசபகந்தரவிரணமும் அசாத்தியமாம். ஆகந்துகபகந்தரங்களுக்குள், எக்கோமும், சீழ் ரத்தத்தை வடிப்பதும், குதவளையங்களில் முளைப்பதும், நரம்பைப்பற்றியிருப்பதுமாகிய பகந்தரவிரணங்கள் அசாத்தியமாம். இவைக்குச் சப்தாசனரசப்பட்டங்கு முதலிய மருந்தும் ஆயுதச்சிகிச்சையும் நலஞ்செய்யும்.

## சித்தர்மதாந்தரம்.

### பகந்தரரோகபேதம்.

சித்தர்கள், இதனைப்பவுத்திரரோகம் எனக் கூறுவர். இது, ஆசன பவுத்திரம், கொடிபவுத்திரம், பக்கபவுத்திரம், மூலபவுத்திரம், கிரந்திபவுத்திரம், மேகபவுத்திரம், ஆசனக்கண்டமாலை, சரக்கண்டமாலை, என எண் வகைப்படும்.

### 1-வது ஆசனபவுத்திரரோகம்.

இது, சுரம், சரீரமெலிவு, சர்வாங்கத்தினவு, நோவு, ஆசனங்குத்துதல், கடுக்குதல், கட்டிகாணல், மயக்கம், சீழும் ரத்தமும் ஒழுகுதல், மலத்தில் ரத்தங்கலந்திருத்தல், என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 2-வது கொடிபவுத்திரரோகம்.

இது, ஆசனநரம்புகள் புடைத்து, அடிகனத்து செட்டியைப்போல் கட்டிகாணல், பருத்திக்கொட்டையைப்போல் பல துவார முண்டாதல், துர்க்கந்த நீர்வடிதல், நரம்புகள் அழுகுதல், அதன் வழியில் மலசலம் நழுகல், தேகம்வெளுத்தல், என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 3-வது பக்கபவுத்திரரோகம்.

இது, பீஜங்களின் நடுநரம்பின் கீழ் நரம்பைப்பற்றி, ஆசனத்தருகில் ஒருபக்கத்திலேனும் இரண்டு பக்கங்களிலேனும் கட்டி எழும்புதல், ரத்தம் விழுதல், நீர் சுருங்குதல், நீர்கசிதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 4-வது மூலபவுத்திரரோகம்.

இது, ஆசனங்கடுத்தல், குத்தல், நோவு, விரிந்துபோவதுபோலிருத்தல், கீழ்ஸ்தானநரம்புகளில்வீக்கம், அடிகனத்து அகன்று முனைசிறுத்து, கருணை முளைபோல் கட்டி எழும்புதல், ரத்தம் ஒழுகுதல், சலம் வடிதல், ஆசனம் வெளிப்பட்டு முளை தோன்றுதல் என்னும் இக் குணங்களை உண்டாக்கும்.

### 5-வது கிரந்திபவுத்திரரோகம்.

இது, ஆசனத்தில் மிக்க உபத்திரவத்துடன் கட்டி எழும்புதல், ஆசன நரம்புகளில் நீர் சுரத்தல், கோசத்தின் கீழ்ப்பக்கம் வீங்குதல்,

அவ் விரண்டு ஸ்தானங்களில் விரண முண்டாகுதல் நீர்க்கசிவு என்னும் இக் குணங்களை உண்டாக்கும்.

## 6-வது மேகபவுத்திரரோகம்.

இது, அதி நீரிறங்குதல், விதையின்கீழ்க் கட்டியுண்டாகுதல், சீழும், பனிச்சலமும்போல் ஒழுகுதல், சரீரகனதி, நோவு, குளிர், சுரம், மயக்கம், உணவு கொள்ளாமை, கை, கால், கண் எரிவு, நாளுக்குநாள் தேகம் மெலிவு என்னும் இக் குணங்களை உண்டாக்கும்.

## 7-வது ஆசனக்கண்டமாலைரோகம்.

இது, ஆசன வளையத்தைச்சுற்றிலும், மிகுந்தகுத்தலையும், பொறுக்க முடியாத நோவையுங்கொண்டு, வரிசையாகப் பல கட்டிகள் தடித்து எழும்புதல், அக்கட்டிகளில், பெரிதும் சிறிதுமாக அனேக துவாரங்கள் விழுந்து மலசலம் கசிதல், நமைச்சல், எரிவு, ரத்தம் வடிதல், சுரம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 8-வது சரக்கண்டமாலைரோகம்.

இது, ஆசனம் வீங்குதல், துவாரம் நெருங்குதல், கருணை முளை போன்ற கட்டியுண்டாகுதல், ரத்தமும் சீழும் பொசிதல், அத்துர்நீர் பட்ட இடங்களில் பாணம், புற்றின் துவாரம், இவைகளைப்போல் வரிசை வரிசையாய்க் கட்டிகள் காணுதல், அழுகிய நாற்றம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

ஆக பகந்தரரோகம் 8-ம் முற்றியது.

## அசாத்தியா சாத்தியலக்ஷணம்.

கொடிபவுத்திரம், ஆசனக்கண்டமாலை, சரக்கண்டமாலை, ஆக 3-பவுத்திர ரோகங்களும் அசாத்தியமாம். மற்ற 5-ம் சாத்தியமாம். சிகிச்சா சாரத்திற்கூறிய முறைப்படிச் சிகிச்சை செய்யில் அசாத்தியரோகங்களும் சாத்தியம் ஆவது உண்டு.

மகாந்தரம் முற்றியது.

## கிரந்திபேதம்.

சிலேஷ்ம பிரதானங்களால், முற்கூறிய விரணஸ்தானங்களிலாவது, மற்றைய ஸ்தானங்களிலாவது வாதகிரந்தி ஆதியாக ரணக்கிரந்தி ஈறாக 9-விதக்கிரந்தி பிறக்கும். கிரந்தி என்பது நரம்புகளின் முடிச்சு.

### 1 - வது வாதகிரந்தி.

இது, கறுத்தும், காரணமில்லாமலே விருத்திபடைந்தும், அப்படியே குறைந்தும், குத்தலையும் அதிரலையும் உடையதாகப் பிறக்கும். இது, பழுத்து உடைந்தால், மிகு சிவப்புள்ள சுத்தரத்தம் ஒழுகுவதும், அவ்விரணம் மிருதுவை அடைவதுமாக இருக்கும்.

### 2 - வது பித்தகிரந்தி.

இது, மஞ்சள் நிறத்தையும் சிவப்புநிறத்தையும் பெற்றுச் சதா எரிச்சலுடன் பிறக்கும். பழுத்துடைந்தால் சூடுசையான ரத்தமும் சீழும் ஒழுகும்.

### 3 - வது சிலேஷ்மகிரந்தி.

இது, வெளுத்தும் கனத்தும் நமைச்சலுடன் அதிக நோவில்லாமல் வீக்கத்தைத்தருவதாய்ப் பிறக்கும். பழுத்து உடைந்தால், இதில்நின்றும் குழம்பான சீழ் ஒழுகிக்கொண்டே இருக்கும்.

### 4 - வது ரத்தகிரந்தி.

இது, திரிதோஷங்களினால் ரத்ததாதுவானது கெடுதியை அடைந்து மிகவும் பொங்கிக் கொதிக்கும்போது, அதில் உண்டாகின்ற நுரைகளினால் சனித்த கிருமிகள் தமது மூக்கினால் கிண்டுங்காலத்தில் பிறக்கும். இக்கிரந்தி மாமிசத்தையும் நரம்பையும் அநுசரித்துப் பித்தகிரந்திக்குள்ள குறிகளுடன் உதிரத்தை வடியப்பண்ணும்.

### 5 - வது மாமிசகிரந்தி.

இது, மாமிசத்தை விருத்திபண்ணுகின்ற இறைச்சி முதலிய தின்டிகளால் பிறந்து, மினுமினுத்தும் பருத்தும் கெட்டியாய் நரம்புகளால்

சுற்றப்பட்டும் இருக்கும். இது பழுத்துடைந்தால், கபக்கிரந்திக்குணங் களைத்தரும்.

## 6-வது மேதோகிரந்தி

இது, மேதோதாதுவை யதிகரிக்கச்செய்கின்ற ரசாதிவஸ்துக்களை விசேஷம் புசித்தலால், அது விருத்தியடையும்போது வாயுவின் கோபத்தினால் மாமிசத்திலாவது சருமத்திலாவது பிறந்து, வெளுப்பதும் வழுவழுப்பதும் மினுமினுப்பதும் குலுங்குவதுமா யிருக்கும். இது பழுத்து உடைந்தால், சீழானது பிசினைப்போல் குழம்பாகக் கறுத்தும் சிவந்தும் வெளுத்தும் ஒழுகும். இக்கிரந்தி விருத்தி க்ஷீணமாயிருப்பதால் தேகம் இளைக்கும்.

## 7-வது அஸ்திகிரந்தி.

இது, எலும்புகள் நொருங்கலாலும், அபிகாதத்தினாலும் உண்டாகிப் பருத்து உயருவதும், கொஞ்சம் அமுங்குவதுமாக இருக்கும்.

## 8-வது நரம்புக்கிரந்தி.

இது, வெகுதூரமுள்ள வழியை ஒரேநடையாக நடந்துவந்து, அந்த வேகம் தணிவதற்குமுன் மிகு சீதளசலத்தில் ஸ்நானம் செய்தலாலும், வெகு சஞ்சாரத்தினாலும், வெடியுப்பிற் சனித்த அட்டுப்பிற் சேர்ந்த உணவுகளினாலும், நரம்புகள் உப்பி உட்புறத்தில் தடிக்க, இதனால் ரத்த தாதுவானது ஓட்டம் இல்லாமல் தேங்கும்போது பிறக்கும். அதன் விவரம், அப்படிக்குத் தேங்கிய ரத்தத்தோடு கூடிய நரம்புகளை வாயு சுட்கப்பண்ணி உலர்த்தி வக்கிரமாக முடங்கச்செய்து, அம்முடக்குகளில் கெட்டிப்பட்டதுகளாய் நோவில்லாத நரம்புகளை வெளியில் வரப்பண்ணும். இதனை நரம்புச்சிலந்தி எனவும் வழங்குவர்.

## 9-வது விரணகிரந்தி.

இது, ஆறு ரசவருக்கங்களையும் மட்டுமிதம் இன்றி நித்தியமும் புசித்தலினால் பிறக்கும். அதன்விவரம்:—அந்த ரசமானது தேகத்தில் அற்பவிரணம் உண்டாயிருந்தாலும் அதைப்பிரபலப்படுத்தும், அல்லது இல்லாதிருந்தாலும் சிலநாளைக்குள் மாமிசஸ்தானங்களில் அம்மாமிசத்தையே கண்டுகொண்டாக எழுப்பும்; அப்போது வாயுவானது நிரோதுவா

க்கறுத்தரத்தத்தை வெளிப்படுத்தாமல் அவ்விடத்திற் சேர்த்து உலர்த்துதலால், விரணங்கள் உண்டாகும். இதனல், எரிச்சலும் தினவும் அதிகரிக்கும். இது, மிகவும்பருத்து உயர்ந்தால், அற்புதகிரந்தி எனச்சொல்லப்படும். இவைகளை மேகாந்தத்தயிலம் முதலிய அவுஷதங்களினுலும், விரணச்சிகிச்சைகளினுலும் வசப்படுத்தவேண்டும்.

ஆக கிரந்தி 9-ம் முற்றியது.

---

## சாத்தியாசாத்தியகிரந்தி நிதானம்.

வாதம், பித்தம், சிலேஷ்மம், ரத்தம், மேதோதாது ஆகிய இந்த ஐந்தினுல் உண்டாகின்ற கிரந்திகள் சாத்தியமாம்; பருத்துக்கெட்டிப்பட்டு அதிர்ந்துகுலுங்குகின்ற கிரந்திகளும், மர்மஸ்தானம், கண்டம், வயிறு இவ்விடங்களில் பிறக்கின்ற கிரந்திகளும் அசாத்தியமாம்.

## அற்புதகிரந்திபேதம்.

அற்புதகிரந்தி என்பது, முற்கூறியவாதகிரந்திமுதல் மேதோகிரந்தி ஈருன ஆறுவிதக்கிரந்திகளின் குணங்களைப் பெற்றிருக்கும். ஆனுல் கனத்தலும் பருத்தலும் உயர்தலும் விசேஷமாக உண்டாகி, வாதாற்புதகிரந்தி, பித்தாற்புதகிரந்தி, சிலேஷ்மாற்புதகிரந்தி, மாமிசோற்புதகிரந்தி, மேதோற்புதகிரந்தி, ரத்தாற்புதகிரந்தி என ஆறுவிதப்பேர்பெற்றிருக்குமென்றறிக. இவைகளும் முற்சிகிச்சையால்போம்.

ஆக. அற்புதகிரந்தி 6-ம் முற்றியது.

---

## சோணிதாற்புதகிரந்தி.

இது, வாயுவானது நரம்புகளில் ஓடுகின்றரத்தத்தை ஓட வொட்டாமல்மறித்து, அந்நரம்புகளின்கீழ் அந்த ரத்தத்தை மாமிச மொத்தையைப்போல் கெட்டியாய்க் கசியவொட்டாமல் திரட்டித் தடிக்கப்பண்ணுவதால் பிறக்கும்; அப்போது அந்தத்தடிப்பின்மீது பல்லிமுட்டைகளைப்போல் சிறுசிறு மாமிசக் கொப்பிளங்கள் உண்டாகி விருத்தி அடையும். அவை

கள்பழுத்து உடைந்தால், அங்குகெடுதியை அடைந்த ரத்தமே ஒழுகும் என்றறிக. இவைகளுக்கும் முற்கூறிய சிகிச்சைகள் உதவும்.

## சாத்தியாசாத்தியஅற்புதகிரந்திநிதானம்.

அற்புதகிரந்தி ஆறுக்குள், மாமிச அற்புதமும், ரத்த அற்புதமும் அசாத்தியமாம். மற்றை 4-ம் சாத்தியமாம். ஒரு வேளை, மேதையினாலும் கபத்தினாலும் உண்டாகிப் பருக்கின்ற அற்புதகிரந்திகளும் அசாத்தியமாம்.

## பாதவன்மீகரோகபேதம்.

நெய்தல்நிலவாசம், மலசலம் ஊறியபதார்த்தம், சிலேஷ்ம பிரதான வஸ்து இவைகளைப் புசித்தலினாலும், அதிக சையோகத்தினாலும், அதோகாயமான இரண்டுதொடைகளிலிருக்கின்ற நரம்புகளில் சிலேஷ்ம நீரானது நிறையப்படும். அக்காலத்தில் வாதமும் பித்தமும் பாதங்களில் வியாபித்து, அவ்விடத்தில் கொஞ்சக்கொஞ்சமாகத் துர்மாமிசத்தைச் சேர்ப்பித்து, அதைப்புற்றுப்போல் பருக்கப்பண்ணும். அம்மாமிசம் அதிகரிக்க அதிகரிக்க அரோசகமுதலிய துர்க்குணங்கள் அடிக்கடி பிறக்கும். இதுவே பாதவன்மீகமாம். இதுவாதபாதவன்மீகம், பித்தபாதவன்மீகம், சிலேஷ்மபாதவன்மீகம் என மூன்று விதப்படும். வன்மீகம் என்பது புற்று. இதனைச் சிலிபதரோகம் என அசுவனீயம் என்னும் சாஸ்திரம் கூறுகின்றது. உலகத்தார் யானைக்கால் எனச் சாதாரணமாகச் சொல்லுகிறார்கள்.

## 1-வது வாதபாதவன்மீகரோகம்.

இது, ஒருபாதத்திலாவது இரண்டிலுமாவது நாளுக்குநாள் விருத்தியடைகின்ற வீக்கத்தை உண்டாக்கும்; அப்போது அதில் உள்ள துர்மாமிசமானது, கறுத்துஉண்மையும் உருளையுமாய்க் கருணைக்கிழங்கு முளைகளைப்போல் எழும்பி, வெடிப்பட்டுச் சொறசொறத்து, மினுமினுப்பில்லாமல் சிலவேளை நோவைத்தருவதாயிருக்கும்.

## 2-வது பித்தபாதவன்மீகரோகம்.

இது, தொடைநரம்புகளில் பித்தநீருங்கலந்து இறங்கலால் உண்டாகும்; அப்போது அரையில் நெறிகட்டுதல், பாதத்தில் மஞ்சள்நிறமான

வீக்கம், மேலில் எரிச்சல், சுரம், பிதற்றல், கண்ணில் பீதவண்ணம், வாந்தி, சிலவேளைபேதி அல்லது மலக்கட்டு என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 3-வது சிலேஷ்மபாதவன்மீகரோகம்.

இது, பாதத்தில் மினுமினுப்புடன் குளிர்ச்சியும் வெளுப்பும் உள்ள வீக்கத்தை உண்டாக்கும். ஆனாலவ்வீக்கத்தின்மீது புற்றெழும்புவது போல் சிறுதும் பெரிதுமாகத் தூர்மாமிசம் வளர்ந்து முழங்காலுக்கு மேலும் உயர்ந்து நோவில்லாமல் தளதளப்பாக இருக்கும்.

## சாத்தியாசாத்தியபாதவன்மீகரோகநிதானம்.

எந்தவன்மீகமாவது, நூதனமாகப்பிறந்து ஒரு வருஷத்திற்குமேற்பட்டு முதிராமல் அற்பமாயிருக்கில், குழித்தயிலம் முதலிய சிகிச்சைகளினால் சாத்தியமாம். பாதப்பிரமாணத்திற்கு மீறி இரண்டு பக்கங்களுக்கும் அதிகமாகப்பிதுங்கி, ஆள்வள்ளிக்கிழங்கு, புற்று, தூண், யானைக்கால் முதலிய பிரமாணங்களைப்பெற்று விருத்தி அடைந்த வீக்கம் அசாத்தியமாம்.

## சித்தர் மதாந்தரம்.

தேசபேதங்களினால், கை, உதடு, செவி, மூக்கு முதலிய அவயவங்களில் பாதவன்மீகம்போல் வீங்குமென்றும், அவைகளும் பாதவன்மீகந்தான் என்றும் சிலர் சொல்லுகிறார்கள். திருமூலர், தருமசவுமியர் முதலிய பெரியோர்கள் செய்த சாஸ்திரம் அவைகளை அவ்வவ் விடப்பெயர்பெற்ற புற்றுக்களெனக் கூறுகின்றது. இதற்கு, க்ஷத்திரக்ஷாராக்கினிச் சிகிச்சையும், ரசாதி அவுஷதங்களும் பயன்படும்.

மதாந்தரமுற்றியது.

---

## கண்டமாலைரோகபேதம்.

வாதபித்த சிலேஷ்மங்களானவை, மேதோதாதுவை யனுசரிப்பதனாலும், மாமிசதாது விருத்தியினாலும், கழுத்தின் நரம்புகளிலும், கண்களிலும், அக்குள்களிலும், அரைகளிலும், தேகநிறத்தைப்பெற்றுக்கெட்

டிப்பட்டு மினுமினுத்து நெல்லிக்காய் சிறுகத்தரிக்காய்ப் பிரமாணத்தை ஒத்துச் சிறிதும் பெரிதுமான கட்டிகளுண்டாகும். அவைகள் நாட்சென்று பழுத்து உடைந்து நடுவில் குழிவிழுந்து பலபேதங்களாய் இருக்கும். இவற்றுள் சிலது அற்பநோவுடன் உடைந்து சீழைச்சொரிவதும், சிலதுநமைச்சலுடன் உஷ்ணத்தைத்தருவதும், சிலது கிளைத்துக்கொண்டேயிருப்பதும், சிலது நெடுநாள் சென்றுங்கரையாது வலுப்பதுமாக இருக்கும். இந்தரோகம், கண்டத்தைச்சுற்றிலும் மாலைபோல் பிறப்பதால், கண்டமாலை எனப்பேர்பெற்றது. இது தொடைக் கவுட்டிகளில் கண்டால், அரையாப்புக்கட்டி என்பர். இவைகட்கு லிங்கபூரப்படங்கு, வச்சிரபீசத்தபிலம் முதலிய அவுஷதங்களும், விரணச் சிகிச்சைகளும் உதவும்.

## அசாத்தியகண்டமாலைரோகநிதானம்.

எந்தக் கண்டமாலைக்கட்டியாவது, அறுகின்வேரைப்போல், கிளைப்பதும், அடங்குவதுமாயிருந்து இதனால், சுரம், இருமல், வாந்தி, பீநசம், பக்கநோவு, தேகசுட்கம் என்னும் இக்குணங்கள் உண்டாகில், அசாத்தியமாகவே முடியும். இக்குணங்கள் இல்லாவிடில் சாத்தியமாம்.

## நாடிவிரணபேதம்.

நரம்புகளில் பிறக்கின்ற கட்டியானது, பழுத்து உடைந்து விஷமித்தால், அந்த நரம்பைப்பற்றி மாமிசதாதுமுதல் அஸ்திதாது வரைக்கும் சிலையோடும். எவ்வாறென்னில், அது ஒரு நரம்பைப் பற்றினாலும், அதற்குச்சகல நரம்புகளும் சம்பந்தப்பட்டு வலைபின்னலைப் போல் இருப்பதால், சிலை ஓடுதற்கும் சீழ்க்கொள்ளுதற்கும் ஒருவழியே அன்று; பலவழியும் உண்டென்றறிக ஆதலால், இதைச் சிலையோடவொட்டாமல் உபாயத்துடன் வசப்படுத்தவேண்டும். இதுவே நாடிவிரணம். இது, வாதநாடிவிரணம், பித்தநாடிவிரணம், சிலேஷ்மநாடிவிரணம், திரிதோஷநாடிவிரணம், அஸ்திநாடிவிரணம் என ஐந்துவிதப்படும்.

நாடி என்பது நரம்பு

## 1-வது வாதநாடிவிரணம்.

இது, சூட்சுமமுகத்துடன் நிறபேதமாகப்பிறந்து, அதிக நோவைத்தரும். இக்கட்டியானது பழுத்து உடைந்தால், அதில் நுரைத்த சலம் வடிவதும், ராத்திரியில் கருஞ்சிவப்புரத்தம் ஒழுகுவதுமாக இருக்கும்.

## 2-வது பித்தநாடிவிரணம்.

இது, சுரம், தாகம், எரிச்சல் இவைகளையுண்டாக்கிக்கொண்டேபிறக்கும். இச்சட்டிபழுத்து உடைந்தால், மஞ்சள்நிறத்துடன் கடுமையுள்ள துர்க்கந்தச் சீழும் ரத்தமும் பகற்காலத்தில் ஒழுகுவதாயிருக்கும்.

## 3-வது சிலேஷ்மநாடிவிரணம்.

இது, தடித்துக் கெட்டிப்பட்டு மினுமினுப்புடன் பிறக்கும். இக்கட்டி பழுத்து உடைந்தால், எந்நேரமுஞ் சீழ்வடிவதாயிருந்தாலும், ராத்திரிகாலத்தில் மிதம் இல்லாமல் வடிதலும் அதிகமச்சலும் உண்டாகும்.

## 4-வது திரிதோஷநாடிவிரணம்.

இது, வாதநாடி விரண முதலிய மூன்று நாடி விரணங்களுக்குள்ள குணங்களை யெல்லாம் உண்டாக்கும். இது அசாத்தியமாம்.

## 5-வது அஸ்திநாடிவிரணம்.

இது, எலும்பின்மார்க்கத்தில் பிறந்து, அந்த எலும்பின் நரம்புகளுக்கு உபத்திரவத்தைத் தருவதுமன்றி மிருதுவாயிருக்கும். இச்சட்டி பழுத்து உடைந்தால், இதில்நின்றும் நுரைத்துச் சுடுமையுடன் ரத்தமும் சீழும் வடியும். இதனால் மிகுந்தவேதனை உண்டாகும். இவ்விரணம் பிறந்த எலும்பை அறுத்துவாங்கிச் சிகிச்சைசெய்யாவிடில் வசப்படாதென்றறிக. இதனைச்சல்லியநாடிவிரணம் என்பர்.

ஆக நாடிவிரணம் 5-ம் முற்றியது.

---

## க்ஷுத்திரவிரணரோகபேதம்.

க்ஷுத்திர விரணரோகமானது அஜகள்ளிகாரோகம் ஆதியாக கோடரோகம் ஈறாக 36-விதப்படும். க்ஷுத்திரம் என்பது அற்பம்.

## 1-வது அஜகள்ளிகாரோகம்.

இது, சிலேஷ்மவாதங்களினால் பயற்றைக் கயிற்றில்கோத்ததுபோல் நீளமாக மினுமினுப்புடன் நோவில்லாத கொப்புளங்களை உண்டாக்கும்.

இந்த ரோகம் குழந்தைகளுக்கே முக்கியமாகச்சாணும். இது ஆட்டினது கழுத்தில்தொங்கும் அதிர்போற் படருவதால் அஜகள்ளிகா எனப்பேர் பெற்றது. அஜம் என்பது ஆடு; கள்ளிகா என்பது அதிர்.

## 2-வது யவபிரக்கியாரோகம்.

இது, வாதசிலேஷ்மங்களினால் மாமிசத்தைஒட்டி வரகுப் பிரமாண மாகக் கனத்த கொப்பிளங்களை உண்டாக்கும்.

## 3-வது அலசிரோகம்.

இது, வட்டவடிவாய்த்தடித்தும் உயர்ந்தும் இருக்கின்ற சிறு சிறு கட்டிகளை நெருக்கமாகப் பிறப்பிக்கும். அக்கட்டிகளின் முனையானது உள் ளமுந்தி, நடுவில்பள்ளம் விழுந்து, அதில்கொஞ்சம் சீழ்வடிவதாயிருக்கும்.

## 4-வது கச்சபிரோகம்.

இது, சிற்றுருவமுள்ள ஆமைமுதுகைப்போல் மழுங்கலாக உப்பு கின்ற கிரந்திகளை 5-6 என்னும் கணக்கிடும்படிக்கு உண்டாக்கும்.

## 5-வது பனசிகாரோகம்.

இது, காதின்மேலாவது அக்காதின் முற்றிலுமாவது செட்டிப்பட்ட தாய் ஆம்பற்கிழங்குகளைப் போல் கட்டிகளைப்பிறப்பித்து அதிக வேத னையை உண்டாக்கும். இவ்விரணம், பலாக்காய் முள்ளுகளைப்போல் உரு வத்தைப் பெற்றிருப்பதால், பனசிகாரோகம் எனப் பேர் பெற்றது.

## 6-வது பாஷாணகர்த்தபிரோகம்.

இது, கல்லுகளைப்போல் கெட்டியாய் நிலைபெற்று வீங்கி அற்பநோ வைத்தருகின்ற கட்டிகளை உண்டாக்கும். பாஷாணம் என்பது கல்; கர்த் தபி என்பது வெண்காக்கட்டான் காய்.

## 7-வது முகதூஷிகாரோகம்.

இது, வாலிபர்முகங்களில், வெங்காயம் பொலும் இலவமுள்ளைப் போலு மடிபருத்து, முளை உள்ள கொப்பிளங்களை உண்டாக்கி, உபத்திர வத்தைத்தரும். இதனைமுகப்பருவு என்பர். இது நகமுதலியவைகளால் விருத்தியடைந்தால் அபாயமாம். முகதூஷிகம் என்பது வெங்காயம்,

## 8-வது பதுமகண்டகரோகம்.

இது, சிலேஷ்மவாதங்களினால் தாமரைக்கொடியினது முட்களைப் போல் நோவில்லாத வெளுத்த சொறிகளைத் தேகமுற்றிலும் நிறைப்பிக்கும். இதனைத் தவளைச்சொறி, பெருஞ்சொறி, என்பர். இது பசலைவெங் காயக்சல்கக் குளியலால்போம். பதுமகண்டகம் என்பது தாமரைமுள்.

## 9-வது விவுர்தாரோகம்.

இது, வட்டவடிவாய் அத்திப்பழம் போல் வாய்திறந்த கொப்பிளங் களை எழுப்பி, சுரத்தையும் தாகத்தையும் எரிச்சலையும் உண்டாக்கும்.

## 10-வது மசூரிரோகம்.

இது, தேகத்திலாவது வாயிலாவது சிறுசடலையை ஒத்த கொப்பிள ங்களைஉண்டாக்கும். இதனால் தாகமும் சுரமும் நோவும் உண்டாகும்.

## 11-வது விஸ்போடரோகம்.

இது, முற்கூறிய மசூரிரோகத்தைப்பார்க்கிலு மதிகவிரணத்தையும் நோவையும் வெகுசங்கடத்தையும் உண்டாக்கும்.

## 12- வது வித்தாரோகம்.

இது, வாதபித்தங்களினால் தாமரைச்சாட்போல் உருவமும் நிறமும் முளைகளும் உள்ள புடைகளை உண்டாக்கும். அதிவேதனையோடுங்கூடிய விரணத்திற்கு வித்தா எனப் பெயராம்.

## 13- வது கர்த்தபிரோகம்.

இது, மண்டலாகாரமாய் வெண்காக்கட்டான் காயினது உருவத்து டன் சிவந்த கொப்பிளங்களை விஸ்தாரம் உண்டாக்கும்.

## 14. வது சட்சியாரோகம்.

இது, வாதத்தை அல்லது பித்தத்தைக்கொண்டு அச்குளுச்கு உள் ளிலாவது அதைச் சுற்றிலுமாவது நெற்பொரியைப்போல் மெல்லிய கொப் பிளங்களை நெருக்கமாக நிறையப்பண்ணும். கட்சி என்பது அக்குள்.

## 15-வது கண்டரோகலக்ஷணம்.

முற்கூறிய கட்சியாரோகத்தினது பக்கத்தில் கட்டிகள் உண்டாகி வெளுத்துப் பருத்தால் கண்டரோகமாம், கண்டம் என்பது இடம்.

## 16-வது ராஜிகாரோகம்.

இது, வெய்யிலாதி இறுக்கத்தால் வருகின்ற வியர்வையைக்கொண்டு சரீரநிறம்போலவே சிறுத்தும் பருத்தும் அணுக்களை ஒத்தும் வட்டவடி வாய் நெருங்கிய வேர்க்குருவை உண்டாக்கும். இதில் நமைச்சல் விசே ஷமாய் இருக்கும். ராஜிகா என்பது கடுகு. இதுவே வேர்க்குருவாம்.

## 17- வது ஜாலகர்த்தபிரோகம்.

இது, பித்தப்பிரதானமான வாத சிலேஷ்மங்களினால், விசர்ப்பி ரோகத்தைப்போலக் கறுப்பு சிவப்பான கொப்பிளங்களை தாமதத்தின் மேல் பிறப்பிக்கும். அவைகள் சீக்கிரத்தில் பழுத்து உடைந்து வலைக் கண்களைப்போல் இருப்பதன்றியும், சுரத்தையும் உண்டாக்கும். ஜாலம் என்பது வலை.

## 18-வது அக்கினிரோகணிரோகம்.

இது, சுரத்தினால் மெலிந்தவர்களுக்குப் பித்தப்பிரதானமான வாத சிலேஷ்மங்களினால் அக்குளுக்குள் மாமிச கண்டத்தைப்போல் கட்டிகளை உண்டாக்கும். அவைகள் கட்டை நெருப்புப்போ லெரிந்துகொண்டு உபத்திரவத்தைச் செய்து, 5, 7, 15 என்னும் நாட்களில் தப்பாது மர ணத்தைக் கொடுக்கும். அந்நாள் தப்பில் சாத்தியமாம்.

## 19- வது பரிகல்லிரோகம்.

இது, வாத பித்த சிலேஷ்மங்களின் குறிகளுடன் வளையாகாரமான கட்டிகளை நெஞ்செலும்புகளைச் சுற்றிலும் உண்டாக்கும்.

## 20- வது பிதாரிகாரோகம்.

இது, அக்குளுக்குள்ளாவது அரைகளுக்குள்ளாவது நிலப்பூசினிக் கிழங்குபோல் பருத்துக் கெட்டிப்பட்ட கட்டிகளை உண்டாக்கும்.

## 21-வது சர்க்கராரோகம்.

இது, அஸ்திநரம்பு, மாமிசநரம்பு, மற்றையநரம்பு ஆகிய இவைகளில் அநுசரித்த மேதோதாதுவினுலும், வாத சிலேஷ்மத்தினுலும், சரீரம் முற்றிலும் சக்கான் கல்லுகளைப்போல் கிரந்திகளை உண்டாக்கும். அவைகள் பழுத்து உடைந்தால், தேன் நெய் கொழுப்பு என்னும் இவைகளைப்போல் சீழ்வடியும். சிலவேளை அது வாதாதிக்கத்தால் மணலைப்போலும் உமியைப்போலும் உண்டை உண்டையாக விழுந்தாலும் விழும்.

## 22-வது சருக்கரார்ப்புதரோகம்.

இது, முற்கூறிய கட்டிகளைப் பார்க்கிலும் பருத்த கட்டிகளை உண்டாக்கும். இதில் நின்றும் துர்க்கந்தரத்தத்துடன் பலநிறச்சீழ்வடியும்.

## 23-வது வன்மீகரோகம்.

இது, பாதம், கை, கால், இரண்டு எலும்புகள் சேர்ந்த ஸ்தானம், ஆகிய இடங்களில், புற்றினது முகங்களைப்போல் சிறு முகங்களை உடைய கிரந்திகளை எழுப்பும். இதனுல், நோவும் தினவும் வியர்வையும் அதிகப்படும்.

## 24-வது கதரரோகம்.

இது, பருக்காங் கல்லுகளின்மேல் நடக்குதலாலும், முள்ளுகள் தைத்து ஒடிதலாலும், பாதத்தில் அரத்தைப்போலுமிருக்கின்ற முடிச்சுகளை உண்டாக்கும். கதரம் என்பது அரம். இதனை ஆணி என்பர்.

## 25-வது ருத்தகுதரோகம்.

இது, நாள்தோறும் மலத்தை அடக்கி அடக்கி விடுதலால் அபானவாயுவு குதத்தை நன்றாக அநுசரித்து, அத் துவார வளையத்தின் அடியையும் நுனியையும் சுருங்கச் செய்யுங்காலத்தில்பிறக்கும். அந்தச் சுருக்கத்தினுல், மலமானது பிரயாசையின்மேல் வெளிப்படும். இப்படிக்கு வெளிப்படுந்தோறும் ஆசனத்தில் வெடிப்புஉண்டாகிப்பச்சைப்புண்போல் உபாதி நேரிட்டுக்கொண்டே இருக்கும்.

ருத்தம் என்பது தடுக்கப்பட்டதாம்.

## 26-வது சில்வரோகம்.

இது, பித்தப் பிரதானமான வாத சிலேஷ்மங்களினால், நகக் கண்களைச் சுற்றிலு மிருக்கிற மாமிசத்தில் நோவோடுங் கூடிய வீக்கத்தை உண்டாக்கும். இதனால், எரிச்சல், சுரம், முதலிய துர்க்குணங்கள் பிறக்கும். இதுபோல் ஒவ்வொரு நகங்களில் கட்டி எழும்பி உபத்திரவஞ் செய்யும். இதனை, நகச்சுற்று, விரற்சுற்று, உகிர்ச்சுற்றுஎன்பர். இது, வேதனையைச் செய்து நகத்தின் வேரைக்கெடுத்து அங்நகம் விழுவதற்கு முன்னமே மறு நகத்தை முளைப்பித்தால், உபநகரோகம், அக்ஷதரோகம் எனப் பேர் பெறும். சில்வம் என்பது உபத்திரவத்தை உண்டாக்குதலாம்.

## 27-வது குநகரோகம்.

இது, நகத்தின் பலமான அடிபடுவதனால் பிறந்து, அதில் கரிநிறத்தையும் சொறசொறப்பையும் உண்டாக்கும். கு என்பது கெடுதி.

## 28-வது அலசவிரணரோகம்.

இது, சாதாரணகாலத்திலும், மாரிக்காலத்திலும், கெடுதி மண்ணையாவது, அவ்விதச் சலத்தையாவது, அழுகிய சேற்றையாவது எந்நேரமும் மிதித்தலினாலும், மிதித்தவுடன் சுத்திசெய்யாமையினாலும், பிறந்து பாதங்களின் ஓரங்களிலும் உள்ளங்கால்களிலும் விரற்சந்துகளிலும் தினவுடன் கூடிய வெளுத்த புண்களை உண்டாக்கும். அதில் நின்றும் புளித்த சலம் வடிந்துகொண்டே இருக்கும். இதனை, விரற்புண், சேற்றுப்புண் என்பர். இது கடுக்காயினாலும் வெந்தபுளியங்காய்த் தசையினாலும்போம்.

## 29-வது திலகரோகம்.

இது, காலின் விரல் சந்துகளில் திலகம்போல் சிவந்த கொப்புளங்களைப் பிறப்பிக்கும். அவைகள் நசுங்கினால் விரணமாகும். திலகம் என்பது பவளம்போல் மிகுந்தசிவப்புநிறம் உள்ள ஒருவித மரம்.

## 30-வது மசரோகம்.

இது, கரியநிறமும் மாத்தலும் உடையதாய், நோவில்லாமல் கொஞ்சம் உயர்ந்திராநின்ற காய்ப்புகளை எழுப்பும். இதனை மறுவென்பர்.

## 31-வது ஜதுமணிரோகம்.

இது, முற்கூறிய ரோகத்தைப் பார்க்கிலும் உயர்ந்து, ஆரம்பத்தில் சிவந்து பின்பு வெளுத்து, கறுப்புநிறத்தையும் எட் பிரமாணத்தையும் அரக்குமணியின் உருவத்தையும் ஒத்து, சருமத்தில் ஆணி அடித்தது போல் மறுவுகளை உண்டாக்கும். ஜதுமணி என்பது அரக்குமணி.

## 32-வது லாஞ்சனரோகம்.

இது, பிறக்கும்போது கறுப்புச் சிவப்புப்புள்ளியுடன் வட்டவடிவா யிருக்கின்ற மச்சங்களை உண்டாக்கும். லாஞ்சனம் என்பது புள்ளி.

## 33-வது வியங்கரோகம்.

இது, துக்கத்தினாலும் கோபத்தினாலும் வாதமும் பித்தமும் அதி கரிக்கையில் பிறந்து, முகத்தில் கறுத்துச் சிறுத்து வட்டமா யிராநின்ற மச்சங்களை உண்டாக்கும். இது, மற்றைய இடங்களில் பிறந்தால், நீலிகா ரோகம் எனப் பெயர்பெறும். இவ்விரண்டிடங்களிலும் வாயுவினால் பிறக் கின்ற மச்சங்கள் சொறசொறப்பாக விருக்கும். பித்தத்தால் பிறந் தால், பிறக்கும்போது சிவந்து வளரும்போது கறுத்திருக்கும். சிலேஷ் மத்தால் பிறந்தால், வெளுத்துத் தினவைத் தருவதா யிருக்கும். ரத்தத் தால் பிறந்தால், அடிச்சுற்றிலும் நுனியிலும் ரத்த நிறம் உண்டாகிச் சுடுகையாய் விருவிருப்பைத் தருவதாயிருக்கும். வியங்கம் என்பதுமச்சம்.

## 34-வது பிரசுப்திரோகம்.

இது, வாயுவினால் அடிபட்ட சிலேஷ்மம் சருமத்தில் சேர்ந்து உலர்த்தும்போது பிறந்து, அங்கு வெண்மை நிறத்தையும் செம்மைநிறத் தையு முண்டாக்கி, பரிசஞானத்தைக்கெடுத்து, தினவுடன் திமிரை உண் டாக்கும். இதனை, மேகப்படை என்றும், திமிர்வாதம் என்றும் கூறுவர்

## 35-வது உத்கோடரோகம்.

இது, வாந்திக்குக் கொடுக்கில் வாந்தி ஆகாமல் அந்த அவுஷதம் உள்ளில் தங்குவதனால் கபபித்தங்கள் அதிகரிக்கும்போது பிறந்து, வளை யாகாரமாய்ச் சிவந்த நிறத்தையும் நமைச்சலையும் உள்ள அநேகவிதப் புடைகளை உண்டாக்கும். கோடம் என்பது மண்டலம். இதனைத் தேமல் என்பர்.

## 36-வது கோடரோகம்.

இது, உத்கோட ரோகத்திலுள்ள நமைச்சல் முதலிய குணங்களைப் பெற்று, விசேஷமாகப் படருகின்ற பலவிதத் தேமல்களை உண்டாக்கும். இவைகளுக்கு, நாறு சங்கிலைக் குடித்தயிலம், காகமாசித்தயிலம், பூவரசுக் கல்க்கம், வெள்ளைச் சந்தனப்பூச்சு, உஷத்காலஸ்நானம் முதலிய உபாயச் சிகிச்சைகளைச் செய்யவேண்டும்.

ஆக க்ஷுத்திரரோகம் 36-ம் முற்றியது.

---

## பாதபேதரோகம்.

இது, வெகுதூர சஞ்சாரத்தினாலும் அதிக உஷ்ணத்தினாலும் பாதத்தில் இருக்கின்ற சிலேஷ்மமானது நாச மடையும்போது பிறந்து, வாதபித்தத்தை அதிகரிக்கச்செய்து, குதிகால் உள்ளங்கால், முதலிய இடங்களிலும், அவ்வோரங்களிலும், கீற்றுக்கீற்றான வெடிப்புகளைப் பிறப்பித்து, அவ்வெடிப்பின் வழியால் ரத்தம் முதலியவைகளைக் கசியப் பண்ணும்; அப்போது நடந்தால் காலில் வருத்தம் உண்டாகும். பேதம் என்பது பிளக்குதல். இது, செந்தாமரைப்பூ ரசத்தையும் பசுவின் பாலையும் அரை அரைப்படி அளவாகச் சேர்த்துக் கொதிப்பித்து அந்த ஆவியைத் தினந்தோறும் நாற்பது நாள் வரைக்கும் பாதத்தில் பிடிக்கில் விலகும்.

## குய்யரோகநிதானம்.

வாதபித்த சிலேஷ்ம குணங்களினாலும், வெகு புருஷ சஞ்சாரத்தினாலும், விரணநிமேகங்களினாலும், கெடுதியை அடைந்து சுட்கித்த அல்குல், வெகு புருஷ சையோக அல்குல், புருஷவிருப்பம் இல்லாத அல்குல், பிரசவித்துப் புண்ணாயிருக்கின்ற அல்குல், மாதாந்த ரத்தஅல்குல் ஆகிய இவ்வல்குலை உடைய ஸ்திரீகளையும், நீச ஸ்திரீகளையும், குதிரை முதலியவைகளையும், பிருந்த சுவாசம் எழும்பும்படிக்கு நித்தியமும் சையோகஞ் செய்வதினாலும், பின்பு சுத்திசெய்யாமையினாலும், போகித்த பின்பும் உடனே போகிப்பதற்காக வீணாதண்டில் தீக்ஷணலேபனம் பண்ணிக்கொள்ளல், அம்மாதரைக்கொண்டு ஆண்குறியைப் பிசைந்து நகங்களினால் கிள்ளவும் வாயினால் சும்பித்துப் பற்களால் மெதுவுறக்

கடித்து நாவினல் நெருடவும் சொல்லல், மயிற்குச்சினல் அக்குள் பாய்ச்சச் செய்தல், முன்பு தான் அனுபோகித்த ஸ்திரீசுகத்தை நினைத்துக் கொள்ளல், பழத்தைக் கிளியானது மூக்கினல் கொத்துவதுபோல் அல்குலில் ஆண்குறியால் குத்துதல், அவ்வேளையில் மூத்திரத்தை அடக்குதல் என்னு மிச்செய்கைகளைக்கொண்டு வலுவந்தமாகச் செய்கின்ற புணர்ச்சியினலும் வாத பித்த சிலேஷ்மங்கள் அதிகரித்து, ஆண்குறியில் நின்று அவ்விடத்தில் உபதம்ஸரோகம் ஆதியாக, திலகாலகரோகம ஈருக 23-ரோகங்களைப் பிறப்பிக்கும். இவற்றுள் உபதம்ஸரோகமானது வாதாதிகளினலும் ரத்தத்தினலும் ஐந்து விதப்படும். இது அல்குல் மார்க்கமாக ஆண்குறியைத் தொடருவதால் குய்யரோகம் எனப் பேர்பெற்றது. குய்யம் என்பது அல்குல்.

இனி, ஐந்துவித உபதம்ஸரோகங்களைச் சொல்லுவாம்.

## 1-வது வாதஉபதம்ஸரோகம்.

இது, ஆண்குறியின் துவாரத்தை அடைத்து உலர்த்தல், அவ்விடத்தில் மரத்தல், பலவித நோவு, சருமத்தின்மீது குருக்குருவாக எழும்புதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இது, விஷக்கடியால் உண்டாகின்ற துர்க்குணங்களைப்போல் சகல துர்க்குணங்களையும் உண்டாக்கலால், தம்ஸரோகம் எனப் பேர்பெற்றது. தம்ஸம் என்பது கடி.

## 2-வது பித்தஉபதம்ஸரோகம்.

இது, முற்கூறிய உபதம்ஸரோக குணத்துடன், ஆண்குறியில் சிவந்த வீக்கத்தை உண்டாக்கும். இதனல், சுரமும் பிறக்கும்.

## 3-வது சிலேஷ்மஉபதம்ஸரோகம்.

இது, ஆண்குறியைத் தடித்துக் கனத்து மினுமினுத்து வீங்கச் செய்யும். இதனல், சீதளம் அவ்விடத்தில் தினவும் உண்டாகும்.

## 4-வது திரிதோஷ உபதம்ஸரோகம்.

இது, ஆண்குறியில் வாதமுதலிய மூன்று உபதம்ஸரோக குணங்களை உண்டாக்கும், இதனல், இரண்டு அண்டங்களும் வீங்கும்.

## 5-வது ரத்தஉபதம்ஸரோகம்.

இது, ஆண்குறியைகறுப்பாக்கி எர்நோமும் சுரத்தை உண்டாக்கும்.

## சாத்தியாசாத்திய உபதம்ஸரோகநிதானம்.

உபதம்ஸம் 5-ல், வாதமுதலிய மூன்று உபதம்ஸரோகமும் சாத்தியம், ரத்த உபதம்ஸரோகம் கஷ்டசாத்தியம், திரிதோஷ உபதம்ஸரோகம் அசாத்தியம். ஆயினும் குபேராக்ஷி எண்ணெய்யால் சாத்தியமானாலும் ஆகும். ஆக ஐவகைப்பட்ட உபதம்ஸரோகம் முற்றியது.

## 2-வது அரிசோரோகம்.

இது, வாதபித்தகபங்கள் ரத்தமாமிசங்களை அநுசரிக்கும்போது பிறக்கும் அப்போது ஆண்குறியின் உள்ளிலாவது வெளியிலாவது நமைச்சல், அவ்விடங்களில் மூலரோக முளைகளைப்போலும் சிறு சிறு காளான் முளைகளைப்போலும் மாமிசம் எழும்புதல், அவைகளில் மிகவும் வியர்வை கசிதல். ரத்தம்வடிதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதற்கு உடனே வைத்தியஞ்செய்யாவிடில், இது, சுக்கிலத்தைக் கெடுக்கும். ஸ்திரீகளுக்கோவென்றால், சோணிதத்தைக் கெடுக்கும்.

## 3-வது சரஷபிகாரோகம்.

இது, சிலேஷ்மரத்தத்தினால் ஆண்குறியின் உள்ளிலாவது வெளியிலாவது கடுகைப்போல் அநேககொப்பிளங்களை உண்டாக்கும்.

## 4-வது அவமந்தரோகம்.

இது, ஆண்குறியில் நீளவாடிவாய் அநேக கொப்பிளங்களை உண்டாகும். அப்போது அவைகளின் நடுவில் வீரல் உண்டாகிச் சீழ்ரத்தம் ஒழுகுவதும் அன்றி, வேதனையும் ரோமச்சிலிர்ப்பும் உண்டாகும். இது, சகல உபத்திரவங்களுடன் கலந்து வெளிப்படுதலால், அவமந்தரோகம் எனப் பேர் பெற்றது. அவமந்தம் என்பது கலத்தல்.

## 5-வது கும்பிகாரோகம்.

இது, பித்தத்தினாலாவது, ரத்தத்தினாலாவது, ஆண்குறியில் இலந்தைக்கொட்டையைப்போல் மாமிசக்கட்டியை உண்டாக்கும்.

## 6-வது அலசிரோகம்.

இது, ஆண்குறியில்நின்றும் மேகத்தை விழச்செய்து, விரணத்தை உண்டாக்கும். அலசி என்பது மேகவிரணமாம்.

## 7-வது உத்தபாரோகம்.

இது, ஆண்குறியில் ரத்தபித்தத்தினால் சிறிதும் பெரிதுமான விரணங்களை எரிச்சலுடன் பிறப்பிக்கும். உத்தபா என்பது மிகுந்த எரிச்சல்,

## 8-வது பிடகரோகம்.

இது, ஆண்குறியில் உழுந்து பயறு பிரமாணங்களான கொப்பிளங்களைப் பிறப்பித்து, அவைகளைச்சுற்றிலும் விஸ்தாரமாகச் சிறு சிறுகொப்பிளங்கள் உண்டாகும் படிக்குச் செய்யும்.

## 9-வது புஷ்கரிகாரோகம்.

இது, ஆண்குறியில் தாமரைக்காயைப்போல் தழும்பை எழுப்பி அதில் கொப்பிளங்களை உண்டாக்கும். புஷ்கரிகா என்பது தாமரைக்காய்,

## 10-வது சம்வியூடரோகம்.

இது,ஆண்குறியின்மீது புள்ளாங்குழலைப் பிடிக்கும் விரல்களைப் போல் குறுக்காகத் தடித்தவிரணத்தை உண்டாக்கும். இது, கைவிரலைப் போல் சேர்ந்திருக்குங் காரணத்தால், சம்வியூடரோகம் எனப் பேர் பெற்றது. சம்வியூடம் என்பது சேர்ந்திருக்குதலாம்.

## 11-வது மிருதிதவிரணம்.

இது, ஆண்குறியில், கையால் பிசைந்த வாழைப்பழத்தைப்போல் குழைந்த விரணத்தைப் பிறப்பிக்கும். மிருதிதம் என்பது அளிதல்.

## 12-வது அஷ்டீலிகாரோகம்.

இது, ஆண்குறியில் விரணத்தைப் பிறப்பிக்கும். அது சுழிவிழுந்து கல்லைப்போல் கெட்டியாயிருக்கும். அஷ்டீலிகம் என்பது கல்லு.

## 13-வது அவிபாடிதரோகம்.

இது, வாதபித்த சிலேஷ்மங்களினால் ஆண்குறியினது சருமத்தையெல்லாம் மிகவும் தடிக்கச்செய்து, அத்தடிப்பைப் பிளப்பிக்கும்.

அவி என்பது அதிகம், பாடிதம் என்பது பிளத்தல்.

## 14-வது நிருத்தமணிரோகம்.

இது, வாயுவினால் ஆண்குறியின் முனைச்சருமத்தை நையப்பண்ணி, அதை அம்மலரில் ஒட்டிக்கொள்ளச்செய்யும். இதனால், அத்துவாரம் அடைபட்டாலும் வேதனை இல்லாமல் சன்னமாக மூத்திரம் இறங்கும். ஆனால் மலரைவிட்டு அச்சருமத்தை மலர்த்தக்கூடாமையாயிருக்கும், இது அம்மலர்மேல் மூடிய சருமத்தை மலர்த்த ஒட்டாமல் தடுப்பதால், நிருத்தமணிரோகம் எனப் பேர் பெற்றது. நிருத்தம் என்பது தடுத்தல்; மணி என்பது ஆண்குறியின்மலர். இது, க்ஷத்திர சிகிச்சையினாலும், ரணத்தயிலம் முதலிய அவுஷதங்களினாலும் நிவர்த்தியாகும்.

## 15-வது கிரதிதரோகம்.

இது, கபத்தினால் கோசச்சுற்றில் முள்ளைநிரைத்ததுபோல் சிறுசிறு கொப்பிளங்களை நெருங்க உண்டாக்கும். கிரதிதம் என்பது நெருக்கம்.

## 16-வது பரிசஆனிரோகம்.

இது, ஆண்குறியின்மலரில் சிவந்தநிறத்தை உண்டாக்கி, தொடக்கூடாத உபத்திரவத்தைப் பிறப்பிக்கும். இதனால், சுக்கிலம் வெளிப்படமாட்டாது. பரிசம் என்பது தீண்டல், ஆனி என்பது நாசம்.

## 17-வது சதபோனகரோகம்.

இது, ஆண்குறிமுற்றிலும் சிறுசிறு துவாரங்களை உண்டாக்கும். இதனால், மூத்திரம் வரும்போதெல்லாம் எரிச்சல் அதிகரிக்கும்.

## 18-வது தொக்குப்பாகரோகம்.

இது, பித்த ரத்தத்தினால், ஆண்குறியின் சருமத்தைப் பழுத்து நையும்படிக்குச் செய்யும். இதனால், சுரமும் வேதனையும் உண்டாகும்.

## 19-வது மாமிசபாகரோகம்.

இது, ஆண்குறியின் முனைமலரை நையப்பண்ணி, பற்பல வேதனையை மேன்மேலும் பெருக உண்டாக்கும்.

## 20-வது ரத்தாற்புதரோகம்.

இது, ஆண்குறி முழுதிலும் ரத்தத்தினால் கருமை செம்மை நிறம் உள்ள கொப்பிளங்களைப் பிறப்பிக்கும். இதனால், அனந்தம் வேதனை உண்டாக்கும்.

## 21-வது மாமிசாற்புதரோகம்.

இது, ஆண்குறிமலரில்மாமிச நிறமுள்ள கட்டிகளை உண்டாக்கும்.

## 22-வது வித்திரதிரோகம்.

இது, திரிதோஷத்தினால், ஆண்குறியின் நரம்புகளில் வீக்கத்தை எழுப்பும். அது, கட்டியாகி நாலுபக்கங்களினும் பரவி, விரணமாகும். இதனால், சகிக்கக்கூடாத குத்தல் உண்டாகும்.

## 23-வது திலகாலகரோகம்.

இது, திரிதோஷத்தினால், ஆண்குறிமுற்றிலும், எள்ளு மிளகுப் பிரமாணங்களாய்க் கறுத்தநிறத்துடன் மாமிசத்தை மறுப்போலத்திரட்டித் தொங்கும்படிக்குச்செய்யும். அது உடைந்து விரணமாகும். இது, ஆரம்பத்தில் எள்ளைப்போல் உண்டாகிப் பின்பு பழுத்து உடைவதால் திலகாலகரோகம் எனப் பேர்பெற்றது.

ஆக குய்யரோகம் 23-ம் முற்றியது.

---

## சாத்தியாசாத்தியகுய்யரோகநிதானம்.

குய்யரோகம் 23-ல், உபதம்ஸம் 1, தவிர மற்றை 22-ல் மாமிசாற்புதம், மாமிசபாகம், வித்திரதி, திலகாலகம், இந்நான்கும் அசாத்தியமாம். மேற்கூறிய குய்யரோகங்களை, அக்கினிபுஷ்டி அவுஷதங்களாலும், மேகாரி எண்ணெய்களாலும், விரணச்சிகிச்சைகளாலும், வசப்படுத்தவேண்டும்.

---

சித்தார்மதாந்தரம்.

## பிரமேகோற்பத்திலக்ஷணம்.

சித்தர்கள் இதனையே, பிரமியரோகம் எனக்கூறுவர்.

சதா ஸ்திரி போகம், மோகத்துடன் பட்டினியாயிருத்தல், தம்பனச்சூடு, காரம், உப்பு, துவர்ப்பு இவைகளை அதிகமாகப் புசித்தல், மனக்கிலேசம் என்னும் இச்செய்கைகளினால் பிரமேகம் பிறந்து, முதல் முதல் முதுகந்தண்டெலும்புகளை வரிசையாகப்பற்றி, அதற்பின் நாபியைச்சுற்றிக்கொண்டு, குய்யஸ்தானமாகிய மூலாதாரத்தை அண்டி

மிருந்தநோவோடு நரம்பையும் எலும்பையும் சூழ்ந்து சோணிதத்தில் கலந்து, அடிவயற்றில் இசிவை உண்டாக்கி வேதனையைக்கொடுக்கும்.

## பிரமேகரோகபேதம்.

பிரமேகரோகமானது, வாதப்பிரமேகரோகம் ஆதியாக விரணப் பிரமேகரோகம் ஈருக 21-விதப்படும்.

## 1-வது வாதப்பிரமேகரோகம்.

இது, கோமூத்திரம்போல் நீரிறங்கல், கோசத்தின் அடியில் வலித்தல், வெளுத்துக் கட்டியாகச் சீழ்வடிதல், பீசத்தில் கனத்தலுடன் நோவு, அடிவயிற்றின்பக்கத்தில் பரபரத்தவேதனை, கனகனப்பு, வயிற்றில் இசிவு சரீரவாட்டம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 2-வது பித்தப்பிரமேகரோகம்.

இது, சரீரத்தில் மிகவும்வாட்டம், தயக்கம், சகல கீல்களிலும் கால்களிலும்நோவு, தேசத்தில் கருமைநிறம், எரிச்சல், குதத்திலும் குய்யத்திலும் கடுப்பு, மஞ்சள்நிறமான சீழ்வடிதல் அருசி, கை கால் ஒய்ச்சல், கோசத்தில் விம்மலோடுநோவு என்னும் இக்குணங்களைஉண்டாக்கும்.

## 3-வது சிலேஷ்மப்பிரமேகரோகம்.

இது, கோசத்தில் நோவுடன்கடுப்பு, அடிக்கடி வெண்மையாக நீரிறங்கல், தேகத்தில் பழுத்தவன்னம், உஷ்ணம், வாய் கண் நகம் இவைகளில் ரத்தம் இல்லாமை என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது வாதபித்தப்பிரமேகரோகம்.

இது, சர்வாங்கத்திலும் நோவு, கோசத்தில் சலாகை சொருகினதுபோல் இருத்தல், அதில் நின்றும் மாவைக்கரைத்ததுபோல் சுறுக்குடன் நீரிறங்கல், வயிற்றில் கட்டி எழும்புவதுபோல் இருத்தல், மலமிறுகல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 5-வது பித்தசிலேஷ்மப்பிரமேகரோகம்.

இது, வாய்கசத்தல், அடிவயிற்றில் பொருமலுடன் இசிவு, கோசம் சுருங்குதல், மஞ்சளாயும் வெண்மையாயும் நீரிறங்கல், கீல்நோவு, பகல் நித்திரை, பசி இன்மை, சரீரம் ஊதல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## 6-வது தொந்தப்பிரமேகரோகம்.

இது, சரீரத்தில் தினவு, புழுக்கள் ஊருதல்போலூருதல், அடிவயிறுசுரத்தல், கோசத்தில் கருமைநிறம், அடிக்கடி கடுத்து நீரிறங்கல், அதைப்பிடித்துப் பார்க்கில் அடியில் பலநிறமாகத்தோய்ந்திருத்தல், கவிசிநோய்காணல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 7-வது கட்டிப்பிரமேகரோகம்.

இது, சரீரமுழுதும் சகிக்கக்கூடாத நோவுடன் கட்டிகள் எழும்புதல், கோசத்தில் சொறியுடன்தினவு, பருக்கைப்போல் சீழ்வடிதல், பீசத்தில் நீர்கசிதல், தேகவாட்டம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 8-வது சலப்பிரமேகரோகம்.

இது, சர்வாங்கவேதனை, வாய்கசத்தல், வாந்தி, மயக்கம், மூத்திரக்கசிவினும், வெளுத்தநீரிறங்குதல், அடிவயிற்றில் பிடுங்கல், மலத்தில் சீதம் விழுதல், அரையாப்புக்கட்டி என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 9-வது தந்திப்பிரமேகரோகம்.

இது, அடிவயிற்றில் புண்போல்நோதல், வீணுதண்டினது அடியில் விருவிருப்பு, விம்மல், நீர் இறங்கியவுடன் தந்திபோல் மேகந்தொங்குதல், வெள்ளைகாணல், இதனுல் அடிக்கடி சிலைநனைதல், கை கால் எரிவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 10-வது ரத்தப்பிரமேகரோகம்.

இது, தயக்கம் தலைதிருப்பல், சரீரம்பஞ்சைப்போல் மெதுவுறல், முயல் ரத்தமெனசிவந்து சுறுக்குடன் அடிக்கடி வேதனையைத் தருவதாய் நீர் இறங்கல், பேய்போல் அலைதல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும்.

## 11-வது சீழ்ப்பிரமேகரோகம்.

இது, கோசத்தினது நாளத்தில் கடுப்புடன் சீழைப்போல் வெள்ளைகாணல், அரையாப்பு, பகந்தரம், நாபியில்விரணம், கணுக்காலில் குடைச்சல், அடிக்கடி நீரிறங்குதல், அதிக குளிரோடு சுரம், மயக்கம், வேதனை, சர்வாங்கநோவு என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 12-வது ஒழுக்குப்பிரமேகரோகம்.

இது, கோசத்தினது துவாரவழியில் நின்றும், சீழ் ரத்தம் சலம் ஆகிய இவைகளைப்போல் மேகம் ஒழுகுதல், சரீர முழுதுங்கருமையுள்ள முளைக்கட்டிகள் எழும்பல், கனத்தவிரணம், குடைச்சல், எரிச்சல், வெகு நோவோடுபுரளல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 13-வது அரித்திராப்பிரமேகரோகம்.

இது, மஞ்சள்நிறமான வெள்ளைகாணல், சூடாகநீரிறங்கல், அந்த இடத்தில் நெருப்பைக் கொளுத்தினதுபோல் எரிச்சலுடன் கூடிய கடுப்பு, விருவிருப்பு, அதிக உஷ்ணம், முகத்தில் மஞ்சள்நிறம், நாவில்கசப்பு, மனது திடுக்கிடல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 14-வது மூத்திரக்கிரிச்சரப்பிரமேகரோகம்.

இது, குத்தலுடன் மஞ்சள் நிறமான நீர் இறங்கல், துர்ப்பலம், நீர்க்கட்டு, நித்திரைப்பங்கம், அன்னத்திவேஷம், மனோசஞ்சலம், சர்வாங்கத்திலும் உளைச்சல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 15-வது கரப்பான்பிரமேகரோகம்.

இது, வயிற்றில் உளைச்சல், சீதம்விழல், நீரானது உஷ்ணமாகவும் கடுப்பாகவும் இறங்குதல், ஒருவேளை அத்துவாரத்தைப் புண்ணாக்கிச் சுண்ணாம்புக் கல்லைக் கரைத்தசலம்போல் குத்தலுடன் இறங்கல், அழலையாய் வாட்டத்துடன் கை கால் ஓய்தல், உடம்பெல்லாம் நெருங்கிய பெருஞ்சொறி என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 16-வது கல்லுப்பிரமேகரோகம்.

இது, கோசத்தில் கள்ளைப்போல் மேகநீர் கசிதல், தேகத்தில் கற்றுழை நாற்றம் வீசுதல், வயிற்றில் கல்லைப் போல் மூத்திரம் சிக்கிக்கொண்டு விம்மி விருவிருப்புடன் நாபியைப்பற்றி உப்பிசமாகி உப்பிப் பசியை அடக்கிக் கனத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 17-வது தந்துப்பிரமேகரோகம்.

இது, கோசத்தில் நோவுடன் சிலந்தி நூலைப்போல் மேகம் தொங்குதல், வெளுத்த உதிரங்காணல் அக்கோசம் விம்மும்போது வலித்தல், மடிப்பில் கிருமிசேருதல், விலாவில்குத்தல், மூத்திரம் துளித்துளியாக் வீழ்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 18-வது நீச்சுப்பிரமேகரோகம்.

இது, கள்ளை ஒத்த நீர் இறங்குதல், வெளுத்த சீழ் வடிதல், கோசம் விம்மும்போது நோவு, குத்தல், விருவிருப்பு, நரம்பு சுருங்குதல், அடிவயிற்றிற் சூலை, குளிர் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 19-வது மலினப்பிரமேகரோகம்.

இது, குய்யஸ்தானம், குதஸ்தானம் ஆகிய இவ்விடத்து அடிநரம்புகளில் குத்தலுடன் அடிக்கடிநோவு, காந்தியீனம், மயக்கம், நாவுகைத்தல், புறங்காலிற்றிமிர், வெள்ளை காணுதல், அவ்வீணு தண்டின் முனையில் துர்மாமிசம் சுருண்டிருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 20-வது மதுப்பிரமேகரோகம்.

இது, ஆண்குறியில் நோவுடன் தேன்போல் நீரிறங்குதல், அந்த நீரில் எறும்பு மொய்க்குதல், நாளத்திற்குள் விரணம், உடம்பில் ஒருவித நாற்றம், அருசி, நாக்குவறளல், மயக்கம் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 21-வது விரணப்பிரமேகரோகம்.

இது, சர்வாங்கத்திலும் மிகுந்தநோவுடன் விரணம், ஆண்குறி கனத்தல், அதில்நின்றும் சீழும் ரத்தமும் அதிகரித்தல், அக்கணுவில் கறடுகட்டி நோதல், கடுத்தல், விருவிருத்தல், சரீரம் வெதும்பல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். இவைகள், விளாம்பிசின்சூரணம், பிரமதண்டினதுபால், வெண்குங்கிலிய நவநீதம், ஷை தயிலம், மேகாந்தப் பெருந்தயிலம், மேகநாதக் குளிகை, கருவங்கச் சிந்தூரம், வெள்ளிபஸ்பம் முதலிய அவுஷதங்களால் தீரும்.

ஆக பிரமேகரோகம் 21-ம் மதாந்திரமும் முற்றியது.

## யோனிரோகலக்ஷணம்.

சரீரத்திற்குப் பொருந்தாத வஸ்துக்களுடன் கலப்பான போஜனம், மேடுபள்ள ஸ்தானத்தில் படுக்குதல், வெகுபுருஷ சஞ்சாரம், மாதாந்த ருது தோஷம், ஆண்குறித்தோஷம், அனலாதி வெப்பம், தகாதநடத்தை, தேவதாபிரயோகம் ஆகிய இச்செய்கைகளை உடைய ஸ்திரீகளுக்கு வாதயோனிரோகம்முதல் சந்நிபாதயோனிரோகம்ஈறாக20-விதரோகம்பிறக்கும்.

## 1-வது வாதயோனிரோகம்.

இது, வாயுவானது அல்குலில் நிறையுங்காலத்தில் பிறக்கும். இதனுல், அவ்விடத்தில் கிருமி நெளிவதுபோல் இருத்தல், அச் சருமஞ் சொறசொறத்தல், அம்மார்கத்தில் சறுத்தும் சிவந்தும் நுரைத்தும் சுடுகையுடன் கொஞ்சம் ரத்தம்வடிதல், இரண்டு கவுட்டியிலும் நோதல், அடிவயிறு கனத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 2-வது பித்தயோனிரோகம்.

இது, பித்ததோஷமானது அல்குலில்பரவுங்காலத்தில் பிறக்கும்.இதனுல், அவ்வழியால் மஞ்சள் கறுப்புநிறத்துடன் சுடுகையாய்ப்பிணநாற்றங் கமழ்கின்ற உதிரம்வடிதல், தாகம், சுரம், சரீரத்தில் அக்கினிச்சுவாலை வீசுதல், தூக்கந்தம் பிறக்குதல் என்னும் இக்குணங்களுண்டாகும்.

## 3-வது சிலேஷ்மயோனிரோகம்.

இது, சிலேஷ்மமானது அல்குலில் தங்குங்காலத்தில் பிறந்து, அவ்விடத்தில், சீதளம், தினவு, வேதனை யின்றி வெளுத்த ரத்தம் ஒழுகுதல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

## 4-வது உதாவர்த்தயோனிரோகம்.

இது, அல்குல் ஸ்தானத்தில் மிகுந்த உபத்திரவத்தையும், அம்மார்க்கத்தில் நுரைத்த ரத்த ஒழுக்கையும் உண்டாக்கும்.

## 5-வது உபபுலுதயோனிரோகம்.

இது, அல்குல் ஸ்தானத்தை வெண்மையாக்கி, அச்சருமத்தை நையப்பண்ணும். இதனுல், அவ்விடம் சுட்கித்துப் பஞ்சடித்த களம் போல் திரைந்திருக்கும். உபபுதலும் என்பது உபத்திரவத்தை உண்டாக்குதலாம்.

## 6- வது ரத்தயோனிரோகம்.

இது, நிதம்ப ஸ்தானத்தில் சகிக்கக்கூடாத உபத்திரவத்தையும், மிகுந்த ரத்த ஒழுக்கையும் உண்டாக்கும்.

## 7-வது சாதக்கினியோனிரோகம்.

இது, அல்குல்வாயில் வெடி எழும்பிய பிரேங்கிவாயின் சுடுகையைப் போல் சுடுகையை உண்டாக்குவதுமன்றி, அவ்விடத்து உதிரத்தையும் கொதிப்பிக்கும். இதனுல் வயிற்றில் ஏழுமாதத்திற்கு உட்பட்ட சிசுவா

யிருந்தாலும் அது மரித்து விழுந்து விடும். இதற்குத் தாமரைப்பூ ரசாயனமும், பூரணசந்திரோதய மாத்திரையும் நன்மையைச் செய்யும்..

## 8-வது அந்தர்முகியோனிரோகம்.

இது, எந்த ஸ்திரிகளாவது, வயிறு நிறம்பப்புசித்து, உடனே மேடு பள்ளஸ்தானத்தில் படுத்துக், கடின சையோகத்திற்கு இடங்கொடுக்குங் காலத்தில் பிறக்கும். அதன்விவரம்:—அம் மாதருக்கு வாயுவு அதி கரித்து அந்தர்முகமாக எழும்பி, யோனிஸ்தானத்தில் உபத்திரவத்தை யும், அசைவிரிக்கக்கூடாமையையும், பூ ஒதுங்குவதால், அங்குள்ள எலும்பு மாமிசாதிகளில் வேதனையையும், அடிவயிற்றிற் சூலையையும் உண்டாக்கும்.

## 9-வது சுட்கயோனிரோகம்.

இது, மாதாந்த ருதுகாலத்தில் புணர்ச்சியை விரும்பிய மாதர்கட் குப்பிறக்கும். அதன்விவரம்:—சுபாவமாக விழுகின்ற ரத்தமானது சையோகத்தினால் உள்ளுக்குள்ளே மறிபட்டு, மலமூத்திரச் சிக்கலை நாள் தோறும் பிறப்பித்துக் கொண்டே இருந்து, அதற்பின் கடிதடத்தில் சூம் பலும் உபத்திரவமும் உண்டாகும்படிக்குச் செய்யும்.

## 10-வது வாமினியோனிரோகம்.

இது, வாயுவைக்கொண்டு பிரசவித்த ஆறுநாளிலாவது ஏழுநாளி லாவது, கருப்பாசயத்தில் இருக்கின்ற கோழைக் கபத்தை ஒழுகச்செய் யும். இதனால், உபாதி இருந்தாலு மிருக்கும். இது, வாந்திஎடுப்பதுபோல் அல்குலினின்றும் கோழைவிழுவதால், வாமினி யோனிரோகம் எனப் பேர் பெற்றது.

## 11-வது லோகிதசுட்கயோனிரோகம்.

இது, வாத பித்த கபங்களினால் யோனிக்குள் இருக்கும் உதிரமா னது உலரப்படுங்காலத்தில் பிறக்கும். இதனால், அந்த இடத்தில் சிவந்த நிறமும் சுட்கமும் எரிச்சலும் உண்டாகும்.

லோகிதம் என்பது சிவப்பு.

## 12-வது பரிப்புலுதயோனிரோகம்.

இது, சையோக காலத்தில் தும்மலையும் ஏப்பத்தையும், அடக்குவ தால் பிறக்கும். இதனால், யோனிஸ்தானம் உப்பல், அதைத் தொடக்

கூடாத வேதனை, கறுப்பும் மஞ்சளுங்கலந்த நிறமான ரத்தம் ஒழுகுதல், நோவோடு கனப்பு, ஒருவேளை பேதி, அரோசகம், கவுட்டியிலும் பிட்டத்திலும் குத்தல், சுரம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். புலுதம் என்பது வடிதல்.

## 13-வது மகாயோனிரோகம்.

இது, வாயுவானது யோனிஸ்தானத்திலும் வயிற்றிலும் கருப்பஸ்தானத்திலும் சஞ்சரித்துப் பூரிக்கும்போது பிறக்கும். இதனால் அல்குலானது நாளுக்குநாள் துர்மாமிசத்தினால் மேன்மேலும் வளர்ந்து விசாலமாகப் பருப்பதுமன்றிச் சிலவேளை மிகுந்த நோவையும் தரும்.

## 14-வது ஷண்டயோனிரோகம்.

இது, கருப்பகாலப் புணர்ச்சியால் பிறக்கும். அதன் விவரம்:—புருஷனுடைய விந்துவின் சுடுகையினால், அல்குல் ஸ்தானம் வெந்தமாமிசம்போலாகுவதுமன்றிச், சில நாட்சென்று. இரண்டு ஸ்தனமும் ஒட்டி உலர்ந்துவிடும்; பின்பு இந்த ஸ்திரியானவள் புருஷனைச். சொப்பனத்திலும் விரும்பாள். இது, ஸ்திரி உருவத்தை மாற்றி நபோஜகத் தன்மையைத் தருதலால் ஷண்டயோனிரோகம் எனப் பெர் பெற்றது.

ஷண்டம் என்பது நபோஜகம்.

## 15-வது அதிசரணயோனிரோகம்.

இது, பருத்த ஆண்குறியை யுடைய புருஷசையோக மிகுதியினால் பிறக்கும். இதனால், அல்குலில் வீக்கமும் கன உபத்திரவமும் உண்டாகும். அதி என்பது அதிகம்; சரணம் என்பது சஞ்சரித்தல்.

## 16-வது சூசிமுகயோனிரோகம்.

இது, வாதாதிக்க வஸ்துக்களை மிதமின்றி நித்தியமும் புசித்து உடனுடனே புணருவதால், வாயுவு கருப்பாசய ஸ்தானத்தில் நிலைக்கப்படுங் காலத்தில், பிறக்கும். அதன்விவரம்:—அவ்வாயுவினால் மாமிசந் தூலித்து, அல்குலின் துவாரத்தை ஊசி நுழையுந்துவாரம் போலாக்கி, சையோகத்திற்கு இடம் இல்லாமல் செய்துவிடும். ஒருவேளை வலுவில் யத்தனித்தால், அதிக உபாதியும் ரத்தப் பிரவாகமும் உண்டாகும். சூசி என்பது ஊசி. இதற்குத் தக்கை யிட்டுத் துவாரத்தைப் பருக்கப்பண்ணுவதும், வாதாரிக் கிருதங்களை உள்ளுக்குச் செலுத்துவதுந்தான் சிகிச்சை.

## 17-வது பராக்சரணயோனிரோகம்.

இது, ருதுவாகாக்கன்னியர்கள் புருஷனைப் புணருவதால், கருப்பாசய ஸ்தானத்தில் சேருகின்ற இளம் உதிரமானது கெடுதியை யடையுங் காலத்தில் பிறக்கும்; அப்போது அல்குல் ஸ்தானம் அவ்வுதிரத்தால்கலங்கி நிற மாறுவதுமன்றி, நடுமுதுகில் குத்தலும், கவுட்டி தொடை என்னும் இடங்களில் நோவும் உண்டாகும். இதனால், பலரோக சம்பவம் நீடித்து வருத்தும். பராக்கு என்பது ருதுகாலத்திற்கு முன்பாம்.

## 18-வது கண்டுலயோனிரோகம்.

இது, மிகுந்த சையோகத்தினால் அல்குல் ஸ்தானத்தி லிருக்கின்ற உதிரம் கெடுதியை அடைந்து, அதில் கிருமிகள் சனிக்கும்போது பிறக்கும். இதனால், அங்கு அதிகநமைச்சலும், அந்த நமைச்சலினால் எப்போதும் சைதயோகத்தில் மிகுந்தவிருப்பமும் இதவும் உண்டாகும். இது, வெள்ளைப்பூண்டு, ஓட்டறை, துமட்டிக்காய், வாய்விளங்கம், கண்டங்கத்திரிப்பழம் என்னும் ஐந்துசரக்கையும் சமமாக மெதுவுற அரைத்து ஏழுநாள் லேபனம் பண்ணிக் குளிக்க, சந்தேகமறவிலகும்.

## 19-வது கர்ன்னிகாயோனிரோகம்.

இது, அகாலசையோகத்தால் வாயுவு அதிகரித்து ரத்தத்தைக் கெடுக்கும்போது பிறக்கும். இதனால், அல்குலின் துவாரத்தி லவ்வாயுவினால் திரண்ட உதிரமானது தூர்ம்மாமிசநிறத்தை யொத்துத் தாமரைக் காயைப்போலும் விழுது விட்டதுபோலும் தொங்கும். இதனைச்சிலர் தசை அண்டம் என்பவர். கர்ன்னிகா என்பது தாமரைக்காய்.

## 20-வது விப்புலுதயோனிரோகம்.

இது, அதிமோகங் கொண்டு நினைத்தபோதெல்லாம் பலவகைப் பந்தத்துடன் புருஷனைப் புணர்வதுமன்றி, அப்புருஷனை இடைவிடாது தன் பார்வைக்குள் வைத்திருக்குங் காரணத்தால் பிறக்கும். இதனால், அல்குல் ஸ்தானமுற்றுங் கலங்குவதும், அதில் மாறாது மதசலம் வடிவதும், தேகம் நாளுக்குநாள் தூர்ப்பலப்படுவதுமாக இருக்கும்.

## 21-வது சந்நிபாயோனிரோகம்.

இது, அல்குல் ஸ்தானத்திலும், கருப்பஸ்தானத்திலும், திரிதோஷத்தைச் சஞ்சரிக்கச்செய்து, அவ்விடங்களில் அனந்தரோகங்களையும்

மகாவிரணங்களையும் பிறப்பிக்கும். இந்தரோகத்தை அனுபவிக்கின்ற மாதர் சட்கு ரத்தசிராவம், மூலம், ரத்தகுன்மம், அதிசூலம் என்னும் இந்நான்குரோகங்களும் ஒருமித்தாவது தனித்தாவது உண்டாகாதிருக்கில், அரோகதிட காத்திரமும், நல்லகருப்பமும் உண்டாகும். ஆக யோனிரோகம் 21-ம் சம்பூரணம். மேற்கூறிய யோனிரோகங்கள், அரக்குக்கஷாயம், பாவனபஞ்சாங்குலத்தயிலம், நிம்ப ஏரண்டகல்க்கம் முதலிய அவுஷதங்களால், சாத்தியமாகும்.

பதின்மூன்றாவது விரணபேதபடலம் முற்றியது.

---

## 14-வது விஷாதிபேதபடலம்.

---

### விஷபேதம்.

உலகத்தில், விஷமானது, கிருத்திரமவிஷம், அகிருத்திரமவிஷம் என இருவகைப்படும். இவற்றுள், கிருத்திரமவிஷத்தை முதலிற்கூறுவாம்.

### கிருத்திரமவிஷம்.

நாபி முதலிய விஷப் பூண்டுகளையாவது, பாம்பு முதலிய செந்துக்களின் விஷங்களையாவது, மற்றொரு வஸ்துவிற்கலந்து கொடுக்கப்படுவது கிருத்திரமவிஷமாம். இதற்கு, இடுமருந்தென்றும், கரமென்றும் பெயர்.

### கரம் என்கிற இடுமருந்தின்வகை.

ஸ்திரிகள் புருஷர்களையும் புருஷர்கள் ஸ்திரிகளையும், தொழிலாளிகள் தங்கள் யசமான்களையும், வசியப்படுத்தும் பொருட்டு, அன்ன முதலிய உண்ணும் பண்டங்களிலாவது, நீர் முதலிய பானஞ்செய்யும் பொருள்களிலாவது, தாம்பூலாதிகளிலாவது சேர்த்துக்கொடுக்கப்படுகிற பற்பல செந்துக்களின் கபாலபஸ்மம், அற்பவீரியவிஷம், மல மூத்திர அவுஷதம், பச்சிலை மூலி என்னும் இவைகளாம்.

### கரபக்ஷணலக்ஷணம்.

முற்கூறிய மருந்தை அன்னபானாதிகளில் ஒருவர்கொடுக்க, அதை இன்னதென்று தெரியாமல் புசித்தவருக்கு, முகம்வெளிறல், சரீரமிளைத்தல், மந்தாக்கினி, இருமல், இரைப்பு, வாதாதிக்கம், மகோதரம், குண்

டிக்காயாகிய யகுர்தபிலீகத்தில் நோவு, தூர்ப்பலம், ஈனத்தொனி, மனோ துக்கம், வயிறுப்பல், நித்திரையில்பிரமை, சீரணவாதம், நாசியமுங்கல், கண்குழிவிழுதல், தன்னுடம்பு தனக்குத்தானே பலநிறமாகத் தோற்றல் என்னும் இக்குணங்க ளுண்டாவதன்றியும், நரி, பூனை, கீரிப்பிள்ளை, பாம்பு, குரங்கு, நீரில்லாக்குளம், எரிந்துகருகியமரம் என்னும் இவை களைக்காணுகின்ற கனவும் உண்டாகும். இக்குணங்கள் ஆரம்பிக்கும் போதே விஷாரிச்சிகிச்சையும் ஆரம்பித்தால், சாத்தியமாம், நீடித்தால், அசாத்தியமாம்.

## விஷான்னலக்ஷணம்.

விஷங்கலந்த அன்னத்தை உற்றுப்பார்க்கில், சோருதல், மூர்ச்சை, வாய்நீர்சுரக்குதல் முதலிய துர்க்குணம் உண்டாவதன்றியும், அந்த அன் னத்தின் வாசனையும் உருவமும் வேறுவிகாரமாகிச் சுபாவநிறம் நீங்கி, ஒவ்வொரு அன்னம் பிளப்புகளுள்ளதாகவும், சில அன்னம் ஒன்றோ டொன்றுசேர்ந்து உண்டைஉண்டையாகவும், பார்வைக்கு நிலவைப்போல் தளதளப்பானதாக வும், புசித்தால் பழையதின்வாசனையைத்தருவதாக வும், வெகுநேரஞ்சென்று சீரணத்தையடைவதாகவும் இருக்கும்.

## விஷவியஞ்சனலக்ஷணம்.

விஷங்கலந்த கறிபதார்த்தங்களை உற்றுப்பார்த்தால், உலர்ந்தது போலவும், கறுத்தகஷாயவன்னமாகவும், சுபாவருசிநீங்கி வேறு விகாரருசி உள்ளதாகவும் இருக்கும். அன்றியும், அக்கறிகளின்மீது, அற்பநுரை யும், சீமந்தரேகையும், நீர்ச்சுமிழிபோல் சிறிடசுமிழியும் எழும்பும்.

## விஷம்வைப்பனுக்கு உண்டாகின்ற லக்ஷணம்.

விஷம்வைக்கிற காதகனுக்கு, வாயுலரல், சுற்றும் பிற்றும் பார்க்கு தல், வியர்வையோடு நடுக்கல், தேகமரத்தல், பயம், நடைச்சுப்போது சால் தத்தளித்தல், கொட்டாவி என்னும் இச்குணங்கள் உண்டாயிருக்கும்.

## விஷான்னபரீக்ஷை.

விஷங்கலந்த அன்னத்தை அக்கினியிலிட்டால், சுவாலைஎழும்புத லுடன், மயில்கண்டத்தின் நிறத்தையொத்தபுகையும், அதில் துர்க்கந்த வாசனையும் உண்டாகும். அதை ஈ மொய்த்தால், இறக்கும்; காகம் கிட்டில் ஈனத்தொனியோடுகத்தும்; கிளி, பூவை, பார்த்தால் கூச்சலி

டும்; அன்னப்பக்ஷிக்குக்கால் தத்தளிக்கும்; வலியான் குருவி களைத்து விழும்; சகோரப்பக்ஷிகண்டால், கண்ணுல்சலத்தைவடிக்கும்; கிரவுஞ்சபக்ஷிநோக்கில், பித்துக்கொள்ளும்; புறு, குயில், சக்கரவாகப்புள், நீர்க்காக்கம், முதலிய பட்சிகளுக்கு உயிர்நீங்கும்; பூனை பயப்பட்டோடும்; குரங்கு கண்டால், மலபாதை பண்ணிக்கொள்ளும்; மயில்பார்த்தால், உடனே திருஷ்டியை இழந்து மயங்கும் என்னும் இப்பரீக்ஷைகளினுல் அன்னத்தில் விஷங்கலந்ததென்றறிக.

## விஷான்னசீரணலக்ஷணம்.

விஷங்கலந்த அன்னம் வயிற்றில் சீரணித்தால், அப்போது நமைச்சல், தேகம்எரிச்சல், அக்கினியிலும் புகையிலும் சிக்கினதுபோல் வருத்தம், சுரம், இளைப்பு, கொப்பிளம் எழும்புதல், நித்திரை விரைவில் நகம் வளரல், ரோமம் உதிரல், வீக்கம், வியர்வை என்னும் இக்குணங்கள் உண்டாக்கும்.

## ஆசியகதகரான்னலக்ஷணம்.

விஷங்கலந்த அன்னத்தை வாயிற்போட்டுமிழ்ந்தவருக்கு, உடனே வாயில் சொள்ளுவடிதல், உதட்டிலும் நாவிலும் திமிர், விருவிருப்பு, தந்தங்களில் சிலுசிலென்கிற ஒருவிதநோவு, அறுசுவையும் ருசிமாறுதல், மூர்ச்சை, தாள்பிடிப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## ஆமாசயகதகரான்னலக்ஷணம்.

மேற்கூறிய அன்னத்தைப்புசித்து, அவ்விஷமானது ஆமாசயஸ்தானத்தில் ஊறினுல், தேகத்தில் புடைகள் எழும்புதல், வியர்வை, மூர்ச்சை, வயிறுப்பல், மதம், பிரமை, ரோமச்சிலிர்ப்பு, வாந்தி, தாகம், கண்ணோவு, மார்புநோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## பக்குவாசயகதகரான்னலக்ஷணம்.

விஷ அன்னம் வாதஸ்தானத்தில் ஊறினுல், பற்பல வாந்தி, அதிமூத்திரம், அதிசாரம், சோம்பல், சரீரம் இளைத்தல், வயிறுவெளிறல், துர்ப்பலம் என்னுமிக்குணங்கள் உண்டாகும். கிருத்திரவிஷம் முற்றியது.

## அகிருத்திரமவிஷலக்ஷணம்.

அகிருத்திரமவிஷம் என்பது தாபரவிஷம், சங்கமவிஷம் என இருவகைப்படும். இவற்றுள், தாபரவிஷத்தை முதலிற் கூறுவாம்.

## தாபரவிஷபேதம்.

விருக்ஷம், பூண்டு, செடி, கொடி, புல் ஆகிய இவற்றின், கிழங்கு, வேர், பட்டை, பால், பிசின், இலை, புஷ்பம், காய், கனி முதலியவைகளி லும், பாஷாணம் என்னும் தாதுக்களிலும் இருக்கின்ற விஷம் தாபர விஷமாம்.

## விஷக்கிழங்கின்பேதம்.

சங்கோசகம், * கரவீரம், ‡ இலாங்கலிகம், தைலகம், கர்க்கடகம், குசபுஷ்பம், கேதுபுஷ்பம், ரோமஹரிஷம், ஸ்திரிங்கி முதலிய கிழங்கு களுக்குக் கந்தவிஷம் எனப்பேராம். இவைகளைத்தின்றால், உயிரானது நீங்கியேவிடும்; அல்லது ஒருவேளை நிலைத்தால், தேகத்தில் சுரம், விக்கல், தாள்பிடிப்பு, பல்கூசுதல், இரைப்பு, இருமல், மூர்ச்சை, அரோசகம், தொண்டை அடைப்பு என்னுமிக்குணங்களுண்டாகும். ஆனால், இக் கிழங்குகளின் சம்பந்தப்பட்ட புஷ்ப பலாதிகளுக்கு மிவ்விஷமுண்டா யிருந்தாலும், அவைகள் இக்கிழங்கு வேர்களைப்போல் சீக்கிரத்தில் கொல் லாமல் சிலநாள்தடித்துக் காலாந்தரத்தில் கொல்லுமென்றறிக.

## விஷவேரின்பேதம்.

¶ தேனகம், சந்திரகம், குஞ்சனம், ஹாரிகம், [] கோரண்டகம், தர்க் கரகம், () சுகந்திரம் முதலியவேர்களுக்கு, மூலவிஷம் எனப்பேராம். இவ் விஷத்தினால், சோருதல், பிதற்றல், புறளல், பிரமை என்னுமிக்குணங்க ளுண்டாகும்.

---

* கரவீரம் என்பது அலரி; ‡ இலாங்கலிகம் என்பது கலப்பைக் கிழங்கு.

¶ தேனகம் என்பது பராமரம்; [] கோரண்டகம், என்பது மரு தோன்றி; () சுகந்திரம் என்பது பெருங்காயமர மூலம்.

## விஷப்பாலின்பேதம்.

1 காலவம், 2 புஷ்கரகம், 3 ஹாலாஹலம், 4 கர்த்தமம், 5 காலகூடம், சரஷபமுதலிய பால்களுக்கு, க்ஷீரவிஷமெனப்பெயராம். இவ்விஷத்தினால், நுரைத்தவாந்தியும், நாவுதடித்துக் கனத்தலும், மலபந்தமும் உண்டாகும்.

## விஷப்பிசினின்பேதம்.

6 கரஹாடகம், நாராசகம், 7 கர்கந்து, 8 கரஞ்சத்துவயம் முதலிய பிசின்களுக்கு, தொக்சாரநிரியாச. விஷமெனப்பேராம். இவ்விஷத்தினால், அரோசகம், கோழை, வாந்தி, நாவுதடித்தல், வாயில் துர்க்கந்தம், வயிறுப்பலுடன்வேதனை என்னும் இக்குணங்களுண்டாகும்.

## விஷஇலையின்பேதம்.

பதரம், கரம்பம் 9 விஷபத்திரம், 10 கரஞ்சம்முதலிய இலைகளுக்குப், பத்தர விஷமெனப்பெயராம். இவ்விஷத்தினால், கொட்டாவியும், புரளலும், பிரமையும் உண்டாகும்.

## விஷபுஷ்பத்தின்பேதம்.

மஹாகரம்பகம், 11 கரஞ்சம், 12 சில்லசம், 13 ரேணுகம் முதலிய புஷ்பங்களுக்குப் புஷ்பவிஷமெனப்பேராம். இவ்விஷத்தினால், வயிறுப்புதல், வாந்தி, சோருதல், மூர்ச்சை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

---

1 காலவம் என்பது வெள்ளைலொத்தி; 2 புஷ்கரகம் என்பது வெண்டாமரை, 3 ஹாலாஹலம் என்பது நாபி; 4 கர்த்தமம் என்பது சேராங்கொட்டை; 5 காலகூடம் என்பது எட்டி.

6 கரஹாடகம் என்பது மருவு; 7 கற்கந்து என்பது தொடரிப்பட்டை; 8 கரஞ்சத்துவயம் என்பது ஆயில்பட்டை பிசின்.

9 விஷபத்திரம் என்பது எட்டியிலை; 10 கரஞ்சம் என்பது பெருமரம்.

11 கரஞ்சம் என்பது புங்கின்பூ; 12 சில்லசம் என்பது தொட்டாற்சுருங்கி, 13 ரேணுகம் என்பது காட்டு மிளகு.

## விஷக்கனியின்பேதம்.

14 மூலகமுஸ்தகம், 15 முஷ்கம், வைராடகம், சஜுபகம், 16 மர்க்கவிகம், ஷாலகம், 17 சத்துவலாஹகம் முதலிய விஷக்கனிகளுக்குப் பலவிஷம் எனப்பேராம். இவ்விஷத்தினுல், அன்னத் திவேஷமும், தாகமும் இரண்டு பீசங்களில் வீக்கமும் உண்டாகும்.

## விஷதாதுவின்பேதம்.

தேநாமம், பஸ்மம், திலகம், ரத்தம் முதலிய தாதுக்களுக்குத் தாதுவிஷம் எனப்பேராம். இவ்விஷத்தினுல், இரண்டு தாடைகளின் உட்புறங்களில் அனல்வீசுதலும், மூர்ச்சையும், மார்புநோவும் உண்டாகும்.

## வாதகாலவிஷநிதானம்.

முற்கூறிய கந்தமூலாதி விஷங்களை வாதகாலத்தில் தின்றால், அவர்களுக்கு, மார்புநோவு, நரம்புவிருத்தல், எலும்புகளிலும் கீல்களிலும் நோவு, நடுக்கல், புரளல், தேகங்கறுக்குதல், ரோமச்சிலிர்ப்பு, வாயில் புளிப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## பித்தகாலவிஷநிதானம்.

மேற்கூறிய விஷவஸ்துக்களைப் பித்தகாலத்தில் தின்றவருக்கு, சரீரவீக்கம், மாமிசம்வுறளல், மார்பு எரிதல், வாயில் காரம், அக்கினிபோல் சுவாசம் வருதல், அறிவுநீங்குதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## சிலேஷ்மகாலவிஷநிதானம்.

அவ்விஷங்களைச் சிலேஷ்மகாலத்தில் தின்றால், அவர்களுக்குச் சரீரம் பாரித்துச்சில்லிடல், மார்புஅதிரல், வாயில் இனிப்புடன் நொப்பும் நுரையும்வீழல், அரோசகம், வாந்தி என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

---

14 மூலகமுஸ்தகம் என்பது கோரை; மூலகம் என்பது கருப்பூரவழுதலைப்பழம்; 15 முஷ்கம் என்பது விஷசெருந்தி; 16 மர்க்கவிகம் என்பது நாயுருவி; 17 சத்துவலாஹகம் என்பது மலை வன்னி மரம்.

## ஸ்தானபேதவிஷநிதானம்.

முற்கூறியவிஷங்கள் தேகத்தில் சிலேஷ்ம ஸ்தானத்தைப் பற்றினால், யாதொரு பிரயத்தனங்களும் இல்லாமலே உபாயச்சிகிச்சையால் சாத்தியமாம்: அவை பித்தஸ்தானத்தைப் பற்றினால், உண்ணுளக் கருவிச்சாதனமுதலிய சகல பிரயத்தனத்தைக்கொண்டும் சாத்தியமாம்; வாத ஸ்தானத்தைப்பற்றினால், எவ்வளவு பிரயத்தனஞ் செய்யினும் கஷ்டத்திலும் கஷ்டசாத்திய மாகவேமுடியும், அல்லது அசாத்தியமே.

## தாவரவிஷத்தின்சப்தவேகநிதானம்.

இந்தத்தாவர விஷத்திற்கு ஏழுவேகம் உண்டு. அவையாவன:—1-வது, நாவில்கறுப்புடன் மரத்தலும், வாந்தியும், பிரமையும், ஆயாசமும் பிறக்குதல்; 2-வது, நடுக்கலும், வியர்வையும், தாகமும், தொண்டைக்குள்வேதனையும், மார்புநோவும், தாண்டஉலரலும் உண்டாகுதல், இக்குணங்கள் ஆமஸ்தானத்தில் விஷம் வியாபிக்கில் பிறக்கும்; 3-வது, கண்களில் கருமைநிறம், மஞ்சள்நிறம் தோற்றி வயிற்றில் குத்தலும் நோவும் இரைச்சலும் பொருமலும் அதிகரித்து விக்கல்காணுதல்; 4-வது தலைநோவும் நுரைத்தவமனமும், மாறுமுகமும், தோற்றுதல்; 5-வது, திரிதோஷம் அதிகரித்து வாதஸ்தானத்தில் வேதனையைப் பிறப்பிப்பதால் சகலகீல்களிலும் உபத்திரவம் பெருகுதல்; 6-வது, தோள் இடுப்பு, முதுகு ஆகிய இடங்களில் நோவுண்டாகி ஞாபகம்நீங்குதல்; 7-வது, அவ்விஷம் சுக்கிலதாதுவைப்பற்றி ஏறுதல் என்பனவாம். இந்த ஏழில், ஐந்துவேகம்வரைக்கும் சாத்தியம். மற்ற 2-ம் அசாத்தியம்.

## தாவரவிஷ அசாத்தியநிதானம்.

தாவரவிஷங்களைத் தின்றவர்க்காவது, சர்ப்பக்கடி உண்டவர்க்காவது, விஷத்தில் தோய்ந்திருக்கின்ற அம்புமுதலிய ஆயுதங்களின் காயம் பெற்றவர்க்காவது, சகல சிகிச்சைகள் செய்தும் அவ்விஷம் இறங்காதிருக்கையில் உதடு கறுத்தல், பல்லுகள் அசைதல், முடி சோருதல், கண் சிவக்குதல், உடம்பும் நாசியும் சில்லிடல், உசுவாசநிசுவாசம் குளிர்ந்துவருதல், கீல்கள் தளரல், தலைமயிரின் முனைபிளக்குதல், ரோமஞ்சிலிர்த்தல், நாவுமரத்தல், பேதிகாணுதல், நவத்துவாரங்களிலும் ரத்தங்கக்குதல், அறிவுநீங்குதல்

என்னும் இக்குணங்கள்மேலிட்டால், அசாத்தியம். ஆயினும் முற்கூறிய கிருத்திரம விஷங்களை, நஞ்சறுத்தான் பூண்டுச்சுரசமும், அத்தபிலமும், மாட்டுப் பூசினிப்பழமும் முறிக்கும். அன்றியும், நாபியைத்தின்றவர்க்கு, வெண்காரம், பன்றிவிஷ்டை, புத்திரஜீவிவிதை, சிறுகீரைவேர், இவைகளை நெய்யிலரைத்துக்கொடுக்கில், விஷம் முறியும். ஊமத்தங்காயைத்தின்ற வர்க்கு, வாந்திக்குக்கொடுத்துப் பின்பு அழிஞ்சில் வேர்ப்பட்டையை எலுமிச்சம்பழச்சாற்றில் அரைத்துக்கொடுக்கவும். இவ்வண்ணமாகவே சிகிச்சாதீபிகை என்னும் சாஸ்திரத்தில் கூறிய சிகிச்சைகளை வழுவாமல் செய்யில் சகல தாவரவிஷங்களும் முறியும்.

## சித்தர்மதாந்தரதாவரவிஷபேதம்.

பலாபம், வத்சநாபம், முஸ்தகம், புட்கரம், கிரவுஞ்சம், சடம், மற்கடம், ஆரித்திரம், காலகூடம், இந்திரவச்சிரம், ஏகவீரம், ஹாரிகம், காலபம், ஸ்திரிங்கி, கற்கடகஸ்திரிங்கி, மேஸஸ்திரிங்கி, ஆலாஹலம், வியஞ்சனம், புண்டரீகம், சங்கோசம், மதுபாகம், ரோகிணம், சுரணம் என்னும் இப்பெயர்களை உடையதாவரவிஷங்கள் மனிதர்மீதுபடுமாயின், மரணத்தைக்கொடுக்கும். ஒருவேளை தெய்வமுயர்ச்சியினாலும் மணி மந்திர அவுஷதாதிகளினாலும் தப்பிப்பிழைத்தவர்கட்கு, இருமல், இரைப்பு, சூலை நடுக்கல், வாந்தி, தாகம், மூர்ச்சை என்னுமிக்குணங்களுண்டாகும். இது சுவாசம், ஸ்பரிசம், வாய், நா, பல், எலும்பு, நரம்பு, நகம், மலம், மூத்திரம், சுக்கிலம் ரத்தம், ரசம், மாமிசம், மேதை, மச்சை ஆகிய 16, ஸ்தானங்களைப்பற்றி வியாபிக்கும்.

மதாந்தரமும் தாவரவிஷநிதானமும் முற்றியது.

---

## சங்கமவிஷபேதம்.

சர்ப்பசாதிவிஷங்களுக்கும், கீடம், தேள், சிலந்தி, நாய், நரி முதலிய வற்றால் வருகின்ற விஷங்களுக்கும், சங்கமவிஷங்களென்பெயராம். இவற்றுள், சர்ப்பசாதிவிஷங்களை மாத்திரம் இப்படலத்தில் கூறப்படும்.

## சர்ப்பசாதிபேதம்.

...ப்பம் என்பது திவ்யசாதிசர்ப்பம், பௌமசாதிசர்ப்பம் என இரு வகைப்படும். இவற்றுள், திவ்யசாதியை முதலிற் சொல்லுவாம்.

## திவ்யசர்ப்பபேதம்.

அண்ட கோடிகளுக்குள் இராநின்ற சர்ப்பங்களில், தலைமையும் உத்தமசாதியும் கடவுட் பாம்புமாகிச் சிறப்புற்று அஷ்ட திக்குகளில் வாசஞ் செய்வதே திவ்யசாதி சர்ப்பமாம். அது, வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிசன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடன் என எண் வகைப்படும்.

### 1-வது வாசுகி.

இது, படத்திலும் முதுகிலும் கருங்குவளைப் பூவைப்போல் புள்ளிகளைத் தாங்கி, வந்தனைக்கு வசப்பட்டு, மணிமந்திர அவுஷதங்களைக் கடந்து, சினப்பார்வையா லுலகத்தை யெல்லாம் நீறுக்கும் பராக்கிரமத்தைப்பெற்று, கிழக்குத்திக்கில் வாசமாயிருக்கும்.

### 2-வது அனந்தன்.

இது, படத்தில் வெண்டாமரைப் பூவைப்போல் புள்ளிகளைத்தாங்கி மூச்சினால் உலகைப் பஸ்மம்பண்ணுந் திறத்தைப்பெற்று, தியானங்களுக்கு யோக்கியமுள்ளதாய் தென்கிழக்குத் திக்கில் வாசமாயிருக்கும்.

### 3-வது தக்கன்.

இது, படத்தில் அவசத்தின் வடிவான புள்ளிகளைத்தாங்கி, கோபம் வரில் திரிலோகத்தையும் எரிக்கின்ற வல்லபத்தைபெற்று, தோத்திரத்திற்கு உட்பட்டு, தெற்குத் திக்கில் வாசமாயிருக்கும்.

### 4-வது சங்கபாலன்.

இது, படத்தில் திரிசூலத்தைப் போலும் பிறையைப்போலும் புள்ளிகளைப்பெற்று, சுவாசத்தைக் கொண்டு உலகத்தைத் தகிப்பதாய்த் தென்மேற்குத் திக்கில் வாசமாயிருக்கும்.

## 5-வது குளிகன்.

இது, படத்தில் சங்கத்தை ஒத்த புள்ளிகளைப்பெற்று, சீற்றம்வரிற் சடைச்சண் பார்வையால் பெரும் புவனங்களை யெல்லாம் எரிப்பதாய்த் தியானவந்தனைக்கு வசப்பட்டு, மேற்குத்திக்கில் வாசமாயிருக்கும்.

## 6-வது பதுமன்.

இது, படத்திலும் முதுகிலும் பஞ்சகோணப் புள்ளிகளைப்பெற்றுக் குரோதம்வரில் உசுவாச நிசுவாசங்களா லகிலாண்ட நிலைகளைப் புகைப்பதாய், உபசாரத்திற் குட்பட்டு, வடமேற்குத்திக்கில் வாசமாயிருக்கும்.

## 7-வது மகாபதுமன்.

இது, படத்திலும் முதுகிலும் ராஜவர்த்தனக் கல்லையொத்த புள்ளிகளைப் பெற்று, கறுவத்தால் கண்சிவக்கில் அகிலகோடிகளை அழிப்பதாய் நமஸ்காரத்திற் குட்பட்டு வடக்குத்திக்கில் வாசமா யிருக்கும்.

## 8-வ்து கார்க்கோடன்.

இது, படத்திலும் முதுகிலும் மூன்று கண்களைப் போல் புள்ளிகளைப்பெற்று, வெறுத்தல் வரில் சர்வசங்காரகாலம்போல் ஈரேழுலகும் நாசஞ்செய்வதாய் வடகிழக்குத் திக்கில் வாசமாயிருக்கும். இக்கடவுட்பாம்பாகிய அஷ்டமாநாகங்களும், மேற்சொன்ன குறிகளுடன் அக்கினி உருவத்தை அடைந்து, மரணபவங்களைநீங்கி, தாமே பிரகாசிப்பதுகளும் மற்றொன்றைப் பிரகாசிக்கச் செய்வதுகளுமாகி, பூபாரத்தைத் தாங்குஞ் சக்தியைப் பெற்றிருக்கும். இவைகள் ஒருவேளை ஈஸ்வராக்கினையால் யாரையாவது தீண்டில், அவ்விஷத்திற்கு, ஆயுள்வேதத்தில் எவ்வளவும் அவுஷதம் இல்லை என்றறிக.

ஆக திவ்யசர்ப்ப நிதானம் 8-ம் முற்றியது.

---

## பௌமசர்ப்பசாதிபேதம்.

பௌமசர்ப்பம் என்பது தருவீகரம், மண்டலி, ராஜமந்தம், நிர்விஷம், வைகரஞ்சம் என ஐவகைசாதியை உடைத்தாய் முறையே, 26, 36, 13, 4, 3 - என்னும் 82 - பேதங்களைப் பெற்றிருக்கின்றது.

ஆயினும், தருவீகரம், மண்டலி, ராஜமந்தம் எனக் கூறிய மூவகைச் சர்ப்பங்களுக்குள் பிறக்கின்ற சங்கரசர்ப்பசாதி பேதங்களுக்குக் கணக்கில்லை என்றறிக. இங்ஙனம் கூறிய ஐவகை சர்ப்பசாதிகளுக்கும் பௌம சர்ப்பங்களெனப் பெயராம். பூமிசம்பந்தம் பௌமம்.

## தருவீகரசர்ப்பம்.

இது, மிகுந்த வேகாடையைப் பொருந்தி, படத்திலும் சர்வாங்கத்திலும் வண்டிக்கண், கலப்பை, குடை, துவசம், அங்குசம் என்னும் உருவங்களை யொத்த புள்ளிகளைப் பெற்றிருக்கும். இதன் விஷமானது, கொஞ்சம் உஷ்ணத்துடன் புளிக்கும். இது, தலைக்கேறினால், முகம், கண் நகம், சருமம், மூத்திரம் ஆகிய இவைகள் கறுக்குதல், சிரசில் பாரிப்புடன் நோவு, தலைசுழலல், தேககனதி, வயிற்றிற்சூலை, எரிச்சல், பொருமல், முதுகில் குத்தல், எலும்பு, நரம்பு, இடுப்பு இவ்விடங்களில் வேதனை தாளிறுகல், இருமல், இரைப்பு, கொட்டாவி, நித்திரைப்பங்கம், ஆரோசகம், மல மூத்திரக்கட்டு, நெஞ்சிற்களகள வென்னும் ஒரு சத்தம், விக்கல் பேசக்கூடாமையான ஈனத்தொனி, ஏப்பம், வாயில் நொப்பும் நுரையும் விழுதல், அறிவு நீங்குதல் என்னும் இக்குணங்களுடன் வாதசுபாவக் குறியெல்லாம் உண்டாகும். இதற்கு, ஏழுவேகம்உண்டு. அவையாவன:— 1-வது,வாயில் ரத்தங்கம்மி முகமும் நேத்திராதி இந்திரியங்களுங்கறுத்து, சரீரத்தில் பூச்சியூருதல்போல் இருக்குதல்; 2-வது, சர்வாங்கமும் வீங்குதல்; 3-வது, சிரசுகனத்துக் கண்சிவந்து பல்லுகளில் நோவுண்டாகுதல்; 4-வது, நுரைநுரையான வாந்தியும் எலும்பின் சந்திகளில் நோவும் பிறக்குதல்; 5-வது, சகலகில்களிலும் உபத்திரவம் உண்டாகி விக்கலும் தாகமும் அதிகரிக்குதல்; 6-வது, மார்பு அடைப்புடன் தேகம்பாரித்து, மூர்ச்சைகண்டு பேதியாகுதல்; 7-வது, முதுகு தோள் இடுப்பு ஆகிய இடங்களில் வேதனை உண்டாகி, அவயவங்களில் கொதிப்பேறி, சுக்கிலம் நாசம் அடைகுதல் என்பனவாம். இந்த ஏழுவேகத்துள் ஐந்து வரைக்கும் சிகிச்சைசெய்யலாம்; அதற்குமேல், அவுஷதம் நாசமாம். இது, கரண்டியைப்போல் படமுள்ளதாகையால், தருவீகரசர்ப்பம் எனப் பேர்பெற்றது. இது, நொச்சில், கருந்துளசி, தும்பை, கஞ்சாங்கோரை, பருத்தி, சிறுதேக்கு, கொட்டாங்கரந்தை என்னும் ஏழுசரக்கையும் சிறுநீரில் ஊறவைத்து நசியங்கட்டத்தீரும்; அல்லது குப்பை மேனி, சுக்கு,

மிளகு, வேளை, வெள்ளுள்ளி என்னும் ஐந்துசரக்கையும் சிறுநீர்விட்டு நருக்கிப்பிழிந்து நசியஞ்செய்ய, விஷம் இறங்கும். சிந்தில் கிழங்கை யாவது, கோவைக்கிழங்கையாவது, சீவிச்சீவி ஒரு ஆழாக்குரசம் உள்ளில் தங்கும் படிக்குத் தின்னச்சொல்ல, விஷம்மீளும்.

## மண்டலிசர்ப்பம்.

இது, மந்தநடையை உடைத்தாய்ச் சிரசில் அநேக பேதவன்னமாய், மண்டலாகார உருவங்களையொத்த புள்ளிகளைப் பெற்றிருக்கும். இதன் விஷமானது மஞ்சள்நிறத்துடன் காரமாக உறைக்கும். இது தலைக் கேறினால், கடிவாயில் சுடுகையா யிருத்தலோடு வீங்குதல், கண்களில் மஞ்சள் நிறம் அல்லது சிவந்தநிறந் தோற்றல், சரீரமெங்கும் வேதனையு டன் குத்துதல், எரிதல், நோதல், முகம் மினுமினுத்து மஞ்சளைப்போ லிருத்தல், அவ்வாறே சகலவஸ்துக்களுங் காணப்படுதல், தலைநோதல், எயிறு கறுத்தல், வாயுலரல், சுரம், தாகம், நரம்புகளுப்புதல், நாசியிலும் வாயிலும் அக்கினிச்சுவாலைபோல் சுவாசம் வருகுதல், பாதாதி கேசம் வரைக்கும் புகை சூழ்ந்ததுபோல் இருத்தல், மூர்ச்சை, சீதளத்தில் விருப்பம் என்னும் இக்குணங்களுடன், பித்த சுபாவக்குறியெல்லாம் உண்டாகும். இதற்கு, ஏழுவேகம் உண்டு. அவையாவன:—1 வது, குளிர்ச்சியானரத்தம் வடிந்து வாயும் கண்ணுங் கறுத்துத் தேகத்தில் பூச்சியூருதல்போல் இருக்குதல்; 2-வது, தாகமும் வீக்கமும் காணுதல். 3-வது, பல்லுகள் கறுக்குதல்; 4-வது, சர்வாங்கத்திலும் எரிச்சல் எழும்புதல்; 5-வது, சப்ததாதுக்களுக்கும் துர்ப்பலம் உண்டாகுதல்; 6-வது, வாழைத் தண்டைப்போல் தேகஞ்சில்லிடல்; 7-வது, தன்னை மறக்குதல் என்பனவாம். சுருட்டை, பனையன், விரியன் முதலிய பாம்புகளுக்கு மண்டலிசர்ப்பம் எனப்பெயராம். இவ்விஷங்கள் எல்லாம், புங்கம்வேர், விளாம்வேர், கிருஷ்ண சூரிகைவேர் இம்மூன்றையும் சமமாக நிறுத்து, முருங்கப்பட்டை ரசத்தினால் அரைத்துக் கடிவாயில் நன்றாக லேபனம் பண்ணி, உள்ளுக்குப் பாகலிலைரசம் கொடுக்க, இறங்கும். வாகைப் பூவைப் பாலில் பிசைந்து வடிகட்டிக்குடிக்கில் திரணமண்டலி விஷந் தீரும். திரணமண்டலி என்பது புல்விரியன்.

## ராஜமந்தசர்ப்பம்.

இது, அதிக மந்தநடையை யுடைத்தாய்ச் சிரசிலும் உடலின்மேலி லும் கீழிலும் பக்கங்களிலும் மினுமினுத்துச் சித்திர வன்னங்களை ஒத்த

புள்ளிகளைப் பெற்றிருக்கும். இதன்விஷமானது குளிர்ச்சியுடன் தித்திக்கும். இது, தலைக்கேறினால், கடிவாயில்குளிர்ச்சியோடுவீங்குதல், சோம்பல், முகமும் நகமும் வெளுக்குதல், சரீரநமைச்சல், பாரிப்பு, மரத்தல், கேசாதி பாதம்வரைக்கும் மினுமினுத்துச் சில்லிடுதல், சிரசும் கண்ணும் நாசிமுனையும் குளிர்ச்சியாகுதல், சிரோபாரம், சுரம், வாய்இனிப்பு, அரோசகம், வாந்தி, இருமல், மேற்சுவாசம், தாகம், பொறுத்துப் பொறுத்துப் பெருமூச்சு வருகுதல், நெஞ்சிற் களகளவென்னும் ஒரு சத்தத்துடன் தினவு, அடிக்கடி அலறல், ரோமச்சிலிர்ப்பு, வாயில் நொப்பும்நுரையும் தள்ளுதல், மார்புதுடித்தல், மனச்சஞ்சட்டம், மயங்கிய நித்திரை என்னும் இக்குணங்களுடன் சிலேஷ்ம சுபாவக்குறி எல்லாம் உண்டாகும். இதற்கு ஏழுவேகம் உண்டு. அவையாவன:—1-வது, ரத்தமானது, வெண்மையாய்முறிந்து தேகமும் கண்ணும் வெளுக்குதல்; 2-வது, சர்வாங்கமும் வீங்குதல்; 3-வது, கண்ணிலும் மூக்கிலும் வாயிலும் சலம் வடிதல்; 4-வது, சிரோபாரமும் தாள்பிடிப்பும் உண்டாகுதல்; 5-வது, பேசக்கூடாத வருத்தமும் குளிர்சுரமும் காணுதல்; 6-வது, தேகங் கனத்துச் சில்லிடுதல், 7-வது, அவயவங்களெல்லாங் கொதித்து மூர்ச்சை உண்டாகித் தன்னைமறக்குதல் என்பனவாம். மலைப்பாம்பு, தாசரிப்பாம்பு, கட்டுவிரியன் முதலியவைகளுக்கு ராஜமந்தம் எனப்பெயராம். இவைகட்கு காட்டுக்கருணை, பழுபாகல், சீந்தில், கோவை என்னும் கிழங்குவகை 4, சுண்டை, கிளிமூக்கு, வெட்டிவேர், செந்தொட்டி, நீலி, மரக்காரை, வெற்றிலை, பேய்ப்பீர்க்கு, பாலை, ஊமத்தை, செப்பு நெருஞ்சில், வெண்சாரணை என்னும் வேர்வகை 12-ம் ஆகிய இப் பதினாறுவகைகளையும் தனித்தனியே வஸ்திரகாயப் பொடி செய்து சமமாகநிறுத்துக் கலந்து வைத்துக்கொண்டு, இதில் அரைப்படியும், அரிசி அரைப்படியும் சேர்த்துப்பொங்கி உண்ணக்கொடுக்கில், விஷம் ஏறாது; ஏறிய விஷமும் இறங்கும்.

## கௌதேரசர்ப்பபேதம்.

கௌதேரசர்ப்பமானது 64-விதப்படும். இவைகளின் விஷங்கள் தருவீகர சர்ப்பவிஷங்களைப்போலவே இருக்கும். ஆனால், இவைகளில் நின்றும்பிறக்கின்றசங்கரசாதிகள் அனந்தமென்றறிக. கௌதேரமென்பது உடம்பின்நிறமான சர்ப்பங்களாம். இதனைச் சாரைப்பாம்பென்பர்.

## நிர்விஷசர்ப்பபேதம்.

நிர்விஷசர்ப்பமானது, திவ்யகம், சாலகம், பாதகம், விருக்ஷசாயி, கலசி, புட்கரம், க்ஷீரி, வாகினி, சாரவாகி, வருஷாப்புவிகம், சோதிரதம், சுட்கம், கோத்திரம், பலாககம், கசபக்ஷம், பிலவோற்பேதம் என 16 விதப்படும். நிர்விஷம் என்பது விஷம் இல்லாத சர்ப்பமாம்.

## நிர்விஷலக்ஷணம்.

விஷம் இல்லாச் சர்ப்பங்கள்கடித்தால், அக்கடிவாயில் ஆமை முதுகைப்போல்தடித்து அச்சருமங் கறுத்து அற்பசோம்பலுண்டாகும்.

## வைகரஞ்சசர்ப்பம்.

இது, மூவிதப்பேதங்களை உடையதாயிருந்தாலும், இவற்றின்விஷம் அதிகவேகத்தைப்பெற்றிருக்கும். இதற்கும்த்ருவீகரச்சிகிச்சை உதவும்.

## சர்ப்பசூசிகாலக்ஷணம்.

முறகூறிய சர்ப்பங்கள், சித்திரை மாதம் புணர்ச்சியில் இச்சை உண்டாகி, ஆனிமாதத்தில் ஆணும் பெண்ணும் இடைவிடாது திரிந்து, ஆடிமாதத்தில் கூடி இழைந்து சூலுண்டாகி, கார்த்திகை மாதத்தில 100, 200, 400, முட்டைகளிடும். இவற்றுள், சிற்சில முட்டைகள் பெருங்காற்றினாலும் அதிக வெப்பத்தினாலும் கெடுதியை அடையும்; மற்ற முட்டைகள் தனக்குத்தானே விரிந்துடைய, அவைகளில் நின்றும் சிறுசிறுகுட்டிகள் வெளிப்பட்டுலவும். இக்குட்டிகளுக்குக் கீழ்வாய் வரிசையில், காட்டுவாகைப்பூக் கேசரப் பிரமாணங்களையொத்து மஞ்சள் நிறமான ஏழு கோரைப் பல்லும், மேல்வாய் வரிசையில் ரத்தநிறம் கரிநிறமான ஏழுகோரைப் பல்லும் முளைக்கும். இவற்றுள், பகலில் விஷம் இருப்பது 4, ராத்திரியில் விஷம் இருப்பது 3; இவ்விஷம் 4, 3, என்னும் துளிக் கணக்காகவிழும் இக்கோரைப்பல்லுகள் வருஷத்துக்கொருதரம் விழுந்து முளைக்கும். இவ்விதவிஷ சர்ப்பசாதி 40-விதமும், விஷம் இல்லாத சர்ப்பசாதி 44-விதமுமாம். இவற்றுள், பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்னும் 4-சாதி சர்ப்பங்களும்; ஆண், பெண், அலி என்னும் 3-குறிகளையுள்ள சர்ப்பங்களும்; மலடு என்னும் நோய்க்குறி பெற்ற சர்ப்பமும், பால்ய யௌவன விருத்தாப்பியம் என்னும் முப்பருவங்களை

உடைய சர்ப்பங்களும் உண்டு. இவைகளுக்கு ஆயுசு 1800, 500, 300, 200, 100, 26, என்னும் வருஷங்களாம். சிலசாதிகளுக்கு ஆயுசு 5, 20, 50, 55, என்னும் வருஷங்களாம். இச்சர்ப்பசாதிக்குள் பிறக்காமல், பசுவின் நாசியில் ஜனித்து வருகின்ற சர்ப்பம் ஒருவிதம் உண்டென்றறிக. ஆனால், சூரியவெப்பம் மிகுந்த தேசத்தி லிருக்கின்ற சர்ப்பங்களுக்கெல்லாம் விஷம் அதிகமாம்.

சித்தர்மதாந்தரம்.

## சர்ப்பசூசிகாலக்ஷணம்.

முற்கூறிய சர்ப்பங்கள், ஆனி மாதத்தில் புணர்ந்து, ஆடி ஆவணி மாதங்களில் வயிறுளைந்து, கார்த்திகை மாதத்தில், பூ பொன் எருக்கம்பூ வெண்மை ஆகிய நிறங்களாக, 248 - முட்டையிட்டு, ஏழுநாள் அவயங் காக்குமென்றும், அம் முட்டைகளில், ஆண் முட்டைகள் முகிழ் விரியாத எருக்கம்பூ மொக்கைப் போலும், பெண் முட்டைகள் வாகைப்பூ அரும்பைப்போலும் இரண்டுபேதமா யிருக்குமென்றும், அதையீன்ற தாயானது, ஏழுநாட்குள் 228-முட்டைகளைப் புசிக்குமென்றும், 4 முட்டைகள் அழியுமென்றும், மற்ற 16-முட்டைகள் பொரிந்து குட்டிகளாகத் திரியுமென்றும், அக்குட்டிகளுக்கு மயிர்போல் 24-கால்களிருக்குமென்றும், இதுகள்பிறந்த 28-வது நாளில் சூரியனை நோக்கிப் படம் விரித்து ஆடி விஷம் பெற்றுக்கொண்டு தனித்தனியே பிரியு மென்றும், 60வது நாளில் தோலுரிக்குமென்றும் 6-வது மாதத்தில் பல்லும், நஞ்சும், வாலும் பிரகாசமாய்த் தோற்றுமென்றும், இதுகள் ஒருவனைக் கடிக்கும்போது கடியுண்டவனுக்கு இறப்பு உண்டோ இல்லையோவென்று சந்தேகிக்குமென்றும், இவைகளுக்கு கண்களே காதாக இருக்குமென்றும், வாய்க்கீழ்வரிசையில், காளி காளராத்திரி என இரண்டுபல்லும் மேல்வரிசையில், எமன் எமதூதன் என இரண்டுபல்லும், உண்டென்றும் இவ்விஷங்கள் மணிமந்திர அவுஷதாதிகளுக்கு அஞ்சும் என்றும் சித்தர்ஆரூட விருத்தப்பா என்னும் சாஸ்திரம் கூறுகின்றது.

## 1-வது பிரமசர்ப்பம்.

இது, மேற்புறத்தில் வெளுப்பு கறுப்பு சிவப்பு கபிலம் என்னும் நிறங்களையும், படத்திற் சங்கத்தின் வடிவான புள்ளிகளையும் அதிகச்

சிறகுடன் கோபத்தையும், தாமரைப்பூ குருவேர் வெட்டிவேர் காட்டுவா கைப்பூ குங்கிலியம் நாபி ஆகிய இவைகளின் மணங்களையும் பெற்று ஆலயங்களில் சஞ்சரிக்கும். இது படம்விரித்து ஆடும்போது, ஆகாயத்தைப் பார்த்து நின்றாடும். காற்றையும் பூமணத்தையும் புசிப்பாகக்கொள்ளும். இதற்கு வயசு 1008 என்றறிக. அன்றியும், இது ரத்த நிறத்தைப்பெற்று, சனிவாரத்தினிரவிலும் ஆதிவாரத்திலும் இரை எடுக்குமென்றும், உதயமுதல் பத்து நாழிகைவரைக்கும் வெளியில் திரியுமென்றும், கடிக்கும்போது முன்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் கடிக்குமென்றும், அக்கடியினால் வாதமே அதிகரிக்குமென்றும் சித்தர் ஆரூடம் என்னும் சாஸ்திரம் சொல்லுகின்றது.

## 2-வது க்ஷத்திரியசர்ப்பம்.

இது, மேற்புறத்தில், பொன், பேரீச்சம்பழம், திராக்ஷைப் பழம், நாவல்பழம் என்னும் நிறங்களையும், படத்தில், சந்திரன், சங்கு, சக்கரம் கலப்பை ஆகிய இவைகளையொத்த புள்ளிகளையும், மிகுந்த பகையுடன் கோபத்தையும் சிவந்த நேத்திரத்தையும், சாதிப்பூ, சண்பகப்பூ, தாழம்பூ, புன்னைப்பூ, அகருக்கட்டை என்னும் இவைகளின் மணத்தையும் பெற்று விருக்ஷப் பொந்துக்களில் வாசஞ்செய்யும். இது, படம்விரித்து ஆடும்போது, சமபார்வையுடன் ஆடும். அறுகின் கிழங்கையும், வண்டையும் உணவாகக்கொள்ளும். இதற்கு, வயசு 800 என்றறிக. அன்றியும், இது சனிவாரப்பகலிலும் சோமவாரத்திலும் எலியை இரையாகக் கொள்ளுமென்றும், பகல் உதயம் பத்து நாழிகைமுதல் இருபதுநாழிகை வரைக்கும் வெளியில் திரியுமென்றும், இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் கடிக்குமென்றும், அக்கடியினால் பித்தமே அதிகரிக்குமென்றும், சில நூல் கூறுகின்றன.

## 3-வது வைசியசர்ப்பம்.

இது, மேற்புறத்தில், வச்சிரம் கோமேதகம் புரு இவைகளின் சாயலையும், உடல் முற்றிலும், சிவப்பு, வெளுப்பு, மஞ்சள், புகை இவைகளின் நிறஞ்சேர்ந்த விருத்தாகாரமும் வில்லுருவமும் ஒத்த புள்ளிகளையும், பாதிரிப்பூ, பால், நெய், வெள்ளாடு, செம்மறியாடு இவைகளின் மணத்தையும் பெற்று, மனைகளில் வாசஞ்செய்யும். இது, படம்விரித்து ஆடும்

போது, 4-திசையையும் பார்த்து நின்றாடும். ஓந்தியையும் எலியையும் உணவாகக் கொள்ளும். இதற்கு, வயசு 500-என்றறிக. அன்றியும், இது, சுக்கிர வாரத்திலும் மங்கள வாரத்திலும் தவளையை இரையாகக் கொள்ளுமென்றும், உதயாதி இருபதுநாழிகைமுதல் 30 நாழிகை வரைக்கும் வெளியில் திரியுமென்றும், இடப்புறத்திலும் பின்புறத்திலும் கடிக்குமென்றும், அக்கடியினால் கபமே அதிகரிக்குமென்றும், விஷநூல்சொல்லுகின்றது.

## 4-வது சூத்திரசர்ப்பம்.

இது, கரி, கோதுமை நிறங்களையும், உடலமெல்லாம் புள்ளடி போன்று சிறுத்து நீண்ட புள்ளிகளையும், யானை காட்டெருமை அழுகிய சேறு ரத்தம் இலுப்பைப்பூ இவைகளின் மணத்தையும் பெற்றுப் புற்றுக்களில் வாசஞ்செய்யும். இது படம்விரித்து ஆடும்போது பூமியைப்பார்த்துக் கவிழ்ந்து நின்று ஆடும். தவளை மீன் இவைகளை உணவாகக் கொள்ளும் இதற்கு, வயசு 200 என்றறிக. அன்றியும், இது மந்தவாரத்திலும் குருவாரத்திலும் எலி முதலிய சசலத்தையும் இரையாகக் கொள்ளுமென்றும், வைசிய சர்ப்பத்தைப்போலவே கடிக்குமென்றும், அந்தக் கடியினால் தொந்தகபம் அதிகரிக்குமென்றும் சில நூலில் சொல்லப்படுகின்றன. இந்நான்குஜாதி சர்ப்பங்கள் தவிர மற்றைச் சங்கரசாதி சர்ப்பங்கள் கடிப்பதற்குப் பக்கபேதமும் ஸ்தானபேதமும் இல்லையென்றறிக.

## ஆண்சர்ப்பம்.

இது, அகலமுள்ள படத்தையும் அதிக திடத்தையும் மிகுந்த சீறலையும் பெற்றிருக்கும். இவ்விஷம் தலைக்கேறினால், மேல்நோக்கிய பார்வை, வலதுகால் பூமியில் பாவாதிருக்குதல், ஊர்த்துவகாயத்தில் மிகுந்தபல ஈனம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## பெண்சர்ப்பம்.

இது, குறுகியபடத்தையும் அற்பச்சீறலையும் பெற்றிருக்கும். இவ்விஷத்தினால், கீழ்ப்பார்வையும், இடதுகால் பூமியிற் பாவாதிருத்தலும், அதோகாயத்தில் பலஈனமும் உண்டாகும்.

## அலிச்சர்ப்பம்.

இது, மிருதுவுடன் நீண்ட உருவத்தையும், வெளுத்த படத்தையும், மந்தநடையையும், குறைந்த தொனியையும், அற்ப கோபத்தையும் உடையதாயிருக்கும். இவ்விஷத்தினால், ஈனத்தொனி, பேதி, நடுக்கல், பயம், சுரம், புணர்ச்சியில் இச்சை, சரீரம் காற்றில் பறப்பதுபோல் இருத்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இச்சர்ப்பம்பிறந்த 3-தினத்தில் விருத்தி அடைவதும், திவ்விய சர்ப்பத்தால் அடிபடுவதுமாயிருக்கும்.

## மலட்டுச்சர்ப்பவிஷம்.

இது, சீக்கிரத்தில் அனந்தம் வேதனையைப் பிறப்பித்தாலும், முக்கியமாக வியர்வையை விஸ்தாரம் ஒழுகச்செய்யும்.

## பால்யசர்ப்பஆண்விஷம்.

இது, இடதுகண்ணைக் கோவைப்பழம்போல் சிவக்கச்செய்யும். பெண் சர்ப்பக்குட்டிவிஷத்திற்கு இக்குணம் கொஞ்சம் பேதித்திருக்கும்.

## யௌவனசர்ப்பஆண்விஷம்.

இது, வலப்பாகத்தில் கடிக்கும். இவ்விஷத்தால், அப்பக்கத்துக் கண் ரத்தம்போல் சிவக்கும். பெண்சர்ப்பம் இடப்பக்கத்தில் கடிக்கும். இவ்விஷத்தினால், தடிப்புத்தடிப்பாகச் சிலரோகங்கள் பிறக்கும்.

## விருத்தசர்ப்பவிஷம்.

இது, கடிவாயில் வீக்கம் அற்பநோய் பிதற்றல் இவைகளைத்தரும்.

## கருப்பச்சர்ப்பவிஷம்.

இது, சிரசு, உதடு, வயிறு, தொடைஆகிய இடங்களில் நோதல், நாவுகறுத்தல், உண்ணுக்கு வளருதல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும்.

## சூதிகாசர்ப்பவிஷம்.

இது, வயிறு ஊதல், வாயில் ரத்தங்கக்குதல், மார்பில் அடைப்பு கண்ணில் நோவுடன் சிவத்தல், சர்வாங்கமும் ஊசியால் குத்துவதுபோல் மிகுந்தகுத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும். முட்டையிட்ட சர்ப்பத்திற்குச் சூதிகாசர்ப்பம் எனப்பெயராம்.

## கோநசசர்ப்பம்.

இது, அதிவெய்யலினாலும் அலைச்சலினாலும் அடிபட்ட பசுக்களின் நாசிக்குள் சனித்து, ஊர்த்துவ பார்வையுடன் அற்ப உருவமும் நீண்ட நாவும் சிரசினால் கத்துந்தொனியும் உடையதாய் வெளிப்பட்டுத் திரியும். பசுவின் நாசியால் பிறப்பதால், கோநசசர்ப்ப மெனப்பேர்பெற்றது.

## வழிச்சர்ப்பவிஷம்.

இது, எப்போதும் கடிப்பதற்கே வழிக்கட்டிக் கொண்டிருக்கும். இப்பாம்பு, கடித்தால், மரணக், குறிகளெல்லாம் சீக்கிரத்தில் உண்டாகும். இந்தவிஷம் மணிமந்திர அவுஷதத்தினால் நீங்குமென்றறிக.

## சங்கைவிஷலக்ஷணம்.

சர்ப்பத்தைச் சடுதியில்கண்டு, வாய்குளறி நடுங்கி மூர்ச்சித்து விழுந்தாலும், பழுதையெனக் கையால்தொட்டுப் பின்பு பாம்பு எனக் கண்டு திகில் அடைந்தாலும், தனக்குப் பக்கத்தில் சர்ப்பங் குதிக்கக் கண்டு பயந்து சோபம் அடைந்தாலும், கயிறு முதலியவைகளைப் பாம் பென்றுமேலில் ஒருவன்போடப்பதறி வியர்த்து விழுந்தாலும், அவர் களுக்கு வாதம் அதிகரிக்கும். இதனால், பொறிகலங்கி நாவறளல், மூர் ச்சை, சரீரம்நாிக்கித் துவைத்ததுபோலிருத்தல், இளைப்பு, தாகம், சுரம், பேதி, வாந்தி, சோருதல் என்னும் இக்குணங்களுண்டாகும். இது தந் திரச் சிகிச்சையால் தீரும்.

## மித்தைவிஷநிதானம்.

எந்தச்சர்ப்பமாவது, ஒருவனை வாயால் கவ்விப்பிடித்த ததியில், பக்கத்தில்நின்ற ஒருவன் அது பாம்பல்ல பாம்பல்ல வென்று உறுதியாகச் சொல்லுவானாகில், விஷம் ஏறுதென்றறிக. மித்தை என்பது பொய்.

## மகாவிஷசர்ப்பநிதானம்.

மயானம், சாவடி, பாழானபக்கியசாலை, பாழும்வீடு, கோயில் நாற் சந்தி கூடிய இடம், தண்ணீர்வரப்பு, பாழுந்தோட்டம், பாலைவிருக்ஷம், வேப்பமரம், மரப்போறை, கான்யாறு, மலைக்குகை என்னும் இவ்விடங் களில் இருக்குஞ் சர்ப்பங்களும்; படத்தில், குடை, சடை, திரிசூலம்

கும்பம், மச்சரேகை ஆகிய குறிகளையுடைய சர்ப்பங்களும்; சிவந்தநேத்திரமும், சிவந்தமுகமும், உள்ளச்சர்ப்பங்களும் மகாவிஷசர்ப்பங்களாம். இவைகள் கடிக்கில், விஷம்ஏறுதற்கு ஒருகிரமமும், அதைத்திருப்புதற்கு ஒரு அவுஷதமும், அத்தேகி இறப்பதற்கு ஒருகெடுவும் இல்லவே இல்லை. ஆயினும், நமஸ்காரம் பூசை செபம் சாந்தி மந்திரம் அவுஷதம் ஆகிய இவைகள் ஒரேகாலத்தில் நேரிட்டு விஷந்தீர்ந்தாலும், அவர்களுக்கு மாறுருவமாவது அங்கத்தில் யாதேனும் ஒரு ஊனமாவது உண்டாகும். எளிதில் இறங்காமையால் மஹாவிஷம் எனப்பெயராம்.

## அற்பவிஷசர்ப்பநிதானம்.

பசி, தாகம், வியாதி, கிரி, சீதளம், அக்கினி, காற்று, தோலுரிதல், விஷங்கக்குதல் ஆகிய இவைகளால் அடிபட்ட சர்ப்பங்களுக்கும்; சலம் நிறைந்ததடாகம், தருப்பையுள்ளவனம், முள்ளுப்புதை, மந்திரவாதிகள் இருக்கின்றஊர், பரதேசம் இவ்விடங்களிலுள்ள சர்ப்பங்களுக்கும்; வன்ன ஈன சர்ப்பங்களுக்கும் அற்பவிஷமென்றறிக. இவ்விஷம் எளிதில் நீங்கும்.

## சர்ப்பங்கடிப்பதற்குக்காரணம்.

ஆகாரநிமித்தம், பயம், கோபம், வைராக்கியம், சாபம், ஏவல், சன்மப்பகை, தெய்வகதி, காலகதி, சுபாவகுரூரம், கோரையில் விஷமிகுதி, தன்னை மிதித்தல் ஆகிய இச்செய்கைகளினால் சர்ப்பங்கடிக்கும்.

## விஷக்கடிநிதானம்.

கடிவாயைப்பற்றி விஷம் ஏறினால், அவ்விடத்தில்நோவும், தினவும், வீக்கமும், எரிச்சலும் உண்டாகும். இக்குணங்களில் ஒன்றேனும் இல்லாதிருக்கில், விஷம் ஏற இல்லையென்றே நிதானிக்கவும்.

## விஷபரீக்ஷைநிதானம்.

சர்ப்பங்கடித்தவுடன், கசப்பு வஸ்துக்களைத்தின்றால் அச்சுவை மாறுபடுதல், விரல்களில் நகங்களில் கிள்ளினாலும், தலைமயிரைப்பற்றி இழுத்தாலும் நோவுதெரியாமை, காதைமூடில் தொனி இல்லாதிருத்தல், சோம சூரிய அக்கினியும் விளக்கும் நேத்திரத்திற்குத் தோற்றாமை என்னும் இக்குணங்களிருந்தால், விஷந்தலைக் கேறித்தென்றே நிதானித்து உடனே சகல சிகிச்சைகளையும் நடாத்தவேண்டும்.

## பல்லின்விஷநிதானம்.

விஷப்பை படாமல் பல்லுமாத்திரம் தேகத்தில் படுமாகில், கோட்டுவாய்ச் சலம்போல் வாயில்நின்றும் சலம்வடியும். விஷமே ஏறினால், நொப்பும் நுரையும் விழும். இவ்விஷமானது கொஞ்சம் வியாபித்தாலும், அது ரத்ததாது முற்றிலும் விரைவில்பரவும், இதனால், ஞாபகமறதியும், இரைப்பும், சரீரத்தில் கருவளையலை ஒத்த நிறமும் உண்டாகும்.

## விஷப்பல் அழுந்தும் நிதானம்.

சர்ப்பங்கடித்து ஒருபல் அழுந்தினால், விஷம் இல்லை; மற்ற மூன்று பற்களும் அழுந்தினால், விஷம் உண்டு. அவற்றுள், இரண்டு பல்லழுந்தினால், அவ்விஷம் மந்திரத்தினால் சாத்தியமாம்; நான்கு பல்லும் அழுந்தினால் அசாத்தியமாம் அன்றியும், ஒரு தந்தமாவது அழுந்தி, அவ்விடத்தில் திருகியதுபோல் சக்கராகாரமாகத் தோற்றப்பட்டு, அதில்நின்றும் ரத்தம் வடிந்தாலும், அந்த இடம் ஆமை ஓட்டைப்போல் தடித்துவீங்கினாலும் அசாத்தியமே. ஆயினும் மணிமந்திர அவுஷதவலியும், தெய்வவலியும், விதிவலியும் திடமாக இருக்கில், கஷ்டத்தின்மேல் சாத்தியமாம்.

## சித்தர்மதாந்தரம்.

## விஷப்பல்லின் லக்ஷணம்.

சர்ப்பங்களுக்கு, காளி, காளராத்திரி, எமன், எமதூதன் என நான்கு பல்லுகள் முளைத்திருக்கும். இவற்றுள், 1-வது, காளி என்னும் பற்பட்டால் அவ்விடத்தில் புள்ளடிபோல் காயமுண்டாகி, அதில்நின்றும் பனிநீர்போற் சலம்வடியும்; அப்போது விஷமானது தோலைப்பற்றி ஏறும்: இதனைக்கால்கடி என்றறிந்து திபானத்தால் உபசரிக்க, விஷந்திரும்பும். அதனுடன் 2-வது, காளராத்திரிஎன்னும்பல்லும்பட்டால், அவ்விடத்தில் முக்கோணம்போல் காயம் உண்டாகி, அதில்நின்றும் மஞ்சள்நிறமான சலம்வடியும்; அப்போது விஷமானது மாமிசத்தைப் பற்றி ஏறும்: இதனை அரைக்கடி என்றறிந்து மணிமந்திரத்தாலுபசரிக்க விஷந்திரும்பும். அவ்விரண்டுடன், 3-வது, எமன் என்னும் பல்லும்பட்டால், அங்கு தொரட்டிபோல் காயம் உண்டாகி, அதில் நின்றும் செந்நீர்வடியும்; அப்போது விஷமானது எலும்மைப்பற்றிஏறும்: இதனைமுக்கால்கடி என்றறிந்து, மூலிகை, களிக்கம், நசியம், ஆக்கிராணம் முதலியவைகளால் உப

சரிக்க, விஷந்திரும்பும். அம்மூன்றுடன், 4-வது, எமதூதன் என்னும் பல்லும்பட்டால், அவ்விடத்தில் வில்லைப்போலும் பிறையைப்போலும் காயம் உண்டாகி, அதில்நின்றும் கழுநீரை ஒத்தசலம்வடியும்; அப்போது விஷமானது மூளையைப்பற்றி ஏறும்: இதனைமுழுக்கடி என்றறிந்து, மணி மந்திர அவுஷதாதியாலும் தெய்வவலியாலும் உபசரிக்க, விஷந்திரும்பும்.

மதாந்தரம் முற்றியது.

---

## தாடைப்பல்லின்லக்ஷணம்.

சிலசர்ப்பங்களுக்குத் தாடைக்குள் முள்ளைப்போல் ஒவ்வொரு கோரைப்பற்களிருக்கும். அதுபட்டு விஷம் ஏறினால், உடனே அபாயமாம்.

## கடிநிறநிதானம்.

சர்ப்பக்கடிபட்ட இடத்தில், கறுப்புநிறமாகவும், கனிந்தநாவல்பழநிறமாகவும் இருந்தால், அவ்விஷம் மிகவும் கொடிதென்றறிக.

## சித்தர்மதாந்தரம்.

## கடிமணநிதானம்.

சர்ப்பங்கடித்துப் பல்லழுந்திய இடத்தில் மோந்தால், தாழை மலர் மணம் வீசினால், நல்லபாம்பு; பாதிரிப்பூமணம்வீசினால், வழலைப்பாம்பு; புளியம்பூமணம் வீசினால், விரியன்பாம்பு; மல்லிகைப்பூமணம் வீசினால், மண்டலிப்பாம்பு; மிளகு சுக்கு இவைகளின்மணம் வீசினால், சிறியபாம்பு என நிதானிக்கவும். இம்மணங்கள் ஒன்றும் வீசாமல் சர்ப்பத்திற்குப் பகையான மணம் வீசினால், சர்ப்பக்கடி அல்லவென்றறிந்து, கீடவிஷசிகிச்சைகளை உடனேசந்தேகமறச் செய்யவேண்டும். மதாந்தரம் முற்றியது.

## தீக்கடிஸ்தானநிதானம்.

எந்தச்சர்ப்பமாவது, புருவமையம், பஞ்சேந்திரியம், தலை, நெற்றி, நெறி, தாடை, உதடு, தாழ்வாய்க்கட்டை, நெஞ்சு, தோள், உள்ளங்கை, அக்குள், தனம், மார்பு, அடிமார்பு, தொப்புள், வயிறு, ஆண்குறி, குதம், உள்ளங்கால், கீல், என்னும் இவ்விடங்களில் கடிக்கில், மரணமே.

## ஸ்தானவிஷசர்ப்பநிதானம்.

பாழுங்கோயில், பாழும்வீடு, பாழூர், ஆலமரம், அரசமரம், புன்னைமரம், புளியமரம், முருங்கைமரம், சந்தைகூடும் இடத்துமரம், மூங்கிற்புதரு, நந்தனவனம், நாணல்படுகை, பிரப்பம்புதை, மயானம், ஏரிக்கரை, நதிக்கரை, சுனைக்கரை, நீரில்லாத தாமரைக்குளம், முகத்துவாரம் ஐயனார் கோயில், பிடாரியார்கோயில், துர்க்கைகோயில், யாகசாலை, தேரடி, புதுமனை, புற்று, ஆற்றின்திட்டு, நாற்சந்திவீதி, முச்சந்தி கூடியவீதி, என்னும் இவ்விடங்களில் இருக்கின்ற எந்தச்சாதி சர்ப்பமாவது அந்திசந்தி வேளையில் கடிக்குமாயின், அவ்விஷம் அசாத்தியமே.

## ஸ்தான திதி காலதோஷநிதானம்.

எந்தச் சர்ப்பமாவது, அனந்தம்பேர்கூடுகின்ற பொதுவிருக்ஷம், மயானம் என்னும் இவ்விடங்களிலும், பருவம், அமாவாசை, பஞ்சமி, பிரதமை, அஷ்டமி, நவமி ஆகிய இத் திதிகளிலும், சூரியோதயகாலம், மாலைமயங்குங்காலம், அபர்ந்துநித்திரை செய்கின்றகாலம், பாதிராத்திரி காலம் ஆகிய இக்காலங்களிலும் கடிக்கில், மரணமே.

## நக்ஷத்திரதோஷநிதானம்.

சர்ப்பமானது, பரணி, கார்த்திகை, ஆயிலியம், விசாகம், பூரம், பூரட்டாதி, பூராடம், சதயம் ஆகிய இந்நக்ஷத்திரங்களோடுங்கூடியபருவகாலத்திலும், நிருதிமூலையிலும், * அசுரமுகூர்த்தத்திலும் கடிக்கில், அசாத்தியமாம். அன்றியும், மகம், திருவோணம், மூலம், சித்திரை, சோதி ஆகிய நக்ஷத்திரங்களிலும், சன்மநாள், அநுசன்மநாள், திரிசன்மநாள் இதுகள் சேர்ந்த அவிட்டநக்ஷத்திரத்திலும், நவமியிலும், வீட்டிறப்புகளில் இருந்துகடிக்கில், அசாத்தியம் எனச் சிலநூலில் சொல்லப்படுகின்றது.

அசுரமுகூர்த்தம் என்பது சந்தியானகாலமாம்.

## அசாத்தியவிஷக்குறிநிதானம்.

ஏறினவிஷம் மந்திரதியான அவுஷதங்களில் திரும்பாதிருக்கையில், நகம் உதடு உள்ளங்கை கரியைப்போல் கறுக்குமாயின், அசாத்தியமே. மேலும் எந்த சர்ப்பவிஷத்தினாலாவது, தலையில் இருக்கின்ற ரோமம்உதிர்தல், மூர்ச்சை, மேற்சுவாசம், விக்கல், இருமல், வாந்தி, மார்புகனத்தல்,

நடுக்கல், விகாரவேதனை, முடிசோருதல், கண்சிவக்குதல், தொண்டை அடைப்பு, நாவல்பழம்போல் பற்கறுத்தல், ஆமையோட்டைப்போல் முதுகு உயருதல், நவத்துவாரத்திலும் ரத்தம் ஒழுகுதல் என்னும் இக்குணங்கள் உண்டாயின், அசாத்தியமாம். அன்றியும், கடிபட்ட இடத்தில் வீக்கமுண்டாகி ரத்தங்கம்மல், நாசிமெலிந்து சிறுத்து அமுங்கிச் சில்லிடுதல், முதுகும் ஆண்குறியும் சோணுதல், முகப்சில்லிட்டுக் கறுத்துக் கோணுதலுடன் ரோமமுஞ்சில்லிடுதல், கீல்கள்தளரல், காலும் கையும் கறுக்குதல், வாயில் நுரைவிழுதல், தேகம்நோவோடு நருக்கித் துவைத்ததுபோல் இருக்குதல், மலம்நழுகல் என்னும் இக்குணங்கள் உண்டென்பாருமுளர்.

## சாமானியசர்ப்பவிஷக்குறி.

சர்ப்பக்கடி யுண்டவனுக்கு, மலமூத்திரம் நழுகுதல், மார்பில்கனத்தலுடன்குத்தல், ரோமச்சிலிர்ப்பு, வாந்தி, தாகம், நாசியால் பேசுதல், கீல்களில்நோவு, கண்சிவத்தல் அல்லதுகறுத்தல் என்னும் இக்குணங்கள் உண்டானாலும்; சந்திர சூரிய நக்ஷத்திராதி கிரகங்கள் கண்ணுக்குத் தோற்றுவிட்டாலும்; கண்ணாடி நெய் தயிலாதிகளில் முகந்தெரியா விட்டாலும், அசாத்தியம். ஆனால், இப்போது சொல்லியகுறிகளெல்லாம் சகல சர்ப்ப விஷத்திற்கும் பொதுவாயிருக்குமென்றறிக.

## சர்ப்பங்களின்தத்து.

சர்ப்பங்கள்பிறந்த 2-வது மாதத்தில் தோல் உரிக்கும்போதும், 6-வது மாதத்தில் பல் விஷம் குதிக்கும்போதும், அவைகளுக்குத் தத்தென்றறிக.

## கடித்தசர்ப்பச்செய்கைக்குறி.

எந்தசர்ப்பமாவது, கடித்தவுடன், படத்தைவிரித்து ஆடினாலும், தரையிற்புரண்டாலும், கடித்த இடத்தில் ஆடிப்பின்பு அசைவற்றுக்கிடந்தாலும், கடி உண்டவனுக்கு விஷம் மீளாதென்றறிக.

## சித்தர்மதாந்தரம்.

## கருநாகவிஷம்இதுவேகிருஷ்ணசர்ப்பமாம்.

இது, அவுஷதாதிகளால் இறங்கினாலும், இரண்டுகாதுகளையும் பாதிரியவாதத்தைப்போல் செவிடாக்கும். இந்தவிஷம் நிலப்பனைக் கிழங்கும்,

உப்பிலாங்கொடிவேரும் அரைத்து, சிறு எலுமிச்சங்காய்ப் பிரமாணம் முகூர்த்தத்திற் கொருதரமாக 8-தரம் விழுங்கில் முறியும்.

## சிறுநாகம்.

இது, தருப்பை அகலம் உள்ளபடத்தையும், பருத்த ஈர்க்கை ஒத்த உடலையும்பெற்று, தாழைமலர்க்குள் வாசமாயிருக்கும். இவ்விஷத்திற்கு மகாவிஷ சிகிச்சைவேண்டும். இதனை, பூநாகம், புல்நாகம், என்பர்.

பூநாகம் என்பது தாழம்பூ நாகமாம்.

## விரியன்பேதம்.

விரியன் என்பது, பெருவிரியன், ரத்தவிரியன், செவ்விரியன், நீர் விரியன், பொறிவிரியன், புல்விரியன் என ஆறுவிதப்படும். இவைகள் பத்திரகாளியின் ஆடையில் இருந்து பிறந்ததாகச் சிலர் சொல்லுகிறார்கள்.

## பெருவிரியன்விஷம்.

இது, மயக்கம், தயக்கம், உறக்கம், வெப்பம் என்னும் இவைகளை உண்டாக்கும். ஆனால் கடிவாயில் ரத்தமும் வீக்கமும் எரிச்சலும் பிறக்கும்.

## ரத்தவிரியன்விஷம்.

இது, வயிற்றில் வியாபித்தால், அவ்வயிற்றில் வலியை உண்டாக்கி உண்டாக்கிக் கொல்லும். அப்போது கடித்தவாயில் உதிரமும் மேலில் தடிப்பும் பிறக்கும். இது தவிர மற்றை நான்குவித விரியன் விஷத்தினால் கடிவாயில் மாமிசமிகுதியும், தடிப்பும், தேகஎரிச்சலும், வலியும், சோர்வும், நித்திரைமயக்கமும் உண்டாகுமென்றறிக. இவைகளுக்கு மகிழம்பரும்பு, வசம்பு, உள்ளி, மிளகு, சுக்கு, கள்ளிப்பால், வேப்பெண்ணெய், இலுப்பைப் பிண்ணாக்கு, ரசம், வெண்காரம், மரக்காரைப்பழம், பூவன்பழம், இப் பன்னிரண்டும் வகைக்கு விராகனிடை 1-ம், வெற்றிலை 14-ம் ஒன்றாய்ப் போட்டரைத்துச் சீலையில்தடவிக் காயவைத்துக்கொண்டு, சிறு நீரில் நனைத்து நாசியிற்பிழிய, சகலவிரியன் விஷங்களுந்தீரும்.

## வழலைச்சர்ப்பவிஷம்.

இது, கடித்தஇடத்தில் ரத்தமும் வாயில் அனற்றலும் உண்டாக்கும். இதற்குச்சிகிச்சை: ஏலம், மிளகு, வக்கணத்திவேர் இம்மூன்றுஞ் சமன் கூட்டிக் கற்பூரவள்ளிச் சாறுவிட்டரைத்து உலர்த்திய மாத்தி

ரையைத் தண்ணீரில் உரைத்துக் கடிபுண்டவன் கண்ணில் கலிக்கமிட விஷந்தீரும்.

## கருவழலேச்சர்ப்பவிஷம்.

இது, சரீரத்திற்காங்கையோடு அதிகவியர்வையும், உள்ளங்கால் உள்ளங்கையில் சிவப்பும், கோழையால்மார்பில் அடைப்பும் பிறக்கும் படிக்குச்செய்யும். இதனல், அனந்தம் வேதனையும் உண்டாகும். இது, நீலஞ்சோதியும், கடகரோகணியும், கோழிமுட்டை வெண்கருவும், சமமாகக்கூட்டி அரைத்துப் பசும்பாலிற்கலந்துஉள்ளுக்குக்கொடுக்கத் தீரும்.

## மூர்க்கன்.

இது, கடித்த இடத்திலும் முதுகிலும் வேதனை பிறப்பதுந்தவிர அவ்விஷத்தினல் வாயும் கழுத்தும் முறுக்கிக்கொள்ளுதல், குரல்நெரிதல், தேகம்பதறல், தலைசுழலல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இவ்விஷம், காடியைத்தெளித்து வன்னிஇலையை இடித்து அரைஆழாக்குச்சாறுபிழிந்து உள்ளுக்குங்கொடுத்து மேலுக்கும் அத்துவாலைபிடத் தீரும். இதற்குக் கொம்பேறிமூர்க்கன், சாரைமூர்க்கன், பனையேறி எனப் பெயராம். இது தன்னல் கடியுண்டவன் சுடுகாட்டில் தகிக்கப்படுகின்றுனு என்று உயர்ந்தமரக்கொம்பில் ஏறிப்பார்க்குமென்றும், அவ்வுளவு தெரிந்தவர்கள் உடனே வைக்கோல்சுமை முதலியவைகளை அச்சுடுகாட்டிலிட்டுப் புகைக்கக்கண்டு அவன் இறந்தானென்றிறங்கி விடுமென்றும், அதற்பின் சிகிச்சைசெய்யில் விஷந்திரும்புமென்றும் சொல்லுவது உலகவழக்காம்.

## மயக்குச்சர்ப்பம்.

இது, கண்ணில் விஷத்தையுடையது. இப்பார்வை சற்றுநேரம் படினும் உடனே அவர்களுக்கு மயக்கமும் கண்களில் சுழற்சியுமுண்டாகும்.

## முறுக்குச்சர்ப்பம்.

இது, சரீரமெல்லாம் திருகுக்கள்ளியைப்போல் முறுக்கிக்கொள்ளுதலையும், முறத்தால் தெள்ளுவதுபோல் பதறலையும் உண்டாக்கும்.

## சாரைப்பாம்பு.

இது, நீண்ட உடலையும் வேகநடையையும்பெற்று, மனுஷரை வாலால் அடிப்பதும் அன்றி, பாதமுதல் மார்புவரைக்கும் சுற்றி இடுப்பையும்

ஒடிக்கும். இதில், வெண்சாரை, சருஞ்சாரை, செஞ்சாரை, மஞ்சள் சாரை என நான்கு பேதம் உண்டு. அவைகளும் இவ்வாறேசெய்யும். இவைகளைப்பார்த்த எருமைமாடுகளுக்கு மாலைக்கண் உண்டாகும் என்பர்.

## புடையன்.

இது, நீண்டஉருவத்தையும் அழுக்குநிறத்தையும் பெற்று, வாலின் முனையால் குத்தித்தேகத்தில் புடைகளை விஸ்தாரம் உண்டாக்கும்.

## மண்ணுளிப்பாம்பு.

இது, தம்பாக்கு, வெள்ளி, ரத்தம் ஆகிய இவைகளின் நிறத்தைப் பெற்று, நீண்ட பயற்றங்காய்ப் பிரமாண முள்ளதாயிருக்கும். செவியில் நுழையில், அபாயமாம். இவ்விஷத்தினால், பருவகாலந்தோறும் சிறுசிறு தடிப்பும் நமைச்சலும் உண்டாகும். இதனைச் சிறுபாம்புக்கடி என்பர். இத்தடிப்பு, எண்ணெய்விட்டுக்கலந்தகூழை ஏழுநாள் சாப்பிடத்தீரும்.

## காலியாங்குட்டி.

இது, ஒருசாணிரண்டுசாண் நீளத்துடன் தேசசுகுறைந்திருக்கும், ஆனால், கடிக்க அறியாது; கடிக்கில், பெருஞ்சிகிச்சை வேண்டும்.

## கண்குத்திப்பாம்பு இதுவே பச்சைப்பாம்பாம்.

இது, பசியநிறத்துடன் நீண்ட உருவத்தைப்பெற்று, விருக்ஷங்களில் வாசம்பண்ணுவதும், நேரிட்டவர் கண்களைக்குத்துவதுமாயிருக்கும்.

## வெண்ணாந்தைப்பாம்பு.

இது, பருத்தசெக்கு, பனைமரம், தூண்முதலிய பிரமாணங்களையும், உடலெல்லாம் வழுவழுப்பையும் உள்ளதாய், வாலும் தலையும் ஒரே மொத்தமாய் மேலில்வெளுத்த வரிகளைப்பெற்று, கோழி, ஆடு, மாடுமுதலியவைகளை விழுங்குவதாயிருக்கும். சிலர் யானையை விழுங்குமென்றும் சொல்லுகிறார்கள். இது, மலைப்பாம்பு தாசரிப்பாம்பு எனச்சொல்லப்படும்.

## சர்ப்பவிஷவேகபேதம்.

சகல சர்ப்பவிஷத்திற்கும், வாயுவேகம், தேயுவேகம், வருணவேகம் என மூன்று வித வேகமும், இவற்றுள் உட்பிரிவும் உண்டு,

## 1-வது வாயுவிஷவேகநிதானம்.

வாயுவைப்பற்றி விஷம் ஏறும்போது எட்டுவித வேகம் உண்டாகும். அவையாவன:—1-வது, மூர்ச்சையும் மிகுந்த வியர்வையும் உண்டாகுதல்; 2-வது, சரீரம்வெதும்புதல்; 3-வது, கண் சொருகுதல்; 4-வது, செவியை அடைக்குதல்; 5-வது, நெஞ்சில் கபங்கட்டுதல்; 6-வது, அறிவுமாறுதல்; 7-வது, மேல் மூச்சுவாங்குதல்; 8-வது, உயிர்நீங்குதல் என்பனவாம். ஆனால், இவ்வேகம் பிறக்குமுன், விஷமானது; கடிவாயில் 50-மாத்திரை காலம் நின்று, பின்பு தேகமெங்கும் வியாபித்துச் சிரசில் ஏறும்.

## 2-வது தேயுவிஷவேகநிதானம்.

தேயு என்னும் பித்தத்தைப்பற்றி விஷம் ஏறும்போது 10-வித வேகமுண்டாகும். அவையாவன:—1-வது, முகங்கறுத்துக் கண்சிவக்குதல்; 2-வது, ரோமங்களின் முனைபிளந்து சிறுநீர்கறுத்திறங்கி முகம்வெளுத்தல்; 3-வது, வேதனையுடன் சரீரம்நீண்டு சிந்தைமயங்கி வாய்குளறுதல்; 4-வது, சோபம்பிறந்து குடலில் எரிச்சல்கண்டு தேசசுமாறி நாசியால் சலம்வடிகுதல்; 5-வது, தேகமும் கண்ணும் விடவிடத்து ஆடுதல்; 6-வது, அங்கம்பதைத்து இளைத்து நாசிபால் சலம்பெருகி மொழிமாறிப் பல்லைக்கடிக்குதல்; 7-வதும், 8-வதும், கபங்கட்டிச் சுவாசம் எழும்பி ஊர்த்துவ திஷ்டியாகப்பார்க்குதல்; 9-வது, உயிர் அடங்கியிருக்குதல்; 10-வது, உடலைவிட்டு ஆவிநீங்குதல் என்பனவாம். இவ்வேகம்பிறக்கும் முன்விஷமானது கடிவாயில் 150-மாத்திரைநின்று பின்பு ஏறும்.

## 3-வது வருணவிஷவேகநிதானம்.

வருணன் என்னும் சிலேஷ்மத்தைப்பற்றி விஷம் ஏறும்போது பத்து விதவேகம் உண்டாக்கும். அவையாவன:— 1-வது, தேகஞ்சிவந்து ரோமஞ்சிலிர்க்குதல்; 2-வது, வாயுலர்ந்து தேகங்கறுத்து வெதும்புதல்; 3-வது, தேகத்திற்குட்புறத்தில் உளைக்குதல்; 4-வது, கபம் அதிகரித்து மனங்கலங்கித்தத்தளிக்குதல்; 5-வது, தலைநடுக்கலும் அறிவழிதலும் பிறக்குதல்; 6-வது, கண்கள் மலரவிழித்து மேல்நோக்குதல்; 7-வது, அவயவம் முறைக்குதல்; 8-வது, சரீரவியாபாரம் அடங்குதல்; 9-வது, சுக்கிலம் நசிக்குதல்; 10-வது, உயிர்நீங்குதல் என்பனவாம். இவ்வேகம் பிறப்பதற்குமுன் விஷமானது கடிவாயில் 150-மாத்திரை நின்று பின்பு ஏறும்.

## உயிர்நிலைவிழிக்குறி.

விஷத்தினால் உயிர் அடங்கியகாலத்தில், கண்கள் மேல்நோக்கி நிலைக்கண்பட்டிருக்கையில், உயிரானது ஊர்த்துவகாயமான மேற்புறத்தில் அடங்கியிருக்கும்; கீழ்நோக்கியிருக்கில், உயிர்கீழடங்கியிருக்கும்; பக்கங்களில் நோக்கியிருக்கில், உயிர்பக்கங்களில் அடங்கியிருக்கும்; விழித்தபடியே சமபார்வையாக இருக்கில், உடலைவிட்டு உயிர்நீங்கியே இருக்குமென்றறிக.

## உயிர்ப்பரீக்ஷைநிதானம்.

விஷத்தால் இறந்தவனது தேகத்தில் பிரம்புகொண்டு அடிக்கில் தடித்தாலும், அல்லது வெதும்பலோடு சிவந்தாலும், சவத்தைக்குளத்திற்போடில் அமுந்தினாலும், சுத்தசலத்தைதமேலேசொரியில் குளிர்கண்டு ரோமஞ்சிலிர்த்தாலும், கைவிரல் கால்விரல்களில் நெட்டம் முறிந்தாலும்: தலைமயிரைப்பற்றியிழுக்கில், சொர்ப்பவலியுடன் அருகளிப்பு இருந்தாலும், குடோரியிடில், அதன் வழியாகச் சிவந்தரத்தம் ஒழுகினாலும், தாதுக்களில் ஒன்றுவது சொற்பநடையாகநடந்தாலும் உயிர்அடங்கியிருக்கின்றதென நிதானித்துப் பலவித சிகிச்சைகளையும் விரைவில் செய்யில் அவன் பிழைப்பான்; ஆதலால் விஷத்தால் உயிர்அடங்கிய சவத்தை 90-நாழிகைவரைக்கும் தகனம் செய்யக்கூடாதென்பது நூல்வழக்காம்.

## சர்ப்பவருக்கச்சத்துருவகை.

சர்ப்பங்களுக்கு, இருதலைமணியன், சென்னாய், மயில், கோழி, எருதின் குளம்பு, மின்னல், இடி, கீரி, கரடி, பன்றி, செம்போத்து, கருடன், முதலை, ஆந்தை, கூகை, மான், புதுவெள்ளம், புகைமூடிய அனல் முதலியவைகளும், மணிதரும் சத்துருக்களாம்.

மதாந்தரம் முற்றியது.

---

## விஷவிருத்திலக்ஷணம்.

சர்ப்பக்கடியினால் அற்பவிஷம் ஏறியிருந்தாலும், அது, பசி, தாகம், துக்கம், பயம், கோபம், மிகுந்தநகைப்பு, அக்கினித்தொழிலில் இருக்குதல், சுடுகையான நிலத்தில்படுக்குதல், கீழ்காற்றில்திரிதல், இரட்டை அலரிப்பூவைமுகருதல், சரீரசுட்கம், பேதி, அசீரணம், துர்ப்பலம், பித்த

தவாயு முதலியரோகத்தினால் மெலிதல், யானை, மேகம், எலி, மேளம் முதலிய தொனிகளை யுற்றுக்கேழ்க்குதல் என்னும் இவைகளினால் மகா விஷமாகும்.

## விஷத்திற்கு ஆரும்பத்தியம்.

விஷங்கடித்தவர்களுக்கு, பழகியஅரிசி, சாமையரிசி, தினையரிசி, பயறு, கறுப்புப்பயறு, துவரை, சிறுகீரை, பாலைக்கீரை, இலந்தைக் கொழுந்து, புளியாரை, சிறுகத்தாரிக்காய், மாதுளங்காய், நெல்லிக்காய் விளாம்பழம், நாவற்பழம், இந்துப்பு, முதலிய வஸ்துக்களும், காரம் இல் லாத அன்ன பானாதிகளும் ஆகுமென்றறிக.

## விஷத்திற்கு ஆகாப்பத்தியம்.

விஷந்தீண்டப்பெற்றவர்கட்குப் பகல்நித்திரை, சையோகம், கோபம், அதிகநடை, தீக்ஷணவெயில், ஸ்நானம் முதலிய இச்செய்கைகளும், கள்ளு, எள்ளு, கொள்ளு, சைத்தியபண்டம், காரமாகிய அன்னபானாதி கள் என்னும் இவ்வஸ்துக்களும் ஆகாதென்றறிக,

## ஆரூடநிதானம்.

பாம்புக்கடி உண்டவன் இடத்தில் இருந்துவந்த தூதுவன் ஊர்த்துவ முகதிஷ்டியாயாவது அதோமுகதிஷ்டியாயாவது பார்த்துக் கொண்டு, இன்னானை விஷந்தீண்டித்தென்று சொல்லி அழைப்பானாகில் அவ்விஷம் மீளாதென்று விஷச்சிகிச்சகன் நிதானிக்கவேண்டும்.

## இதுவுமது.

தூதுவன்சொன்ன சொல்லில் இருக்கும் அக்ஷரங்களை இரட்டித்து அத்தொகையை மூன்றுபேருக்குக்கொடுக்கில், மிகுதியில்லாவிடில் அவ்வி ஷம் மீளாதென்றும், இரண்டு மிகுதியானால் மீளுமென்றும் அறிக.

## இதுவுமது.

வைத்தியன் யாகஞ்செய்யுங்காலம், நித்திரைசெய்யுங்காலம், எண் ணெய் இட்டுக்கொள்ளுங்காலம், மூலிகை முதலியவைகளைக் கத்தியால் நறுக்குகின்றகாலம்; மனச்சஞ்சலமாக இருக்குங்காலம் ஆகிய இக்காலங் களில் தூதுவன்வந்து சொன்னால், அவ்விடம் மீளாதென்றறிக. இவ்வித

மாகச் சொல்லுகின்ற தூதுலக்ஷணம் விஸ்தாரம் உண்டு. அவைகளைச் சாரீரம் என்னும் சாஸ்திரத்தில், 6-வது அத்தியாயத்தில் காண்க.

இப்படலத்தில் ஆதியந்தமாகச் சொல்லிய சர்ப்பங்களையும், அவ்வவ் விஷகுணங்களையும் அறிந்து நிதானித்து, அவைகட்கு மணி மந்திர அவுஷதாதிகளினாலும், தெய்வவலியாலும், வைத்தியஞ்செய்கிற பண்டிதரைக்காணில், கருடனைக்கண்டது போல் சர்ப்பங்கள் பயப்படும் என்றறிக.

பதினான்காவது விஷாதிபேதபடலம் முற்றியது.

---

## 15-வது *கீடாதிபேதபடலம்.

---

### கீடாதிபேதம்.

உலகத்தில், கீடம் என்பது, காலபேதங்களினாலும், தேசபேதங்களினாலும், உருவபேதங்களினாலும், குணபேதங்களினாலும், அனந்தங்கோடி வகையாயிருந்தாலும், அவைகள், வாயுகீடம், அக்கினிகீடம், சோமகீடம், சங்கிரணகீடம், என 4-வகைக்குள் அடங்கி, 67-விதப்படும். அவையாவன:—வாயுகீடம் 18, அக்கினிகீடம் 24, சோமகீடம் 13, சங்கிரணகீடம் 12-என்பனவாம். இந்த 67-ம் சுத்தகீடங்களாம். தொந்த கீடங்களுக் களவில்லை. இவற்றுள், மகாவிஷகீடம் 4-வகைப்படும்.

### 1-வது வாயுகீடம்.

இது, 18-பேதப்படும். அவையாவன:—குன்னசம், துண்டிகேரம், சிருங்கிசாம், குகுந்தகம், உச்சிலிங்கம், அபிலாபம், சுவேதகம், மயூரகம், அபிசாரு, உலூகம், விருத்தம், சாரிபம், வைதளம், சாலம், கூர்மம், பருஷம், சித்திரசீரிஷம், துவிராசிகம் என்பனவாம். இவைகள் வாதப்பிரகோபமாயிருக்கும். இவ்விஷத்தினால் அவ்விடத்தில் அதிகநோவும் சரீர முழுதும் குத்துபட்டதுபோல் வேதனையும் உண்டாகும்.

---

* கீடம் என்பது புழு; இது முதலிய செந்துக்களின் விஷபேதங்களைக் கூறுவாம்.

## 2-வது அக்கினிகீடம்.

இது, 24-பேதப்படும். அவையாவன :—கௌடின்னியம், கண்ட பவம், லாதரி, பத்திரவிருக்ஷிகம், சீநாதுகம், பிர்ம்மணிகம், விடபப் பிர மணம், பாகியகி, பிச்சிலம், கும்பி, வர்ச்சகீடம், அருமேதகம்,டுண்டுபம், பதுமகீடம், மகரம், சதபாதி, பஞ்சாவம், பாந்தமச்சம், சூக்ஷ்மதுண் டம், அதிகர்த்தபி, கீடக்கிரமம், சராக்ஷி, சீதபி, சிலேஷ்மகம் என்பன வாம். இவைகள் பித்தப் பிரகோபமாயிருக்கும். இவ்விஷத்தினால், கடி வாயில் ரத்தங்கம்பி இலுப்பைப்பூ, பேரீச்சங்காய் இவைகளைப்போல் கொப்பிளம் எழும்புதலும், எரிச்சலும், பேதியும் உண்டாகும்.

## 3-வது சோமகீடம்.

இது, 13-பேதப்படும். அவையாவன:—விஸ்வம்பரம், பஞ்சசுக்கி லம், பஞ்சமக்குரோதம், சௌண்டிகம், சையகம், துலாகம், படம், கிடிகை, சடி, சூசீமுகம், கிருஷ்ணகோதம், அதப்பரம், காஷாயவாசி என் பனவாம். இவைகள் சிலேஷ்மப் பிரகோபமாயிருக்கும். இவ் விஷத்தினால் கடிவாயில் அத்திப்பழம்போற் கொப்பிளமும், அதில் அற்பநோவும் உண் டாகும்.

## 4-வது சங்கீரணகீடம்.

இது, 12-பேதப்படும். அவையாவன:—துங்கிநசம், கலகஸ்தம், பகம், பாஹடகம், கோஷ்டகாகி, கிருமிகரம், மண்டலபுஷ்பகம், காள நாபம், சரஷபகம், மத்குளி, சம்பளி, அக்கினிகீடம் என்பனவாம். இவைகள் திரிதோஷ பிரகோபமாயிருப்பதுந்தவிரப் பிராணநாசத்தையும் செய்யும். இவ்விஷத்தினால், வாதகீடம் ஆதியாகச் சோமகீடம் ஈறாகச் சொல்லிய மூன்றுவித கீடங்களுக்குள்ள விஷகுணங்களும், கொப்பிளங் களும், வேதனைகளும் மிசிரமாக ஒரே காலத்தில் பிறந்து, அவ்விடத்தில் வீங்குவதும், நமைச்சலோடு துர்க்கந்த ரத்தம் ஒழுகுவதுமா யிருக்கும்; அன்றியும், சிரசும் கண்களும் கனத்தல், மூர்ச்சை, பிரமை, இரைப்பு, இருமல், சுரம், அரோசகம், அதிகவேதனை என்னும் இக்குணங்களும் உண்டாகும். இவைகளைச் சாமானிய கீடவிஷங்களென்றறிக.

## மஹாவிஷகீடோற்பத்தி.

சர்ப்பங்களின் மல மூத்திரத்திலும், சுக்கிலத்திலும், முட்டைகள் உடைந்து நனைந்த இடத்திலும் அச்சர்ப்பங்கள் இறந்து அழிந்த உடலி

னும் பிறக்கின்ற கீடம் 4-பேதமாம். இவைகள், வாதாதி மூன்றுதோஷ சனனங்களாகவும் திரிதோஷ சனனங்களாகவும் இருக்கும்.

## கீடதந்தலக்ஷணம்.

இரண்டு விஷப்பற்களை உள்ள கீடங்கள் கடிக்கில், கடிவாயில் மலைக் கோங்குப்பூப்போல் மஞ்சள் நிறமாகவும், மூன்று விதப்பற்களை உள்ள கீடங்கள் கடிக்கில், நானுவித நிறங்களாகவும் தோற்றும்.

## அஷ்டகீடபேதம்.

ஒந்திமுதல் சிலந்திவரைக்கும் எண்வகைக்கீடங்களாம். இவைகளின் பேதம் 67-விதப்படும். அவைபாவன:—ஓணன் 4, தவளை 8, அட்டவி ஈ 6, வீட்டுப்பல்லி 5, காட்டுமசகம் 4, மக்ஷிகா 6, மலைப்பிபீலிகா 6, சிலந்தி 28, என்பனவாம். இவற்றுள் சிலந்திப்பூச்சிகள் ஒவ்வொன்றிற்கும் உருவமும் விஷகுணமும் பேதிப்பதால் இவைகளைத் தனித்தனியே எடுத்துக் காட்டப்படும். மற்றை ஏழுவகைக்கீடங்களுக்குள் ஒவ்வொருவகைக்கு உருவம் பலவாயிருக்கும் விஷகுணம் ஒன்றாயிருப்பதால், அவ் ஏழுவகைக்கீடங்களுக்கும் ஏழு வகை விஷகுணமே கூறப்படும். இவ் எண்வகைக் கீடங்களும் முற்கூறிய கீடவகை நான்கினுள் அடங்கும்.

## 1-வது ஓணன்.

இது, கடிக்கில், அந்து பிறைபைப்போல் காயம் உண்டாகும்; அப்போது வீக்கம், நமைச்சல், குத்தல், நோவு, சோருதல், மலத்தில் பல நிறம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இவ்விஷம், மூங்கில் குருத்து ரசம் காலாழாக்கில், மிளகுச்சூரணம் பலம் 1/4-சேர்த்து, 5 - நாள் 2-வேளையும் சாப்பிடத்தீரும். இது பச்சை ஓணனுக்கும் தவளைக்கும் உதவும்.

## 2-வது தவளை.

இது, கடிக்கில், அதிகசோம்பலான நித்திரையும், மூர்ச்சையும், கறுத்துப் பரவுகின்ற சொறியு முண்டாகும். இவ்விஷம், ஓட்டறை, லவணம், உத்தாமணிவேர் இம்மூன்றையும் சமமாக நிறுத்துச் சிறுநீரால் அரைத்துக் குழம்பாக வைத்துக்கொண்டு, கடிவாயிலும் தேகமுற்றிலும் 8-நாள் லேபனம் பண்ணத் தீரும். லேபனம் என்பது பூசித்தேய்த்தல்.

## 3-வது அடவிஈ.

இது, கடிக்கில், அதிக நித்திரையும் மிகு மூர்ச்சையும் உண்டாகும்.

## 4-வது வீட்டுப்பல்லி.

இது, கடிக்கில், நோவு, வியர்வை, வீக்கம், எரிச்சல், மார்புவேதனை, பொடிச்சிரங்கு எழும்புதல், என்னும் இக்குணங்கள் உண்டாகும். இவ் விஷம் குதிரைச்செவி மருந்தின்வேர், பெருங்கரந்தைவேர் இவ் விரண்டும் வகைக்குப் பலம் 2-ஆகச் சேர்த்து அதைப் பாகலிலைச்சாறும் பசும் பாலும் சமமாகக்கலந்துவிட்டு அரைத்து தடிப்பாக வைத்துக்கொண்டு, கடிவாயில் லேபனம்பண்ணி உடம்பெங்கும் துவாலையிடத் தீரும். இவ் விஷம் கொடிதென்றும், அதிவிரைவில் மகாவிஷ சிகிச்சைகளைச் செய்ய வேண்டுமென்றும் இல்லாவிடில் ஒருவருஷத்துக்குள் மரணம் உண்டாகு மென்றும் சில மதாந்தர சம்மதம்.

## 5-வது காட்டுமசகம்.

இது, கடிக்கில் அவ்விடத்தில், நமைச்சலும், அற்பவீக்கமும், வேத னையும் உண்டாகும். இது அசாத்தியம். இஃதன்றியும், பொதுவாய் இவைகளுக்குச், சமதன், சட்டைப்பிடுங்கன், அறைதாண்டுவோன், வாயில் குழாம் கூடுவோன், புரைதாண்டுவோன், படையோட்டி என்னும் காரணப் பெயர்களையும் இன்னம் அனேக பெயர்களையுங்கூறி இவைகளும் நோயுண்டாக்குமெனவும் சித்தர் மதாந்தரம் சொல்லும். ஆயினும் நீலி இலைக் கல்கத்தாலும் அவ்வேரின் கஷாயத்தாலும்போம். மசகம் என்பது கொசு.

## 6-வது மக்ஷிகா.

இது, கடித்தாலும் கொட்டினாலும், அவ்விடத்தில் வீக்கம், நமைச் சல், எரிச்சல் முதலிய குணங்கள் உடனே உண்டாகி அடங்கி பின்பு தடித்து உபத்திரவம் உண்டாவதுந்தவிர, அத்தடிப்பில் மாறாது சிலைத் தண்ணீரும் வடியும். மக்ஷிகா என்பது குளவி முதலியவண்டுகளாம்.

## 7-வது மலைப்பிபீலிகா.

இது, கடிக்கில், அவ்விடத்தில் நீர்த்துளியைப்போல் தடித்தல், அதிகநோவு, நெருப்பால் சுட்டதுபோல் எரிச்சல், நமைச்சல் தேகத்தில் அழலை என்னும் இக்குணங்கள் உண்டாகும். பிபீலிகா என்பது எறும்பு.

## 8-வது சிலந்திப்பூச்சியின் பேதம்.

சிலந்திப்பூச்சி 28-பேதப்படும். அதன் விவரம்:—வாதத்தில் 7, பித்தத்தில் 7, சிலேஷ்மத்தில் 7, சங்கீரணத்தில் 7, ஆக இருபத்து எட்டாம். அன்றியும், பிரத்தியேகச் சிலந்தி என்பது ஒன்றுண்டு.

## வாதச்சிலந்திப்பூச்சிகளின் பொதுக்குணம்.

இவைகள் வெளுப்பு சிவப்பு நிறத்தையும், ஆசனத்தில் சித்திரங்களான மெல்லிய நூலையும் உள்ளதுகளாயிருக்கும். இவ்விஷங்களால், இருமல் முதலிய வாதரோக குணங்களெல்லாம் உண்டாகும்.

## 1-வது பீதச்சிலந்திவிஷம்.

இது, தலைநோவும் அரோசகமும் சுரமும் உண்டாக்கும்.

## 2-வது குமுதச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில் கொப்பிளங்கள் எழும்பி, அதில் நின்றும் மாறாது சீழ்வடிவதும் எரிச்சல் பிறப்பதுமாக இருக்கும். இதனால், இரைப்பும் நெஞ்சடைப்பும் உண்டாகும்.

## 3-வது மூலவிஷச்சிலந்தி.

இது, அதிக கொப்பிளங்களையும் அக்கினிக் குணத்தையும் உண்டாக்கும்.

## 4-வது ரத்தச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில் சிவந்து தடித்து அதைச்சுற்றிலும் சிறிய கொப்பிளங்கள் ஏழும்பி, அதில் நின்றும் ஓயாது ரத்தமும்சீழும் வடிந்து கொண்டே இருக்கும். இதனால் இரைப்பும் பேதியும் உண்டாகும்.

## 5-வது சித்திரச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், சிவந்த கொப்பிளங்கள் எழும்பி அவைகள் பழுத்து உடைந்த பின்பு அங்கு கறுத்தவிரணமாகி, அதில் நின்றும் நுரைபோல் சீழ்வடிவதாயிருக்கும். இதனால், தலையிலும் கீல்களிலும் நோவு, சுரம், இரைப்பு, வீக்கம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 6-வது சந்தானிகச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில் சகிக்கக்கூடாத குத்தலும் விரணமும் உண்டாகும்.

## 7-வது மேஜகச்சிலந்தி.

இது, நீலநிறம் உள்ளது இவ்விஷத்தினால் அந்நிறக் கொப்பிளங்கள் எழும்பும்.

ஆக வாதச்சிலந்தி 7-ம் முற்றியது.

## பித்தச் சிலந்திப் பூச்சிகளின் பொதுக்குணம்.

இவைகள், கருமை பொன்மைகலந்தநிறத்துடன், முகத்தில் அனலை யும், ஆசனத்தில் தாமரை நூலைப்போல் நூலையும் உள்ளதுகளாயிருக்கும்; இவ் விஷங்களால் முக்கியமாகப் பித்தரோககுணங்கள் உண்டாகும்.

## 1-வது கபிலாசிலந்தி.

இது, கண்களினால் பார்க்கில், தேகமுற்றும் சிவந்த தடிப்பும் வாய் நீர் ஊறலும், மயிர்க்கால்களில் எரிச்சலும், தலைப்பாரமு முண்டாகும்.

## 2-வது அக்கினிமுகச்சிலந்தி.

இது, அதிக நோவையும் நெருப்பாற்சுட்ட கொப்பிளங்கள்போல் கொப்பிளங்களையும் பிறப்பிக்கும். இதனால், தாகம், எரிச்சல், நடுக்கல், மூர்ச்சை, ரத்தம் வடிதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 3-வது பீதச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், கட்டை நெருப்பாற் சுட்டதுபோலிருத்தல், மூர்ச்சை, வாந்தி, சிரோவேதனை, சுரம், அரோசகம், சூலை, மலமும் மூத் திரமும் மஞ்சளித்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 4-வது பதுமச்சிலந்தியின்விஷம்.

இது, பட்ட இடத்தில் தாமரைப் பூவைப்போல் வட்டவடிவான கொப்பிளம் உண்டாவதும், மறைவதும், பின்பு எழும்புவதும், அதில் மாறுது சலம் வடிவதும், நோதலுமாயிருக்கும்.

## 5-வது மூத்திரச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், கறுப்பு சிவப்பு நிறமான கொப்பிளம் எழும் பித் துர்க்கந்த விரணம் பிறக்கும். இதனால், இருமல், இரைப்பு, சுரம், வாந்தி, தாகம், மூர்ச்சை, பிரமை என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 6-வது சுவேதச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், விசர்ப்பிரோகக் கொப்பிளம்போல் கொப்பிளம் எழும்புவதன்றியும், அதில் மாறாது சலம்வடிதல், தாகம், மூர்ச்சை, சுரம், நோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 7-வது கறுப்புச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், கறுத்த வீக்கம் உண்டாகி விரணம் பிறக்கும். அதில், துர்க்கந்தத்துடன் நிறபேதமான ரத்தமும் சீழும் மாறாது வடிந்துகொண்டே இருக்கும்.

ஆக பித்தச்சிலந்தி 7-ம் முற்றியது.

---

## சிலேஷ்மச்சிலந்திப்பூச்சிகளின் பொதுக்குணம்.

இவைகள், வெண்மை நிறத்தையும், குடலில் நீலநிறத்தையும், ஆசனத்தில் சிவந்த நூலையும் உள்ளதுகளாயிருக்கும். இவ்விஷங்களால் சிலேஷ்மரோக குணங்களெல்லாம் உண்டாகும்.

## 1-வது பாண்டுச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், வீக்கத்துடன் கனத்த விரணம் பிறக்கும். இதனால், சுரமும் ரோமச்சிலிர்ப்பும் சிரோபாரமும் உண்டாகும்.

## 2-வது ரத்தபாண்டுச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், வெளுத்துத் தடித்து விரணமாகி ரத்தம் வடியும்.

## 3-வது வண்டுச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், வண்டைப்போல் கறுத்த கொப்பிளம் உண்டாகி, அதைச்சுற்றிலும் எரிச்சலைத் தருகின்ற சிறுசிறு கொப்பிளம் பிறக்கும். அன்றியும் தேகமெல்லாம் கறுத்த மச்சங்களும் எழும்பும்.

## 4-வது பிங்கச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், கொப்பிளம் எழும்பி, அதில் நின்றும் ரத்தம் ஒழுகும். இதனால், சுரம், நோவு, வீக்கம், அதிக எரிச்சல், தாகம், என்னும் இக்குணங்கள் உண்டாகும். பிங்கம் என்பது மஞ்சள் நிறம்.

## 5-வது திரிமண்டலச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், கறுத்த விரணம் உண்டாகி, அதில் நின்றும் ரத்தம் வடியும். இதனால், அரோசகம், கண் எரிச்சல், உடம்பிலும் முகத்திலும் மச்சங்கள் எழும்புதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 6-வது துர்க்கந்தச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், பேய்ச்சுரைப் பிஞ்சைப்போல் கட்டி எழும்பி, அதைச்சுற்றிலும் நெருங்கிய சிறு சிறு கொப்பிளம் எழும்பும். இதனால், விசர்ப்பி குணமும் வியர்வையும் துர்க்கந்தமும் எரிச்சலும் பிறக்கும்.

## 7-வது சித்திரமண்டலச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், விசர்ப்பிபோல் விரணம்உண்டாகி, அதைச் சுற்றிக் கொப்பிளங்கள் எழும்பும்.

ஆக சிலேஷ்மச்சிலந்தி 7-ம் முற்றியது.

---

## சங்கீரணச்சிலந்திப்பூச்சிகளின் பொதுக்குணம்.

இவைகள் ஆசனத்தில் பலநிற நூலையும் நெருப்பாற் சுட்டதுபோல் எரிவையும் திரிதோஷ குணங்களையும் உள்ளதுகளாயிருக்கும். இவ் விஷங்கள் சாத்தியமும் கஷ்ட சாத்தியமும் அசாத்தியமும் ஆகும்.

## 1-வது காகச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில், வெளுத்தும் சிவந்தும் பூனைப்புடுக்கன் காயினது விதைப்போல் கொப்பிளம் எழும்பும். இதனால் அதிகவேதனை, விக்கல், இரைப்பு, மிகுந்ததாகம், மூர்ச்சை நித்திரைப்பங்கம், சதாமார்பு நோவு என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 2-வது அக்கினிபதச்சிலந்தி.

இது, கால்கள்தோறும் விஷம் உள்ளது. அக்கால்கள் தேகத்தில் படில், பட்ட இடமெல்லாம் கொப்பிளங்கள் உண்டாகும்.

## 3-வது லாஜவர்ணச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில் தூர்க்கந்தவிரணம்பிறந்து, அதில் சுப்பலால் குத்துவதுபோல் குத்தலும் ரத்தமும் பெருகும். இதனால், சீதசுரம், தாகம், மூர்ச்சை, பேதி என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

லாஜம் என்பது பொரி.

## 4-வது வைதேகிச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில் நெருப்பினால் சுட்டதுபோல் இருக்கும். இதனால், அதிகவேதனையும் சுரமும் மோகமும் மார்புநோவும்உண்டாகும்.

## 5-வது ஜாலமாலினிச்சிலந்திவிஷம்.

இது, பட்ட இடத்தில் விரணம்பிறந்து, அதன்மேல் மச்சமும், வீக்கமும் எழும்பும். இதனால், நோவு தாகம், பிரமை, இரைப்பு, தேகம் மரத்தல், மோகம் பேதி என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 6-வது மாலாகுணச்சிலந்திவிஷம்.

இது, தேகமுழுதும் மச்சங்களைப்போல் கறுத்ததடிப்புகளை எழும்பும். இதனால், உள்ளில் எரிச்சல், மேலில்குளிர்ச்சி, வயிறுப்பல், மூத்திரக் கிரிச்சரம், மூர்ச்சை, பேதி, சுரம், தலைநோவு, கண்ணோவு, இரைப்பு, தாகம், வீக்கம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 7-வது சுவர்ச்சச்சிலந்தி.

இது, வர்ணபேதமாயிருக்கும். இவ்விஷத்தினால், பலநிறக்கொப்பிளம் பிறக்கும்.

ஆக சங்கிரணச்சிலந்தி 7-ம் முற்றியது.

---

## பிரத்தியேகச்சிலந்திலக்ஷணம்.

இது, புணருங்காலத்தில், அச்சுக்கிலத்துளி எத்தனை தெறிக்கின்றதுகளோ அத்தனை கொப்பிளங்கள் விரைவில் உண்டாகும்.

## சிலந்திகடிக்கும் ஸ்தானநிதானம்.

கபிலாசிலந்தி மூக்கில், அக்கினிமுகச்சிலந்தி சந்திஸ்தான நரம்புகளில், பீதச்சிலந்தி தாடைகளில், பதுமச்சிலந்தி இடதுகண்ணில், தூர்க்

கந்தச்சிலந்தி வலதுகண்ணில், மூலவிஷச்சிலந்தி சுவேதச்சிலந்தி மூத்திரச்சிலந்தி கறுப்புச்சிலந்தி ஆகியநான்கும் வலதுபுஜத்தில், பாண்டுச்சிலந்தி காதில், ரத்தப்பாண்டுச்சிலந்தி இடதுவிலாவில், வண்டுச்சிலந்தி வலதுவிலாவில், பிங்கச்சிலந்தி வயிற்றில், திரிமண்டலச்சிலந்தி முதுகில், பீதச்சிலந்தி கையில். குமுதச்சிலந்தி நாபியில், சித்திரமண்டலச்சிலந்தி இடதுதோளில் சிரசில், ரத்தச்சிலந்தி காதில், சித்திரச்சிலந்தி நெற்றியில், சந்தானிகச்சிலந்தி உதட்டில், மேஜகச்சிலந்தி சிரசில் உள்ளங்கையில், அக்கினிபதச்சிலந்தி கண்டத்தில், காகச்சிலந்தி மார்பில், லாஜவர்ணச்சிலந்தி தனத்தில், வைதேகிச்சிலந்தி தோளில், சாலமாலினிச்சிலந்தி கடைக்கண்ணில், மாலாகுணச்சிலந்தி மார்பின்பள்ளத்தில், சுவர்ச்சச்சிலந்தி காதுக்குப் பின்புறத்தில் கடிக்கும்.

## கடிகாலநிதானம்.

சிலந்திப்பூச்சிகள் சுக்கிலபக்ஷதிதிகளில் சாயங்காலவேளையிற் கடிக்கும். இவ்விஷங்களினால், கடித்தவாயில், வெளுப்பு, கறுப்பு, சிவப்பு, மஞ்சள் என்னும் நிறமாகவும் பலவிதநிறமாகவும் இருப்பதன்றியும், அவ்விடத்தில் மிருதுவாக உயர்ந்துதடித்து அத்தடிப்பைச்சுற்றிலும் சிறுசிறு கொப்பிளம் உண்டாகும். அக்கொப்பிளச் சலம்பட்ட இடமெல்லாங் கொப்பிளிக்கும். இதனால், விசர்ப்பை ரோகத்திலும் சோபைரோகத்திலும் உண்டாகின்ற வருத்தமும் சுரமும் வியர்வையும் உண்டாகும்.

## சிலந்தியின்சப்தவேகவிஷநிதானம்.

மேற்கூறிய விஷமானது, தேகத்தில் வியாபித்த 1-வது நாளில், அவ்விடத்தில் நிறம்தோற்றாமல் கொஞ்சம்தினவு உண்டாகுதல். 2-வது நாளில், இபற்கைவன்னத்துடன் தடித்து, தினவோடெங்கூடிய சிறியகட்டிகள் எழும்புதல். 3-வது நாளில், அகல் கவிழ்த்ததுபோல் தடித்துச்சிவந்து அவ்விடத்தில் உள்ளரோமங்கள் சிலிர்ப்பதுமன்றி, அந்தமயிர்க்கால்களில் ரத்தம்கம்மிச் சுர முண்டாகுதல். 4-வது நாளில், அங்கு வீக்கம், எரிச்சல், இரைப்பு, பிரமை, இவை உண்டாகுதல். 5-வது நாளில், விஷதுர்க்குணங்களெல்லாம் அதிகரிக்குதல். 6 வது நாளில் அவ்விஷம் மர்மஸ்தானங்களில் வியாபிக்குதல். 7-வது நாளில், உயிர்க்கு அபாயம்வருகுதல் என்றறிக. ஆதலால், அவ்விஷங்களில் உத்தம, மத்திம, அதமாஅதமங்களின் பலாபலங்களை அறிந்து, தகுந்தபடி மந்திரஅவுஷதாதிகளினால்

சிகிச்சைசெய்யில், 21-நாளில் சுகுணம் உண்டாகும். ஒருநாள் இரண்டு நாள் கடிவாயில் எரிவுண்டாகி அடங்கிப் பின்புகொப்பிளமும் எழும்பும் என்பர்.

## சர்வ சிலந்திகளின்சாமானியவிஷலக்ஷணம்.

சிலந்திப்பூச்சிகளின் விஷம் ஏறினால், அவ்விடத்தில் எழும்கின்ற விரணங்களில் சிலது கொப்பிளங்களாயும், சிலது மண்டலாகாரமாயும், சிலது சுவேதநிறமாயும், சிலது சிவந்தநிறமாயும், சிலது மஞ்சள்நிறமாயும், சிலது நீலநிறமாயும், சிலது மிருதுவாயும், சிலது கடினமாயும் இருக்கும். எட்டுக்கால் பூச்சியும் இச்சிலந்திப்பூச்சிகளின் பேதமே ஆம்.

## சிலந்தியின் அஷ்டவிஷபேதம்.

சிலந்திப்பூச்சிகளின், சுவாசம் பல்லு, மலம், மூத்திரம், சுக்கிலம், வாய், வாய்நீர், ஸ்பரிசம் என்னும் எட்டுஸ்தானங்களில் நின்றும் விஷங்கள் பிறக்கும். அவைகள் மனிதர்மீது படில், சகல துர்க்குணங்களுமுண்டாகும்.

## 1-வது சிலந்தியின் சுவாசம்.

இது, சுரத்தையும் மிகுந்த தாகத்தையும் உண்டாக்கும்.

## 2-வது சிலந்தியின்பல்.

இது, அழுந்திய இடத்தில் பிறக்கின்ற விரணம் நிறபேதமும் கடினமும் ஸ்திரமும் உள்ளதாயிருக்கும். இதனால், சரீரத்தில் வீக்கம், எரிச்சல், வேதனை, வியர்வை, தாகம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 3-வது சிலந்தியின்மலம்.

இது, பட்ட இடத்தில், இலுப்பைப்பழம்போல் வெளுத்தவிரணம் பிறந்து, அதில் துர்க்கந்தமும், எரிவும்,பசபச என்கின்றதினவும் உண்டாகும்.

## 4-வது சிலந்தியின்மூத்திரம்.

இது, பட்ட இடத்தில், நடுவில் கறுத்தும், உயர்ந்தும், சுற்றிலும் வாடியும் புஷ்பம்போல் மலர்ந்தும் இருக்கின்ற விரணம் பிறக்கும். அதில், துர்க்கந்தமும் எரிச்சலும் மாறாது உண்டாகும்.

## 5-வது சிலந்தியின்சுக்கிலம்.

இது, பட்ட இடத்தில், கடினமான கொப்பிளமும் நோவும் உண்டாகும்.

## 6-வது சிலந்தியின்வாய்.

இது, பட்ட இடத்தில் முருக்கம்பூவைப்போல் நிறம் உள்ளவிரணம் பிறந்து, அதில் குத்தலும் ஊரலும் உண்டாகும்.

## 7-வது சிலந்தியின்வாய்நீர்.

இது, பட்ட இடத்தில், புங்கின் பூவைப்போல் நிறம்உள்ள விரணம்பிறக் கும். அவ்விரணத்தின் பக்கங்களிற் பூச்சியூருவதுபோல் பரபரத்தலும் ஊசியால்குத்துவதுபோல்குத்தலும், எரிச்சலும் உண்டாகும்.

## 8-வது சிலந்தியின்ஸ்பரிசம்.

இது, தேகத்தில்பட்டாலும், இப்பரிசத்தைப்பெற்ற வஸ்திரம்பட் டாலும், முற்கூறியகுணங்களெல்லாம் விரைவில் உண்டாகும்.

ஆக அஷ்டவிஷபேதத்துடன் சிலந்திப்பூச்சிகளின்
விஷநிதானமும் முற்றியது.

---

மேற்கூறிய சகல சிலந்திவிஷங்களும், சங்கம்வேர்ப்பட்டை, மிளகு, இவ்விரண்டையும் வகைக்கு பலம், $\frac{1}{4}$-$\frac{1}{4}$ வீதமாகநிறுத்து, மயனம்போல் அரைத்துப் பசுவினது நெய்யில்குழைத்து, 21-நாள் இரண்டுவேளையும் சாப்பிட்டு இச்சாப்பத்தியம்காக்கில், தீரும்; அல்லது, நரிப்பல்லைத்தூளா க்கி, அதில்கற்றாழைரசத்தை விட்டுநன்றாக அரைத்து கடிவாயிலும் தேக முற்றிலும் 21-நாள் மூன்றுகாலமும் லேபனம்பண்ணத்தீரும். அல்லது, அவுரியினது சமூலமும் பலம் 1-ஆக நிறுத்து, அதில் நல்லசலம் $\frac{1}{2}$-படி, விட்டு, $\frac{1}{4}$-ஆழாக்குக்கஷாயமாகக்காய்ச்சி, 7-நாள் இரண்டுவேளையும் சாப் பிடத்தீரும். இவ்வாறே மூன்றுமுறை கொடுக்கவேண்டும். அல்லது, சிறு சின்னி இலை ரசம் $\frac{1}{4}$-ஆழாக்கு அளவாக இரண்டுநேரமும், 7-நாள் 3-முறை சாப்பிட்டு உப்பில்லாப்பத்தியம் இருக்கிலும், விலகும்.

## மீன்விஷம் வண்டுவிஷம்.

சிலமீன் கடிக்கில், நோவும் எரிச்சலும் உண்டாகும் .அன்றியும், நீர் வண்டு, சுழல்வண்டு, பாசிவண்டு எரிவண்டு முதலிய சில்விஷம் உள்ளவை கள் கடிக்கில், அவ்விடத்தில் வீக்கம், நமைச்சல், நோவு, நுரைத்த பேதி, சரீரத்தில் தடிப்பு என்னும் இக்குணங்கள் உண்டாகும். இவ்விஷம்,

பச்சைநன்னாரிவேரை மேல்தோலும் உள்நரம்பும் போக்கிக் கொட்டைப்பாக்குப்பிரமாணம் அரைத்துக்கற்றாழைச்சோற்றில் கலந்து, 40-நாள் அந்தி சந்தி அருந்தத்தீரும் இதற்கு இச்சாபத்தியம்.

## நாட்டுமரவட்டை.

இது, கடிக்கில், வியர்வை, நோவு, சரீரம்தடித்தல், வீக்கம், கறுப்பகத்திப் பூநிறம்போல் பொடிச்சிரங்குகள் எழும்புதல், பிரமை என்னுமிக்குணங்கள் உண்டாகும். இதற்குச்சதபதி என்றும் பெயர். இவ்விஷம், திரிகடுகு, அல்லது காட்டுவாகைப் * பஞ்சாங்கம் இவற்றுள், யாதேனும் ஒன்றை வெந்நீரிலரைத்துப் பிழிந்துவடிக்கட்டி, நசியமும்லேபனமும் செய்து உள்ளுக்குங்கொடுக்கில், முறியும். இது, மற்றை அட்டைகட்கும் உதவும். பஞ்சாங்கம் என்பது வேர், மேல்பட்டை, இலை, பூ, காய், ஆகிய ஐந்துமாம்.

## விருக்ஷிகோற்பத்தி.

சர்ப்பங்கள் செத்தழிந்த இடத்திலும், சாணம் கோணிப்பட்டைமுதலியவை மக்கின இடத்திலும், மயானத்தின்சாம்பலிலும் பிறக்கும். இதுகள் முறையே வெளுத்தும் கறுத்தும் சிவந்தும் இருக்கும். இவற்றின் விஷம் ஏறினால், நாவுதடித்தல், தேகமரத்தல், அதிகநோவு, நாசியால் ரத்தம் விழுதல், சர்வாங்கத்திலும்வியர்வை, மூர்ச்சை, வாயுலரல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இது, மந்திரவலி அவுஷதவலி தெய்வவலி இம்மூன்றும் ஒத்துக்கொள்ளில் இறங்கும். விருக்ஷிகம் என்பது தேள்.

## சாதாரணதேளின்பேதம்.

தேளானது, உச்சிலிங்கத்தேள், வாதத்தேள், பித்தத்தேள், சிலேஷ்மத்தேள் என 4-விதப்படும். அன்றியும், நண்டுவாய்க்காலி ஒன்றுண்டு.

## 1-வது உச்சிலிங்கத்தேள்.

இது, பகற்காலத்தில்கொட்டும். இவ்விஷத்தினால், அவ்விடத்தில் வீக்கம், நரம்புகளில்மிகுவேதனை, ரோமச்சிலிர்ப்பு, அதிகசீதளம் என்னும் இக்குணங்கள் உண்டாகும்; இது மந்திரத்தால் வசப்படும்.

## 2-வது வாதத்தேள்.

இது, மார்புநோவு, மேல்சுவாசம், எலும்பு நரம்பு கீல் இவைகளில் நோவு தேகங்கறுத்தல், கூச்சல், புரளல் முதலிய குணங்களை உண்டாக்கும்.

## 3-வது பித்தத்தேள்.

இது, அறிவுநீங்குதல், சுடுகையான மேல்மூச்சு, வாயானது காரமாயிருக்குதல், முகத்தில் எண்ணெய்தடவினதுபோல் பளபளப்பு, மாமிசங்கரைதல், சோஷை என்னும் இக்குணங்களை உண்டாக்கும். அன்றியும் அவ்விடத்தில் வியர்வை, கவுட்டியில்நெறிகட்டுதல், எரிச்சல், கடுத்தல், மறுநாள் வரைக்கும் நோதல் என்னுமிக்குணங்களுண்டென்பாருமுளர்.

## 4-வது சிலேஷ்மத்தேள்.

இது, வாந்தி, அரோசகம், மார்பு அதிரல், வாயில்சலம்வடிதல், பீநசம், சரீரமுற்றிலும் வாழைத்தண்டை ஒத்தசீதளம், வாயினிப்புஎன்னும் இக்குணங்களை உண்டாக்கும். இவ்விஷங்கள் கோழிமலம் உலர்ந்ததை நெருப்பில் இட்டுக் கடிவாயில்புகைபிடிக்க இறங்கும்; அல்லது கருநாபியைத் தண்ணீரில் உரைத்துக் கொட்டினவாயில் போடத்தீரும்; அல்லது பூனைக்காஞ்சொறிச்சாறும், முருக்கிலைச்சாறும், முருங்கை இலைச்சாறும், கொட்டுவாயில் வேதுபிடிக்கக்குளிரும்; அல்லது, வெண்குன்றிவேரை,வெந்நீரில் அரைத்துப்பிழிந்துவடிக்கட்டிப் பஞ்சில் ஊட்டிக்கொண்டு, இடதுபக்கம் கொட்டினால் வலதுமூக்கிலும், வலதுபக்கம் கொட்டினால் இடதுமூக்கிலும் நசியம் பண்ணத்தீரும்.

## நண்டுவாய்க்காலி.

இது, கொட்டினால், வியர்வையும், நெறிகட்டுதலும், வீக்கமும், கடுப்பும், குடைச்சலும், எரிச்சலும், குமுறலும், வாயில்நுரையும் உண்டாகும். இந்தவிஷம், எட்டிவேர்ப்பட்டையை பெரும்நெல்லிக்காய்ப் பிரமாணம் அரைத்து அரை ஆழாக்கு, வெந்நீரில்கரைத்து உள்ளுக்குக்கொடுப்பித்து கொட்டினவாயில் கத்தரிக்காயைச் சுட்டுக்கட்டில் தீரும்.

## மூஷிகபேதம்.

மூஷிகம் என்பது 18- வகைப்படும், அவையாவன.— லாலஜம், சபளம், புண்டாரம், ஹரிதம், சிகுரம், அசிதம், கஷாயதந்தம், குநகம், கோகிலம், கபிலம், கிருஷ்ணம், அருணம், சபலம், சுவேதம், கபோதம், உந்துரு, பலினி, ரசாலம் என்பனவாம், மூஷிகம் என்பது எலி. அன்றியும், சுசுந்தரி என்பது, ஒன்றுண்டு; இதுவே மூஞ்சூறு.

## 1-வது லாலஜஎலி.

மிருந்த அலேச்சலே உடையதாயிருக்கும், இது கடிக்கில், வாந்தி மூர்ச்சை, வாய்நீர் ஊறல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 2-வது சபளஎலி.

பலநிறத்தைப் பெற்றிருக்கும். இது கடிக்கில், திரிதோஷகுணத்துடன் வாந்தி, மிருந்தமூர்ச்சை, அதிகதாகம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். சபளம் என்பது பலநிறமாம்.

## 3-வது புண்டரஎலி.

பேய்க்கரும்பின் நிறத்தைப்பெற்றிருக்கும். இது கடிக்கில், சரீரம் வெளிறலும், அக்கரும்புவர்னமுள்ள விரணமும் உண்டாகும்.

## 4-வது ஹரிதஎலி.

மஞ்சள்நிறத்தைப் பெற்றிருக்கும். இது கடிக்கில், அக்கினிமந்தமும் கொட்டாவியும் மயிர்க்கூச்செறிதலும் உண்டாகும்.

## 5-வது சிகுரஎலி.

தேகமுற்றிலும் முறைத்தரோமங்களைப் பெற்றிருக்கும். இது கடிக்கில் தலேநோவு, வீக்கம், வாந்தி, பிரமை, தேகமுற்றிலும் மச்சம் என்னும் இக்குணங்கள் உண்டாகும். சிகுரம் என்பது ரோமம்.

## 6-வது அசிதஎலி.

உதட்டில், கரியநிறத்தைப் பெற்றிருக்கும். இது கடிக்கில், சரீரங் கறுத்தலும் மூர்ச்சையும் வாந்தியும் மார்புநோவும் உண்டாகும்.

## 7-வது கஷாயதந்தஎலி.

சிவந்தபற்களைப் பெற்றிருக்கும். இது கடிக்கில், சதாஉறக்கமும் மார்புவறளலும் மலபந்தமும் உண்டாகும், இதனைத் தூங்கெலி என்பர்.

## 8-வது குநகஎலி.

மரக்கால்போல் உடலேப்பெற்றிருக்கும். இது கடிக்கில், சிவந்தமச்சங்களுடன் நோவுண்டாகும். குநகம் என்பது மரக்கால்.

## 9-வது கோகிலஎலி.

குயில்போல் புள்ளிகளைப்பெற்றிருக்கும். இது கடிக்கில், கிரந்தியும், உக்கிரமானசுரமும் தாகமும் உண்டாகும். கோகிலம் என்பது குயில்.

## 10-வது கபிலஎலி.

கபிலநிறம் உள்ளது. இது கடிக்கில், கண்டுகெண்டாக எழும்பி விரணமாகும். இதனால், சுரம், பிரமை, வாந்தியென்னுமிக்குணங்கள் உண்டாகும்.

## 11-வது கிருஷ்ணஎலி.

கரியநிறத்தைதப்பெற்றிருக்கும். இது கடிக்கில், தினந்தோறும் ரத்த வாந்தியும் மழைக்காலத்தில் அதிக ரத்தம் வீழ்தலும் உண்டாகும்.

## 12-வது முதல் 17-வது வரையில் அருணாதிஎலிபேதம்.

அருணம், சபலம், சுவேதம், கபோதம், உந்துரு, பலினி ஆக 6-வித எலிகளுங்கடிக்கில், திரிதோஷம் அதிகரித்துச் சந்நிபாத குணங்கள் அதிகரித்தலுடன் கடித்தஇடத்தில் ரத்தம்வடிதல், கிரந்திகள் எழும்புதல், காதின் கீழ் கட்டிகள் பிறக்குதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்.

## 18-வது ரசாலஎலி.

நாமக்கரும்பு நிறமாயிருக்கும். இது கடிக்கில், நெஞ்சு மரத்தலும் சொல்லக்கூடாதவேதனையும் உண்டாகும். ரசாலம் என்பது நாமக்கரும்பு. சகல எலிவிஷங்களும் தேகத்தில் அடங்கியிருந்து, மழை மேகம் எழும்புகிறகாலத்தி லதிகரிக்கும். பெருச்சாளிக்கும் இவ்விஷம் உண்டு.

### சுசுந்தரி.

இது, கடிக்கில், சரீரம் இளைத்தலும் பேதியும் வாய்பேசக் கூடாமையும் உண்டாகும். இதற்கு, நீலிக்குடிநீர் ஆகும். சுசுந்தரி என்பது, மூஞ்சூறு.

### எலிச்சுக்கிலவிஷநிதானம்.

எலிகள் புணருங்காலத்தில் அச்சுக்கிலம் யார்மீதாவது சிதறுமாகில், அந்த இடத்தில், கிரந்தி, வீக்கம், மச்சங்கள் எழும்புதல், பிரமை, அரோசகம், குளிர்காய்ச்சல், கீல்நோவு, நடுக்கல், ரோமச்சிலிர்ப்பு, மூர்ச்சை, சிலேஷ்மாதிக்கம், வாந்தி, தாகம் முதலிய குணங்களுண்டாகும்.

### அசாத்தியஎலிவிஷலக்ஷணம்.

எந்த,எலியினாலாவது, மூர்ச்சை, தேகவீக்கம், மாறுருவம், வியர்வை, காதுமந்தம், சுரம், தலைநோவு, வாய்நீரூறல், ரத்தவாந்தி என்னும் இக்குணங்கள் உண்டாகில் அசாத்தியமே.

எலிவிஷங்கள் முற்றியது.

---

மூர்ச்சை, ஈனத்தொனி சோருதல் என்னும் இக்குணங்கள் உண்டாகும்; அதற்பின் அது ஆமாசய ஸ்தானத்தைதப்பற்றி ஏறும்; இதனால், சிலேஷ்மவாத ரோகங்கள் பிறக்கும்: அதற்பின் அது பக்குவாசய ஸ்தானத்தைப்பற்றிக் கலக்கும்; அப்போது வாதரோக குணங்களெல்லாம் பிறப்பதுமன்றித் தலைமயிர்கள் உதிரும்; அதற்பின் அது சப்த தாதுக்களிலும் பற்றிப்பரவும் அப்போது அனந்த விகாரங்களுண்டாகும். ஆதலால் அற்ப விஷத்திற்கும் மகாவிஷ சிகிச்சைகளைச் செய்யவேண்டும்.

தூஷி என்பது அற்பமாம்.

## சித்தர்மதாந்தரம்.

கறட்டு ஓணான், தேள், நண்டுவாய்க்காலி, பூரம், சிலந்தி, புலிமுகப்பூச்சி, செய்யான், பொறிவண்டு இவைகள் விரியன் என்னும் பாம்பினது முதுகு வெடிக்க, அதன்வழியாகப் பிறக்குமென்று சில மதாந்தரம் கூறுகின்றது.

## சீதமண்டலி.

இது, கடித்தால், குடல் குளிர்தலும் அரட்டலும், மிகுந்தவியர்வை பெருகி ஓடுதலும் உண்டாகும். இதற்கு ரச கந்தகமாதி உண்டையாகும்.

## ரத்தமண்டலி.

இது, கடித்தால், மயிர்க்கால்கள்தோறும் ரத்தம் ஒழுகும். இதற்கு, யானைவணங்கி இலையை மாத்திரம் பெரிய எலுமிச்சங்காய்ப் பிரமாணம் அரைத்து ஆழாக்கு நல்லசலத்தில் கரைத்துக்கொடுக்கில் நலமாம்.

## பூரம்.

இது, கடித்தால், அது ஊருவதுபோல் தினவும் அவ்வுருவத்தைப் போல் தடிப்பும் உண்டாகும். இது குப்பைமேனிச்சாற்றால்போம்.

## செய்யான்.

இது, கடித்தால், அவ்விடத்தில் வீக்கமும் தேளைப்போல் மறுநாள் வரைக்கும் கடுப்பும் உண்டாகும். இதற்குத்தேள்விஷச்சிகிச்சை உதவும்.

## செஞ்சேரா.

இது, கடிக்கில், மேனியில் சிவந்தபுள்ளிகளான தடிப்புகள்உண்டாகும். இவ்விஷம் உத்தாமணி இலைரசத்தில் சுண்ணாம்புகுழைத்துப் பூசத்தீரும்.

## கருஞ்சேரா.

இது, கடித்தால், தேகத்தில் கறுப்புக்கறுப்பான தடிப்புகள் உண்டாகும். இதற்கும் மேற்கூறிய சிகிச்சைகள் ஆகும்.

## அறுபுள்ளிவண்டு.

இது, கடித்தால், சர்வாங்கத்திலும் சிலநாட் சென்றபின்பு வட்டம் வட்டமான தடிப்புகள் உண்டாகும்.

## செவ்வட்டை.

இது, கடித்தால், அவ்விடத்தில் சிவந்து தடித்து மரத்திருக்கும்.

## அரணை.

இது, கடித்தால், சரீரமுழுதும் நடுக்கல், வாயால் நுரைவீழ்தல், நாவு தடித்தல் என்னும் இக்குணங்கள் உண்டாகும். இதற்கு ஓணான் விஷத்திற்குச் சொல்லிய சிகிச்சைகள் உதவும்.

## சரகுண்ணி.

இது, கடித்தால், வீக்கம் எழும்பும் காட்டுண்ணிக்கு இக்குணத்துடன் கடுப்பும் உண்டாயிருக்கும். இதற்குக் குப்பைமேனிரசம் ஆகும்.

## எலிபேதம்.

கத்தரிமணியன், செம்மூக்கன், வரளி, குறட்டை, கருங்காலன், தலையன், விடவெலி, செற்றலைமுட்டி, செவ்வெலி, வீங்கெலி, தூங்கெலி, உலைப்பெலி, புடையெலி, இரைப்பெலி, செங்கண்ணன், புள்ளக்காடன், குறுங்காலன், நச்செலி ஆக 18-வகையாம்.

மதாந்தரம் மூற்றியது.

பதினைந்தாவது கீடாதிபேதபடலம் சம்பூரணம்.

---

நாவொட்டிக்காய்ச்சல், உளைமாந்தை, அந்தரவிட்டை, குடற்கரி, உழலை, தழுதாழை, இதுமுதலிய பிணிகள் சில மதாந்தரங்களில் சொல்லியிருக்கினும், நூல்கள் கிடைத்தமட்டில், உளைமாந்தை, குடற்கரி, நாவொட்டிக்காய்ச்சல் இவைகளை மாத்திரம் இதனடியிற்கூறுவாம்.

## சித்தர்மதாந்தரம்.

### உளைமாந்தைரோக நிதானம்.

க்ஷயரோகத்தின் பிரிவாகிய இந்த ரோகம் பசியை அடக்குதல், பசி மந்தித்தபின்னர் புசித்தல், சண்விழிப்பு, பகல் நித்திரை அதிமாமிச உணவு, அதிசையோகம், அதிக ஓட்டம், இதுகளால் உளைமாந்தை ரோக முண்டாகும்.

### உளைமாந்தைரோகபேதம்.

இது, வாத உளைமாந்தை, பித்த உளைமாந்தை, சிலேஷ்ம உளை மாந்தை, தொந்த உளைமாந்தை என நான்கு விதப்படும்.

### 1-வது வாதஉளைமாந்தை.

இது, நெஞ்சு, பழுவெலும்பு, பக்கம், இவைகள் நோகும்படி நினை வழிந்து, தொனியோடு இருமல், கைகால் கடுப்பு, சுரம், உள்ளில் சீழ்க் கட்டிகாணல், வாயால் சீழ் விழுதல், கை, கால் எரிவு உணவு செரியா மல் வாந்தி யாகுதல், சிலேஷ்மம் அதிகரித்தல், என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

### 2-வது பித்தஉளைமாந்தை.

இது, கீழ்வயிற்றினுள் பருத்த கட்டிகாணல் அவ்விடம் பச்சைப் புண்போல் நோதல், சர்வாங்கமும் உளைச்சல் சுரம், தலைவலி, இருமல், இரைப்பு, மிடறு விரணமாதல், மயக்கம், புரட்டல், வாயால் சீழ்விழுதல் என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

### 3-வது சிலேஷ்மஉளைமாந்தை.

இது, தேகம் இளைத்துப், புண்போல் நோதல், சரீரம் வெளுத்தல், வாயால் சீழ்விழுதல், மனக்சலச்சம், வாந்தி, மயச்சம், சிலேஷ்மாதிக்கம், நடுக்கல், என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

### 4-வது தொந்தஉளைமாந்தை.

இது, சுரம், தலைவலி, இருமல், கோழை, அசதி, மிகு உறக்கம், துர்வாசனையுடன் வாயால் சீழ் விழுதல், சர்வாங்கமும் தினவு, உணவு இறங்காமை என்னு மிக்குணங்களை உண்டாக்கும்.

## உளைமாந்தை ரோகசாத்தியாகஷ்டசாத்திய அசாத்தியம்.

பித்த உளைமாந்தை, அசாத்தியம். வாத உளைமாந்தையும், சிலேஷ்ம உளைமாந்தையும் கஷ்டசாத்தியம். தொந்த உளைமாந்தை அசாத்தியம். இவைகளுக்குச் சிகிச்சாசாரத்தில் கூறிய க்ஷயரோக சிகிச்சைகள் நன்மையைத் தரும்.

## குடற்கரிரோகம்.

இது, மூலத்தில் வாய்வு அதிகரித்து ஆமாசயத்தைப்பற்றிமேலேறிக் குடலில் தங்கி சமாக்கினியைக் கெடுத்து, முதுகு, நெஞ்சு, விலா முதலான விடங்களிலோடிப் புடைத்துத் திரண்டு வலித்தல், அப்போது மலங்கருகல், உடல் அயர்தல், சுரம், பக்க இசிவு, மயக்கம், புலம்பல், வாய்நீரூறல், உணவு செல்லாமை, தேகம் மெலிதல், வாயால் வெண்ணுரைவருதல் என்னுமிக்குணங்களை உண்டாக்கும். இதுகஷ்டசாத்தியம்.

## நாவொட்டிக்காய்ச்சல்.

இது, விரைவில் தாதுக்களின் எல்லைகடந்து, அஸ்தியைப்பற்றி அதிவேகசுரங்காணல், உள்ளூரல் வேக்காடு, நாவிரணம், ஈரல்கரைதல் மயக்கம், சோர்வு, உணவுசெல்லாமை, சரீரம்எரிதல், என்னும் இக்குணங்களையுண்டாக்கும். இது கஷ்டசாத்தியம். ஆயினும் சிகிச்சாசாரத்தின் படிச் சிகிச்சைசெய்யில் சாத்தியம் ஆவது உண்டு.

மதாந்தரம் முற்றியது.

---

வாதம், பித்தம், சிலேஷ்மம், மலம், சலம், ரசதாது, ரத்ததாது, மாமிசதாது, மேதோதாது, அஸ்திதாது, மச்சைதாது, சுக்கிலசோணிததாது என்கிற இந்த 12-ம் சாடராக்கினியின் குணோதயத்தால், உணவுகளில் நின்றும் பிரிகின்ற அன்னரசத்தால் போஷிக்கப்பட்டுப் பலத்தையும், காந்தியையும், நிரந்தரமாகக் கொடுத்துக்கொண்டு தேகத்திற்கு ஆதாரமாக இருக்கின்றன. ஆயினும் மேற்கூறிய சப்த தாதுக்களில் புருஷர்கட்கு சுக்கிலமென்றும், மாதர்கட்குச் சோணிதமென்றும் சொல்லப்படுகிற இவ்விரண்டும் முறையே சிவமென்றும், சத்தியென்றும்; பெயர் பெற்றுக் கருப்ப உற்பத்திக்கும் ஆயுள்விருத்திக்கும் முக்கியமாக இருக்கின்றன. இதுகள் அகாலபோஜனம் உஷ்ணபதார்த்த பக்ஷணம், பயம், துக்கம், வியாகுலம், சிந்தித்தல், பிதுசந்தோஷம், அதிகோபம், மாரண

ஓமம் கருமலோபம் அதிதூலரோகம், அதிசாரரோகம் க்ஷீணரத்ததாது விஷபேதங்களால்வருகின்ற பற்பலரோகம், காலத்திலும் அகாலத்திலும் காமநூல்விதிப்படி அநேக பந்தங்களுடன் செய்கின்ற சையோகம் மர்மஸ்தானக்கெடுதி என்னுமிவைகளினாலும்; விர்த்தாப்பியத்தினாலும் நஷ்டப்படும்.இவ்விதம்நஷ்டமுற்ற சுக்கிலசோணிதத்தை உடையவர்கள் பலவித அசாத்தியரோகங்களை அநுபவிப்பதுமன்றி, சம்போகத்திற்கு இளைத்து ஊர்க்குருவியைப்போல் புணருவதும், வாயினால்பேசி இச்சைதீருவதும், பலத்திற்காக வாசீகரணம் பண்ணுவதுமாக இருந்து, சந்தானவிருத்தி இல்லாமல் அற்பஆயுளுடையவர்களாவார்கள். ஒருவேளை சந்தானவிருத்தி இருந்தாலும் அதற்கு அற்பபலனும் ரோகவிருத்தியும் ஆயுள்குறைவும் உண்டாயிருக்கும். ஆகையால், பால்முதலிய மதுர வஸ்துக்களைக்கொண்டு சுக்கிலத்தையும்,எண்ணெய்முதலிய பித்தவஸ்துக்களைக்கொண்டு சோணிதத்தையும் போஷிக்கவேண்டும். இதற்கு, நந்தீசர், தன்வந்தரி பகவான், அசுவனிதேவர், ஆத்திரேயர், காசிபர், பாரத்துவாசர், பாகடாசாரியர் முதலிய பெரியோர்கள் செய்த சிகிச்சாசாரம் என்னும் சாஸ்திரங்களில் அவுஷதங்கள் அநேகவிதங்களாக விதித்திருக்கின்றன. அவற்றுள், சுருக்கமுள்ள இரண்டுவகை அவுஷதமுறைகளைமாத்திரம் கைபாகத்துடன் இங்ஙனம் கூறப்படும். அவையாவன:—

## 1-வது கதலீபலலேகியம்.

நன்றாகமுதிர்ந்து பழுத்த ரசதாளிவாழைப்பழரசம் படி 4, தேங்காய்ப்பால் படி 1, பசும்பால் படி 1, முருங்கைப்பூரசம் படி 1, செவ்விளநீர் படி 1, இந்த 5-ம் ஒருபாத்திரத்தில்விட்டு, இதில் 50-பலம் வெள்ளைச் சருக்கரையைக்கொட்டிக்கரைத்து வடிக்கட்டிப்பாகுசெய்து, அந்தப்பாகில், சுக்கு, மிளகு, திப்பிலி,ஏலம்,லவங்கம், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி சிறுநாகப்பூ, அதிமதுரம் கர்க்கடகசிங்கி சீரகம் ஓமம் வாய்விளங்கம், திராக்ஷிப்பழம் கர்ச்சூர்க்காய் கொத்துமல்லி வெட்டிவேர் கோஷ்டம் தேற்றான்விதை ஆவாரைவிதை பூனைக்காலிவிதை முருங்கைவிதை சாதிக்காய் நெருஞ்சில்பழம் இருள்கிழங்கு அமுக்கிராங்கிழங்கு சீந்தில்சருக்கரை ஆலம்விழுதின்கொழுந்து சந்தனம்இந்த 29சரக்குகளையும்புனிதப்படுத்தி வெய்யிலிலுலர்த்தித் தனித் தனியே இடித்து வஸ்திரகாயஞ்செய்து வகை 1-க்கு பலம் 1-ஆக நிறுத்துப்பசும்பாலில் பிட்டுட்டுச் சுத்திசெய்து அந்த ஈரம்புலர்த்திய சூரணகல்கத்தில், பச்சைக்கருப்பூரம் குங்குமப்பூ இவ்விர

ண்டும் பொடிசெய்து வகை 1-க்கு பலம் 1-ம் காந்தபஸ்மம் வங்கபஸ்மம் அப்பிரகபஸ்மம் இம்மூன்றும் வகைக்கு பலம் 1-ம் சேர்த்துக் கலந்து வைத்துக்கொண்டு ஷை பாகில் சிறுகச்சிறுகத்தூவித் துழாவிக்கிளறிப் பாகுஞ்சூரணமும் ஒன்றுபடுந்தறுவாயில் தேன் படி 2-விட்டு நன்றாகத்துழாவிய பின்பு பசுவின்நெய் படி 2-விட்டுக் கைஓயாமல் கலக்கும்படித்துழாவிக் கூழ்ப்பதத்தில் இறக்கி இளஞ்சூடுகையுடன் பீங்கான்சாடியில் வழித்துவைத்து வாய்மூடி வஸ்திரபந்தனஞ்செய்து விதிப்படி அரைமண்டலம் தானியப்புடம் வைத்தெடுத்து அவரவர்கள் வழிபடுகடவுளையும் ஆயுள் வேதத்திற்கு ஏற்புடைக்கடவுளாகிய தன்வந்தரி பகவானையும் பூசித்து இயன்றமாத்திரம் அன்னதானம்முதலிய தானங்கள்செய்து,சுபதினத்தில் அந்த லேகியத்தில் வெருகடிப்பிரமாணம் எடுத்துக் காலை மாலை இரண்டு வேளையும் ஒருமண்டலகாலம் அமிர்தம்போல எண்ணிச்சாப்பிடவும்.

இதற்குத், துவரம்பருப்பு பச்சைப்பயறு பசுநெய் பசும்பால் தேன் கற்கண்டு சருக்கரை அவரைக்காய் முருங்கைக்காய் வாழைபிஞ்சுக்காய் ஷை பூ முதலிய இச்சாபத்தியமாம். இந்த அவுஷதம் மந்தாக்கினிபாண்டுகுன்மம் க்ஷயம் பிரமேகம் அதிதூலம் அதிசுஷ்கம் அஸ்திசிராவம் குடல்விருத்தி உதரரோகம் ஆதியானரோகங்களை நிவர்த்திசெய்வதுந்தவிர, ஞாபகசுத்தி சுக்கில பரிசுத்தமுதலிய அநேகசுகுணங்களைத்தரும்.

## 2-வது கல்யாணகிருதம்.

அரசு, அத்தி, பழமுண்ணிப்பாலை, குளப்பாலை, புளிமாதுளை, ஆவாரை, சிறுகாஞ்சொறி, பெரும்வழுதுணம், சிறுகளா, தொட்டாற்சுருங்கி, மஞ்சிஷ்டி, ஆற்றுத்தும்மட்டி, வள்ளைக்கொடி, முசுமுசுக்கை, நறுந்தாளி, நன்னாரி, பெருநன்னாரி, தரா, பம்பந்தரா, வெள்ளைச்சாறடை, கற்றாழை இவ்வேர்வகை 21 தண்ணீர்விட்டான்கிழங்கு, தாமரைக்கிழங்கு, கருநெய்தல் கிழங்கு, கோரைக்கிழங்கு, மஞ்சள், மரமஞ்சள், ஆலம்விழுதின் கொழுந்து, ஆலின்புல்லூரித்தழை, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சாதிக்காய், லவங்கம், லவங்கப்பட்டை, ஏலம், சிறுநாகப்பூ, சிறுசண்பகப்பூ, இலுப்பைப்பூ, சடாமாஞ்சில், வாய்விளங்கம், யானைத்திப்பலி, சிறுகச்சோரம், கிரந்திதகரம், அதிவிடையம், ஓமம், சதகுப்பி, சரளதேவதாரம், புத்திரஜீவிவிதை, வெள்ளிலோத்திரப்பிசின், திராக்ஷைப்பழம் இச்சரக்குகள் 30-ஆக 51 சரக்குகளையும் புனிதப்படுத்தி வெவ்வேறாகவெய்யி

வில் உலர்த்தி ஒவ்வொருசரக்கிலும் கொஞ்சம் கொஞ்சமாக எடுத்து இடித்து வஸ்திரகாயஞ்செய்து வகை 1-க்கு பலம் அரிக்கால் ஆக நிறுத்து ஒன்றுபடக் கலந்துபசும்பாலில் விதிப்படி சுத்திசெய்து வைத்துக்கொண்டு மற்றைச்சரக்குகளை வகை 1-க்கு பலம் 1-ஆக நிறுத்துத் தறிக்கத்தக்கதுகளைப் பொடியாகத்தறித்து எல்லாம் ஒருமிக்க நைய இடித்து ஒரு புதியபாத்திரத்தில் கொட்டி ஆற்றுச்சலம் படி 8-விட்டு ஒன்றரைபடியாகச் சுருக்கிய கஷாயத்தை வடிகட்டிப் பழகிய பாத்திரத்தில் ஊற்றி இதில், கல்யாணப் பூசனிக்காய், இருள்கிழங்கு தண்ணீர்விட்டான்கிழங்கு, கரும்பு, ரசதாளி வாழைப்பழம், நெல்லிப்பழம், முசுமுசுக்கை,பிரமி இலை, பொன்னாங்காணி, கொத்தான்கொடி, இளநீர்தெளித்து இடித்தபசைப்பயறு, இப்பதினொருவகை ரசமும், செவ்விளநீரும் வகை 1-க்கு படி 1¼, பசும்பால் படி 3,பசுநெய் படி 2, இவைகளைச்சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்துச் சலபாகம் பாதிசுண்டுந்தறுவாயில், முன்பு சுத்தித்த கல்கசூரணத்தைச் சிறுகச்சிறுகத்தூவி இடைவிடாமல் துழாவிக்காய்ச்சி இளமெழுக்குப்பதத்தில் நெய்யைவடித்துச் சிறியசுடுகையுடன் ஒரு பீங்கான் சாடியில்விட்டுச் சில்லிட்டு வஸ்திர பந்தனஞ்செய்து, ஆறுநாள் தானியப்புடம்வைத்தெடுத்து, உதயகாலத்தில் கால்பலம் அளவாக இரண்டுமண்டலம் அல்லது ஒருமண்டலம் சாப்பிடவேண்டும். இந்தக் கிருதம், வாதபித்தாமயம், உன்மாதம், சித்தவிப்பிரமம், கிரிச்சரம், அஸ்மரி, மேகம், கிருமிரோகம், யோனிச்சூலை, மலட்டுரோகம் இவைமுதலிய பிணிகளை நீக்குவதுந்தவிர, தேகத்தில் நல்ல அழகையும், பலத்தையும், சோணித பரிசுத்தியையுந்தரும். ஆதலால், இவ்வண்ணம் சுக்கில சோணிதங்களைப் போஷித்துக் காலம் அறிந்து போசனமும் புணர்ச்சியும் செய்து, ஆயுள்வேத விதிப்படி வழுவாது நடப்பவர்கள், அரோகதிடகாத்திரமும், பூரணாயுளும், சந்தான சௌபாக்கியமும், அறம்பொருள் இன்பம் வீடு என்கிற 4 - புருஷார்த்தங்களும் பெற்று, மங்களகரமாக வாழ்வார்கள்.

சுப்பிரமணியர் துணை.

ஜீவரக்ஷாமிர்தம்.

முற்றியது.

---

உ

சுப்பிரமணியர் துணை.

# ரோகவருக்க அகராதி.



* மதாந்தரம், மதா, என்பது—சித்தர் மதாந்தரம்.

| ரோகங்களின் பெயர்கள். | பக்கம். |
|---|---|

ரோக வருக்க அகராதி முற்றியது.

மதாந்தரம், மதா, என்பது - சித்தர் மதாந்தரமாம்.
விவரங்களை அணிந்துரையிற் காண்க.

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 27 | 1 | அணுகாக் | அணுகா |
| 40 | 26 | கனத்துலுடன் | கனத்தலுடன் |
| 41 | 13 | அசாத்தியம் | சாத்தியம் |
| 42 | 21 | அசாத்தியம் | சாத்தியம் |
| ,, | 25 | யோகங் | யோகம் |
| 47 | 4 | பித்தமும் அதிகரித்திருக்கும் | பித்தமும் கபமும் அதிகரித்திருக்கும் |
| 90 | 20 | பிரஜேகம் | பிரேஜகம் |
| 119 | 21 | பதிறனு | பதிறலு |
| 232 | 20 | அடோபகம் | ஆடோபசம் |
| 237 | 22 | பரிஷ்போடவாதம் | பரிஸ்போடவாதம் |
| 239 | 10 | யவ்வகை | அவ்வகை |
| 312 | 23 | கூஷ்மாண்டபூதம் | கூச்மாண்டபூதம் |
| 349 | 2 | செங்குதமும் கருங்குதமும் | சங்குமுதம் கருங்குமுதம் |
| 449 | 19 | சுக்சு | சுக்கு |
| 479 | 2 | அசாத்தியம் | சாத்தியம். |

## சேர்க்கவேண்டிய திருத்தம்.

பக்கம் - 38 வரி 8 - ல் "அசாத்திய மென்றும்" என்பதில் மென்றும் என்பதை நீக்கி—ங்களாம்"—சிலநூலில்" ருத்தாசம், அந்தகம், புக்னநேத்திரம், கண்டகுப்சம், ரக்திஷ்டீவி, சிதாங்கம், அபிநியாசம் ஆகிய இவ்வேழும் அசாத்திய மென்றும்"—என்பதைச் சேர்த்துக் கொள்ளவும்.—

Tele. Address: "BHASKARAR" Madras. Post Box No. 121.

# "சுவர்ண இரத்திநகாம்."

[சர்வரோக நிவாரணி.]

அரிய சஞ்சீவி மூலிகைகள்; பழவகைகள்; அயகாந்த சத்துக்கள்; முத்து, பவழம், சுவர்ணம் முதலியவைகளின் பஸ்ப செந்தூர சேர்க்கையைக் கொண்டுள்ளது; உருசிகாமானது. அதிசீக்கிரத்தில் சகல ரோகங்களையும் நிவிர்த்திசெய்யக்கூடியது. சத்துள்ள இராஜபோஜன ஆகாரம் கொள்ளத்தக்கது. கால்தேச தேக பேதமின்றி குழந்தைகள்முதல் வயோதிகர் வரையில் உபயோகிக்கத் தகுந்தது.




## தீரும் நோய்கள்.

விரணபடை, குஷ்டு, கண்டமாலை, பிரமேகம், குழிப்புண், நீர்வியாதி, நீர்க்கட்டி, சோபை, வீக்கம், மகோதரம், பாண்டு, க்ஷயம், க்ஷயகாசம், காசம், வாதரோகம், சித்தப்பிரமை, ஐவகை வலி, இருதயரோகம், சூதகவாயு, குன்மம், மூலம், பௌத்திரம், நரம்பின் பலகீனம், தாதுநஷ்டம், மற்றும் வாத பித்த சிலேஷ்ம சம்பந்தமான சகல வியாதிகளையும் நீக்கத்தக்கது.

ஔஷதத்தை உபயோகிக்கும் முறை மருந்துடன் சேர்த்து அனுப்பப்படும்.

கண் ரோகங்களை நேரில் பார்வையிட்டுக் குணப்படுத்துவோம். நற்சாக்ஷிப் பத்திரங்கள் அனேகமுண்டு.

பத்துநாட்கள் மருந்து கொண்ட டப்பி ஒன்றுக்கு ரூ. 10 8 0

ஒரே காலத்தில் இரண்டு டப்பி வாங்குபவர்கட்கு ரூ. 20 0 0

## PANDIT C. T. ARUMUGAM PILLAI,

**Son of**

Ayurveda Bhaskara C. T. Subrahmanya Pandithar,

**author of**

**Jeevarakshamritham, Patharthaguna Chinthamani, etc.**

Ayurvedic Physician and Oculist, Member of Ayurvedic and Unani Indigenous Systems of Medicine, and the Proprietor of

## BHASKARA & SONS,

*(Ayurveda Jeeva Rakshamritha Pharmacy.)*

**219, Mint Street, George Town, Madras.**